# ஆனந்தரங்கப் பிள்ளை

# நாட் குறிப்பு

தொகுதி நான்கு

கலை பண்பாட்டுத் துறை

புதுவை அரசு

**1998**

☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல பதிப்பு) தொகுதி IV

☆ மக்கள் பதிப்பு : ஜூன் 1998.

☆ விலை : G|2003

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை,
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுவை – 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்,
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர். எல். இராமமூர்த்தி.

பிரத்தியேகமான

ஆனந்தரங்கப்பிள்ளை

# தினப்படி சேதி குறிப்பு.

சொஸ்த லிகிதம்

நான்காம் புத்தகம்

விலை ரூ. 3

1951

# நான்முகம்

இந்த நான்காவது புத்தகத்தில், ஆசிரியர், புதுச்சேரி குவர்னர் துய்ப்ளேக்ஸ் பெண்சாதி, தனக்குகந்த மனிதரை சென்னைக்கு அனுப்பி எப்படி வியாபாரிகளிடம் பணம்பறித்தாள் என்பதையும், அந்தசெய்கையால் எப்படி ஜனங்களுக்கு பிராஞ்சுக்காரரிடம் துவேஷமும், அருவருப்பும் உண்டானது என்பதையும் விவரிக்கிறார்.

பிறகு அந்த பெண்பிள்ளை, தேவனாம்பட்டணத்தில் தங்கியிருந்த சென்னை மாஜி குவர்னர் மோர்சு பெண்சாதியுடன் சிநேகம் வைத்துக்கொண்டு, எப்படி அங்குள்ள ரகசியங்களை அறிந்தாள் என்பதையும் தெறிவிக்கிறார். இந்த தகவல்கள், பிராஞ்சு இங்கிலீஷ் சரித்திர ஆசிரியர்கள் நூல்களில் தென்படவில்லை..

ஆசிரியர் தன் குமாரத்தி மணவைபவத்தைப் ரங்கள் தருகிறார் அவர்காலத்தில் சிமான்கள்விட்டு கல்யாணங்கள் எப்படி நடந்தது என்பதை தெறிந்துக்கொள்ளுகிறோம்:

குவர்னர் பெண்சாதிக்கும் ஆசிரியருக்கும் உண்டான உள்பகை என்னமாய் உண்டானதென்றும், எந்த அந்தரங்க காரணத்தினால் வளர்ந்ததென்றும் நமக்கு தெரியவருகிறது.

தனவந்தர்களான இஸ்லாமியர், எப்படி தங்கள் பிள்ளைகளுக்கு, விமரிசையாகவும் சிறப்பாகவும் கலியாணம் நடத்தினார்கள் என்பதை அறிகிறோம்.

தேவனாம்பட்டணத்து இங்கிலீஷ்காரர் பேரில் இரண்டாம் தடவையாக சண்டைக்கு எழும்பி, பிராஞ்சுகாரர் பாதிவழியில் திரும்பி வந்துவிட்டார்கள். அதன் ரகசிய முகாந்திரம் வெளியாகிறது.

குவர்னர் துய்ப்ளேக்ஸ், மட்டில்லாத சிலாக்கியக்காரன். எதிரியை குறைத்து, அவன் புத்திசாலித்தனத்தையும் தைரியத்தையும் புகழ்ந்து ஸ்துதிசெய்பவர்களுக்கு மாத்திரம் உதவி

செய்பவன். அவன் பல வீனத்தை நன்கு அறிந்த ரங்கப்பிள்ளை எப்படி அவனோடு பழகி, தன்காரியத்தை சாதித்துக்கொண்டாரென்பதை, இந்த நான்காவது புத்தகத்தில் கண்டறியலாம்.

சேர்ந்தமங்கலம் கோட்டையில், காவலில் வைக்கப்பட்டிருந்த, மேன்வீல், சேன்மூாக் என்ற பிராஞ்சுக்காரரை விடுதலைசெய்யும்படி, ராசா உத்தரவிட்டும், கோட்டை அதிகாரி தனக்கு இரண்டாயிரம் ரூபாய் கொடாமல் போனால் விடுவிக்க மாட்டேன் என்று மறுத்துவிட்டதிலிருந்து, அம்பலத்தில் லஞ்சம் எவ்வளவு அத் தேசத்தில் தாண்டவமானது என்பது விளங்குகிறது.

நானூறு, ஐந்நூறு பேர்கொண்ட ஒரு சின்ன பிராஞ்சு ராணுவத்தைக் கொண்டு, மைசூர் ராச்சியத்தையே, தான் பிடித்துவிட முடியுமென்று குவர்னர் துய்ப்ளேக்ஸ் பெருமை பாராட்டிக் கொண்டதிலிருந்து மைசூர் ராச்சியம் அப்போது, எவ்வளவு பலவீனமடைந்திருந்ததென்பது விளங்குகிறது.

அபிஷேகப்பாக்கம், 1952-ம் ஆ மார்சு மீ 31 உ

ஞானு தியாகு

# ஆங்கிலமொழி பெயர்ப்பாளரின் வியாக்கியான குறிப்புகள்

| பக்கம் | வரி | மொழி | வியாக்கியானம் |
|---|---|---|---|
| 24 | 22 | நயினர் | —கும்பனி சேகுவர்களின் தலைவன் ஒரு மனிதனின் பேர் அவன் வகித்த உத்தியோகத்திற்கே கொடுக்கப்பட்டதாக ஏற்படுகிறது அரும்பாத்தே என்கிறபதமும் அப்படியே. |
| 32 | 12 | செவிடன் | —இவன்பேர் துய்வால் தெப்ரெமெனில் பின்னிட்டு புதுச்சேரிக்கு குவர்னருய் வந்த துய்வால் தெலேறித் சகோதரன் கிழக்கிந்தியா கம்பெனியின் நிர்வாகஸ்த்தர்களின் ஒருவர் புதல்வன் குவர்னர் துய்ப்ளேக்ஸ் பெண்சாதியின் முதல் தரத்து ஆருவது பிள்ளையாகிற ஆன் கிறிஸ்த்தின் பிரான்சுவாஸ் வேன்சான் என்பவளை 1743-ம் ஆண்டில் மணந்துக்கொண்டான். அவன் புதுச்சேரியில் பிறந்ததாக சொல்லப்படுகிறது. இவன் 1746 லும் பிற்பாடு 1747 லும் சிறிதுகாலம் சென்னைக்கு எஜமானனுய் இருந்தான். |
| 47 | 33 | முத்திரை | —அர்ச். மிக்கேல் சபையின் குதிரைவீரர் பதக்கம், முன்னமே இந்தியனுன குருவப்பாவுக்கு அளிக்கப்பட்டபடியால், அதை இகழ்ந்து 1737ல், துய்ப்ளேக்ஸ் அர்ச். லசார் சபையின் குதிரைவீரன் பதக்கத்தை பெருவதற்கு முயற்சி செய்தான். |
| 51 | 17 | முத்தியாலுபேட்டையார் | — துணி சலவை செய்பவர்கள் வசிக்கும் கிராமம். |
| 51 | 18 | கைக்கோளர் | —கன்னடமும் தெலுங்கும் பேசுகிறவர்கள். |

55 22 கின்னறி—அக்காலத்தில், பகல்போஜனம் அருந்தும் போது, சங்கித வாத்தியம் கேழ்பது, குவர் னர் அந்தஸ்துக்கு உகந்தது என்று கருதப் பட்டது.

56 33 மலையாளத்து ராசாவுக்கு-இவன்பேர் மார்த்தாண்ட வர்மன் 1729 முதல் 1758 வரை அரசுசெலுத் தினன். ஒல்லாந்துகாரர் எப்போதும் அவ னிடம் சண்டைசெய்துவந்தபோதிலும், அவர் களுக்கு இடையூராக, தன் ராச்சியத்தை வெகுவாக விஸ்தறித்துக் கொண்டான்.

64 32 ஒலாந்தா பத்ரி—தேவனாம்பட்டணத்தின் கோட் டைக்கு வடக்கே எழுநூறுகஜம் நீளமுள்ள பலமானகட்டடம். அதில் ஒல்லாந்துகாரர் வியாபாரம்செய்து கொண்டிருந்தார்கள்.

73 3 இமாம்சாய்பு—1740-ம் ஆண்டில் இமாம் சாய்பு, ஆலம்பரைக்கு குவர்னராக இருந்தார். தோஸ்த்து அலி இறந்துபோன பிறகு, சப்தர் அலி அவனுக்குவிரோதமாய்இருந்தபடியால், கர்னாடக தேசத்தைவிட்டு நாசர்சங்குவிடம் போனார். 1744ல் அவர் சிறைசாலையில் வைக் கப்பட்டதாக காணப்படுகிறது கடைசியாய் அவர் பிராஞ்சுகாரருடைய ஸ்தானாபதியா யிருந்தார்.

82 8 சாவேழ்—இவன் ஏன் புதுச்சேரிக்கு வந்தான் என்பது விளங்கவில்லை சிலசமயம் பிரமா ணிக்கஞ்செய்து விடுதலை பெற்ற சண்டை கைதியானபடியால் துய்ப்ளேக்ஸ் கூப்பிட்டு வந்திருக்கலாம்.

82 20 தன்மார்க் ராசா—ஸ்பான்ஸ் ராசா பிலீப்பு V ம், தன்மார்க் ராசா கிரிஸ்தியன் VI ம் 1746ம் ஆண்டில் இறந்தார்கள். ஆனால்போர்த்துகல் ராசா மூான் V 1750 வரையில் இறந்துபோக வில்லை.

82 24 குமாரத்தியை—பிரான்சு ராசாமகன் தொபேன், 1745 பிப்ரவரிமீ 23 உ. மரி தெரேசு அந்து வாநேத்தை விவாகஞ்செய்து கொண்டான். 1746 ல் பிறந்தது பெண் குழந்தை, ஆண் அல்ல.

84 7 ரங்கப்பநாயக்கர்—ஓர் பாண்டி ரங்கப்பா, தேவனும்பட்டணத்தின் முக்கிய துவிபாஷி 1749-ல் கம்பனி துவிபாஷியாக நியமிக்க பட்டான்.

84 26 தேவனும்பட்டணம்—கோட்டைக்கு வடக்கே யிருந் தது தேவனும்பட்டணம் கிராமம்.

84 33 பாங்கிபாதிரிகோவில்—கோட்டைக்கு 500 கஜத் திற்கு அப்பால் இருந்த ரோமன் கத்தோலிக் கோவில்.

86 21 கல்யாணத்துக்கு—ரங்கபிள்ளை குமாரத்தி பாப் பாள் கல்யாணம்.

88 65 துய்லோயான்—கம்பெனி உத்தியோகஸ்தனுய் புதுச்சேரிக்கு வந்து, பிர ஆலோசனைக்கார ரில் ஒருவனுய் நியமிக்கப்பட்டான். தெப்ரேமேனிலுக்கு பதிலாய் சென்னைக்கு குவரனராக நியமிக்கப்பட்டான்.

97 25 சிர்பேஷ்—முழுதும் பொன்னினுல், தட்டான் வேலைசெய்த ஒரு கிரீடம். நாலுமூலை சதுர மானது. இரண்டு கை பெரியவிரல் நீளமா யிருப்பது சுத்திரம் முத்துகளும் கையில் ஒரு பெரிய மஞ்சள் நிறமுள்ள வைரமும் இழைக்கப்பட்டது. ஒரு முத்து தொங்கி கொண்டிருக்கும். நெத்திமேல் வைக்கப்பட்டு தலைக்கு பின்னுல் கட்டப்படுவது சிர்பேஷை தரித்துகொள்வதற்கு நவாப் பட்டம் பெற் றிருக்கவேண்டும். அந்த பட்டம் குவர்னர் துய்ப்ளேக்சுக்கு உண்டா?

101 15 லாஸ்—இந்த பேர் கொண்டவர்கள் கம்பனி உத்தியோகத்தில் இரண்டுபேர் இருந்தார்கள். நீதி சாஸ்திரத்தில் பிரசித்திபெற்றவருடைய தமையன்: வில்லியம்லாஸ் பிள்ளைகள். மூத்தவன்: மூான் 1719-ம் ஆண்டில் பிறந்தவன். 1741-ம் ஆண்டில் கம்பனி உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டான் பங்காளத்தில் சேவைசெய்தான். 1755-ம் ஆண்டில் மூான் கர்வாலோ என்பவளை மணந்து கொண்டான்.

இளயவன்: மூாக். 1724-ம் ஆண்டில்பிறந்தவன் கம்பெனி ராணுவத்தில் சேர்ந்தான். 1750-ம் ஆண்டில் தஞ்சாவூர் சண்டையில் ஒரு கண்ணை இழந்தான். 1751-ம் ஆண்டில், சென்னையில் பிரசித்திபெற்ற பிரமுகர்களில் ஒருவனுன பிரான்சிஸ்கோ கர்வாலோ என்பவனின் குமாரத்தி மரி என்பவளை மணந்துகொண்டான். இவள் அந்தகாலத்தில் இந்தியாவிலுள்ள மிக்க சௌந்தரியமான பெண்பிள்ளைகளில் ஒருத்தி.

115 19 வெள்ளைக்காரர்—இதில் ஒருவன் புசி. இவன் 1718-ல் பிறந்தவன். இந்தியாவுக்கு வந்தவன், லபுர்தொனே சண்டைக்கு வந்தபோது அவனுடன் அப்போது புர்போன் தாங்களே மனதார ராணுவத்தில் சேர்ந்தவர்களுக்கு வியேத்னுகை இருந்தான்.

123 22 அழிஞ்சபாக்கம்—இப்போது அபிஷேகபாக்கம் என்று வழங்குகிறது. 1740-ம் ஆண்டில் சப்தர் அலியால் குவர்னர் துய்மாவுக்கு, தோஸ்த் அலிகான் குடும்பத்தாருக்கு செய்த உபகாரத்துக்குகைமாருக கொடுக்கப்பட்டது. துய்மா தரணி புதுச்சேரியில் துய்லோருன். வருமானம் மாசி தவிபாஷி கனகராயமுதலி

யார் சகோதரன் லசார் முதலியாருக்கு குத்தகைக்கு விடப்பட்டிருந்தது.

205 27 ரூபாய்கள்—மேல் ஆலோசனை சங்கத்தாரால், பரிவர்த்தனைக்காக, வராகனுக்கு குறிப்பிட்ட மதிப்பு: 100 வராகனுக்கு 320 ரூபாய் தான்.

208 31 தளவாய்—இவன் பிரசித்திபெற்ற நந்திராசா வாய் இருக்கவேண்டும்.

215 3 மஞ்சள்—இந்துக்கள் கலியாண அழைப்பு கடிதங்கள் நாலுமூலையிலும் மஞ்சள் தடவுவது வழக்கம்.

217 15 கான்பஹதூர்—சந்தாசாய்பு மருமகன்.

235 24 காகிதந்திலே—1747 நொவம்பர் மீ 30 உ புதுச்சேரிமேல் ஆலோசனை சங்கத்தார் சீர்மைக்கு எழுதின கடிதத்தின் விபரம்: கும்பினிதரகன் அலுவலுக்கு, நாங்கள் யாரையும் நியமிக்கவில்லை. தற்காலம் அந்த அலுவலை பார்க்கக்கூடியவன் இந்த தேசத்தில் ரங்கப்பனைவிட வேறுயாருமில்லை. கனகராயமுதலியார் தம்பி ஒரு முண்டம். ஜனங்களால் அருவருக்கப்பட்டவன்.

398 16 பிரதாபசிங்கு—

ஷஹாஜி ராஜா என்பவர் யார் என்பது, தெரியவேயில்லை ஆனால் 1712–1727 வரையில், தஞ்சை ராஜாவாக சரபோஜி இருந்துவந்தார் என்பது சொல்லப்படுகிறது. ஷஹாஜியின் சகோதரர், துக்கோஜி, அவருக்குப்பிறகு 1735 வரையில் தஞ்சையை ஆண்டார் அதன் பின்னர் அவர்குமாரன் பாவாசாகிப் (அல்லது எக்கோஜி என்பவர்) அரசு செலுத்தினர் பாவாசாகிப்புக்கு பிறகு அவர் மனைவி 1737ல் பட்டத்துக்கு வந்தார். அதே வருஷம், ஷஹாஜி என்பவர் ஒருவரால், அவர் அடித்துத் துறத்தப்பட்டார். ராணியின் பிரதான ஆதரவாளர். சித்தோஜி என்ற ஒருவர், அரசிலமர்ந்தார். அவர் ஷஹாஜியைத் தோற்

கடித்துவிட்டபடியால், இவர் பிரசித்தமானதும், துய்மாசுடனும் ஏற்பட்ட உடன்பாட்டின் பிரகாரம், காரைக்காலை பிராஞ்சுக்காரருக்குக் கொடுத்துவிட்டார்.

இவ்வண்ணமிருக்கையில், ஷி ஷஹாஜிக்கழிக்காரர்கள் சித்தோஜியை விரட்டிவிட்டு ஷி ஷஹாஜியே, தஞ்சையை ஆண்டுவந்தார் பிறகு முந்தியே ஷஹாஜி, 1739-ல் பிரதாபசிங்கால் தள்ளப்பட்டு (கொன்று)விட்டார்.

ஷஹாஜியும், பிரதாபசிங்கும், சர்போஜீயின் குமார்ரர்கள், என்று 'ஓர்ம்'' (108) கருதுகிறார். ''டப்'' (1912-462) அவர்கள் துக்கோஜியின் பிள்ளைகளென்று, கூறுகிறார். தஞ்சை வரலாற்றின் புத்தகத்தில் 735 பக்கத்தில், அவர்கள், பாவாசாகிப் மனைவிக்கும், பிரதாபசிங்கிற்கும் பிறந்தவர்கள் என்று செப்புகிறது. ஷஹாஜி என்பவர் சர்போஜியின் புத்திரரென்றும் சியாஜி என்பவர், துக்கோஜியின் குமாரர் என்றும் டப் என்பவர் சொல்லுகிறார். கடைசியில் சொல்லப்படுவது, எந்த உண்மையை, ஆதாரமாகக்கொண்டு கூறப்படுகிறதென்பது, தெரியவில்லை. ஆனால் ஓர்ம், டப், இவர்களின் கூற்றை ஒத்துமைபடுத்துவதற்காக, எழுதப்பட்டதென்று தெரியவருகிறது. 1739-ம் ஆண்டில், நாகப்பட்டணம் கவர்னர், எலியாஸ், கிய்யோ என்பவரால் எழுதப்பட்டிருக்கும் குறிப்பு புத்தகத்தில், ஆதரிக்கப்படவில்லை. புத்தகத்தில் தெளிவாகச் சொல்லப்படுவது என்னவெனில், பாவாசாயபுவின் மனைவியை விரட்டின அரசனையே, பிரதாபசிங் துரத்திவிட்டார் என்பதுதான் மேலும் ''ஓர்போ அல்லது டப்போ'' கூறுவது சரியல்லவென்பது கவனிக்கத்தக்கது. சர்வோஜியின் குமாரர், பிரதாபசிங் என்று ஓர்ம் சொல்வது முற்றிலும் தவறு. அதற்கு எல்லாவித அத்தாக்ஷிகளுடன், அதை, டப் மறுக்கிறார்.

ஷஹாஜி, சியாஜியைக் கண்டுகொள்வதானால் துக்கோஜியின் குமாரர் சியாஜி என்று சொல்லுவதைக்காணலாம்.

உலாந்தையர்களின் ஞாபகக்குறிப்பில், இந்த கண்டுகொள்ளுதலைப்பற்றி, உறுதியாகப் பேசப்பட்டிருக்கிறது. மேலும், தஞ்சை விவகாரங்களில் உலாந்தையர்கள், மிகவும் தெரிந்தவர்கள் அதிலிருந்து 1737-1739 வரை தஞ்சையை

ஆண்ட ஷஹாஜி, சர்போஜியின் புத்திரர்தான் என்று சொல்ல முடியும் அவர் அப்படி இருந்தாலும், இல்லாவிட்டாலும், புதுவையைக்கண்டு போனவர், அவர் மாமனுனாலும், தஞ்சையை ஆண்ட அரசன் அல்லவென்பதைக் கூறலாம் பிரதாப சிங்கன் தன் எதிரியை பாருளத்தில் முறியடித்தான் என்று, குய்யோம் என்பவர் கூறுகிருர். இந்த விஷயத்தில், குய்யோமின் வார்த்தை அவ்வளவாக எடுபடவில்லை தற்சமயம் துப்ளேக்ஸை அணுகினவரும், 1748-ம் ஆண்டு முடிவில், செயின்டேவிஸ் கோட்டையை, வெற்றியுடன் பார்வையிட்டவருமாகியவர் தஞ்சையை ஆண்ட ஷஹாஜி என்று நான் அநேகமாக நினைக்கிறேன்.

1747-ம் ஸூ அக்டோபர் மீ 29 உ யானதும் அது சாதாரண அறிமுகப்படுத்தும் கடிதந்தான்.

# பொருளடக்கம்

## அத்தியாயம் XLVI.

அக்ஷய ஞூ பங்குனி மீ 5 உ (15-3-1747) முதல்—அக்ஷய ஞூ பங்குனி மீ 13 உ (23-3-1747) வரை பக்கம்-*1–26*.

ஊரிலுண்டான சகல குதிரைகளையும் கொண்டுவந்து, கும்பினி லாயத்தில் சேர்க்கும்படி குவர்னர் உத்திரவிட்டார்—பின்னும், தேவனாம்பட்டணத்திலுள்ள இங்கிலீஷ் துரைகளிடம் துபாசியாயிருந்து, அவர்கள் பேசிகொள்வதை சொல்லி அனுப்பதக்க ஒரு சேகவனையும் தயாரிக்கச் சொன்னார்.—தேவனாம்பட்டணத்திலுள்ள ஓடிப்போன பிராஞ்சு ராணுவத்தாருக்கு மன்னிப்பு கொடுத்து திரும்பி வரும்படி கடிதமெழுதி அதை அனுப்பச் சொன்னார். காரைக்காலுக்கு போக, மேற்கு வழி ஒன்று எழுதிகொடுக்கச் சொன்னார்.—சிதம்பரம் மேலதிகாரிக்கு வெகுமானமும், கடிதமும் எழுதிகொடுக்கச் சொன்னார் அப்படியே செய்தேன்.—பரங்கிபேட்டை அமுல்தாரனுக்கு சிநேகபாகமாய் கடிதம்—தேவனாம்பட்டணத்தில் பிடிபட்டு காவலிலிருந்த கருப்பன திரும்பிவந்து, பிராஞ்சுக்காரர் சண்டைக்கு வந்தபோது, எவ்வளவு இங்கிலீஷ் துரைகள் பயந்து நடுங்கியிருந்தார்களென்று சொன்னான்.—உசேன் சாயபு மருமகன் ஆற்காடு சேதியை சொன்னான். சென்னையில் நடந்த விஷயங்களை கோபாலகிருஷ்ணய்யன் கடிதமூலம் தெரிவித்தான்—காரைக்காலிலிருந்து வந்த, நூறு வெள்ளை ராணுவத்தாரும் மேல் வழியாக திரும்பிபோனார்கள்—குண்டுசாலையை முள்ளுபோட்டு அடைக்கும்படி, மொர்பே இஞ்சினீருக்கு குவர்னர் உத்தரவு கொடுத்தார்.—குவர்னர் முத்திரைமாத்தி அமைக்கப்பட்டது.—ஆற்காட்டுக்கு போன தெலார்ஷ் என்பவனிடம், பெருமுக்கல் முத்துமல்லாரெட்டி ஆசிரியர்பேரில் பிராது சொன்னான்—நபாபிடமிருந்து, தெலார்ஷ் வாங்கிவந்த வெகுமானம், ஒரு பழைய சிரோப்பாவையும், ஒரு கிழ கருப்பு குதிரையையும, குவானர் கோபித்து, தெலார்ஷையே எடுத்து போக சொன்னது.—பெருமுக்கல் முத்துமல்லாரெட்டி தெலார்ஷுக்கு விருந்துசெய்து, ஆசிரியர்பேரில் சுமத்திய குற்றம்—

மறுநாள் தெலார்ஷ் வந்து, திருமாம்பாக்கத்தையும், பூத்துரை ஒதியம்பட்டு கிராமங்களை, வாக்கு கொடுத்தபடி கொடுக்கும் படி கேட்டபோது, உசேன்சாயபு மறுமொழி.—முகம்மது தாக்கல் ஆசிரியர்பேரில் சொன்ன குற்றசாட்டு.—இதுகளை கேட்டுக்கொண்டு குவர்னர், ஆற்காடு நபாபுக்கு எழுதி அனுப்பிய கடிதத்தின் கருத்து.—பரங்கிமலையில் வசித்த இங்கிலீஷ்காரர், சென்னை வர்த்தமானங்களை, தேவனும் பட்டணத்தாருக்குத் தெரிவித்தபடியால், அவர்கள் தட்டுமுட்டு சாமான்களை சூறையாடி, அவர்கள் ஓடிவிட்டதால், அவர்கள் வீடுகளையும் கொளுத்தினார்கள்.— தேவனும்பட்டணத்து ராணுவத்திலுள்ள கல்யாண நாய்க்கன் ஐந்நூறு பேருடன் தான் புதுச்சேரிக்கு வந்துவிடுவதாய் சொன்னபடியால், சம்பளவிஷயமாய் உடன்படிக்கை நகல் அவனுக்கு அனுப்பப் பட்டது.—புதுச்சேரி வன்னியர், தங்களுக்கு எஜமானனாக ஊரைவிட்டு ஓடிப்போன வீரநாய்க்கனை ஆசிரியர் ஏற்படுத்தியதால் அவர்பேரில் குவர்னருக்கு பிராது கொடுத்தார்கள். ஆசிரியர் உத்தாரம்.—லெநூத்தர் என்னும் பிராஞ்சு ராணுவ உத்தியோகஸ்தன், காரைக்காலுக்கு கீழ் வழியாகப்போய், பரங்கிபேட்டையில் சத்துருநிகள் வசம் சிக்கி, கையிலிருந்ததை இழந்து, பயந்து நடுங்கி புதுச்சேரிக்கு ஓடிவந்தான்.—குவர்னர் அவனை கடிந்தது—பொய்யான வதந்திகளால், நடுங்கி சேஷாநிரிபிள்ளை புதுச்சேரிக்கு ஓடிவந்தார்.—

---

## அத்தியாயம் XLVII

அக்ஷய ஸூ பங்குனி மீ 11 உ (24-3-1747) முதல்—பிரபவ ஸூ சித்திரை மீ 9 உ (*18-4-1747*) வரை பக்கம்: *30–61.*

சென்னையிலிருந்து, கோபாலகிருஷ்ணய்யர் ஆசிரியருக்கு எழுதிய கடிதத்தின் நகல்—சென்னை எப்படி ஒரு செவிட்டு குவர்னரால் ஆட்சிபுரியபடுகிறது, துய்ப்ளேக்ஸ் பெண்சாதி, அவ்விடம் பாப்பயபிள்ளையை அனுப்பி திரவியம் சம்பாதிக்கிறாள் என்பதையும், ஆசிரியர் விளக்குகிறார்—செஞ்சி பக்கம், ஓடிப்போன பிராஞ்சுகாரரை மன்னித்து, அவர்கள் திரும்பி வரும்படி சேகவர்களை அனுப்பினார்கள்—ஈசானியத்திலிருந்து நியுதிமூலை வரையில், ஒரு நக்ஷத்திரம் எறிந்துவிழுந்தது. எந்த

வரப்போகும் சம்பவத்திற்கு, அது அடையாளம்?—ஆற்காட்டிலிருந்து, வக்கீல் சுப்பன நபாபு அன்வர்த்திகானிடமிருந்து, கடிதங்கள் வந்தன. அதை வாசிக்கக் கேட்டு குவர்னருக்கு பெரிய கோபம் வந்தது முகம்மது அலிக்கு வெகுமானமாய் அனுப்பிய தொப்பியை திருப்பி கொண்டுவரும்படி ஆள் அனுப்பச்சொன்னார்.—

கோபித்துக்கொள்வதற்கு இது சமயமல்ல அவர்கள் கொடுப்பதாய் சொன்ன நாலுகிராமங்களையும் கைபற்றுவதே உசிதமென்று எடுத்துக்காட்டி ஆசிரியரவர் கோபத்தை தணித்து, சாந்தமான முறையில் மறுமொழி கடிதங்கள் அனுப்பும்படி ஆசிரியர் செய்தார்—சென்னையிலிருந்து ஏழு ஒட்டகங்கள் பேரில் பீரங்கிகளும், நூறு மாயே சிப்பாய்களும் வந்தார்கள்,—வேட்டவலம் பாளையகாரனிடமிருந்து நூறு சேகவர்கள் வந்தார்கள் அவர்களுக்கு, சாப்பாடும், பணமும், சகலாத்தும் கொடுக்கப்பட்டது—திருச்சினுப்பள்ளி, மாபூஸ்கானுக்கு வெகுமானம் அனுப்பியது,—தேவனும்பட்டணத்தில் வந்திறங்கிய சாமான்களை சென்னை வர்த்தகா் வாங்கிக்கொண்டு போனார்கள் தேவனும்பட்டணம் கோட்டை பலபடுத்தப்படுகிறது.—தேவனும்பட்டணம் கோட்டையும், கொத்தளங்களும் பலபடுத்தபடுகிறதென்று ஆசிரியர் சொன்னதற்குமாறாக, அவ்விடமிருந்துவந்த ஒரு சட்டக்காரி குவர்னர் பெண்சாதியிடம் சேதி சொன்னாள்—சேத்துபட்டுக்கு ஓடிப்போயிருந்த பிராஞ்சு ராணுவத்தாரால் ஆறு பேர் திரும்பிவர சம்மதபட்டபடியால் வழிசிலவுக்கு பணமும் கடிதமும் ஒரு சேவகனிடம் கொடுக்கப்பட்டது.—நிஜாம், சாவனூர்வரையில் வந்து, எதிர்கொண்ட சுபேதாரர்களைகண்டு பேசிவிட்டு திரும்பிவிட்டார். இனி தளகர்த்தர், மைசூர் பேரிலோ அல்லது ஆற்காடு பேரிலோ சண்டைக்கு போவார்—சென்னையிலிருந்து வெள்ளி கட்டிகளை எடுத்துவர யானைகளும் குதிரைகளும் சேகவர்களும் அனுப்பப்பட்டார்கள்—முகமது அலிகானுக்கும், முகமது தாயிருக்கும் சம்பாஷணை—ஒரு படகை இங்கிலீஷ் கப்பல் நடுகடலில் துரத்திவதாக பரங்கிபேட்டை கடிதம் தெரிவிக்கிறது—ஆச்சிகாட்டுக்கும் மரக்காணத்திற்கும் நடுவில், அந்த படகு துறை பிடித்து அதிலிருந்த வெள்ளையர்கள் இறங்கினார்கள், சீர்மை தபாலை கொண்டு வந்தார்கள் லபுர்தோனேயை சீர்மைக்கு வரும்படி உத்தரவு வந்தது—அர்ச். மிக்கேல் சங்கத்தின் வீர

ராக குவர்னர் தூய்ப்ளேக்ஸ் நியமிக்கப்பட்டார். ஆசிரியர் வெகுமாளம். புதுச்சேரியில் குதுகலமான விழா கொண்டாடப்பட்டது காசுக்கு ஒன்பது வெற்றிலை விற்க உத்தரவாச்சு—சபர்தலிகான் மகனை பள்ளிக்கூடத்தில் வைத்தார்கள், அவனுக்கு குவர்னர் அனுப்பிய வெகுமானம்—குவர்னருக்கு வந்த, அர்ச். மிக்கேல் சங்கத்தின் முத்திரையை போட்டுக்கொண்டு அவர் கோவிலுக்கு போய் பூசைகண்டு வந்து வீடுசேர்ந்தவுடன், சர்வத்திறனும் அவரை கண்டுகொண்ட வைபவம் வெகுமானம் கொடுத்த மனிதர் வெகுமானங்களின் துகை—ஆசிரியர் ஊரெல்லாம் சர்க்கரை வழங்கினர்—குவர்னர் வீட்டில் வாத்தியம் வாசிக்கிறவனில் ஒருவன் தன் திருட்டு வெளிப்பட்டதால், தற்கொலை செய்துகொண்டான்—மலையாளத்து ராசாவுக்கு கடிதம் இங்கிலீஷ் கப்பல்கள், சென்னைக்கும் புதுச்சேரிக்கும் நேரே நடுகடலில் நின்றுகொண்டு, வடக்கேயிருந்துவரும் கப்பல்களை, தேவனாம்பட்டணம் போய் பட்டுகளை விற்கும்படி செய்கின்றது—காரைக்காலிலிருந்து கந்தப்பன் ஆசிரியருக்கு எழுதிய கடிதம் ஒன்றையும், குவர்னர் பெண்சாதிக்கு சென்னையிலிருந்து வந்த கடிதம் ஒன்றையும். இராத்திரி எட்டு மணிக்கு தபால்காரன் ஆசிரியரிடம் கொடுத்தான். மறுநாள் காலையில் குவர்னர் பெண்சாதிக்கு வந்தகடிதத்தை அந்த அம்மாளுக்கு அனுப்பியதால், அவள் கோபித்துகொண்டது—கும்பினீர் சேவகர்கள் 300 பேரையும், பிறித்து இரவில் சுற்றிபார்க்கும்படி குவர்னர் நியமித்தது—வந்தவாசி சபர்தலிகான் பெண்சாதிக்கு கடிதம்.

---

## அத்தியாயம் XLVIII

பிரபவ ஞு சித்திரை மீ 13உ (22-4-1747) முதல் பிரபவ ஞு ஆனி மீ 3உ (13-6-1747) வரை பக்கம் 61—96.

ஆசிரியர் பல்லக்கு போய், பகலில் கண்ட அதிசயக் கனவு. —தேவனாம்பட்டணத்து சேதிகள்: குவர்னர் கடின வியாதியாயிருந்து குணமடைந்து வருகிறார். சென்னை பழய குவர்னர் மோர்ஸ் பெண்சாதி, தேவனாம்பட்டணத்து ஆலோசனை சங்கத்தாரிடம் ஒரு கடிதம் வாங்கிக்

கொண்டு தரங்கம்பாடிக்குப் போனான். பங்காளத்திற்கு துணிகட்டுகள் ஏற்றுமதி தேவனார்பட்டணத்துக் கோட்டை வெகுதுலை வடக்கில் விஸ்தரிக்கப்பட்டது—சென்னை பிடிபட்டபோது நடந்த அக்கிரமங்கள், கொள்ளைகள்—என்ன நினைத்துக்கொண்டு குடிகள் சென்னையிலிருந்து வெளியேறினார்கள். அவர்கள் பல விடங்களில் புதைத்துவிட்டுப் போன சரக்குகள், ரொக்கங்கள் எப்படி கொள்ளை அடிக்கப்பட்டது. யார் யாருக்குப் பங்கு—குவர்னர் பெண்சாதி, தன் ஆட்களை அனுப்பி வியாபாரிகளிடம் எப்படி சம்பாதித்தாள்—குவர்னரிடம் சொன்னால் கோபித்துக்கொள்வதுபோல் பாவனை காட்டி உள்ளுடந்தையாயிருந்தது. இந்த விஷயங்களை நன்றாய் விஸ்தரித்து ஆசிரியர் எழுதியிருக்கிறார்—தேவனாம்பட்டணம் குவர்னர் மரணம்—அரும்பாத்தைபிள்ளை மகனை, அப்புமுதலி மூலம் இரண்டாயிரம் ரூபாய் வாங்கிக்கொண்டு விடுதலை செய்தார். குவர்னர், ஆசிரியரிடம் பதினாயிரம் வாங்கவேணுமென்று சொன்னவர்—நாசர்சங்கு கிருஷ்ணைக்கு தென்புறம் வந்தது—அன்வர்த்திகான், மாபூசுகான் அவனை சந்தித்தது—கவர்னர் துய்ப்ளேக்ஸ் அவனுக்கு உபசாரமாக எழுதி இமாம் சாயபுவைக்கொண்டு அந்த கடிதத்தை கொடுக்கச் செய்தது—

இமாம்சாயபுக்கு எழுதின கடிதத்தில்: நாங்கள் சென்னையை விட்டுவிடுகிறோம், பதிலுக்கு வில்வநல்லூர் வழுதாவூர் பிரான்தியங்களை விடும்படிக்கும், இங்கிலீஷ், ஒலாந்து தன்மார்க் துரைதனத்தாருக்கு இந்த ராஜ்யத்தில் சண்டை போடக்கூடாது என்று கண்டிப்பான கட்டளையை அனுப்பும்படிக்கும் நாசர்சங்குக்குச் சொல்லும்படி எழுதியிருந்தது—துய்ப்ளேக்ஸ் பெண்சாதி மோர்ஸ் பெண்சாதிக்கு, குருவப்பன் என்கிற துவிபாஷாவை அனுப்பியிருந்தாள். அவன் தேவனாம்பட்டணம் வெள்ளையர்களுக்கு விஷம் வைத்து, இப்போது வந்தால் கோட்டையைப் பிடிக்கலாம் என்று கடிதம் எழுதினான். கடிதம் பிடிப்பட்டது அவனும் காவலில் வைக்கப்பட்டான்-அன்வர்த்திகான், மாபூசுகான், மமுதல்லிகான் திருச்சினாபள்ளிக்குப் பயணமானார்கள்—தேவனாம்பட்டணம் துறையில் இருக்கும் கப்பலடியில் துளையிட்டு, வெடி மருந்து நுழைப்பித்து, தீ வைக்க இரண்டு வெள்ளையர் போனார்கள். வழியில் நெருப்பு அணைந்துபோனதினால் திரும்பிவிட்டார்கள்—ராத்திரியில் தேவனாம்பட்டணத்திலிருந்து புறப்பட்டு கப்பல்கள்

புதுச்சேரி கோட்டைபேரில் குண்டுகள் போடப்போகிறதாக கேள்விபட்டு, குவர்னர் மருந்து கிடங்கை காபந்து செய்தார்— ஆற்காடு சேதி—கலாப காலத்தில் சேவகர் அறியவேண்டிய குறிப்புகள்—நிரவிதி பீர்சாயபுக்குக் கடிதம்—தேவனும்பட்டணம் துறை பிடித்த கப்பல் மூலம் வந்த பிராஞ்சு சேதிகள். பிராஞ்சு ராசாவுக்குப் பேரன், தொர்பேன் பிறந்தான்—காரைக்காலுக்கு ஒரு கடிதம் எழுதி, அது நழுவி விழுந்தா போல் பாவனை செய்து மஞ்சகுப்பத்தில் போடுவிக்க செய்தது—தேவனும்பட்டணத்து கோட்டைக்குள் இருந்த வீடுகளையும் ஒலாந்துக்காரர் பாட்ரிகளையும் இடிக்கிறார்கள்—மோர்ஸ் துரைசாணிக்கும் துய்ப்ளேக்ஸ் துரைசாணிக்கும் கடித போக்கு வருத்து—தெப்ரேமெனில் பங்காளத்திற்கு போகும் வழியில் நெல்லூர் பாளையக்காரனால் வழி மறித்து கொள்ளை அடித்ததற்காக ஆற்காடு நபாபுக்கு ஆட்சேபனை குறிப்பு—சேஷாதிரிபிள்ளையை பிடித்துக்கொள்வதற்கு கலியாண ராசா தேவனும்பட்டணத்திலிருந்து, முன்னூறு சேகவர்களுடன் புறப்பட்டதாக வதந்தி—சதுரங்கப்பட்டணத்திலிருந்த, இங்கிலீஷ் ராணுவ உத்தியோகஸ்தன் எக்குமானை இரண்டு பிராஞ்சுக்காரர் ராத்திரியில் வந்து கட்டி படகில் போட்டுக் கொண்டு போய்விட்டார்கள் - கூடலூரிலும் நாலு தெரு வீடுகளை இடிக்கிறார்கள்—திருச்சிநாப்பள்ளிக்குச் சரியாய் வந்த அன்வர்த்திகான், திரும்பி, திருவதி, பண்ருட்டி செஞ்சி மார்க்கமாய் ஆற்காடுக்குப் போய்ச் சேர்ந்தான்—செகுனிவாச முதலியாரும் மலையப்ப முதலியாரும். தன் தமையனுக்குக் கொடுக்க வேண்டிய கடனை கொடுக்க மறுப்பதாக, தானப்பமுதலியார் குவர்னரிடம் பிராது சொன்னார். அந்த பிராதை விசாரித்து தீர்க்கும்படி, குவர்னர் ஆசிரியருக்கு உத்தரவிட்டார்.

ஆற்காட்டிலிருந்து வக்கீல் சுப்பய்யன் கடிதம் வந்தது. அதில் எழுதிவந்த சேதியாவது: பிராஞ்சுக்காரர் சென்னையைப் பிடித்ததும் காவல்காரரை துன்புறுத்தி பணம் பிடிங்கியதும், அன்வர்த்திகான் ரகசிய சம்மதத்தின்பேரில்தான் என்று தேவனும்பட்டணத்தில் இறந்துபோன மாசி குவர்னர் இந்து, நாசர் சங்குக்கு எழுதியனுப்பியதாகவும், அதை விசாரிக்க நாசர் சங்கு ஆள்கள் ஆற்காட்டுக்கு வந்திருப்பதாகவும், எழுதி அனுப்பினான்.

---

## அத்தியாயம் XLIX

பிரபவ ஸ்ரீ ஆனி மீ 4உ (14-6-1747) முதல்—பிரபவ ஸ்ரீ ஆடி மீ 17உ (29-7-1747) வரை பக்கம் 97—134.

நாசர்சங்கு இமாம்சாயபு அனுப்பிய வெகுமானங்களை, குவர்னர் எதிர்கொண்டு போய் வாங்கிக்கொண்டு, சிப்பேஷை தலை பாகையில் சொருகிக்கொண்டு வீடு வந்தார்—பங்காளத்திற்கு அதிபதியாய்ப்போகும் லெரித் என்பவன் ஆசிரியரோடு பெருமிதமாய் வியாபாரஞ் செய்ய ஆசிப்பதாகவும், அவனுடன் சிநேகம் செய்துக்கொள்ளும்படிக்கும், ஆசிரியருக்குக் கடிதம் வந்தது—நாசர்சங்கு கடிதம்—தெப்ரேமெனிலிடமிருந்து பரித்துக்கொண்ட ரூபாயையும் சாமான்களையும் திருப்பிக் கொடுக்கும்படி செல்லூர் அதிகாரிக்குக் கட்டளை இட்டதாக அன்வர்த்திகான் எழுதினான்—ரிஷி, லெரித், லாஸ், என்னும்மூவறு வெள்ளையர்கள் காரைக்காலிலிருந்து வந்தபோது, மல்ராசா சேகவர்களால் வழி மறிக்கப்பட்டு, லாஸ் ஓடிவிட்டான். மற்றவர்கள் அகப்பட்டுகொண்டார்கள்—அவர்களை விடுவிக்கும்படி சொல்ல, அன்வர்திகானுக்குக் கடிதம் எழுதி, தெவரசையும் குவர்னர் அனுப்பினார்—ஆலம்புறையில் ஒரு இங்கிலீஷ் படகு சிப்பி ஏற்றுவதாக கேள்விப்பட்டு, அதை பிடித்து வரும்படி ரொழே என்பவனையும், ராணுவத்தையும் அனுப்பினார் குவர்னர்—அர்ச். அருளப்பர் விழாவில் சொக்கபானையை பாதிரியாரும் குவர்னரும் கொளுத்தினார்கள்—ஆலம்புறைக்குப் போனவர்கள், இங்கிலீஷ் படகில், பீரங்கிகளைப் பார்த்து விட்டு, திரும்பிவிட்டார்கள்—தேவனாம்பட்டணத்தார், நாசர் சங்குக்கு வெகுமானமும், கடிதமும் அனுப்பினார்கள்—ஆசிரியர் மகள் கலியாண பெருமையைப்பற்றி குவர்னர் பேசுகிறார்—ஆசிரியர் மறுமொழி—ஆசிரியர் வீட்டு கலியாண விருந்தை வாழை இலையில் சாப்பிட குவர்னர் ஆசைப்பட்டார்—மஞ்சகுப்பத்துக்கு, புதுச்சேரி ஜனங்கள் போனால் அவர்கள் கழுத்தில் பட்டத்தைக்கட்டி ஊர்வலமாய் புறப்பட்டு தேவனாம்பட்டணத்து ஜனங்கள் புதுச்சேரிக்கு வந்தால் அப்படியே நடத்தப்படுவார்களென்று அறிவிக்கப்பட்டது—இமாம் சாயபு கடிதம்—ரசி குமாரத்தி இறந்துபோன சேதியைக் கேள்விபட்டு சென்னை குவர்னர் கஸ்திபட்டது. அது விஷயம், ஆசிரியர்

வெளிப் படுத்தியது—நாற்பது ஆயிரம் பெறக்கூடிய வெகுமானத்தை நாசர்சங்குக்கு அனுப்பியது—தேவனும்பட்டணம் தரை ராணுவம் கப்பல் அதிகாரிக்குக் கீழ் வைக்கப்பட்டதால், அந்த அதிகாரி, கருப்பு கொடியுடன் மஞ்சகுப்பத்துக்குப் போனான்—மாபூசுகான் பிராஞ்சுக்காரரால் தோல்வியடைந்து ஓடினபடியால் தன் அண்டைக்கு வரக்கூடாதென்று நாசர்சங்கு உத்தரவிட்டான்.

திருகாஞ்சியில், நாசர்கொல்லிகான் வந்திறங்கியபோது, தங்கள் கிராமம் சூரையாடப்பட்டதாகவும், அதனால் 2489 வராகன் நஷ்டமடைந்ததாகவும் அழிசபாக்கம் ரெட்டிமார்கள், விண்ணப்பம் செய்தார்கள்—இங்கிலீஷ்காரருக்கு கப்பல்கள் வருகிறபடியால் தட்டுமுட்டு சாமான்களை பத்திரப்படுத்தும்படி எலியாஸ், ஆசிரியருக்கு சொன்னான்—சத்தாராவிலிருந்து சந்தாசாயபு கடிதம் வந்தது. தன்னை விடுதலை செய்ய நாலு லக்ஷ ரூபாய் கேழ்பதாகவும், அநேகமாய் மழைகாலம் போனதும்தான் விடுதலை அடையக்கூடுமென்றும், நாசர்சங்கு பண வசூலுக்கு வந்திருப்பதனால் சண்டை செய்ய போதுமான ராணுவம் அவனிடம் இல்லையென்றும் அவனுக்கு பயப்பட தேவையில்லையென்றும் அறிவித்தார்—நாசர்சங்குக்கு குறித்த வெகுமானத்தை உடனே அனுப்பும்படியும், அன்வர்த்திகானுக்கு எழுதிய கடிதத்தை நிறப்பாட்டிவைக்கும்படிக்கும், குவர்னர் உத்தரவிட்டார்—தேவனாம்பட்டணத்திலிருந்து வெகுமானம் கொண்டுபோனவர்களை நாசர்சங்கு கோபித்துக் கொண்டது—பிடித்துக்கொள்ளபட்ட பிராஞ்சுக்காரரை விடுதலை செய்யும்படி, ஆள் அனுப்பி சொல்லியும், தேவனாம்பட்டணத்தார் கேழ்கவில்லையே என்று அன்வர்த்திகானுக்குக் குவர்னர் கடிதம் எழுதினார்—வரி செலுத்தும் விஷயமாய் மைசூராருக்கும், நாசர்சங்குக்கும் தகராறு—பிடிபட்ட இரண்டு பிராஞ்சுக்காரர்களுக்கு இரண்டு இங்லீஷ்காரர்களை அனுப்பி மாத்திகொண்டார்கள்.

---

## அத்தியாயம் L

பிரபவ ஞு ஆடி மீ 23உ (1-8-1747) முதல்—பிரபவ ஞு புரட்டாசி மீ 25உ (8-10-1747) வரை பக்கம்: 136—163.

சயந்தி ராமய்யருக்கு வெகுமானம்—அன்வர்த்திகானுக்கு அனுப்ப மருந்து தயார் செய்யப்பட்டது.—

சீர்மையிலிருந்து அநேக கப்பல்கள் வருவதாக செதி தெரிவித்து மாயேயிலிருந்து கடிதம் வந்தது—சீர்மை கம்பனி நிர்வாகஸ்தர்களில் இரண்டு பேரை, லஞ்சம் வாங்கினதற்காக நீக்கிவிட்டார்களென்று குவர்னர் சந்தோஷப்பட்டார்—துய்மா ம்ரணம் அடைந்தார்—காற்வேட்டி ராசாணி தூதர்கள் வந்தார்கள்—உல்மூல்க் என்னும் நிஜாமுக்கு பைத்தியம் பிடித்தது—காசர்சங்கு பட்டாளத்திற்கும் மைசூராருக்கும் சண்டை நடந்தது—குண்டு, பீரங்கிகள், குண்டு மருந்து ஏற்றிக் கொண்டு, ஒரு கப்பல் தேவனாம்பட்டணத்திற்கு வந்தது—குவர்னரால் ஏவப்பட்ட ஆசிரியர், கிறிஸ்து மத பெரிய குருவானவரோடு, கும்பினி தரகு அலுவலைப்பற்றி சம்பாஷித்தார்—எட்டு இங்கிலீஷ் கப்பல்கள், ஒரு படகு, புதுச்சேரி துறை நேரே வந்து தூலவில் நின்றதுகள்—திருவிதாங்கூர் ராசாதூதர்கள் கடிதம் கொண்டுவந்தார்கள்—500 சிப்பாய்களை திரட்டி எடுத்துக்கொண்டு வரும்பொருட்டு, ஐந்து வெள்ளையர் வேண்டிய திரவியத்தோடு பயணமானார்கள்—வேதபுரீஸ்வரர் கோவிலை இடித்துப் போடும்படி, ஆசிரியரிடம் சொல்லும்படி காரைக்கால் கிறிஸ்துவ மத குரு, அன்னபூரணய்யரை அனுப்பினர்.

---

## அத்தியாயம் LI

பிரபவ ஸு புரட்டாசி மீ 27உ (10-10-1747)—பிரபவ ஸு ஐப்பசி மீ 25உ (7-11-1747) வரை பக்கம் : 169 —202.

சென்னையில், இமாம் சாயபு வீட்டிலிருந்த சாமான்களை பிராஞ்சுக்காரர் எடுத்து வந்ததைப்பற்றி, சொக்கனாத முதலியாருக்கும், குவர்னருக்கும், ஆசிரியருக்கும் சம்பாஷணை—இங்கிலீஷ்காரர் சேவகத்தை கைவிட்டு, 80 சிப்பாய்களுடன் தேவனாம்பட்டணத்திலிருந்து புதுச்சேரிக்கு வந்தான்—லஞ்சம் வாங்கினதாக குற்றஞ்சாட்டி, குவர்னர் பெண்சாதியிடம் பிராது கொடுத்தார்கள்—தோதலேன் கடற்படை இங்கிலீஷ் கப்பல் ஒன்றையும் நாட்டுகப்பல் ஒன்றையும் பிடித்து மாயேவுக்குக் கொண்டுவந்தது—காசர்சங்கு, இங்கிலீஷ்காரர் அனுப்பிய வெகுமானத்தை வாங்கிக்கொண்டும் கோல்கொண்டாவுக்குத் திரும்பி போனான்—கோவாவண்டை பிடிப்பட்ட

இரண்டு கப்பல்களின் சாமான்களை மாயேவில் இறக்குகிறார்கள்—தேவனும்பட்டணத்திலிருந்து படைகள் பாகூரை நோக்கி வருவதாக, அரியாங்குப்பத்தின் கொத்தளத்து எஜமான் தெரிவிக்க புதுச்சேரி பட்டாளம் அரியாங்குப்பத்தை நோக்கி விறைந்தது—ஆசிரியர் கண்ட கனவு—தூங்கி எழுந்தபோது உண்டான நல்ல சகுனங்கள் அவர் அடைந்த மகிழ்ச்சி—தேவனும் பட்டணத்தைச் சுற்றி எத்தனை கொத்தளங்கள், ஒன்றுக்கு ஒன்று எவ்வளவு தூரத்தில் உள்ளது, ஒவ்வொன்றிலும் எத்தனை காவல்காரர் இந்த சேதிகளை வரவழைக்கும்படி குவர்னர் சொன்னார்—மாயேவுக்குப் போன மேன்வீலை பிடித்து வைத்திருக்கும், மைசூர் ராச்சியத்தில் உள்ள சேர்ந்தமங்கலம் கோட்டை அதிகாரிக்கு வெகுமானமும் கடிதமும் அனுப்பப்பட்டது—மாயேவுக்குப் போன மேன்வீலை, வழியில் பிடித்து வைத்திருக்கிற, சேர்ந்தமங்கலம் அதிபனுக்குக் கடிதம்—நாசர் சங்கு, ஏன் இங்கிலீஷ்காரர் வெகுமானங்களை வாங்காமலும் அவர்களுக்கு உதவியாய் வராமலும் திரும்பிவிட்டான் என்பதை, ஆசிரியர் விளக்குகிறார்—

---

## அத்தியாயம் LII

பிரபவ ஞு ஐப்பசி மீ 28உ (8-11-1747) முதல்—பிரபவ ஞு கார்த்திகை மீ 15உ (27-11-1747) வரை பக்கம்: 205—236.

ஷஹாஜி என்கிற வெள்ளைக்காரனும், அவன் மகனும் ஒரே நாளில் மரித்தார்கள்—நாசர்சங்கு ராணுவத்தின் சேதியைக் கொண்டுவந்த சேகவர்களுக்கு, 240 ரூபாய் வெகுமானம் கொடுக்கப்பட்டது—அரியாங்குப்பத்து ஆற்றில் வெள்ளம் போகிறபடியால், அக்கரையில் 640 நெல் பொதி தேங்கியிருக்கிறது—சேர்ந்தமங்கலம் கோட்டை தளவாய், இங்கிருந்து போன வெள்ளையர்களை விடுவிக்க, 350 வராகன் கேழ்ப்பதாக தகவல் கிடைத்தது—சிரங்கப்பட்டணத்திலுள்ள பிரபல வியாபாரிகளுக்கு, மேன்வீல் என்ற வெள்ளைக்காரனை விடும்படி, ராசாவினிடம் சிபார்சு செய்ய கேட்டுக்கொண்டு கடிதங்கள் எழுதப்பட்டது—ஆசிரியர் கடிதம் ஒன்று குவர்னர் பெண்சாதியிடம் அகப்பட்டது. அதில் தன்னை ஸ்ரீ அம்மாவென்று எழுதாமல், வெறும் அம்மாவென்று எழுதியிருந்ததைக் கேட்டு கோபித்

தாள்—தேவனும்பட்டணத்தைப் பிடிக்க, ஆலோசனை சங்கம் உத்தரவு கொடுத்தது. அக்கன்நாய்க்கனுக்கு வண்டிபாளையத்தையும் திருப்பாப்பூரையும் கொடுப்பதாக, தன் பேரால் வார்த்தைப்பாடு கொடுக்கும்படி, குவர்னர் சொன்னார்—கான் பஹதூர் புதுச்சேரிக்கு வந்தான். அவனுடைய அந்தஸ்தைப் பார்த்து, ஆசிரியர் துக்கமடைந்தார்—தங்கள் வீடுகளை இடிக்க வேண்டாமென்று, சென்னைவாசிகள் சிலர், விண்ணப்பஞ் செய்துகொண்டதால், அவர்களுக்கு ஆசிரியர் மூலம் குவர்னர் சொன்ன பதில்—துலோரான் எவ்பவலுக்கு பதில், சென்னை குவர்னராக, பர்த்தலேமி நியமிக்கபட்டான்—இந்துக்களுக்குள் உண்டான ஒரு வியாச்சியத்தில், வாதிக்கு அனுகூலமாய் மத்தியஸ்தர் தீர்ப்பு சொல்லும்படி. குவர்னர் பெண்சாதி செய்த முயற்சி பயன் அளிக்கவில்லை—300 சேகவர்களுக்குத் தலைவனான சாந்தப்பனை, காதறுத்து ஊருக்கு வெளியே துரத்தும்படி சின்ன துரையைக் கேட்டான். அவரும் மறுத்துவிட்டார்—மலேகொழுந்து முதல் சென்னைக்குப் பெரிய துபாசியாகவும், அவன் மகனை துபாசியாக நியமிக்கப்பட்டார்கள். குவர்னர் பெண்சாதியுடைய சிபார்சில் இவர்கள் நியமிக்கப்பட்டதாக ஆசிரியர் சொல்லுகிறார்.

---

## அத்தியாயம் LIII

பிரபவ ஸூ கார்த்திகை மீ 16உ (28-11-1747) முதல்—பிரபவ ஸூ கார்த்திகை மீ 27உ (9-12-1747) வரை பக்கம்: 240—263.

சென்னையில் மேல் அதிகாரியாயிருந்த துய்லோராம் என்பவன் பஞ்சு மூட்டைகளைக் களவாடினதாக, மேல் ஆலோசனை சபையில் குவர்னர் துய்ப்ளேக்ஸ் குற்றஞ்சாட்டி, அலுவலிலிருந்து நீக்கிவிட்டான்—அகப்பட்ட பஞ்சு மூட்டைகளை, புதுச்சேரி வியாபாரிகளைக்கொண்டு விற்கச் செய்தான்—நாசர்சங்கு ராணுவத்திலிருந்த, நாசர்கொல்லிகான் குவர்னருக்குக் கடிதம் எழுதினான்—அதற்கு மறுமொழி அனுப்பப்பட்டது—துய்மாவுக்கு தனிமையில் கடிதம் எழுதினதாக, ஆசிரியரை குவர்னர் பெண்சாதி குற்றஞ்சாட்டினாள்—தேவனும்பட்டணத்திலிருந்து தலைச்சேரிக்குக் கொண்டுபோன கடிதங்களை

பிராஞ்சு சேகவர்கள் பிடித்துக்கொண்டார்கள்—முத்தாலு நாய்க்கன் தலைமையில் இரண்டாயிரம் குதிரைகள் சேர்ந்ததாகவும், அவர்கள் வரப்போவதை மாபூசுகான் தடுத்துவிட்டதாகவும், சேதி—துய்மாவுக்கு எழுதின கடித விஷயமாய் குவர்னருடன் சம்பாஷணை—குவர்னர் பெண்சாதி ஆசிரியர் பேரில் அபத்தமான குற்றங்களைச் சாட்டுவதுபற்றி, இரண்டாவது குவர்னருடன் சம்பாஷணை—(சிமனுசி மகன் சதாசிவ ராயன், அறுபதாயிரம் மராட்டிய வீரர்களுடன் நாசர்சங்கு பேரில் சண்டைக்கு வருகிறானென்று ஆற்காட்டிலிருந்து சேதி வந்தது)—நெல் வியாபாரம் செய்யவேண்டாமென்று, குவர்னர் ஆசிரியருக்கு ஆலோசனை சொன்னார்—நெல் வியாபாரம் செய்யலாகாதென்று குவர்னர் ஆசிரியரை வற்புறுத்தினார்—தேவனாம்பட்டணத்திலிருந்து தலைச்சேரிக்குக் கடிதம் கொண்டுபோனவர்களை பிராஞ்சு சேகவர்கள் பிடித்துக் கடிதத்தை பிடுங்கிக்கொண்டார்கள்—அந்த கடித்தத்திலிருந்த சேதி—பஞ்சு மூட்டைகளை தான் குறைந்த விலைக்கு எடுத்துக் கொள்ளும் கெட்ட எண்ணத்துடன், துய்லோராம் ஏலம் போடாமல் நிறுத்தி வைத்தான் என்பதாக, சென்னை வியாபாரியிடமிருந்து ஒரு கடிதம் வரவழைக்கும்படி குவர்னர் ஆசிரியருக்குச் சொன்னார்.

---

## அத்தியாயம் LIV

பிரபவ ஸு கார்த்திகை மீ 28உ (10-12-1747) முதல்—
பிரபவ ஸு மார்கழி மீ 29உ (21-12-1747) வரை பக்கம்: 268—292

அன்வர்த்திகான் கேட்டுக்கொண்டபடியால், அவனுக்கு தூர பார்வை, கிட்டத்து பார்வை கண்ணாடி கல் அனுப்பும்படி குவர்னர் உத்தரவிட்டார்—பெரிய பெட்டி ஒன்றை சதுரங்கப் பட்டணத்துக்கு ஆள்கள் தூக்கி வருவதாக கேள்விபட்டு, அதை சாவடியில் கொண்டுவந்து இறக்கும்படி குவர்னர் பெண்சாதி திட்டம் செய்தாள்—திறந்து பார்க்கையில், அதில் பிங்கானும் உமியும்தான் இருந்தது—சென்னை வியாபாரிகள், புதுச்சேரியில் தங்கள் வியாபாரத்தை ஸ்தாபித்துக்கொள்ளாவிட்டால் சென்னையில் அவர்கள் வீடுகள் இடிக்கப்படுமென்று

அவர்களை எச்சரிக்கும்படியாய், ஆசிரியருக்கு குவர்னர் கட்டளை யிட்டார்—அழிச்சப்பாக்கம், சிங்கிரிகோவில் கிராமங்களில், மல்லுராசா மனிதர் கொள்ளையிட்டார்கள்—குவர்னரும் அவர் மகளும் சவாரி போகையில், குதிரையிலிருந்து விழுந்துவிட் டார்கள்—சுபா ரயிஸ்து மகன் மாப்பிள்ளைக்கு வரவேற்பு— சந்தாசாயபு மகன் கலியாணத்திற்கு சிறப்பு செய்ய ஏற்பாடு கள்—சென்னை துபாசி மலைகுழந்தை முதலியாரையும், நயினார் நல்லதம்பியையும் மாற்றி வேறு உத்தியோகஸ்தர்களை அனுப் பும்படி, சென்னை குவர்னர் பர்த்தலேமி, புதுச்சேரிமேல் ஆலோசனை சங்கத்திற்கு எழுதிக் கேட்டார்—கோமணமுதலி, சென்னையில் செய்த குற்றத்திற்காக, காவலில் வைக்கப் பட்டான்—இராசத்துகான், யானை குதிரைகளுடன், மேள வாத்தியங்களுடன், 150 தட்டில் வரிசை எடுத்துக்கொண்டு, மாப்பிள்ளை வீட்டுக்குச் சென்றார்—தலுக்கர் எப்படி கலி யாணம் நடத்துகிறது?—கலியாண சிறப்பின் விபரம்.—

---

## அத்தியாயம் LV

பிரபவ ஹு மார்கழி மீ 3உ (20-12-1747) முதல்—பிரபவ ஹு தை மீ 9உ (14-2-1748) வரை பக்கம் : 290—340.

சந்தாசாயபு குமாரன் ராசாசாயபு கலியாண சிறப்பை, விபரங்களுடன் அழகாய் ஆசிரியர் விளக்குகிறார். அந்த நாளையில் தனவந்தர்கள் இஸ்லாமானவர்கள் எப்படி கலி யாணம் செய்தார்கள் என்பதை, அறிந்துகொள்ள முடிகிறது— குவர்னர், மேல் ஆலோசனை சங்கத்தார், மற்ற பிராஞ்சுக்காரர் தங்கள் குடும்பத்துடன் பிராஞ்சு, மாயே சிப்பாய்களுடன் கலியாணத்துக்கு விஜயம் செய்தார்கள்—வாண வேடிக்கை வெகு நேர்த்தியானது—குவர்னருக்கும் மேல் ஆலோசனை சபையாருக்கும், மற்றவர்களுக்கும் சந்தாசாயபு கொடுத்த வெகுமானங்கள், மெச்சத் தகுந்தது—தூக்குக்குத் தீர்வையிடப் பட்ட ஒரு வெள்ளைக்காரனை, ராசாசாயபு கேட்டுக்கொண்ட படியால் குவர்னர் விடுதலை செய்தார்—நபாபு இராசாக்கானுக் கும் அவர் பந்துகளுக்கும், குவர்னரும், ஆசிரியரும் கொடுத்த வெகுமானங்களின் விபரம்—அலிநக்கிசாயபு குவர்னருக்கும், அவர் பெண்சாதிக்கும், ஆசிரியருக்கும் மதனானந்தபண்டிதருக்கும்

செய்த வெகுமானம். குவர்னர் அவருக்குக் கொடுத்த பிரிதி வெகுமான விபரம்—அலிகக்பிசாயபு. கலியாணம் செய்து கொண்ட மாப்பிள்ளையுடன் வந்தவாசிக்கு பயணமானர்.

புது வருஷத்திய வாழ்த்துகளை சொல்ல, ஆசிரியர் தானப்ப முதலியாருடன், எல்லா வெள்ளைக்காரர் வீடுகளுக்கும்—தேவனும்பட்டணம், இங்கிலீஷ்காரர்பேரில் சண்டைக்குப் போகப்போகும், ராணுவத்திற்கு உணவு கொடுக்க, அரும்பாத்தை பரசுராமப்பிள்ளை மறுத்துவிட்டார்—ஆசிரியருக்கு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு சிறப்பு செய்தார்—அதன் ஜாதக குறிப்பு—300 எருதுகளும், கர்னடக துபாக்கிகளையும் சேகரிக்கும்படியும், ஆனால் சிவனுசிரெட்டியை தன் ஆட்களுடன் வரவேண்டாமென்றும் குவர்னர் உத்தரவிட்டார்—சென்னையிலிருந்து, 250 வெள்ளக்கார்ச்சிகளும், சேத்துப்பட்டிலிருந்து 25 பேரும் வந்தார்கள்—சென்னை பழய குவர்னர் மாசு, துய்ப்ளேக்ஸ் பெஞ்சாதிக்கு எழுதிய கடிதத்தை வழியில் இங்கிலீஷ்காரர் பிடுங்கிப்பார்த்து, மாசை காவலில் வைத்தார்கள்—சமேநார் அப்துல்ரஹிமானுக்கு குவர்னர் வெகுமானம். சிங்கிரிகோவில் பட்டாச்சாரி, வேஷக்காரனைபடியால், பிடித்துக் காவலில் வைத்தார்கள்—ராணுவம் அரியாங்குப்பத்துக்குப் பயணமாச்சுது—நபாபு அன்வர்த்திகானுக்குக் கடிதம். தேவனும்பட்டணம் இங்கிலீஷ்காரர்பேரில் சண்டை செய்ய பிரமாத முஸ்த்திப்புகள் செய்து, குவர்னர் தண்டோடு புதுச்சேரியிலிருந்து புறப்பட்டு, தூக்கணும்பாக்கத்தருகாமையில் சென்றபோது, தேவனும்பட்டணத்துத் துறையில் ஆறு கப்பல்களும், ஒரு பெரிய படகும் வந்தது. அது சேதியறிந்து, தண்டை திருப்பி அழைத்துக்கொண்டு, குவர்னர் புதுச்சேரிக்கு வந்தார். அது விஷயமாய் ஆசிரியர் நினைவுகள்.

---

## அத்தியாயம் LVI

பிரபவ ஸு தை மீ 10உ (20-2-1748) முதல்—பிரபவ ஸு தை மீ 28உ (5 2-1748) வரை பக்கம்: 340—364.

கார் நெல் பணத்திற்கு எட்டு சின்ன படி விற்கும்படி, குவர்னர் உத்தரவிட்டார்—ஆசிரியர் தம்பி திருவேங்கடம்

பிள்ளை, ஸ்திரீ வித்தைகளில் அகப்பட்டு வியாதிகளைச் சம்பாதித்துக்கொண்டபடியால், முன்னுக்கு வரமாட்டானென்றும், ஆசிரியர் மருமகன் ஸ்திரீ வியாதியால் இறந்துவிட்டதாகவும், குவர்னர். சொன்னார்—வேட்டவலம், உடையார்பாளையத்திலிருந்து வந்த ஜனங்களையும், குதிரைக்காரரையும், சம்பளம், படி கொடுத்து அனுப்பிவிட்டார்கள்—பாசிராயன், நிஜாம் பேரில் லக்ஷம் குதிரைகளோடு சண்டைக்குப் போவப்போகிறதாயும், நிஜாம் சமாதானம் பேசுவதாகவும் சேதி வந்தது—கப்புய்சேன் கோவிலை இடித்துக் கட்டுவதினால், தற்காலமாய் பந்தல் போட்டு வைத்திருந்த பூசை பீடம் நெருப்புப்பட்டு எரிந்துவிட்டது—பிராஞ்சுக்காரர் கொடுக்கவேண்டிய இருபத்தி ஐயாயிரம் வராகனுக்கு நாலு பாரம் ஈயமும், ஒஸ்திசாராயம் நாலு காவட்டியும் அனுப்பும்படியும், வில்லியனூர், வழுதாவூர் கிராமங்களைக் கொடுக்கும்படி, நாசர்சங்கு வந்ததும் சிபார்சு செய்து, சன்னது அனுப்புவதாகவும், இமாம்சாயபு கடிதம் எழுதினார்—புதுச்சேரியின்பேரில் சண்டை செய்ய நானூறு வெள்ளை ராணுவத்தார், தேவனாம்பட்டணத்துக்கு வந்த சேதியைக் கேட்டு குவர்னர் மெத்த கோபித்துக்கொண்டார்—தஞ்சாவூர் ராசா தூதர்கள் வந்தார்கள்—வேட்டவலம், உடையார்பாளையம் பாளையக்காரருக்கு அவரவர்களுக்குத் தக்காபோல் வெகுமானம் அனுப்பும்படி குவர்னர் சொன்னார்.

---

## அத்தியாயம் LVII

**பிரபவ ஹு தை மீ 27௳ (6-2-1748) முதல்—பிரபவ ஹு மாசி மீ 18௳ (26-2-1748) வரை பக்கம் : 365—392.**

அழிச்சபாக்கம் கிராமத்தில் தங்கியிருக்கிற தண்டில் ஒரு வெள்ளைக்காரன் குதிரைசவாரி போனபோது, தெற்கேயிருந்து, இங்கிலீஷ்காரர் கொடி போட்டுக்கொண்டு வடக்கை நோக்கி வருவதாகச் சொன்னான். அதன்பேரிலே புதுச்சேரியில் பயம் உண்டானது. கடைசியாய் அவன் குடி வெறியில் அப்படி சொன்னதாக ஏற்பட்டது—சம்பாகோவிலார், ஒழுகரையிலிருக்கும் ரெட்டிகளுக்கு, பணம் கடன் கொடுத்திருப்பதால், அவர்கள் அருக்கும் நெல் தங்கள் கோவில் உபயோகத்

துக்கு வேணுமென்று சொன்னார்கள் — சீரங்கப்பட்டணத்து பவான் தாக்குக்கும், ரவணப்பய்யனுக்கும் இரண்டாயிரம் வராகன் உண்டியல் அனுப்பப்பட்டது — அழிச்சபாக்கத்தில் மூன்று ரெட்டிகள் நெல்லை அறுத்து பதுக்கி வைத்தபடியால், தலைக்கு இருபத்தி ஐந்து சவுக்கடி கொடுக்கப்பட்டது — புதுச்சேரியிலுள்ள பிரபலஸ்தர்கள், தேவனாம்பட்டணத்துக்குச் சேதி அனுப்புவதாக குவர்னர் கேள்விப்பட்டார். வர்த்தகர்களை விசாரித்ததில், அவர்கள் அந்தச் சேதி பொய் என்று உறுதியாய்ச் சொன்னார்கள் — சம்பா கோவிலுக்கு நெல் கொண்டு வந்த வண்டிக்காரர், தீர்வை கொடாமல் வந்தபடியால், அவர்களை சவுக்கால் அடிக்கும்படி குவர்னர் உத்தரவிட்டார் — ஆசிரியர், புதுச்சேரிக்கு நெல் வராமல் தடை செய்வதாக குவர்னரிடம் கோள் சொன்னார்கள். ஆசிரியரின் புத்திசாலித்தனமான மறுமொழி — இங்லீஷ்காரரின் தூதன்: முத்தாலு நாய்க்கன், இரண்டு மூன்று லக்ஷ ரூபாய் பெருமான வெகுமானம் கொடுத்தும், நாசர்சங்கு உதவி கொடுக்க மறுத்துவிட்டபடியால், கடப்பைக்கு வந்து அவ்விடத்தில், இரு நூறு குதிரை வீரர்களை சேகுவத்திற்கு அமர்த்த, இரண்டாயிரம் மூவாயிரம் வராகன், சிலவுக்கு இல்லாமல் தத்தளித்துக்கொண்டிருப்பதாக, ஆற்காட்டிலிருக்கும் பிராஞ்சுக்கார வக்கீல் எழுதி அனுப்பினான் — பதினாயிரம் கப்பல் படை சேகவர்கள் வருகிறபடியால், குழந்தைகளையும், பெண் பிள்ளைகளையும், ஊருக்கு வெளியே அனுப்பும்படி, தேவனாம்பட்டணத்தார், தமுக்கு போட்டார்கள். பர்லாமுடன் பேச்சுகொடுத்து, தேவனாம்பட்டணத்தைச் சேர்ந்த சில சேதிகளை அறிந்து, ரங்கப்பிள்ளையிடம் சொல்லுவதாகவும், ரங்கப்பிள்ளை தான் அறிந்ததாக அந்தச் சேதிகளை துரையிடம் சொல்லுவதாகவும் குவர்னர் பெண்சாதி அப்புமுதலியாரை குற்றஞ்சாட்டினாள்.

---

## அத்தியாயம் LVIII

பிரபவ ஹு மாசீ மூ 19 உ (27-2-1748) முதல் — பிரபவ ஹு மாசி மீ 29 உ (8-3-1748) வரை பக்கம்: 393—421.

சர்போஜிராசா மகன் சகிசிராசாவை, புதுச்சேரியில் வைத்திருப்பதாக, கேள்விப்பட்ட சேதி ஆதாரமற்றதென்பதை,

தஞ்சாவூர் ராசா பிரதாபசிங்குக்குக் கடிதம் எழுத குவர்னர் சொன்னார்.—சேமராசா, புத்திரோத்ஸவத்திற்கு அனுப்பின வெகுமானத்தை, காவேட்டி ராஜம்பாளையத்திலிருந்து வேத மூர்த்தி சிங்கராச்சாரியார் கொண்டுவந்தார்.—கடப்பையி லிருந்து, சித்தோசி தமையன் பரசோசி கொருப்படே மகன் ஆனந்தராவு கொருப்படேயும், இருபத்திரெண்டு குதிரைக் காரர்களும், பிராஞ்சுக்காரர் சேவுகத்தில் அமர்ந்துகொள்ள, அப்தூல் ரஹிமான்மூலம் வந்தார்கள்.—குண்டுசாலையில் இருக்கும் புதுப்பாளையம் வழியில், காவல்காரனால் தடைப் பட்டு நிறுத்தப்பட்டார்கள்.—ஆசிரியர்பேரில் குற்றம்கொள் பவர்களை குவர்னர் தன் பெண்சாதி முன்பாகவும், ஆசிரியர் முன்பாகவும் விளக்கஞ்செய்தார்.—குவர்னர் பெண்சாதியின் மருமகன்: பர்னவால், தன் பத்தினி புசி என்பவனோடு, சரசமா யிருப்பதை சாடையால் அறிந்து, பசியோடு கத்திசண்டை போட்டுக் காயப்பட்டான்; இனி புதுச்சேரியில் இருந்தால் குவர்னர் செல்வாக்கை உபயோகித்து, தன் பெண்சாதி சரிவர நடக்கமாட்டாளென்கிற, உத்தேசத்தினால் தரங்கம்பாடியில் குடியேறினான். ஆனால் அந்த ஊரில் அவன் பெண்சாதி கால மானாள்.—வெங்கட்டரெட்டி என்ற ஒரு வியாபாரி, திருட்டு குற்றஞ்சுமத்தி, பொர்ஷெ என்கிற வெள்ளைக்காரன்பேரில் பிராதுசெய்தான்.—முத்தாலுநாய்க்கன் ஐம்பது குதிரை களோடு திரும்பி, திருப்பதிமார்க்கமாய், சோளங்கிபுரம் வந்தானென்று கேள்விப்பட்டு, அவனை வழியில் மறித்துபிடிக் கும்படியாய் ஆற்காட்டிற்கு எழுதசொல்லி குவர்னர் உத்தர விட்டார்—அதன்படியே வக்கீல் சுப்பய்யனுக்கு ஆசிரியர் கடி தம் எழுதினார்.—மைலாப்பூரில், காட்டுக்கோவில் விசாரணை குரு எழுதி அனுப்பிய கடிதத்தை மதனந்தபண்டிதர், குவர்னர் பெண்சாதிக்கு வாசித்து, மொழிபெயர்த்துச் சொன்னார்.—வந்த வாசியிலிருந்தும் ஆற்காட்டிலிருந்தும் ஏன் துலுக்கர் அடிக் கடிக்குப் புதச்சேரிக்கு வருகிறார்கள்? என்று குவர்னர் கேட் டார். தோஸ்தலிக்கான் பெண்சாதி மெத்த வயதானவள். ஏராளமான பணம் வைத்திருக்கிறாள். அதைப் பறித்துக் கொண்டுபோக, அவள் பெண்களும், மருமக்கள்களும் அடிக்கடி புதுச்சேரிக்கு வருகிறார்கள்.—சந்தாசாயபு எப்போது வருவார் என்கிற குவர்னர் கேழ்விக்கு, ஆசிரியர் பதில் சொன்னதாவது: சாருவார்ராசா தன் இச்சையாய் நடக்கிறதில்லையாம். அவர் பெண்சாதிகள் இரண்டுபேர்

யோசனைப்படிதான் இராச காரியங்களை நடப்பிக்கிறதாம்.—ஆனப்படியினாலே அந்த இரண்டு பெண்சாதிமாரையும் கண்டு பேசி, திருச்சினாப்பள்ளி ஆற்காடு விஷயமாய் ஒரு ஒப்பந்தம் செய்துக்கொண்டுவருவதாக, சந்தாசாயபு எழுதினார்—குவர்னர் துய்ப்ளேக்ஸ் பெண்சாதி பேச்சைக்கேட்டு நடக்கிறபடியால், அவருக்கு துரைதனம் மாறியிருக்குமென்று ஆசிரியர் யூகிக்கிறார்.

---

## அத்தியாயம் LIX

பிரபவ ஷு மாசி ழ் 30வ (9-3-1748) முதல்—பிரபவ ஷு பங்குனி ழ் 12வ (21-3-1748 வரை பக்கம்: 426—456.

பொர்ஷெ என்கிறவன் பெண்சாதி, குவர்னர் பெண்சாதியிடம் சிபார்சு செய்துகொண்டதின்பேரில், வெரிட்ட ரெட்டி காவலில் வைக்கப்பட்டான்—இங்கிலீஷ்காரரின் தூதுவன் முத்தாலுநாய்க்கன் முந்நூறு சேகவர்களோடு, திரும்பும் காலத்தில், அவனுக்கு காபந்தாயிருந்து, வழிக்கூட்டி அனுப்பும்படி, எல்லா பாளையக்காரருக்கும், நாசர்சங்கு தாக்கீது அனுப்பினான். முத்தாலுநாய்க்கன் ஆற்காட்டிலிருந்து வந்து சேர்ந்தான்—மைசூர் ராச்சியத்தைச் சேர்ந்த சேர்ந்தமங்கலம் கோட்டையில், காவலிலிருக்கும் மேன்வில் வெள்ளைக்காரனை, ராசா விடுவிக்கும்படி உத்தரவிட்டும், கோட்டை அதிகாரி, தனக்கு ஒரு தொகை வேண்டுமென்று, விடுதலைசெய்ய மறுத்து விட்டான்—அது கேட்டு குவர்னர் நானூறு, ஐந்நூறு வெள்ளைக்கார ராணுவத்தாரை அனுப்பி, மைசூர் ராச்சியத்தையே தான் கை பற்ற முடியுமென்று சொன்னார்—கும்பினியை மோசஞ்செய்ததாக, சோமண முதலிபேரில், பெண்சாதி வார்த்தையைக் கேட்டு, குற்றஞ்சுமத்தி, அவனுக்கு இரண்டாயிரம் வராகன், அபராதம் போடுவித்தார் குவர்னர்—சேஷம ராசாவுக்கு, தந்தத்தில் அருமையான கொத்துவேலை செய்த பெட்டி ஒன்றை, பதில் வெகுமானமாக, ஆசிரியர் அனுப்பினார். எலியாஸ் மருமகன், கிரேக்கசாதியான சம்புதாசுக்கு நேரிட்ட வர்த்தமானங்களை, குவர்னருக்குச் சொன்னான்—பவழக்காட்டில் வந்திருக்கும் அர்மேனியன் கொண்டுவந்த சரக்குகளை

விடவேண்டாமென்று கடிதம் அனுப்பப்பட்டது—முத்தாலு நாய்க்கன் ஆற்காட்டிலிருந்து, புறப்படப்போவதாகவும், வந்த வாசி வழியை பின் பற்ருமல், செஞ்சி மார்க்கமாய்த் திரும்பிப் போகப்போவதாயும், ஆயிரம் குதிரைகள் வைத்துக்கொள்ள உத்தாரம் கேட்டதற்கு, அன்வர்த்திகான் மறுமொழி சொல்லாமல், வேலூருக்குப் பிரயாணமாய் போய்விட்டதாகவும், ஆற்காடு வக்கீல் சுப்பய்யன் கடிதம் எழுதினுன்—நொர்மாந்தி தேசத்தின்பேரில், ஐம்பது கப்பல்களுடன் இங்கிலீஷ்காரர் சண்டைக்குப் போய், வழியில் காற்றில் அகப்பட்டு, நாற்பத்தி ஆறு கப்பல் மூழ்கிப்போனதென்றும், பதினையாயிரம் பேர் இறந்துவிட்டதாகவும், இதுவுமன்னியில் ஒல்லாந்துக்காரரும் இங்கிலீஷ்காரர்பேரில் சண்டைக்கு வருவதாக தெரிவித்திருக்கிருர்களென்றும், பிராஞ்சு தேசத்தினின்று, சேதிவந்தது—

தேவனும்பட்டணத்திலிருந்து ஓடிவிட்ட எட்டு இங்கிலீஷ்காரரில், ஐந்துபேர் புதுச்சேரிக்கு வந்தார்கள். மூன்றுபேர் துலுக்கர் சீர்மைக்குப் போனுர்கள்—சீரங்கத்துக்குப் போன வெங்கடராமய்யர் விடுதலை கட்டளை வாங்கிக்கொண்டு சேர்ந்தமங்கலம் போவதாக எழுதினுர்—முத்தாலுநாய்க்கன் ஆற்காட்டிலிருந்து வருவதாக, வக்கீல் சுப்பய்யன் எழுதினபடியால், நூறு குதிரை சிப்பாய்களை, குண்டு மருந்துடன் புறப்பட தயாராயிருக்கும்படிக்கும், சேத்துப்பட்டு வரையில், சேதி கொண்டுவர, அஞ்சல் வைக்கும்படிக்கும், குவர்னர் கட்டளையிட்டார்—நபாபு அன்வர்த்திகான் இருபத்திஐந்து குதிரையும் ஐம்பது சேகவரையும் முத்தாலுநாய்க்கனுக்குக் கொடுத்தான். தான் இட்டுவந்தவர்களோடு சேர்த்துப் பார்த்தால், நூற்றி எண்பது குதிரைகளோடும், நாநூறு சேகவர்களோடும் முத்தாலுநாய்க்கன் ஆற்காட்டிலிருந்து வருகிருன் என்ற சேதியை வக்கீல் சுப்பய்யன் கடிதமூலம் அறிந்து, அஞ்சலாய் அனுப்பி வைத்த முப்பது சேகவரையும் திரும்பி அழைத்துவிடும்படி குவர்னர் உத்தரவிட்டார்.

---

## அத்தியாயம் LX

பிரபவ ஹு பங்குனிமீ 13உ (22-3-1748) முதல்—பிரபவ ஹு பங்குனி மீ 22உ (31-3-1748) வரை பக்கம்: 459—479.

சேர்ந்தமங்கலம் கோட்டை அதிகாரிக்கு இரண்டாயிரம் ரூபாய் கொடுக்காவிட்டால் காவலில் வைக்கப்பட்டிருக்கிற

மேன்வில் என்பவன் விடுதலை அடைய முடியாது என்று சேதி வந்தது—முத்தாலுநாய்க்கனை வழி மறித்துப் பிடிப்பதற்கு உத்தாரம் கேட்டு, வேட்டவலம் வெங்கடாசலப் பண்டாரம் ஒரு கடிதம் எழுதினன். குவர்னர் அவனுக்கு உத்தாரம் கொடுத்து மறுமொழி அனுப்பினர்—தேவனாம்பட்டணம் பெரிய துரை, மதிகிருஷ்ணபுரம் வரையில் வண்டியில் சாரிவருவதாகவும், அப்போது அவனைப் பிடித்துக்கொண்டுவர, சமேதார் அப்துல் ரஹிமான் உத்தரவு கேட்டான். அந்த உத்தரவையும் குவர்னர் கொடுத்தார்—மகாராஷ்டிரர் காமன் பண்டிகையை, புதுச்சேரியில் கொண்டாட இந்த வருஷம் உத்தாரம் கொடுத்ததார்? குவர்னரா, ஆசிரியராவென்று, சம்பாகோவில் சிரேவ்டர் பேரால், உபதேசி ஆசிரியரைக் கேட்டான்—ஔரங்பாத்திலிருந்து, இமாம்சாயபு கடிதம் வந்தது. அதில் கலிபுகான் மகனுக்கு, வீடு கட்டுவதற்கு, இரண்டரை காணி நிலம் விடும்படி எழுதியிருந்தது—சேர்ந்தமங்கலம் கோட்டையிலிருந்து, மேன்வில் என்பவனும், அவன் கூட்டாளிகளும் விடுதலையான சேதியை வெங்கடகிருஷ்ண அய்யங்கார் கொண்டுவந்தார். மேன்வில் கடிதங்களையும் கொண்டுவந்து கொடுத்தார்—முத்தாலுநாய்க்கன், மணலூர்பேட்டை, திருவண்ணாமலை, திருவெண்ணைநல்லூர் கடந்து, திருவதி மார்க்கமாய் தேவனாம்பட்டணம் போய்ச்சேர்ந்தான் — முத்தாலுநாய்க்கன் லக்ஷம் வராகன் சிலவு செய்தும், யாதோர் பலனும் அடையாமல் போனதால், அந்த தொகையை இங்கிலீஷ்காரர் கேழ்ப்பதால் விசனம் பிடித்து, பாதிரிக்குப்பத்திலிருக்கிறான்.

முத்தாலுநாய்க்கன், லக்ஷம் வராகனை வீணில் சிலவழித்ததாக முறையிட்டு, இந்த பணத்தைத் திருப்பிக் கொடுக்கும்படி எட்டு நாள் பரியந்தம் வற்புறுத்தியும், பயன் கிடைக்காமல் போனபடியால், நாசர்சங்கு அனுப்பிய வெகுமானத்தை இங்கிலீஷ்காரர் அழைப்பித்துக்கொண்டார்கள். அது நிமித்தம், கூடலூரிலும் தேவனாம்பட்டணத்திலும், பீரங்கிகள், ஒரு மணி நேரம் முழங்கின.

---

பிரத்தியேகமான

ஆனந்தரங்கப்பிள்ளை

# தினப்படி சேதிக் குறிப்பு

# சொஸ்தலிகிதம்

## நான்காம் புத்தகம்

1747 ஆ மார்ச்சு மீ 15 உ க்கு அக்ஷய ஞூ பங்குனி மீ 5 உ புதவாரம்.

இற்றைநாள் காலமே எட்டு மணிக்கு, துரையவர்கள் வீட்டுக்கு நான் போனவிடத்திலே அவ்விடத்திலே நடந்த அதிசயமென்னவென்றால்: மகா ரா ரா ஸ்ரீ குவர்னதோர் செனறால் முசியே துய்ப்ளேக்ஸ் அவர்களுடைய உத்தாரமாவது:

இந்தப் பட்டணத்திலே தமிழர் வர்த்தகர், வெள்ளைக்காரர் ஆரார் வீட்டிலே குதிரைகளிருக்கிறதோ அந்தக் குதிரைகளையெல்லாம் கொண்டுவந்து கும்பினீர் லாயத்திலே கட்டிவைக்கிறது. அந்தக் குதிரைகளுக்கெல்லாம் கொள்ளும், பில்லும், மசாலை கும்பினீயிலே போடுகிறது. குதிரைக்காரனுக்குச் சம்பளமுங் கும்பினீயிலே கொடுத்துவிடுகிறது. அந்தக் குதிரையுடன் ஒரு வேளை சவாரி மற்றதுக்குப் போகவேணுமானால் ஏறிக்கொண்டுபோய் வந்தவுடனே மறுபடியும் கும்பினீர் லாயத்திலேயே கொண்டுவந்து கட்டிவைக்கிறது. கும்பினீர் லாயத்திலே கட்டிவைத்த விடத்திலே ராசிகம் தெய்விகம் ஆனாலுமல்லவென்றும் வெளியே அங்கங்கே கொண்டுபோகிற

விடத்திலே சேதப்பட்டாலும் அந்தக் குதிரைக்குண்டான கிரயம் கும்பினீரிலேயே கொடுத்துவிடுகிறேம். அந்தப் படிக்குப் பட்டணத்திலேயுண்டான குதிரைகளெல்லாம் கொண்டுவந்து கும்பினீர் லாயத்திலே கட்டச்சொல்லி உத்தாரங் கட்டளையிட்டார்கள்.

இற்றைநாள் துரையவர்கள் சொன்னபடிக்குக் கூடலூர் சமாசாரம் அறிகிறதற்கு, துபாசி, சென்னபட்டணத்தானுவது அல்லது கூடலூர் தேவனும்பட்டணத்தானுவது ஒருத்தனை சம்பாதித்து அவனை தேவனும்பட்டணங் கூடலூரிலே இங்கிலீசுக்காரர் பெரிய மனுஷரண்டையிலே சேவகம் பிடித்து அவரவர்களண்டையிலேயிருந்தால் இங்கிலீசுக்காரருடைய மாலகூஸ்துமி துபாசிகள் கிட்டேயிருந்தாலும் தடையில்லாமல் பேசுவார்கள். அந்தப் பேச்சைக் கிரகித்து அந்த உத்தரக்ஷணமே அதற்கேற்ற மனுஷர் வெளியிலேயிருக்கவும், அவர்களுடனே சொல்லவும், சரூரில்லாத பேச்சானுல் இரண்டிலே மூணிலே சாவகாசம்போலே சொல்லி அனுப்புவிக்கச் சொல்லித் திட்டமாய்ச் சொல்லிவைத்து அப்படி சமாசாரம் வரவேணும். இந்தப்படிக்கு ஒரு துபாசி அகப்படத்தக்கதாகச் சம்பாதி. அவனுக்கு மீ ஐம்பது அறுபது ரூபாயாகிலும் சம்பளம் கொடுப்போமென்று சொல்லி, இது சீக்கிரமாய் முஸ்தீதுபண்ணிவை என்று சொன்னுரிதல்லாமல், ஒரு குசினிக்காரனுகிலும், பின்னை எவனுகிலும் ஒருத்தன் ஒரு அவரைக்காயத்தனை சீட்டு கொண்டுபோய் அவ்விடத்திலே யோடிப்போய் சேர்ந்திருக்கிற பிரான்சுக்காரர் சிறிது பேருண்டு, அவர்களிடத்திலே யரையாகிலும் ஒருத்தனைப் பார்த்து, அவன் கையிலே கொடுத்துவிட்டு வரத்தக்கதாக ஒருத்தனைச் சம்பாதிக்க வேண்டும். அவர்களுக்கு கிருஸ் எழுதினுல் வந்துவிடுவார்கள். ஆனபடியினுலே, இந்த இரண்டு காரியத்துக்கு யிரண்டுபேரை எப்படியாகிலும் சம்பாதிக்கவேணுமென்று சொன்னுர் நல்லது சம்பாதிக்கிறேன் என்று சொல்லிவிட்டு வந்தேன். அப்பால் வேங்கட்டா ரெட்டியுடனே பேசி, அவனைக்கொண்டு காரியங் கொள்ளவேணுமென்று அவனை அழைப்பித்து அவனுக்கு நட்பு இருக்கவேணுமென்று கும்பினீர் உத்தியோகம் வமிச பரம்பரையாய் நடக்கத்தக்கதாகப் பண்ணுவிக்கிறேனென்று அந்த துபாசி போகிறவனுக்கும் அந்தப்படிக்கே

வித்து முதாமியாவுக்கு உபசாரமாய்க் காகிதமெழுதுவித்து வெகுமானத்துக்குப் பிரதியெழுதுவித்து முஸ்தீதுபண்ணின பிற்பாடு பறங்கிப்பேட்டையிலேயிருந்து சமாசாரமெழுதுகிற தற்கு முசே நூத்தூனை அனுப்புவிக்கிறோமென்றும், சேக்கு அமேது பேருக்கு ஒரு காகிதம் சினேகமரியாதையாயெழுது வித்து அதிலே நம்முடைய மனுஷன் இத்தனை நாளும் வியாபாரமுமில்லாததினாலே அவ்விடத்திலேயிருக்கவில்லை. இனிமேல் வியாபார சாடை நடத்தவேண்டியிருக்கிறது. அத ஞலே எங்கள் பிரான்சு பத்திரியிலேயிருக்கத்தக்கதாக ஒரு வெள்ளைக்காரனை அனுப்புவித்தோம். அவன் வந்து சொல்லு கிற காரியங்கள் அனுகூலம் பண்ணிக்கொடுக்கத்தக்கதாக எழுதவேணுமென்று சொன்னார். அந்தப்படிக்கு எழுதி முஸ் தீதுபண்ணுவித்திருக்கிறதென்று சொன்னேன். நாளை ராத் திரி காரைக்காலிலேயிருந்து தாஷ்துமான் போகும்போது இவ னும் கூடப் போவான். அப்போது கொடு என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால், ஜமேதாரன் சேக்கு அசேன், அப்துலா இமாம் இரண்டு பேர் வந்தார்கள். அவர் களுக்கின்ன மிருநூறு சிப்பாய்களை வைத்துக்கொள்ளச் சொல் லியும், முப்பது சுவார்களை வைக்கச் சொல்லியும் உத்தாரங் கொடுத்தார். என்னுடனே சொன்னது: பாளையக்கார சேவகர் ஐந்நூறுபேர் மட்டுக்கும் வைக்கச்சொல்லியும், அதிலே இரு நூறு பேர் சுற்றிலுமிருக்கிற வழிகளிலேயும் குண்டுசாலையி லும் வைக்கச் சொல்லியும், அதிலே நூறுபேர் (100) கர்நாடக துப்பாக்கிக்காரரையும் ஆலம்புரவிக்கு மேல்புறமாய் பழம வேர்க்காட்டு காகிதம் இங்கிலீசுக்காரருக்குப் போகிறதை வழிகட்டிவாங்கிவரத்தக்கதாக வைக்கச் சொல்லியும் உத்தா ரங்கொடுத்தார்.

அந்தப்படிக்கு வீராநாய்க்கனுடனே சொல்லி இரு நூறு பேர் சேவகரை குண்டுசாலை சுற்றிலுமிருக்கிற வழியிலே வைக்கச் சொன்னேன். அவன் நாளைக்காலத்தாலே வைத்துப் போடுகிறேன் என்று சொன்னான். தேவனாம்பட்டணத்துக் கப் பல்கள் நாலு உருப்படி இந்தலூர் துறைமார்க்கமாக இரண்டு நாளைக்குள்ளே சென்னப்பட்டணத்துக்குப்போச்சுது. இற்றை நாள் நெல் களரி பட்டணத்திலே சொல்லிமுடியாது.

**1747 ஆ மார்ச்சு மீ 16 உ க்ஷய ளு பங்குனி மீ 6 உ குருவாரம்.**

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: மூன்றுலே இவ்விடத்திலேயிருந்து பிராஞ்சுக்காரர் படையெடுத்துத்தேவ னும்பட்டணத்துமேலே போகச்சே அவர்கள் பிறகே போன வீரப்பன் தம்பி கருப்பான் என்கிறவன் முன்னே வேவுபார்க் கப் போனவனைத் தேவனும்பட்டணத்தார் பிடித்துக்கொண்டு போய் வைத்துக்கொண்டிருந்து இத்தைவிட்டு அனுப்பிவிட்ட படியினாலே இன்றையதினம் சாயங்காலம் இவ்விடத்துக்கு வந்தான். அவன் சொன்ன சேதியென்னவென்றால்: தேவனும் பட்டணத்துக் கோட்டையைப் பிடித்துவிடத் தக்கதாக இவர்கள் வந்து உப்பல்வாடி கொத்தளமுதலான நாலு கொத் தளத்தையும் பிடித்துக்கொண்டு. மஞ்சகுப்பத்துத் தோட்டத் திலே வந்திறங்கினார்கள் என்கிற சேதி கேட்டமாத்திரத்திலே தானே தேவனும்பட்டணத்துக் கோட்டையிலே இருக்கப் பட்ட வெள்ளைக்காரர், சொல்தாதுகள், துரைத்தனக்காரர் எல்லாரும் கைசோர்ந்துபோய் திகைப்பூண்டு மெரித்தாபோலே திகைத்துப்போய் இத்தை யெடுத்து அத்தோடு போடுகிறதும், அத்தை யெடுத்து இத்தோடு போடுகிறதும், அவனவ னுக்கு வாயிலே கையிலே தண்ணியில்லாமல் தோஷகுணம் பிறந்தவர்களைப்போல உளறி அடித்துக்கொண்டு ஓடிப்போ கிற வழி யாக்குகிறபேரும், பெரிய மனுஷர் குமிசேல்காரன் இருக்கிறபேர்களெல்லாரும் சராங்கு பிடித்து, வத்தல்கள் நட நடைத்தோணிகளிப்படிப்பட்ட வுருவுகளிலே அவரவருடைய தட்டுமுட்டு, பெட்டிப் பேழைகள், புடவை சீலைகள், பெண்டு கள், பிள்ளைகள், அவரவருடைய ஆஸ்திபாஸ்தியுள்ளதெல் லாம் ஏற்றி ஆற்றிலே போய் பாலினுற்றிலே கொண்டுபோய் மேட்டுப்பாளையத்தண்டையிலே யிறக்கியும், மற்றப்படி கோட் டையிலேயிருக்கிற பேரெல்லாரும் அசந்துபோய் துரைமாத் திரம் தடுமாறிக்கொண்டு அங்குமிங்குமாய் ஓடிக்கொண்டு திரிகிறதுமாக எல்லாம் எப்பவந்து விழுவார்களோ எப்ப ஓடிப்போவோமோ என்று படகு அமத்துவிக்கிறதுங் கூட கைகால் ஆடாமல் தடுமாறிப்போயிருந்தார்களென் றும், அந்தச்சமயத்திலே பிராஞ்சுக்காரர் வந்தவர்கள், மஞ்சகுப்பத்துத் தோட்டத்திலே இறங்கிப் பாராமல் செம்மை

யாய்க் கோட்டையை நோக்கி நடந்தார்களேயானால் அந்தட் சணமே கோட்டையிலே இருக்கப்பட்ட பேரெல்லாரும் ஒருத்த னுடனே ஒருத்தன் சொல்லாமல் ஓடிப்போவார்களென்றும், அப்படி யிருக்கிற சமயத்திலே ஆசஷீமீமகாய் அவர்களுடைய அதிர்ஷ்டமென்னப்பட்டதே கப்பல் ரூபமாய் வந்த அவசரம் போலே இருந்தது. அந்த ஒன்பது கப்பல் கண்டதென்றும், அந்தக் கப்பல்களைக் கண்டதும் பிற்பாடு அந்தக் கப்பல் இங்கி லீசுக்காரர் கொடி யென்றும், பிராஞ்சுக் கொடி யென்றும் அறிகிற மட்டுக்கும் பிராணனைக் கையிலே பிடித்துக்கொண் டிருந்து கப்பல் தங்களுடையதென்று அறிந்த பிற்பாடு அவர் களுக்கு நாக்கிலே தண்ணீர் வந்ததென்றும் இப்படியாகச் சொன்னான். ஆனால், அவர்கள் நாக்கினைஞ் சிறிது காலம் அந்தக் கோட்டை அவர் வசமாயிருக்கிறதற்குப் பிராப்தி இருக் கிறபடியினாலே அந்த வேளைக்குத் தக்கதாய்ச் சமயத்திலே கப்பல் வந்ததும் நம்முடையவர்கள் போனவர்கள் முடியப் போய் ஏறிப் போகாமல் சூரிய உதயமாகி எட்டு மணி பத்து மணிமட்டுக்கும் தோட்டத்திலே தாமதமாயிருந்ததும் வேளைக்கு தக்கதாய் நடந்துபோச்சுது.

ஆனபடியினாலே தெய்வ எத்தனமே பிரதானமல்லாமல் மனுஷரெத்தனத்திலே ஒன்றும் நடக்கமாட்டாது என்கிற தற்குத் திருஷ்டாந்திரமாய் நடந்தது.

இற்றைநாள் சாயங்காலம் ஆற்காட்டிலேயிருந்து உசேன் சாயபு மருமகன் மகுதல்லி சாயபு [illegible] சாயபு பெண்சாதியை அழைத்துப்போகத்தக்கதாக நாலு குதிரையு டனே இவ்விடத்துக்கு வந்தான். அவன் சொன்னதென்ன வென்றால், ஆற்காட்டிலே நவாபு அவர்களும், உசேன் சாயபு, சம்பத்திராயன், அனைவர்களும் எல்லாரும் வெகுமானத்தைச் சந்தோஷமாய் வாங்கிக்கொண்டார்கள் என்றும் அவர்களுக் கிருக்கிற சந்தோஷம் ஒரு விதத்துக்குள்ளே சொல்லப்போகா தென்றும், அதெதினாலே யென்றால் நீங்கள் அனுப்பிவைத்த வெகுமானத்தைத் தொட்டல்ல; தங்களுக்கும் உங்களுக்கும் ராசியாய்ப்போனதே அதுவே சகலமான பேருக்கும் சந்தோஷ மல்லாமல் வேறேயில்லை யென்றும், உங்களவர்களும் பிறகாலே ஐந்தாறு நாளைக்குள்ளே பயணம் புறப்பட்டுவருகிற யோசனை

யாயிருக்கிறார்கள். அவர்களும் நாலைந்து நாளையிலே வந்துசேருவார்களென்றுஞ் சொன்னான். இதல்லாமல் அவன் பின்னையும் சொன்ன சேதி என்னவென்றால்:

நிசாம் தண்டு வந்து கிருஷ்ணை ஆற்றுக்கு அக்கரையிலே இறங்கினானென்றும், சீர்ப்பைக்கி வரவும் மைசூர் சீர்மையின் மேலேவெகுபணம் வரவேண்டியதிருக்குதென்றும், அதுநிமித்தியமாயம் மைசூரின்பேரிலே போகிறானென்று யிப்படியாகச் சேதிவந்ததென்றுஞ் சொன்னான்.

இற்றைநாள் சென்னப்பட்டணத்திலேயிருந்து கோபால கிருஷ்ணய்யன் முதலெழுதின கடுதாசி வந்ததிலே எழுதி வந்த சமாசாரம் என்னவென்றால்: சென்னப்பட்டணத்திலேயிருந்த கெப்புய்த்தேன் என்கிற கப்பல் ஒன்று. இங்கிலீசுக்காரர் கப்பல் சீர்மையிலேயிருந்து வந்து சென்னப்பட்டணத்திலே பிடித்துக்கொண்டிருந்த கப்பலொன்று, இந்த விரண்டு கப்பலும் புதுச்சேரிக்குப் பயணம் பண்ணி அனுப்புவித்த சமாசாரம் நாலைந்து நாளைக்கு முன்னே தானே எழுதி அனுப்புவித்திருந்தோமே இப்பவும் இந்த இரண்டு கப்பலும் கோவளத்தண்டையிலே போய் காற்றில்லாமல் கிடக்கச்சே, கட்டுமரம் அனுப்பினார்கள். ஆனபடியினாலே சென்னப்பட்டணந்துறை வந்து சேர்ந்தது. அது என்னத்தினாலே மறுபடியும் துறைவந்து சேர்ந்தது என்று விசாரிக்கு மிடத்தில் இவ்விடத்தில் சொல்லுகிறது, காற்றில்லாதபடியினாலே பின்னையும் நாலு நாள் செல்லும். ஆனபடியினாலே இனிபோகாதபடியினாலே திரும்பி வந்து சேர்ந்தது என்று சொல்லுகிறார்கள். சிறிதுபேர் அந்தரங்கமாய்ச் சொல்லிக்கொள்ளுகிறதென்னவென்றால்: இங்கிலீசுக்காரருக்கு ஏழு கப்பல் தலங்கம்பாடி அண்டையிலே வந்திருக்கிற சமாசாரம் கேட்டபடியினாலே கட்டுமரக்காரனுக்கு நூறு ரூபாய் கொடுத்துக் கட்டுமரமனுப்பித் திரும்பித் திருப்பினார்கள் என்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இன்றைய தினம் ராத்திரி இங்கிலீசுக் கப்பலிலே இருந்த மரினேர்கள் பனிரெண்டுபேர்கள் ஒரு வத்தலிலே யிறங்கி ஓடிப்போனார்கள். அது தாங்களறியவும். பட்டணத்திலே யிருக்கிற வர்த்தகர் சிறிதுபேர் அவரவர் சரக்குச் சப்பட்டையெல்லாம் சிறிது கோட்டையிலே போடுகிறார்கள். சிறிதுபேர் துரையவர்களு

டனே பேசிக்கொண்டு சரக்குகளுக்கு உத்தரவு வாங்கிக் கொண்டு முத்துக்கொட்டை எள் முதலான சரக்கு அப்புறம் தாண்டுவித்துக்கொள்ளுகிருர்கள். இப்போது இரண்டு மூன்று நாளாய் விஸ்தாரமாய் துவக்கித் தாண்டிப்போகிறது. தருவாடி அவர்களுடையது இவ்விடத்திலே சாலுவை ஒரு கட்டு இரண்டு கட்டு கட்டிலேயிருந்ததாம். அதை ராமச் சந்திரர் முகாந்திரமாய்ப் பேசி உத்தாரம் வாங்கி எடுத்துப் போய்விட்டார்கள். அதற்கு என்ன கொடுத்தார்களோ வெளியாகவில்லே. அது ஈன்ருய்த் தெரிந்துகொண்டு பிறகாலே எழுதியனுப்புவிக்கிறேன். இத்தனே காலும் [illegible] இப்படிப்பட்ட காரியங்களிலே பிரவேசிக்காமல் சாடையாயிருந்தார். இப்போது இவர் முகாந்திரமாய்ச் சிறிதும் துபாசி நல்லதம்பி முகாந்திரஞ் சிறிதும் மதாமவர்கள் மனுஷர் வேங்கிட்டநாராயணய்யர், பாப்பய்யப்பிள்ளே முகாந்திரஞ் சிறிதுமிப்படியாகச் சரக்கு அப்புறப்படுத்தியதைத் தாங்கறியவும். இதல்லாமல் சென்னப்பட்டணத்திலிருந்து கோபாலகிருஷ்ணய்யன் 2வ எழுதின காகிதம் இவ்விடத்துக்கு வந்துசேர்ந்தது. அந்தச் சேதி காகிதத்திலே இருந்த வயணமென்னவென்ருல் இன்றையதினம் சூரிய உதயத்துக்கு நேற்று ஓடிப்போன மரினேர் நிமித்தியம் பத்துபேர் சேவகரைப் பழவேர்க்காட்டுக்கு அனுப்பி அவ்விடத்து கப்பித்தானுக்கும் கடுதாசி யெழுதியனுப்பினுர்கள். இதல்லாமல் திரும்பிவந்த சீர்மைக்கப்பலும் இங்கிலீசு கப்பலுமிரண்டு கப்பலும் இன்று ராத்திரிக்கே பயணம் பண்ணி அனுப்பப்போகிருர்களென்று சொல்லுகிருர்கள். இங்கிலீசுக்கப்பலிலே இருந்த வெள்ளிப்பெட்டி நாற்பது மாத்திரம் இவ்விடத்திலே இறக்கிக்கொண்டார்கள். மற்றச் சரக்குகளெல்லாம் அந்தப் பிரகாரமே அனுப்புவிக்கிருர்கள். இதறியவும்.

இற்றைநாள் காரைக்காலிலேயிருந்து கூடலூர் சண்டை நிமித்தியம் வந்திருந்த தாசுமான் வெள்ளேக்காரர் சட்டைக்காரர் நூறும், தமிழர் சேவகர் இருபதுபேரும், மறுபடியும் இற்றைநாள் ஒன்பதுமணி ராத்திரிக்குப் பயணம்பண்ணிச் செம்மடுத்தேனே எசமானுக்கு இவர்களேச் சொன்னுவூர் நடுவிற்போட்டு வேங்கிட்டம்மாள்பேட்டை, புவனகிரி மார்க்கமாய்ப் போகச்சொல்லியும் இவர்களுக்கு வழிகாட்டத்தக்கதாக

மூன்று பேர் கும்பினீர் சேவகரையும் கூட்டி இவர்களுக்குச் செலவுக்குப் போட்டுப் போகத்தக்கதாகப் பரசுராமப்பிள்ளை கணக்கப்பிள்ளை மனுவுஞெருத்தனைக் கூடக் கூட்டி அனுப்புவித்தேன். அவர்களுமிற்றைநாள் ராத்திரி பயணமாகிப்போனார்கள். இவர்கள் போகச்சே, இவர்களுக்கெதிரே இங்கிலீசுக்காரர் வந்து எதிர்ப்பட்டாலும் கிழிக்கத்தக்கதாக முன்னூறு சிப்பாய்களை மட்டும் கூடக்கூட்டி நடுவிற் போட்டுமட்டுக்கும் பேரயப்பால் தஸ்துமான் போனபிற்பாடு வரச்சொல்லி அனுப்பினார்கள். நேற்றைய தினம் முஸ்தீது பண்ணின சிதம்பரம் முதாமியாவுக்கு ஆ எடுத்துவைத்த வெகுமானமும் காகிதமும் செம்மடுத்தேன் வசம் கொடுத்து அனுப்புவித்தோம்.

முசியே நூத்துரு பறங்கிப்பேட்டையிலே போயிருந்து சமாசாரம் எழுதியனுப்பச் சொல்லி, சேக் ஆமேது பறங்கிப்பேட்டை ஆமில் பேருக்கு எழுதின காகிதமும் கொடுத்து இற்றைநாள் சாயங்காலம் அனுப்பினார்கள். அவனும் பயணம் சாகிப்போனான்.

1747 ஆ. மார்ச்சு மூ 17 உ க்ஷய ஸு பங்குனி மூ 7 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் துரையவர்கள் இரண்டாயிரம் மூவாயிரம் முள்ளுக்கட்டு அழைப்பித்து, குண்டுசாலை அடைப்பிக்கச் சொல்லியும் கூலிக்காரருக்குக் கிராமத்துக்குக் கிராமஞ் சொல்லியனுப்புவித்து அழைப்பிக்கச் சொல்லியுஞ் சிவனுகி ரெட்டியாருக்குஞ் சொல்லியனுப்பிவைத்து அகப்பட்ட கூலிக்காரரை அழைப்பித்து, கூலி ஆள் தாழ்த்தியில்லாமல் நடப்பிக்கச் சொல்லியும் இதற்கு வேலைபார்க்கிறதற்கு இஞ்சினீராயிருக்கிற முசே சற்போவை (M Gerbault) அழைத்து, உனக்கு என்னவேணுமோ அதெல்லாம் ரங்கப்பிள்ளையிடம் சொல்லிக்கொள். அவன் சரஞ்சாயிபண்ணிக்கொடுப்பானென்றும் அடிக்கடி எனக்குச் சொல்லக் கவலையில்லையென்று மிப்படியாக முகமுகமாய்ச் சொன்னார். அவனும், நல்லதென்று சொன்னான். அப்பால் பெரிய... நயினாரையும், பத்து பேர் சேவகரையும், சிறிதுபேரும் மூசேசற்போ (M. Gerbault) வசம்பண்ணி இந்தக் குண்டுசாலை

அடைக்கிறவேலை, முள்கட்டுவேலை இதுகள் என்ன உண்டோ அதுகளையெல்லாம் கூலிக்காரரை அழைப்பிக்கிறவேலை யெல்லாமிவனுடனே சொன்னுலிவன் சரஞ்சாமிபண்ணிக் கொடுப்பானென்றும், இவன் வாங்காமல் உம்மண்டையிருப்பா னென்றும் முகாவரி பண்ணிப்போட்டு ஒழுகரை குண்டு கிராமத்திலே குண்டுகிராமம் அரியாங்குப்ப மிந்தக் கிராமத் திலே எல்லாத்திலேயுமிருக்கிற கூலிக்காரர் வரத்தக்கதாக அந்தந்தக் கிராமத்தாரை பெரியண்ண நயினருக்கு முகாவரி பண்ணுவித்துத் தீர்த்துப்போட்டு அப்பால் சயந்திராமய்யன் மனுஷன் வல்லூர் அனுமந்தய்யன் என்கிறவன் இங்கிலீசுக் கப்பல்களைக் கண்டாற்போலே பயந்து, இநக்கிற நெல்லை யெல் லாம் ஐம்பது கரிசையையும், அறுபது கரிசையையும் நூறு நூற்றியைம்பதுவிக்கங்காட்டியும் ஊரெல்லாங்கா புருப்பட்டு நெல் விலை அபரியானதுமல்லாமல் நாட்டுப்புறத்திலே கூட பிரியமாகத் தக்கதாக ஏஷ்யம் உண்டானதினுலே இந்தச்சேதி யைத் துரையவர்களுடனே சொல்லிக்கொண்டார். அவர்களுக், குக் கவையில்லை. அப்பால் துரையவர்கள் என்னை அழைத்து கூடலூர் சேதி கேட்டதும் அதற்கு நான் சொன்னதும் சூட் சுமமாக எழுதினேன். அந்தப் பக்கத்திலே பார்க்கிற பேர் பார்த்துக்கொள்ளவும்.

இற்றைநாள் சுக்கிரவாரம் ரோகிணி நட்சத்திரம் விரதி சந்திரன் இப்படிப்பட்ட சுப தினத்தில் மகா-ள-ள-ஸ்ரீ குவர்ன தோர் மகாராசா அவர்கள் பேருக்கு முன்னிருந்த மோகர் பஷக்குக்கு வேறேவொரு மோகர்பஷவுக்கு வெட்டி வைத்து அதிலே பின்னையுஞ் சிறிது அவருடைய பிரதாபத்தை வைத்து, புதிதாய் மோகர்பஷக் தட்டான் ரமோசி என்கிறவன் வெட்டிக் கொண்டுவந்து கொடுத்தான். அங்கே மோகர் நல்ல வேளை யிலே நல்ல முகூர்த்தத்திலேயும் அவன் கொண்டுவந்து கொடுத்தபடியினுலேயும் வரவர மேன்மேலே அதிசய மாய்த்தானே நடக்கும். ஆகவே, இன்றையதினம் உத்தம தினமானபடியினுலே முன்னே முன்னே மமுதல்விகான் சாயபு அவர்கள் பேருக்கு எழுதின கடுதாசிக்கும் இமாம் சாயபு குமாரன் பேருக்கு எழுதின கடுதாசிக்கும் இந்தப் புது மோகரினுலே மோகர்பண்ணி அனுப்புவித்தோம். ஆனுலிந்த மோகரிலே எழுதியிருக்கிற பிரதாபம் பார்சியிலே

எழுதியிருக்கிறபடிக்கு வயணம் பார்சுவார்த்தைப்படிக்கு இதற்குத் தமிழிலே எழுதின வயணம்: மகம்மதுஷா பார்சா காசி அவர்களுடைய ஆதீனத்துக்குப் பொருந்தப் பண்ணப்பட்டது. இதுவுமல்லாமல் இந்துஸ்தான் ராச்சியத்திலேயும் உத்தாரம் நடப்பிக்கப்பட்ட ஆஸ்தானத்தையுடைய புதுச்சேரியிலிருக்கப்பட்ட முசியே துப்ளேய்க்ஸ் என்கிறவர் சண்டையிலே செயிக்கப்பட்ட பராக்கிரமசாலியென்கிற கீர்த்திபடைத்தவர் என்று முத்திரையின்பேரிலே பார்சிலே செதுக்குவித்து இற்றைநாள் முதல் போனார். மமுதல்லிகானுக்கு எழுதின காகிதத்துக்கும் இமாம் சாயபு மகன் அசனல்லிகானுக்கு மெழுதின காகிதத்துக்கும் முத்திரை போடப்பட்டது.

இப்போர்ப்பட்டது அந்தப் பக்கத்திலே எழுத்துப்படிக்கிற மூத்து முத்திரை அலுக்கூஞ்ஞாவிலே முன்னிருந்த பழைய முத்திரையிலே எழுதப்பட்டிருந்தபடிக்கெல்லாம் எழுதி இதிலே அதனமாயெழுதினது. இதற்கு முசபற்சங்கு பஆதர் என்று இதுமாத்திரம் அதனமாயெழுதினது. இதற்கு அர்த்தம் சண்டையிலே செயிக்கப்பட்ட பராக்கிரமசாலியென்று சொல்லப்பட்டது.

இதுவுமல்லாமலிற்றைநாள் எட்டு ஒட்டகத்தின்பேரிலே குண்டுமருந்தும் ஏற்றிச் சிறிதுபேர் வெள்ளைக்காரரும் சிறிதுபேர் சிப்பாய்களும் கூடக் கூட்டிச் சென்னப்பட்டணத்துக்கனுப்பினார்கள். இது, அங்கேயிருக்கிற வெள்ளியையெடுத்து வரப் போவதாய்ச் சேதி சொன்னார்கள்.

1747 ஆ மார்ச்சு மீ 18 உ க்ஷய அக்ஷய ஞு பங்குனி மீ 8உ சனிவாரம்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: முன்னாலே இவ்விடத்திலே யிருந்த நவாபு அன்வர்திகானுக்கு வெகுமானங் கொண்டுபோன முசியே தெலார்சு, முசியே தையார், முசியே கேர்சாம், பாதிரி லபே ஒருத்தன் இவர்கள் நாலுபேரும் இற்றைநாள் சூரிய உதயத்துக்கு நம்முடைய தோட்டத்துக்கு வந்து சேர்ந்து அவ்விடத்திலேயிருந்த நவாபு அனுப்புவித்த சிரோப்பாவும் குதிரையும் கொண்டுவந்து குதிரையை மாத்திரம் நம்முடைய தோட்டத்திலே வைத்துவிட்டு அந்தச் சிரோப்பாவை

மாத்திரம் எடுத்துக்கொண்டு ஏழு மணிக்கு இவ்விடத்துக்கு ஸ்ரீ துரையவர்கள் நித்திரை பண்ணினபடியினாலே சிரோப்பாவை நம்முடைய கையிலே கொடுத்துவிட்டு அவர்கள் வீட்டுக்குப் போய்விட்டார்கள். அதன்பேரிலே ஸ்ரீ துரையவர்கள் எழுந்திருந்தவுடனே இந்தச் சமாசாரம் எல்லாம் போய்ச் சொன்னேன். அப்படி இருக்கும் போது முசியே கேர்சாம் என்னை அழைத்துச் சொன்ன வயணமென்னவென்றால்: நாங்கள் ஆற்காட்டுக்குப் போகிறபோது பெருமுக்கல் வழியாய்ப் போகையிலே அவ்விடத்திலே முத்துமல்லாரெட்டி என்கிறவன் முசியே தெலார்சுக்கு விருந்துபண்ணுவித்து வெகுமானமும் விசேஷித்துக் கொடுத்து உம்முடைய பேரிலே அவன் சொன்ன பிராது என்னவென்றால்: நீர் ஏதோ ஆலத்தூர் பாளையக்காரனுக்கு ஆசருபண்ணி அவனுக் கிடங்கொடுத்து வைத்துக்கொண்டிருக்கிறதாகவும் தங்கள் மனுஷர் கையிலே துரையவர்களுக்கும் கடுதாசி எழுதிக் கொடுத்து, கோன்சேலுக்கும் கடுதாசி எழுதிக் கொடுத்து அனுப்பினால் அது அவர்களுக்குச் சேராதபடிக்குப் பண்ணுவித்துவந்த மனுஷனைக் காவலிலே வைத்து இப்படியெல்லாம் பண்ணியிருக்கிறார்களென்று அவன் சொன்னதுமாய் அதற்கு முசியே தெலார்சு இருந்துகொண்டு, நான் போய் துரையவர்களுடனே சொல்லி அப்படிப்பண்ணுகிறேன் இப்படிப்பண்ணுகிறேன் என்று ஆற்காட்டுக்குப் போனோமென்று அவ்விடத்திலே நடந்த சமாசாரமும் பேசிக்கொண்டிருக்கும்போது துரையவர்கள் கிட்டே வந்து என்னவென்று கேட்டார்கள். அதன்பேரிலே முசியே கேர்சா மிருந்துகொண்டு பெருமுக்கலிலே முசியே தெலார்சுக்கு முத்துமல்லாரெட்டி நடப்பித்த வெகுமானமும் அவன் சொன்ன வார்த்தைகளும் அதற்கு முசியே தெலார்சு சொன்ன உத்தாரமும் அந்த வயணமெல்லாம் மேலே எழுதியிருக்கிறபடியினாலே வயணமாய்ச் சொன்னார். அதன்பேரிலே நான் சொன்னதென்னவென்றால்: முன்னாலே மகம்மதாக்கல் இவ்விடத்திலே யிருக்கையிலேதானே தனக்குக் கத்தி கொடுப்பிக்கச்சொல்லியும், ஆற்காட்டுக்குப்போனால் சிகந்தர்கானென்று பேர் கொடுக்கவேணும் மூன்னூறு இருநூறு குதிரைக்கு மன்சூப் கொடுக்கச்சொல்லியும் நபாபு முதலானவர்கள் வெகுமானம் தனித்தனியே வாங்கிக்கொடுக்கச் சொல்லியும் இப்படியெல்

லாஞ் சொல்லுகிறேன் என்றும் மசும்மதாக்கல் என்னுடனே சொன்னதுண்டு. அதற்கு நான் அவரவர் லாயக்குக்குத் தக்கதாக வெகுமானம் வாங்கிக்கொடுத்தால் மகா-ா-ா-ஸ்ரீ குவர்னதோர் அவர்கள் மனதுக்கு விகற்பமில்லாமலிருக்கும். லாய்க்குக்குத் தப்பாகச் செய்தால் விகற்பம் தோணும் என்று சொன்னதற்கு அப்படி செய்கிறதில்லை. இவனுக்கு இந்நேரமே யாதொரு சந்தோஷமாய்ச் சொல்லுகிறேன் என்று சொல்லப்போனவன் அங்கே சரிப்போன படிக்கு நடப்பித்தான். உமக்கு வாங்கிவந்த சிரொப்பாவும் பாரும், குதிரையும் பாரும், அவனுக்கு வாங்கி வந்ததையும் பாரும் என்று சொல்லி இந்தப் பெருமூக்கலிலேயுந்தானே அல்லாமல் வேறேயில்லையென்று பார்க்கிறபேருக்குத் தோற்றிப் பின்னையும் எதாகிலுஞ் சுற்றும்பொருட்டாய்ப் பொடாய்ப் பேசினான் என்று சொன்னேன். அதற்குத் துரையவர்கள் முசியே வேர்சாம் கூட இருக்கச் சொன்னதுண்டானால் ஆராகிலும் அவனுடனே சொன்னதுண்டானால் அது என்னுடைய வேலையில்லையென்று சொல்லிவிட்டுப் போகவேணுமே யல்லாமல் இவனதற்கு உத்தரவு சொல்லக் காரியமென்னவிருக்கிறது நல்லது இது காரியமாய் அவன் வந்து நம்முடனே அந்த வார்த்தையெடுக்கட்டும், அப்பால் அவன் படுகிறபாடு உங்களுக்குத் தெரியவருகுதென்று சொல்லிக் கோபம் பண்ணினார்கள்.

அதன் பிற்பாடு சாயங்காலம் நாலு மணிக்கு அந்த வெகுமானத்தை வாங்கிக்கொண்டு வரத்தக்கதாக இவ்விடத்திலேயிருந்து மூன்று பேர் வெள்ளைக்காரர் முசியே பெடுந்தலமி, முசியே நுக்சேனும், நாமும், பாளையக்காரனும் மேளவாத்தியத்துடனே எதிர்கொண்டுபோய் நம்முடைய தோட்டத்திலே வைத்திருந்த வெகுமானம் சிரொப்பாவையும் குதிரையையும் வாங்கி, சிரொப்பாவை பல்லக்கின்பேரிலே வைத்து இதுவுமல்லாமல் மதாம் பேருக்கு வந்த வெகுமானத்தையுங்கூட பல்லக்கின்பேரிலே வைத்து வெகுமானம் வந்த கபுறு கருப்பு பெரிய குதிரையை பல்லக்கின் முன்னே விட்டு அழைத்துக்கொண்டு வந்தார்கள். வரும்போது கெவுனிவாசலிலே பதினொரு பீரங்கிப் போட்டார்கள். அப்பால் வந்து ஸ்ரீ துரையவர்கள் கையிலே சிரொப்பாவைக் கொடுக்கும்போது கோட்டையிலே பதி

ணைந்து பீரங்கிப்போட்டார்கள். அதன் பேரிலேவந்த வெகுமானத்தைப் பார்க்கப்போனுல் குதிரையானுல் கருப்புக்குதிரை கிழம் இடுப்பு ஒடிந்தது. அதல்லாமல் சிரொப்பாவும் ஒருகாசு பெருதது எல்லாம் பழசு. அதுவுமல்லால் மதாமுக்கு அனுப்பினதும் பழசுதான். ஆனபடியினுல், அதை யெல்லாம் பார்த்து ரங்கப்பிள்ளைக்கு வெகுமானம் வந்ததாவென்று கேட்டார்கள். வந்திருக்குதென்று தெலார்சு சொன்னுன். அதுவே யல்லாமல் துரையவர்கள் கையிலே கொடுக்கவுமில்லை. நம்முடைய கையிலேயுங் கொடுத்தவனல்ல. அந்தமட்டிலே சிரொப்பாவையும் கிழக்குதிரையையும் பார்த்தவுடனே நீ வாங்கிவந்த வெகுமானத்தைத்தானே எடுத்துக்கொள்ளென்று சொல்லி முசியே தெலார்சை பார்த்துக் கோபித்துக்கொண்டு, நீ எப்படி வாங்கி வந்தாயென்று அவனைத்தானே யெடுத்துக்கொள்ளச் சொன்னுர்கள். அந்த மட்டிலே அவரவர் கலைந்துபோய்விட்டார்கள்.

நமக்கு வந்த வெகுமானத்தை நம்மண்டைக்கு அனுப்புவித்ததில்லை. துரைக்கு வந்த வெகுமானம், வெகுமானத்துடனேகூட அது ஏன் வரவில்லையென்றுல் பிறகே வருமென்று சொன்னுன். தேவனும்பட்டணம் சமாசாரம் நடந்தபடியினுலே தங்களை யென்ன செய்வார்களோவென்று வெள்ளைக்காரர் முசியே தெலார்சு முதலானவர்கள் தான் பிழைத்தது. கந்தைப் பிழைத்தது என்று பெண்டுகள் சொல்லுகிற சாமைத்தின்படிக்கு ஓடிவந்தபடியினுலே நவாபு காகிதம் சம்பத்ராயன் காகிதம் வாங்கிவர நேரமில்லை.

1747 ஆ மார்ச்சு மீ 19 உக்கு அக்ஷய ஷு பங்குனி மீ 9உ ஆதிவாரம்.

இற்றைநாள் துரையவர்கள் முசியே துய்ப்ளேக்ஸ் அவர்களுடைய பண்டிகைதினமானபடியினுலே காலமே நாலு மணி துவக்கி வரிசை வைத்துத் துப்பாக்கியும் பீரங்கியுஞ் சுட்டார்கள். இதல்லாமல் நேற்றையதினம் ஆற்காட்டிலே யிருந்து வந்த தெலார்சு இன்றைக்குச் சொன்னதென்னவென்றுல்: ஸ்ரீ துரையவர்களுடனே சொன்னது: நான் உசேன் சாயபைக் கண்டுபேசி எங்களுக்குக் கொடுக்கிறேமென்று சொன்னதில்

கிருமாம்பாக்கம், பூத்துறை, ஒதியம்பட்டு இந்த நாலு கிராமத்துக்கும் செலவு வாங்கிக்கொடுக்கவேணுமென்று சொல்லிக் கேட்டதாகவும், அதற்கு உசேன் சாயபு சொன்னது: உங்களுக்கு மெங்களுக்கும் தகராறு நடக்கிறபோது இனிமேல் தேவனும்பட்டணத்துமேல் சண்டைக்குப்போகிறதில்லையென்று வார்த்தைப்பாடு கொடுத்தபிற்பாடு, எங்களவர்கள் வந்துவிட்டபிற்பாடு நீங்கள் படையெடுத்துப் போகக் காரியமென்ன? இப்பவும் அந்தப் படையை நீர் சொல்லி அழைத்துக்கொண்டதுண்டானால் அந்தப்படிக்கு நாலு கிராமமும் உங்களுக்கு வாங்கிக்கொடுக்கிறேமென்று சொன்னார் என்றும் மகம்மதாக்கல் சொன்னது. இனிமேல் தேவனும்பட்டணத்து மேலே போகிறதில்லையென்றுபேசியிருக்கிறோமென்றும் ரங்கப்பிள்ளை சொன்னாரென்றும் மகம்மதாக்கல் சொன்னதாகவுமிப்படியாக முசியே தெலார்சு சொன்னான். அதற்குத் துரையவர்களிருந்துகொண்டு ரங்கப்பன் ஒருக்காலுமப்படி சொல்லுகிறதில்லை. அல்லவென்று சொல்லியிருந்தால் அந்தக்ஷணம் நம்முடனே யெச்சரியாமலிருக்கிறதில்லையென்று சொல்லிவிட்டு என்னை அழைத்து, இதேது இந்த விசேஷம் நடந்தது. அதென்னவென்று கேட்டார்கள். நான் தீர்ந்ததில்லை. முன்னாலே மகம்மதாக்கல் இவ்விடத்திலேயிருக்கச்சே உசேன் சாயபு அவர்கள் மகம்மதாக்கலுக்கு எழுதியனுப்பிவைத்த வயணமென்னவென்றால்: இனிமேல் தேவனும்பட்டணத்து மேலே இவர்கள் போகாதபடிக்குப் பேசிக்கொண்டு வரச் சொல்லி எழுதிவந்ததென்று சொன்னான். அதற்கு நான் சொன்னது: அந்தப் பேச்சே பேசப்போகாது. இந்தப் பேச்சுப் பேசினால் துரையவர்கள் சம்மதியார்கள். அவர்களாச்சுது இவர்களாச்சுது, எப்படியாகிலும் போகிறார்கள் நீங்கள் வந்தக்காரியம் பார்த்துக்கொண்டு போங்களென்று சொன்னதற்கு ஆனால் நாங்கள் போய்விட்டபிற்பாடு வேணுமானால் உங்களுக்குச் சம்மதியானப்போலே நடப்பித்துக்கொள்ளுங்கோள் நாங்களிருக்கிறமட்டுக்கும் போகவேண்டாம் என்று சொன்னதற்கு, மதனந்தப்பண்டிதரும் மகம்மதாக்கலுடைய மனுஷன் அபிருமகம்மதும் கூடவிருந்தார்கள். அந்த விசேஷமப்போதுதானே உங்களுடன் வந்துசொன்னேன் மெய்தானென்று சொன்னார்கள் இதல்லாமல் கபாபு மாபோசுகானும் மமுதல்லிகானுமிரண்டு பேரும் கோண்டூர் தோப்பிலே இருக்கையிலே முசியே தெலார்சு

போனபோது இங்கிலீசுக்காரர் வந்திருக்கையிலே அவர்க ளிரண்டுபேரும் இருந்துகொண்டு இனிமேல் இங்கிலீசுக்காரர் பேரிலே தேவனும்பட்டணத்துக்குப் படையெடுத்துப்போகாத படிக்குப் பரவசங்கொடுக்கவேணுமென்றும் கேட்டதற்கு அது எங்களுடைய வுத்தாரமல்ல சீர்மையிலிருந்தெப்படி உத் தரவு வந்திருக்கிறதோ அப்படி நடத்துவார்களேயல்லாமல் அதற்கு மாத்திரம் நாமாய்ச்சொல்லப்போகாதென்று சொன்ன சமாசாரம் அப்போதுதானே இவர் வந்து உங்களுடனே சொல்லவில்லையாவென்று நான் சொன்னதின்பேரிலே, மெய் தானென்று திலார்சை பார்த்து, நீதானே அப்போது வந்து நடந்த சமாசாரத்திற்கு நீ சொன்ன உத்தரவையும் அப்போது வந்து நீ என்னுடனே சொல்லவில்லையாவென்று கேட்டார்கள். மெய்தான், இங்கிலீசுக்காரர்கள் தண்டிலே வந்திருந்தபோது நானும் போயிருக்கையிலே பிரஸ்தாபம் நடந்தது மெய்தான் அதற்கு நான் சொன்ன உத்தாரமும் அப் போதேதானே உங்களுடனே வந்து சொன்னேன். அதன்பிற் பாடு என்ன நடந்ததோ நானறியேன் என்று சொன்னான் அதெல்லாம் நானறிவேன். ரங்கப்பனப்படி ஒருக்காலும் சொல்லுகிறதில்லை. ஆனால் மகம்மதாக்கல் தன்னைத் தப்பித் துக்கொண்டு சொன்னானோ என்னமோ தெரியாதென்று சொல்லி மகம்மதாக்கல் ஒரு கச்சோராயக் குடியன். சரிப்போன படி பிணுத்தினானென்று சொன்னார். இதல்லாமல் வைக்கில் சுப் பய்யன் நமக்கெழுதியனுப்பிவைத்த காகிதத்தின் வபணமென்ன வென்றால்: முசியே தெலார்சு ஆற்காட்டிலே உசேன் சாயபு அவர்களண்டையிலே யிருக்கிறபோது ரங்கப்பிள்ளையானால் இனிமேல் படையெடுத்துப் போகிறதில்லையென்று சொன்ன தாக மகம்மதாக்கல் சொன்னதாகவும், அதன்பேரிலே திலார்சு இருந்துகொண்டு அவரெப்படி பேசுவார். அவருக்கென்ன கவை என்றெடுத்தெறிந்து பேசினதாகவும், தன்னையல்லாமல் வேறே பிரபஞ்சமில்லை என்கிறதாகச் சிலாக்கியம் பேசினா னென்றும் எழுதியனுப்பினான். அந்தக் காகிதத்தைக் கொண்டு போய்த் துரையவர்களுக்குக் காண்பித்து; முசியே தெலார்சு ஆற்காட்டிலே இப்படியெல்லாம் சொன்னானென்று சொன் னேன். அதன்பேரிலே முசியே தெலார்சை அழைப்பித்து, நீ ஏது இப்படிச் சொன்னது. இப்படியெல்லாஞ் சொல்லத்தக்க தாக உனக்கென்ன அதிகாரமிருக்கிறது என்று ரொம்பவும்

கோபித்துக்கொண்டார்கள். அதன்பேரிலே திலார்சு இருந்து கொண்டு, நானப்படி ஒருக்காலுஞ் சொன்னதில்லை. நான் பேசிக்கொண்டிருந்தது பார்சி பேச்சிலே. அவனுக்கெப்படி தெரிந்தது? ஆனாலவன் என்னத்தினாலே அப்படியெழுதியனுப்புவித்தானோ தெரியாது என்றும் நானானால் பரிச்சேதம் ஒன்றும் சொன்னதில்லையென்று சொன்னான்.

இற்றைநாள் உசேன் சரயபு அவர்களுக்கெழுதியனுப்பின கடுதாசி வயணமென்னவென்றால்: நாங்கள் பேசினபேச்சு ஒருக்காலும் தப்புகிறதில்லை. எப்படி பேசியிருக்கிறோமோ அந்தப்படிக்கு நடக்குமேயல்லாமல் நாங்களப்படி ஒருக்காலும் பேச்சித் தப்பி நடந்ததில்லை. இப்பவும் ஆற்காட்டிலே யிருந்து பிராஞ்சுக்காரர் ஒன்பது பேர் வருகிறபோது வழிகட்டி, கூடலூரார் ஆறுபேரையும்பிடித்துக்கொண்டுபோய்விட்டார்கள். பிற்பாடு, காரைக்காலிலே யிருந்து தாசுமாம் வருகிறபோது வழிகட்டி, பிறகே வந்தவர்கள் பேரிலே மூன்றுபேரைப் பிடித்துக்கொண்டுபோய்விட்டார்கள். இதல்லாமல்,எங்கள் கிராமம் அழிசபாக்கம், திம்மியப்பநாயக்கன்பாளைய மிதுகளெல்லாம் கொளுத்திக் கொள்ளையிட்டுக்கொண்டு போனார்கள். இப்படியெல்லாம் அவர்களானால் சரிப்போனபடி நடத்தலாம், நாங்களானால் ஒன்றுஞ் செய்யப்போகாது, சும்மா இருக்க வேணுமோ? உங்களுடைய சினேகம் எங்களுக்கிருக்க இப்படியெல்லாமவர்கள் நடப்பிக்கிறது தங்களுக்குச் சம்மதியானால் சரி இப்பவும் அவர்களுக்கு எழுதி அனுப்புவித்து நீங்கள் தாக்கீதுபண்ணுகிறீர்களா அல்லது எங்களுக்குச் சம்மதியானபடி பாரப்பாவென்று கடுதாசி யெழுதி அறுக்கார ஒட்டகக்காரன் கையிலே கொடுத்து அனுப்பிவிட்டோமிவனுக்கு இனும் பத்து ரூபாய் கொடுத்தோம்.

இற்றைநாள் சென்னபட்டணத்திலே யிருந்து கோபாலகிருஷ்ணய்யன் எழுதியனுப்பின காகிதமின்றைதினம் மத்தியானம் வந்துசேர்ந்தது. அந்தக் காகிதத்திலே யிருந்த வயணமென்னவென்றால்: நேற்றையதினம் எழுதியனுப்பின காகிதம் பார்த்துக்கொள்ளப்போகிறபோது தெரியவருமே! இப்பவும் இங்கிலீசுக்கப்பலிரண்டு இந்த மட்டுக்கும் மாயேயிலே லங்கோரம் போட்டுக்கொண்டிருக்

கிறான். இங்கே இருந்த கப்பலின்பேரிலே இருந்த சொல்தாதுகளெல்லாரும் இன்று சூரிய உதயத்துக்கு இறங்கி சாயங்காலம் இங்கே யிருந்து புதுச்சேரிக்கு நூறுபேர் சொல் தாதுயிருபதைத்தஞ்சுபேர் காப்பிரிகளும் பயணம் பண்ணியனுப் பினார்கள். நாளை முதற்கொண்டு இவர்கள் முன்னே பிடித்துக் கொண்ட இங்கிலீசுக்கப்பலிலே யிருக்கிற சரக்கெல்லாமிறக் கப்போகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். பறங்கிமலை யிலே..................சிறிதுபேர் இங்கிலீசுக்காரரிருந்தவர்கள் இவ் விடத்துச் சமாசாரம் தேவனாம்பட்டணத்துக்கு எழுதிக் கொண்டு இவ்விடத்தில் சொல்தாதுகள் ஓடிப்போகிற எத்த னம்பண்ணிக்கொண்டிருக்கையிலே அந்தக்காகிதமிவர்கள் கை யிலே அகப்பட்டு அவனைப் பிடித்திருக்கிற நிமித்தியம், தாசு மாம் பறங்கிமலைக்கு முந்தாம்நாள் ராத்திரி அனுப்பினார்கள். இவர்கள் போகிற வேலைக்கு மூன்று பேர் இங்கிலீசுக்காரர் ஓடிப்போனார்கள். ஒருத்தன் அகப்பட்டபின் அவனைப் பிடித் துக்கொண்டு வந்து காவல் வைத்தார்கள். மலையின்பேரிலே யிருந்த பிராஞ்சுக்காரர் தமிழர் வீடு தவிர இங்கிலீசுக்காரர் வீடெல்லாம் வைக்கோல் கட்டுகளைப் போட்டுக் கொளுத்திவிழத் தள்ளிப்போட்டு அவர்கள் வீட்டிலேயிருந்த தட்டு முட்டெல்லாம் கொள்ளையிட்டு எடுத்துக்கொண்டுவந்துவிட்டார்கள். அதறி யவும். மற்றப்படி (சங்கரய்யரவர்கள் சந்தனக்கட்டை பின்னை யுமிருந்த சில்லரைச் சரக்குக்கெல்லாம் ராமச்சந்திர பண் டிதர் உத்தரவுவாங்கிக்கொடுத்தார். அந்தச் சரக்கும் நேற்று முதலாய் வெளியே சாகிப்போகுது. ராக்கி செட்டி, தியாப்பக செட்டி சரக்குகளெல்லாம் சாகிப்போச்சுது. வாலாப்பேட்டை தானிசெட்டியின் சிறிது சரக்கு துத்தநாகம், பின்னையும் சரக் குகள் ஆயிரம் வராகனது இருக்குதே அவர்கள் மனுஷன் தானப்பனென்கிறவன் பேசிக்கொண்டு அவர்கள் சரக்கு சாகிப்போச்சுது. பின்னை ஒரு கோமுட்டியின் இரு நூற்றைம் பது பாரம் படிகாரமிருக்குது. அதுவும் உத்தரவு ஆகியிருக்கு தென்று சொல்லுகிறார்கள். சங்குவாருது பெட்டிகள், கண் ணாடிகள் முதலான தட்டுமுட்டுகள் எல்லாம் உத்தரவாச்சுது. அவர்கள் மனுஷர் வந்து அவர்களுடைய தட்டுமுட்டெல்லாம் சிறிது சாகிவிக்கிறார்கள். வந்து பேசினவர்களுக்குத் தடை யில்லாமல் உத்தரவுகொடுக்கிறார்கள், அதறியவும். ராமச்சந் திர பண்டிதர் சொல்லுகிறதானால் இப்படியெல்லாம் சரக்குத்

தடையில்லாமல் சாகிப்போகுதென்று தானறியாதுபோலே யெல்லாருடனேயுங் கூடப் பாடுகிருர்கள்.) அதன்பிறகு நடக்கிற காரியங்களெல்லாம் இவரையல்லாமல் நடக்கிற காரியங்களல்ல. மற்றப்படி மாயெயிலே (Mahé) நேற்றையதினம் பின்னையுமொரு கப்பலும் ஒரு சுலுப்பும் கண்டுது. அதுவும் லங்கர் பண்ணியிருக்குது. அதைச் சிறிதுபேர் இங்கிலீசுக்காரருடையது என்று சொல்லுகிருர்கள் சிறிதுபேர் அல்லவென்று சொல்லுகிருர்களென்று இப்படியாக எழுதிவந்தது.

இற்றைநாள் சாயங்காலம் முசியே லாசேன் என்கிறவனுக்குத் தேவனும்பட்டணத்தி விருந்துகொண்டிருக்கிற ஆல்பெர்ட்டென்கிறவன் ஒரு காகிதம் அனுப்பினுன். அந்தக் காகிதம் கொண்டுவந்த சேவகரிலே ஒருத்தன் முன்னே இவ்விடத்திலேயிருந்து அச்சி (Achou) யாத்திரைக்குப் போகவர யிருந்தவனுனபடியினலே அந்தத் துலுக்கன் சோபுதார் மகம்மது உசேனுக்கு வாடிக்கையானபடியினலே அவனுடனே தேவனும்பட்டணம் சேதி சொன்ன வயணம்; பிராஞ்சுக்காரர் சண்டைக்கு வந்தபோது தேவனும்பட்டணங் கோட்டையிலே குவர்னதோர் முதலான பேரெல்லாரும் தத்தளித்துப்போய் கைகாலாடாமல் கொத்தளம் வாங்கி உள்பூந்த மட்டுக்கும் இனிமேல் நிருவாகமில்லையென்று அவரவர் தட்டுமுட்டுகளையெல்லாம் சலங்கின்பேரிலே ஏற்றி முகத்துவாரத்து மார்க்கமாய் இவை யாற்றிலே மேட்டுப்பாளையமட்டுக்கும் இறக்கிதிராசைபண்ணிக்கொண்டிருந்தார்கள். பிராஞ்சுக்காரர் வந்தவர்களைக் கோட்டையின்பேரிலே நடந்தால் கோட்டைக் கைவசமாகும். தம்மிழ் ராணுவமெல்லாம் ஓடிப்போய்விட்டதென்று சொன்னுன். சொன்னமாத்திரத்திலே துரை என்னை அழைத்துக் கேட்டபோது நான் சொன்னதின்பேரிலே நானவர்களிரண்டுபேரையும் கண்டுபேசி, கலியாணநாய்க்கனுக்குக் கவுலெழுதிக்கொடுத்து அனுப்பின வயணம்:

இற்றைநாள் சாயங்காலம் நடந்த வயணமும் அதிசயமுமென்னவென்ருல்: இப்பவும் கலியாணநாய்க்கருக்கு எழுதியனுப்பின கவுலுக்கு நகல்: அக்ஷய ஹு பங்குனி மீ 9 உ க்கு 1747 ஆ மார்ச்சு மீ 19 உ அசறத்து நபாபு குவர்னதோர் செனருல் முசியே துப்பிளேய்க்கு, கான்பகதூர் முசபர்

சங்கு அவர்கள் உத்தரவுப்படிக்கு ஆனந்தரங்கப்பிள்ளை கலியாண நாய்க்கரவர்களுக்குக் கவுலுடன்படிக்கை எழுதிக் கொடுத்தபடி. தாங்களிப்போது தேவனாம்பட்டணத்தாரிடத்திலே, சேவகம் சேவிக்கிறபடியினாலே, அவ்விடம் விட்டு இவ்விடம் வருகிறபடியினாலே தங்களுக்கும் தங்கள் பிறகே வந்த ராணுவத்தாருக்கும் சம்பள நிர்ணயமும் தங்களுக்கு நடப்பிக்கிற காரியத்திற்கும் எழுதின வ்யனம்: தங்களுக்கு இவ்விடத்திலே சம்பளம் மாயே சிப்பாய்களுக்கு எசமானாக இருக்கிறவனுக்கு என்ன சம்பளம் கொடுக்கிறோமோ அந்தச் சம்பளம் தம்முடனேகூட பின்னையும் பத்து பேருக்கு அவர்கள் ஆயுசு பரியந்திரம் மாயே சிப்பாய்களுக்கு அந்தச் சம்பளங் கொடுத்து நடப்பிக்கிறோம். பின்னையும் நூறு பேருக்குமேல் எழுதப்பட்ட சம்பளப்படிக்கு ஒரு வருஷமட்டுக்கும் கொடுத்த நடப்பிக்கிறோம். இதல்லாமல் தம்முடைய பிறகே கூட வரப்பட்ட ஆயிரம் பேர், ஐந்நூறு பேர் எந்தமட்டுக்கும் வருகிறார்களோ அந்தமட்டுக்கும் எங்களுக்குத் தேவையானது இரண்டு மாதம் மூன்று மாதமட்டுக்கும் வைத்துக்கொண்டிருந்து உண்டான சம்பளங் கொடுத்து நடப்பித்துக் கொள்ளுகிறோம். சண்டையிலே செத்துப் போனவர்களுடைய பெண்சாதி பிள்ளைகளுக்கு அந்தச் சேவகத்திலே அவர்கள் மனுஷர்களிலே ஒருத்தரை வைத்து அவர்களாயுசுபரியந்திரம் சம்பளங் கொடுத்து நடப்பித்துக்கொள்ளுகிறோம். இந்தப்படி கவுல் எழுதிக்கொடுத்தோம். இந்தக் கவுல் நம்பிக்கைமாய் வந்திருக்கவுமென்று கவுலெழுதி இற்றைநாள் இராத்திரி ஒன்பதரை மணிக்கு அவர்கள் மனுஷரிரண்டுபேர் கையிலே கொடுத்துக் கதவு திறந்து விடுகிறதற்குக் கெவுனிக்குஞ் சீட்டு வாங்கிக் கொடுத்து இந்நேரம் பயணம்பண்ணி அனுப்பிவிட்டோம்.

இவர்களிரண்டு பேருக்கும் மேலெழுதப்பட்ட கவுல் படிக்குத் தேவனாம்பட்டணத்திலேயிருக்கிற தமிழ் ராணுவத்தைக் கலைத்துக்கொண்டுவந்தால் ஐம்பது வராகன் நன்கொடை கொடுக்கிறோமென்று இப்போது பத்து ரூபாய் நன்கொடை கொடுத்தேன். இதல்லாமலிவர்களிரண்டு பேரும் கலியாண நாய்க்கன் பேருக்கு உங்கள் கவுலெழுதிக் கொடுத்தால் தேவனாம்பட்டணத்து ராணுவத்தையெல்லாம் கலைத்து அழைத்துக்கொண்டு வருகிறோமென்று சொன்னபடிக்குத்

துரைக்கு எச்சரித்து அவருத்தாரப்படிக்கு மேலெழுதி இருக்கிற கவுலெழுதிக் கொடுத்து அனுப்புவித்தோம்.

1747 ஆ மார்ச்சு மூ 20 உ க்ஷய அக்ஷய ஞு பங்குனி மீ 10 உ சோமவாரம்.

இற்றைநாள் நடந்த தென்னவென்றால்: நேற்றையதினம் குவர்னதோர் துப்ளேய்க்சு, சேன் ஜொசேப்பு பண்டிகையாவ படியினாலே கும்பினீர் வர்த்தகர் ஐம்பது வராகனெடை சரப்பளியும் இரண்டு பறக்களாவுங் (muslin) கொண்டுவந்து கண்டார்கள். அதை வாங்கிக்கொண்டு பாக்கு வெற்றிலை பன்னீர் கொடுத்தார்கள். அப்போது துரைக்கு உபசாரமான வார்த்தைச் சொன்னார்கள். அதற்குத் துரை இருந்துகொண்டு என்னுடைய ஆலோசனைக்காரர் என் மனதின்படியே ஒத்து நடந்தார்களேயானால் நான் நடத்துகிறகாரியம் வேறே என்று சொன்னார். அதற்கு இவர்களிருந்துகொண்டு எவ்வளவு உங்களுக்கு அதிக செயம் வந்தாலும் எங்களுக்கு லக்ஷந்தரம் ஆதாயம் வந்தாப்போலே என்று சொன்னதற்கு இந்த மாதக் கடைசியிலேயாவது அடுத்த மாதத்திலேயாவது கோந்துராந்துப் பண்ணுகிறோமென்று துரை சொன்னதற்கு, நல்லதப்பாவென்று சொல்லிப்போட்டு வியாபாரம் நடக்கப்பண்ணுகிறோம் என்று சொல்லிப் புறப்பட்டு அனுப்புவித்துக்கொண்டு போனார்கள்.

எப்போதும் பண்டிகைக்குச் சந்திக்கிறபோது இப்படி சந்தித்து அப்பால் கோஷத்துசு வாங்கிக்கொண்டுவந்து கொடுப்பார்கள். ஆனாலிப்போது இரண்டாயிரம் வராகன் கொண்டுவந்து கொடுப்பார்கள். இப்போது கோந்துராந்துய் இல்லாதபடியினாலே என்னமாயினிமேல் தீருமோ அறியவேண்டியது.

(டங்காசாலையார் எப்போதும் குஸ்துமாத்துப்படிக்கு முப்பது வராகனெடை சரப்பளியும் ஒரு சுருட்டு பட்டும் கொண்டு வந்து கொடுத்துக் கண்டுபோனார்கள். துலுக்கர் சமாதானப் பேட்டியின்போது வண்ணார் கட்டளைக்காரர் (Pressmen) சேவகர் வந்து பேட்டிக்கொள்ளாதபடியினாலே வண்ணா ஐந்து மோகராவும் கட்டளைக்காரருக்கும் கோன்சேலருக்கும் ஒரு மோகராவும் பேருக்குக் கொடுத்துப் பேட்டிபண்ணிவைத்தோம்,

*1747* ஆ. மார்ச்சு மீ 21 உ ஈசு அக்ஷய ஹு பங்குனி மீ 11 உ அங்காரகவாரம்.

இற்றைநாள் சலது வெங்கடாசல செட்டியாரை பேட்டி பண்ணுவித்தோம். அவர் முப்பது வராகனெடை சரப்பளி கொண்டுவந்து கண்டார். இதை மறுபடி கொடுத்துவிட்டு ஐம்பது வராகன் வாங்கிக்கொள்ளத்தக்கதாக வுடன்படிக்கை உபசாரம் சொன்னபோது) உங்கள் எசமான்வராதேபோனுரே நல்லது, சென்னப்பட்டணம் வர்த்தகர்களெல்லாரும் கூடிக் கொண்டு வராதேபோனுர்களே. அவர்களுக்குக் கிடைத்த ஆதாயமென்னவென்றால்: வீடு, தட்டுமுட்டுச் சரக்குகள் எல் லாம் போக்கடித்துக்கொண்டது மாத்திரம் கண்டார்கள். பணங் காசும் போக்கடித்துக்கொண்டார்கள். பின்னையும், ஒரு ஆதாயமும் சம்பாதிக்கவில்லை. நல்லது, இனிமேலும் நடக் கப்போகிற சமாசாரமறியப்போகிறுர்கள் என்று சொன்னுர். அதற்கு எங்களெசமான் வியாச்சியத்தைக்குறித்து ஆற்காட் டுக்குப்போனுனே அல்லாமல் இல்லையென்றால் இங்கேவாரான வன் என்று பக்குவமாய்ச் சொன்னுலும் கேளாமல் கோப மாய்த்தானே சொன்னுர். மகம்மதாக்கல் காகிதம் குவர்னதோ ருக்கு ஒன்று, கெர்சாம், போசேத்து, திலார்சு. மதனுந்த பண் டிதர் என் பேருக்க ஒரு தெலுங்கு காகிதமும் நபாபு தயவு பண்ணிக்கொடுத்தார் என்று ஒரு சவாரியொன்று மனுப்பு வித்தாரிந்தக் காகிதங்களிலே அவரவருடையதை அவரவருக் குக்கொடுத்து, குவர்னதோர் காகிதம் படித்துப்பார்த்து, குவர் னதோருக்குச் சொன்ன வயணம்: நபாபு அவர்கள் தன்னை அழைப்பித்து, நீங்கள் வந்த பிற்பாடு பிராஞ்சுக்காரருக்கும் இங்கிலீசுக்காரருக்கும் ஒரு சண்டை. நல்ல சண்டை ஆனுப் போலேயுமிதிலே இங்கிலீசுக்காரருக்குச் சண்டைக்கப்பல்கள் வந்தாப்போலே சேதி கேள்விப்பட்டோம் என்றும், இது மெய்தானுவென்றும் தன்னைக் கேட்டதாகவும், தானறியேன் என்றுப்போலே எழுதியனுப்பிச் சமாசாரந் தெரிந்துகொள் ளச் சொல்விச் சொன்னுப்போலேயும், அது நிமித்தியமாக இந்த அறிக்கையிலே எழுதி யனுப்பினதாகவும் பவுஞ்சு போயிருந்து வாங்கிவந்தாலாச்சுதே யில்லாவிட்டால் சீக்கிர மதுக்கு வாங்கிவரச் சொல்லியும் தேவனும்பட்டணத்துச் சேதி வராமற்போனுல் நாலுகிராமம் இரூமாமென்றுப்போலே

யுமிதைத்தொட்டு நின்றுபோச்சு தென்ருப்போலேயும் நிசாம் கிருஷ்ணைக் கடந்து இப்புறம் சாபனூர், பங்காபுரம் வந்து சேர்ந்தானென்று மினிமேலே இவ்விடத்துக்குப் போவாரோ தெரியாதென்றும், நாசறு சங்கு அன்வர்திகானுக்குத்தானே வாகல்பண்ணி அனுப்பின பர்வாணுவுக்கு நக்கலும் மமுதல்லி கானுக்கு நிசாம் நவபத்துங் கொடுத்து அனுப்பினுரென்றும் அவரவர் நசர்வைத்துக் கண்டார்களென்றும், மகம்மதல்லிகானுக்குத் தாங்கள் அனுப்புகிருமென்ற தெரப்பி இப்போது அனுப்பினுல் நல்ல மனதுடனே அங்கிகரிப்பாரென்றும், மறுபடி பவுன்சும், பர்மோசி நாய்க்கனும் மிறசியிலேதானே நின்ருன் என்றும் அவன் தம்பி அப்பாசி நாய்க்கன் நிசாம் பேட்டி பண்ணிக்கொண்டு கூடவந்திருக்கிருனென்றும் எழுதின சேதியெல்லாம் சொன்னதற்கு நாசறு சங்கு காகிதம் வந்ததென்று சொன்னது அபத்தமென்றும், ஆனுலும் மெத்த சந்தோஷந்தானென்றும் உபசாரமாய் எழுதச்சொல்லியும் தேவனும்பட்டணம் பவுன்சுடனே கூடின சேதிக்கு உசேன் சாயபு பேரால் எழுதின காகிதம் பார்த்துக்கொண்டால் தெரியுமென்றும் மமுதல்லிகானுக்கு முபார்க்குப் பரதிகாகிதம் நவபத்து வந்ததற்கும் தொப்பிபனுப்பினதற்கும் எழுதியனுப்பிவிடச் சொல்லியும் உமக்குச் சலாய்த்துகான் என்றுபேர்கொடுத்தோமே உம்முடைய மோகரிலே மகமுதாக்கல்என்றெழுதியிருக்கிறது. ஆனபடியினுலே, மோகர் செதுக்கி அனுப்புவித்தோம் என்று மினிமேலிந்த மோகர் போடச் சொல்லி எழுதியனுப்பச் சொல்லியும் நாலுகிரமம் சிக்கிரமத்துக்குப் பர்வாணுபண்ணி அனுப்பச் சொல்லியும் எழுதியனுப்பச்சொன்னுர். அந்தப்படிக்கு எழுதியனுப்புவித்தோம் என்றும், இனிமேல் மமுதல்லிகானுக்கு ஒரு தொப்பி பொன்கலாம் போட்டுச் சிகப்பு இறகு வைத்துக்கொடுத்து மொபார்க்கு காகிதமெழுதி அனுப்பச் சொன்னபடிக்கு எழுதியனுப்புவித்தோம்.

நமக்குச் சவுகரியமனுப்பினதற்கும், மற்றச் சேதிக்கு மகமதாக்கல் பேருக்கும் மமுதல்லிகான் பேருக்கும் காகிதம் எழுதியனுப்புவித்தோம்.

இற்றைநாள் இராத்திரி எட்டு மணிக்கு குவர்னதோர் முசியே துய்ப்பிளேக்சு அழைப்பித்துச் சொன்ன வயணமென்னவென்ருல்; பள்ளி நாட்டாண்மைக்காரன் ஒரு பெத்திசியோம்

கொடுத்தார்கள். அதிலேயிருந்த வயணம்: வீரானாய்க்கனைப் ப ளுக்கு எசமானுக்கு ரியாயம் அவன் இமே தாங்களிருக் கிறதில்லையென்றும், தங்கள் வசமித்தனைபேரென்றும் திட் டம்பண்ணினால் தாங்களவர்களைச் சேரப்பிடித்துவைத்துக் கொண்டிருக்கிறோமென்றும், தாங்கள் மயிலாப்பூரிலே விசிரே நாளிலே நல்ல சிப்பாய்கிறிபண்ணினோமென்றும், அப்ப டிப்பட்ட எங்களை வையாமல் வீரானாய்க்கன் திருடி வர் கடக்கத் துரத்திவிட்டவனை ரங்கப்பனழைத்து, அவன் வசமிந்தச் சேவ கரைக் கொடுத்து, அவனைத்தொட்டு சிறிது காரியங்கள் நடங் தது எண்பிப்போமென்றும், நடத்துகிறான் என்றும், பின்னை யும் தாங்கள் ஐந்நூறு பேர் குறி சுட்டுப் பழகியிருக்கிறோ மென்றும் இப்படி தாறுமாறாக எழுதின காகிதத்தை என் கையிலே கொடுத்துப் படித்துப் பார்க்கச்சொல்லித் துரை சொன்னது. வீரானாய்க்கன் நேரஞ்செய்து ஊருக்கப்புறம் போயிருக்கிறவனை நீ அழைப்பித்துப் பள்ளிகளுக்கு எசமானாகி இனி நீயா இப்படி செய்யலாம், செய்தாயென்று பெத்திசியோம் கொடுத்தார்களென்று எத்தனை அவசர காரியங்களிருந்தாலும் நேரஸ்தனை எசமானுக்கிவைக்கப் போகாது மூசியே ரங்கப் பிள்ளை என்றார். ஐயா அதற்கு நான் சொல்லுகிற உத்தரவு மனம் பொறுத்துக் கேட்கவேணுமென்று சொன்னேன். நல்லது, சொல்லென்று சொன்னார். நீங்கள் நூறு சேவகரை நயினாருடனே சொல்லி முஸ்திதுபண்ணுவிக்கவேணுமென்று சொன்னீர்கள். நான் நல்லதென்று நயினாரை அழைத்துச் சொன்னேன். அவன் என்னாலே ஆகாதென்றும் நீ பார்த்து இந்த உத்தியோகத்திலிருக்கச் சொன்னால் இருக்கிறேன்; இல்லாவிட்டால் நான் போகிறேனென்று சொல்லிவிட்டு ஒரு நாளெல்லாம் வராதே போனான். அப்பால், நான் அழைத் தனுப்புவித்து முன்னாலே குறிசுட்டார்களே ஐந்நூறு பேர் மாத்திரம் அவர்களெங்கே கீர்கைப்பணங்கொடுக்கத் தேவை யில்லை. கும்பினீரிலே உண்டான சம்பளம் நான் வாங்கித் தருகிறேன். உமக்கு நூறு சேவகர் துரையவர்கள் சொன்ன படிக்குக் கூட்டினீர் என்கிற பேர் மாத்திரமிருக்கட்டுமென்று பின்னையும் இவ்வளவு கூட்டிக்கொடாமற்போனார்களென்கிற கோபந் துரைக்கு இருக்கும்படி ஏன் வரவேணுமென்று சொல் லத் தக்கன சாடையாய் என்ன சொன்னாலும் என் கையிலே ஆகாது. அப்போது பள்ளிகளுக்கு நாட்டாண்மையாயிருக்கிற

நல்லதம்பி, அப்புபிச்ச, குப்ப னிவர்களேயுஞ் சவுரியையும் அழைத்துச் சொல்லுங்கோளென்று சொன்னதின்பேரிலேயும் பள்ளி நாட்டாண்மைக்காரரையும் சவுரியையும் அழைத்துச் சொல்லுங்கோளென்று சொன்னதின்பேரிலேயும் பள்ளி நாட்டாண்மைக்காரரையும் சவுரியையும் அழைப்பித்து முன்னே குறிசுட்டவர்கள் ஐந்நூறு பேருண்டே அதிலே நூறு பேரை மாத்திரம் சேர்த்து அழைத்துவாருங்கோ ளவர்களுக்குக் கும்பினீரில் எழுதுவித்துச் சம்பளம் கொடுத்துவிடுகிறோம். இது உங்களுக்கு ரொம்பவும் பிரதிஷ்டையான காரியம். துரையவர்கள் மனதிலேயும் இவர்கள் காரியஸ்தரிவர்கள் காரியவேளையிலே உதவுகிறவர்கள் என்று தோற்றியிருக்கும் என்று பின்னேயும் அடுத்தடுத்து நியாயமாய்ச் சொல்லத் தக்கன நியாயமாய் என்ன சொன்னாலும் பரிச்சேதமாய் அகப்பட்டார்களென்று சொன்னார்கள். அப்படியல்ல, முன்னே நீங்களேப் போ வேணுமென்றால் அப்போ ஐந்நூறு பேரைக்கொண்டு வந்துவிடுகிறோமென்று சொல்லிவிட்டு இந்தச் சமயம் நூறு பேர் வேணுமென்றால் அகப்பட்டார்கள் என்று சொன்னால் துரையவர்கள் அந்த ஐந்நூறு பேரையுங் கொண்டுவந்து ஒப்புவியுங்கோளிப்படி வராத காரியத்துக்கு ஏன் மருந்துங் குண்டுஞ் செலவுபண்ணினீர்கள் என்று கோபம்பண்ணுவாரென்று சொன்னதற்கு, அவர்களிலே சிறிதுபேர் சென்னப்பட்டணத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். காரைக்காலுக்கும், தேவனாம்பட்டணத்துக்கும், கூடலூருக்கும் சிறிதுபேருமாக இப்படி நாலுவிதமாகப் போய்விட்டார்களிப்போது ஒருத்தராகிலும் அகப்பட்டார்கள். எத்தனேவிதமாய்ச் சொன்னாலும் புரிச்சேதமாய் அகப்பட்டார்களென்று சொல்லிவிட்டுப் போனார்கள். அதன்பேரிலே பிற்பாடு இந்த நாய்ப்பிடித்த சவுரியை அழைத்து என்னே உத்தியோகத்தில் வைத்தால் நூறு பேர் சமயாசமயத்துக்கு ஆசிராய் வருவார்களென்று சொன்னியே, சேரும் பிள்ளாயென்று சொன்னதற்கு இவனும் அவர்கள் சொன்ன உத்தரவின்பேரிலே, அப்படித் தானே சொன்னான். தேவனாம்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குத் தயாராகிப் போகிறதாயிருக்கச்சே இந்தப் பே[illegible] யெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தால் உங்களுக்குக் கோபம் வரும். இந்தச் சமயத்திலே நூறு பேர் சேர்க்கப்போகாதா?

இத்தனை பெரியப் பணத்திலே இதற்கு அவன் மாட்டே னென்று சொன்னான்; இவன் கூடாதென்று சொல்லவேணுமா முஸ்தீதுபண்ணப்போகாதா ? ஆனாலுன் கையிலே ஆகா தென்று சொல்லப்போகிறீரென்று நான் வீராநாயக்கனை யழைப்பித்து, ஆலத்தூர் பாளையக்காரனையும் அழைப்பித்து இரு நூறு பேர்களை முஸ்தீதுபண்ணுவித்து, துப்பாக்கியுங் கொடுப்பித்து, அவர்கள் பிறகே வீராநாயக்கனையுங் கூடக் கூட்டி, தேவனாம்பட்டணத்தில்பேரிலே சண்டைக்கனுப்புவித் தேன். அந்தச் சேதியும் உம்முடனே சொன்னேன். அதற்கு நீர் நல்லதென்று உத்தரவு சொன்னீர். அப்பாலவ்விடத்திலே யிருந்து அடிக்கடி சண்டை சமாசாரமும் கொத்தளம் வாங்கின சமாசாரமும் எழுதி வந்தது. அப்போதெல்லாம் இன்னான் எழுதியனுப்பின ஓலை சேதி என்று அடிக்கடி உங்களுக்குக் கபுறு சொல்லிக்கொண்டு வந்தேன். அப்படி யிருக்க உமக்கு இப்போது பெத்திஸியோ மெழுதிக் கொடுத்தார்களென்று சொன்னேன். அதற்குத் துரை சொன்னது: மெய்தான், ஆனாலிவன் மகன் வேறே ஊருக்குள்ளே வராமல் வெளியே இருக்கிறானென்று கேட்டார். இருக்கிறான்; நீங்கள் மகம்ம தாக்களுங்களை கிருஸ் கேட்டதற்குத் திருடினவன் வரப் போகாது, அவனப்பனையும் அவனப்பிலெல்லாம் வரச்சொல் என்று சொன்னபடிக்கு அவர்களை வரச் சொன்னேன் என்று சொல்லி.—

1747 ஆ மார்ச்சு மீ 23-ந் அக்ஷய ஹு பங்குனி மீ 13 உ குருவாரம்

இற்றைநாள் காலமே குவர்னதோர் என்னை அழைத்த னுப்புவித்துச் சொன்னசேதி என்னவென்றால்:நேற்றையதினம் சென்னப்பட்டணத்துக்குக் குண்டூர் பாலிசெட்டி முகாந்திர மாய் தறுவாடிகையிலே மூப்பதினாயிரம் ரூபாய்க்கு உண்டிகை வாங்கிவந்துகொடுத்தாயே அதற்கு மூசியே துலாராம் பேருக்கு ஒடுதினன்ஸ் எழுதிக்கொண்டுவா. கையெழுத்துப்போட்டுத் தருகிறோமென்று சொன்னார். அந்தப்படிக்கு எழுதுவித்துக் கொண்டுபோய்க் கொடுத்து கையெழுத்துப்போடுவித்து, அந்தக் கடுதாசியை குண்டூர் பாலிசெட்டிகையிலே கொடுத்து, அவ ரதை வாங்கிக்கொண்டுபோய் மூசியே துலாராம் கையிலே

கொடுத்தவுடனே அவரந்தக் கடுதாசியைப் பார்த்துக்கொண்டு அவர்கள் கொடுத்த ரூபாய் ௩௨௦௦௦ (32000) மும் அதற்கு உண்டானவரி ரூ ௨௱௪௰ (240) ஆக ௩௨௲௨௱௪௰ (32240)ம் கொடுத்து விட்டார்.

லா மமெறந்தியோ குமாரன் முசியே நூதுரு என்கிறவனை முன்னாலே பறங்கிப்பேட்டைக்கு அனுப்பியிருந்தார்களே அவனவ்விடத்துக்குப் போகச்சே அவனைக் காரைக்காலுக்குப் போகிற தாசுமான் பிறகேதானே போகச் சொன்னதற்கு அவனப்படி அவன் பிறகே வில்லியநல்லூர், சொன்னூர், சுரப்பூர் மேலே வழியாய்ப் புறப்பட்டு வெங்கிட்டாம்பேட்டையின்பேரிலே போகாமல் அரியாங்குப்பத்துமேலே புறப்பட்டு மரிகிருஷ்ணபுரத்துமேலே போய்த் தேவனாம்பட்டணத்துக் குண்டுதாழையைச் சுற்றினாப்போலே திருவந்திபுரத்தின் மேலே போய் காரைக்காலுக்குப் போகிற தாசுமான் புவனகிரி பட்டணத்தண்டை போகச்சே அவர்களுடனே கூடிக்கொண்டு சிதம்பரம் போய்ச் சேர்ந்தான். இவன் திருவந்திபுரத்து மார்க்கமாய்ப் போனபடியினாலே இங்கிலீசுக்காரர் அந்தக் கபுறு அறிந்து இங்கிலீசுக்காரர் மனுஷர் அவனைப் பின் தொடர்ந்து வெள்ளாற்றங்கரைமட்டுக்கும் நூரத்தினார்ளாம். இதற்குள்ளே அவர்கள் அக்கரைப்பட்டுச் சிதம்பரத்தே போய்ச் சேர்ந்தபடியினாலே இங்கிலீசுக்காரர் மனுஷர் வெள்ளாற்றுக் இக்கரையிலேயிருந்தபடியே புறப்பட்டு வந்துவிட்டார்களாம். அவர்கள் புறப்பட்டு வந்த பிற்பாடு முசியே நூத்துரு (M. Le Noutre) பறங்கிப்பேட்டை வந்து சேர்ந்தானும். நூத்துரு பிறகே அவனுடைய தட்டுமுட்டுகள், பெட்டி, கட்டில் இதுகளெல்லாம் அவன் போன வழியே பிந்திப்போனபடியினாலே கூடலூருக்குத் தென்னண்டையிலே ராமாபுரத்து ஆயத் தண்டையிலே ஆயக்காரர் மறித்துப்போட்டவிடத்திலே இங்கிலீசுக்காரர் மனுஷர் வெள்ளாற்று மட்டுக்கும் போய்த் திரும்பி வந்தவர்கள் நடுவழியிலே கண்டு முசியே நூத்துரு (M. le Noutre) நாலு பெட்டியும், புடவை சிலையும், ஒரு கட்டிலுமிதெல்லாம் பிடுங்கிக்கொண்டு தேவனாம்பட்டணத்தே கொண்டுபோனார்களாமிந்தக் கபுறு இவ்விடத்திலே காரைக்காலுக்குத் தாசுமான்போன மறுநாள் தானே கபுறாகி அந்தப் பெட்டி தட்டுகள் தாசுமான் பிறகே போனதென்றும் கபுறு வந்தபடியினாலே அந்நேரமே அந்தச்

சேதியைப்போய்த் துரையவர்களுடனே சொல்லியிருந்தேன்.

பெட்டியுந் தட்டு முட்டும் அதிலே சிறிது ரூபாய்களு மிருந்தது ஏகத்துக்கு முசியே நாந்துரு (M. le Noutre) விசாரப் பட்டுக்கொண்டு பறங்கிப்பேட்டையிலே யிருந்தவனுக்கு அதுவே மனதிலே பயந்தோன்றி கலவரப்பட்டுக் கொண்டிருக் கச்சே அவ்விடத்திலே பிறந்த சேதி தேவனும்பட்டணத் தாருக்கும் மற்றதாய்த் துலுக்கரது இரண்டாயிரத்தைந் நூறு குதிரை வருகிறதாகவு மில்லாமலவர்களுக்கு இப் போது வந்திருக்கிற கப்பலிலேயிருந்து 4000, 5000 பேரிறங் கினதாகவு மின்னுமவர்களுக்குப் பத்துக் கப்பல் இருபது கப்பல் வருகிறதாகவு மிப்படி நாலாவிதமும் அவ்விடத்திலே தப்புக் கபுறுகளாகி அவரவர்களாக அவரவர் சொல்லுகிறதைக் கேட்டவுடனே அதைத்தானே மெய்யென்றெண்ணி, குண்டி கலங்கிப்போய்ப் புத்தி சிதறி உழப்பரித்துக்கொண்டு இனி மேல் நாமிங்கே யிருந்தால் மோசம் வருமென்று சொல்லிப் பறங்கிப்பேட்டையிலேயிருந்து மேல் வழியாய் புறப்பட்டு முன்னே தாசுமான் போன வழிக்குப் பின்னையும் மேலாகச் சுற்றி இன்றையதினம் வந்து புதுச்சேரி சேர்ந்தான். அவன் வந்தவுடனே துரையவர்களண்டைக்குத் தான் போனதும், பட்டபாடும், கெட்டகேடும் தன்னுடைய தட்டுமுட்டுப் பெட்டிப்பேழையை வழியே இங்கிலீசுக்காரர் மனுஷர் பறித் துக்கொண்டுபோனதும், அவ்விடத்திலே பிறந்த விசேஷமும், அதனாலே பறங்கிப்பேட்டையிலேயிருக்கப் பயந்து புறப்பட்டு மேல் வழியாக வெகு தூரஞ்சுற்றி ஓடிவந்து பிராணத்தோடே வந்து புதுச்சேரி சேர்ந்ததும் இதுகளெல்லாம் துரையவர் களுக்குச் சொன்னான். அந்த வார்த்தையெல்லாம் துரையவர் கள் கேட்டமாத்திரத்திலே மனது சகியாமல் கோபித்துக் கொண்டு அதன்பேரிலே என்னை அழைத்தனுப்புவித்தார். நான் போனவுடனே அவன் சொன்ன சேதியெல்லாம் என்னுடனே சொல்லி நகைத்து, அவனைப் பார்த்து, நீ என்ன பிரஞ்சுக்காரன் மகனோ? உனக்கென்ன ஒன்றுந்தெரி யாதா? மாபூசுகான் போகச்சே குதிரைக்காரரெல்லாரும் சம் பளமில்லாமல் அழுதுக்கொண்டு அவன் பிறகே போகமாட் டேனென்றபடியினாலே இருநூறு குதிரையுடனே திருச்சிராப் பள்ளிக்குப் போனானே; அதல்லாமல் மருட்டியன் வருகிறான் என்று சொல்லி கணவாய்க்குத் தண்டு போகிறதற்குக் குதிரை

களில்லாமல் அவர்களுக்குச் சூத்துங் கீழே தண்ணிவந்திருக் கச்சே அவர்கள் எங்கே வரப்போகிறார்கள், அதென்ன உனக் குத் தெரியாதா? அல்லவென்றுதான் வந்தார்கள். நீ பறங்கிப் பேட்டையிலேயிருக்கச்சே அவர்களாலே உன்னை என்ன செய் யலாம்; அல்லவென்று உன்னைப் பிடித்துக்கொண்டுதான் போனார்கள் அப்புறமது என்னமாய்ப் போய் என்னமாய் வரு மென்றும் நீயறியாயா? அதுவாய்த் தப்பி உன்னைப் பிடித்துக் கொன்றுபோட்டார்களேயானால் நீ செத்தால் என்ன ராச்சிய மெல்லாம் எலும்பாய்ப் போகுதா? எப்படி பிராஞ்சுக்காரன் வயிற்றிலே பிறந்து என்னுடைய முகத்துமுன்னே நின்று இப் படிப்பட்ட உத்தரவு சொல்லவந்தாய்? என்னமா யானுலென்ன? நீ இந்தியாவிலே பிறந்தபடியினாலே உனக்கந்தத் தைரியம் வர மாட்டாதென்றும் பின்னையுமிப்படி அநேகவிதமாய்ச் சொல லிச் சொல்லிக் கோபித்துக்கொண்டு என் முகத்து முன்னே நில்லாதே, போவென்று சொல்லி, நாலுதரம் ஆறுதரம் அடிக் கப்போகிறாப்போலே காலை எடுத்துக்கொண்டு கிட்டே கிட்டே போனார். அவருக்கிருக்கிற கோபம் எனக்குப் பார்க்க அடிப்பார்போலே கண்டது. ஆனாலவன் பிரஞ்சுக்காரனான படியினாலேயும் பெரிய மனுஷன் பிள்ளையானபடியினாலேயும் மனம் பொறுத்தார். இம்மாத்திரங் காரியம் தமிழனா யிருக்கிறவன் ஆராகிலுமிப்படி வந்து சொன்னானேயானால் அவனை அந்தக்ஷணமே தூக்கிப்போடுவார்போலே கண்டது. ஆனால், இன்றையதினம் நூத்ரை (M. Le Noutre) துரையவர் கள் கோபித்துக்கொண்டு திட்டினதும் வசது மெழு வேணு மென்றால் என்னாலே எழுதி முடியாது. ஆனபடியினாலே சூசனையா யெழுதினேன்.

இற்றைநாள் செங்கழுனீர்ப்பாளையம் சேஷாத்திரிபிள்ளை யவர்களுக்கு எதிராக சிரஞ்சீவி அப்பாவையும் வீராநாயக் கனையும் எதிராக அனுப்பி அழைத்துக்கொண்டு வரச்சொன் னேன். அந்தப்படிக்கு எதிராகப் போய் பனிரெண்டு மணிக்கு அழைத்து வந்தார்கள். அவர் வந்தகாரியம் என்னவென்றால்: தேவனாம்பட்டணத்தின்பேரிலே நம்முடைய பிராஞ்சுக்காரர் சண்டைக்குப் போனபோது குண்டுக்குள்ளே போய்ச் சுற்றி யிருந்த கொத்தளங்களிலெல்லாம் பிடித்துக்கொண்டு அப்பு றம் கோட்டையின்பேரிலே இறங்குகிற வேளையிலே அவர்

களுக்கு மற்றது பத்து கப்பல் வந்தபடியினாலே பிராஞ்சுக்காரர் வந்துவிட்ட சேதியை மாறுபாடாய்ப் பிராஞ்சுக்காரர் குவர்னதோர் முதலான பேர் நான்கூட போனதாகவும், அவர்கள் குண்டுக்குள்ளே இரு பாரிசமும் போகிற வழி மருந்து படுத்தி வைக்கோல்போரிலே மறைவிலே பீரங்கிகளை வைத்துக் கொளுத்திவிட்டதாகவும், போன பிராஞ்சுக்காரர்கூட துரைகூட ஆயிரத்தைந்நூறு பேருக்கு மோசம் வந்ததாகவும், காரைக்கால் வாங்கிக்கொண்டு புதுச்சேரியுஞ் சுற்றிக்கொண்டாப்போலேயும் இப்படி தாறுமாறாய்ப் பிறந்து அதன்பேரிலே துரை ரங்கப்பன் முதலானபேர் போகவில்லையென்றும், போன தளம் ஆயிரம்பேர் மடிந்துபோனதாகவும், காரைக்கால் வாங்கிக்கொண்டு புதுச்சேரியும் சுற்றிக்கொண்டாப்போலேயும் இதன்பேரிலே குஞ்சுக் குழந்தைகளை மாத்திரமாகிலும் வெளியேயிருந்து அழைப்பித்துக்கொண்டு ஊரே கொண்டுபோய் சேர்ப்போமென்று புறப்பட்டுவந்ததாகவும், வரச்சே உய்யால் சேஷாசல நாயக்கனுடனே பல்லக்குக்கும் மோலார்னுவுக்குஞ் சொல்லி வந்ததாகவும், இவ்விடத்திலே வந்து பார்த்தால் அவ்விடத்திலே கேட்டதெல்லா மபத்தமென்றுஞ் சொன்னார்கள். (திராதுய்க்சியோம்)

1747 ஆ மார்ச்சு மீ 24 உ க்கு அக்ஷய ஸு பங்குனி மீ 14 உ சுக்கிரவாரம்.

அக்ஷய ஸு பங்குனி மீ 11 உ சென்னப்பட்டணத்திலிருந்து கோபால கிருஷ்ணய்யர் எழுதியனுப்பின காகிதம். அதற்கு நகல்:

இப்பவும் இங்கிலீசுக் கப்பலிலேயிருந்து செம்பு 250 பாரம், பாதரசம் 25 பெட்டியும், லிங்குரம் 45 பெட்டியும், சகலாத்துக்கட்டு 15யும், மேலும் சாராயம் முதலான வஸ்துக்கள் சீர்மையிலிருந்து வந்திறங்கிற்று. மூந்தாம் நாள் ராத்திரி மய்யாணிலிருக்கும் இங்கிலீசுக்கப்பல்காரன் ராத்திரி பத்து மணிக்கு துறையிலிருக்கும் கப்பல்களுக்கு அருகில் வந்தான். இந்தக் கப்பல்காரன் குண்டுபோட்டு நாலு பீரங்கிச் சுட்டான் அதன்பேரிலே போய் யதாஸ்தானத்துக்குச் சேர்ந்தான். அந்த வயணஞ் சித்தத்துக்குத் தெரியவேண்டியது. கப்பலிலேயிருந்து இறக்கின வெள்ளிப்பெட்டி 42 இருந்தபடியினாலே அதிவிரண்டு

பெட்டிகள் ராமச்சந்திர பந்துலு முகாந்திரம குண்டூர் வெங் கண்ணசெட்டி குமாரன் ராமாநுசுலுசெட்டி, மல்மண்டா கேசவநாய்க்கன் மயிலாப்பூரிலே ரூபாய்கள் போட்டுக் கொண்டுவந்து கொடுக்கிறேமென்று கொண்டுபோய்விட் டார்கள். அந்த வயணந் தங்களுக்குத் தெரியவேண்டியது. மற் றச் சங்கதிகளெல்லாவற்றிற்கும் பின்னாலே எழுதியனுப்பு கிறேன்.

சீர்மை கடுதாசிகளை முசியே லத்தூஷ் எட்டு நாளிலே நான் போகப்போகிறேன். போகும்போது கொண்டுபோகிறேன் என்று சொல்லுகிறான். ஊரிலிருக்குஞ் சரக்குகளெல்லாம் சிலர் கப்பல்மேலே ஏற்றி வடக்கு செயந்திராமண்ணா முகாந் திரம் ராமச்சந்திரபந்தலுக்கு முகாந்திரம் வடக்கே நோக்கி யனுப்பிவிட்டார்கள். சிலர் துபாசி நல்லதம்பி ராமச்சந்திர பந்துலு முகாந்திரம் வெளிக்கு அனுப்பினார்கள். இருந்த சில விசேஷங்களிப்போது சாவகாசமாய் நடந்து வருகுது. இப்போது நடக்குங் காரியங்களெல்லாம் பார்க்கும்போது கந்தப்பனிருக்கிறபோது இத்தனை தாராளமாய் நடக்கவில்லை. அவன் ரொம்பவும் பயப்பட்டு நடந்துவந்தான். அப்போது பிரயோசனம் பெற்றவர்கள் வேறே நேரமாத்திரம் அவர் களுக்கு வந்தது. இதுவே யல்லாமல் வேறேயொன்றுமில்லை. மேலும் அவ்விடத்திய சாம்பிராச்சியமெல்லாம் எங்களுக்கும் இவ்விடத்தில் நானடக்கவேண்டிய காரியங்களுக்கும் எழுதி யனுப்பும்படியாய்த் தயைசெய்யவேண்டியது.

இற்றைநாள் சென்னப்பட்டணத்துத் தபாலிலே வந்த காகிதத்திலே எழுதியிருந்தபடிக்கு மேலே எழுதியிருக்கிறது. பார்த்துக்கொள்ளுகிறவர்கள் பார்த்துக்கொள்ளலாம். ஆனால், சென்னப்பட்டணத்தைப்போலொத்த பட்டணம் கையிலே அகப்பட்டும் பட்டணத்தை எப்போதையும்போலே பந்தோ பஸ்துபண்ணிவைக்கிறதற்கு ஒரு அதிகாரஸ்தனை விவேகியாக ஏற்படாதபோனபடியினாலேயும் அல்லது புதுச்சேரியிலே எசமானாகி இருக்கிறவராகிலும் கேள்வி இப்படியே கேட்டு அலைந்துபோச்சுது. பட்டணத்திலுள்ளவர்களும் பட்டணமும் எப்படியாகிலும் போகுது; பட்டணம் ஆளுகிற முசியே தூப்பிளேய்க்குகீர்த்தி இரண்டு விதத்திலே அபகீர்த்தி வந்தது.

ஒரு காரியம் தாம் சுதாவாய்ச் செய்காரியம், தவிழ் காரியம், காரியம் அறியவும். 1-வது கேள்வியாம்படிக் குக் கேட்டு நடத்தாதேபோன குற்றமொன்று. 2-வது அவர் பெண்சாதி தலைப்பட்டுதான் வரவேணுமென்று அவளொரு இடத்திலே சென்னப்பட்டணத்திலே வர்த்தகரண்டைக்கெல்லாம் மனுஷரை யனுப்புகிறதும் சென்னப்பட்டணத்திலே இவளொரு இடத்திலே திருட்டுப் பசங்கள் பாப்பனப்பிள்ளை என்கிறவனையும் வெங்கிட்டரா யன் என்கிறவனையும் சென்னப்பட்டணத்துக்கனுப்பி அவ ளொரு இடத்திலே காறுபாறும் காசு சுற்றுகிற சாடையிலே நடத்துகிறபடியினாலே, 3-வது சென்னப்பட்டணத்துக் கெச மானாயிருக்கிறவன் செவிடன். எழுதிக்கொடுத்தாலேயல்லா யல் தெரியாது. அப்பாலும், மகாராசன் பிள்ளையாயிருந்தவ னானபடியினாலே பணஞ்சம்பாதிக்கிறது வருத்தமென்று தெரி யாமல் கூடைகூடையாய்க் கொட்டிக்கொள்ளவேணு மென் கிற நினைப்பினாலே கையிலே காசில்லாதவனுமானபடியினாலே காசு கொடுக்கிறோமென்று சொன்னால் எந்தக்காரிய மெப்படிச் செய்யவேணுமோ அப்படி நடத்திப் போடுகிறது. விவேக மென்கிறது இருந்த ஊரிலே குடியிருந்தும் அறியாதவன். தொழில்மார்க்கமறியான். அமுல்பண்ணி அறியாதவன். இப் படி அவிவேகத்துக்கெல்லாம் இருப்பிடமாயிருக்கிறவனை அந்த இடத்துக்கு வைத்ததுமல்லாமல் அதற்கு அனுசாரியாய் அவன் பெண்டாட்டி காவிலே நாருறிக்கிறவன். பச்சைப் பாம்புருட்டி. காசென்றால் பின்னை ஒன்றையும் யோசனை பண்ணாதவன். அவன் ஒரு பெரிய தவம்பண்ணுகிறப்போலே ஆச்சுது. இதற்கு ஒரு துபாசி பொறுப்பா ஏற்படாமல் கடற் கரைக்கு உத்தியோகத்துக்குப் போன மராட்டிய பாப்பாரன் ராமச்சந்திரய்யன் ஒருத்தனும் சேர்ந்த துபாசித்தனம் தஞ்சா வூர் சுருட்டுப்பொறுக்கி நல்லதம்பியென்று காசு முகமறியாதவ னொருத்தன் கூடினால் பட்டணத்துக்குக் கேடு வரவேணுமா? இப்போது எழுதப்பட்ட காரியத்திலே ஒன்று மாத்திரம் போதும். மூன்று நாலு கூடினால் என்னமாய்ப் போகாது? விவேகிகளிதிலே அறிந்துகொள்ளுவார்கள். விஸ்தரித்து எழுதலாகாதே, சுருக்கி எழுதினேன்.

ஆனவிந்தச் சென்னப்பட்டணத்துக் காரியம் என்னை விசாரிக்கச்சொல்லித் துரை சொன்னாலும், வர்த்தகருக்கும்

எழுதிச் சென்னப்பட்டணத்திலே யிருக்கிறவர்களுக்கும் அதுக்குத்தக்கதாய்ப் போனால் காரியம் கவைக ளிவ்விடத்து உத்தாரமில்லாதபடிக்கு நடத்தவேண்டாமென்றும் திட்டம் பண்ணி, எழுதியனுப்புவிக்கத்தக்கதாய்ப் பண்ணுவித்து, சிறிது காரியங்கள் உமக்கு யுத்தமெப்படி நடத்தவேணு மென்று சொன்னால் துரையையுங் கேட்டு எழுதினால் அங்கே இருக்கிறவர்களும் இங்கே இருக்கிற பெண்டாட்டியும் தன் பிரயோசனத்தைக் குறித்து எழுதினதினாலேயும் பெண்டாட்டிப் பேச்சு மேலேயும் கேட்டு இது காரியம் நீ விசாரிக்கவேண்டாம். மதாம் சொல்லுகிற காரியத்தை அறிவோமென்று சொன்னபிரபு, தான சத்துவாகிலும் கேள்வியாக வேண்டிய விதமாய்க் கேள்வியாகி நடத்தவேண்டிய விதமாய் நடத்தாதேபோனபடியினாலே கும்பினீருக்கும் பிரயோசனமில்லாமற் போனபோதிலும் பிரபுவுக்காகிலும் பிரயோசனமுண்டென்று பார்த்தால் அவருக்கும் பிரயோசனமில்லாமல் உடைமைதார் தாங்களாய்க் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த வர்த்தகருக்கும் அவரவர் பணஞ்சேராமல் கெட்டுப் போனதுமல்லாமல பிரபுவுக் கபகீர்த்தி வந்தது. தானிருக்கிற பட்டணம் காரியம் விசிதமாய்க் கேள்விப்பட்டு நடக்கவேண்டிய காரியம்படிக்கு நடக்க அவகாசமில்லாமல் கிடக்கச்சே அசல் பட்டணம், மகத்தான பட்டணத்தினுடைய காரியம் நடக்கவேண்டிய ரீத்தியாம்படியே என்ன நடக்கப்போகுது? இதிலே விவேகிகளாயிருக்கிறவர்கள் பார்த்துக்கொள்ளலாம். நான் விஸ்தரித்து எழுதலாகாது என்கிறதாயெழுதவில்லை.

இற்றைநாள் சாயங்காலம் மாயேயிலிருந்து டபார் பனிரெண்டு நாளையிலே வந்து காரியமின்னதென்றறியவில்லை. சேத்துப்பேட்டிலே செஞ்சியிலே முன்னோடிப்போன பிராஞ்சுக்காரர், பின்னையும், மற்ற பல சாதி வெள்ளைக்காரருக்கு அங்கே யிருந்து க்னேஸென்கிறவன் (Ignace) கையிலே மாப்புக் காயிதமுமெழுதிக் கொடுத்து, இருபது ரூபாயுங் கொடுத்து, கும்பினீர் சேவகரையுங் கூட்டி அனுப்பிவைத்தேன். முசியே லெவிக்கும்படித்தான் ஒரு மாப்புக்கடிதம் எழுதிக்கொடுத்து ஒரு சேவகனையுமனுப்புவித்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் நானும் முசியே சேன்ழாக்தும் சவாரிபோய் முத்தியப்பிள்ளை தோட்டத்திலே வந்திறங்கினேம். அப்போது சாயங்காலமாகி அரைநாழிகை உண்டு. அப்போது ஈசானிய மூலையிலேயிருந்து நயிருதி மூலையாய் ஒரு நக்ஷத்திரம் ஒரு பனைமரமவ்வளவு நீளத்திலே யெரிந்து விழுந்தது. எதனுடைய வெளிச்சம் இப்படி யென்று சொல்லமாட்டேன். ஒரு பூரணச்சந்திரன் பிரகாசம்போலேயிருந்தது. என்னேடு கூட பார்த்த முசியே சேன்ழாக்துச் சொன்னது: இதனுடைய சின்னல் கலகமானுலும் நடந்து வெகு சனம் சாவார்கள். இல்லாமற்போனல் நவாப் அன்வர்திகானுகிலும் சாவானென்று சொன்னதற்கு நான் உங்களுக்குள்ளேயு மிந்தச் சாடை சொல்லுகிறது உண்டா என்று கேட்டதற்கு எங்களுக்குள்ளேதான் முன்னே சொல்லுகிறது பார்த்துச் சொன்னல் தப்புகிறதில்லையென்று சொன்னுன்.

நேற்றுச் சாயங்காலம் எட்டுமணிக்கு நடந்ததை இற்றைநாள் எழுதின தினசரியிலே எழுதினது:

13 உ வியாழக்கிழமை ராத்திரி எட்டுமணிக்கு ஆற்காட்டிலிருந்து நம்முடைய வக்கீல் சுப்பய்யன் காகிதமொன்றும் நபாபு அன்வர்திகானுடைய காகிதமொன்றும் வந்தது. அன்வர்திகான் காகிதம் முசியே தேலார்சு, கெற்சாம், கயிபூர்க் ( M. Delarche, M. de Karjean, M. Cayrefourg ) கப்பல் லபே பாதிரி மகம்மதாக்கல் முதலான பேர் மாரிபத்திலே நமக்கனுப்பின வெகுமதி வஸ்திரங்களை தினுசுகள் சாப்பிதாப்படிக்கு வந்து சேர்ந்ததென்றும், உமக்கு சீரொப்பாவும் குதிரையுமனுப்பினேமென்றும், அந்தச் சமாசாரமெல்லாம் வெள்ளைக்காரர் வந்து சொல்லத் தெரியவருமென்றும் எழுதியிருந்தது. இது முசியே தேலார்சு, கெர்ழாம் முதலான பேர் வந்தபோது வராமல் பிறகாலே வந்ததென்னவென்றுல் இந்தக் காகிதத்தை எழுதுகிறதற்குமுன் சீக்கு உத்தாரங் கொடுத்திருந்தார். அந்தக் காகிதம் வருகிறதற்குள்ளே தேவனும் பட்டணத்துச் சேதி வந்தபடியினுலே தங்களுக்கு என்ன நடக்குமோவென்று பயந்து ஓடிவந்துவிட்டபடியினுலேயும், காகிதம் பின்னே நின்றுபோய்விட்டபடியினுலேயும் அதைச் சுப்பையன் வாங்கி அனுப்பினுன். அப்பால், சுப்பையன் எழு

தின காகிதத்திலே ஆற்காட்டிலே முசியே தேலார்ஷ் முதலான வெள்ளைக்காரர் போனபிற்பாடு ஆற்காட்டிலே நடந்ததென்ன வென்றால்: தேவனாம்பட்டணத்தின்பேரிலே பிராஞ்சுக்காரர் சண்டைக்குப் போனபிற்பாடு இங்கிலீசுக்காரருடைய குண்டுக் குள்ளே யிருக்கிற கொத்தளங்கள் வாங்கின பிற்பாடு இங்கி லீசுக்காரர் மடிப்புபண்ணி வந்துவிழுந்து சண்டைபண்ணுப் போலே பிரஞ்சுக்காரர் போனவர்களிலே ஆயிரம்பேர் மட்டுக் கும் செத்துவிட்டாப்போலேயு மிதிலே காரைக்கால் இங்கிலி சுக் கப்பல்காரர் வாங்கிக்கொண்டு தேவனாம்பட்டணத்துக்கு வந்தாப்போலேயும், அதிலே காபிரிகளையும், இங்கிலீசுக்கார ரையும் ரசபுத்திரரையும் பதினாயிரம் பேரை இறக்கினாப்போ லேயும், அவர்களிறங்கினவுடனே சுந்த சேஷ பிராஞ்சுக்காரர் ஒடி புதுச்சேரி வந்து சேர்ந்தாப்போலேயும், இங்கிலீசுக்காரர் பக்கட் வந்து அரியாங்குப்பமும் வாங்கிக்கொண்டு புதுச்சேரி யைச் சுற்றிக்கொண்டார்கள் என்றும், கடற்கரை மார்க்க மாய் கப்பல்களைக் கொண்டுவந்து வைத்துப்பிடித்துச் சண்டை பண்ணுகிறாப்போலேயுமினிமேல் புதுச்சேரி நிற்கிறதில்லை யென் றாப்போலேயும் நபாபு அன்வர்திகான், உசேன் சாயபு முதலா னபேர் தன்னை யழைத்துக்கேட்டதாகவும், தான் பொய் யென்று சொன்னதாகவும், கோதும்பை பத்து பல்லா வாங்கி அனுப்பினேமென்று மிந்தச் சேதி முன்னமே வந்தால் அனுப்பு கிறதில்லையென்று மிது அனுப்பினபிற்பாடு கலக சேதி கேள் விப்பட்டதென்றும், பெருமுக்கலந்தவிடங்களிலேதானே யிருந் தச் சொல்லியும் நினைத்திருந்துகொண்டிருக்தார்கள். ஒட்டகச்சுவார் வந்தபிற்பாடு எல்லாருக்கும் மனது சமாதான மாச்சுதென்றும், அப்பால் உசேன் சாயபுக்கு வந்த காகிதம் வரப் பார்த்துக்கொண்டு சந்தோஷமாயிருந்தாரென் றும், அப்பால் மமூதல்லிகான் சாயபு நபாபு அன்வர்திகான் இங்கிலீசுக்காரருக்கு மற்றத்துப் போகவேண்டாமென்றும் சொன்னதாகவும், மமூதல்லிகான் காஞ்சிபுரத்துக்குப் போகிற தாயிருக்குமென்றும், நிசாமன்முலுக்கு கிருஷ்ணைக்கிப்புறம் வந்தாரென்றும், பின்னையும் நம்முடைய் மனிகை சமாசாரமுமா யெழுதியனுப்பினேன். இந்தச் சேதியை குவர்னதோருடனே சொல்லப்போகாது. நபாபு காகித சேதி மாத்திரம் சொல்லு வோமென்று போனதற்கு அந்தப்படிக்கு நபாபு கடுதாசி சேதி யைச் சொன்னேன். சொன்னமாத்திரத்திலே அந்தச் சமாசார

மெல்லாங் கேட்டு அதன்பேரிலே வக்கீல் மற்றபேர் உம்மு டைய குமஸ்தாக்கள் யாரும் வேறே சமாசாரங்கள் எழுதவில் லையா என்று கேட்டார்கள். அவர் கேட்டதின்பேரில் சும்மா இருக்கலாகாது என்று சொல்லி சுப்பய்யன் எழுதின காகிதச் சேதி மேலே யெழுதியிருக்கிறதை யிப்படியிப்படி அவ்விடத் திலே நடந்ததாக எழுதினுனென்று சொன்னேன். இந்தக் காகிதச் சேதியைக் கேட்டவுடனே அவருக்கு வந்த கோபம் ஒருமிதத்துக்குள்ளேயில்லை. அதன்மேலே நீயேனந்தச் சேதி சொல்லாதேபோனுய் என்று கேட்டார். முன்னேதானே ஒரு தரமிப்படிப்பட்ட விசேஷங்களுண்டாயிருந்தாலென்னுடனே சொல்லவேண்டாமென்று சொல்லியிருந்தீர்களே, ஆனபடியி னுலே இதை என்ன சொல்லுகிறுமென்று சும்மாயிருந்தே னென்று சொன்னேன். அதன்பேரிலே அவருக்கு அந்தக் கோபம் அடங்காமல் மமுதல்விகானுக்கு நானென்னத்துக்குத் தொப்பி அனுப்பிவைக்கவேணும்! இனிமேல் அனுப்பவேண்டா மென்று சொன்னுர்கள். காலமேதானே கடுதாசியும் எழுதி தொப்பியும் கொடுத்தனுப்பிவிட்டோமே, அது இந்நேரம் வெகுதூரம் போய்விடுமே, இனிமேலென்ன செய்கிறதென்று சொன்னேன். அப்படியல்ல, கதவு திறந்துவிடுகிறதற்குச் சீட் டுக்கொடுக்கிறு யிப்போதுதானே ஆளனுப்பிக்கொண்டுவரச் சொல்லென்றும், மமுதல்விகான் சண்டைக்கு வரவேணுமென் கிறவன் சமாதானத்துக்கு வருவானேன் என்றும், இப்பவும் உசேன் சாயபு கடுதாசியெழுதி நாங்கள் ஆற்காட்டுமேலே சண்டைக்கு வருகிறும் என்றெழுதியனுப்பென்றும், பின்னே யும் ரொம்பவும் கோபமாய்ச் சொல்லி உசேன் சாயபு மரு மகன் வந்திருக்கிறுனே அவனைக்கொண்டுபோய்ச் சாவடியிலே வைக்கச்சொல்லென்றும், உனக்குந் துலுக்கருக்கும் வெகு சிநேகமாய் அவர்கள் சீர்மையிலே உனக்குத் தொழில் துறை கள் விஸ்தாரமாகி நடக்கிறபடியினுலே அந்தத் தாக்ஷண்யத்தி னுலே நீ துணிந்து அவர்களைக் கொண்டுபோய்க் காவலிலே வைக்கச்சொல்லமாட்டாயென்றும், சாவடி கணக்கப்பிள்ளை களை அழைத்துக்கொண்டு வரச்சொல்லி அவர்களுக்கு உத்தா ரங்கொடுத்து உசேன் சாயபு மருமகனைக் காவலிலே வைக்கச் சொல்லுகிறேனென்று யிப்படியாக வெகுசாய்க் கோபித்துக் கொண்டு கடுதாசி யெழுதச்சொன்னுர்கள். அதன்பேரிலே நானிருந்துகொண்டு இப்போது எதைக்கண்டு காமிப்படியெல்லா

மெழுதுகிறது. நாமப்படி சண்டைக்கு வருகிறோமென்றெழு திஞல் நாம் பயந்தெழுதிஞேமென்று காணும். அப்படி யெழு தப்போகாது என்று சொன்னேன். ஆனல், பின்னேயெழுத வேண்டியதென்னவென்று கேட்டார்கள். அதற்கு நான் சொன்னது: நீங்கள் தேவனும்பட்டணத்து மேலே சண்டைக் குப் படையெடுத்துப்போயிருக்கிறீர்களே, அந்தப் படையை அழைப்பித்துக்கொண்டால் உங்களுக்குக்கொடுக்கிறோமென்று சொன்ன நாலு கிராமமும் உங்களுக்குக் கொடுத்துவிடுகிறோ மென்றும் சொன்னதாக முசியே தேலார்சு (M. Delarche) வந்து உங்களுடனே சொன்ஞரே அந்தச் சாடையைவைத்துக் கிரா மத்துச் சேதி ஊன்றி எழுதிஞல் காரியமாய்க் காணுதென்று சொன்னேன். அந்தமட்டிலே முந்தின கோபம் எல்லாம் தணிந்து சாந்தத்திலே வந்து இப்பவும் உசேன் சாயபுக்கு வந்து எழுதுகிற கடுதாசியிலே மழுதல்லிகானுக்குத் தொப்பி அனுப்புவித்தோம். அந்தத் தொப்பியை அவன் தலையிலே போட்டு அண்ணன் தம்பி யென்கிற மரியாதைப்படிக்குச் சினேகம் விருத்தியாய் நடக்கவும் தாங்கள் சொல்லியிருக்கிற நாலு கிராமத்துக்கும் உத்தரவு வாங்கி அனுப்பச் சொல்லயு மெழுதி, மழுதல்லிகானவர்களுக்கும் உபசாரமெழுதி, தொப்பி அனுப்புவித்தோமென்று மெழுதி, உசேன் சாயபு கடுதாசி யும் மழுதல்லிகான் கடுதாசியும் எழுதி முத்திரைபோட்டுச் சுப் பய்யனுக்குங் கடுதாசி யெழுதி அனுப்பிவிட்டோம். மகம்ம தாக்கலுக்குங்கூட எழுதியனுப்பிவிட்டோம். உசேன் சாயபுக் கெழுதின காகிதத்திலே பின்னே யொரு வயணங்கூட எழுதி ஞர்கள். மழுதல்லிகான் சர்க்கார் கையிலேயிருந்து தப்புந்தாறு மாய் சமாசாரங்கள் பிறக்குது. அப்படி பிறந்தாலும் மெத்த நல்லது, அதற்கு ஆசராயிருக்கிறோம். ஓடிந்தால் இனிமேல் பொருந்தாதென்று மிதுவும் உம்முடைய மாரிபத்திலே சமா தானம் நடந்தது இதுவும் உமக்குப் பொறுப்பாயிருக்கவேணு மிப்படி உசேன் சாயபுக்கெழுதின காகிதத்துடனே எழுதப் பட்டது.

ஆனல், பிரபு ராச்சியத்திலே நடக்கிற சமாசாரத்தின் கோபித்துக்கொண்டால் ஒருத்தராலே நிருவகிக்கப்போகாமல் எப்படியும் நடந்துபோகுது. ஆனல், மத்தியே திரிகிறவர் களுக்குமாத்திரம் பிரயாசம்.

1747 ஆ மார்ச்சு மீ 26 உ க்கு அக்ஷய ஸு பங்குனி மீ 16 உ ஆதிவாரம்.

இற்றைநாள் சாயங்காலம் ஏழு மணிக்குச் சென்னப்பட்டணத்திலேயிருந்து எட்டு ஒட்டகத்தின்மேலே பீரங்கிகளும் அதன் பிறகே நூறு பேர் மாயே சிப்பாய்களும் வந்தார்கள். சென்னப்பட்டணத்திலேயிருந்து சரக்கெடுத்தனுப்பின ஒட்டகம் இதிலே வழியிலே வருகிறபோது சதரங்கப்பட்டணத்துக்கு காதவழிக்கு அப்புறத்திலே ஆலத்தூரென்றிருக்குதாம் அவ்விடத்துக்கு நேராய் வரச்சே ஒரு ஒட்டகம் நடக்கமாட்டாமல் விழுந்துபோச்சுதென்கிற சேதி மூந்தாம்நாள் வந்து அதற்கு இவ்விடத்திலே யிருந்து பதினைந்து ரூபாய் அனுப்பி அவ்விடத்திலே மாடுகள் சத்தத்துக்கு அமத்தி அந்தச் சரக்கை அந்த மாடுகள் பேரிலே ஏற்றிக்கொண்டுவரச்சொல்லி அவ்விடத்திலேயிருக்கிற மனுஷருக்கும் எழுதியனுப்பினோம்.

சேஷாத்திரிப்பிள்ளை யவர்கள் மத்தியானம் இருபது நாழிகைக்கு நல்லவேளையென்று செங்கழுநீர்ப்பேட்டுக்கும் போய் அவ்விடத்திலேயிருந்து சென்னப்பட்டணம் போய் முத்தியப்பிள்ளையைப் பாப்பான் கலியாணப்பேச்சு உசாவி சாடையாய் நடத்தினால் நல்லது, இல்லையென்றால் புறம்பேயாகிலும் அவர்களைப் பார்த்து அழைத்துவருவதாக யோசனைபண்ணிப் பயணம் சாகிப்போனார். நானும் நயினப்பிள்ளைசாவடி மட்டுக்கும் போய் அனுப்பிவிட்டு வந்துவிட்டேன்.

இற்றைநாள் மத்தியானத்துக்குமேலே முசியே எலியாகுந்து வலதுகண் மூன்றும் வருஷம் சிலாக்குபோட்டது இளசானபடியினாலே நோவெடுத்துக் குணமில்லாமற் போனபடியினாலே இற்றைநாள் மத்தியானத்துக்குமேல் மூன்றுஞ் சாமத்துக்கு இடதுகண் ஆலத்தூர் பச்சைநாயக்க முதலியும், ஷெ தமையன் குமாரனும் சிலாக்குப்போட்டுக் கவளங்கட்டினார்கள். இது குணமென்று சொன்னார்கள்.

1747 ஆ மார்ச்சு மீ 27 உ க்கு அக்ஷய ஸு பங்குனி மீ 17-உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஸ்ரீ துரையவர்களுடனே வேட்டுவலத்துப் பாளையக்காரர் மனுஷர் முத்துவெங்கட்டரெட்டி

மனுஷர் சிவனுகரெட்டி, ஏகத்துக்கைந்நூறு பேர் சேவகரும் இதற்குக் குறிக்காரருமிருக்கிருர்களே இப்போதொரு பாளையக்காரன் உய்யால்வார் அண்டையிலேயிருந்து நூறுபேருடனே வந்தான். செலவானுல் ஒரு பணம் விழுக்காடு மாதம் 1 க்கு நாலு ரூபாய் கொடுக்கவேணும். இதற்குச் சேர்வைக்காரரிருக்கிருர்கள். குதிரைக்காரர், சுவார்கள் ஏழெட்டுபேரிருக்கிருர்கள். இதல்லாமல் ஆலத்தூர் பாளையக்காரனெருத்தன் இருநூறு பேருடனே இருக்கிருன் என்று சொன்னேன், நல்லது வந்தவர்களுக் கிந்தமட்டுக்கும் நித்தியம் ஒரு பணம் விழுக்காடு வாங்கிக்கொண்டாப்போலே ஆச்சுதே; இப்போது சனம் 1 க்கு ஒரு ரூபாய் விழுக்காடு கொடுத்தனுப்பச் சொல்லியும்; குதிரைச்சுவார்களுக்கும், குறிக்காரராய் வந்திருக்கிறவர்களுக்கும் சகலாத்து பேருக்கு 2 கெசம் விழுக்காடு கொடுத்தனுப்பிவிடென்று சொன்னுர். அந்தப்படிக்கு ஆலத்தூர் பாளையக்காரன் தவிர மற்ற வேட்டவலத்தாருக்கு, குளத்தூராருக்கு, முத்துவெங்கட்டரெட்டி தாலூக்கு, சிவனுகிரெட்டி தாலூக்கு உள்பட எல்லாருக்கும் ஒவ்வோரு ரூபா விழுக்காடு வந்த குறிக்காரருக்குச் சகலாத்தும் கொடுத்து ரவானு பண்ணி அனுப்பிவிட்டோம். அந்தக் கணக்கு அலாதியாய் எழுதியிருக்கிறது. இப்போது அனுப்புவித்துக்கொண்டு போன தாலூக்கு மனுஷர்களெல்லாம் நாளைய பொழுதுவிடியக்காலத்திலே போகிருமென்று சொன்னுர்கள். இதல்லாமல் இந்தச் சேவகர்களை அனுப்புவித்த எசமான்களுக்கு அவரவர்களுக்குத் தக்கதாய் ஒரு வெகுமானம் அனுப்பு என்று துரை உத்தாரம் கொடுத்தார்.

1747 ஆ மார்ச்சு மூ 28 உ க்கு அக்ஷய ஞு பங்குனி மீ 18 உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே அசரத்து மாபூசுகான் சாயபுக்குத் துரை காகிதம் உபசாரமாய் எழுதி அசரத்து நபாபு அன்வர்திகான் சாயபு அவர்களுக்கு வெகுமானம் அதியால் கட்டி, வெள்ளைக்காரரையும் பயணம்பண்ணி அனுப்புவித்தோம். அவர் வெகுமானமும் வாங்கிக்கொண்டு பதில் நமக்குச் சிரொப்பாவும் கொடுத்து வெகுமானம் அனுப்பினுர் என்றும் இந்தச் சேதியுமவர் எழுதி அனுப்பச் சொன்னுர். என் காகிதம் ஒல்

றெழுதி இற்றைநாள் சூரிய உதயத்திற்குள்ளே சேவகரை ந பண்ணித் திருச்சினப்பள்ளிக்கு அனுப்புவித்தேன்.

காரைக்காலுக்குத் தாசுமான்போனபோது நடுவழியிலே ஒரு சொலுதாது வெங்கிட்டாம்பேட்டைக் காட்டிலே நின்று போனன். அவனை அழைத்துவருகிறதற்கு ஒரு சேருவைக்கார முத்தையும் நாலு சேவகரையும் அனுப்பியிருந்தேன். அவன் அந்த வெள்ளைக்காரனை ஏணையிலே எடுப்பித்துக் கொண்டு இற்றைநாள் ஒன்பது மணிக்கு வந்து சேர்ந்தான். இந்த முத்து சேருவைக்காரன் வரச்சே ஒழுகரையண்டை ஆளை அழைத்துவரவில்லையென்று ஒழுகரைத் தலையாரியைக் கட்டுவித்துச் செருப்பாலே அடித்துவிட்டு வந்தான். அந்தச் சேதி நயினர் வந்து சொன்னர். அதற்கு அவனை அழைப்பித்து தாக்கீதுபண்ணிப் போகச்சொன்னேன்.

இற்றைநாள் கூடலூருலிருந்து வந்த சேதி என்னவென்ருல்: தேவனும்பட்டணம் கோட்டையிலேயிருந்த கட்டுகளிலே நூற்றியைம்பது கட்டுகள் ஒரு சுலுப்பிலே ஏற்றி அனுப்பி விட்டதாகவும், இன்னமொரு சுலுப்புக்கு இப்போது கட்டு ஏற்றுகிருர்களென்றும் சண்டை ஆனபிற்பாடு ஆயிரம் பேர் கர்நாடக ராணுவத்தையும் நூறு குதிரைச் சுவார்களையும் தள்ளிப்போட்டுவிட்டார்களென்றும், தேவனும்பட்டணத்துக் கோட்டைக்கு அந்தரத்தை விஸ்தாரமாய்த்தான் கட்டுகிருர்களே அதுவுமல்லாமல் கெடிலங் கோட்டைக்குத் தென்னண்டை ஓரமாயப்புறம் அக்கினிமூலையாய்த் திரும்பியல்லோ முகத்துவாரத்திலே போய் விழுகிறது. அதைக் கோட்டையண்டை ஆற்றுக்கு நேர் கிழக்கே வெட்டி, கோட்டைக்கு நேர் கிழக்கே சேவைக்குச் சேவையாய் முகத்துவாரம் ஓடவும் இப்படி நடத்துகிருர்களென்றும், முன் வந்த சீர்மைக்கப்பலில் இறக்கின சகலாத்துக் கட்டு இருநூற்றியைம்பதும், பொன் கண்டை, பவழப்பெட்டி, ரசம், குங்கிலியமிதுகளெல்லாம்சென்னப்பட்டணத்திலிருந்து வந்திருக்கிற விங்குசெட்டி முதலான வார்த்தகரையும் தேவனும்பட்டணம் வர்த்தகரையும் எடுத்துக்கொள்ளச் சொல்லுகிருர்களென்றும், இதல்லாமல் விங்கு செட்டி ரூபா வராகன் கூடலூரிலே வெட்டிப்போட்டு விற்கிருனென்றும், சென்னப்பட்டணம் துபாசிகளும் வர்த்தகரிலே அநேகம் பேரும் வந்து நிறைந்திருக்கிருர்களென்றும் இவர்கள் தங்கள்

குஞ்சு குழந்தைகளை அங்கங்கே ஒரு டிக்கானு பார்த்துப் போட்டு ஆண்பிள்ளைகள் மாத்திரமிருக்கிறார்களென்றும், வந்த சண்டைக் கப்பலிலே எசமானாக இருக்கிற மேஸ்தர் கெரே பென் கமான்டோர் முன் மேஸ்தர் பெத்தேமென்னு மிருந்தவன் கீழே சொல்படி கேட்டுக்கொண்டிருக்கிறவனென் றும், இந்தக் கப்பலிலே ஆதியந்தமும் ஆயிரத்தைன்னூறு பேரும், முன்னூறு சொல்தாதுகளும், மற்றத் துலுக்கர்களாசிகளென் றும் இப்படி நாளுக்குநாள் கபுறுகள் வரும். இதல்லாமல் கொத்தளங்களைச் சுற்றிலும் ஓரமாகக் குண்டுதாழை இதுகளும், கோட்டையைச் சுற்றிலும் பொடுத்தீபிக்கரிடுகிறார்கள் என் றும் இப்படியெல்லாம் சேதி வரும். இதிலே ஒரு சட்டைக் காரிச்சி வந்தாளிவள் வந்தாளென்று என் பேரிலே போட்டியாய் இதுகளெல்லாம் ஒன்றுமில்லை யென்றும், தமிழ் ராணுவமே யில்லை என்றும், குண்டுதாழைக்கு வெளியே யிருக்கிற கொத் தளங்களிலே பீரங்கிகளில்லை யென்றும், நான் தப்பு கபுறு சொல்லுகிறேனென்றும், சீர்மைக் கப்பல் ஒன்று வந்ததே. அது நாட்டுக்கப்பலென்றும், அந்தச் சட்டைக்காரிச்சி சொல்லுகிறு ளென்றும் துரைக்குச் சொல்லுவித்தான். எது இனிச்சொல்லு போலே கோட்டையிலே கொண்டுபோய்க் கொடென்று சொல் லுகிற பிறக்குறுதியானபடியினாலே மெய்யென்று என்னை யழைத்து, கொத்தளங்களிலே பீரங்கி யில்லையாம், தமிழ் ராணுவமுமில்லையாம். ஒரு கப்பல் வந்ததே அந்தக் கப்பலிலே சென்னப்பட்டணத்திலே அகப்பட்டதே அதோடேகூட வந்த கப்பலிங்கே வந்து சேர்ந்ததென்றும் கபுறு சொன்னியே அல் லவாம். இதிலே அரிசி நெல் இருக்குதாம் என்று ஒரு சட்டைக் காரிச்சி, கூடலூரிலேயிருந்து வந்தவளாம்; மதாமண்டையிலே இதெல்லாம் சொன்னளாம். மதாம் என்னை அழைத்தனுப்பி என் முகத்துமுன்னே சொல்லுவித்தாள். உனக்கு வந்த கபுறு சொல்லுகிற... போம் நன்றாய் விசாரித்துவந்து சொல்லவில்லை யென்று சொன்னளதற்கு நான் சொன்னது; இவள் சொல்லு வது எனக்கோ நம்பிக்கையாய்க் காணவில்லை. ஆனாலுங்க ளுக்கு இனிமேல் வெளியாம் என்று சொல்லியிருந்தபடிக்கு இவர்கள் தளம் சண்டைக்குப் போனபோது கொத்தளங் களிலேயிறங்கி, கூலிகள் புறப்பட்டு மனுஷரை நாடவொட்டா

மல் பண்ணுகிறபோது அப்போது நான் சொன்னபேச்சு மெய்யாச்சுது. தமிழராணுவம் நாலாயிரம் மூவாயிரம் பேர் கும்பலாய்ப் புறப்பட்டபோது வெளியாச்சுது, கப்பல் பேச்சும் அப்படிதான். முசியே போற்னேவால் கூடலூருக்குப் போனபோது அவனெழுதின காகிதத்தில் பெரிதிலே வெளியாச்சுது. இது முன் நடந்த பிராதானபடியினாலே இப்போது சூசனையாய் எழுதுவித்தேன். இந்தத் துரை நாளிலேயும் பிரபலியத்திலேயும் உடனே கெட்டுப் போகிறதுமல்லாமல் பிரபுவுக்கு அபகீர்த்திகூட சம்பாத்தியமாச்சுது.

இற்றைநாள் ராத்திரி எட்டு மணிக்குத் தக்கர் சாயபு அண்டையிலே யிருந்துவந்த ஆனை நான்கும், ஒட்டகம் மூன்றும், இவ்விடத்திலே கும்பினியிலேயிருந்த ஒட்டகம் எட்டும் பயணம்பண்ணிச் சென்னப்பட்டணத்துக்குப்போய் வெள்ளி கொண்டுவரத்தக்கதாக அனுப்புவிக்கச் சொல்லித் துரையவர்கள் உத்தாரப்படிக்கு இருபது மாயே சிப்பாய்கள் கூடக் கூட்டி அனுப்புவித்தேன்.

1747 ஆ மார்ச்சு மூ 29 உக்கு அக்ஷய ஞு பங்குனி மூ 19 உ புதவாரம்.

இற்றைநாள் தேவனாம்பட்டணத்துக்குப் போய் வந்த கும்பினீர் சேவகன் வெங்கடபதி யென்கிறவன் வந்து சொன்னது: மேஸ்தர் பென் குவர்னதோருக்கு கமாண்டோர் மேஸ்தர் கெரெ பென்னுக்குக் காகிதம் கொண்டுபோய்க் கொடுத்ததற்கு அவர்கள் பதில் காகிதம் தங்கள் சேவகன் வசத்திலே கொடுத்தனுப்புகிறோமென்று தன்னைப் போகச்சொன்னதாகவும், தான் வந்துவிட்டதாகவும், தான் போகிறுப்போலே கோட்டைச்கு இப்புறத்திலேதானே சேவகர் வசம் பண்ணியிருந்ததாகவும், மறுபடி சேவகன் அழைத்து வந்து குண்டுக்கிப்புறம் விட்டுவிட்டதாகவும், மேஸ்தர் மாசு (M. Morse) தரங்கம்பாடியிலிருந்து வுத்தாண் வாரானென்று கபுறு இருக்கும் என்று சொன்னான். அவரை அழைத்துவரச் சிறிது ராணுவமும் பெரியமனுஷரும் போனதாகவும் சொன்னான். தேவனாம்பட்டணத்துக்குத் தலங்கம்பாடி நாகப்பட்டணத்திலேயிருந்து பதினொரு சலங்கிலே இங்கிலீசுக்காரிச்சிகளும் அவர்கள் குஞ்சு

குழந்தைகளும் தட்டுமுட்டுமாய் முந்தாளுள் வந்துசேர்ந்தார்கள் என்றும் இந்தமட்டுக்கும் கூடலூரை அபந்தரையாய்ப் போட்டுவைத்துக்கொண்டிருந்தார்களே யிப்போது அதைப் பீரங்கி மற்றதுகள் கொத்தளங்களின்பேரிலே ஏற்றிச் சொல்தாதுகள் மற்றப்பேரையும் வைத்து முஸ்திதுபண்ணி அந்த பலக்கவைத்து அதிலே இங்கிலீசுப் பெண்கள் மற்றப்பேரையெல்லாம் அதிலே வைக்கத்தக்கதாக எத்தனம் பண்ணி நடத்திகிறார்களென்றும் கபுறு வந்தது.

1747 ஆ மார்ச்சு மூ 30-உக்கு அக்ஷய ஸ்ரீ பங்குனி மீ 20 உ குருவாரம்

இற்றைநாள் சேத்துப்பட்டுக்குப் போன சொலுதாதும் கும்பினீர் சேவகன் பாபும் அங்கே சொலுதாதுகளைக் கணக்குப்பேசி, ஆறுபேர் சம்மதித்து வருகிறோமென்று எழுதியனுப்பின காகிதம் கொண்டுவந்து பாபு கொடுத்தான். அப்பாலந்த ஆறு பேருக்கும் மீராசாயபு கையிலே அறுபத்தைந்து ரூபாய் அதனம் சம்பளம் வாங்கியிருக்கிறோம், அந்த ரூபாயும் கொடுத்து மீராசாயபு பேருக்கு ஒரு காகிதமுமனுப்பினால் வருகிறோமென்று எழுதினார்கள். அந்தப்படிக்கு மீராசாயபுக்கு ஒரு காகிதமும், அந்த வெள்ளைக்காரரை அனுப்பச்சொல்லி உபசாரமாயெழுதி என் காகிதமும் ஒன்று எழுதி அறுபத்தைந்து ரூபாயும் பாபு என்கிற கும்பினீர் சேவகன் கையிலே கொடுத்து ஸ்ரீ குவர்னதோர் அவ்விடத்திலிருக்கிற சொல்தாதுகளுக்கு பெரியவனாயிருக்கிறவனுக்கு எழுதிக்கொடுத்த காகிதமும் பாபுவும் கொடுத்து சேத்துப்பெட்டு மட்டுக்கும் ஒரு சேவகனை கூடக்கூட்டி அனுப்புவித்தேன் நிசாமவர்கள் சாவனூர் பங்காபுரத்துக்கு வந்த பிற்பாடு கடப்பையான், கந்தனூரான், ஆதிவண்ணுயான் இந்த மூன்று சுபேதாருக்கும் போய்ச் சந்தித்து அவரவர் அனுப்புவித்துக்கொண்டு, மறுபடி அவரவர்கள் சாகைக்குப் போய்விட்டதாகவும், நாசற்சங்கு பயணப்பட்டு அபரங்காபாத்தாவுக்குப் பயணமனுப்புவித்துக் கொண்டு போனானென்றும், அப்பால் நபாபு ஆசபுசா (Asaf shah) அவர்கள் மைசூரின்பேரிலே போவார்களோ அல்லவென்று ஆற்காட்டின்பேரிலே வருவார்களோ தெரியாது என்று பெருமுக்கல் மியாசாயபு வக்கில் நிசாமல்முலுக்கு சூர்க்

காவிலிருந்து பெருமுக்கலுக்கு ஏசமானுக்கு எழுதி அனுப்பின தாக்கம் அவர் நமக்கு எழுதியனுப்புவித்தார். இந்தச் சேதி குவானதோருக்குச் சொன்னேன். ஆற்காட்டார் போகாமலி ருக்கிற தென்னவென்று கேட்டார். வயணமின்ன தென்று புரி யவில்லை. இனி நடக்கிற சேதிக்கு வருகிற காகிதம் அறிந்து சொல்லவேணுமென்று சொன்னேன்.

1747 ஆ மார்ச்சு மீ 31௳ க்கு அக்ஷய ஞு பங்குனி மீ 21௳ சுக்கிரவாரம்.

இற்றைநாள் சாயங்காலம் ஆற்காட்டிலே யிருந்து சுப்பய் யன் ஒரு காகிதம் எழுதினன். அந்தக் காகித வயணம் என்ன வென்றால்: இங்கிலீசுக்காரர் மமுதல்லிகானுக்குக் காகிதம் எழுதியனுப்பினதுபோலேயும், அதன்பேரிலே உசேன் தயா ருடனே இங்கிலீசுக்காரருக்குக் கப்பல் வந்ததென்று சொன் னதுபோலேயும், அதற்கு உசேன் (Hussain Tahir) இங்கி லீசுக்காரருக்குக் கப்பல் வந்தால் பிராஞ்சுக்காரருக்குக் கப்பல் வருமென்று சொன்னதுபோலேயும், மமுதல்லிகா னிப்போது சென்னப்பட்டணம், புதுச்சேரி, இங்கிலீசுக்காரருக்கு ஆகிப்போ மென்று சொன்னதுபோலேயும் ஒருக்காலும் ஆகாதென்று சொன்னதுபோலேயும் இப்படி உசேன்சாயபு மமுதல்லிகானும் ஒருத்தருக்கொருத்தர் விவாதமாய்ப் பேசிக்கொண்டிருந்தாப் போலேயும், அதன்பேரிலே அந்தரங்கத்திலே மமுதல்லிகான் நபாப் அன்வர்திகானவர்களுடனே தான் தேவனும்பட்டணத் தாருக்கு மற்றதாய்ப் போகிறேனென்று சொன்னதுபோலேயும் அதற்கு தம்முடையபேரிலே ஆணையிட்டுப் போகவேண்டாம் என்று சொன்னதுபோலேயும், அதன்பேரிலே வந்து [காஞ்சி புரத்திலே கைக்கோளர் கூட்டம் கூடின சண்டையின்பேரிலே பத்துப் பணம் விசேஷித்து வாங்கலாமென்று காஞ்சிபுரத் திக்குப் போகிறதாக இருக்கிறானென்றும்,] அதற்கு முன்னே மெத்த தமியாயிருந்தான். அத்துடனே அடங்கிப் போனான் என்றும் இப்படியாக எழுதி வந்தது. இதல்லாமல் உசேன் தயாருக்கு (Hussain Tahir) மனது சமாதானமில்லையென்றும் சென்னப்பட்டணத்தை விட்டுவிட்ட சம்மதிக்கு ஏழாயிரம் வராகன் தமக்குச் சொன்னது கொடுக்கவேணுமென்றும் கேட் டதற்குப் பதிலுக்கு வீடு கொடுக்கிறேனென்று சொன்னார்கள்

என்றும் படேசாயபு பெண்சாதியை அனுப்பாமல் தடை பண்ணியிருக்கிருர்களென்றுப்போலேயும், சற்று கோபமாய் இருக்கிருர்களென்றுப்போலேயும் சுப்பய்யன் எழுதியனுப்பினுன். இந்தச் சேதியை குவர்னதோருக்குச் சொன்னதற்கு உசேன்சாயபு குறை நம்மை என்ன செய்யும், ஆகட்டும் போவென்று சொன்னுர்.

1747 ஆ ஏப்ரல் மீ 3 உ க்கு அக்ஷய ஞு பங்குனி மீ 24 உ திங்கட்கிழமை.

இற்றைநாள் சாயங்காலம் இவ்விடத்திலேயிருந்து காடுது வெளைக்காரரும் இருபத்தைந்து குதிரையும், மாயே சிப்பாய்கள் பதினைந்து குதிரையும், இருநூறு பேர் மாயே சிப்பாய்களும், ஐம்பது பேர் தமிழரும் சேவகராகப் பட்டணம் புறப்பட்டுச் சென்னப்பட்டணத்திலே யிருந்து வெள்ளிப்பெட்டிடியை எடுத்துக்கொண்டுவர முன்னுலே இவ்விடத்திலே யிருந்துபோயிருக்கிற ஆனையும் ஒட்டகத்தின் பேரிலேயும் வெள்ளி எடுப்பித்துக்கொண்டு பயணம் புறப்படுகிற சேதிக்கு கபுறு வந்தவுடனே இவ்விடத்திலே யிருந்து இன்றைய தினம் பயணம் புறப்பட்ட குதிரைக்காரரும் சேவகரும் எதிர்கொண்டு போய் அழைத்துக்கொண்டுவரப் போனுர்கள்.

1747 ஆ ஏப்ரல் மீ 5 உ க்கு அக்ஷய ஞு பங்குனி மீ 26 உ புதன்கிழமை

இற்றைநாள் நடந்த அதிசய மென்னவென்ருல்: இப்போது நாலைந்து நாளைக்கு முன்னே பறங்கிப்பேட்டையிலிருந்து எழுதிவந்த சேதி என்னவென்ருல்: பிராஞ்சாவிலே யிருந்து ஒரு சுலுப்பு வந்ததாகவும், அந்தச் சுலுப்பை இங்கிலீசுக்காரர் துரத்திக்கொண்டு திரிகிறதாகவும், உற்ற கபுறு தெரியவில்லை யென்றும் சேதி வந்தது. அந்தச் சேதியை போய் அந்நேரமே துரையிடத்தில் சொன்னேன், அதற்கு துரையவர்களிருந்துகொண்டு ஒரு பிரிகதினுவது பிராஞ்சாவிலே இருந்து வருகிறதேது? அதை இங்கிலீசுக்கப்பல்காரர் துரத்துகிறதேது? அந்தப் பிரிகந்தேன் நம்முடையதேயானுல் அதனுடைய ஓட்டத்தை இங்கிலீசுக் கப்பல்காரர் பிடிக்கமாட்டார்கள். ஆகிலும் ஒருவேளை வந்தாலும் வரும், என்னமோ அறியவேணு

மென்று சொன்னார்கள். அன்றையச்சேதி அந்தமட்டிலேயிருக்கிறது. பிற்பாடு இன்றையதினம் கூனிமேட்டிலேயிருந்தும் மரக்காணத்துத் தபாலிலேயும் சேதி வந்ததென்னவென்றால்: பிரிகந்தேன் ஒன்று கரைநெருங்க ஓடிவருகிறது. அந்த பிரிகந்தேனை இங்கிலீசுக்கப்பல்காரர் துரத்திக்கொண்டு வருகிறார்களென்றும், அந்தச் சுலுப்பு பிராஞ்சுக்காரருடையதுபோல காண்கிறதென்றும், அந்தச் சுலுப்பு ஓடிவருகிறதைப் பார்த்தால் கரைதட்டிவிடுகிறாப்போலே காண்கிறதென்றும் முல்லா சாயபு எழுதியனுப்புவித்தான். அந்தச் சமாசாரம் இன்றைய தினம் மத்தியானம் மூன்று மணிக்கு வந்தது அந்தச்சணமே துரையைக் கண்டு இந்தச் சேதியைச் சொன்னேன். அதன் பேரிலே துரையவர்களிருந்துகொண்டு, கரைதட்டவருகிறதாகக்கண்டுதானால் நம்முடைய சுலுப்புதானாகவேணுமென்று சொன்னார்கள். அந்தமட்டிலே பின்னையும் சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்த பிற்பாடு நம்முடைய பாக்குக் கிடங்குக்கு வந்து நித்திரை போனேன். துரையவர்களும் வெளியே சுவாரி போனார்கள். பிற்பாடு ராத்திரி ஒன்பது மணிக்கு வந்த கபுறு என்னவென்றால்: அந்தப் பிரிகந்தேன், ஆச்சிக்காட்டுக்கப்புறம் (Achikkadu) மரக்காணத்துக்கு இப்புறத்திலே தட்டவைத்துப்போட்டு அந்தப் பிரிகந்தினிலே இருந்த வெள்ளைக்காரரும் மரினேரும் இறங்கி அதிலே கொண்டுவந்த கடுதாசிகளையெல்லாம் எடுத்துக்கொண்டு அதிலே வந்த மனுஷர் ராத்திரிக்கு எந்நேரமானாலும் காலாபேட்டு வந்து சேருவார்களென்றும் கபுறு வந்தது அந்தச் சேதியை அந்நேரமே போய் துரையவர்களுடனே சொன்னேன். அதன் பிறகு பின்னையும் சற்று நேரம் பேசிக்கொண்டிருந்து பத்துமணிக்குப் பாக்குக் கிடங்குக்கு வந்தபிறகு வளவுக்குப் போனேன். இதன் பிற்பாடு பத்தரை மணிக்கு அல்லது பதினொரு மணிக்கு அந்த சுலுப்பிலே வந்தவர்களெல்லாரும் காலாபேட்டுவந்து சேர்ந்தார்களென்கிற கபுறு வந்தது.

1747 ஆ ஏப்ரல் மீ 6 உ அக்ஷய ஷு பங்குனி மீ 27 உ குருவாரம்.

இற்றைநாள் காலமே நடந்த அதிசயமென்னவென்றால்: நேற்றையதினம் வந்து ஆச்சிக்காட்டுக்கடுத்தாப்போலே கரைதட்டவிட்ட சுலுப்பிலே வந்த மனுஷரும் கடுதாசிகளும் இற்றை

நாள் காலமே ஆறு மணிக்கு இவ்விடம் வந்துசேர்ந்தார்கள் அந்தப் பிரிகந்தேனிலே வந்ததென்னவென்ருல்: பின்னை ஒன்று மில்லையாம். இப்போது வந்த சீர்மைக் காகிதங்களும் வந்த மனுஷருக்குத் தீனி தட்டுமுட்டுகளும் இதிலே அடிப்பாரத் துக்கு கருங்கல்லும் இதுகள் மாத்திரம் அல்லாமல் பின்னை ஒன்றுமில்லையாம். அதிலே வந்த மனுஷர் சீர்மைக்க டுதாசிக ளெல்லாம் எடுத்துக்கொண்டு இப்புறப்பட்டு வந்து பிற்பாடு இங்கிலீசுக்காரர் கப்பலிலேயிருந்து இரண்டு லாங்கு பெட்டி வந்து அதிலேயிருந்த மனுஷர் போய்க் கரை தட்டிக்கிடக்கிற பிரிகந்தேன் பேரிலே ஏறிக்கொண்டிருக்கிருர்களென்ற சேதியாய்ச் சொன்ஞர்கள். ஆனுலிந்தப் பிரிகந்தேனிலே வந்த கடுதாசிகள் சேதி: இந்தப்பிரிகந்தேன் 1747 ஆண்டு ஜனவரி மீ 10 உ மசுக்கரை விட்டுப் புறப்பட்டது என்றும், சீர்மையிலே யிருந்து கும்பினியாருடைய ஐந்து கப்பலும், ராச்சாவினுடைய இரண்டு கப்பலும் ஆக ஏழு கப்பலும் மசுக்கரையிலே வந்து சேர்ந்திருக்குதென்றும், மசுக்கரையிலே துரைத்தனம்பண்ணி முசியே லபூர்தோனேக்குப் பதிலாக முசியே தவி தென்கிறவன் மசுக்கரைக்குத் துரைத்தனத்துக்கு வந்தானென்றும், முசியே லபூர்தோனேயை சீர்மைக்கு வரச்சொல்லி எழுதிவந்ததாக வும் இப்படியாகச் சொன்ஞர்கள்.

இதல்லாமல் குவர்னதோர் துரையவர்கள் முசியே துய்ப் ளேய்க்சு அவர்களுக்குச் சீர்மையிலிருந்து முன்னே முசியே தும் மாவுக்கு வந்ததே முத்திரை அந்தச் சட்டம் ஒரு முத்திரைக் குப்பேர் செமிகல் ஷெவாலியேர் முத்திரை வந்ததைப் பார்த்த வுடனே கோட்டையிலே காலமே எட்டு மணிக்கு இருபத் தொரு பீரங்கிப் போட்டார்கள். அந்நேரமேதானே நான் போய் இருபத்தைந்து மொகரி துரைவீட்டிலேதானே வாங்கி நசர்வைத்து முபார்க்கு பாதி சொல்லி பேட்டி பண்ணிக் கொண்டேன்.

இதல்லாமல் சீர்மையிலேயிருந்து வந்த கசேத்திலே எழுதி வந்த சமாசாரம் என்னவென்ருல்: பிரிசெர்ல்ரேன்னு தொங்கி ரியி (Gueen of Hungary's city has been taken by Prussia) னுடைய பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப்போய் அதைப் பிடித்துக்கொண்டு அதிலே 16000 பேர் இங்கிலீசு, ஒலாந்தால்

ர்ாணுவமும், தொங்கிரி மனுஷரும் இருபத்துமூன்று பேர் செனெருல்களையும் பிடித்துக் காவல் பண்ணிஞர்களென்றும் எழுதிவந்தது. பின்னையும் ..,.......

இன்றையதினம் நாம் சர்க்கரை வழங்கிப் பாக்குக் கிடங்கினண்டையிலே தெருவிளக்கு வைத்து, தோரணம் வாழைகள் கட்டிச் சகல சம்பிரமத்துடனே பண்டிகைகொண்டாடிஞேம். நாளையதினம் பட்டணங்களிலே தோரணங்கள் கட்டிப் பட்டணமெல்லாம் அவரவர் வீட்டிலே வீதியெல்லாம் விளக்கு வைத்து அலங்கிருதம் பண்ணிவைக்கச்சொல்லி நயினுருடனே சொல்லி ஊரெல்லாம் சொல்லுவித்தோம்.

ஸ்ரீ துரையவர்களுக்கு முத்திரை வந்த சந்தோஷத்திலே வெற்றிலையை எப்போதும்போலே உயர்த்திவிற்கத் தக்கதாக உத்தாரம் கொடுக்கவேணுமென்று கேட்டேன். அந்தப்படிக்குப் பட்டணத்திலுள்ள ஜனங்களுக்கெல்லாம் சந்தோஷமாகும்படியாய் வாசுதேவ பண்டிதனை அழைத்து எப்போதும் போலே அந்தப்படிக்குக் காசுக்கு ஒன்பது வெற்றிலை விழுக்காடு விற்கச்சொல்லி உத்தாரங் கட்டளையிட்டார்கள். ஆச்சிக்காட்டுக்கப்புறம் மரக்காணத்துக்கிப்புறம் தட்ட வைத்துவிட்டு வந்த சுலுப்பை இங்கிலீசுக் கப்பல்காரர் வந்து நத்தார் வைத்திழுத்து மிதக்கப்பண்ணி ஓட்டையெல்லாம் அடைத்து இழுத்துக்கொண்டு தேவனும்பட்டணத்துக்குக் கொண்டு போனுர்கள்.

இற்றைநாள் நடந்த சேதி: சப்பித்தரலிகான்சாயபு குமாரனை வந்தவாசியிலே பள்ளிக்கூடத்திலே வைக்கப்போகிறுர்களென்கிற சேதி வந்தபடியினுலே இவ்விடத்திலேயிருந்து ஸ்ரீ துரையவர்கள் அனுப்பின வெகுமானம் :—

தினுசு வயணம் :

| | |
|---|---|
| தெமி பென் சிகப்பு சகலாத்துச் சிப்பம் ... ... ... | 8 |
| வயணம் சிகப்பு சிப்பம் 4, பச்சை சிப்பம் 4-க்கு வராகன் | 160 |
| எத்தோபுதோர் கெஜம் 10-க்கு கெஜம் வராகன் 18 ஆக .. | 180 |
| சிகப்பு முகமல் கெஜம் 20—கெசம்..........வராகன் — | 80 |
| பொன்கலாம் மார்க்கு—2-க்கு ..................ஷ — | 28 |

வெள்ளிக்கலாம் மார்க்கு—1 க்கு ..........வராகன்—12
ஆத்துங்கோரி ஆகுதே செபோரே லுக்குப் பதிலாக
கல்கண்டு பவுண்டு ராத்தல் 1 க்கு ......ஷெ — 2
பெரிய கண்ணாடி———————1 க்கு..........ஷெ —10
ஆக தினுசுகள் கூடின———வராகன்.......—472

இந்தப்படி வெகுமானமுங் கட்டி, சின்னப்பையனுக்கு ஏறிக்கொண்டுபோகக் குதிரை ஒன்று கொடுத்து, பத்து பேர் சேவகரையும் கூடக்கூட்டி, சப்பித்தரல்லிகான் பெண்சாதிக்குக் காகிதம் 1—ம், மமுதல்லிகானுக்குக் காகிதம் 1—ம், சப்பித்தரல்லிகான் மைத்துனனுக்குக் காகிதம் 1—ம், அல்லி நக்கிம் சாயபுக்குக் காகிதம் 1-ம் இந்தப்படியாக அவரவருக்குக் காகிதம் எழுதிக்கொடுத்து, சின்னப்பையனை பயணம்பண்ணி அனுப்புவித்தோம்.

இற்றைநாள் காலமே ஐந்து மணிக்கு முசியே நூத்ரு (M. du Noutre) என்கிறவனைப் பறங்கிப்பேட்டைக்கு அனுப்பினார்கள். அவன் பயணமாகிப் போகிறபோது இவ்விடத்திலேயிருந்து இருபதுசேவகரை கூடக்கூட்டி உளுந்தூர்மேலே புறப்பட்டுப் பாளையங்கோட்டை சிதம்பரத்துமேலே வந்து பறங்கிப்பேட்டைக்குப் போகச்சொல்லி, வழிமார்க்கமும் எழுதிக்கொடுத்து காலமே ஐந்து மணிக்குப் பயணம்பண்ணி அனுப்புவித்தோம்.

1747 ஆ ஏப்பல் மீ 7 உ க்கு அக்ஷய ஞு பங்குனி மீ 26 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: ஸ்ரீ துரையவர்கள் முசியே துப்ப்ளேய்க்கு அவர்களுக்குச்சீர்மையிலேயிருந்து வந்த முத்திரை செமிகல் ஷெவாலியேர் என்கிற முத்திரை வந்தபடியினாலே அந்த முத்திரையை அவருக்குத் தரிக்கிறதற்கு இவ்விடத்திலேயிப்படிப்பட்ட முத்திரை தரித்திருக்கிறபேர் ஆருகிலுமிருந்தால் அவர்களிந்த முத்திரையை கையிலேவாங்கி வைத்துக்கொண்டு கோவிலிலே போய் பூசைக்கேட்டான். உடனே இவரை முட்டிக்காலிலே யிருக்கச் சொல்லி, கத்தியை உருவி, கத்தியினாலே முதுகிலே மூன்றுதரம் அடித்து அதன்

யிருந்தது. அதன்பேரிலே மகாநாட்டார் யாரார் என்னென்ன நன்றீர்வைத்துப் பேட்டிபண்ணிக்கொண்டார்களென்றால், அதற்கு வயணம் எழுதுகிறேன். சந்தித்தபேர் வயணம்: தானியப்பமுதலி காலமேவந்து பதினைந்து மோகரி கொண்டுவந்து ஒரு கடுதாசியிலே சுருட்டி ஸ்ரீ துரையவர்கள் கையிலே கொடுத்துப் பனைமரம் சாய்ந்தாப்போலே இறங்கி இரண்டு காலையும் பிடித்துக்கொண்டு ரொம்பவும் உபசாரமாய்ச்சொன்னான். அதற்குத் துரையவர்களும் நல்லது, எழுந்திரு எழுந்திரு என்று சொன்னார்கள். அந்தமட்டிலே எழுந்திருந்து இப்புறத்திலே வந்துவிட்டான்.






| | | | |
|---|---|---|---|
| கும்பினீர் வர்த்தகர் மோகரி | 0 | 11 | 0 |
| சலது வேங்கடாசல செட்டியார் | 0 | 3 | 0 |
| சேஷாசல செட்டி | 0 | 3 | 0 |
| புடவைக் கடைக்காரர் | 0 | 5 | 0 |
| பவழக்காரர் மோகரி | 0 | 1 | 0 |
| சேட்டர், சேணியர் மோகரி | 0 | 1 | 0 |
| முத்தியாலுப்பேட்டையார் | 0 | 1 | 0 |
| கைக்கோளர் மோகரி | 0 | 1 | 0 |
| குயவர் மோகரி | 0 | 1 | 0 |
| தச்சர், கருமார், பாஞ்சாலத்தார் | 0 | 2 | 0 |
| சாராயக் கிடங்குகாரர் | 0 | 3 | 0 |
| குண்டூர் ரவணப்ப செட்டி | 0 | 5 | 0 |
| அரியாங்குப்பத்தார் மோகரி | 0 | 3 | 0 |
| கோமுட்டிகள் மோகரி | 0 | 1 | 0 |
| வெள்ளாமூர் மோகரி | 0 | 3 | 0 |
| டங்காசாலையார் மோகரி | 0 | 9 | 0 |
| மளிகைக்காரர் | 0 | 5 | 0 |
| நயினார் மோகரி | 0 | 3 | 0 |
| குண்டு கிராமத்தார் மோகரி | 0 | 3 | 0 |
| வாணியர் மோகரி | 0 | 1 | 0 |
| உழவர்கரையார் மோகரி | 0 | 9 | 0 |
| சாணார் மோகரி | 0 | 3 | 0 |
| எழுத்துக்காரர் மோகரி | 0 | 1 | 0 |
| கெட்டினைக்காரர் மோகரி | 0 | 1 | 0 |
| வண்ணார் மோகரி | 0 | 5 | 0 |

| | |
|---|---|
| புகையிலைக்கிடங்குக்காரர் மோகரி | 0 5 0 |
| காசுக்காரர் மோகரி | 0 4 0 |
| செட்டிகள் நாட்டாண்மைக்காரன் | 0 1 0 |
| நீலக்காரர் மோகரி | 0 2 0 |
| ஆக செலவு மோகரி | 0 96 0 |

இற்றைநாள் காலமே அரும்பாத்தப்பிள்ளை, விநயகப் பிள்ளை இவர்களிரண்டுபேரும் நூறு வராகன் கொண்டுபோய் துரையவர்கள் கையிலே கொடுத்துப் பேட்டிபண்ணிக் கொண்டுபோனார்கள்.

இற்றைநாள் செமிகல் ஷெவாலியேர் முத்திரை துரை அவர்களுக்கு வந்தபடியினாலேயும் இன்றையதினம் அந்த முத் திரிகையைத் தரித்துக்கொண்டபடியினாலேயும் மத்தியானம் பனிரண்டு மணிக்குத் தீனி தின்னும்போது தரும்பேத்துகள், வீணை வாத்தியங்கள் முழுங்கத்தக்கதாகத் தீனி தின்னவுடனே ஒருதரம் 21 பீரங்கியும் தீர்த்து, மேசை போட்டவுடனே ஒரு தரம் 21 பீரங்கியும், எழுந்திருக்கச்சே ஒருதரம் 21 பீரங்கியும் போட்டார்கள். சாயங்காலம் நம்முடைய பாக்குக்கிடங்குக்கு எதிரில் தேர்விளக்கும் பண்ணி, விளக்கும் வைத்து, வாழைகள் தோரணங்கள் கட்டி நாமும் பண்டிகை கொண்டாடினோம்.

இற்றைநாள் காலமே ஐந்தரை மணிக்கு ஒருதரம் மூன்று தரம் துப்பாக்கிச்சுட்டு, மூன்றுதரம் 21, 21, 21 பீரங்கிச் சுட்டார்கள்.

இற்றைநாள்......மணிக்குத் துரையவர்களண்டைக்குப் போய் நான் பேசிக்கொண்டிருக்கச்சே, துரையிருந்துகொண்டு முசியே தேலார்சுக்குக் கடுதாசி காஞ்சீபுரத்திற்குச் சீக்கிரமாக ரவானாபண்ணி அனுப்பிவிடவில்லையாயென்று கேட்டார்கள். அனுப்பிவிடுகிறேனென்று சொன்னேன். இப்படி பேசிக் கொண்டிருக்கச்சே, கப்பிசுகோயில் பாதிரியார் ஒருத்தர் பேர் இப்பொலீத் (Père Hyppolite) என்கிறவர் வந்தார். அவர் துரையண்டையிலே வந்து பேசிக்கொண்டிருந்தவர் என்னைப் பார்த்து, ரங்கப்பன் பெரிய வஞ்சனைபண்ணினானென்று சொன்னார். அதற்குத் துரையிருந்துகொண்டு அது என்ன

வென்று கேட்டார். அதன்பேரிலே பாதிரியாரிருந்துகொண்டு ரங்கப்பன் சர்க்கரை வழங்கினும். சர்க்கரை வழங்கினவன் பட்டணத்திலே உள்ள தமிழர் வீடு, வெள்ளைக்காரர் தெருக்களிலேயும் சர்க்கரை வழங்கினவன் கிரிஸ்துவர்கள் வீடுகளுக்கு மாத்திரம் சர்க்கரை வழங்காமல் அவர்களைத் தள்ளி நடத்தினுனென்று சொன்னுர். அவரிப்படி சொன்னமாத்திரத்திலே துரையவர்கள் உதட்டைப் பிதுக்கி, அவர் நோக்கத்தை அறிந்து, பாதிரியார் திருப்பிக்கொண்டு அவனுடைமையை அவனுக்குச் சம்மதியான பேருக்குச் செலவுபண்ணப் போகிறுன். நம்முடையவர்கள் மனம் பொறுமையினுலே இப்படியெல்லாம் வந்து சொன்னுர்களென்று சொன்னுர்கள்.

அதன்பேரிலே முசியே மத்தேயு இருந்துகொண்டு ரங்கப்பன் சர்க்கரை வழங்கினது பட்டணமெல்லாம் எடுத்துக்கொண்டு போகிறுப்போலே யிருக்கிறது என்று சொன்னுர்கள். தலையை உடைக்கிறுப்போலே மேளம் அடித்துக்கொண்டு சர்க்கரை வழங்கிக்கொண்டு போனுர்கள். எங்கள் வீட்டு வெள்ளாட்டி பார்க்கப்போனுள். அவளுக்கு ஒரு கை சர்க்கரை வாரிப் போட்டார்களென்று சொன்னுர். அதன்பேரிலே எல்லோரும் நகைத்துக்கொண்டிருந்தார்கள்.

*1747 ஆ ஏப்ரல் மீ 8உ க்கு அக்ஷய ஹு பங்குனி மீ 29உ பானுவாரம்.*

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றுல்: துரையவர்கள் வளவிலே கின்னரி வாத்தியம் பண்ணுகிற வெள்ளைக்காரன் ஒருவன், துப்பாக்கியிலே இரண்டு குண்டு போட்டுக் கெட்டித்துத் தன்னுடைய கையினுலேதானே சுட்டுக்கொண்டு, சாயங்காலம் நாலு மணிக்குச் செத்துப்போனுன். அவன் என்னத்தினுலே செத்துப்போனுனென்றுல், முன்னுலே மாசி மீ 16உ, 19உ மாபூசுகான் வந்து சமாதானம் பண்ணிக்கொண்டு போன சந்தடியிலே சின்ன மீராவுடைய தொப்பியை இந்தக் கின்னரி வெள்ளைக்காரன் திருடிக்கொண்டுபோய் இந்தமட்டுக்கும் ஒளித்து வைத்துக்கொண்டிருந்து அதை நேற்றையதினம் எடுத்து ஒருத்தனுக்கு விலை காண்பித்து அதைப்பின்னை ஒருத்தன் கையிலே கொடுத்து விற்றுக்கொண்டு வரச்சொல்லிக் கொடுத்தவிடத்திலே அவன் போய் விலை காண்பிக்கப்

போனவிடத்திலே சின்ன மீரா கண்டு அடையாளம் பிடித்து, உன் கையிலே இதை யார் கொடுத்தார் என்று கேட்க, அதைக் கொண்டு வந்து தன் கையிலேகொடுத்த கின்னரி வெள்ளைக் காரனைக் காண்பிக்க, அதன் பேரிலே இவனை அழைத்து. இந்த தொப்பி யுனக்கு யார் கொடுத்தார் என்று கேட்க, நான் அமானிக்காரர் கையிலே வாங்கினேன் என்று சொல்ல அதிலே அவர் போய் சின்ன துரையுடனே சொல்ல, சின்ன துரையிருந்து கொண்டு அமானிக்காரரெல்லாரையும் அழைப்பித்து, நீயவன் கையிலே வாங்கினுப்போலே சொல்லு என்று கேட்க, இவர்களெல்லாமல்ல, இன்னும் வேறேயிருக்கிறுர்கள். அவனை நாளைக்குக் காண்பிக்கிறேனென்று சொன்னுன். ஆனுல், இன்னும் நாலத்துரெண்டுபேர் அமானிக்காரர் வரவேண்டிய பேரையும் அழைத்துக்கொண்டு சாயங்காலத்துக்கு எல்லாரும் வாருகோள், விசாரிப்போமென்று சொன்னுர். அந்தமட்டிலே அவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள். அதன் பேரிலே யிந்தக் கின்னரி வெள்ளைக்காரன் யோசனைபண்ணி, தான் இந்த மட்டுக்கும் மனுஷனுய்ப் பிழைத்தவனுனபடியினுலேயும், துரைபண்டையிலே வரப்போக பிருக்கிறவனுனபடியினுலேயும், இனிமேல் என்ன மனம் தாக்ஷி வருமோ தெரியாதே. அதன் பிற்பாடு நாலுபேருக்குள்ளே சரீரத்தை வைத்துக் கொண்டு என்னமாய் மூகத்திலே விழிக்கப்போகிறேன் என்கிற மானத்தினுலே தீர்க்க யோசனைபண்ணி அவனுக்குப் பிரபல்யம். இந்த மூலியமாய்ச் செத்து இன்ன பாடு பாடுவாயென்று எழுதியிருந்தபடியினுலே இவனுக்கு இந்தப் புத்தி வந்தது. ஒரு சின்ன வேலையிலே பிராணனைப் போக்கிக்கொள்ளத்தக்கதாக வந்தது. இதைத் துரைகள் வந்து பார்த்து இவன் பலவந்தமாய் நேரஸ்தனுய்ச் செத்தவனுனபடியினுலே இவனை வண்டியிலே கட்டி, பட்டணத்திலே வீதிக்கு வீதி இழுத்தெறிந்துபோடச் சொல்லி உத்தாரம் கொடுத்தார்கள். இன்றையதினம் பொழுதுபோனபடியினுலே நாளை காலமே அந்தப்படிக்கு இழுத்தெறிந்து போடச்சொன்னுர்கள்.

1747 ஆடு ஏப்ரல் மீ 9 உ க்கு அக்ஷய ஹு பங்குனி மீ 30 உ

இற்றைநாள் மலையாளத்து ராசாவுக்கு எழுதின காகிதத்துக்கு நகல்......மேல் வக்கணை ஸ்ரீமான் மகா மண்டலேசுபிரா

மார்த்தாண்டராச கண்டிரவார்சதேசொறிறி மகாராசராச ஸ்ரீ உதயமங்கலம் வாபுகுற உதயமார்த்தாண்ட ராசன் அவர்களுக்கு

(The Possessor of happiness, the Lord of many lands, the sun among many Princes, the Lion among Kings the treasure house of Light, Maharaja Raja Sri Udaya Marthanda Raja.)

ஆனந்த ரங்கப்பிள்ளை சாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டு விண்ணப்பம். அக்ஷய ௵ பங்குனி மீ 30 உ வரைக்கும் தேவரீரவர்களுடைய கடாக்ஷத்தினாலே புதுச்சேரியிலே சுகமாயிருக்கிறேன். தேவரீருடைய சகல சாம்பிராச்சிய லக்ஷிமி விபவாதி செயங்களுக்கும் திருபம் தயவுபண்ணிக் கட்டளையிடவும். இப்பவும் தேவரீரவர்கள் இவ்விடத்திலே இருக்கப்பட்ட குவர்னதோர் சென்றால்... மகாராசா அவர்கள் பேருக்கு எழுதி அனுப்பி நகலும் பார்த்துக்கொண்டு, வித்துவான் பாட்டகர் முகவசனமும் கேள்விப்பட்டு, சகலமும் விசிதமாம்படி அறியலாச்சுது. அந்த வயணத்துக்கெல்லாம் மாயே மூப்பனுக்கு மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்கள் கையிலே கடுதாசி வாங்கி அனுப்புவித்திருக்கிறோம். அந்தச்சேதி தேவரீரவர்களுக்கு அறியப்பட்டிருக்குமென்றும், மற்றது மேல் நடக்கவேண்டிய காரியத்துக்கு வித்துவான் பாட்டகரை அனுப்புகிறபோது மாயே மூப்பனுக்கு நகத்தும் வாங்கிக்கொடுத்து வர்த்தமானமுஞ் சொல்லி வித்துவான் பாட்டகரை அனுப்புவிக்கிறோம். மற்ற சமாசாரங்களெல்லாம் சாமி வந்து சொல்லச்சே சித்தத்திற்குத் தெரியவருமென்றும், ஆகையால் அவ்விடத்திய சந்தோஷ அதிசயங்களுக்கு இவ்விடத்திலே ஆகவேண்டிய காரியங்களுக்குத் தயவுபண்ணி திருபம் அனுப்புவிக்கக் கட்டளையிடவேணும் விண்ணப்பம் என்றும் எழுதி முத்திரை போட்டு அனுப்பினோம். பிரதமை திதி, மூலயோகம், மூலகரணம் வந்தபடியினாலே வருஷமும் முதல் வருஷமானபடியினாலே இது நன்றாய் உலகத்துக்குச் சுபீக்ஷமாய் நடக்குமென்று சொல்லுகிறார்கள்.

1747 ஆ அவ்ரில் மீ 10 உ க்கு பிரபவ ௵ சித்திரை மீ 1உ திங்கட்கிழமை.

இற்றைநாள் இந்தப் பட்டணத்தில் நடந்த அதிசயமென்னவென்றால்: இங்கிலீசுக்காரர் கப்பல்கள் பங்குனி மீ

2, 3 ௨ வந்த கப்பல்கள் இந்தமட்டுக்கும் இந்தவூர் துறைக்கு ௹ மேலே கண்டு இரண்டு மூன்றும் இதற்கு வடக்கே சென்னப்பட்டணம் அத்த இதற்கு மத்தியிலே நான்கு மூன்று கப்பல்களும் இரண்டொரு சுலுப்புமிருந்துகொண்டு வடக்கே யிருந்து வருகிற வர்த்தகருடைய பட்டுகளையெல்லாம் வழி மறித்துப் பிடித்து இவ்விடத்துக்கு வரவொட்டாமல் தேவனும் பட்டணத்துக்குக் கொண்டுபோய்விட்டுக்கொண்டு அவ்விடத் திலே போட்டு இச்சைப்படிக்கு விற்றுக்கொள்ளச் சொல்லி யும், இந்தப்படியாகக் கடலின் பேரிலே முத்திரிகை போட்டுக் கொண்டிருந்தார்களே, அந்தக் கப்பல்களெல்லாம் இன்றைய தினம் தேவனும்பட்டணத்தைப் பார்க்க ஓடிப்போய் எல்லா கப்பலும் தேவனும்பட்டணம் வந்து சேர்ந்தன. இந்தத் துறைக்கு நேராய் வைத்துப் பிடித்துக் கிடக்கிறுன். இனிமேல் நடக்கிறதைப் பிற்பாடு எழுதுகிறேன். இந்த இருபத்தைந்து நாளைக்குள்ளாக இங்கிலீசுக்காரர் ஜலாது (Squadron) தேவ னும்பட்டணத்துக்கு வந்த பிற்பாடு ஒரு பங்களாவிலே (Bengal) யிருந்து ஓடிவந்து, தெலாந்துக்கொடிபோட்டது. ஒரு கப்பல் ஓடிவரச்சே இங்கிலீசுக்கப்பல்காரர் பிடித்துவந்து தேவ னும்பட்டணத்துத் துறையிலே அதிலேயிருக்கிற சரக்கை இறக் கிக்கொண்டு அதிலேயிருந்த ஐந்து பிராஞ்சுக்காரரையும் கோட்டையிலே காவல் வைத்தார்கள். அதிலே முசியே தீலார்சு தம்பி ஒருத்தன் அவன் நிமித்தியம் முசியே தீலார்சு, மமுதல்லி கானுக்குத் தேவனும்பட்டணம் குவர்னதோருக்குக் காகிதம் எழுதி விடுவிக்கவேணுமென்றும் மமுதல்லிகானுக்கு எழுதிக் கொண்டான். இந்தச் சேதி முன்னுலே எழுத மறந்தபடியி னுலே இன்றையதினம் குறிப்பிலே எழுதினேன்.

இற்றைநாள் சாயங்காலம் முசியே லந்றாசு சென்னப்பட் டணத்திலேயிருந்து வந்துசேர்ந்தான். ஆனலிந்த பிரபவ ௵ பிறந்து என் கஷ்டகாலம் போய் நல்லகாலம் பிறந்தது. வைப் பூர் சோசியன் எழுதினபடிக்கு இந்த ௵ வெகு அதிசயமாய் நடந்து ஆதாயமும் வந்து தினவிமோசினமாகவேணும்; இப்படி சுவாமி ரக்ஷிப்பார் என்று முழு மனதுடனே நம்பியிருக்கிறேன்.

1747 ௵ ஏப்ரல் ௴ 11 ௨க்கு பிரபவ ௵ சித்திரை ௴ 2 ௨ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் பின்னை வேறே அதிசயமில்லை. முசியே புரி மகன் நிமித்தியம் ஆரணியிலே கில்லேதாரன் சேக்கு மகம்மது

ஷரீபு சமுசாரம் ஆரணியிலே இருக்கிறவர்களை விட்டுவிட வேண்டாமென்றும், மகம்மதாக்கலுக்கு நபாபுக்குத் தெரியப் படச்சொல்லி ஆரணியில் கில்லேதாரனுக்குத் தாக்கீது அனுப் பச்சொல்லி, காகிதமும் வக்கீல் சுப்பய்யனுக்கு ஒரு காகித மும் இந்தப்படிக்கு எழுதி அனுப்புவித்தோம்.

இற்றைநாள் காரைக்காலிலே யிருந்து கந்தப்பன் என் பேருக்கு அனுப்பின காகிதத்துடனே மதாம் துய்ப்ளேய்க்சுக்கு மேஸ்தர் மாசு ( M. Morse ) தமிழ் காகிதம் ஒன்று அனுப்பினது கூட வந்தபடியினாலே இந்த இரண்டு காகிதமும் தபால்சேவ கன் கொண்டுவந்து கொடுத்தபடியினாலே எனக்கு வந்த காகி தத்திலே மேல் விலாசம் மகா-ா-ஸ்ரீ பிள்ளை அவர்கள் பார்த்ததற்குக் கந்தப்பன் அனுப்பின விண்ணப்பம் என்று எழுதியிருந்தபடியினாலே மதாம் துய்ப்ளேய்க்சுக்கு உடைய வினைப்பு நான் குவர்னதோரிடத்திலே பண்ணுகிற துபாசித் தனந்தான்பண்ணி லக்ஷந்தரம் சம்பாதிக்கவேணு மென்றும் சென்னப்பட்டணத்துச் சம்மதி தன் வழியிலே நடக்கப்பண்ணிக்கொண்டு வர்த்தகரை எல்லோரை யும் தான் அழைப்பிக்கிறேன் என்று பாப்பன பிள்ளை என்கிற திருடனையும், வெங்கட்டராமனென்கிற திருட் டுப்பாப்பானையும் அனுப்பிக்கொண்டு தனக்கு ஐயாயிரம் ஆறு யிரம் கொடுக்கவேணுமென்று இந்தப்படிக்குச் சென்னப்பட் டணமெல்லாம் எக்கோலம் பண்ணிக்கொண்டு திரிகிறதிலே ஒருத்தரும் வரமாட்டோமென்றச்சே திருமங்கலம் துரையப்ப செட்டி ஒருத்தன் வழிவசமாய் நாலாயிரம் வராகன் இவனுக் கும் துரைக்குப் பதினாயிரம் வராகன் கொடுக்கிறோமென்று பேசி கையெழுத்துப் போட்டுவிடச்சொல்லி யிந்தப்படிக்குப் போடப்போனவிடத்திலே வெல்லக்கட்டி அகப்பட்டாப்போலே யும், இவனுக்கு அது மூன்று லோகமும் கைவசப்பட்டாப்போ லேயும் உம்முடைய பொய் இவன்பேரிலே யாதொரு குற்றம் சம்பாதிக்கவேணும், இவனைத் தள்ளவேணுமென்று காத்துக் கொண்டு திரிகிறவன் இதெல்லாம் இவன் கறடகன், இவன் துரையுடனே எது சொல்லுகிறானோ அதை அம்பிடை கேட்கிறாள். இவன் நமக்கு வருகிற பிரயோசனத்தைக்கூட துரையைச் சேரப்பண்ணுகிறபடியினாலே துரை நம்முடைய

வழியிலே நடத்துகிறுனென்று என்பேரிலேயிருக்கிற கோபம் முடியாது. இப்படியிருக்கச்சே ஒரு மாதம் நாற்பது நாளைக்கு முன்பாக சென்னப்பட்டணத்துத் தபாலிலேயிருந்து தம்பி செட்டி காகிதம் ஒன்றும், மதாம் துய்ப்ளேய்க்ஸ் பேருக்குச் சாயங்காலமான எட்டு மணிக்கு வந்தது. அந்தக் காகிதத்தை எட்டுமணி யடித்துப்போச்சுதே சாப்பாட்டிலேயல்லவா யிருப்பார்கள். காலத்தாலே கொண்டுபோய்க் கொடுப்போமென்று மேசை கவயத்திலே வைத்துவிட்டு வீட்டுக்குப் போனேன். அப்போது துலுக்கர் வந்து கவரப்பட்டு சமாதான வேலையான படியினுலேயும் அலுவல் மிகுதியானபடியினுலேயும் வெகு ஞாபகமில்லாமல் மறந்துபோனுப்போலே யிருந்துவிட்டேன். அன்றையதினம் கூடாமற்போய் மறுநாளைக் காலத்தாலே நாராயணப்பிள்ளை நேற்றைக்குத் தாபாலிலே மதாம் பேருக்கு வந்த காகிதம் உங்கள் வசம் கொண்டுவந்து கொடுத்தேன் என்று சொன்னுன். அது இருக்குதாவென்று கேட்டான். அதற்கு மெய்தான், துலுக்கர் வந்திருக்கிற சந்தடியிலே மறந்து போனேன் என்று நாராயணப்பிள்ளைகூட இருக்கச்சேதானே எனக்கு வந்த காகிதத்தையும் நான் படிக்காமல்கூட வைத்து மறந்திருந்த நியாயத்தைத் திருஷ்டாந்திரமாய்சாதகத்துடனே காண்பித்துக் காகிதத்தைக் கொடுத்துவிட்டேன். இந்தச் சேதி மதாம் துய்ப்ளேய்க்ஸ் கேட்டு, இவன் எனக்கு வந்த காகிதத்தை வைத்திருந்ததற்கு இவன் கழுத்திலே கயிறு போடுவேனென்றும் இவன் பெண்டாட்டி பிள்ளைகள் அங்கலாய்க்கப் போகிறுர்கள் என்று சும்மா விட்டுவிட்டேனென்றும் துபாசி அப்பு, பலராம், நாராயணப்பிள்ளை, சேருவைக்காரருடனே பின்னையும் தப்புந்தாறுமாய் வாய்க்கொள்ளாத விசேஷமாய்ச் சொன்னுள். சொன்னதுமல்லாமல், என்னுடனே சொல்லச்சொல்லி அனுப்புவித்தாள். வந்தவள் என்னுடனே மலைறத்தாப்போலே அவள் சொன்னதற்குச் சற்றேறக்குறையச் சொன்னுள். அதற்கு நான் சொன்னது: முந்தாம்நாள் ராத்திரி வந்ததும் அப்போது கொடுத்தனுப்புகிற சமயமில்லாமலிருந்தது. மறு நாள் துலுக்கர் சந்தடி வந்ததினுலே எனக்கு வந்த காகிதங்கூட படிக்கிறதற்கில்லாமல் சும்மாக்கிடந்த நியாயமாயதைச் சொல்லிக் காண்பித்து அப்படி வஞ்சனையாய் வைத்தேனே அப்பால் அப்படியே நேரஸ்தனுக்குகிறேனென்றும் இதிலே எழுயிருக்கிற வயணமெனக்குத் தெரியாவிட்டாலோ அப்படிதான்

ஆக்கத் தக்கதாக வைத்தானென்று எண்ணவேணும். இல்லா விட்டால் நான் செய்திருக்கிற கொலை களவு இதனாலே மோசம் என்றல்லோ நான் பயந்து இந்தக் காகிதத்தை ஒளித்து வைக்க வேணும் நிஷ்காரணமாய் வைக்கக் காரியமென்னவென்றால் அதற்கு அடுத்த நியாயமாய்ச் சொல்லி அனுப்பிவிட்டேன். அப்படியெல்லாம் நடந்திருக்க, எனக்கு வந்திருக்கிற காகிதத்தி லிருந்து வந்த காகிதத்தை அம்மாள் அப்போதழைத்து, காகி தத்தை அவிழ்த்துப் படித்துப் பார்த்து முத்திரைப்போட்டு அனுப்பினாள். அந்தக் காகிதத்தைப் பார்த்தவுடனே சந்தேக மாய்க் கண்டு சேர்வைக்காரரை அழைப்பித்துக்கொண்டு கேட்டவிடத்திலே அவர்கள் நடந்த பூர்வோத்திரம் சொன்னார் கள். பின்னை ஒரு வழியிலேயும் உற்றகபுறு வந்தது. இதற்குச் சுவாமி என்ன நடத்துகிறாரோ நானறியேன். இத்தனை அதறக் குணம் ஒருத்தருக்கும் ஆகாது. ஆதலால் அப்போது உங்க ளுக்கு ஒரு காகிதம் காரைக்காலிலிருந்து வந்ததே அது கந்தப்ப னென்கிற சந்தேகமாயிருக்கிறதை அப்பால் காரைக்கால் உங்கள் குமஸ்தா கந்தப்பன் என்று ஒருத்தன் இருக்கிறானே அவனென்று சொன்ன பிற்பாடு சந்தேகம் தீர்ந்ததென்று சொன்னாள். அம்மாளவர்கள்கூட நீர்கூட சும்மாவாய் கலங் கம் தீர்த்துக்கொண்டார்கள். காகிதம் படித்துப் பார்த்த பின்வர் சந்தேகம் தீர்த்துக்கொண்டார்களென்றும் எண்ணினாப் போலே முகம் செத்தாப்போலே எங்களாலே வந்ததில்லையென் றும் பெரிய மனுஷர் ஒரு காரியம் செய்தால் அங்கீகரித்துக் கொள்வார்களென்றும் உம்மை ஒத்தபேருக்கு அசாத்தியம் என்றாப்போலே கழகழவென்று சொன்னாள். அதற்கு நான் சொன்னது: காகிதம் மறதியாய் முப்பது நாழிகையிருந்த துக்குக் கழுத்துக்குக் கயிறுபோடுகின்றாரென்றார்கள். அவர் கள்தானே காகிதம் படித்துப்பார்த்தால் அவர்களுக்கு நான் சொல்லவேண்டியதென்ன விருக்குது என்று சொல்லச்சே கேட்டுவிட்டு அப்பாலே நடந்துவிட்டாள்.

**1747-ஆ அப்ரில் மீ 14-உ ஸ்ரீ பிரபவ ஸு சித்திரை மீ 5-உ சுக்கிரவாரம்.**

ராசஸ்ரீ துரையவர்கள் எழுதிக்கொடுத்த வயணம்: சேவ கரை அங்கங்கே பங்கிட்டு அனுப்புகிற விபரம்; சகல சேவக

ரும் ுகல்மார் வழுதாவூர் வாசற்படியிலேயிருக்கிறது.... ராக் காலயாகி இப்போது பொழுது பூத்து ஆறு மணிக்குப் புறப் பட்டு வில்லியநல்லூர் வாசற்படியிலே போய்க் கடலோரமாக அழிசப்பாக்கம் மட்டுக்கும் போய்ச் சந்தடி காரியங்கள் விசா ரித்துக்கொண்டு காலமே ஊருவந்து சேருகிறது.

100 பேர் முத்திரை சாவடியிலே போயிருந்து ஊர்க்காக் கிறது, ஊர்ச் சந்தடிகாரியம் விசாரிக்கிறது.

50 பேர் பொழுது பூத்து ஆறு மணிக்குப் புறப்பட்டுச் சல் லூர்வாசற்படியாலே போய் கடலோரமாய்ப் புறப்பட்டு ஆனந்தரங்கப்பிள்ளையவர்கள் சாவடிமட்டுக்கும் போய்த் திரிந்து நடக்கிற சேதிகள் விசாரித்துக்கொண்டு காலமே ஊர் வந்து சேருகிறது.

50 பேர் வழுதாவூர் வாசற்படியாலே புறப்பட்டுக் குண்டு சாலைமட்டுக்கும் போய்க் கும்பினி கிராமத்திலே நடக்கிற கபுறு விசாரித்துக்கொண்டிருக்கிறதும், அரியாங்குப்பம் ஆறு துவக்கிப் பாக்கமுடையான்பட்டு மட்டுக்கும் திரிந்து காலமே ஊர்வந்து சேருகிறது.

50 பேர் அரியாங்குப்பத்துக்குப் போயிருந்துகொண்டு அரியாங்குப்பம் முதல் அழிசபாக்கம் மட்டுக்கும் திரிந்து அத னுடைய எல்லையைக் காத்துக்கொண்டிருக்கிறது. இந்தப் படிக்கு உத்தாரம் கொடுத்து எழுதிக்கொடுத்தார்கள்.

ஆக 300 பேர் சேவகரையும் இந்தப்படிக்குப் பிரித்து எழு திக்கொடுத்தார்கள்.

இந்தப்படிக்கு மலையப்பனை இன்றுமுதல் கஸ்துவரச் சொல்லி உத்தாரம் கொடுத்து அனுப்பினேன்.

இதல்லாமல் இன்றையதினம் வந்தவாசியிலே யிருந்து சப்பித்தரல்லிகான் பெண்சாதி அவர் குமாரனைப் பள்ளிக் கூடத்திலே வைக்கிற சேதிக்குமுன்னாலே இவ்விடத்திலே யிருந்து வெகுமானம் அனுப்பியிருந்ததற்காகப் பள்ளிக்கூடத் திலே வைத்த சந்தோஷ சேதிக்காக ஸ்ரீ துரையவர்கள் பேருக்குக் கடுதாசி யெழுதினாலும் தட்டிலே தித்திப்பும்

கொடுத்து அதற்குத் தக்க மனுஷரையும் அனுப்புவித்தார்கள். அந்த வயணத்துக்கு நம்முடைய பேருக்கும் ஒரு கடுதாசியும் எழுதிவந்தது. அதைப் பார்த்துக்கொண்டு பதில் காகிதம் ஸ்ரீ துரையவர்கள் பேர் வைத்து ஒரு காகிதமும் நம்முடைய பேர் வைத்து ஒரு காகிதமும் உபசாரமாயெழுதி இற்றைநாள் ராத்திரி அனுப்பிவிட்டோம்.

1746 ஆ ஏப்ரல் மீ 18உ-க்கு பிரபவ ஸூ சித்திரை மீ 9உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் சாயங்காலம் எட்டு மணிக்கு ராசஸ்ரீ துரையவர்களண்டைக்கு நான் போனவிடத்திலே துரையவர்கள் என்னை அழைத்துத் தலங்கம்பாடியிலே யிருந்து மணிய்லாவுக்குப் போயிருந்த சுலுப்பு சிந்தாத்திரியாய்ப் போய்ச்சேர்ந்து சரக்கும் நல்ல விலைக்கு விற்றுக்கொண்டு மறுபடியும் சிந்தாத்திரியாய் அந்த சுலுப்பு வந்தது. தலங்கம்பாடியிலே சேர்ந்ததென்கிற கபுறு எழுதி வந்தது. அந்தச் சந்தோஷக் கபுறு உனக்குச் சொல்லுகிறேன் என்று சொன்னார்கள். அதன் பேரிலே அந்தத் தபால்காரனை என்ன சேதி யென்று கேட்டவிடத்திலே காரைக்காலிலே பதினைந்து கப்பல் வந்திருக்குதென்றும் அந்தச் சேதி தபாலிலே முடியச்சொல்லி அனுப்பினார்கள் என்றும் சொன்னான். அந்தச் சேதியைப் போய்த் துரையவர்களுடனே இப்படியானால் காரைக்காலிலே பதினைந்து கப்பல் வந்திருக்குதென்று சேதி பிறக்குதென்று சொன்னேன். அதற்குத் துரையவர்கள் சொன்னதற்கு, ஆனால் ஏஷியமிருக்கிறது ஆனபடியினாலேதான் இப்படி பிறக்கிறது.

ஆனால், வரவேணுமென்று சொன்னார்கள். ஆனபடியினாலே காரைக்காலுக்குப் பதினைந்து கப்பல் வந்த சேதி போய் அவ்விடத்திலே யார் என்னசொன்னார்களோ, இந்தத் தபால்காரன் என்னமாய்க் கேட்டானோ தெரியாது.

## அத்தியாயம் XLVIII

1747 ஆ ஏப்ரல் மீ 22 உக்கு பிரபவ ஸூ சித்திரை மீ 13உ சனிக்கிழமை.

இற்றைநாள் நடந்த சுபாதிசயமென்னவென்றால்: நம்முடைய பல்லக்குப் போய் ராம என்கிறவன் மத்தியானம்



பதினொன் றரை மணிக்கு நல்ல வெய்யிலானபடியினாலே பல்லக் கண்டையிலேயிருந்தவன் அங்கேதானே படுத்துக்கொண்டு அசந்து நித்திரைபோனவிடத்திலே ஒரு சொற்பனங்கண்டு திடுக்கென்று விழித்துக்கொண்டு எழுந்திருந்துவந்து நான் இருக்கிற பாக்குக் கிடங்குக்கெதிரே திகைத்தாப்போலே நின்று சுற்றும் பார்த்துக்கொண்டு நிற்கிறதைக் கொண்டு எனாச்சியப்பனிருந்துகொண்டு, என்னடா பயித்தியம்பிடித்தது போல் நிற்கிறாயென்னவென்று கேட்டதற்கு அவன் சொன்ன வயணம்: நான் பல்லக்கண்டையிலே படுத்துக்கொண்டு நித்திரைவந்தது. இப்போதான் கண்ணை மூடினேன் இதற்குள்ளே இரண்டு பெண்கள் எவ்வர்ணமாய் மெத்தசிவப்பாயிருக்கிறார்கள். அவர்களுடைய அழகைக் கண்கொண்டு பார்க்கப்போகவில்லை. சர்வாபரண பூஷிதமாய் நவரத்தினமும் தரித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களிரண்டு பேரும் ஒரு சுடர் பெண்களாய்த் தலைமயிர் சடைபின்னிப்போட்டுக்கொண்டு, தங்கமயமாய்த் தகத்தகாயமாய் ஆபரணம் பூண்டுகொண்டு வந்தபடியினாலே எனக்கு பிரமித்துப்போய், அவர்கள் கட்டியிருக்கிறது இன்ன புடவையென்று எனக்குப் புரியவில்லை. அவர்கள் இரண்டுபேரும் மேற்கேயிருந்து வந்தார்கள். அவர்கள் பிறகே நூறு பேருக்குண்டு. கும்பல் அவர்களைச் சூழ்ந்துகொண்டு வந்தார்கள். அவர்கள் பிறகே ஒருத்தி ரெட்டிச்சிப்போலேயிருக்குது. அவள் பிறகாலே வந்தால் இத்தனை கூட்டத்தோடே முன்னே வந்த இரண்டு பெண்களும் சரேலென்று பாக்குக்கிடங்குக்குள்ளே நுழைந்து முன்னண்டையிலேயிருக்கிற கீழ்ப்பக்கம் திண்ணையின்பேரிலே பிள்ளையவர்கள் தலையணையின்பேரிலே சாய்ந்துகொண்டிருக்கச்சே இரண்டு பக்கத்திலும் வந்து இரண்டு பெண்களும் உட்கார்ந்தார்கள். அந்தப்படியே அவர்கள் பிறகே வந்த கும்பலெல்லாம் தெரு நிறைந்ததென்று தண்டுவந்திறங்கினாப்போலேயிருக்குது. அதற்குள்ளே திடுக்கென்று விழித்துக்கொண்டு தெருவிலே பார்த்தால் ஒன்றையும் காணோம். அதன்பேரிலே எழுந்திருந்து இப்போது வந்து உள்ளே நுழைந்தவர்களாரோ பார்ப்போமென்று வந்தேன். உள்ளே ஒருத்தரையும் காணோம். ஆனால் சொற்பனம் கண்டேனாங்காட்டுமென்றும் திகைத்தாப்போலே நின்று இங்கே ஆராகிலும் பெண்டுகள் வந்தார்களாவென்று இங்கேயிருக்கிற பேர்களைக் கேட்கப்போகிறேனென்று நிற்கி

றேன் என்று சொன்னாளும். அதைக்கேட்டுவந்து இரண்டு மணியடித்து நான் வளவுக்குப் போகவேணும் என்று பயணமா யிருக்கச்சே இந்தச் சேதியை எளைச்சியப்பன் கேட்டுவந்து என்னுடனே சொன்னான். இதனுடைய பலன் என்ன சுபம் நடக்குதோ அறியவும்வேணும்.

இதன்பிற்பாடு தேவனாம்பட்டணத்திலே யிருந்துவந்த சேதிகள்: தேவனாம்பட்டணத்திலே யிருக்கிற குவர்னதோர் மேஸ்தர் இன்து (M. Hind) சரீரம் கேவலம் சுவஸ்தம் தப்பி, சன்னிகண்டு, இப்போது சுவஸ்தமாயிருக்குதென்றும், மேஸ்தர் மாசு சென்னப்பட்டணத்துப் பழைய குவர்னதோராயிருந்தவருடைய பெண்சாதி தேவனாம்பட்டணத்துக்குச் சுலுப்பின் பேரிலே வந்தார்கள். பிரான்சுக்காரர் சண்டைபண்ணப்போன போது சின்னதுரை மேஸ்தர் குரூக் (M. Croke) முதலானவர்கள், பெண்கள் நாகப்பட்டணம் தலங்கம்பாடிக்குப் போயிருந்தவர்கள் எல்லாரும் அவரவர்களுடைய தட்டுமுட்டுடனே சலங்குகள்பேரிலே ஏறி தேவனாம்பட்டணத்துக்கு வந்து சேர்ந்தார்களென்றும் மேஸ்தர் மாசு (M. Morse) பெண்சாதி வந்தவுடனே கமாண்டோர் மேஸ்தர் கெரெமென், சிநேகிதம் பண்ணி அவன் வீட்டிலேதானே மூன்று நாளிருந்தாளென்றும், அதன்பேரிலே மேஸ்தர் தா என குவர்னதோர், கமாண்டோர் மேஸ்தர் கெரெ (M. Griffin) பெண்ணைச் சரீரம் சுவஸ்தமில்லையென்று பார்க்கவந்த விடத்திலே நீர், மதாம் மாசை நின் வீட்டிலேதானே வைத்துக்கொண்டிருக்கிறது நியாயமல்ல. ஊருக்குள்ளே வெள்ளைக்காரரிலே தமிழரிலே மெத்த அபகீர்த்தியாய்ப் பேசிக்கொள்ளுகிறார்கள். அவளைத் தொட்டுக் காரியமென்ன. இது உமக்கு மரியாதையல்லவென்று சொன்னதற்கு, கெரெ பெண் சொன்னது: சென்னப்பட்டணம் மேஸ்தர் மாசு காரியத்துடனே சேர்ந்து என்னுடனே கண்டு பேசுகிறதற்கு வந்தாளென்று மேஸ்தர் மாசை அழைப்பிக்கிறதற்கும் என்னைக் கண்டு பேச வந்தார்களென்றும் சொன்னதற்கு மேஸ்தர் மாசு கணக்கு உத்தரவாதம் பண்ணவேண்டியது.

சீர்மைக்குப் போய் திரேக்குதாரர்களுக்கே அல்லாமல் இவ்விடத்திலே அவன் கணக்கைக் கேட்க நியாயமில்லாமல் இருக்கச்சே, அவருடைய கணக்கு இவ்விடத்திலே வரவேண்

டியதென்னவென்று இவ்விடத்திலே விசாரிக்கிறதிலே காரிய மின்னதென்று சொன்னதற்கு, மணவார் (Man of war) கப்பல் கமாண்டோர் மேத்தர் பெத்தோம் (M. Peyton) தங்கள் பலனை வாங்கிக்கொண்டு போனபடியினுலேயும், கோட்டையைச் சுற்றிலும் வீடுகளிருந்தபடியினுலேயும் அதற்குமுன்னே கரையிலே இறங்கிச் சண்டை கொடார்கள். துலுக்கருடைய ராச்சியமானபடியினுலே என்று எண்ணியிருந்ததற்கு அவர்கள் கரையிலே இறங்கிச் சண்டைகொடுத்தபடியினுலேயும் கோட்டை, பிராஞ்சுக்காரர் கையிலேதோ ஒப்புவித்துப் போடத்தக்கதாக வந்ததுவேயல்லாமல் மாசை (M. Morse) தொட்டு ஒரு குற்றமுமில்லையென்று ஒரு செடுத்திபிக்சியோ மாவது நடந்தது மெய்யென்று தேவனும்பட்டண கோன்சேல்கூட ராசா கப்பல்காரர் கூடி, எல்லாரும் கூடி கையெழுத்துப் போட்டுக்கொடுக்கச் சொல்லிவந்து கேட்கிருர்களென்று மிதற்கு அவர் வருகிறதற்குத் தேவனும் பட்டணம் கோன்சேல் காகிதம் ஒன்று எழுதிக்கொடுத்தால் நாம் , ஒரு காகிதம் எழுதிக்கொடுக்கிருேமென்றும் இந்தப்படியாகச் சொன்னதற்கு அப்போது நல்லதென்று தேவனும்பட்டணம் கோன்சேல் காகிதம் ஒன்று எழுதிக் கொடுத்ததாகவும் அதன்பேரிலே கெரெ பெண் ஒரு காகிதம் எழுதிக்கொடுத்து இரண்டு காகிதமும் தலங்கம்பாடிக்கு மேஸ்தர் தாம் சண்டைக்கு அனுப்பினுர்களென்றும், அதன் பிற்பாடு மேஸ்தர் மாசு பெண்சாதியை மஞ்சகுப்பத்துத் தோட்டத்திலே வைத்ததாகவும் இப்படியாகச் சேதி வந்தது. இதுவுமல்லாமல் ஒரு கப்பல் பாய்மரம் முறிந்து வந்ததாகவும், இரண்டு கட்டு மரம் அஞ்சாம் தலைச்சேரியிலேயிருந்து வந்ததாகவும், அதன் பேரிலே இரண்டு பிராமணர்கள் வந்ததாகவும், அவர்கள் பொம்பாய் (Bombay) சேதிகூடக் கொண்டுவந்ததாகவும் இவர்களுக்குச் சிறிது கப்பலும் ராணுவமும் கொண்டுவருகிற தாகவும், அது வந்த பிற்பாடு புதுச்சேரியின்பேரிலே சென்னப் பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போனதாகவும், இங்கிலீசுக் கப்பல் நாலு கப்பல் எதிர்த்தாப்போலேயும், உடைந்து வந்த கப்பல்சேதி பிராஞ்சுக் கப்பல் வந்ததாகவும், அதை இங்கிலீசுக் கப்பல் எதிர்த்தாபோலேயும், இரண்டு முழுகினுப் போலேயும், ஒன்று ஓடிப்போன விடம் தெரியாதென்றுப் போலேயும், மற்ரெரு பாய்மரம் முறிந்து காயக்காரர்

கூட வந்ததாகவும், சீர்மையிலேயிருந்து வந்த ஒரு கப்பலுக்கு ஆயிரத்துநூறு கட்டு ஏற்றி வங்காளம் அனுப்புகிறதுபோலே யும், அதற்கு மற்றதாய் இரண்டு மனுவார் கப்பல்கள் கூடப் போகுதென்றுப்போலேயும், பின்னையும் இருக்கிற கட்டையை யும் ஏற்றி அனுப்புகிறார்களென்றுப்போலேயுமிப்படியும், இதுவுமல்லாமல், கோட்டைக்கு வடவண்டை வெகுதூரம் கோட்டை வளர்த்திக் கட்டுகிற சேதியும் கோட்டையிலே இருபத்தையாயிரம் பூவராகன் வெட்டுப் போட்டதாகவும், இன் னம் ஐம்பதினாயிரம் அறுபதினாயிரம் வராகன் மட்டுக்கும் வெட்டு விழுகுதென்றுப்போலேயும், லிங்குசெட்டி என்கிறவன் சென்னப்பட்டணத்திலே தங்கசாலையிலேயிருக்கிறவன் வந்த பிற்பாடு போட்டது. தான் வந்தபிற்பாடு இந்த வராகன் போட்டது. ஒன்றேமுக்கால் பணம் சாகுனிவைத்து, திருவா லூரிலே சிந்தாதிரிப்பேட்டையிலே முன் போட்ட சட்டத்தின் ரூபா போடுவிக்கிறான். இதுமுதலாகிய சேதியெல்லாம் நாள் தோறும் வருகிற சேதியையும் அப்போதைக்கப்போது குவர்ன தோருக்கு விஸ்தாரமாய்ச் சொன்னதைச் சூசனையாய்க் கண்டு எழுதினேன்.

ஆற்காட்டிலேயிருந்துவந்த சேதி என்னவென்றால்: அன் வர்திகானுக்கு எப்போதும்போலே மூன்று வருஷத்திற்குப் பாதியும், முன் பாக்கிப் பணம் சீக்கிரமத்துக்கு அனுப்பச் சொல்லியும், அதன்பேரிலே எல்லோரும் அந்தத் தீர் வைத்ததாகவும் நிசாம் கோல்கொண்டைக்குப் போகிறுரென் றும், சர்வணி அங்கே என்றும் மராட்டியருக்குச் சமாதான மாய்ப் போய்வந்த போசிநாயக்கனுக்கு அவன் தம்பியும் நூறு மோகராந் தீர்வைத்ததாகவும், ஒரு ஆனை குதிரைகூட, அவன் தம்பிகூடத் தீர்வைத்ததாகவும் நிசாம் பதிலுக்கு வெகுமானம் பண்ணி, சவுதாம் தீர்த்துக்கொடுத்து இனிமேல் கர்நாடகத் துக்குப் போகத் தேவையில்லை என்றும் தீர்த்துப்போட்டதாக வும் இப்படியாக எழுதிவந்தது.

1747 ஆ அவ்ரில் மீ 23 உக்கு பிரபவ ஸு சித்திரை மீ 14உ ஞாயிற்றுக்கிழமை.

இன்றையதினம் இதுவரைக்கும் சென்னப்பட்டணத்திலே நடக்கிற அநியாயத்தைக் காகிதம் முனையிலே எழுதி முடியாது. இதல்லாமல் அந்தப் பட்டணத்திலேயிருந்த வர்த்தகர் லக்ஷாதி

காரிகளாக அல்லாமல் மற்றப் பட்டணங்களைப்போலே ஒரு பட்டணத்திலே பத்து வீட்டுக்காரர் வர்த்தகர் பத்துப் பணம் விசேஷித்து உண்டானவர்களாம். மற்றவர்கள் தற்போசிகள். தாரித்திர குடித்தனமுறையாயிருந்த பட்டணமல்லவே. அப்படிப்பட்ட ப்ட்டணம் கலாபமாகி இவர்கள் வசமாய் வந்தது முதல் அதற்கு முன்காலம் கலாபத்துக்கு இருக்கப்போகாதென்றும், கலாபமிருந்தாப்போலேயும் வருது. சுற்றிக்கொண்டபடியினாலே அவனவன் ரொக்கமாயிருக்கிறதை மாத்திரம், சிறிது பேர்கள் மாத்திரம் கொண்டுப்போனார்களே அல்லாமல் மற்றப் பேரெல்லாம் வீட்டிலே புதைத்தவனும், அடுப்பங்கறையிலே புதைத்தவனும், குளத்துக்குப்போகிற விடத்திலே புதைத்தவனும், சாக்கடையிலே புதைத்தவனுமாய் இருந்தாப்போலேயும் இருந்துபோய்விட்டபடியினாலேயும் மறுபடி இங்கிலீசுக்காரருக்குத்தானே பட்டணம் ஆகுதென்றிருந்தபேரும் கோட்டையென்ன, மெதுக்கு கோட்டையா, எளிதிலே பிடிபடுமாவென்று நம்பிக்கையாய் வைத்துப்போட்டுப்போனவர்களும் இப்படி நானுவிதமாய் பணதிகளை வைத்துப் போட்டுபோனவர்கள் எல்லாரும் சமானமாய் சரக்குகள், வீட்டுத் தட்டுமுட்டுகள், தானியம் தவசம் கூடவைத்துப்போட்டுப் போனதெல்லாம் கொள்ளையிலே மாயே சிப்பாய்கள் சொல்தாதுகள் முதலாய் கடைசி கூலிவேலை செய்கிறவன் உள்பட அவனவனுக்குப் பத்துப்பணம் விசேஷித்து அகப்பட்டதேயல்லாமல் கூலிக்காரன் கூட நூறு வராகனுக்குக் குறைய அகப்பட்டு வந்தவனில்லை. கூலிக்காரனிப்படியானால் முசியே லபூர்தோனே முதலான சர்தார்கள், நோன்சேல்காரர், கணக்கர், மற்றுமுள்ள உத்தியோகஸ்தருக்கு என்ன அகப்படவேணுமோ இதன்பேரிலே யோசனைபண்ணிக் கொள்ளுங்கோள். மாயே சமேதாருக்கு மாத்திரம் இரண்டு லக்ஷம் வராகனுக்கு உண்டு. அவர்களுக்குக் கொள்ளை அகப்பட்டதென்றால் மற்றப்படி எவ்வளவு என்று எந்தத்தொகையைக் கண்டு எழுதலாம். குபேரன் பட்டணம் கொள்ளை போனால் (போனபோருக்கு அவனவன் அதிர்ஷ்டானுசாரமாய் அவனவன் அதிகார குணமாகப்பட்டது. அதுதான் சண்டை கொள்ளையியே அகப்பட்டபடியினாலே அதை விசாரிக்க நியாயமில்லை. அப்புறம் பட்டணமிவர்கள் சுவாசமான பிற்பாடுமேலே எழுதப்பட்டவர்கள், உத்தியோகஸ்தர், லக்ஷாதிகாரிகள் பிராஞ்சு

கொடி போட்டமட்டுக்கும் நாம் குடித்தனம் பண்ணுகிற பேர், உத்தியோகம் பண்ணுகிற பேர், பட்டணம் ஆர்வசமானாலும் அவன் கீழேயிருந்து குடித்தனம் பண்ணுவோமென்றிராமல் அவனவன் கஷ்டகாலமென்னப்பட்டது. பிராஞ்சுக்காரர் பலவந்தமாய்க் கிறிஸ்தாமாக்குவார்களென்றும் இங்கிலீசுக்காரரைப்போலே விபிடுதாது இல்லை. மனம் பொறுக்கிறவர்களல்ல. காதறுக்கிறதும் தூக்குகிறதுங் கண்டனை தெண்டனை ரொம்பவென்றுப்போலேயும் இவர்களுக்குப் பூத தயவில்லையென்றுப்போலேயும் மனம் சனுவுப்பட்டு விடுவிப்பில்லையென்றும் இங்கிலீசுக்காரருக்கு மறுபடியும் பட்டணம் ஆகும், அவர்கள் விட்டுப்போகிறதில்லையென்றும், அப்போது அவர்களண்டையிலே போய் நிற்கிறதெப்படி? அவரவர் சாப்போனபடிக்கெல்லாம் யோசனை பண்ணிக்கொண்டு வராமல் நின்றுபோனபடியினாலே அதைத் துரைத்தனம் பண்ணுகிற மூசே துய்ப்ளேய்க்ஸ் குவர்னதோர் அவர்கள் அதற்கொத்த பேரை வைத்து அந்தத் தட்டுமுட்டுச் சரக்குகள் முதலாகிய தினுசுகளெல்லாம் எடுத்தெழுதி பத்திரப்படுத்தாமல் அதை அங்கேயிருக்கிறவர்களுக்கு எழுதுகிறதைக் கண்டிப்பாயெழுதாமல் அவனுக்கு அவரவர்கள் சரக்கைப் பத்திரம் பண்ணிவைக்கவுமென்றும் எழுதினால் அவன் தனக்குச் சம்மதியான பேரை தனக்குத் திருடிக்கொண்டுவந்து கொடுக்கிறவர்களாய் அனுப்பினால் அவர்கள் பத்துபேராய்ப் போவார்கள். பேருக்குச் சத்தாய் திருடுவார்கள்ப்பால் எசமானுக்குச் சிறிது கொடுப்பார்கள். இதிலே அந்த வீட்டுக்காரர் வந்து பேசினால் அந்தச் சரக்கை வெளியே போகிறதுக்குக் கால்வாசி அரைவாசி பேசிக்கொண்டு விட்டு விடுகிறது. இந்தப்படிக்குப் பேசாமல் போனவர்கள் சரக்கு எசமானுக்குச் சற்றும் போகிறவர்களுமாய்ச் சரிக்கட்டி, கும்பினீர் தளத்தின்பேரிலே எவ்வளவாகிலும் எழுதிவைக்கிறதும் அதற்குப் பேருக்கு எழுதி அதையும் அப்பாலே அனுப்பிவிடுகிறதும் இப்படி நானாவிதமாய் நாள் தோறும் நடக்கிற சேதியைக் குவர்னதோருடனே சொல்லி, இப்படியெல்லாம் நடக்கிறதென்றால் அப்போதுமாத்திரம் கோபித்துக்கொண்டும் நீர் வர்த்தகருக்கு எழுதியனுப்பும். புதுச்சேரியிலே குடி வந்திருந்தால் உங்களுக்குத் தட்டுமுட்டுச் சரக்குச் சப்பட்டைகள் சமஸ்தமும் கொடுத்துவிடுகிறோம்

என்று சென்னப்பட்டணம் வர்த்தகருக்கெல்லாம் சென்னப் பட்டணம் பிடிக்கப்போகிற நாள் முதல் பங்குனி மீ 20உ வரைக்கும் வர்த்தகருக்கு எழுதி அனுப்பச் சொல்லுகிறதும் அவரவர்கள் தங்கள் நிறைவு குறைவுகளை எழுதி, இப்படி அப்படி நடத்தவேணுமென்றும் சொன்னால் அதற்கு எங்கே இல்லாத கோபமும் வருத்துவித்துக்கொள்ளுகிறதும் அதற்குத் தக்க உத்தரவில்லாமற் போகிறபடியினாலேயே அவர்களுக்குப் பீக்காம்விடாமல் அவர்களுக்கு அவர்களே எழுதுகிற உத்தரவிலே அவர்கள் பேரிலே மெதலையாக்கி, பதிலுத்தரவு இரண்டு மூன்று தரம் எழுதி வெங்குபாதுகண்டி வெங்கய்யன், வரதய்யன் முதலான பேர்கள் அனுப்பினதற்கு அவர்களும் இங்கிலீசுக்காரரும் சென்னப்பட்டணத்தை விடத் தக்கதில்லையென்றும், அவர்களுக்கும் கப்பல் வருகிற சாடையிருக்கிறதென்றும் இந்தத் தடுக்கிலே வராமற்போனார்கள். இதிலே பங்குனி மாதத்திலே மநாம் துய்ப்ளேய்க்ஸ் இந்த வர்த்தகரை அழைக்கிறதிலே நாம் லக்ஷாந்திரம் எடுத்துக்கொண்டுபோகிறோமென்று ஆம்படையானுடனே சொல்லி, க்ஷணத்திலே திருடிப்போட்டு ஓடிவந்த தொத்தேல் பெண்டாட்டி, மருமகன் பிறியெல் என்கிறவனுக்கு எழுதி தாம் தெப்பிரமேனிக்கு எழுதி இரண்டுபேர் திருடர் பார்ப்பனப்பிள்ளை என்றும் சென்னப்பட்டணத்திலே வெகு மோசம்பண்ணி அங்கே காவலிலேயிருந்து அடிப்பட்டுத் தொழுவிலேயிருந்து ஓடிப் போய் வந்து இந்தவூரிலே வந்தவன் பிள்ளை ஒரு திருடன்டங் காசாலையார் கடன் தண்டவேணுமென்று வந்தும் மதாம்கை யிலே ஆயிரம் வராகன்மட்டும் கொடு, கடன்வாங்கி அமர்த்த கபுருய் ஆயிரம், இரண்டாயிரம், பதினாயிரம், இருபதினாயிரம், லக்ஷந்திரம்மட்டுக்கும் சம்பாதித்துத்தருக்கிறோமென்று பொய்களைச் சொல்லிக்கொண்டு திரிந்த திருட்டுப் பாப்பய்ய வெங்கிட்டனென்கிறவனையும், சென்னப்பட்டணத்துக்கு அனுப்பி அங்கேயிருக்கிறவர்களுடனேயும் தம்புசெட்டி முதலானபேர் வெளியிலே போயிருக்கிறார்களே அவர்களண்டைக்குப் போய்ப் பேசி, அங்கே காரியமில்லாமற் போனால் தங்களைத் தொட்டு ஆகாது போச்சுதென்று சொல்லப்போகாதே. அதற்கு ரங்கப்பன் மனுஷன் வந்தும் மநாம் துய்ப்ளேய்க்ஸ் மனுஷர் வந்தால் நீங்கள் சம்மதியாய்ச் சொல்லவேண்டாமென்று சொன்னார்கள் என்றும், இரண்டுவிதமாய்ப் பேசினால் எந்த வழியிலே

வருவோமென்றும் சொன்னார்களென்று வந்து மதாம் துய்ப்ளேய்க்ஸ்க்குச் சொன்னதின்பேரிலே அவள் மேலே எழுதின படிக்கு லக்ஷாந்திரம் தான் சம்பாதித்துக்கொள்ளுகிறாளென்று சொன்னவிடத்திலே அவர் என்னை அழைத்து நீ வர்த்தகர்களுக்கு எழுதி அனுப்பின விடத்திலே வரவில்லையே, மதாம் அழைப்பிக்கிறோமென்றான். அவள் தானே அழைப்பிக்கட்டும். உன் மனுஷருக்கு எழுதி அனுப்பி வர்த்தகரோடு உடன்படிக்கை மாத்திரம் பேசவேண்டாம். மற்றப்படி அவ்விடத்திலே நடக்கிற சமாசாரமும் அவரவர்கள் திருடுகிற திருட்டும் நடத்தையும் எழுதி அனுப்புவித்துக்கொண்டிருக்கச் சொல்லென்று சொன்னார்.

1747 ஆ அவிரீல் மீ 26 உக்கு பிரபவ ளு சித்திரை மீ 17 உ புதவாரம்

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்; புகையிலைக் கிடங்கிலேயிருக்கிற செட்டிப்பிள்ளையாண்டான் குமரன் என்கிறவன் ஒருத்தன் திருப்பாதிரிப்புலியூர் திருவந்திபுரம் திருவிழாவுக்குப் போயிருந்து ராத்திரி சத்தாவர்ணம் பார்த்துவிட்டு வரும்போது குண்டுசாலையிலேயிருக்கிற கேட்டுக் கதவை மூடிவிட்டு அவ்விடத்து மனுஷரை இவ்விடத்திலே விடாமல் இவ்விடத்து மனுஷரை அவ்விடத்திலே விடாமல் கட்டுப்பண்ணினார்களாம். அதென்ன நிமித்தியமென்று விசாரித்த விடத்திலே தேவனாம்பட்டணம் பெரிய துரை மேஸ்தர் ஹிந்தி (M. Hinde) என்கிறவன் நேற்றுச் சாயங்காலம் ஏழுமணிக்குச் செத்துப்போனானென்று சொன்னார்களாம். அவன் சாலைக்கு மேற்கு வழியாய்ப் புறப்பட்டுச் சாலையைச் சுத்திக்கொண்டு வரச்சே இந்தச் சேதி அரியாங்குப்பத்திலேயிருந்துகொண்டிருக்கிற சேருவைக்காரன் கேட்டு அவனைக் கூட்டி இவ்விடத்திற்கு அனுப்புவித்தான். இதல்லாமல் நாகப்பட்டணத்திலேயிருந்து சதுரங்கப்பட்டணத்துக்குக் கடுதாசி கொண்டுபோகிற சேவகன் ஒருத்தன் தேவனாம்பட்டணம் ஒலாந்தாப் பத்ரிக்கு வந்து இன்றைய தினம் காலமே அவ்விடத்திலேயிருந்து புறப்பட்டு வந்த சேவகனும் அந்தச் சேதி மெய்தானென்று சொன்னான். இதல்லாமல் நம்முடைய மனுஷன் ஒருத்தனை அவ்விடத்திலே வைத்திருந்தோமே சேதிபாதி விசாரித்துச் சொல்லி அனுப்பத்தக்கதாக

அவனும் வந்து செத்துப்போனது மெய்தானென்று சொன்ஞன். இந்தச் சேதியை ஸ்ரீ துரையவர்களுடனே எச்சரிக்கிறதற்குத் துரையவர்கள் சவாரி போய் அவர்கள் மாமியார் வீட்டிலேயிருந்தபடியினலே ஐந்து மணி மட்டுக்கும் வருவாரென்று பார்த்துக்கொண்டிருந்து அந்த மட்டுக்கும் வராதபடியினலே 5½ மணிக்குத் துரை மாமியார் வீட்டுக்குப் போய் துரையவர்களுடனே இந்தச் சேதியைச் சொன்னவிடத்திலே அப்படியாகுல் இந்த மட்டுக்கும் பீரங்கிப் போடாமலிருப்பார்களா என்று கேட்டார். என்ன யோசனையினலே போடாமலிருக்கிருர்களோ தெரியாதென்று சொன்னேன். ஆனல், அறியவேணுமென்று சொன்னர்கள். அந்தப்படிக்கு-மேலே பாக்குக் கிடங்குக்கு வந்து உற்ற சேதியாய் விசாரித்துக்கொண்டு வரச்சொல்லி அதற்கேற்ற மனுஷனை அனுப்புவித்தோம். சாயங்காலம் எட்டுமணி வேளைக்குத் தேவனும்பட்டணத்திலே பீரங்கிப் போட்ட சப்தமாய்க் கேட்டு அதுவும் இத்தனை பீரங்கிப்போட்டார்களென்று நாளைத் தெரியவேணும். எட்டு மணிக்குத் தேவனும்பட்டணத்திலே போட்டது என்னத்தினலேயென்ருல் தேவனும்பட்டணம் பெரிய துரை மேஸ்தர் ஹின்தி (M. Hinde) மஞ்சகுப்பம் தோட்டத்திலே செத்துப்போனவனைத் தேவனும்பட்டணம் கோட்டையிலேயிருக்கிற கோவிலிலே கொண்டுபோய்ப் புதைக்கத்தக்கதாக எடுத்துக்கொண்டு போகச்சே பீரங்கிப் போட்டார்கள். அந்தமட்டிலே எடுத்துக்கொண்டுபோய்க் கோட்டையிலேயிருக்கப்பட்ட கோவிலிலே கொண்டுபோய்ப் புதைத்துவிட்டார்கள்.

இற்றைநாள் நடந்த சேதியென்னவென்ருல்: முன் 8 உ திங்கட்கிழமை யன்று காலே காவலிலே வைத்த அரும்பாத்த பிள்ளை மகன் முத்தய்யனை இன்றையதினம் விட்டுவிட்டார்கள். அவனை விட்டது என்னத்தினலேயென்ருல் அப்புமுதலி முகாந்திரமாய்ப் பேசி துரையவர்களுக்கு இரண்டாயிரம் ரூபாய் கொண்டுபோய்க் கொடுத்தவுடனே அதை வாங்கிக் கொண்டு விட்டுவிட்டார்கள். ஆனல், துரையினுடைய விவேகத்துக்கு நானென்னவென்று சொல்லப்போகிறேன். துரையவர்கள் என்னுடனே சொல்லி இருந்ததென்னவென்ருல், அரும்பாத்தபிள்ளைக் காரியத்திலே ஏதாகிலும் ஒரு காரியத்தைச் சந்துகட்டிலே கொண்டுவந்து மாட்டிவைத்துப்

பதினயிரம் ரூபாய் மாத்திரம் ஆகப்பண்ணிக் கொடுக்க வேணுமென்று சொல்லியிருந்தப்படிக்கு நானும் அவர்களை அழைப்பித்துப் பதினயிரம் ரூபாய் மட்டுக்கும் பேச்சு வார்த்தை நடப்பித்துக்கொண்டிருக்கச்சே கடக்குமரன் மரி பத்திலே அப்புமுதலி வழியிலே இரண்டாயிரம் ரூபாய் கொண்டுபோய்க் கொடுத்தவுடனே அந்த ரூபாயைக் கண்டவுடனே வாங்கிக்கொண்டு விட்டுவிட்டார்கள். அவருக்கு இன்னம் பாக்கிய காலம் வரவில்லாதபடியினலே வேலைக்குத் தக்க புத்திவந்து வந்தமட்டுக்கும் வாங்கிக்கொண்டார். அப்பு ஐந்நூறு ரூபாய் வாங்கிக்கொண்டான். ஒரு பச்சை சாவகக் கடுக்கன் வாங்கிக்கொண்டான். இது நிசம்.

1747 ஆ அவ்ரீல் மு 28உக்கு பிரபவ ஸு சித்திரை மு 16உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் நாசர் சங்குக்கு கிருஷ்ணைக்கு இப்புறமிருக்கப்பட்ட கந்தனூர், கடப்பை, ஆற்காடு முதலிய சபைகளுக்கு எசமானுக்கி மராட்டியர் பரபோசிநாயக்கனையும் கூடக்கூட்டி மைசூர்பேரிலே வரவேண்டிய பணத்தைச் சாவலனுப்புவித்துப் பணத்தை வாங்கிவரச் சொல்லியும் இந்தச் சுபர் காறுபாறு கணக்கு வழக்குச் சமஸ்தமும் தீர்த்துவிட்டுப் பணங்களெல்லாம் அறுவுபண்ணச்சொல்லி குல்பெக்கியார் உத்தாரங் கொடுத்து ஆனை இரண்டு, குதிரை, கத்தி, வில்லம்பு, ஏழு சிரோப்பா முதலானதெல்லாம் வெகுமானம் கொடுத்து, கத்தி, கட்டாரி தம்முடைய கையினலே கட்டாரிசொருவி கத்திபடுத்லாவாரிலே போட்டு ஆசீர்வாதம்பண்ணி அப்பால் டில்லியின் பேரிலே முன் வந்த நாதுருஷா திரும்பி வருகிறதாய் இவ்விடத்திலே கலாப்படுகிறுப்போலே யிருக்கிறது என்றும், நிசாமவர்களை வரச்சொல்லி எழுதி வந்தபடியினலே நிசாமவர்கள் அப்பால் டில்லிக்குப் போகிறதாகவும் அதன்பேரிலே நாசற்சங்கு அவர்கள் பர்வாணுநபர் அன்வருதிகானுக்கு வந்தாப்போலேயும் தாமும் மதாமும் பவுஞ்சும் புறப்பட்டு வரச்சொல்லியும் தமக்குச் சரீரம் சுவஸ்தமில்லாவிட்டால் மமுதல்லிகானையும் பவுன்சையுங் கூட்டி அனுப்பச்சொல்லியும் கணக்குகள் கூடக் கொடுத்து அந்தக் கணக்கு சால்சவாபு பண்ணுகிறதற்கு அதற்குக்கொத்த பேரைக் கூடக் கூட்டியனுப்பச்சொல்லி எழுதிவந்ததாகவும், அதன்பேரிலே சம்பதிராயன் உசேன்

சாயபு தாயார் வீட்டுக்கு வந்து ஆலோசனைபண்ணி அதன் பேரிலே உசேன் சாயபு அவர் குமாரன் முதலான பேர்கள் நபர் அன்வர்திகான் அவர்கள் பேட்டிக்குப் போன தாகவும் அவரவர் சரக்குசராயிச்சுப்போட்டு, அப்பால் நபர் சாயபு அவர்களும் சம்பதிராயனும் உசேன் தாயாரும் மூன்று பேரும் கூடி ஆலோசனைபண்ணி மூவாயிரம் குதிரை வைக்கச் சொன்னதாகவும், அதன்பேரிலே திருச்சிராப்பள்ளியிலே யிருந்து சேதி வந்ததாகவும், அன்வர்திகானுக்கும் சண்டை யானதாகவும் அன்வர்திகான் மனுஷரிலே இருபதுபேர் விழுந் தார்களென்றும் முன் அன்வர்திகான் மனுஷரிலே முப்பது பேர் விழுந்தார்களென்றும் அதன்பேரிலே அன்வர்திகான் ஓடிப்போய்விட்டதாகவும், இவன் தெருத்திலுப்போலேயும் அதன்பேரிலே இவன் கேட்ட உடன்படிக்கைப்படிக்குக் கொடுக்கிறோமென்று எழுதிக்கொடுத்தாரென்றும், மூன் இதிலே கலாபமாயிருக்குதென்றும் சேதி வந்தாப்போலே யும், அதன்பேரிலே நபாபு பிரயாணப்பட்டு வாலுப் புரத்திலே வந்து இறங்கினாரென்றாப்போலேயும், இதிலே முன் வருத்திகான்னுக்கும், அன்வர்திகானுக்கும் சமாதான மாச்சுதென்று எழுதிவந்தாப்போலேயும், அதன்பேரிலே மாபூசுகானை அழைத்து வருவோமென்கிற சாடையொன்று நாசர் சங்கு வரச்சொல்லி எழுதியனுப்பினானே அவ் விடத்திற்குப் போகிற சாடையாகவும், தஞ்சாவூர்பேரிலே பரிசுகொடுக்கவேண்டிய பணம் வாங்கப்போகிறானென்றும் இப்படி நானுவிதமாக எழுதிவந்தது. இதல்லாமல் மமுதல்வி கானை அழைக்கத்தக்கதாக காஞ்சீபுரத்துக்கு இரண்டு மூன்று பேர் சோடாபோனார்களென்றாப்போலேயும், அவரும் வருகி றோமென்றும் எழுதியனுப்புவித்ததாகவும் மமுதல்விகான் காஞ்சீபுரத்திலே முன்னூறு குதிரையுடனே இருக்கிறாரென் றும், வீடு பெரிதாய்க் கட்டுவிக்கிறானென்றும் கைக்குளர் பேரிலே பதினாலாயிரம் வராகன் தெண்டம். வாங்கின உற் சாகத்தின்பேரிலேயிருக்கிறானென்றும், இங்கிலீசுக்காரர் மனு ஷன் ஒரு ஸ்தானாதிபதியும் எட்டு சேவகருமிருந்துகொண்டு மமுதல்விகானுக்குதேவனாம்பட்டணம் குவர்னதோரவர்களுக்கு எந்நேரமும் காகிதப் பத்திரங்கள் நடப்பிக்கிறானென்று மிப்படியாக எழுதிவந்தது. இதுமுதலாகிய சேதியெல்லாம் குவர்னதோருடனே சொன்னேன்.

இவ்விடத்திலேயிருந்து ஸ்ரீ துரையவர்கள் கடுதாசி நாசற் சங்கு அவர்களுக்கு முபார்க்குப்பிரதி எழுதி 21 மோகரி கொடுக்கச்சொல்லி இமாம்சாயபு அவர்கள்பேருக்கு கடுதாசி ஆற்காட்டுக்கு எழுதி சுப்பய்யன் சிங்காரமண்டைக்கு அனுப்புவித்து அவ்விடத்திலே யிருந்து இமாம்சாயபு அண்டைக்கு அனுப்புவித்து இமாம்சாயபுவைக்கொண்டு நாசற்சங்குக்கு எழுதின கடுதாசியும் கொடுக்கத்தக்கதாக அனுப்புவிக்கச் சொல்லி சுப்பய்யனுக்கும், சிங்காரத்திற்கும் கடுதாசி எழுதிக் கொடுத்து இற்றைநாள் அனுப்புவித்தோம். இவர்களுக்கு எழுதின காகிதங்களுக்கெல்லாம் நகல் எழுதிக்கட்டியிருக்கிறது. அதிலே எழுதினதை சூட்சமமாய் எழுதிவைக்கிறேன். அதென்ன வயணமென்றால்: உமக்குத் தக்கனுக்கு சுபை ஆச்சுதென்றும், இந்தப் பிராந்தியங்களுக்கு வருகிறீரென்று சேதிகேட்டு மிகுதியுஞ் சந்தோஷமாச்சுதென்று மிகுந்த உபசாரமாய் எழுதி நசர் இருபத்தொரு மோகரா அனுப்பினோமென்றும், பின்னையும் சிறிது சேதி இமாம்சாயபு அவர்கள் வாக்குமூலமாய் சொல்லுவார். அந்தப்படிக்குத் தயவுபண்ண வேணுமென்றும் எழுதினது.

இமாம்சாயபு காகிதத்திலே சென்னப்பட்டணம் கொடுத்துவிடுகிறோம். இதற்கு வில்லியநல்லூர் பர்கணாவும் வழுதாவூர் பர்கணாவும் கொடுத்தால் என்று எழுதினதுக்கு மறுபடி உத்தாரமெழுதிக்கொடுக்காமல்போனீர். இப்பவும் நாசற் சங்கு அவர்களுக்குத் தக்கன சீமையெல்லாம் ஆச்சுதே. சமயத்திலே சென்னப்பட்டணம் தீர்வை வைத்துப் போடுகிறோம். அதற்குப் பதில் மேலே எழுதியிருக்கப்பட்ட இரண்டு பர்கணாவும் வெகுமானங் கொடுக்கத்தக்கதாக பேசி எழுதி அனுப்பச் சொல்லியும், தாங்களும் இங்கிலீசுக்காரரும் இனிமேல் சண்டை போடாமல் இங்கிலீசுக்காரர் பேருக்கொன்றும், ஒலாந்தாக்காரர் பிரஞ்சுக்காரர் தின்மார்க்கர் பேருக்கு ஒன்று நாசற்சங்கு தானே எழுதுகிறாப்போலேயும், இந்த ராச்சியம் வந்து பார்சா ராச்சியம் இதுக்குள்ளே நீங்களொருத்தரும் சண்டை போடத் தேவையில்லை. உங்களுக்குள்ளே கலாபமாயிருந்தால் உங்கள் ராச்சியத்திலே சண்டை போடுகிறதேயல்லாமல் இந்த ராச்சியத்துக்குள்ளே சண்டை செய்யப் போகாதென்றும், அல்லவென்று சண்டைபோட்டால் இந்த ராச்சியத்திலே

உங்கள் வியாபாரமும் நடக்கமாட்டாது, உங்களையும், ராச்சியத்தை விட்டுத் துரத்திவிடுவோமென்று கண்டிப்பு ஒடுதியாய் நாசர் சங்கு ஒடுதி அவரவருக்கு அங்கேயிருந்து மனுஷர் கூட அனுப்புவித்தால் நல்லது; இல்லாமல் போனால் இந்த ராச்சியத்திலே வியாபாரமில்லாமல் போகிறதுமல்லாமல் ராச்சியமெல்லாம் வர்த்தகர் முதலான பேர் கெட்டுப்போகிறதும் அல்லாமல், சர்க்காருக்கு வெகு ரேகை கஷ்டம் வருமென்றும் இப்படியெல்லாம் நாசற்சங்கு அவர்களுக்குத் தெரியப்படச்சொல்லி எழுதியனுப்புவித்ததுமல்லாமல் நாசற்சங்குக்குக் தீர்வை வைக்கிற இருபத்தொரு மோகராவும், உம்முடைய கணக்கிலே வரவு வைத்துக்கொண்டு உம்முடைய குமாரன் வசத்திலே ஒப்பித்துப் போடுகிறோமென்று எழுதியனுப்பினோம் ... ... ... ... ... ... ...

1747 ஆ மே மீ 1 உ பிரபவ ஸு சித்திரை மீ 22உ சோம வாரம்

இற்றைநாள் காலமே தேவனும்பட்டணத்திலே நடந்த சேதி என்னவென்றால்: மேஸ்தர் ஸ்திராட்டன் (M. Stratton) இவ்விடத்திலேயிருந்து வங்காளத்துக்குப் போகச்சே தன்னுடைய துபாசி குருவப்பனென்கிறவன் மதாம் துய்ப்ளேய்க்சு வசத்திலே ஒப்புவித்து அவனை விசாரித்துக் கொள்ளச் சொல்லிவைத்துப்போட்டுப் போயிருந்தான். அந்த குருவப்பனென்கிறவனை மதாம் துய்ப்ளேய்க்சு ஆளாக்கி தேவனும் பட்டணத்திலே வந்திருக்கிற மதாமண்டைக்கு அனுப்புவித்து அவனண்டையிலேயிருந்துகொண்டு அவ்விடத்து சேதி பாதியளவு எழுதியனுப்பச்சொல்லியும், மதாம் மாசுமூலியமாய் அவ்விடத்திலேயிருக்கப்பட்ட துரைகளுக்கெல்லாம் விஷம் கலந்து அப்படி ஒரு பிரயோகம் பண்ணச்சொல்லியும், இப்படியாக இனம்பண்ணி குருவப்பனென்கிறவனை இவ்விடத்திலேயிருந்து மதாம் அனுப்புவித்திருந்தாள். அவ்விடத்திலே மதாமண்டையிலேயிருந்துகொண்டு அவனைக் கொண்டு விஷப்பிரயோகம் பண்ணுவித்து எல்லோருக்கும் வாந்திபிராந்தி கண்டு துரைத்தனக்காரர் கப்பல்காரர் எல்லோரும் அலங்கோலப்பட்டுக்கிடக்கிற சமயத்திலே அந்த திராட்டன் துபாசி குருவப்பனென்கிறவன் இவ்விடத்துக்குக் கடுதாசி எழுதின வயணம், மேஸ்தர் ஹிந்தி (M. Hinde)

செத்துப்போனான். இப்போயிருக்கப்பட்ட துரைகள் கப்பல் காரர் கமாண்டோர் முதலானபேரெல்லோருக்கும் வாந்தி பிராந்தி கண்டு அலங்கோலப்பட்டுக்கிடக்கிறது. இந்தச் சமயத்திலே வந்தால் கோட்டையைப் பிடித்துக்கொள்ளலாம். இது நல்ல சமயம் என்று ஒரு கடுதாசி எழுதி ஒரு பறையன் கையிலே கொடுத்தனுப்பினான். அந்தப் பறையன் அவ்விடத்திலே ஒரு பறைச்சியை வைத்திருந்தான். அவளிந்தச்சேதியெல்லாம் அறிவாளாம். அப்படியிருக்கச்சே அந்தக் கடுதாசி கொண்டுவருகிற பறையன் சாருயத்தைக் குடித்துவிட்டு அவன் வைத்திருந்த பறைச்சியை அடித்தானும். அவள் போய் காவல் சவுக்கி இருக்கிற சேவகருடனே சொன்னதாகவும், அந்தச் சேவகர் அந்தப் பறையனைப் பிடித்துக்கொண்டு அவன் கையிலேயிருந்த கடுதாசியைப் பறித்துக்கொண்டுபோய் கமாண்டோர் கையிலே கொடுத்தவுடனே அதைப் பார்த்துக் கொண்டு, அதிலே எழுதியிருக்கிற சேதியை அறிந்த அந்தச் சணம் துபாசி குருவப்பனையும், அந்தப் பறையனையும் பிடித்து இரண்டு பேருக்கும் கைக்கும் காலுக்கும் விலங்குப்போட்டுப் பத்திரப்படுத்தினார்களாம். மதாம் மாசையும் (M. Morse) காவல்பண்ணி அவனண்டையிலே ஒருத்தரையும் சாதிக்காரர் போய்ப் பேசாதபடிக்குத் திட்டம்பண்ணிவைத்தார்களாம். இது பெண்டுகள் மூலமாக நடப்பித்த காரியமானபடியினாலே கடுதாசியிலே பெண்டுகள் தொட்டுதானே வெளியாகிக் காரியம் கெட்டுப்போய்க் கேடுவந்தது. புருஷாள் மூலமாய் நடந்தானால் அதுக்கேற்ற பந்தோபஸ்து நடக்குமேயல்லாமல் இப்படி வெளிக்கு வராது. ஆகிலும் இனிமேல் நடக்கிற சேதி அறியவேணும்.

1747 ஆ மே மீ 3உ க்கு பிரபவ ஹு சித்திரை மீ 24உ புதவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: தஞ்சாவூர் சேதிகள் அப்போதைக்கப்போது அறியத்தக்கதாக இவ்விடத்திலேயிருந்து ஒரு பிராமணனையும், நாலு பேர் சேவகரையும், பயணம்பண்ணி ஸ்ரீ துரையவர்கள் உத்தாரப்படிக்குத் தஞ்சாவூருக்கனுப்புவித்தோம். தஞ்சாவூர், ரங்கோ பண்டிதர் அண்டைக்கு நடக்கிற கடன் வரவேண்டிய கிரிமாசிபண்டிதன் ரகுநாதபண்டிதன்பேரிலே பணம் வாங்கச்சொல்லியும்

ரங்கோபண்டிதரும். நாமும் கூட்டுகாட்டாய், அவ்விடத்திலே க்டைபோடுகிறதுக்குக் கவுலும் மகாராசா காலும், வெகுமான ஙாங்கச்சொல்லி, முன்னாலே பேசியிருந்த சாடையைப் பிடித்துக் காகிதம் எழுதியனுப்பினது, போனவன் சமஸ்த சமாசாரமும் எழுதி அனுப்பச்சொல்லி, அனுப்பினதற்கு இற்றைநாள் காஞ்சிபுரத்திலேயிருந்து எழுதிவந்த சேதி என்னவென்றால்: மமுதல்விகான், நபாபு அன்வர்திகான், உசேன் சாயபு, சம்பதிராயன் முதலானபேரெல்லோரும் திரிச்சினாப் பள்ளிக்குப் போகத்தக்கதாகப் பயணம் புறப்பட்டுச் சாகிப் போகிறார்களென்கிற சேதி எழுதிவந்தது.

1747- ஆ மே மீ 4 உ க்கு பிரபவ ௵ சித்திரை மீ 25 உ வியாழக்கிழமை.

இற்றைநாள் சாயங்காலம் துரையவர்கள் சவாரிபோய் வந்தவுடனே ஆறுமணிக்கென்னை அழைப்பித்துச் சொன்ன வியணமென்னவென்றால்: தேவனாம்பட்டணம் இங்கிலீசுக் காரர் ஆற்காட்டு நபாபு அண்டைக்கும் மனுஷரை அனுப்பு வித்துச் சிறிது குதிரையும், ராணுவம் வேணுமென்று எழுதி அனுப்புவித்ததாகவும், அதன்பேரிலே நபாபு ஐந்நூறு குதி ரையும், இரண்டாயிரம் ராணுவமும் சேவகரும் எழுதி தேவ னாம்பட்டணத்துக்கு அனுப்புவிக்கிறதாகவும், தனக்கு எழுதி வந்ததாய் சமேதாரன் சேக்கு உசேன் தம்முடனே சொன்ன தாகத் துரை என்னுடனே சொன்னார். அதற்கு நான் சொன் னது: நபாபுக்கு இங்கிலீசுக்காரன் எழுதுகிறதேது! நபாபு ராணுவம் அமர்த்தி அனுப்புகிறதேது! அப்படி யிராதென்று சொன்னேன். ஆனால் சமேதாரனை நீ அழைத்துக்கோளென்று சொன்னார். அதன்பேரிலே சமேதாரன் சேக்கு உசேனை அழைப் பித்துக் கேட்டவிடத்திலே அவன் சொன்னதென்னவென்றால் தேவனாம்பட்டணம் இங்கிலீசுக்காரர் ஆற்காட்டிலே இருக்கிற சமேதாரன் ஒருத்தனுக்குஎழுதினதாகவும் அந்தச் சமேதாரன் ஐந்நூறு குதிரையும், இரண்டாயிரம்பேர் ராணுவமும் எழுதி தேவனாம்பட்டணத்துக்கு அனுப்புவிக்கிறதாயும், அந்தச் சமே தாரன் தனக்கு எழுதியனுப்புவித்தானென்றும் என்னுடனே சொன்னான், இந்தச் சேதியை மறுபடியும் போய் துரையவர்க ளுடனே நான் சொன்னதென்னவென்றால்: நபாபுக்கு அவர்கள் எழுதியனுப்புவித்ததாகவும், நபாபு ராணுவம் கூட்டி அனுப்பு

விக்கிறதாகவும், உப்புடனே சொன்னுனே இப்பவும் நான் கேட்டதுக்கு நபாபுக்கு எழுதவில்லையாம். யாரோ ஒரு சமேதாரனுக்கு எழுதி யனுப்பினுர்களாம். அவன் தனக்கு எழுதி யனுப்பினதாய் என்னுடனே சொன்னுனென்று சொன்னேன். ஆனுல் இந்தச் சேதிக்கு நபாபுக்கு நாமெழுதி அனுப்பினது தெரிந்துகொள்ளவேணுமென்று நபாபுக்குக் கடுதாசி எழுதியனுப்பச்சொன்னுர். அதற்கு நானிருந்துகொண்டு நாமென்னதைக்கண்டு நபாபுக்கு எழுதுகிறது. அது அப்படியிராது. சமேதாரனுக்கு அவர்கள் எழுதி யனுப்பினதாகவும் அந்தச் சமேதாரன் சேக்கு உசேனுக்கு எழுதியனுப்பினுனென்றமட்டுக்கும், சேவகர் குதிரைக்காரருக்குச் சேவசமில்லாமலும் சம்பளம் வராமலும் இருக்கிறபடியினுலே அவர்கள் தானே இப்படி ஒரு போட்டி காட்டி அவர்கள் வரச்சொன்னுர்கள். இவர்கள் வரச்சே சொன்னுர்கள்: நாங்கள் சேவகத்துக்குப் போகிறுேமென்று புறுடா பண்ணுவார்கள். அதுவேயல்லாமல் இது மெய்யாயிராதென்று சொன்னேன். ஆனுலிது தெரிந்துகொள்ளுகிறதுக்கு எப்படி வயணமென்று கேட்டார். அதற்கு ஆற்காட்டிலே நம்முடைய வக்கீல் சுப்பய்யனிருக்கிறுனே அவனுக்கெழுதியனுப்பித் தெரிந்துகொள்ளலாமென்று சொன்னேன். ஆனுல், அப்படிதானெழுதி அனுப்பித் தெரிந்துகொண்டு பிற்பாடு நபாபுக்கு எழுதியனுப்பலாமென்று சொன்னுர்கள். அந்தப்படிக்கு நம்முடைய வக்கீல் சுப்பய்யனுக்கு கடுதாசி எழுதி இற்றைநாள் ஆற்காட்டுக்கனுப்புவித்தேன்.

1747 ஆ மே மீ 5 வக்கு பிரபவ ஸு சித்திரை மீ 26 வ சுக்கிரவாரம்.

இற்றைநாள் ராத்திரி விந்தையான அதிசயம் நடந்தது. அதென்னவென்றுல்: வீராம்பட்டணத்துத் துறையிலே கட்டுமரமொன்று பெரிய கட்டுமரமாய் முஸ்தீது பண்ணி அந்தக் கட்டுமரத்திலே தூரப்பணங்கள் ஒரு பீப்பாய் மருந்தும், ஒரு நெருப்புக்கூடிறும் வைத்து அதிலே இரண்டு பேர் வெள்ளைக்காரரும் இரண்டு பேர் காபிரியரும் அமர்த்தி அந்தக் கட்டுமரத்தை ராத்திரியிலே தள்ளிக்கொண்டுபோய் தேவனும்பட்டணத்துத் துறையிலேயிருக்கிற கப்பல்கிட்டே

போய் கப்பலுக்குக்கிழே துரப்பணத்தாலே தெவ்வறுத்து, அதற்குள்ளே மருந்தை வைத்து நெருப்புக்கயிற்றினுலேயே கொளுத்திவிட்டு வரத்தக்கதாக அந்தப்படிக்கு லெஸ்து பண்ணிக்கொண்டு கட்டுமரத்தையும் தள்ளிக்கொண்டு கிட்டே போகச்சே தெய்வ எத்தனமாய் நெருப்புக்கயிறு அவிந்துபோச்சுது. நெருப்பு அவிந்துபோனபடியினுலே அப்பாலே போயும் காரியமில்லையென்றிறதாய் மறுபடியும் திருப்பிக்கொண்டு வந்துவிட்டார்கள்.

1747 ஆ மே மீ 9 உ க்கு பிரபவ ஹூ சித்திரை மீ 30 உ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் வந்தவாசியிலேயிருந்து சப்பித்தரல்லிகான் பெண்சாதி வெகுமானம் வந்தது. அதேதென்றுல் முன்னுலே சப்பித்தரல்லிகான் பிள்ளையை பள்ளிக்கூடத்திலே வைக்கிற போது இவ்விடத்திலேயிருந்து வெகுமானம் அனுப்புவித்த தற்குப் பதில் வெகுமானம் ஒரு துராவும், ஒரு பதக்கமும் நாலு நகை வெகுமானமும் வந்தது. வந்து கெவுனிக்கு வெளியே வைத்துவிட்டு இவ்விடத்துக்குக் கபுறு வந்த வுடனே ஸ்ரீ துரையவர்களுக்கு எச்சரிக்கை செய்கிறதற்குப் பத்து மணி மட்டுக்கும், துரையவர்கள் நித்திரைபோனபடி யினுலே அவரெழுந்திருந்த பிறகு இந்தச் சேதியை எச்சரித்து பத்தரை மணிக்கு இவ்விடத்திலேயிருந்து வெகுமானத்துக்கு எதிர்கொண்டுபோனவர்கள் முசே பாதீ, முசே தீக்கேன், ராகோ பண்டிதர், நானும், பாளையக்காரன், கொம்பு தமுக்கு, மேள தாளம் தேவடியாள், மற்ற சகல சம்பிரமத்துடனே புறப் பட்டு எதிர்கொண்டுபோய் வெகுமானத்தைப் பல்லக்கின் பேரிலே வைத்துக்கொண்டுவரச்சே கெவுனி வாசலிலே ஏழு பீரங்கிப்போட்டார்கள். இப்புறம் வந்து வெகுமானத்தைத் துரையவர்கள் முன்னே கொண்டுபோய் வைத்தவுடனே கோட்டையிலே பதினைந்து பீரங்கிப் போட்டார்கள். அதன்பேரிலே அந்தத் துராவையும் பதக்கத்தையும் மறுபடி அவர்கள் கையிலே கொடுத்துவிட்டு ஆயிரத்தைந்நூறு ரூபாய் வாங்கி துரையவர்களுக்குக் கொடுத்துவிட்டோம்.

இதல்லாமல் இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென் றுல்; தேவனும்பட்டணத்திலேயிருந்து வந்த சேதி. தேவனும்

பட்டணத்திலே சொல்லிக்கொள்ளுகிற தென்னவென்றால்: தங்களுக்குப் பலன் வராவிட்டாலும் இருக்கிற கப்பல்களைச் சேர்த்துக்கொண்டு ஒரு ராத்திரியிலே வந்து கோட்டையைப் பார்த்துப் பீரங்கிகளைச் சுட்டுவிட்டுப்போவோமென்று இப்படி நாலு ராத்திரி, ஆறு ராத்திரி போய்ச் சுட்டுப் பட்டணத்தை அலங்கோலப்படுத்திவிட்டுவருவோ மென்கிற சேதி அவ்விடத்திலே சொல்லிக்கொள்ளுகிறார்க ளென்று நமக்குச் சேதி வந்தபடிக்குக் காலமே போய்த் துரையவர்களுக்குச் சொன்னேன். அவரிருந்துகொண்டு அப்படி வருவார்களா என்று கேட்டார். ஒரு வேளை வந்தாலும் வருவார்களென்று சொன்னேன். அதன்பேரிலே அவரும் யோசனைபண்ணி, மெய்தானென்று பகலுக்குமேல் மூன்று மணிக்குக் கோட்டைக்குப் போய்க் கோட்டை மேலே யிருக்கப்பட்ட மருந்துக் கிடங்குகள் மேலேயெல் லாம் உத்தரங்கள் பலகைகள் போட்டு முஸ்தீதிபண்ணி, கீழ் பக்கத்திலே யிருந்த பானைச் சட்டிகளெல்லாம் கீழே யிறக்கி, கோட்டைக்குள்ளே பின்னையும் என்னென்ன முஸ்தீதுபண்ணவேணுமோ அதுகளெல்லாம் திட்டப்படுத்தி விட்டு ஆறு மணிக்கு வீட்டுக்கு வந்தார். மருந்துக் கிடங்கை தளவரிசைப்போட்டு மேலே மண் விஸ்தாரமாய்க் கொண்டு வந்து போடச் சொன்னார் என்றுஞ் சொன்னார்கள்.

1747 ஆ மே மீ 10 உக்கு பிரபவ ஞு சித்திரை மீ 31உ புதவாரம்

இற்றைநாள் ஆற்காட்டிலேயிருந்து தக்காசாயபு குமா ரன் அல்லிநக்கி ராயபுக்கு எழுதிவந்த சேதி யென்னவென் றால்: நபாபு நாசற்சங்கு அவர்கள் கடப்பை, கந்தனூர் சப் பீத்து பண்ணுகிறதற்கு ஐயாயிரம் குதிரை அனுப்புவித்துத் தாங்கள் ஆற்காட்டுக்கு வரவேணுமென்று கடப்பையண் டைக்கு மாரகணவாய் வந்து சேர்ந்தாரென்றும், நாசற்சங்கு சண்டா ஆற்காட்டிலே கொண்டுவந்து போட்டார்களென் றும், அன்வற்திகானை பணம் காசு ஐந்து லக்ஷம் ரூபாய் கேட்கிற நிமித்தியமாய் முப்பது குதிரைக்காரர் வந்து சந்தா சாயபு வீட்டிலே யிறங்கி, அன்வற்திகானண்டைக்குப் போக வேணுமென்றிருக்கச்சே, ஆற்காட்டு பவுஞ்சுதாரன் நபிபு

கான் வந்து நீங்களென்னத்துக்குப்போகிறீர்கள்; நான் எழுதியனுப்பி அன்வற்திகானை அழைப்பிக்கிறேனென்று நவாபுவாவிகுண்டாபுரத்தண்டையிலே வந்திருக்கிறவரண்டைக்கு ஒட்டகத்தை அனுப்புவித்தார்களாம். நாசற்சங்கு அறக்கார்கள் வந்து வேலூர் கோட்டையண்டையிலேயும், தஞ்சாவூரண்டையிலேயும், தருமலவாடியண்டையிலேயும் வந்து ஸ்தலம் பார்த்துப் போனார்களாம். புராணபுரி சோபுதாரன் அப்துல் காய்கானுக்கும் மராட்டியருக்குஞ் சண்டையாய் அப்துல் காய்கான் செத்துப்போனான்.

சாத்தாருவிலே சாவுராசா அவர்கள் சவ்வாய் பாசிராயன் அவர்கள் நாற்பத்திமூன்று லட்சம் தமக்குக் கடனிருக்குதென்றும், அந்தக் கடன் நிமித்தியம் அந்த நாற்பத்தி மூன்று லட்சம் ரூபாயும், சவ்வாய் பாசிராயனை கொடுக்கச் சொல்லிக் கேட்டதற்கு அவர் தன்கையிலே இலக்கில்லை யென்று சொன்னபடியினாலே அவருக்கு மிவருக்கும் சமாதானமாய்ப் புறப்பட்டுப்போய்ப் பண்டாப்பூரிலே போய் இறங்கி தன்னுடைய பவுஞ்சு மல்லாரசு ஒலுக்கர் (M. Malhari Rao Holkar) முதலானபேரை அழைப்பித்துக்கொண்டார்களாம் பத்தேசிங்கு அவர்களுக்கு ராசவட்டம் நடப்பிக்கிறாராம். நிசாமவர்கள் சோர்ந்தார்களாம். மாபுசுகானுக்கு மிருகுலாமுசேன் நாலு லட்சம் ரூபாய் கொடுத்துச் சமாதானம்பண்ணி திருநெல்வேலியிலே யிருந்து மதுரைக்கு அழைத்துக்கொண்டுவந்தார்கள். நிசாமல்மலுக்கு கடப்பா நபா, கந்தனூர் நபா அவர்களைக் கூட அழைத்துக்கொண்டுபோய் அவர்கள்பேரிலே பணம்காசு வரவேண்டிய நிமித்தியம் நூறுநூறு குதிரையை அவர்கள் பிறகே தைனாத்துபண்ணி இருக்கிறார்களாம்.

1747-ஆ மே மீ 11 உக்கு பிரபவ ஹ வைகாசி மீ 1 உ குருவாரம்.

இற்றைநாள் இந்தப் பட்டணத்திலே நடந்த அதிசயமென்னவென்றால்: ஒரு காரியம் கலாபமானபோது சேவகருக்கு அறிவிக்கிற அடையாளக் குறிப்பாவது:—

கடலோரத்திலே சந்தடியாயிருந்தால், பகல்காலத்திலே கொடிமுறுக்கிக் கோட்டையிலே ஒரு பீரங்கிப்போடுவார்கள்.

இந்த அடையாளச் சத்தம் கேட்டவுடனே குண்டுசாலே சுத்தியிருக்கிற பாளையக்காரன் சேவகர் செய்யவேண்டியது. அவரவரிருக்கிற குண்டுசாலே வாசல்படியை மூடிப்போடுகிறதும். மனுஷர் ஆடுமாடு ஒன்றுகிலும் வெளியேபோகவொட்டாமல் தடைபண்ணுகிறதும், நம்முடைய மனுஷர் ஆடுமாடு வெளியே இருந்தால் எல்லாரையும் உள்ளே வரச்சொல்லுகிறது. ஆடு மாடு வெளியே இருந்தால் ஓட்டிவந்து உள்ளே விட்டுவிடுகிறது. இதல்லாமல் ஊரிலேயிருக்கிற மலேயப்பன் தாலூக்கு மனுஷர் சேவகர் முன்சொன்ன அடையாளச்சப்தம் கேட்டவுடனே சேவகரெல்லோரும் ஒன்றாய்கூடி பட்டணத்தைச் சுத்தியிருக்கப்பட்ட அலங்கத்துவாசற்படி சரியாய் பங்கிட்டு ஒவ்வொரு வாசல்படிக்கு ஒவ்வொரு பங்கு அனுப்புகிறது. சேவகர்போய் வாசல்படி சேர்ந்தவுடனே ஒரு வாசல்படியிலேயிருக்கிறபேர் ஒரு வாசல்படிக்கு நாற்பது ஐம்பது பேர் கூடிக்கொண்டு ஒரு வாசல்படியான ஒரு வாசல்படிமட்டுக்கும், பத்து நூல் போகிறது. பத்து நூலாவது ரோந்து போகிறது அந்த வாசல்படிக்காரன் ஒரு வாசல்படியால் ஒரு வாசல்படி போகிறது. ஒருத்தரையும் வெளியேபோகவொட்டாமல் மறிக்கிறது. ஒருத்தரையும் குண்டுகிட்டே வரவொட்டாமல் தடைபண்ணுகிறது. தடைக்கு நில்லாமற்போனால் சுட்டுப்போடுகிறது. இந்தப்படிக்கு இற்றைநாள் உத்தாரம் கட்டளையிட்டோம்.

1747 ஆ மே மீ 12 உ க்கு பிரபவ ஹூ வைகாசி மீ 2 உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் ராமச்சந்திரய்யன் மகனுக்கு வாசுதேவ பண்டிதர் மூத்த குமாரன் பெண்ணை பாணிக்கிரகணம்பண்ணிக்கொடுத்தபடியினாலே, பதினொருமணிக்கு முகூர்த்தத்திற்குப் போய் வீட்டுக்குப்போனவுடனே குவர்னதோர் என்னை அழைப்பித்துக் காரைக்காலிலே யிருந்துவந்த ஒரு வெள்ளைக்காரன் பேர்விளங்கன் அவன் கையில் ஒரு வராகனும் புதுச்சேரி இருபத்து நாலு பணமும், வெள்ளையாங்குப்பத்து ஆயக்காரர் வாங்கிக்கொண்டார்களாம். அது யாருடைய தாலுக்கா யென்று கேட்டார். திருவிதி தாலுக்கா யென்று சொன்னேன். அவ்விடத்திலேயிருக்கும் பீர்சாயபு மகம்மது ஆவேசு

என்கிற எசமானுக்குக் காகிதம் எழுதி அனுப்பி அதை அழைப்பிக்கச் சொல்லச் சொன்னார். நல்லதென்று அந்தப் படிக்குக் காகிதமெழுதி அனுப்புவித்தேன். அப்போது துரையவர்கள் என்னுடனே சொன்னது இப்போது ஏழெட்டுநாளைக்கு முன்னே கூடலூருக்குச் சீமையிலிருந்து ஒரு கப்பல் வந்து மூன்று மாதம் இருபது நாளைக்குள்ளே வந்ததாய்ச் சொன்னார்களே அது தெசம்பர்மாதத்திலே புறப்பட்டதினாலே முக்கால் மாதம் ஆச்சுது, அதிலே வந்த கச்சேத்து மேஸ்தர் சாவசு என்கிற இங்கிலீசுக்காரன் தேவனாம்பட்டணத்திலே யிருந்துவந்தவன் சொன்னசேதியும், அவன் கொண்டுவந்துகொடுத்த கச்சேத்து சேதியும் சொல்லுகிறேன் கேளென்று சொல்லி, அவர் சொன்ன வயணம் எழுதின விபரம்.—

இங்கிலீசு தெரேவிலேயிருந்து இந்தக் கப்பல் வந்து நாலே முக்கால் மாத மாச்சுதென்றும், இந்தக் கப்பலிலே வந்த கச்சேத்து அக்ஷய ஞூ சித்திரை மாதம் முதல் தேதி புரட்டாசி மாதம் 7 தேதிக்கு கச்சேத்து எழுதியிருக்கிறது. அப்பால் ஐப்பசி கார்த்திகை மார்கழி மாதம் இந்த மூன்று மாதத்து கச்சேத்து இல்லை. அதிலே யிருந்த வயணம் புடுத்துகல்(Portugal) ராசா செத்துப்போய்விட்டானென்று இஸ்பாஞ்ஞியா ராசா செத்துப்போனானென்றும், தின்மார்க்கு ராசா செத்துப்போனானென்றும்,இப்போது பிராஞ்சுராசாவாயிருக்கிற லூய் கேய்ன்சுவுக்கு தொபென் என்கிற குமாரன் பிறந்திருந்தவருக்கு 1745 ஆ மார்ச்சுமாதத்திலே இஸ்பாஞ்ஞியராசா. (King of Spaim) குமாரத்தியை கலியாணம் பண்ணினார்களே அந்த பெண்ணுக்கு 1746 ஆ சூலை மாதத்திலே ஆண்பிள்ளை பிறந்தது. இந்த சந்தோஷம் பிராஞ்சு ராசாவுக்கு ஒருமிதத்திலே யிருக்கவில்லையென்றும் தமக்கு முப்பத்தெட்டு வருஷத்துக்குள்ளே குமாரன் பிறந்து குமாரனுக்கும் குமாரன் பிறந்தது என்கிற சந்தோஷம் சொல்லிமுடியாது என்றும் அதை இஸ்பாஞ்ஞி Spain)ராசா குமாரத்தியை தொட்டுத்தான் கலகம் வெகுவிஸ்தாரமாச்சுது என்றும் அந்தப் பிள்ளை பிறந்தவுடனே பிராஞ்சுராசா மருமகள் இஸ்பாஞ் ராச குமாரத்தி சன்னி கண்டு மரணத்தை அடைந்தாளென்றும் இனிமேல் கலகம் அடங்கி சமாதானமாய்ப் போமென்றும், இவள்தான் மாமனாருக்கும் புருஷனுக்கும் சொல்லி கலகத்தை உண்டாக்கிக்

கொண்டிருந்தாளென்றும் இவள் செத்தப்படியினலே, கலகம் நின்று சமாதானமாகுமென்றும் சொன்னர். அதற்கு நான் சமாதானம் பேசுகிருர்களா என்று கேட்டேன். இப்போது அரைவாசி பேச்சு வார்த்தை நடத்தியிருக்கிறது. நிசமாயிருந்தாலுமிருக்கும் இங்கிலீசுக்காரர் மற்ற மூன்று மாதத்தைச் சேர்த்து ஒளித்துவிட்டு, மற்றது நமக்குக் கொடுத்து அனுப்புவித்தால் போல் காணுதென்றும், எனக்கேற்க இந்த ஸ்ரீ ஆடி மாதம் ஆவணி மாதம் வருகிற கப்பலிலே சமாதானமான காகிதம் வரப்போகுதென்றும் சொன்னர். அதற்கு நான் ஒருக்கால் எப்போது சமாதானத்துக்குப் பேச்சுவார்தைநடக்குதோ சமாதானம் ஆமென்கிறதற்குச் சந்தேகமில்லை என்றும் சொன்னேன். மெய்தானென்று சொல்லிப் போன ஸ்ரீ நாம் சென்னப்பட்டணத்திலே போய் இறங்கின தினமே வொரியாமேலே ஐம்பது கப்பல் இங்கிலீசுக்காரரது போய் இறங்கி நாம் சென்னப்பட்டணத்தின்மேலே அபசெயப்பட்டு நிருவாகம் பண்ண மாட்டாமல் புறப்பட்டுப் போய்விட்டார்களாம் என்று சொல்லி, அதைத்தொட்டு கும்பினியாருக்குச் சேதமுண்டு என்று சொல்லி எந்த ரூபத்திலேயும் சமாதானமாய்ப் போகுமென்று சொன்னர்.

1747 ஆ மே ௴ 22உ க்கு பிரபவ ஸ்ரீ வைகாசி ௴ 13உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றல்: இண்டு நாளைக்கு முன்னே இவ்விடத்திலே யிருந்து துரையவர்கள் காரைக்காலுக்கு ஒரு கடுதாசி எழுதி என்கையிலே கொடுத்து அந்தக் கடுதாசியைதேவனும்பட்டணத்திலே சவுக்கி இருக்கிற சேவகர் கையிலே அகப்படத்தக்கதாகக் கொண்டுபோய்ப் போட்டுவிட்டு வரச்சொல்லி உத்தாரங்கொடுத்தார்கள் அந்தக் கடுதாசியைக் கொண்டுவந்து பீத்தல் பை ஒன்று சம்பாதித்து அந்தப் பையிலே பத்துப் பதினைந்து கொட்டைப் பாக்கு சிறிது வெட்டின பிளகும், சொத்தையும் சொள்ளையுமாகப் போட்டு, நாலைந்து வாடல் வெற்றிலையும் புகையிலைக் காம்பும் தூளும் தும்மட்டியும் போட்டு, ஒரு சக்கிமுக்கியும், நான்கு மூன்று காசும் இதுகளெல்லாம் போட்டு அந்தப் பையிலே இந்தக் கடுதாசியும் கூடப்போட்டு மலையப்பன் சேவகன்

கையிலே கொடுத்து வழிப்போக்கன் செட்டி கொண்டுபோய்ப் போட்டுவிட்டபாவனையாய் அவர்கள் மனுஷர் கையிலே அகப் படத்தக்கனையாய்ப் போட்டுவிட்டு வரச்சொல்லி அனுப்பி வைத்தோம். அவர்கள் கொண்டுபோய் அந்தப்படி ரங்கப்ப நாயக்கன் பல்லக்குக்காரரிருக்கிற விடத்திலே கொண்டுபோய் அந்தப் பையைப் போட்டுவிட்டு அறியாதுபோல அப்புறத் திலே இருக்கச்சே ரங்கப்பநாயக்கருடைய பல்லக்குக்காரர்கள் கண்டெடுத்து அதைக் கொண்டுபோய் துரை கையிலே கொடுத்த சேதிக்கு இற்றைநாள் சாயங்காலம் கபுறுவந்தது. இந்தச் சேதியைப் போய் ஸ்ரீ துரையவர்களுடனே சொல்லிப் போட்டுவந்தேன்.

ஆனால் தேவனும்பட்டணம் சேதி யென்னவென்றால் : மதாம் மாசுடனே ( Me. Morse ) கூட கமாண்டோர் மேஸ்தர் கெரெபென் ( Mr. Griffin ) சிநேகமாய் திரிகிறபடியினாலே மேஸ்தர் மாசு பெண்சாதி தேவனும்பட்டணம் விட்டு புருஷ னண்டைக்குத் தலகம்பாடிக்குப் போகாமலிருக்கிறாளென்றும், இவள் தேவனும்பட்டணத்திலே இருக்கிறபடியினாலே கமாண் டோர் மேஸ்தர் கெரெபென் இவள் பேரிலே வலப்பாயிருக்கிற படியினாலே மதாம் துய்ப்பிளேய்க்சுக்கும், மதாம் மாசுக்கும் காகிதம் நடந்த சாடையின்பேரிலே கமாண்டோர் கெரெ பெனுக்கு, மதாம் துய்ப்பிளேய்சுக்கு காகிதங்கள் போக்கு வரத்து உண்டாச்சுது. அதன்பேரிலே தேவனும்பட்டணத் துக்கு இவ்விடத்திலே ஒரு நாள் ஒன்றுக்கு ரெவ்வெண்டு மூன்று காகிதம் வருத்தும் போக்குமாயிருக்கிறது. இதல்லாமல் தேவனும்பட்டணம் மதாரும் வீடுள்ளதெல்லாம் இடித்துப்போட்டுவிடச் சொல்லி தமுக்குப்போட்டு இடிக்கி றார்களென்றும், ஒலாந்தா பெத்ரி இடிக்கிறதற்கு நாகப்பட்டணத்திற்கு எழுதிப்போய் நாகப்பட்டணத்தாரும் கூடலூரிலே பதிலுக்குப் பெத்ரி கட்டிக்கொடுத்தால் இடித் துப் போடச்சொல்லி எழுதி வந்ததென்றும், அதன்பேரிலே ஒலாந்தாக்காரர் பெத்ரி தட்டுமுட்டெல்லாம், கூடலூருக்கு எடுத்துப் போகிறார்களென்றும், அப்பால் மேஸ்தருக்கு வீடு விஸ்பத்தால் பறங்கிப் பாதிரிக்கோயில் மேஸ்தர் பினேயா வீடு முதலானதெல்லாம் இடித்துச் சரியாய் நிரவுகிறார்களென்றும், தேவனும்பட்டணம் கோட்டையைத் தவிர மற்றதெல்லாம்

சமனம்பண்ணுகிருர்களென்றும், இந்தப்படிக்கு எழுதிவந்தது. இதல்லாமல் இதன் பிற்பாடு புரீதுசுக் கப்பல் சீனமக்காவிலே யிருந்து வந்தது. ஒன்று புதுச்சேரிக்குப் போகிறேமென்ருல் போகவேண்டாமென்று தடைபண்ணுகிருர்களென்றும், இங்கிலீசுக்காரரது இரண்டு கப்பல் பத்து நாளைக்கு முன்பாக இரண்டாயிரத்தி நானூற்றிச் சிலவாணம் கட்டு ஏற்றிப் பங்காளுக்குப் போய் அவ்விடத்திலே யிருந்து சீர்மைக்குப் பாயெடுத்து ஓடிற்றதாய் இரண்டு கப்பல் பயணம் சரக்குப் போச்சுதென்று தேவனும்பட்டணத்திலே இருக்கிற ஜனங்களெல்லாம் வீடுகளெல்லாம் தேவனும்பட்டணத்து குவர்னதோர் இடிப்பிக்கிருனே இங்கிலீசுக்காரருக்குப் போய் பிராஞ்சுக்காரருக்கானல் வீடு ஆகிலும் தப்பாதே என்று வெகு தாபந்தமாய்ச் சொல்லிக்கொள்ளுகிருர்கள் என்றும், பொம்பாயிலே யிருந்து இங்கிலீசுக்காரருக்குச் சிறிது கப்பல்கள் வருவதாயும், அதை பிரஞ்சுக் கப்பல்கள் கண்டு சண்டைப்போடுகிறதாயும் இப்படி தேவனும்பட்டணத்திற்கு அஞ்சாந்தலைச்சேரி.

1747 ஆ மே மீ 29உ க்கு பிரபவ ஹு வைகாசி மீ 19உ சோமவாரம்.

இற்றைநாள் பிள்ளை அவர்கள் திதியானபடியினலேயே ஏழு மணிக்கெல்லாம் பிராமணனை அழைப்பித்துத் திதி முடித்து விட்டு, எட்டு மணிக்கு துரை வீட்டுக்கு வந்தேன். இதிலே துரை அழைக்கிருரென்று சேவகன் வந்து அழைத்தான். போனவிடத்திலே மூசியே தெப்ரமேனி ( M. d'Espremenil ) சென்னப்பட்டணத்திலே பங்காளத்திற்குப் போகவேணுமென்று போகச்சே, துருராசப்பட்டணம் சிமிதார் பாளையக்காரன் மூசியே தெப்ரமேனி பிறகே போனவனையும், மூசியே தெப்ரமேனியையும் மறித்து இரண்டாயிரம் மூவாயிரம் வராகனுக்கு உண்டு ரொக்கம் வாங்கிக்கொண்டது. அப்பால் தினுசுகள் சிறிது வாங்கிக்கொண்டார்கள். அந்தக் கணக்கில் எழுதியிருக்கிறது. இதுவுமல்லாமல், நெல்லூர் பவுன்சுதாரன் மூசியே தெப்பிரமேனியை இரண்டு நாள் மறித்துவைத்திருந்து நானூற்றிருபது ரூபாய் வாங்கினனென்றும், பின்னையும் அநேக விதமாய் உபத்திரவப்படுத்தினனென்றும், இது நிமித்தியம் நபா அன்வர்திகான் ஷெகுமாரன் மாபூசுக்கான் இவர்களுக்குக் காகிதமெழுதச் சொல்லியும், இது நன்ருய் தெரியப்படச்

சொல்லிக் காரியம் சாதகம் பண்ணச்சொல்லி மகம்மதாக் கலுக்கும் உசேன் சாயபுக்கும் எழுதியனுப்புவிக்கச் சொல்லி யும், நம்முடைய வக்கீலுக்கு எழுதி அனுப்புவித்து ராத்திரி யும், பகலும் அலுவலைவிட்டு எந்த ரூபத்திலேயும் போன உட மையைத் திருப்பச்சொல்லியும், இதற்கு நயபயமாய்ச்சொல்லி உத்தாரம் எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதச்சொல்லி உத்தாரம்கொடுத்தார். அந்தப்படிக்குப் பாரிசு காகிதம் எழுது கிறுர்கள். நாளையதினம் பரவாணுவாயிருட் போம். இதல்லாமல் ராசா மச்சினன் சென்னப்பட்டணத்தண்டையிலேயே இருக் கிற திருப்போரூருக்கு மேற்கே அத்திப்பாக்கம் என்ற பாளை யப்பட்டு இருக்கிறது. அதிலே இருக்கிறது, வீரமராசாவென் றும், அவன் தம்பி கலியாணராசாவென்றும், அவர்கள் மல்ராசா சொல்லின்பேரிலே முன்சென்னப்பட்டணத்திலேயே இருந்து சிறிது வெள்ளிப்பெட்டியும், சிறிது சரக்கும் இரண்டு மூன்று தண்டகம் வந்தபோதும். அதைச் செப்பனிடவேணு மென்றும் யோசனைபண்ணினவிடத்திலே அவனுக்குக் கொஞ் சம் ராணுவம் நூறுபேர் ஆனபடியினுலேயும், இவர்கள் மாயே சிப்பாய்களும் வெள்ளைக்காரரும் நூற பேர் ஆனபடியினல், பொசுக்காமல்போய் அந்தமட்டிலே கலியாணராசா தேவனும் பட்டணத்திலே மல்ராசாவண்டையிலே யிருந்து இப்போது நம்முடைய வீட்டுக் கலியாணத்துக்கு முத்தியப்பிள்ளை சென் னப்பட்டணத்திலேயிருந்து வருகிறுனென்று அவரைப் பிடிக்க வேணுமென்று தேவனும்பட்டணத்திலிருக்கிற இங்கிலீசுக் காரர் குவர்னதோர் மேஸ்தர் பிளேயா உத்தாரப்படிக்கு மல்ராசாசொல்லி அவன் மைத்துனன் கலியாண ராசாவையும் முன்னூற் சேவகரையும், திருப்போரூர் அண்டையிலேயிருக் கிற அத்திப்பாக்கம் பாளையப்பட்டிலே போயிருக்கச்சொல்லச் சொல்லி. அனுப்பினுப்போலேயும், அவன் முன்னூறு பேரு டனே சென்னப்பட்டணத்துக்கு வழி காட்டுகிறதற்காகப் போனதாகவும் இந்தச் சேதி தேவனும்பட்டணத்திலிருந்து நமக்கு கபுறுகொண்டுவருகிற வேவுகாரர்கள் வந்து சொன்னுர்கள். அது மெய்யோ பொய்யோவென்று, ஆலோசனைபண்ணிக்கொண்டிருக்கச்சே, வழுதாவூரிலேயிருந்து ராமபத்திரரெட்டி முத்தியப்பிள்ளை கணக்கு திருவொத்தசாமி பிள்ளை பேருக்கு இப்படி மல்ராசா மைத்துனன் சென்னப் பட்டணத்திற்கு முன்னூறுபேர் துபாக்கிக்காரருடனே போகி

ருன். அவன் போகிற காரியம் என்னவென்று விசாரித்தால் முத்தியப்பிள்ளை புதுச்சேரிக்குக் கலியாணத்திற்கு வருகிரு ரென்றும், அவரைப் பிடிக்கப்போனதாய்ச் சேதி ரகசியமாய் வந்ததென்றும், அது நாம் கேள்விப்பட்டமட்டுக்கும், உங்களுக் கெழுதி அனுப்புவித்தோம். நீங்கள் பிள்ளை அவர்களுக்குச் சொல்லி சென்னபட்டணத்துக்கு எழுதியனுப்புவித்து எப் படி பத்திரப்படுத்திக்கொள்ளவேணுமோ அப்படி பத்திரப் படுத்திக்கொள்ளவும் என்று எழுதி வந்ததாய் திருவொத்தசாமி முதலி என்னுடனே நேற்று சாயங்காலம் வந்து சொன் ஞன். அதன்பேரிலே முத்தியப்பிள்ளை அவர்களுக்கு என் காகிதமொன்றும், சேஷாத்திரிபிள்ளை அவர்கள் காகிதம் ஒன்றும், மேலே எழுதப்பட்ட வயணம் எழுதி க்லியாண மானுல் வெகு சமுசயமாய் இருக்கிறது. நடக்கிற ராசகாரியங் கள் இப்படியிருக்கிறது. இதன்பேரிலே நடக்கவேண்டியதுக்கு வயணம் எழுதியனுப்பச்சொல்லி தபாலிலே காகிதம் எழுதி யனுப்பிப்போட்டுவிட்டு இந்தச் சேதியைத் துரைக்குச் சொல்லுவோமென்றிருக்கச்சே, துரை தானே தேவனும்பட்ட ணத்திலேயிருந்து ஏதாகிலும் சேதி வந்துதாவென்று கேட் டார். முந்தாம்நாள் நாலாம்நாள் பீரங்கிச் சப்தம் கேட்டது. அது ஒரு கப்பல் பங்காளுக்கு பாயெடுத்ததாயும் அதிலே ஆயி ரத்துச் சிலவாணக்கட்டு ஏற்றிப் பரசுவேல் என்கிறவனும் பங் காளுக்குப் போனுனென்றும் இந்தக் கப்பலின்பேரிலே பிரான் சுக்காரர் பிரிஜோனியேர்களாயிருந்தவர்களும் கூடப் போனூர் களாம் என்றும், இனிமேல் கோட்டையிலே புடவைக்கட்டுகள் எல்லாம் சாடாவாய் ஏறிப்போச்சுதென்றும், இப்போது மூவாயிரம் கட்டுக்குப் பண்டார்முதலிக்கு இரிசப்பசெட்டி நாராயணசெட்டிக்கு இரண்டு பாகமொருபாகமாகச் சரக்கு கூட்டச்சொல்லி, பண்டார்முதலிக்கு ரூபாய் ஐயாயிரம் வரா கனுக்கு நக்ஷத்திர வரா:கன் இருபத்தையாயிரமும் ஆகப் பண் டார்முதலியாருக்கு முப்பதினுயிரம் வராகனும் இரிசப்ப செட்டி நாராயணசெட்டிக்கு பதினுயிரம் வராகனுக்குக் கோந்திருந்துக்காகப் பணம் கொடுத்து சரக்குக் கூட்டச் சொன்னுர்கள் என்றும் அவர்களும் பணம் வாங்கிவந்து நல்ல நாள் கேட்டுத் துலைகளுக்கு இப்போது பணம் கட்டினுர்களென் றும், பங்காளத்துக்கு ஒரு கப்பல் மேஸ்தர் மேலின் கப்பல் போகுதென்றும், அதன்பேரிலே சர்வமான முதலான பேர்

களும் போகிறுர்களென்றும், அதன்பேரிலே தேவனும்பட்ட ... ீடு சமஸ்தமும் இடித்து ஒலாந்தா பெத்ரி மாத்திரம் இருந்துதே அதுவும் நாகப்பட்டனத்துக்கு எழுதி அனுப்பிப் பதினுலாயிரத்துச் சிலவாணம் வராகன் கொடுக்கவும் பெத்ரி கட்டிக்கொள்ளுகிறதற்கு இடம் கூடலூரிலே விடவும், இந்தப்படிக்கு உடம்படிக்கையாகி, கூடலூரிலேயிருக்கிற ஒரு வீட்டிலே ஒலாந்தாக்காரர் பெத்ரி தட்டு முட்டுகளெல்லாம் எடுத்துக்கொண்டு கூடலூரிலே போகிறதாகவும், அதன் பேரிலே ஒலாந்தா பெத்ரி இடித்துப்போட்டுவிடுகிறதாகவும் சின்னதுரை மேஸ்தர் பிளேயர் குவர்னதோர் வீடும், பாதிரி கோவில், ஒப்பித்தால் முதலானதெல்லாம் இடித்து நிரவிப் போட்டதாய்ச் சேதிவந்ததென்றுசொன்னேன். அப்படியானுல் தேவனும்பட்டணத்துக் கோட்டை தவிர மற்றப்படி வீடு வேறேயில்லையோவென்று கேட்டார். இல்லை என்றுசொல்லி, தேவனும்பட்டணத்திலிருந்து மல்ராசா மனுஷர் முன்னூறு பேரும் கலியாணராசாவும் சென்னப்பட்டணத்துக்குப்போன சேதியும் சென்னப்பட்டணத்திலிருந்து கலியாணத்துக்கு வருகிற முத்தியபிள்ளையைப் பிடிக்க எத்தனம் பண்ணியிருக்கிற சாடைசவிஸ்தாரமாய்ச் சொன்னவிடத்திலே, துரையவர்கள் இந்தச் சேதியெல்லாம் பூருவோத்திராயணமாய் நபா அன்வற்திகான், ஷெ குமாரன் மாபூசுகானுக்கு, உசேன் சாயபுக்கு, மகம்மதாக்கலுக்கு எழுதி அனுப்பச்சொன்னுர்கள். நல்லதென்று எழுதி அனுப்புகிறேன் என்று சொன்னேன். பிற்பாடு முசியே துலாராமுத்து எழுதுகிறகாகிதத்திலேயும் வயணமாயெழுதினுர். முத்தியப்பிள்ளை வருகிறதற்கு விகாதமாயிருக்குதே என்றுசொன்னுர், அப்படியிருக்குதென்று உத்தரவு சொன்னேன். அப்பால், சதுரங்கப்பட்டணத்திலிருக்கிற ஒலாந்தா பெத்ரி அடுத்தாப்போலே சென்னப்பட்டணம் சொலுதாது கப்பித்தான் மேஸ்தர் எக்குமான் என்கிறவன் ஒரு வீட்டிலேயிருக்கச்சே வெள்ளியன்று ராத்திரி இரண்டு சலங்கின் பேரிலே பிராஞ்சுக்காரர் வந்தார்களென்றும் மேஸ்தர் எக்குமானைப் பிடித்துப்போனுர்களென்றும் சதுரங்கப்பட்டணத்திலிருக்கிறவன் எழுதி அனுப்பியிருந்தான். அந்தச் சேதியை, துரை அறிந்திருக்கிருரென்று நான் சாடையாய் மேஸ்தர் எக்குமானை (M. Ekman) நம்முடையவர்கள் வந்து உபாயமாய்ப் பிடித்துப்போனுர்களென்று சொன்னேன். அதற்குத்

துரையவர்கள் மேஸ்தர் எக்குமான் பெண்சாதி, என் பெண் சாதிக்குக் காகிதம் எழுதியனுப்பினுள். பிராஞ்சுக்காரர்கள் வந்து சதுரங்கப்பட்டணத்திலிருந்து என் புருஷனைப் பிடித்துப் போனுர்களென்று எழுதியனுப்பினுர்கள். என்னமாய் நடந்ததென்று கேட்டார். இரண்டு சலங்கின்பேரிலே சொல்தாதுகள் வெள்ளிக்கிழமை ராத்திரி பத்து மணிக்குச் சதுரங்கப்பட்டணத்துத் துறையிலே இறங்கின சேதியும், அப்பால் அதிலே ஏழெட்டு சொல்தாதுகளும். ஒரு ஒபிசியேலும், ஒரு தமிழனும் வந்து பெத்திரிக்கு அடுத்தாப்போலே இருக்கிற எக்குமான் (M. Ekman) இருக்கிற வீட்டுக்கதவைச் சாத்தி நித்திரை போகிறபடியினுலே கதவைத் தட்டினுர்களாம். அந்த வீட்டுக்குள்ளே அவன் பெண்சாதி வியாதியுடனே படுத்துகொண்டிருக்கிறபடியினுலே வைத்தியனொருத்தன் படுத்துக்கொண்டிருந்தான். அந்த வைத்தியன் விழித்துக் கொண்டு எழுந்திருந்துவந்து கதவைத் தட்டுகிறவர்கள் ஆரென்று கேட்டானும், வெளியே நின்ற தமிழன், பழவேற்காட்டிலேயிருந்து காகிதங்கொண்டுவந்து கொடுத்துவிட்டு அப்பாலே இப்போதானே கூடலூருக்குப் போகவேணுமென்று சொன்னுர். அதன்பேரிலே அவன் கதவைத் திறந்தானும். திறந்தாப்போலே உள்ளே சொல்தாதுகளும், ஒபிசியேலும், தமிழனும் உள்ளே புகுந்தாப்போலேயிருக்கிறவர்களெல்லாம் காபுருப்பட்டு கூந்தலானைப்போலே மேஸ்தர் எக்குமான், என்ன சந்தடியென்று வீட்டிலே படுத்தக்கொண்டிருந்தவன் வெளியே வந்து நின்றவுடனே, சொலுதாதுகள் பின்கட்டுமார் கட்டித் தூக்கிக் கொண்டு கடற்கரையே வந்து சலங்கின் பேரிலே போட்டுக் கொண்டு போனுர்களாம். அதன்பேரிலே ஒலாந்தா பெத்ரி சேவகர்களும் சேருவைக்காரருமாய் நூறு நூற்றைம்பது பேர் கூட்டங்கூடிக்கொண்டு ஒலாந்தா பெத்ரியைக் கதவைத் தட்டி என்னமாய்க் கூப்பிட்டாலும் பரிச்சேதம் கதவைத் திறவாமல் போனுர்களாம். அதன்பேரிலே பொழுதுவிடிந்த பிற்பாடு கதவைத்திறந்தார்களாம். இந்தச் சமாசாரமெல்லாம் கேட்டுப் பிராஞ்சுக்காரர் மனுஷர் இங்கே வந்திருந்து உளவு விசாரித்துக்கொண்டு இங்கே நடக்கிற சேதியெல்லாம் சென்னப்பட்டணம் புதுச்சேரிக்கு அனுப்பி இப்போ சமயம் பார்த்துப் பிடித்துக்கொண்டு போனுர்களென்றும் நாகப்

பட்டணத்துக் காகிதம் எழுதினார்களாம். இந்தப்படிக்கு நடந்ததாய்ச் சேதி வந்ததென்று சொன்னேன். இது இங்கிலீசுக்காரர் கப்பல் வெள்ளியன்று இந்தத் துறைக்கு நேராய் வடக்கே ஓடின கப்பல் சதுரங்கப்பட்டணத்துத் துறை பிடித்து அங்கே ராத்திரி இறங்கி அவனைப் பிடித்துக்கொண்டு கப்பலின்பேரிலே ஏற்றிக்கொண்டு போனார்கள். பிடித்தவர்களும் இங்கிலீசுக்காரர் பேர் பிராஞ்சுகாரர் என்று ஓங்கிச் சுது என்று சொன்னார். இங்கிலீசுக்காரர் அவனைப் பிடிக்க வந்த காரியம் என்னவென்று கேட்டேன். சென்னப்பட்டணத்தை ஒப்புவித்துப்போட்டவர்கள் மேஸ்தர் மாசு துவர்ல தோநும், சொலுதாது கப்பித்தான் மேஸ்தர் எக்குமானுமென்று, அன்றுமுதலின்றுவரைக்கும் இவர்கள் இரண்டு பேருக்கும் தேவனாம்பட்டணத்தாருக்கும் மெத்த கோபமாயிருக்கிறது. இனிமேல் அதன்பேரிலே இப்போ என்ன நடந்ததோ தெரியாது. அதன்பேரிலே கோபித்துக்கொண்டு போனார்கள். ராத்திரி வேளையிலே வந்ததும் போனதுமானபடியினாலே இங்கிலீசுக்காரர் பிடிக்கிறதற்கு நியாயமில்லையே. பிராஞ்சுக்காரர்தான் பிடித்துப்போகவேணுமென்று யோசனை பண்ணினார்களானபடியினாலே இப்போதானே சதுரங்கப்பட்டணத்து பெத்திரி கப்பித்தேன் மனோர் ஸ்தபிந்து (Mr. Mininkeer Stapid) என்கிறவருக்குக் காகிதமெழுதி அனுப்பவேணுமென்றும், மத்தேவ்சை (Mr. Mathew) அழைப்பித்த வயணம் சொல்லி, தங்களால் நடந்ததில்லையென்று அதற்குச் சாதக்ங்கள் கூட எழுதி டபாலிலே போட்டு அப்போதுதானே போட்டு அனுப்பிவிட்டார்.

1747 ஆ மே மீ 30 உக்கு பிரபவ ஷு வைகாசி மீ 20 உ மங்களவாரம்.

இன்றைய சேதி என்னவென்றால்: நபாபு அன்வர்திகான் திருச்சிராப்பள்ளியை விட்டுப் புறப்பட்டவன், மாபூசுகான்—சம்பதிராயன்—அன்வர்திகான் முதலான பேர் உடையார் பாளையத்தின்பேரிலே புறப்பட்டுத் திருவிதி, பண்ருட்டி (Trividi, Panruti) விழுப்புரம், செஞ்சிக்குப் போய் அங்கே ஒரு நாளிருந்து அப்பாலே போறானென்று கபுறு வந்த சேதியைத் துரைக்குச் சொன்னேன். அதற்குத் துரை அவர்கள் ஆனாலென்றைய தினம் போய் ஆற்காட்டுக்குப்போய்ச் சேருவா

னென்று கேட்டார். நேற்று 19 உ திங்கட்கிழமை போய்ச சேரவேணுமென்று சொன்னேன். ஆனால், சிதம்பரத்துக்கு முதாமியாவுக்கு ஒரு காகிதம் எழுதி அனுப்பிவையென்றும், முசியே தெ லா யேய் (M. de la Haye) என்கிறவன் ஒருத்தன் சிதம்பரத்திலிருந்து வருகிறானவனுக்குப் பதினைந்து இருபது சேவகரைக் கூடக்கூட்டி, புதுச்சேரிக்குக் கொண்டுவந்து சேர்க்கச்சொல்லி, எழுதியனுப்பச் சொல்லியும், பத்துப்பேர் சேவகர் வில்லியநல்லூருக்குச் சிதம்பரத்து மேலே வழியாய் வைக்கச்சொல்லியும், முசியே தெ லா யேய் ( M. de la Hage ) என்கிறவன் ஒபிசியேல் வந்தால் நடுவழியிலே இங்கிலீசுக்கார மனுஷர்கள் சச்சுகண்டால் அந்த வெள்ளைக் காரனுக்கு உபாயக் கபுறுசொல்லச்சொல்லியும், காணுவிட்டா லும் இங்கிலீசுக்காரர் மனுஷர் காண்பிக்கவில்லையென்று கபுறு போய்ச்சொல்லச் சொல்லியும் இந்தப்படியாகப் பத்துச் சேவ கரை சிதம்பர மட்டுக்கும் அனுப்பி அங்கங்கே தாவிலே நின்று கபுறுசொல்லச் சொன்னார். அந்தப்படிக்கு மலையப்பன் தாலூக்கு மனுஷருக்கும் படிசொடுத்து அனுப்புவித்து முதா மியா காகிதமும் எழுதுவித்து முதாமியாவுக்கு அனுப்புவித் தேன். மற்றப்படி விசேஷித்த சமாசாரம் ஒன்றுமில்லை.

1747 ஆ ஜூன் மீ 2 உ க்கு பிரபவ ஹூ வைகாசி மூ 23உ சுக்கிரவாரம்.

முசியே தெப்பிரமேனி (Mr. de Espremenil) பிறகே லெமெ ரியே (M. Le Mai ie) என்கிறவன் மச்சிலிபந்தருக்கு (Masulipatam) கூடப் போகச்சே சிங்கரிகோட்டை பாளையக்காரன் பின்னையும் சில்லரைப்பாளையக்காரர் வழியிலே பறித்துக் கொண்ட தட்டு முட்டு வயணம்:

| | |
|---|---|
| வெள்ளிகட்டின உயர்ந்த துப்பாக்கி | 1 |
| வெள்ளி ஓர்லோஸ் | 1 |
| ரொக்கம் வராகன் உயர்ந்த தொகை | |
| இதல்லாமல் சிறிது ரத்தின நகைகள் | |

இது, துவாகராசப்பட்டணம் பாளையக்காரனும் நெல்லூர் பவுஞ்சுதாரனும் நாற்பத்தியெட்டு மணிநேரம் தன்னை நிறுத்தி வைத்துவாங்கிக்கொண்ட நஜாச்சிரியம் வராகன். இதல்லா

மல், என்னை அவன் வீட்டுக்கு இழுத்துக்கொண்டுபோன போது என் கையிலேயிருந்த பிஸ்தோல் ஒன்றும் ஏழு வராக னும் என்னைத் தரையிலே படுத்துக்கொள்ளச் சொன்னவிடத் திலே கிட்டேயிருந்த சேவகன் வாங்கிக்கொண்டான்.

இதல்லாமல், என்னுடைய கால் சட்டைக்குள்ளே ஒரு ணைக் கொண்டுவந்துவிட்டு அடித்தும் இல்லாத இமிசையும் பண்ணி அப்பால் நெல்லூர் பவுஞ்சுதாரனண்டைக்கு அனுப்புவித்தார்கள். அவ்விடத்திலே முப்பத்தாறு மணி நேரம் என்னை வைத்துக்கொண்டிருந்து அவன் ஒரு பாளையக்காரன்வழியிலே என்னை ஒப்புவித்தான். அவ் விடத்திலேயும் என்னை சேனே கஷ்டப்படுத்தினார்கள். இதல்லாமல், என் கையிலே நெல்லூரிலே வாங்கிக்கொண்டது கல் இழைத்த மோதிரம் 1, மெத்த நேர்த்தி வெள்ளிக்கட்டின இஜிதோர் பெட்டி 1, கறுவாத்துலே போடுகிற முள்ளு பொன்னினாலே பண்ணினது 1, பஞ்சலோகத்திலே பண்ணி னது 1, கமிசிலே போடுகிற பொன்பொத்தான் 1, சப்பாத் துலே போடுகிற வெள்ளி முள்ளு 2, மேச்சோடு கட்டுகிற பொத்தான் சோடு 1. சிமிளுக்கு வைக்கிற அகாத்துக் கல்லு 8. காப்பிரிகள் காதிலே போடுகிற வெள்ளி மத்திக்காய் 4, இது வும் பொத்தான் போடுகிற அகாத்து கல்லு 8, கழுத்துக்குப் போடுகிறதும் பின்னையும் நாலாவித வெள்ளி நகைகளுமுண்டு. வெள்ளிப்பிடிபோட்ட கத்தி 1, பிஸ்தோல் 1, இந்தப்படிக்கு பிராஞ்சு எழுத்திலே சாப்பித்தா 1747 ஆண்டு மே மீ 19உ எழுதிவந்தது. லெமேரியே என்று இந்த சாப்பித்தாவுக்குக் கீழே கையெழுத்துப்போட்டான்.

1747 ஆ ஜூன் மீ 5 உ க்கு பிரபவ ஞூ வைகாசி மீ 26 உ சோமவாரம்.

இதல்லாமல் திக்குடுக்கைப் பத்திக்கொண்ட சப்தம் குண்டுதாழையைச் சுற்றியிருக்கப்பட்ட கெவுனிவாசல்தன்னை, தாணையமிருக்கப்பட்ட சேவகருக்கெல்லாம் முன்னாலே கொடுத் திருந்த ஒடுதியென்னவென்றால்: பட்டப்பகலிலே கோட்டை யிலே கொடிபோட்டு ஒரு பீரங்கிப் போட்டவுடனே சுற்றி யிருக்கிற கெவுனிகளெல்லாம் சாத்திப்போட்டுத் தாணையமிருக் கிற சேவகரெல்லாரும் கோட்டையிலே இரண்டு பீரங்கிப்

போட்டால் எல்லாரும் வந்துசேருகிறதென உத்தாரங் கட்டளை இருந்தபடியினாலே அந்தப்படிக்கு மத்தியானம் காலமே ஏழு மணிக்குத் திக்குடுக்கைப் பத்திக்கொண்டு வெடித்தது, பீரங்கி சப்தம்போலே கேட்டது. ஆனபடியினாலே, குண்டு தாழையைச் சுற்றியிருக்கப்பட்ட கெவுனியெல்லாம் சாத்திப் போட்டு, தாணையமிருந்த சேவகரெல்லாரும் கோட்டைக்கு வந்து சேர்ந்தார்கள். இதிலே ஒரு சந்தேகம்: கொடிபோடாத படியினாலே உடனே கபுறு தெரிந்துகொண்டு மறுபடியும் கதவைத் திறந்துவிட்டார்கள். இன்றையதினம் இத்தனை அலங்கோலப்பட்டுப்போச்சுது.

1747 ஆ ஜூன் மீ 6 உ க்கு பிரபவ ஹு வைகாசி மீ 27 உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்கு நான் வந்தவிடத்திலே சின்னமுதலியார் வந்து ஸ்ரீ துரையவர்களுடனே சொல்லிக்கொண்டதென்னவென்றால்: தம்முடைய தமையன் கணக்கிலே எழுதியிருக்கிறபடிக்குக் கெவுனிவாச முதலிபேரிலே தொண்ணூற்றொரு வராகன் வரவேணும். அதைக் கேட்கப்போனால், நான் மணிலாவுக்கு அச்சைக்கு யாத்திரை போய்வந்தபோது, சேனதினுசுகள் வெகுமானம் கொண்டுவந்துகொடுத்திருக்கிறேன். அது நிமித்தியமாய் எனக்குச் செலவுக்கில்லாத வேளையிலே கேட்டால் நாலு ரெண்டுமாய்க் கொடுத்திருக்கிறார். இப்பவும் அந்தப்படிக்கு உங்களுக்கு வராகன் வேண்டுமென்றால் நான் கொடுத்த வெகுமானத்தையெல்லாம் எனக்குக் கொடுத்துவிடும், உம்முடைய வராகன் வேண்டுமானால் கொடுத்துவிடுகிறோமென்று எதிர் வியாச்சியம் சொல்லுகிறானென்றும், இதல்லாமல் மலையப்பன் பேரிலே ஐம்பது வராகன் வரவேணும். அந்த வராகனை அவனைக் கேட்கப்போனால் கனகராயமுதலியார் பெண்சாதி பணம் முப்பது வராகன் அவள் சொந்தமாய் எங்கள் பணத்துடனே வைத்திருந்ததாகவும் அந்த ஐம்பது வராகனுக்கு முப்பது வராகன் போக, குறை இருபது வராகனும் கொடுத்துவிடுகிறோமென்றும், அதுவும் இப்போது என் கையிலேயில்லையென்றும் இப்படி அவனும் எதிர் வழக்குச் சொல்லுகிறானென்றும், அந்தப் பணத்தை எனக்கு வாங்கித்தரவேணுமென்றும், இப்படியாகத் தானியப்பமுதலி, துரையவர்கு

ளுடனே சொல்லிக்கொண்டார். அதன்பேரிலே துரையவர்க ளிருந்துகொண்டு சொன்னது என்னவென்றால்: இவர் காரியத் திலே முன்னாலே தாம் பிரயோசலட்டபட்டிருக்கிறபடியினாலே யும் அந்த நட்பிநலே, முகப்பிரீதினாலே என்னை அழைத்து நீ இதை விசாரித்துக் கெவுனிவாசமுதலிக்கும் மலையப்பனுக்கும் சொல்லி அந்த வராகனைக் கேட்டு வாங்கிக்கொடுத்துவிடு. அவர்கள் கொடுத்தாலாச்சுது. இல்லாவிட்டால் காவலிலே வைத்து வாங்கிக்கொடுத்துவிடென்று உத்தாரங்கொடுத்தார் கள்.

தேவனாம்பட்டணத்திலே வீடுகளெல்லாம் இடிக்கிறசேதி நாளது வரைக்கும் கபுறுவந்துகொண்டிருக்குதே, அதல்லாமல் இப்போது ஒரு சேதி கூட லூரிலே வடவண்டை மதிலும், கொத் தளமும், அதற்கடுத்தாப்போல் நாலு தெருவும் பிடிக்கத்தக்க தாக நூல்போட்டு ஆரம்பித்து இடிக்கிறார்களென்று துரையவர் களுடனே சொன்னேன். அதற்கு அவரிருந்துகொண்டு தேவ னாம்பட்டணந்தான் இடித்துப்போடுகிறார்களே கூட லூரை என்ன நிமித்தியமாக இடிக்கிறார்களென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: அவர்களுடைய யோசனை என்னமோ, அவர் களுக்கு என்ன சேதி வந்திருக்குதோ அல்லவென்று பிராஞ் சுக்காரருக்கு பெலப்பாய் கப்பல்கள் வந்திருக்கவேணும், அத னாலேதான் கூட லூர் கூட இடிக்கிறார்கள். அப்படி பிராஞ்சுக் காரருக்குக் கப்பல்கள் வருகிற கபுறு ஏதாகிலும் அவர்களுக்கு வந்திருக்கவேணும், அதன்பேரில்தான் இடிக்கிறார்களென்றும் சொன்னேன். அதுமெய்தான் அப்படித்தானிருக்கவேணும். இல்லாவிட்டால் இத்தனை தீவிரமாக அவர்கள் கூடலூரில் இடிக்கக் காரியமில்லையே! நல்லது, இன்னம் நடக்கிற சேதி தெரிந்துகொண்டு வந்துசொல்லென்று சொன்னார்கள். நல்ல தய்யாவென்று சொன்னேன்.

1747 ஆ ஜூன் மீ 10 உக்கு பிரபவ ஹ வைகாசி மீ 31 உ சனிவாரம்.

இற்றைநாள் குவர்னதோரிடத்திலே போய் பேசிக்கொண் டிருக்கச்சே தேவனாம்பட்டணம் சமாசாரம் என்னவென்று கேட்டார். பொம்பாயிலேயிருந்து ஐந்து கப்பல் வந்ததென்று சமாசாரம் வந்தது.

ஒரு பிரஞ்சுக்காரன் பொம்படுத்தேறையிருந்து அவன் இவ் விடத்துக்குச் சேதிபாதிசொல்லி அனுப்புகிருனென்றும் காகிதம் அகப்பட்டது என்றும், அவனைக் கமாண்டோர் கப்பலின் பேரிலே தூக்கிப் போட்டார்களாம். மேஸ்தர் குரோக்கே (Mr Croke) பெண்சாதி, அவர் பிள்ளைகள் அனைவரும் பங்காளத்துக்குச் சூரத்துக்கப்பல்பத்தேசவல்லர் கப்பலின்பேரிலே ஏறிப்போகிறார்களென்றும் சேதிவந்தது என்று சொன்னேன்.

1747 ஆ ஜூன் மீ 11 வ க்ரு பிரபவ ஞு ஆனி மூ 1 வ ஆதிவாரம்.

இற்றைநாள் ஆற்காட்டிலேயிருந்து சுப்பய்யன் காகிதம் வந்தது. அந்தக் காகிதத்திலே எழுதிவந்த வயணமென்னவென்றால்: முன்னாலே தேவனாம்பட்டணத்திலே துரைத்தனம் பண்ணிச் செத்துப்போன மேஸ்தர் அயின்து (Mr Hinde) என்கிறவன் நாசர்சங்கு அவர்களுக்குச் சிறிது வெகுமானமும், கட்டி காகிதமும் எழுதின வயணமென்னவென்றால்: எங்களுடனே சென்னப்பட்டணத்தைப் புதுச்சேரி பிராஞ்சுக்காரர் சண்டைபண்ணிப் பறித்துக்கொண்டார்கள். அந்தப்பட்டணத்திலே பாச்சா சவுக்காரியள் அனேகம்பேரிருந்தார்கள். அவர்கள் எல்லாரையும் அகாமிபண்ணினார்கள். அதன்பேரிலே மாபூசுகான் அவர்கள் பவுஞ்சுகூட்டிக்கொண்டு வந்தார்கள். போனவிடத்திலே பிரஞ்சுக்காரர் கையிலே அகப்பட்டு அபசெயப்பட்டு ஓடிப்போனார்கள். அதன்பேரிலே பிரஞ்சுக்காரர் சும்மாயிராமலே வெளியே புறப்பட்டுப் பாச்சா சீர்மையிலே சாகிருகள் (Jahirs) சுமாரும் எல்லாம் அன்வர்திகான் உள் கையாயிருந்து சாகிருகளையெல்லாம் சுட்டுத் தாம்தூம் பண்ணினார்கள். இதுகளுக்கெல்லாம் அன்வர்திகான் உள்கையாயிருந்து சுறுக்காறு சீர்மை லூட்டிபண்ணுவித்து, குடியள் சவுக்காரியள் எல்லாரையும் முழுக்கடித்து இந்தவிதத்திலே பணம் சம்பாதிக்கிறார்கள். அல்லாமல் பவுஞ்சு சிப்பந்தி வைத்து புதுச்சேரி பிரஞ்சுக்காரரை செயிக்கவில்லை. கடைசியிலே எங்களுக்குப் பரவசம் கொடுத்துப் பட்டணமும் சவுக்காரர் சீர்மைகூட அலங்கோலம் பண்ணினபிறகு அவர்களுடனே எதிர்த்துச் சண்டைபண்ணமாட்டாமல் உள்ளுக்குள்ளே சமாதானம்பேசி, பணம்காசு வாங்கிக்கொண்டு போய்விட்டார்களென்றும், பின்னையும் அதற்கேத்தபடி கோபம் வரத்தக்க

தாக எழுதி, சென்னப்பட்டணத்தை எங்களுக்கு வாங்கிக் கொடுக்கவும் தேவனும்பட்டணத்து மேலே சண்டைக்கு வருகிறோம். அதுவும் பிரஞ்சுக்காரருக்குத் தாகீது எழுதச்சொல்லி எழுதி, புடவைச் சீலை சிறிது வெகுமானமும் கொடுத்து, தங்கள் மனுஷரையும் கூட்டி அனுப்பியிருந்தார்களாம். அந்த வெகுமானத்தையெல்லாம் நாசர்சங்கு வாங்கிக்கொண்டு பதிலுக்கு ஒரு சிரொப்பாவும் கொடுத்து இரண்டு பேர்.....ம் நாலு டலாயித்துக்காரரையும் கூடக்கூட்டி, தேவனும்பட்டணத்துக்கு அனுப்புவித்து அவ்விடத்து அக்கிகத்தெல்லாம் விசாரித்து எழுதியனுப்புங்கள். நாமும் சவாரி வருகிறப்போலே அவ்விடம் வருகிறோமென்று சொல்லி அனுப்புவித்ததாகவும், அவர்கள் வந்து ஆற்காடு சேர்ந்ததாகவும், அந்த இடத்திலேயிருந்து தேவனும்பட்டணத்துக்குப் போகிறதாகவும், இப்படியாக எழுதிவந்தது. அந்தச் சேதியை ஸ்ரீ துரையவர்களுடனே சொன்னேன். அதற்குத் துரையவர்கள் இருந்துகொண்டு நம்முடைய வக்கில் சுப்பய்யனுக்கு எழுதச்சொன்ன வயணம் என்னவென்றால்: சுப்பய்யன்பேரிலே தானே இங்கிலீசுக்காரர் எழுதி அனுப்புவித்தார்களே, நீங்கள் அவர்களுக்கு மற்றது பேசுகிறீர்களே, உங்களுடைய சுபைக்குத் தானே மோப்பு வைத்தார்களே என்று அந்தரங்கமாக அதற்கு எப்படி சொல்லவேணுமோ அந்தப்படிக்குச் சொல்லச்சொல்லி அவர்களுக்கு எழுதியனுப்பச் சொன்னார்கள். நல்லதென்று சொல்லிவிட்டுப் பாக்குக்கிடங்குக்கு வந்தோம்.

*1747* ஆ ஜூன் மீ 13௳ க்கு பிரபவ ஸு ஆனி மீ 3௳ மங்களவாரம்.

இற்றைநாள் நடந்த அதிசயம் என்னவென்றால்: இமாம் சாயபு மனுஷன் அவ்வாய் சாயபு நேற்றையதினம் வந்து நம்முடைய தோட்டத்திலே இறங்கி நமக்குச் சொல்லியனுப்புவித்தவிடத்திலே நான் துரையவர்களுடனே எச்சரித்துவிட்டு நான் போய்க் கண்டு பேசினவிடத்திலே அவர்கள் சொன்னது: நாசர்சங்கு வெகுமானம் அனுப்புவித்திருக்கிறாரென்றும் இமாம்சாயபு வெகுமானம் அனுப்புவித்திருக்கிறாரென்றும் சொன்னார்கள். அந்தச் சேதியை வந்து துரையவர்களுடனே சொன்னதற்கு, ஆனால் நாளைக்காலமே சூரிய உதயத்திற்கு அந்த வெகுமானத்தைக் கொண்டுவருகிறதற்கு என்னென்ன

முஸ்திதுபண்ணுவிக்கவேணுமோ அதுகளெல்லாம் இப்போது தானே தயார்பண்ணிவையென்று உத்தாரம் பண்ணினார்கள். அந்தமட்டிலே பாக்குக் கிடங்குக்கு வந்து நாளைய காலமே ஐந்து மணிக்கு—வெகுமானத்துக்கு எதிர்கொண்டுபோகிற வனுக்குக் குதிரைகள், ஆனைகள், நவபத்துக் குதிரைகள், மற்றதும் தேவையான காரியங்களுக்கெல்லாம் சொல்லி அனுப்பித் திட்டப்படுத்திவைத்துவிட்டு ராத்திரி ஒன்பது மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

---

## அத்தியாயம் XLIX

*1747*-ஆ ஜூன் மீ 14-உக்கு பிரபவ ஆனி மீ 4-உ புதவாரம்.

இன்றையதினம் நடந்த சமாசாரம் என்னவென்றால்: நான் துரையவர்களண்டைக்கு வந்தவிடத்திலே துரையவர்களிருந்து கொண்டு வெகுமானத்துக்குப் போகிறதற்கு எல்லாம் தயாரா யிருக்கிறதாவென்று கேட்டார்கள். எல்லாம் முஸ்திப்பாயிருக் கிறதென்று சொன்னேன். அதன்பேரிலே இவ்விடத்திலே யிருந்து துரையவர்கள் ஆறு குதிரை கட்டின வண்டியின் பேரிலே ஏறிக்கொண்டு மேற்கு கெவுனிக்கு வெளியே போட்டிருக்கிற கூடாரத்திலே போய் இறங்கி, அங்கே இருந்து இரண்டு பேர் கொமிசேல்காரரை நம்முடைய தோட்டத்திலே கொண்டுவந்து வைத்திருக்கிற வெகுமானத்தை எடுப்பித்துக் கொண்டு வரச்சொல்லி அனுப்புவித்தார்கள். அப்படியே அவர்கள் போய் அழைத்தவுடனே அந்த வெகுமானத்தையெல்லாம் காடிமேலே வைத்துக்கொண்டு துரையவர்கள் கூடாரத்துக் கிட்டே வந்தவுடனே வெகுமானத்தை எதிர்கொண்டு பத்தடி நடந்துவந்து வாங்கிக்கொண்டுபோய் உட்கார்ந்தார்கள். ஆனால் வந்த வெகுமானம் என்னென்னவென்றால்: நாசற்சங்கு வெகுமானம் சிர்போசு, நடுவே பச்சைவைத்திருக்கிறது ஒன்று, துராய் ஒன்று, நடுவே வச்சிரமும், இரண்டு பக்கமும் கெம்பிழைத்த மூன்று முத்து கோத்திருக்கிற துராய் ஒன்றும் நாலு நகை வெகுமானமும் வந்தது. இதல்லாமல் இமாம்'

சாயபு அனுப்புவித்த வெகுமானமும், குதிரை ஒன்றும் நாலு நகை வெகுமானமும் வந்தது. அவைகளையெல்லாம் துரையவர்கள் வாங்கிக்கொண்டு, நாசற்சங்கு அனுப்பின பாகையை துரையவர்கள் கட்டிக்கொண்டு, அந்தத் துராயையும் சொருகி சிருப்போசு மேலே கட்டிக்கொண்டவுடனே மெத்த நேர்த்தியாய் அவர் முகத்துக்குக் களையாயிருந்தது. அந்தமட்டிலே எழுந்திருந்து வண்டியின்பேரிலே ஏறிக்கொண்டு கெவுனிக்குள்ளே நுழைந்தவுடனே கொத்தளத்தின்பேரிலே பதினைந்து பிரங்கிப்போட்டார்கள். அவ்விடத்திலே யிருந்து புல்லுக்கடைமட்டுக்கும் இருபுறமும் சொலுதாதும் பாறும் நிற்கத்தக்கதாக, முன்னே வெள்ளை நிசானும் வெள்ளைக் கொடியும், மயில் தொம்பையும், குதிரையின்பேரிலே நவபத்தும் ஆனையின்பேரிலே நிசானும் சொலுதாதுகள் பின்னாலே குதிரையின்பேரிலே வரிசை வரிசையாய் பாறும் அதன் பிறகே மாயே சிப்பாய்கள் குதிரையும் இந்தப்படியாக நகார் மேளம் தாசிகள் கூடச் சகல சம்பிரமத்துடனே ஏழரை மணிக்கு டேராவிலே யிருந்து புறப்பட்டு முச்சியன் கடைமட்டுக்கும் வந்து, தெற்கே திரும்பி முத்தியப்பிள்ளை வீட்டுத் தெருவிலே வந்து, அப்புறம் வேதபுரீஸ்வரன் கோவிலுக்கு நேராகப் போய் கோட்டைக்குத் தென்னண்டையாகப் புறப்பட்டு சுத்தி, கீழண்டை கோட்டை வாசலண்டை வரச்சே 21 பீரங்கிப் போட்டார்கள். அங்கேயிருந்து துரையவர்கள் வீட்டுக்குத் தென்னண்டை கதவைத் திறந்து அந்தத் தென் பக்கத்து வாசல்படியாலே வந்து துரையவர்கள் வீட்டுக்குள்ளே போய் உட்கார்ந்தவுடனே 21 பீரங்கிப் போட்டார்கள். வரச்சே நடு வழியிலே மத்தியே மத்தியே எழெட்டு விடத்திலே ஊசிப் படாச்சியை வைத்துக் கொளுத்தினார்கள். இன்றையதினம் மகா சிறப்பாயிருந்தது. பிற்பாடு அவரவரை அனுப்புவித்துவிட்டுப் போய்விட்டார்கள்.

இற்றைநாள் சிதம்பரத்திலேயிருந்து செஞ்சிக்குப் போகிற மார்க்கம் வழி ராசஸ்ரீ துரையவர்களுக்கு எழுதிக் காண்பித்த ஊர் பேர் :—

| | | |
|---|---|---|
| சிதம்பரத்திற்கும் காஊருக்கும் காதம் | ... ... | 1 |
| காஊருக்கும் ஸ்ரீமுஷ்ணத்திற்கும் காதம் | ... ... | 1 |

ஸ்ரீமுஷ்ணத்திற்கும் கோபுரத்திற்கும் காதம் பத்துநாழி வழி.

கோபுரத்துக்கும் உளுந்தூருக்கும் பத்து நாழி வழி.

| | | |
|---|---|---|
| உளுந்தூருக்கும் திருவெண்ணை நல்லூருக்கும் காதம் 1 | | |
| திருவெண்ணை நல்லூருக்கும் பனைமூலைக்கும் காதம் | 1 | |
| பனைமூலைக்கும் செஞ்சிக்கும் காதம் | 1 | |
| ஆக சிதம்பரத்துக்கும் செஞ்சிக்கும் காதம் | | 8, 80மைல் |

1747 ஆ ஜூன் மீ 16 உ க்கு பிரபவ ஷு ஆனி மீ 6 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் சாயங்காலம் மாயேயிலேயிருந்து (Mahé) நேற்றுத் தபால் வந்தது. அந்தத் தபால் காகித சேதி மூசியே தொடுதலேன் (M. Dordelin) இஸ்தகாதுரு கப்பல் கோவாவிலே போய் (Goa), சேர்ந்ததாகவும், மூசியே தொடுதலேன் அவ் விடத்திலே செத்துப்போனதாகவும், இப்படியாக எழுதிவந்த தென்றும் பின்னையும் என்னசேதி வந்ததோ அது நன்றாய் வெளிக்கு வரவில்லை. இனிமேல் தெரிந்தாலப்படியே எழுது வோம். சின்ன சீனப்பய்யன் எனக்கு ஒரு காகிதம் எழுதினான். அதிலே மூசியே லெறி என்கிறவன் (M. de Leyrit) திரெக்தே ராயிருந்தானே, அவன் புறப்பட்டு அவ்விடத்துக்கு வந்தானே, அவன் தங்களுடனே வியாபாரம் பண்ணவேணு மென்று வந்திருக்கிறானென்றும், அவன் வங்காளத்துக்குப் போனாலும் அவ்விடத்திலேயிருந்தவாக்கிலே வெகுசரக்கு அனுப்பி விஸ்தாரமாய் நடத்தவேணுமென்றும் மனதாய் இருக்கிறான். ஆனபடியினாலே தாங்களும் அவனை சினேகம் பண்ணி நடப்பித்துக்கொள்ளச்சொல்லி எழுதினான். மூசியே லெறி (M de Leyrit) இப்போது காரைக்காலிலே வந்திருக் கிறானவனிவ்விடத்திற்கு வந்து பங்காளத்துக்குத் திரெக்தே ராய்ப் போகிறான். அவன் காரைக்காலிலிருந்து இவ்விடத்துக்கு வருகிறதற்கு மத்தியே இங்கிலீசுக்காரருடைய தொந்தரையை தொட்டுக் காரைக்காலிலேதானிருக்கிறான்.

இற்றைநாள் மத்தியானம் சிங்காரம் என்கிற காசிது அரக்காருடைய எசமான் வந்து துரையைக் காண்பித்துக்

கொண்டு நாசற்சங்கு காகிதமும் துரைக்குக் கொடுத்தான், அந்த நாசற்சங்கு காகிதத்திலே எழுதியிருந்த சேதி ஏதாகிலும் அந்தரங்கமாயிருக்கிற சேதி உண்டானால் சிங்காரம் மாரி பத்திலே எழுதியனுப்புவித்தால் அந்தப்படிக்கு நடக்கிறே மென்று சர்க்காருக்குக் கிபாய்த்து பண்ணுவார்கள். மேலே நமக்கு ரொம்ப கஷ்டமென்றுமிப்படியாக எழுதியிருந்தது. அதற்குத் துரை சற்று வேசடை. துலுக்கன் நினைப்பு பணத் தின்பேரிலே அல்லாமல் பின் சினேகமில்லையென்று சொல்லி, சிங்காரமுத்து இங்கிலீசுக்காரர் இந்தியாவிலே பண்ணின சோருவாரியெல்லாம் சவாது எழுதிக்கொடுக்கச் சொல்லச் சொன்னார்.

1747 ஆ ஜூன் மீ 17 உக்கு பிரபவ ஞு ஆனி மீ 7 உ சனிவாரம்.

இந்த நாள் நபாபு அன்வற்திகானண்டையிலேயிருந்து காகிதம் வந்தது. அந்தக் காகிதத்திலே எழுதியிருந்தது: நெல் லூர் பவுன்சுதாரன் அஷேதுபின் அப்துல் பாபுகான் பேருக்கு ஒரு சன்னது அனுப்பினோம். மூசே தேப்றெமேனி பங்காளத்துக்குப் போகத்தக்கதாகப் போகச்சே நெல்லூ ரண்டையிலே அவரைப் பிடித்து வாங்கிக்கொண்ட ரூபா நூற்றிருபதும், தட்டுமுட்டும், பின்னையும் என்னென்ன உடைமை அவர்களுக்கு இருந்தாலும் அதெல்லாம் அவர்கள் மனுஷர் கையில் கொடுத்து அவர்கள் கை ரசீது வாங்கி அனுப்புவிக்கச்சொல்லி எழுதியிருக்கிறோமென்று தேவனும் பட்டணம் குவர்னதோரவர்களுக்கு ஒரு காகிதமும், மல்ராசா மனுஷர் வெளியே புறப்பட்டுப் பிரான்சுக்காரர் மனுஷரைப் பிடிக்கிறார்களென்றும், காகிதங்கள் பிடுங்கிக்கொள்ளுகிறார்க ளென்றும் சேதி கேள்விப்பட்டோம். இனிமேல் அப்படி வராமற்படிக்கு நடப்பித்துக்கொள்ளவும். அல்லவென்று இனி மேல் அப்படி நடத்தினால் உங்கள் மனிதர்கள் குண்டுக்கு வெளியே புறப்பட்டவர்களை எல்லாம் பிடிக்கச்சொல்லி எங்கள் சமேதாரர்களுக்கெல்லாம் உத்தரம் கொடுத்தோ மென்றும் இப்படியாக எழுதின காகிதமொன்று அனுப்பு வித்தோமென்று எழுதி, தாம் அனுப்பின மாம்பழம் நாக் குக்கு ருசிகரம் கொடுத்து இன்னம் எந்நேரமும் நாக்கைத் தித்திக்கப்பண்ணிக்கொண்டு வரவும் என்று எழுதி, காப்பு

பண்ணி வரச்சொல்லி, எழுதின காகிதத்தில் துரையவர்களுக்குச் சொல்லி எழுதினதும் அப்பதுல் வகாபுகான் (M. Abdul-Wahab-Khan) பேருக்கு இந்தக் காகிதமும் தேவனும்பட்டணம் குவர்னதோருக்கு வந்த காகிதமும் கையிலே கொடுத்தேன். அதற்குத் துரையவர்கள் அப்துல் வகாபுகான் காகிதம் வாங்கிக்கொண்டு தேவனும்பட்டணம் குவர்னதோர் காகிதத்தை என் கையிலே கொடுத்துச் சிங்காரம் வசம் பண்ணி இவன் அவ்விடத்திலே இருந்துகொண்டுவந்ததாய்க் கொண்டுபோய்க் கொடுக்கச்சொல்லிச் சொன்னார். அந்தப் படிக்கு வாங்கிவந்து நாளையதினம் அனுப்புகிறதாய்ச் சொன்னேன். அந்தப்படிக்கு நாளைக்கு அனுப்புகிறேன்.

1747-ஆ ஜூன் மூ 18உ க்கு பிரபவ ஷு ஆனி மீ 8உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே ஒரு சேவகன் வந்து முசியே ரீஷிம், முசியே லெறியும், முசியே லாசும். ( M. Le Richie-M. de Leyrit-M. Law ) மூன்று பல்லக்குக்காரரும் பூங்குளம் வந்து சேர்ந்தார்கள் என்றும், அவ்விடம் விட்டுப் புறப்பட்டு மத்தியானத்துக்குமேல் எல்லாம் இவ்விடம் வந்து சேருவார்களென்றும் துரைவந்து சுபுறசொன்னார். அந்தச்சேதி என்னை யழைத்து எந்த ஊரண்டையிலேயென்று கேட்டார். திருவதிக்கிப்புறம் என்று சொன்னேன். பார்த்தாயா நீ, ஐந்தாறு நாளைக்கு முன் பாகக் காரைக்காலிலிருந்து வெள்ளைக்காரர் வருகிறார்களென்று கூடலூர் தேவனும்பட்டணத்துக்குக் கபுறு வந்து நானூறு ஐந்நூறு பேர் பிடிக்கவேணுமென்று வழிகட்டினார்களென்று சொன்னாயே, மூந்தாம்நாள் காலத்தாலே பறங்கிப்பேட்டையிலேயிருந்துவந்த பாதிரிதான் வெங்கிட்டம்மாள்பேட்டை, திருவதி, பண்ணுருட்டி மார்க்கமாய் வந்தேன். ஒருத்தனும் காணோம் என்று சொன்னான் என்றது மெய்யாச்சே. இப்போ இவர்களும் அந்த வழியாய்த்தானே வருகிறார்கள் என்று கேட்டேன். அதற்கு நானென்ன செய்வேன், அவ்விடத்திலேயிருந்துவந்த மனுஷர் எழுதினதும் நாம் வைத்த சேவகரும் வந்துசொன்ன கபுறு. சென்னநாயக்கன் பாளையத்திலேயிருந்துவந்த கபுறு சொன்னவர்கள் சொன்ன சேதியைச் சொன்னேன் என்று சொன்னதற்கு இவர்களிந்த வழி வந்தார்கள். பின்னையும் மேற்கே ஒத்திப்போகாமல் உள்ளே

ஏன் வந்தார்கள் என்று கேட்டார். ஆனபடியினாலே அவர்கள் வந்து சேர்ந்ததிலும் சந்தேகமிருக்கிறது என்று சொன்னதற்கு துரையிருந்துகொண்டு உன் மனுஷர்வந்து தப்புக் கபுறு சொன்னதை மெய்ப்படத்தக்கதாகச் சொல்லுகிறாயாவென்று கேட்டதற்கு ஐயா, என்ன ஆனாலும் வந்து சேர்ந்தனிலும் யோசனை பண்ணவேண்டியதுதான் என்று சொன்னேன். அதுவும் மெய்தானென்று ஒத்துக்கொண்டு பின்னையும் அதைத் தானே உறுத்திஉறுத்திக் கேட்டுக்கொண்டே பிருந்துவிட்டு வீட்டுக்குப் போ என்று சொன்னார்.

அப்பால் நான் சாப்பிடப் போகச்சே ஒரு கூலிக்காரன் வந்து உடம்பெல்லாம் மஞ்சள் தடவிக்கொண்டு கூடலூர் முசியே லெறியையும் (M.de Leyrit), முசியே ரிஷேயும் (M. Le Richie) பிடித்துக்கொண்டார்கள். பின்னை ஒரு வெள்ளைக்காரன் தலங்கம்பாடியிலிருந்து கூட வந்தான். அவன் பேர் எனக்குத் தெரியாது என்று சொன்னான். அப்பால் நான் சாப்பிட்டு வெளியே புறப்பட்டுத் துரை அண்டைக்குப் போய் நேற்று 7உ சனிவாரம் நான் காலத்தாலே சிதம்பரத்திலேயிருந்து புறப்படச்சே முசியே முதாமியா வெள்ளைக்காரருக்கு அங்கிபேட்டுப் பாகைக் கட்டிப் பல்லக்கிலே வைத்துப் பல்லக்கு மூடி, பெண்டுகள் என்பித்து தன் சேவகர் ஐம்பதுபேர்களையும் கூடக்கூட்டி ஆற்காட்டுக்குப் போகிறார்களென்றென்பித்து அனுப்புவித்தான். என்ன அனுப்புவித்தாலும் அவர்கள் காரைக்கால்மட்டுக்கும் நிச்சிந்தையாய் மனுஷரை வைத்துக்கொண்டு கபுறு வாங்கிக்கொண்டிருந்தபடியினாலே என்ன வேஷம் போட்டாலும் வெளியாய்ப்போயவர்களுக்குச் சேதி தெரிந்து வழிகட்டிக்கொண்டு ஐம்பது குதிரைக்காரரும் நானூறுபேர் சேவகரையும் சேர்த்துக்கொண்டிருந்தார்கள். இந்தச் சேதி காரைக்காலிலிருந்து வெள்ளைக்காரர் புறப்படுகிறார்கள் என்று வழிகட்டிக்கொண்டிருக்கிறார்களென்று நான் துரைக்குச் சொன்ன சேதியும் அவரெழுதின காகிதமும் சிதம்பரத்துக்குப் போய்ச் சேர்ந்து பார்த்துக்கொண்டிருந்து நாம் வைத்த பத்து சேவகர் போய் கபுறு சொல்லியும் பொல்லாத வேளையினுடைய குணம், ஆர் சொல்லும் கேளாமல் புறப்பட்டுத் திருவதி அண்டையிலே யிருக்கிற பூங்குளத்துக் கோட்டையிலே முதாமியா மனுஷர் சாயங்காலமாக இரண்டு நாழிகை அன்றச்சே கொண்டுவந்து இறக்கி அங்கேயிருந்து

ராத்திரி பனிரெண்டு நாழிகைக்கு நிலவு அஸ்தமித்து அரை நாழிகைக்குப் புறப்பட்டு இரண்டு நாழிகை வழி வந்த பிற்பாடும் மல்ராசா மனுஷர் முதலான இங்கிலீசுக்காரர் மனுஷர் வந்து சுத்திக்கொண்டு அறுபது எழுபது துப்பாக்கி ஒருதரம் தந்த பிற்பாடு இருட்டானபடியினலே போயண்டார்கள். கூலிக்காரர் எல்லாரும் பல்லக்குகளையும் சுமைகளையும்போட்டு விட்டு ஓடிப்போனார்கள். சிதம்பரத்திலேயிருந்து வந்த முசியே முதாமியா மனுஷர்கள் அதற்குமுன்னே ஓடிப்போய்விட்டார்கள். அப்பால் லாஸ் (M. Law) என்கிறவன் பல்லக்கைவிட்டுக் குதித்து ஓடிப்போனான். முசியே ரஷேவை (Le Richie) மாத்திரம் மெத்த அலங்கோலம் பண்ணி, பல்லக்குடனே கூடப் பிடித்துக்கொண்டு போனார்கள். லாஸ் என்கிறவனும் தப்பிப் போனான். முசியே லேறி என்கிறவனும் தப்பிப்போனான். முசியே லேறி என்கிறவன் தப்பிப்போனவன் மேற்கு என்று கிழக்கு என்று மூன்றுபேரைக் கூட்டிக்கொண்டு வந்து சூரிய உதய வேளையிலே திருவந்திபுரத்து ஆற்றண்டையிலே வரச்சே தேவனும்பட்டணத்துச் சேவகர் தேவனும்பட்டணத்துக்குப் போகிற பேர்களைக் கண்டு அடித்துப்பிடித்துக் கூடலூரே கொண்டுபோனார்களென்றும், முசியே லாஸ் மாத்திரம் தப்பி அப்பாலே போய்விட்டானென்றும் வந்து சொன்ன கபுறு துரையவர்களுக்குப் போய்ச் சொன்னேன் மெய்யாவென்று கேட்டார்; மெய்தானென்று சொன்னேன். இப்படியிருக்கச்சே, காரைக்கால் கும்பினீர் சேவகரிலே மூன்று பேர் தப்பி ஓடிவந்தார்கள் வந்து அவர்களும் முன்சொன்னபடிக்குத்தானே சொன்னார்கள். அந்தச்சேதியும் துரைக்குச் சொன்னேன். துரையிருந்து கொண்டு இந்த மகம்மதுகமால் வந்தானே இவனைப் பத்திரம் பண்ணினால், நபா அன்வர்திகான் இரண்டுபேரையும் அழைப்பித்துக் கொடுப்பாரென்று சொன்னார். அதற்கு நானிருந்து கொண்டு அப்படிச் செய்கிறது மரியாதையல்ல. அவர்களுக்கு முகலாய மனுஷர் அனுகூலமாயிருந்தாலும் நாமப்படி செய்கிறது நியாயம். அவர்களிந்தச் சாடையே அறியார்கள். அவர்களுக்கும் நமக்கும் ஸ்நேகமாயிருக்குது. வெல்லூர் பவுன்சுதாரனுக்கு முசியே தேப்பிறமேவி கையிலேயிப்படி அநியாயமாய் வழியே பறிக்கலாமா என்று எழுதினதற்கு அந்த உத்திரக்ஷணமே அப்துல்வகாபுகான் பேருக்குத் தாக்கீது எழுதியனுப்பவில்லையா? மல்ராசா சம்மதிக்குத் தேவனும்பட்டணம் குவர்

னதோர் பேருக்குத் தாக்கீது எழுதி அனுப்பிவையாமல் அப்படி அவர்களுக்கும் நமக்கும் சினேகமாய் நடந்து வரச்சே இப்படி நடத்துகிறது காரியமல்லவென்று சொன்னதின்பேரிலே ஆனாலவன் காகிதமாகிலும் நபா அவர்களுக்கு எழுதிக்கொடுக்கச்சொல்லி வாங்குகிறதற்கு மார்க்கம் பிறக்குந்தனிலும் நல்ல பேச்சாய்ப் பத்துநா ளிழுத்துவருவோமென்று சொன்னார். இனிமேல் தட்டிச்சொன்னால் கோபம் வரப்போகுதென்று சொல்லி, நல்லது, அப்படி செய்கிறதென்று சொன்னேன். அப்பால் அசாத்து நபாபுக்கும், மகமதாக்கலுக்கும், வக்கீல் சுப்பய்யனுக்குங் காகிதம் எழுதி அனுப்பினது. அந்த நபர்களை விடுதலை பண்ணவேணுமென்று சொன்னார். அந்தப்படிக்கு எழுதினது இப்போதுதானே அனுப்புமென்று சொன்னார். காகிதந்தான் எழுதுகிறாப்போலே ஆச்சுதே, முசியே தீலார்சைக்கூடப் பயணம்பண்ணி அனுப்பினால் குணமென்று சொன்னேன். மெய்தான் காகிதத்தில் உங்கள் எல்லையிலே பிடித்தபடியினாலே உங்களுக்கு அபகீர்த்தி அல்லவா? நீங்கள் அழைப்பித்துக் கொடுக்கவேணுமென்றும் அதற்குப் பின்னையும் பலமாய் அதற்கடுத்த நியாயமெல்லாம் வைத்து எழுதுகிறோம். பின்னையும் அவர்கள் மனுஷர்கள் வந்திருந்து ஏதாகிலும் உத்தாரப் பிரதி உத்தாரம் நடப்பித்தால் சால்சவாபு அவர்களுக்குச் சொல்லவேணுமே! ஆனபடியினாலே முசியே தீலார்சை அனுப்புகிறது யுக்தந்தானென்று முசியே தீலார்சை அழைத்துவரச் சொல்லச் சொன்னார். இதிலே மதனாந்தபண்டிதர் வந்தார். மதனாந்தபண்டிதருடனே இந்த வயணம் திருவதி சீர்மையிலே பிடித்ததும் நடந்ததும், அப்பால் அவர் விசாரிக்கவேண்டியதற்கு வயணமும் இங்கிலீசுக்காரர் பண்ணுகிற சோருவாரியும் இதற்குத் தக்கதாய் இங்கிலீசுக்காரரைக் கண்டித்து நபரை அழைப்பியாவிட்டால் அதனாலேயும்முடைய அதிகாரத்துக்கு வருகிற அபகீர்த்தியும் அப்பால் நாசற்சங்கு தெண்டனை வருகிற கையாலாகாத் தனமும் இதனாலே சீர்மைகளிலே கலாப்படப்போகிற சாடையும் எழுதச் சொல்லி யிருந்ததற்குத் தக்க வயணமெல்லாம் சொல்லி, பின்னையும் அதற்கடுத்த நியாயம் எடுத்ததற்கு எப்படி எழுதவேணுமோ அப்படியெல்லாம் வயணம் சொல்லி எழுதச்சொல்லி, அப்பால் மகம்மதாக்கலுக்கும் வக்கீல் சுப்பய்யனுக்கும் நபாபுக்கும் தெரியப்படச் சொல்லி காகிதமனுகூலம் பண்ணச்சொல்லி, அதற்குத் தக்க கண்டிப்பாய் எழுதி நபாபு காகிதத்திலே முசியே தீலார்சை அனுப்புவித்,

தோம் என்றும் வரச்சொல்லத் தெரியவருமென்றும், வக்கில் சுப்பய்யன் காகிதத்திலே அவ்விடத்துக்குச் செலவுக்கு முசியே திலார்சு கேட்ட பணம் கொடுத்து அவர் கை ரசீது வாங்கி அனுப்பச்சொல்லியும் இப்படியாக எழுதி, காகிதம் மோகறு பண்ணச்சொல்லி, மதனுந்தபண்டிதருக்குச் சொல்லி அனுப்பினேன். இதிலே முசியே திலார்சு வந்தான். முசியே திலார்ஸிடம் இந்த வயணமெல்லாம் சொல்லி அவனை இப்போதுதானே பயணம் போகச்சொல்லி என்னையழைத்து, பதினெட்டுப் பேர் யயண்டாக்களும், இருபது சேவக்ரும், ஒரு சேர்வைக்காரனையும் போகச்சொலலென்று சொன்னார். அந்தப்படிக்கு முஸ்தீதுபண்ணுவிக்கச் சொல்லி, பெரிய போயண்டனுக்கும் சேர்வைக்காரனுக்குந் தாக்கீதுபண்ணினேன். அப்பால் துரை அழைத்து முசே திலார்சு கேட்டதைக் கொடுக்கச்சொல்லி உன் குமாஸ்தாவுக்கு ஆற்காட்டுக் கெழுதி அனுப்பென்று சொன்னார். நல்லதய்யாவென்று சொல்லி, அந்தப்படிக்குக் காகிதங்கள் எல்லாம் தயார்பண்ணுவித்து மகம்மது கமால் (Muhamad Kamal) காகிதமும் நபாபு பேருக்கு நசிபுகான் பேருக்கு எழுதிக்கொடுத்ததையும் வாங்கி முசியே திலார்சு (M. Delarche) கையிலே கொடுத்தேன். அவனும் காகிதம் வாங்கிக்கொண்டு துரை கையிலே அனுப்புவித்துக்கொண்டு சாப்பிட்டு ராத்திரி ஒன்பது மணிக்குச் சாகு ஆற்காட்டுக்குப் பயணமாய்ப் போனான். அப்பால் முதாமியா பேருக்கு ஒரு காகிதம் எழுதினீர். நம்பிக்கையாய்ச் சொல்லாவிட்டால் பின்னையும் மேற்கே ஓத்தி, கானூர், திருமுட்டம், கோபுரா, உளுந்தூர், திருவெண்ணைநல்லூர், பனைமூலை, செஞ்சி இந்த மார்க்கமாய்ப் போகச்சொல்லி நாம் எழுதியிருக்க அப்படிப் போகிறவர்கள் அப்படிப் போகாமல் உம்முடைய பரவசத்திலே என்பேரிலே நீர் எழுபது சேவகரை கூட்டிச் சங்கையில்லாமல் போங்கோளென்று அனுப்பினபடியினாலே வந்தவிடத்திலே இப்படி மோசம் வந்தபடியினாலே நீர் அந்த நபர்கள் இரண்டு பேரையும் அழைப்பித்துக் கொடாமற்போனால் அபகீர்த்தியும்மைச்சாருமானபடியினாலே அதற்கு ஆற்காட்டக்கு எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதியும், தேவனாம்பட்டணத்தாருக்கு எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதியும்,

அதற்குத் தக்க உபாயம் எந்த விதத்திலே தேடவேணுமோ அப்படியெல்லாம் தேடி உம்முடைய அறணபறண சத்தியும் பார்த்து நபர்களை அழைப்பிக்கச் சொல்லி அதற்கு எந்த வயணமெல்லாம் எழுதி சிதம்பரம் மமூதுகானுக்குக் காகிதம் துரையவர்கள் உத்தாரப்படிக்கு அனுப்புவித்தேன். மற்றப்படி தேவனும்பட்டணத்தாருக்குக் காரைக்கால் மனுஷருக்குப் பத்து பேர் வந்தவர்களெல்லாம் அப்படியே சொன்னார்கள். அந்தச் சேதியெல்லாம் துரைக்குச் சொன்னோம்.

1747 ஆ ஜூன் மீ 19-ந்த பிரபவ ஆனி மீ 9௨ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே முசியே லாசு (M. Law) ஏணைக் கட்டுவித்து அதிலே ஏறிக்கொண்டு தூண்டுக்குள்ளே வந்து சேர்ந்தானென்று கபுறுவந்தது. மறுபடியும், பெருமாளய்யன் பண்ணின நகைகள் குதிரை எல்லாம் அழைப்பித்துக்கொண்டேன். முசியே லாசு பதினொருமணி வேளைக்கு வழுதாவூர் வாசற்படிக்கு வந்து வாசற்படிக்காரன் உடுப்பை வாங்கி உடுத்திக்கொண்டு பனிரெண்டு மணிக்குக் குவர்னதோரண்டைக்கு வந்து சந்தித்துக்கொண்டான். அப்பால் துரையும் முசியே லாசுடனே பேசின பிற்பாடு என்னைப் பார்த்து, முன் எழுதினதுமல்லாமல் முசியே பாதி ஒரு காகிதமுமெழுதி அனுப்பினான். இங்கிலீசுக்காரர் மனுஷர் வழிகளிலே திரளாயிருக்கிறார்கள். வருகிறதையெல்லாம் மேல் வழியாய் அதற்குத் தக்க பிலப்புடனே வரச்சொல்லி எழுதியும், பூருகள்போலே வந்தார்களென்றும் சொன்னார்கள். அதற்கு நான் வெகு காரண பொய் கபுறு சொன்னால் நீ போய்ச் சொல்லுகிறாய் என்று முசியே ரீஸ்து (M. Le Richie) அடிக்கப்போனானே, அவனுடைய விவேகத்துக்குச் சொல்லவேண்டியதென்னவென்று இது பேச்சாய் ஒரு நாழிகை மட்டுக்கும் அவன்பேரிலே குற்றமாய்ப்பேசினார். அதற்கு நானும் அதற்கடுத்தாப்போலே உத்தாரம் சொல்லிக்கொண்டுவந்தேன். அப்பால் அவர் சாப்பிட உள்ளே உட்காரப்போனார்கள். இன்றையதினம் கும்பினீர் வர்த்தகர் மண விருந்தானபடியினாலே வீட்டுக்குப் போனேன்.

1747 ஆ ஜூன் மா 22௨ந்த பிரபவ ஆனி மீ 12௨ குருவாரம்

இற்றைநாள் சிங்கார மூலியமாய் செமிசோன் சட்டம் ஒரு சிப்பம் சகலாத்தும் கொடுத்து நாசற்சங்குக்குப் பதில் காகிதமும் உபசாரமாயெழுதி அதிலே காரைக்காலிலே

யிருந்துவந்த முசியே ரீவைடியையும், முசே லேறியையும் துலுக்கர் சீர்மையிலே பிடித்த சம்மதியும் எழுதி அவர்களை விட்டுவிடத் தக்கதாகத் தேவனும்பட்டணம் குவர்னதோர் பேருக்குத் தாக்கீது அனுப்பச்சொல்லியும் சிங்காரத்தைக்கொண்டு எழுதின காகிதமும் சீக்கிரமத்துக்கு அனுப்பச்சொல்லி, சிங்காரத்தைப் பயணம்பண்ணி அனுப்புவித்தோம். அவனுக்கு இருபத்தைந்து ரூபா செலவுக்குக் கொடுத்தோம். அவனுக்குக் கொடுத்த தெமிபென் இங்கே நம்முடனே மாளிகையிலே முதலிட்டு ஆற்காட்டுக்கடையிலே கொடுக்கச்சொல்லி காகிதம் வாங்கிக்கொண்டு போனான். முன் ஒரு இங்கிலீசு சட்டம் ஒரு சிப்பம் கொடுத்ததை வாங்கிக்கொண்டு வேறே தெமிபென் பிராஞ்சு சட்டமாய்க் கொடுக்கச்சொல்லி, சுப்பய்யன் பேருக்குத்தானே மேலே எழுதப்பட்டதற்கு இதற்குக் கூடத் தானே காகிதம் எழுதிக்கொடுத்தேன்.

இற்றைநாள் காலத்தாலே துரையிருந்துகொண்டு இங்கிலீசுக்காரது ஒரு சுலுப்பும் பின்னையும் ஒரு உருபடியும் வந்து சிப்பியேற்றுதாமே எனக் கபுறு சொல்லவில்லை என்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: முன்னேதானே உங்களுக்கு நம்முடைய சுலுப்பும் மசுக்கரையிலிருந்து வந்ததை மரக்காணத்திலிருந்து பிடித்துக்கொண்டு போனார்கள். அதுவும், பின்னையும் ஒரு உருவும் வந்து மரக்காணத்து ரேவிலே சிப்பியேற்ற அந்தச் சிப்பியேற்றத் தக்கதாக இங்கிலீசுக்காரன் ஒருத்தன் கூட வந்திருக்கிறான். அவன் கரையியே இறங்கியிருக்கிறானென்று கபுறு சொன்னேன். நீங்கள் மறந்துபோனீர்களோ என்னமோ தெரியாதென்று சொன்னேன். நல்லது இப்பவும் அந்தச் சுலுப்புப் பயணப்பட்டுப் போச்சுதா இல்லையா, கபுறு தெரிந்துகொள் என்று சொன்னார். அப்பால் ஆலம்புரையிலேயிருக்கிற சீனிவாசப்பண்டிதனுக்குக் காகிதம் எழுதித் தபாலிலே அனுப்புவித்தேன். அதற்குச் சேதி வந்த பிற்பாடு அதைப் பிடிக்க எத்தனை எத்தனம் பண்ணுவான்போல் காணுது.

1747 ஆ ஜூன் மீ 23 உக்கு பிரபவ ஞு ஆனி மீ 13 உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் குண்டு கிராமத்தார்கள் மணவிருந்தான படியினாலே அவர்கள் மணவிருந்து சாப்பிட்டு நம்முடைய

புடவைக்கிடங்கிலே வந்து படுத்துக்கொண்டு எழுந்திருக்கும் ...பிலே துரை சேவகன் அழைக்கவந்தான். துரை அண்டையிலே போனேன். இங்கிலீசுக்காரர் சுலுப்புகள் ஆலம் புரை துறையிலே வந்து சிப்பியேற்றிக்கொண்டிருந்தது. போனதும் இருக்கிறதும் எழுதி அனுப்பச்சொல்லி ஆலம் புரைக்கு எழுதியிருந்தாயே சேதி வந்ததா என்று கேட்டார். இப்போ வருமென்று சொன்னேன். அப்பால் தானியமுதலான கூடலூர் பேச்சும் இவ்விடத்திலே முன் கும்பினீர் வர்த்தகமா யிருந்து (தேவனும்பட்டணத்திலே போயிருக்கும் மயிலப்ப செட்டிமார்கள், தளுக்கச்செட்டி, நல்லாசெட்டி என்கிற இரண்டுபேரும் இவ்விடத்தியார் அவ்விடத்திற்கு வியாபாரம் வாங்கப்போகிறவர்களைக்கூட வேவுபார்க்கவந்தார்களென்று சொல்லி அபாண்டம் போடுகிறது. அவன் நாலு ரெண்டு கொடுத்தால் வாங்கிக்கொண்டு விட்டுவிடுகிறது. இல்லாவிட்டால் அவனைக் கொண்டுபோய் ரங்கப்பநாயக்கன் முன்பாக விட்டு அபாண்டமாய் இல்லாததும் பொல்லாததும் சொல்லி காவலில் வைத்து நடப்பிக்கிற சாடையெல்லாம் துரைக்குச் சொல்லி, பின்னையும் அவனைக் காவலில் வைத்தும் அடிப்பித்தும் இப்படி நடத்துகிற சம்மதிகளும், பின்னையும் அந்த ஊருக்குப் பொம்பாய் கப்பல் வந்த பிற்பாடு நடக்கிற சமாசாரமும் சொல்லிப் பேசியிருந்து,) துரை சேன் சான் பண்டிகை பேசப்போகிறானபடியினாலே கோட்டைக்குத் தென்னண்டையிலே சொக்கப்பனை கொளுத்தி வைக்கத்தக்கதாகக் கோட்டை அண்டையிலே வைத்திருக்கிற வெள்ளைக்காரர் வரிசை அண்டையிலே போனார். இதிலே ஆலம்புரையிலிருந்து காகிதம் வந்தது. அந்தக் காகிதத்தைப் படித்துப் பார்த்தவுடனே மசுக்கரையிலிருந்து இவர்களுக்கு வந்த சுலுப்பை மரக்காணத்தண்டையிலே பிடித்துக்கொண்டதும் பின்னையும் ஒரு உருவு சிப்பியேற்றித் தயாராச்சுதென்றும், நாளையதினம் பயணம் என்றும் எழுதி வந்தது. அந்த மசுக்கரை சுலுப்பின் பேரிலே பனிரெண்டு பிரங்கியையும் ஏற்றி எட்டு வெள்ளைக்காரரும் இருபது கிளாசுகளும் இருக்கிறார்களென்றும், மருந்து குண்டு கொஞ்சம் ஏற்றியிருக்குதென்று யிப்படியாக எழுதி ஒரு இங்கிலீசுக்காரன் கரையிலே இறங்கியிருக்கிறானென்றும் இந்தப்படி எழுதிவந்த சேதியைத் துரைக்குப் போய்க் கபுறு சொன்னேன், அதன்பேரிலே துரை மூசே ஒசையை அழைப்பித்

துச் சலங்குகள் முஸ்தீதுபண்ணி மருந்து குண்டுகளும் ஏற்றி, சொல்தாதுக்களையும் ஏற்றி அந்தச் சுலுப்பைப் பிடித்துவரச் சொல்லி அனுப்பச்சொல்லிவிட்டு வரிசையுடனேகூட கோட்டைக்குத்தென்னண்டை பாரிசத்திலே கட்டியிருக்கிற சொக்கப்பனை அண்டைக்குப்போய் அவ்விடத்திலே அந்தச்சடங்காம்படி முடித்துச் சொக்கப்பனையை குவர்னதோரும் பாதிரிமாரும் போய்க் கொளுத்தின பிற்பாடு மூன்றுதரம் துப்பாக்கிச்சுட்டு அப்பாலே கோட்டையிலே இருபத்தொரு பீரங்கிச் சுட்ட பிற்பாடு வரிசையாம்படியே சமஸ்தமான வெள்ளைக்காரரும் வீவ் ருவா! வீவ் ருவா! வீவ் ருவா! என்று மூன்று தரங் கூப்பிட்டு அப்பால் துரை கோட்டை வாசல் மட்டுக்கும் வரிசையுடனே வந்து வரிசையைக் கோட்டையண்டையிலே கலைத்துவிட்டு அப்பால் வீட்டுக்கு வந்தார். வந்தவுடனே சலங்குகள் முஸ்தீதாச்சுதென்று ஏழுரை மணிக்குக் கபுறு வந்தது. அந்தக்ஷணமே அனுப்பிவிடச்சொல்லிவிட்டு என்னை அழைத்து ஆலம்புரைக் காகிதம் தேவனும்பட்டணம் போகாமல் இப்படி வழிகட்டிப் பிடுங்கிவரச் சொல்லச்சொன்னார். அந்தப்படிக்கு முப்பது பேரை பயணம்பண்ணி எட்டரை மணிக்கு வழுதாவூர் வாசலைத்திறப்பித்து அனுப்பிவிட்டு ஊர்கோலத்தின் பிறகே வீட்டுக்குப்போனேன். அப்பால் முன்னூறு சிப்பாய்கள் ராத்திரி மனிரண்டு மணிக்கு வெளியே ஆலம்புரைக் கரை வழியாய்ப்போனார்கள்.

1747 ஆ ஜூன் மூ 25உக்கு பிரபவ ௵ ஆனி மீ 15உ ஆதிவாரம்

இற்றைநாள் ஆலம்புரையிலிருந்து இங்கிலீசு சுலுப்பைப் பிடிக்கப்போன அறுபது சொலுதாதுகளும் ஒபிசியேலும் சுலுப்புக்குச் சமீபத்திலே போனவிடத்திலே அந்தச் சுலுப் பின்பேரிலே பீரங்கிகள் இருக்குதென்று கிட்டே சேராமல் மறுபடியும் வந்துவிட்டார்களென்று சமாசாரம் ஒரு சொலுதாது வந்து துரைக்குச் சொன்னான். அதற்கு முன்னேதானே எனக்கு நான் அனுப்பின வேவுகாரர் வந்து சொன்னார்கள். குதிரையின்பேரிலே கரை வழியாய்ப்போன சிப்பாய்கள் வந்து சேர்ந்தார்கள், கால்நடையாய்ப் போன முன்னூறு சிப்பாய்கள் நம்முடைய சாவடி வந்து சேர்ந்தார்கள் என்றும் கபுறு

வந்தது. இற்றைநாள் முசியே தீலார்சு அனுப்பின காகிதம் துரைக்கு வந்து சேர்ந்தது. வக்கில் சுப்பய்யன் காகிதமும் மகம்மதாக்கல் காகிதமும் நமக்கு வந்து அதிலே எழுதி இருந்த சேதி: நபாபு அன்வர்திகான் பெட்டியையும், உசேன் சாயபு பெட்டியையும் வாங்கிக்கொண்டோமென்று இரண்டு பேர்கள் சிநேகியோர்கள் காரைக்காலிலே யிருந்துவந்தவர்கள் திருவதியிலே இங்கிலீசுக்காரர் பிடித்துக்கொண்ட சேதி சவிஸ்தாரமாய்ச் சொன்னதின்பேரிலே தேவனாம்பட்டணம் குவர்னதோர் பேருக்கு விட்டுவிடச் சொல்லி தாக்கீதுஎழுதி ஒட்டைக்காரன் கையிலே கொடுத்து அனுப்புவித்தோமென்றும், அதற்குச் சவாது பாரிசிலே எழுதினதையும் அனுப்புவித்தோம் பார்த்துக்கொள்ளவுமென்றும் குலாபு சிங்குக்குப் பல்லக்குமுஸ்தீதுக்கு முகமலும் சுருட்டித் துண்டு அனுப்பவேணுமென்றும் எழுதி அனுப்பினான். இந்தச் சேதியெல்லாம் பார்த்துக்கொண்டு மறுபடியும் காகிதமெழுதி குலாபுசிங்குக்குப் பல்லக்கும் ஐந்து கெஜம் சிகப்புமுகமல்பட்டும், சுருட்டித்துண்டும் கொடுத்து நாமும், மகம்மதாக்கலுக்கும், உசேன் சாயபுக்கும், வக்கில் சுப்பய்யனுக்கும் காகிதம் எழுதி, இந்தக் காரியம் எப்படியும் அநுகூலமாய்ப்பண்ணி அனுப்பச்சொல்லி எழுதி அனுப்புவித்தோம். சவாது எழுதியிருந்த வயணம்: முன் பிராஞ்சுக்காரருக்கும் எங்களுக்கும் சமாதானமாகச்சே இனிமேல் மொகலாய சீர்மையிலே ஒருத்தரும் கலாபம்பண்ணத் தேவையில்லையென்றும் உடம்படிக்கை. அது தப்பி நீங்கள் அவர்களைப் பிடித்தது நல்லதல்ல. ஆகிலும், இந்தக் காகிதம் கண்டவுடனே விட்டுவிட்டுப் புதுச்சேரிக்கு அந்த இரண்டு பெரிய மனுஷரை அனுப்புவித்தாலாச்சுது இல்லாவிட்டால் நாங்கள் புதுச்சேரியாருக்கு மற்றதுபண்ணி குமுக்கு அனுப்புவோமென்று பஞ்சபாட்டாயெழுதினான் அல்லாமல் பொடுத்தி ஒடுத்தியாய் எழுதினவனல்ல.

தங்கசாலையாரை அழைத்துக்கொண்டுபோய் மதாம் துய்ப்ளேய்க்கு பேட்டி பண்ணுவித்தோமிவர்கள் 3 சுருட்டி முப்பது வராகனிலே நம்முடைய கையிலே வாங்கிக்கொண்டு போய்க் கண்டார்கள். அவனும் ரொம்ப உபசாரம் சொன்னான். இவர்களும் ரொம்ப உபசாரமாய்த்தானே சொல்லிவிட்டு

வந்தார்கள். கால்நடையாய் ஆலம்புரை மட்டுக்கும் போன மாயே சிப்பாய்கள் முன்னூறும், சமேதாரன் சேக்கு அசேனும் சாயங்காலம் வந்து சேர்ந்தார்கள்.

1747 ஆ ஜூன் மீ 27 உக்கு பிரபவ ஞ ஆனி மீ 17 உ மங்களவாரம்.

இற்றைநாள் குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே குவர்னதோர் உற்சாகமாகப் பேசியிருந்தார். கலியாணத் துக்கு நான் எப்போ உன் வீட்டுக்கு வருகிறதென்று கேட்டார். எப்போ உங்களுக்குச் சம்மதியோ அப்போவென்று சொன் னேன். ஆகிலும் எப்போவென்று கேட்டார். வெள்ளியும் சனியும் உங்களுக்கு மாங்கிஷம் சாப்பிடக்கூடாதே, ஆதி வாரமென்று சொன்னேன். அப்படி நீ விருந்து பண்ணினால் நூறு ஐந்நூறு வராகன் ஏன் செலவுபண்ணவேணுமென்று சொல்லி ஒரு கோவாசியோம் போடென்று சொல்லி, மதாம் துய்ப்ளேய்க்சுக்கு, துரைதானே நான் சொல்லுகிறேனென்று வந்து அவளுடனேயிருந்துவிட்டு ஐந்நூறு அறுநூறு ஏன் செலவழிக்கவேணுமென்று முப்பது வராகனிலே முஸ்தீது பண்ணிப்போடென்று சொன்னார். அந்தம்மாளுமப்படியே செய்துபோடுவென்று சொன்னாள். அந்தப்படிக்கு நல்ல தம்மா என்று சொல்லிவிட்டு வந்தேன். பின்னையும், அவரவர் ஊர்கோலம் செய்கிறதெல்லாம் அவள் கேட்டாள் நானும் சொன்னேன். சந்தோஷமாக ஐந்தாறு நாழிகை பேசியிருந்து அப்பாலே பாக்குக்கிடங்குக்கு வந்தோம்.

1747 ஆ ஜூன் மீ 28 உக்கு பிரபவ ஞ ஆனி மீ 18 உ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே தேவனாம்பட்டணத்தார் நாசற்சங்கு பேருக்கு வெகுமானம் கட்டி மேஸ்தர் ஆல்பட்டியும் (M. Hally Bourton), மேஸ்தர் ஆலெனும் (M. Allon) பேருடையவனையும் கூட்டி முத்தியாலுநாயக்கன் பெரிய துபாசி வராகப்பய்யன் மகன், வெங்கட்டநாயக்கன், குப்பய்யன், சேருவைக்காரன், ஆதியப்ப நாயக்கன், இருநூறுபேர் சேவகருமாக, நூறு பேர் வெகுமான

தினுசுகள் எடுத்துப்போகிறவர்களென்றும், இத்துடனே கூட முன் நாசற்சங்கு அண்டையிலிருந்துவந்த மொகலாயரும் அறக்காரர்களும் கூடப்போகிறுர்களென்று சேதி வந்ததாகச் சொன்னேன். எப்போ போகிறுர்களென்று கேட்டார். அதற்கு அவர்கள் பயணமாய்ப் புறப்பட்டதாகவும், முசல் குறுக்கிட்டுத் திரும்பியும் கோட்டையே சகுனம் சரியாய் நன்ருயிருக்கவில்லையென்று போய்விட்டார்களென்றும் சேதி சொன்னேன். நல்லது அவர்கள் எப்போ போகிறுர்களோ மனிதரை வைத்துச் சமாசாரம் அழைப்பியுமென்று சொன்னுர். அதன்பேரிலே பத்துப்பேர் மலையப்பன் சேவகரிலே அழைப்பித்து அனுப்புவித்தேன். அதன்பேரிலே துரையவர்களிருந்துகொண்டு உன் பந்தல் வேடிக்கையும், உன் மருமகன் ராத்திரிமார் ஊர்கோலம் வருகிற சம்பிரமமும், வெள்ளைக்காரர் சிஞ்ஞோர் சினயோர்கள் பார்த்தபேரெல்லாரும் மெத்த வேடிக்கையாயிருக்குதென்றும், பந்தலிலே எல்லாம் சென்னப்பட்டணம் வாங்கின சண்டையும் மாபூசுகானை செயித்ததும் மயிலாப்பூரிலே அவன் ஓடிப்போனதும், தேவனும்பட்டணம் சண்டையும், தேவனும்பட்டணத்திலே காப்பிரிகள் போய்க் கொத்தளம் வாங்கினதும் நான் நாசற்சங்கு வெகுமானம் வாங்கிவந்ததும் அந்தச் சம்பிரமுமப்படியே எழுதியிருந்ததுகள் மெத்த வேடிக்கையாயிருக்கிறது. இந்தப் பட்டணத்தில் தோன்றி இத்தனை சம்பிரமமும் இல்லையென்று சமஸ்தமானபேரும் சொல்லுகிறுர்களென்றும் கேட்டார். ஊர்கோல சம்பிரமந்தானிருக்குதே. பந்தல் சம்பிரமமெல்லாம் உம்முடைய செயந்தான் உம்முடைய கீர்த்தியைத் தானே எழுதியிருக்குதென்று சொன்னேன். நகைத்து உன்னுடைய புத்திக்குச் சமானமானவர்கள் ஒருத்தரையும் கண்டதில்லை. ஆனுலென்பேரிலிருக்கிற பத்தியும் விசுவாசமும் எனக்கு நன்ருய்த் தெரியும். ஆனுல், நீ பிரஞ்சுக்காரருடைய கீர்த்தியை விளக்கிவைக்க வந்ததாய்ச் சுவாமி யுன்னை சிரேயோவந்தனுக்கி மெத்தவும் மேன்பாடாய் வைப்பார். நீ பிரஞ்சுக்காரருடைய முஸ்தத்துக்கெல்லாம் கீர்த்தி சம்பாதித்து வைக்கப்பண்ணினதற்கு உன் பேர் சீர்மையிலே ராசாவினிடத்திலேகூட பிராஞ்சு ராச்சியமெல்லாம் கொண்டாடுவார்களென்று வெகு தயவாய் நாலு நாழிகை தேசகாலம் ஸ்தவுத்தியமாய்ச் சொன

ஞர். எனக்கொன்றும் கவலையில்லை. நான் உம்முடைய அடிமை என்னுடைய ஆண்டவனுக்கே அல்லாமல் எனக்கென்ன வென்று நீர் என் பேரில் கடாக்ஷம் வைத்து நடப்பித்ததற்கு எனக்குப் பிள்ளை பிறந்தால் உம்முடைய பெயரிடுகிறதே அல்லாமல் மற்றப்படி நீர் செய்த சகாயத்துக்கு வேறே உபகாரமாய்த் துதித்துக்கொள்ளமாட்டேன் என்று சொல்லச்சே எத்து சப்தம் கேட்டது. இது தேவனும்பட்டணம் பீரங்கிச் சப்தம் என்ற காதுகொடுத்துக் கேட்டதற்குத் துரையிருந்து கொண்டு உன் மகன் கலியாணம் பீரங்கிச் சப்தமென்று நகைத்துக்கொண்டு சொன்ஞர். அதன்பேரிலே இன்றைக்கு யாருடைய விருந்தென்று கேட்டார். பரசுராமப்பிள்ளை விருந்தென்று சொன்னேன். ஆனுலிந்தப்படிக்கு அவரவர் முகூர்த்தமட்டுக்கும் விருந்துபண்ணுகிறதாயென்று கேட்டார் ஆம் என்று சொன்னேன். நாளையதினம் யாருடையதென்று கேட்டார். சடையப்பமுதலியார் விருந்தென்று சொன்னேன். அப்பால் காலத்தாலே பவழுவர்த்தகரைக் கோட்டைக்கு அழைத்துப்போனுயே பவழமெல்லாம் பார்த்தார்களாவென்று கேட்டார். சிறு சிறு பவழமெல்லாம் பார்த்தார்கள். கட்டிப்பவழம் பார்க்கவேணுமென்று சொன்னேன். அதுவும் பார்த்தவுடனே விலையுடனே சேர்த்துப் பேசித் தீரவேணுமென்று சொன்ஞர். அப்படியே செய்கிறேன் என்று சொல்லிவிட்டு வரச்சே, துரை யிருந்துகொண்டு இந்தப் பட்டணத்திலுண்டான சினயோர்கள் எத்தனைபேருண்டோ அத்தனை பேரும் எட்டு மணி அடித்தால் உன் பந்தலிலே வந்திருக்கிருர்களாம். அந்தச் சினயோர்களுக்கு, எல்லா சினயோர்களுக்குக் கூட எல்லாருக்கும் கழுத்திலே பூமாலை போட்டு நெற்றியிலே சந்தனப்பொட்டும், கழுத்திற்கும் கைக்கும் சந்தனம் பூசி, பாக்கு வெற்றிலையும் கொடுத்து எல்லாரையும் நொயவும் நொயவுமாகவும் ஆக்குகிருயாம் மெய்தானுவென்று கேட்டார். உம்முடைய அடிமையென்று எல்லாரும் தயவுபண்ணி வருகிருர்களென்று சொன்னேன். அதிலே துரையிருந்து கொண்டு, இந்தக் கலியாண சம்பிரமமெல்லாம் இதற்கு இருபதாம் மாசம் சீர்மையிலேயிருந்து கசேத்திலே வருமென்று முசியே புசி, முசியே போனேவுடனே சொன்ஞர். அவர்களும் ஒரு ராசாவினுடைய கலியாணங்கூட இந்தச்

சம்பிரமமில்லையென்று சந்தோஷமாய், பின்னையும் இரண்டு நாழிகை மட்டுக்கும் பேசியிருந்தார்கள். சீர்மையிலே நடந்த கலியாணத்தைக்கூடப் பேசினார்கள். அப்போது நான் அனுப்புவித்துக்கொண்டு சின்ன பரசுராமப்பிள்ளை விருந்தானபடியினாலே அங்கே சாப்பிடப்போனேன்.

1747 ஆ ஜூன் மீ 31 உ க்கு பிரபவ ஸு ஆனி மீ 21 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே எட்டு மணிக்குக் கோட்டைக்குப் போய்க் கோட்டையிலே சின்னதுரை, முசியே லெநு முதலானபேருடனே கும்பினீர்காரியங்களைப் பேசிவிட்டுக் குவர்னதோர் வீட்டுக்கு வந்தேன். குவர்னதோரவர்கள் சொன்னது. முசியே தீலார்சு வருகிறேனென்று எழுதினான். அப்துல் ஆசி என்கிறவன் தேவனாம்பட்டணம் வந்து சேர்ந்தானா? அந்தச் சமாசாரம் அறிந்தால் வரச்சொல்லி எழுதலாமென்று சொன்னார். மெய்தான் அவன் இன்னம் தேவனாம்பட்டணம் வந்து சேர்ந்ததாய்ச் சேதி வரவில்லையென்று சொன்னேன். நல்லது, நாசற்சங்குக்கு வெகுமானம் கொண்டுபோகிறவர்களின்னம் பயணம் சாகிப்போகவில்லையாவென்று கேட்டார். அப்பால் லோகாபிரமமாய்ப் பேசியிருந்து வரச்சே, உன் கலியாணத்திற்கு வந்த பெரிய மனுஷர்களெல்லாரும் நான் பார்க்க வேணுமென்று சொன்னார்கள். அப்படியே அழைத்துவருகிறேன் என்று சொன்னதற்கு உன் வீட்டுக் கலியாணத்துக்கு வந்தவர்கள் எல்லாரையும் பார்த்தால் பதினாயிரம் பேருக்குண்டு. ஊரிலே முன்னாலே அரிசி கிடைக்காமலிருக்கிற வேளை, இப்படி வெகு சனங்கள் வந்தால் கரிப்பு வேறே தேவையில்லையே யென்று கேட்டார். அதற்கு ஐயா, அது என்னுடைய குற்றமில்லை, உம்முடைய விஷயம். சென்னப்பட்டணம் வாங்கினதும் மாபூசுக்கான் இந்த ராச்சியம் ஆளப்பட்ட நவாபைச் செயித்துத் துரத்தினதும் உம்முடைய கீர்த்தி ராச்சியமெல்லாம் பரவி அது இந்தச் சனங்களை இழுத்துவந்ததேயல்லாமல் என்னைத் தொட்டும் மற்றப் பேரைத் தொட்டும் வந்த சனங்களல்ல. அல்லவென்று இந்த மட்டுக்கும் இந்தப்பட்டணம், பின்னையும் சென்னப்பட்டணம் முதல் நாகப்பட்டணம் மட்டுக்கும் பெரியபெரிய மனிதர்

கள் வீட்டிலே கலியாணம் ஆச்சுது. இப்போது வந்த பெரிய மனுஷர்கள் அந்த ஸ்தானம் விட்டுச் சலனம்பண்ணுதவர்கள் எல்லாரும் உமது கீர்த்தியினுடைய மகிமை யிழுத்து வந்தது. இது மெய்யோ பொய்யோ விசாரியுங்கோள் என்று சொன்னதற்கு, மெய்தானென்று ஒத்துக்கொண்டு, நல்லது உன் கலியாணத்துக்கு வந்த பெரிய மனுஷர்கள் எல்லாரும் என்னண்டைக்கு அழைத்துவந்து என் பேட்டி பண்ணுவித்து அனுப்பிவை யென்று சொன்னார். நல்லதென்று சொல்லிவிட்டு வந்தேன். அப்பால் அப்பை அழைத்து, நானும் ஒரு நாள் மணவிருந்துக்கு வருகிறேன் வாழையிலை போட்டுக்கொண்டு நானும் உங்களுடன் பந்தியிலேயிருந்து சாப்பிடுகிறேன் என்று சொன்னதற்கு ஐயா, அப்படியே செய்கிறதுதானென்று சொன்னாராம். நான் ஒரு நாளைக்கு மணவிருந்து பண்ணுவிக்கிறேன் என்று சொன்னார். முகூர்த்தமான பிற்பாடு வாடிக்கையில்லையென்று சொன்னான். ஆனால், பெண்சரீரம் சுவஸ்தமில்லையே! பெண் சரீரம் சுவஸ்தமான பிற்பாடு மாப்பிள்ளையும் பெண்ணையும் ஒரு நாளைக்கு மகா வேடிக்கையுடனே இவ்விடத்துக்கு அழைப்பித்து சம்பிரமம் பண்ணுவோமென்று பின்னையும் ஐந்தாறு வெள்ளைக்காரரிருக்கச்சே பேசிக்கொண்டு உற்சாகமாயிருந்தாரென்று கபுறு வந்தது.

*1747* ஆ ஜுலை மீ 13உ க்கு பிரபவ ஹூ ஆடி மீ *1*உ குருவாரம்.

இற்றைநாள் துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே மாபுசுகானுக்கும் டிவான் நாசறு கொல்லிகானுக்கும் காகிதம் எழுதச் சொன்னார். அந்தக் காகிதத்திலே தாங்கள் சுகமாய் ஆரோக்கியத்துடனே நாசற்சங்கு மிலாகத்துஆய் சகல சந்தோஷத்துடனே இருக்கிற கபுறு எழுதி அனுப்பச் சொல்லியும், இங்கிலீசுக்காரர் நாசற்சங்கு அண்டைக்குப் போய்க் கண்டுபேசி வந்தோமென்கிறதும்; மறுபடி நாசற்சங்கு அண்டைக்கு வெகுமானம் கொண்டுபோகிறோமென்கிற படியினாலே பந்தகான் ஆவி நம்முடைய தகப்பனுரைச் சட்டை பண்ணாமல் நடத்துகிறதுமல்லாமல் ஆற்காட்டுச் சுபாகுலி தகயிருப் போச்சுதென்றும், வேறே வருகிறார்களென்றும்

இப்படி வெகு நிதமாய் தூஷணிக்கிற சாடையைப் பார்த் தால் அவர்களுக்கு நல்லகாலம் அல்லாவே என்றுப்போலே தோற்றுது என்றும் இந்தச் சமாசாரம் நீங்கள் கேள்விப் பட்டால் பொறுக்கப்போகிறதில்லை என்றும், உங்கள் தயவினுலே நாங்கள் அவர்களுக்குத் தம்பிபோல சாயிப் போம். நம்முடைய தகப்பனுருடைய ஆக்கினையை மீறப் போகாதென்று அவருக்கு அறிக்கைபண்ணிக்கொண்ட அவர் அப்துல் ஆஜியை (Abdul-haji) தேவனும்பட்டணம் குவர்னதோரண்டைக்கு அனுப்பியிருக்கிருரென்றும் இது முதலாகிய சம்மதியெல்லாம் தங்களுக்கு அறிக்கை பண்ணி னுேமென்றும், இங்கிலீசுக்காரருடைய பெயிமானியெல்லாம் தங்களுக்குத் தெரிந்திருக்குதேயென்று எழுதியும், பின்னை யும் எழுதத்தக்க உபசாரத்துடன் பிரஞ்சுக்காரரைத் திருவதி யண்டையிலே வரச்சே பிடித்துப்போன சேதியும் எழுதி யனுப்பினுேம்.

நாசற்கொல்லிகானு (Nasir-Quli-Khan) க்கும் அப் படியேதானே எழுதி இந்தக் காகிதத்தை வைக்கில் சுப்பைய் யரை சுருக்கிலே நாசற்சங்கு தண்டுக்கு அனுப்பச்சொல்லி யெழுதியனுப்பினுேம். மற்றப்படி தேவனும்பட்டணத்திலே யானல் புதுச்சேரியிலேயிருந்து ஒரு வருஷத்திற்கு முன்னே இரண்டு வருஷத்திற்கு முன்னே போயிருந்தவர்களைக்கூட அந்தப் பட்டணத்துக்குப் பறங்கிப்பேட்டையிலிருந்து வந்த வர்களைக்கூட பிக்ஷைக்காரரைக்கூட வெகுபேரை ஊரைக் கடக்கத் துரத்திவிட்டார்களென்றும், பறங்கிப்பேட்டை வர்த்தகர் மகம்மதலிபேக் (Muhammad-Ali-Beg) முதலான பேர் நம்முடைய கலியாணத்துக்கு வந்து போனவர்களைக் குண்டுக்குள்ளே வரவொட்டாமல் புறம்பே போகச்சொன் னுர்கள் என்றும் இந்த ஊரிலேயிருந்து சில்லறைக்காரர் செட்டிகள் மூன்று பேர் புட்டிவெல்லம் கொண்டுவந்து விற்றுக்கொண்டிருக்கிறவர்களைப் பிடித்து, நாற்பது அடி அடித்து, கழுத்திலே தமுக்குப் போட்டு, ஊர் கடக்கத் துரத்திவிட்ட சேதியும் வந்து சொன்னுர்கள். அந்தச் சேதி ஸ்ரீ துரையவர்களுக்குச் சொன்னவிடத்திலே அதற் குச் செய்யவேண்டிய தென்னவென்று கேட்டார். அதற்கு நானிருந்துகொண்டு இந்தச்சேதியை வெளிப்பண்ணுமல் அவர்

கள் மனிதர்கள் இரண்டு மூன்று பேர்க ளிந்த ஊருக்கு வருகிறவர்களைப் பிடித்துக் கழுத்திலே தழுக்கைப்போட்டு அடித்து ஊர் கடக்கத் துரத்திவிடு. அப்பாலிந்தவூரார் ஒருத்தரும் கூட லூருக்குப் போகத்தேவையில்லையென்று தமுக்குப் போடுவிக்கவேணுமென்றதற்கு அப்படியே செய்வி என்று உத்தாரம்கொடுத்தாராம். மற்றப் படி லோகாபிரமமாய் சேதியேயல்லாமல் விசேஷ சமாசாரமில்லை.

இற்றைநாள் நேற்றையதினம் குவர்னதோரவர்கள் சொன்னபடிக்கு அவர் அவாயிசாயபு அவர்களை வரச்சொல்லி துரையண்டைக்குப் போனவிடத்திலே இமாம் சாயபு அவர்கள் காகிதம் நேற்றையதினம் வந்ததைப் படித்துச் சொன்ன சேதி என்னவென்றால்: நிசாமன்முலுக்கு (Nizam utmulk) அவர்கள் பிறமாசி நூறுபாரம் செம்பு, இருநூறுபாரம் துத்தநாகம், நூறு பாரம் ஈயம். நூறு கட்டு இங்கிலீசு சட்டை சகலாத்து இது அவாயிசாயபு வசத்திலே ஒப்புவித்தால் அவரண்டைக்கு நிசாமன்முலுக்கு தஸ்தருவும் அனுப்பியிருக்கிறோம். அவரந்தச் சரக்குகளை அவரந்தப் பாத்தத்திற்கு அனுப்புவிப்பாரென்றும் சென்னபட்டணத்தைக் கொடுத்துவிடுகிறோம், இதற்குப்பதில் வழுதாவூர் சீமையிலே நல்லூர் சீமையும்கொடுக்கத்தக்கதாகப் பேசச்சொல்லியும் எழுதினீரே, உம்முடைய மனதிலே சென்னப்பட்டணம் வாங்கினது அப்பிரயோசனமாகி உம்முடைய மனதிலே தோற்றியிருக்கிறது. உம்முடைய கீர்த்தி டில்லி, ஆக்ரா பரியந்தம் ஏக பிரகாசமாயிருக்கிறது. சென்னப்பட்டணம் வாங்கினதும், ஆற்காட்டு நபாபை செயித்ததும் சாமானியமானது என்ற தேவையில்லை. ஆனபடியினாலே இனிமேல் சென்னப்பட்டணம் கொடுக்கிறோமென்றும் பேச்சு மறந்துபோகவேணும். வழுதாவூர் சீமையும் வில்லியநல்லூர் சீமையும் உமக்கு வரத்தக்கதாகப் பண்ணுகிறேன். அல்லாமல் அதற்கு காயின் பேரிசும் இப்போது காணுகிற பணமும் சாகீர் இன்னதென்கிற வயணமும் விசாரித்து எழுதி அனுப்பச்சொல்லியும் எழுதினேனென்றும் மற்றப்படி அசலல்விகானுகிய தம்முடைய குமாரனுக்குச் சிறிது பணம் கொடுக்கச்சொல்லி யெழுதியனுப்பினபடிக்குக் கொடுக்கச் சொல்லியும், பெண்ணுக்குக் கலியாணம் சரன் சாமான் முஸ்திப்பு பண்ணச்சொல்லியும், அதற்குக் கேட்ட பணம் கொடுத்

துச் சாக்கிரதைப்பண்ணச்சொல்லியும் இப்படியாக எழுதி யிருந்த சேதியெல்லாம் அவாயிசாயபு முன்பாகத் துரைக்குச் சொன்னேம். இதல்லாமல்நாசற்சங்கு உங்களுக்கு அனுப்பின சிற்பெஷ் வந்துசேர்ந்திருக்குமே, அதற்கு அவருக்குத் துற்பினு நேர்த்தியாய் ஒன்று நீர் அனுப்புவித்த அவரனுப்பியிருக்கிற துற்பினு முஸ்தீப்பு பண்ணிக்கொடுத்து அனுப்பினுல் லக்ஷம் வராகன் நசர்வைத்தால் எத்தனை சந்தோஷமோ அத்தனை சந்தோஷமிருக்க அவருக்கும் உமக்கும் ஸத்திநேசம் பண்ணிவைத்தாப்போல் ஆச்சுதே, அதை விடவேண்டாமென்றும் இப்படியாக எழுதியிருந்தது. அந்த வயணமும் மனுஷர் சரீரம், எலும்பு, நரம்பு முதலான வைத்திய சாஸ்திரம் உடற் கூறு சுறுசுறுப்பா யெழுதியிருக்குதே அதைப் பாரீசுபடுத்தி அனுப்பச்சொல்லியும், பாரீசுபடுத்துகிறதற்குக் கூடாமற் போனுல் பிரான்சிலே யிருக்கிறபடிக்கே அந்த லீவ்ரைத்தானே அனுப்பச்சொல்லியும் இப்படியாக எழுதியிருந்த வயணம் துரை கேள்விப்பட்டு அவாசாயபுக்குத் துரை அவர்கள் சொன்னது: மனுஷருடைய உடற்கூறு சுரூப சுரூபமா யெழுதி அதற்கெல்லாம் பயனின்னதென்று விசிதப்படுத்தி இருக்கிற புஸ்தகமும். அதற்குச் சஸ்திரம் பண்ணுகிற ஆயுத புஸ்தகங்களும் ஔஷதங்களெழுதி யிருக்கிற புஸ்தகங்களும் ஆக இரண்டு புஸ்தகமும் இங்கிலீசு சட்டம் நச்சுக்குழல் நீண்டது மொலாம்பண்ணதொன் றும் வர்ணம்போட்டதொன்றும் ஆக இரண்டும், பித்தளை யாலே பண்ணினது சந்திர நக்ஷத்திரம் பார்க்கிற நச்சுக்குழ லொன்றுமிதுகளை என் கையிலே கொடுத்து நாசற்சங்குக்குக் காகிதம் எழுதவேண்டிய வயணமும் சொல்லி காகிதமெழுதி, அப்பால் அவாயிசாயபு வசத்திலே மேலே எழுதப்பட்ட தினுசுகளும் காகிதமும் ஒப்புவிக்கச்சொல்லி உத்தாரங் கொடுத்தார். வழுதாவூர் சீமைக்கும் வில்லியநல்லூர் சீமைக் கும் சாமீன் பேரிசுகளும் காலதாமதமாகிற பேரிசும் விசா ரித்து இமாம் சாயபு எழுதின காகிதத்துக்குப் பதில் காகிதம் எழுதி அனுப்பச்சொல்லி உத்தாரங்கொடுத்தார். கொடுத் துத்தீர்ந்தபிற்பாடு அவாயி சாயபு, இமாம் சாயபு அவர்கள் தினுசுகளுக்கு எழுதினுர்களே, என்ன சொல்லுகிறீர்க ளென்று கேட்டார். அப்போது என்னைப் பார்த்து, கும்பினீர் வர்த்தகருக்குச் சொல்லி, செம்பு நூறு பாரம் கொடுக்கச்

சொல்லு என்று சொல்லி, துத்தநாகம் இரு நூறு பாரம் எழுதினார்களே வர்த்தகர் கையிலே எத்தனை பாரம் இருக்கிற தென்று கேட்டார். நூறு பாரமிருக்குதென்று சொன்னேன். அந்த நூறு பாரமும் கொடுக்கச் சொல்லென்று சொன்னார். ஈயம் நூறு பாரம் கோட்டையிலே கொடுக்கச் சொல்லென்று சொல்லுகிறேன். பிரஞ்சு சட்டம் நூறு கட்டு சகலாத்து கொடுக்கச் சொல்லுகிறேன். இங்கிலீசு சட்ட மில்லையென்று சொல்லி ரொக்கம் தம்முடைய சொந்த சம்மதியிலே வட்டி சம்மதிக்கு ஆயிரம் வராகன் கொடுக்கிறேன், ஒரு ரசீது கொடுக்கச் சொல்லென்று சொன்னார். அதற்கு அவாயி சாயபு யிருந்துகொண்டு, போதாதென்று சொன்னார். சகலாத்து, செம்பு, ஈயம், துத்தநாகம் முப்பதினாயிரத்துக்கு மேல் ஆகுது. மற்றதுக்கப்பால் தீர்த்துப்போடுகிறோம், இப்போது கூடாதென்று சொன்னார். அந்தமட்டுக்கும் இவர்களை அனுப்புவித்துக்கொண்டு வீடுதிக்குப் போனார்கள்.

அப்பால் கலியாணமான சேதி சென்னப்பட்டணத்துக்குப் போச்சுதே காலம்பண்ணிப்போன சேதி போனமாதம் முப்பதாந்தேதி திங்கட்கிழமைநாள் முசியே துலோராமுக்கு சேதி போய்வர, முத்தியப்பிள்ளையை அழைத்தனுப்புவித்துப் பாப்பாள், ஆனி மீ 27 உ வெள்ளிக்கிழமை ராத்திரி ஒன்பதரை மணிக்குக் காலம்பண்ணிப்போன சேதி தனக்குத் தன் மருமகன் முசியே பெடுந்தலேன் எழுதி அனுப்பினதாய்ச் சொல்லி, மாப்பிள்ளை ரொம்ப துரதிர்ஷ்டம் பண்ணினவன். ரங்கப்பனுக்கு ரொம்ப விசாரம் வந்ததென்று ரங்கப்பனுக்கு இப்படி வரலாகாதென்று ரொம்ப தாபந்தப்பட்டு சொன்னதின்பேரிலே முத்தியப்பிள்ளை விழுந்து புரண்டு அழுததை ஒருமட்டு மிதத்துக்குள்ளே சொல்லியும் முடியாதென்று வெள்ளைக்காரர்கள், வெள்ளைக்காரிச்சிகள், தமிழர்கள், துலுக்கர்கள் சமஸ்தமான பெண்டுகளான பிள்ளைகள் அங்கலாயாதவர்கள் ஒருத்தருமில்லை பட்டணமெல்லாம் ஏக ரோதையாகியிருந்ததென்றும், முசியே துலோராம் மற்றுமுள்ள வெள்ளைக்காரர்கள் நமக்குத்தானே இப்படி கேட்டமாத்திரத்திலே தாபந்தமாய்ச் சகிக்கக்கூடவில்லை. ரங்கப்பனும் அவன் பெண்சாதியும் எப்படி சகிப்பார்களென்று யிதுவெல்லாம் மாப்பிள்ளை துரதிர்ஷ்டனென்றும்

இனிமேல் சகிக்கச்சொல்லி மனம்பொறுத்துப்பார்க்கவேணு மென்று சொல்லி, முசியே துலோராம், கோபாலகிருஷ்ணய்யனை அழைப்பித்துச் சொல்லி, தன் பாகுத்தியாய் காகிதம் எழுதி அனுப்பச்சொன்னுரென்றும் கோபாலகிருஷ்ணய்யன் எழுதின காகிதத்திலே எழுதியனுப்பின வயணமெல்லாம் பார்த்துக் கொண்டு மிகுதியும் மனஸ்தாபமாச்சுது. இந்தக் காகிதம் முசியே துலோராம் மருமகன் பெடுதலேன் அண்டைக்கு அனுப்பினுன். இதல்லாமல் பறங்கிப்பேட்டை முத்தியப் பிள்ளையும் புடுகிசுக்கப்பல் (Portuguese) கப்பித்தான் அந்தோனி தே காம்பியோ என்கிறவன் பிறகே சதுரங்கப்பட் பட்டணத்துக்கு ஆனி மீ 21௨ இவ்விடத்திலேயிருந்து போன வன் சென்னப்பட்டணத்திலே புடுகிசுக்கப்பல் (Portuguese) கப்பித்தான் பிறகே போயிருக்கச்சே, கோட்டையிலே முசியே துலோராம் முத்தியப்பிள்ளைக்குப் பாப்பாள் காலம்பண்ணிப் போன சேதி சொல்லச்சே, தாமும் கூட இருந்ததாகவும், அப் போது முத்தியப்பிள்ளை அந்தப் பட்டணத்துச் சமஸ்தமான சனங்கள் ஆண் பெண் அடங்கலும் தாபந்தப்பட்ட விபரமெல் லாம் கோபாலகிருஷ்ணய்யன் காகிதத்திலே யிருந்தபடிக்கே எழுதியிருந்தது. ஆனுல் கேட்ட சனங்களுக்கே இபபடிப்பட்ட துயரம் அனுபவித்தார்களேயானுல் இந்தத் துக்கம் பிறத்திய க்ஷமாய் அனுபவித்த என் சரீரம் நின்றதுக்கு எனக்குத்தானே ஆச்சரியமாயிருக்குது. ஆனுல், என்னெஞ்சு இரும்பினுலே பண் ணினதேயல்லாமல் மாமிசத்தினுலே செய்ததல்ல வென்று தோற்றுது. இந்தக் கலியாணத்துக்குள்ளே நடவாமல் பத்து நாள் முந்தி ஆனுலும் பிந்தி ஆனுலும் இத்தனை துக்கம் படத் தேவையில்லை. இந்தச் சமயத்திலே ஆனதினுலே இத்தனை துக்கத்துக்கு இடமாச்சுது. ஆனுல், மனுஷருடைய எத்தனம் என்ன கவைக்கு வருகுது. தெய்வ எத்தனப்படி நடக்கிறதற்கு நாமென்ன வென்ருலும் ஒன்றும் நடக்கத்தக்கதில்லை. தெய்வம் அப்படி நடக்கவும் நாம் இப்படி சகித்துக்கொண்டிருக்கவும் நேமித்திருக்கச்சே அதைத் தள்ள ஒருத்தராலே கூடுமோ? சுவாமியினுடைய சித்தத்தின்படிக்கு எந்த வேளைக்கு எது நடக்கவேணுமோ அதிலே ஒரு அற்பத்தளவிலே ஏறவும் ஏருது, குறையவும் குறையாது. நான் செய்யவேண்டியது என்ன இருக்கிறது?

**1747 ஆ ஜூலை மீ 16வுக்கு பிரபவ ஸு ஆடி மீ 4வ ஆதிவாரம்.**

இற்றைநாள் குவர்னதோரழைத்தனுப்பி, தேவனும் பட்டணத்துச் சேதி ஏதாகிலும் உண்டாவென்று கேட்டார். மேஸ்தர் கேரோபேன், காமண்டோர் கப்பலிலே ஒரு ஒபிசியே லிருந்தாப்போலேயும், அவனுக்குத் தேவனும்பட்டணம் கோட்டையிலே இருக்கிற எல்லா ராணுவத்துச் சண்டைக் கெல்லாம் கொம்மாந்தான உத்தியோகம் கொடுத்தார்களென் றும், அப்போது கோட்டையிலே இங்கிலீசுக் கொடி போட்டு வரிசை வைத்திருக்கச்சே அதன்பேரிலே ஒரு கருப்புக் கொடி போட்டு வரிசை வைத்து வரிசையிலும் அப்படித்தான் கருப்புச் கொடி பிடித்துக்கொண்டிருந்த உத்தியோகம் கொடுத்தார்கள் என்றும், அப்போது பதினைந்து வேட்டு பீரங்கிச் சுட்டார் களென்றும், அந்த வரிசையுடனே மஞ்சகுப்பத்துத் தோட்டத் துக்கு வந்தார்களென்றும், அதிலே முன் பொம்பாயிலிருந்து வந்தவர்கள் காப்பிரிகள், வெள்ளைக்கார சிப்பாய்கள் கூட முன்னூறுபேரிருக்கிறார்களே அவர்களோடே கூட வந்த வரிசையைக்கூட நிறுத்தி, தோட்டத்திலே யிருக்கிறார் களென்றாப்போலேயும், மஞ்சகுப்பத்துத் தோட்டத்துக்குச் சிறிது சண்டை சாமானெல்லாம் பீரங்கி மருந்து குண்டுகள் முதலான சாமான்கள் கொண்டுவந்து சேர்க்கிறார் களென்றும், பிஸ்கோத்துகள் திரளாய்ப் பண்ணுகிறார்களென் றும், மதாம் மாசு மஞ்சகுப்பத்துத் தோட்டத்திலே யிருக்கிறார் களென்றும், சண்டை கப்பல்களெல்லாம் தீனி தட்டுமுட்டு கள் ரஸ்துகள் விஸ்தாரமாய் ஏற்றுகிறார்களென்றும், நாலு நாளைக்கு முன்பாக வந்த இரண்டு சண்டைக் கப்பல்களிலே சிறிது காயக்காரர்களை இறக்கினார்களென்று மிந்த கப்பல்கள் வரச்சே கால் (Galle) அண்டையிலே பிரஞ்சுக்கப்பல்களைக் கண்டு சண்டைப்போட்டு ஓடிவந்ததாகவும், பொம்பாயிலே யிருந்து சிறிது கப்பல்கள் வருந்தனிலும் காத்துக்கொண்டிருக் கிறதாகவும், பிராஞ்சுக்காரர்களுக்குச் சிறிது கப்பல்கள் வரு கிறதாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்களென்றும் ஆஜி ஆதி (Haji-Hadi) தேவனும்பட்டணத்துக்கு—வந்தவிடத்திலே இவனுடு பேர் பிராஞ்சுக்காரரை விடுகிறதற்குப் பேசினவிடத்திலே விடுகிறதாய்க் காணவில்லையென்று மிப்படியாக இப்படியாகச்

சேதி வந்ததென்றும் கபுறு சொல்லி அஞ்சாலிலே (Anjengo) யிருந்து முன் இவ்விடத்திலே வந்திருந்துபோன பிக்கன் கானும் (Bikkan-khan) முன்னூறு பேர் சிப்பாய்களும் வருகிறார்களென்றும் எதிர்கொண்டு சிறிது ராணுவத்தை அழைத்துப்போனதாகவும் நாசற்சங்குக்கு வெகுமானம் தேவனும்பட்டணத்தாரன் அனுப்பினது ஆற்காடு சேர்ந்து அப்பால் சாகிப்போகிறதாய்ச் சேதி வந்ததென்றும் சொன்னதற்கு, கருப்புக்கொடிபோட்ட நியாயம் என்னவென்று கேட்டார். அது ஏரோப்பியா சட்டம் உங்களுக்குத் தெரியாதது எனக்கு எப்படித் தெரியுமென்று சொன்னேன். அசேக் அப்துல் ரஹிமான் (Shaik-Abdul-rahman) பெரிய சமேதாரன் வந்து பெருமுக்கல் மியாசாயபு (Myan sahib) காகிதம் தனக்கு வந்ததாகவும் அதிலே மாபூசுகான் நாசற்சங்கு அண்டைக்குப் போனவிடத்திலே நாசற்சங்கு மாபூசுகானைத் தன்னண்டைக்கு வரவேண்டாமென்றும் பிராஞ்சுக்காரருக்குச் சண்டையிலே முதுகு காட்டி ஓடி பாற்சாவுக்கு அபகீர்த்திக்கொண்டுவிட்டதாகவும் அவன் வரலாகாதென்றும் சொன்னார்போலேயும், நாசற்சங்கு தண்டுக்குக் காதவழியிலே இறங்கிக்கொண்டு ராசவட்டம் விட்டுக்கொண்டிருக்கிறானென்றும் இப்படியாகச் சேதி வந்ததென்று சொன்னான். ஆற்காட்டிலேயிருந்து நமக்கு வக்கீல் எழுதின காகிதத்திலே மாபூசுகான் நாசற்சங்கு பேட்டி பண்ணிக்கொண்டவிடத்திலே வெகு உதாரிப்புப்பண்ணிக் கொண்டவிடத்திலே வெகு தயவாய் மைர் முகத்துமாகூட உன் மாரிபத்திலே தீர்த்துப் போடுகிறேனென்று சொன்னார்கள். அன்வர்திகானுக்கு எழுதி வந்ததாய் எழுதின சமாசாரம் அபத்தமாவென்று கேட்டார். மியா சாயபு வக்கீல் நாசற்சங்கு தண்டிலேயிருக்கிறார்கள். அவர்கள் எழுதின சமாசாரம் நிசமாயிருக்கும். தங்கள் காரியம் எத்தனை எளப்பமிருந்தாலும் அவர்களும் எளப்பமென்று சொல்வார்களே, மேன்பாடாய்த்தானே சொல்லிக்கொள்வார்களென்று சொன்னேன். அது எப்படி நடந்ததென்றார். அதற்கு நான் பின்னையும் பத்துப்பணம் வாங்கும்பொருட்டுப் பின்னையொன்றுக்குமல்லவென்று சொன்னேன். அது மெய்தானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் சேக்கு அப்துல் ரஹிமான் பிக்கன்கான் வருகிறானே அவன் பிறகே வருகிற சிப்பாய்கள்

முன்னூறு பேரும் கெட்டிக்காரரென்றுசொன்னன். அதற்கு நான் அதிர்ஷ்டமில்லாதவர்களிடத்திலே எப்படிபட்ட சூரன் சேர்ந்தாலும் நாமும் அப்படியேபோகிறதேயல்லாமல் சூரனெண்பித்துக்கொள்ளமாட்டானென்றும், உதட்டைப் பிதுக்கிச் சொன்ன சாடை அறிந்துஎன்னவென்று துரை கேட்டார். சொன்ன சேதியைச் சொன்னேன். அதற்குத் துரை சேக்கு அப்துல் ரஹிமான் பார்த்து நகைத்து, நீ அவ்விடத்திலே இல்லாதபடியினலே அவர்கள் எத்தனை கெட்டிக்காரனானலும் அவர்கள் நாமறதோய்ப் போவார்களென்று சொன்னர், அது அவனுக்குப் பிடிபடாமல் நானில்லாவிட்டால் என்ன. அவர்கள் மகா சூரர்கள் நானறிவேன் என்று சொன்னன். அதற்குத் துரையிருந்துகொண்டு ரங்கப்பா சாடை அவனுக்குத் தெரியவில்லை. விசிதப்படுத்திச் சொல்லென்று சொன்னர். அப்பால் துரைக்கு யோகமும் கீர்த்தியும் வருகிறதற்குக் காலமிருக்கச்சே எத்தனை கெட்டிக்காரர் வந்திருந்தாலும் கையிலே ஆகாதவர்களாக நாமறதென்று எண்பித்துக்கொண்டு வருவார்களென்று அதை விபரமாய்ச் சொன்னபிற்பாடு ஒத்துக்கொண்டான். அப்பால், துரையும் நானும் லோகாபிரமமாய் துரையவர்களுக்கு இருக்கிற அதிர்ஷ்ட பலப்பையும் நடந்த காரியங்களையும் இரண்டு நாழிகை மட்டுக்கும் பேசியிருந்து அப்பால் அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்குப் போனேன்.

அப்பாலின்று காலத்தாலே அழிசபாக்கத்து ரெட்டிகள் ஒரு பெத்திஸியோம் கொடுத்தார்கள். அந்த பெத்திஸியோமிலே அவர்கள் தங்களுக்குப் போன நஷ்டம் எழுதின சாடையைப் பாரென்று உள்ளே போய் பெத்திஸியோமை எடுத்து வந்து தங்களுக்குக் கொள்ளையிலே போச்சென்று எழுதின பத்தாப்படியே படித்துக் காண்பித்துச் சொன்ன விபரம்:—

| | |
|---|---|
| நெல் கேழ்வரகு முதலானது இருபத்து மூன்றே சில்வரை கரிசை போச்சென்றும், அதற்குக் கரிசை ஒன்றுக்கு வராகன் 45¼ வீதம் | 1058 |
| கொளுத்திப்போட்ட வீடு 113-க்கு வராகன் | 940 |
| மாடுகள் 177-க்கு கிரயம் வராகன் | 215 |
| ஆடுகள் (நாற்பது) 40-க்கு வராகன் | 8 |
| வாழைத்தோட்டம் 4-க்கு வராகன் | 125 |

பொன் நகை, தட்டுமுட்டுப் போனது வராகன் 143
〃 நகை, தட்டுமுட்டுப் போனது வராகன் 143
ஆக துகை கூடின வராகன் 2489

இந்தப்படிக்குக் கொள்ளைப்போனது மெய்யென்று நம்புகிறது. திருக்காஞ்சியிலே நாசறு கொல்லிகான் (Nasir-quli-khan) வந்திறங்கி கோட்டைப் போட்டபோது இரண்டு மூன்று நாள் ரொம்ப ஆவலாதியாய்க் கொள்ளை கொள்ளையென்றும் கலாட்டாக்காரர் வந்தது மிதிலே மகம்மதார்க்கல் போய்ச் சொன்னதிலே அவன் தாக்கீதுபண்ணினதும் அந்த மட்டிலே நின்று போனதுமே யல்லாமல் இருபத்தி மூன்று கரிசை தானியம் எடுத்துப் போகிறதற்கு எத்தனை மாடு வந்து எடுத்துக் கொண்டு போகவேணுமென்றும், இது போட்டிருக்கிறதற்கு இடம் எத்தனை விசாலமிருக்கவேணுமிதெல்லாம் அபத்தமென்று சொன்னதற்கு லசார் (M. Lazar) மனுஷர் மணியக்காரரும் தயினாத்திருந்த சேவகரும்கூட அறிவார்கள். நாங்கள் அபத்தம் சொல்லவில்லையென்றும், சத்தியம் பண்ணுகிறோமென்றும், சொல்லுகிறார்களென்றும் அப்படியிருக்க, எப்படி பொய்யென்று சொல்லுகிறது மிதற்கு வேறே சாதகம் எங்கே தேடுகிறதென்றும் சொன்னதின்பேரிலே அவர்களும் வருகிறதிலே பங்கிட்டுக்கொள்ளுவார்களென்று சொன்னார். அதற்கு நான் காரியமாய்ப் பார்க்கவேண்டியதே அல்லாமல் தள்ளுகிறது நியாயமல்லவேயென்று சொன்னதற்கு என்னுடைய கிராமமல்ல, கும்பினீர் கிராமமுமல்ல, இது மூசியே தும்மாவுடையது. மூசியே துலாராம் சம்மதித்தால் எனக்குச் சம்மதி தானென்று சொன்னார். அவர்கள் மூசியே தும்மா குவர்னேருடைய சேவகரை அறிவார்கள். அவருக்குப் பிற்பாடு நீங்கள் துரைத்தனம்பண்ணுகிறீர்கள். உங்களை அறிவார்கள் மற்றப் பேர் ஆரையும் அறியார்கள். அறிந்தாலும் நீங்களும் துரைத்தனம்பண்ணச்சே, உங்கள் ஆக்கினையின் கீழேயிருக்கச்சே நியாயமாம்படியே தீர்த்து உபயத்திர்வருக்கு இப்படி நடந்துகொள்ளுங்கோள் என்று உத்தாரம் கொடுக்கிறபடிக்கு நடத்திக்கொள்ளுவார்களென்று சொன்னதின்பேரிலே குடிசைகளுக்கு ஆயிரம் வராகன் எழுதியிருக்கிறார்களே, மூன்று நாலு வீடு பெரிய வீடு என்று சொன்னீரே யென்று கேட்டார். மெய்தான். நாலு வீடு பெரிய வீடு மற்றது குடிசைகள் நாலும். ஒரு குடிசைக்கு மூன்று நாலு வராகன்

பார்த்தாலும் நானூறு வராகன் ஆகுது. பெரிய வீட்டுக்கு நூறு வராகன் பார்த்தாலும் நானூறு வராகனுச்சுது. இரண்டு தொகை கூட்டினால் எண்ணூறு தொளாயிரமாச்சுதென்று சொல்லி, இதெல்லாம் லாசறு மனுஷனேயே சாக்ஷி சொல்லுகிறார்களே கும்பினீர் சேவகரங்கே தயினுத்து இருந்தார்கள். அவர்களே சாக்ஷியென்றும், அந்த ராணுவத்து மனுஷரே அறிவார்களென்றும், அரியாங்குப்பத்திலேயும் சிறிதுபேர் அவரவர்களென்றும், அப்போதைக்கப்போது லாசருக்கு அறிக்கைப்பண்ணிக்கொடே வந்தோம். அவரறியாத சேதி ஒன்றுமில்லையென்றும் இப்படியாகச் சொல்லுகிறார்கள். உங்கள் அடிமையாய் உங்கள் ஆணை ஆக்கினையிலேயிருந்து கெட்டுப்போகிறது நியாயம். உங்களை நடப்பினவர்களெல்லாம் சென்னப்பட்டணத்துக் கலாபத்தைத்தொட்டு லக்ஷாந்தரம் சம்பாதித்தார்கள். கடைசி ஒரு சேவகனுக்குக்கூட நூறு ஐம்பது சம்பாதித்தார்கள். அப்படியு மில்லாதுபோனார்கள். சேதப்பட்டது எங்கள் பொல்லாத வேளை என்று சொல்லுகிறார்களென்று சொன்னதின்பேரிலே நகைத்து, அவரவர்கள் அதிர்ஷ்டம்! நல்லது, இப்பவும் இதை ஏம்போற்மாரிடு என்று பெத்திஸியோனமை என் கையிலே கொடுத்தார்.

1747 ஆ ஜுலை மீ 17க்கு பிரபவ ஸு ஆடி மீ 5உ சோமவாரம்.

இற்றைநாள் பின்னையும் ஒன்றுமதிசயமான காரியமில்லை, எழுதத்தக்கதும் துரையிடமில்லை. ஆனால், முசியே எலியாஸ் ஆதிகாலத்திலே வந்து கண்டுபேசவேண்டிய காரியமுண்டு. அகத்தியமான காரியம் என்று குமுந்தையப்பமுதலியாருடனே சொல்லி அனுப்பினான். அதன்பேரிலே இற்றைநாள் காலமே ஆறு மணிக்கு முசியே எலியாஸ் சண்டைக்குப் போனவிடத்திலே அவன் முன்னே உனக்கு இப்படிப்பட்ட விசாரம் வரலாகாது. ஆகிலும், சுவாமியுடைய சித்தத்தின்படியே நடக்கிற காரியமே அல்லாமல் மனுஷருடைய நினைப்பினாலே வரத்தக்கதில்லையே! அதற்கு விசாரப்படத்தக்கதில்லையென்றும் உபசாரமாய்ச் சொல்லி ஆனபிற்பாடு......செய்யவேண்டியிருக்குதே! உன் தட்டுமுட்டு அப்புறப்படுத்தினியாவென்று கேட்டான். எதைக் குறித்து என்று கேட்டேன். இங்கிலீசுக்காரருக்குக் கப்பல் வருகிறது ஊற்சிதம். இவர்களுக்குக் கப்பல் வருகிற

பேச்சு சுவாமிக்குத் தெரியும். இருக்கிற பத்திரத்திலேயிருக்க வேணுமென்று சொல்லி, அப்பால் விழிக்கிறதிலே காரிய மென்னவென்று கேட்டான். அதற்கு நான் சொன்னது: இந் தப் பட்டணத்துக்கு அப்படி ஏதாகிலும் அசடு வரும் என்று எண்ணத் தேவையில்லை. நான் சொல்லுகிறேன் நம்புமென் றும், பின்னையும், என்னவிதமாய்ச் சொன்னாலும் ஒத்துக் கொள்ளாமல் பேசினார். நாமென்ன விருதாவாய் தெரியாதவ னுடனே மல்கட்டவேணுமென்று சொன்னேன். என் காரியத் திலே நான் சாக்கிரதையா யிருக்கிறேன். உம்முடைய காரி யத்திலே நீர் சாக்கிரதையாய் இருமென்று சொல்லிவிட்டு அனுப்புவித்துக்கொண்டு குவர்னதோரவர்கள் வீட்டுக்கு வந் தேனிவன் மாத்திரமே யல்ல, கோன்சேல்மார்களுட்பட பட் டணம் போகிறதாய்த்தானே எண்ணிக்கொண்டு அவரவர்கள் தங்கள் தங்கள் தட்டுமுட்டு பத்திரம்பண்ணுகிற எத்தனத் திலே யிருக்கிறார்கள். கோன்சேல்காரர்கள் தானே அப்படியா னால் மற்றப் பேர் சேதி எழுதவேண்டியதில்லையே! இன்னேரத் தைக்குப் பிரபு ஒருத்தன் தவிர மற்றப்பேரெல்லாரும் சந்தே கத்தின்பேரிலே யிருக்கிறார்கள். சுவாமியுடைய சித்தம்.

1747 ஆ ஜூலை மீ 18 உக்கு பிரபவ ஞ ஆடி மீ 6 உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே சந்தராவிலேயிருந்து சந்தா சாயபு காகிதம் என்பேருக்கொன்றும், துரையவர்கள் பேருக் கொன்றுமாக வந்தது. ரசோபண்டிதருங்கூட வந்தார். அந்தக் காகிதச் சேதி துரையவர்களுக்குச் சொன்ன வயணம்: சயராம் பண்டிதர் ரகோசிபோன்சலேவுடைய குமாஸ்தாக்களண் டைக்கு வந்து அவ்விடத்திலே தங்கள் கையிலனுப்புவித்து இவ்விடத்துக்கு வந்த பிற்பாடு என்னிடத்திற்குத் தங்களதி சயமும், தங்களுக்கு வந்த செயமும், தங்களுடைய தைரியஸ் தைரியமும் பராக்கிரமமும், தங்களுக்கு வந்த செயமும் தங்கள் கீர்த்தியும் தர்மங்கள் அவருக்கு என் சிமித்தியம் சாத்தாரா (Satara) விட்டுப் புறப்பட்டவுடனே லக்ஷம் ரூபாயும் கடப்பை யைச் சேர்ந்தாப்போலே லக்ஷம் ரூபாயும், ஆற்காடு தாக்கிலா னுப்போலே லக்ஷம் ரூபாயும், என்னைக் கொண்டுவந்து சேர்த்தால் பதினாயிரம் ரூபாயும் கொடுக்கிறோமென்று சொன்னது முதலான மரியாதை அவருக்கு நடப்பித்ததும்

எங்கள் சமுசாரத்தின்பேரிலே மிகுந்த தயவாய் என் குமாரனுக்கு நடப்பித்துக்கொண்டு வருகிறதும் விஸ்தாரமாய் வந்து சொல்லச்சே என் மனதுக்கு அத்தியந்த சந்தோஷமானேன். இப்பவும் தாங்கள் இப்படியெல்லாம் தயவுபண்ணி இருக்கிறீர்களென்கிற சேதி செயராம் பண்டிதர் வந்து சாவு ராசா, ரகோசி போன்சலா முதலான பேர்களுடனே சொன்னபடியினுலே என் காரியத்துக்கு வெத்தவும் அனுகூலப்பட்டிருக்கிறது. ஆனபடியினுலே, சுவாமியும் உமக்கு இன்னும் அநேகமாகிய செயமும் கீர்த்தியும் கொடுப்பார். இப்பவும் நான் அந்தப் பிராந்தியங்களுக்கு வரவேணுமென்று பவுன்சு முஸ்தீது பண்ணிக்கொண்டு புறப்படுகிற வேளையிலே நபாபு அசபு சாவும் ( Asaf Jah ) நாசற்சங்கு அவர்களும் சீர்ப்பி ( Sirpi ) அந்த வட்டங்களுக்கு வந்ததைத்தொட்டு தாமசமாய் நிற்க வேண்டியதாய் வந்தது. இதல்லாமல் நிசாமவர்கள் அவுரங்காபாத்துக்குப் போன பிற்பாடு நாசற்சங்கு அந்தப் பிராத்தியங்களிலே இருக்கிறதைத்தொட்டு அப்படிப்பட்டது அவருக்கு அந்தப் பிராத்தியங்களுக்குக் குல்யே குத்தியார் கொடுத்தனுப்பினவரல்ல. மைசூர் பேஷ்கஷ் பணமும் ஆற்காட்டிலுள்ளவர் முதலானவர் சுபாவின்பேரிலே வெகு பணம் வரவேண்டியதானபடியினுலே அந்தப் பணம் தாசில்பண்ணிக்கொண்டு வரச் சொல்லி இவரை நிறுத்திப் போனதேயல்லாமல் மற்றப்படியல்ல. இதிலே மழைக்காலம் ஆகிறதாம், தாமதம் அவரிவ் விடத்துக்கு வருவார். நான் அவ்விடத்துக்கு வருவேன். வந்த உத்திரக்ஷணம் தாங்கள் நடப்பித்ததற்கு என் தவுலத்தெல்லாம் தங்களுடையதாக நடப்பிப்பேன் என்றும், அந்த மழைக்காலம் போன பிற்பாடு கெட்டியாய் வருகிறேன் என்று எண்ணவும் என்று எழுதி இங்கிலீசுக்காரர் கப்பல் இரண்டொன்று மூலைக்குமூலையாய் ஓடித் திரியுதென்றும் அப்படித் திரிந்தாலும் உம்முடைய தைரியமும் கோட்டை லாகாதிவிப்பம்போலேயிருக்கிறதை அவர்களைத்தொட்டுச் செய்யத் தக்கதொன்றுமில்லை. ஆனலும், ஒருவனைக் கொண்டுவந்தால் நம்முடைய குஞ்சுக் குழந்தைகள் இருக்கிறதற்குப் பயப்படுவார்கள், அவர்களை வந்தவாசிக்கு அனுப்புவிக்கச்சொல்லியும், அவ்வளவு பயம் கவையில்லையென்றால் குண்டு விழாமலிருக்கிற தாவாய்ப்பார்த்து அங்கே வைக்கச் சொல்லியும் எழுதி, திரும்பியும் கடைசியிலே தம்முடைய சுவஸ்தமாய்

எழுதினதென்னவென்றல்: நாசற்சங்கு அந்த வட்டாரங்களுக்கு ஆற்காட்டுக்கு வருகிறதற்கு உத்தரவில்லையென்று கட்டத்தின் மேலே சிற்பி அந்த வட்டாரங்களிலே யிருந்து பணம் அறுவு பண்ணிக்கொண்டு வரச்சொல்லி உத்தரவேயல்லாமல் கட்ட மிறக்கி ஆற்காட்டுக்கு அந்த பிராக்கியங்களுக்கு வருகிறதற்கு உத்தாரமில்லை. ஆனபடியினலே நாசற்சங்கைத்தொட்டு நீங்கள் பயம் எண்ணத் தேவையில்லை. நாமும் இந்த வருஷ காலம் போனப்போலே வந்து உங்கள் சத்துருவாகிய பஞ்சுப் பொதியிலே நெருப்புப் போட்டுக் கொளுத்தி தும்சம்பண்ணிப் போடுகிறோமென்று எழுதின காகிதச் சேதியெல்லாம் துரை யவர்களுக்குச் சொல்லி, குஞ்சுக் குழந்தைகள் இங்கிலீசுக் காரர் சண்டை நிமித்தம் வந்தவாசிக்கு அனுப்பச்சொல்லி எழுதின சேதி தவிர, மற்றதெல்லாம் சொன்னதற்கு உற்சாக மாய்க் கேட்கவில்லை, மூகத்திலே உற்சாகம் தோற்றவில்லை, மற்ற வேளையானல் இம்மாத்திரம் எழுதியிருந்ததற்கு அவர் சொல்லுகிற உத்தாரமும் நகைப்பும் உற்சாகமும் எழுதிமுடி யாது. ஆனபடியினலே காலத்தாலே வந்த சூரத்துக் காகிதத் திலே ஏதோ உற்சாகமான சேதி யிருக்கவேணுமென்று யோசனைபண்ணினேன். அதன்பிற்பாடு நாசற்சங்குக்குத் துரை அவர்கள் எழுதின காகிதம் தலைப்பில் சொன்ன வயணம்: தாம் இமாம்சாயபு மாரிபத்திலே அனுப்பின சிர்பேஷ் வந்து சேர்ந்த தென்றும், வெகு நேர்த்தியான துறபின் ஒன்று (Telescope)ம், நீங்கள் வாடிக்கையாயிருக்கிற துறபின் இரண்டும் Two-Telescopes) உடற்கூறு எழுதியிருக்கிற சிறு புஸ்தகங்களும் (Two books about body) இரண்டும் அனுப்புவித்தோமென்றும் அதற்கு உபசாரமும் வெகு விஸ்தாரமாய் எழுதியிருக்கிற சம்மதிகளெல்லாம் சொல்லி பாரிசிலே சொல்லுகிறதற்கு ஒரு அக்கீம் இருக்கிறன். அவனை அனுப்புவிக்கச்சொல்லி எழுதி னல் அனுப்பிவிடுகிறோமென்றும், அவன் வந்தால் இந்த துற பின்னசுக்கு (Telescope) வேலை அதுகூட உங்களுக்கு வயண மாய்க் காண்பிப்பான். இதுகளுடைய உங்களுக்கு உத்தாரம் எப்படி வருகிறதோ அப்படி நடப்பிக்கிறோமென்று எழுதி இங்கிலீசுக்காரர்கள் பேயிமான்கள் நடப்பித்த காரியமெல்லாம் முன்னலே ஆற்காட்டுச் சுவா அன்வர்திகானுக்கு எழுதின காகிதத்துக்கு நகல் எழுதியனுப்புவித்தோம். அது தங்களுக் குச் சாவகாசமாயிருக்கிற வேளை பார்த்துப் படித்தால் அப்போது ஞியாயம் எங்கே இருக்கிறதென்றும்

நியாயத்தப்பிதம் எங்கே இருக்கிறதென்றும் தாங்கள் நன்ருய் தெண்டிக்கத்தக்கதாய் சுவாமி பிறப்பித்துச் சகல அதிகாரமும் ராசவுக்குப் பிற்பாடு தங்களே கட்டளைபண்ணியிருக்கிருரென்றும் என்ன சம்மதி எப்படி எழுத வேணுமோ அப்படியெல்லாம் எழுதி எங்களுக்குச் சீர்மையிலேயிருந்து வெகு கப்பல் கொஞ்சநாளையிலே வரும் வந்தவுடனே தங்களுக்கு லாயக்கான தோப்பாத் தினுசு அனுப்புகிற எத்தனத்தின்பேரிலே இருக்கிற சம்மதிகளுக்கெல்லாம் பிறகாலே எழுதி அனுப்புகிருேமென்று மிப்படியாக எழுதின காகித சவா தைப் படித்துக்காண்பித்தோம், அதெல்லாம் கேட்டு நல்லது இந்தக் காகிதமும் துற்பீன் புஸ்தகங்களுமுதலானது அவாயிசாயபு வசத்திலே ஒப்புவித்து நாசசங்கு அன்டைக்கு சீக்கிரமத்துக்கு அனுப்பச்சொல்லென்று சொன்ஞர். அந்தப்படிக்குத்தானே இமாம்சாயபு துஸத்தா அவாயிசாயபு ஒப்புவித்துச் சீக்கிரமத்துக்கு அனுப்பச்சொல்லிச் சொன்னேன்.

காலத்தாலே சூரத்திலேயிருந்து வந்த காசிதுகள் சொன்ன வாய்விசேஷம்: தாங்கள் சூரத்திலேயிருந்து பயணம் புறப்பட்ட இரண்டு நாள் முன்பாக கடலின் பேரிலே பெரிய சீர்மைக்கப்பல் ஏழு கண்டது. அது இன்னுருதென்று அறியோம். இந்தச் சேதி நாங்கள் அறிந்தது என்று சொன்ஞர்களது பிராஞ்சுக்காரருடையதா? இங்கிலிசுக்காரருடையதா? என்று கேட்டால், அது எங்களுக்குச் சருவாத்துமனுகத் தெரியாதென்று சொன்ஞர்கள். நொடி என்ன கொடி போட்டிருக்கிறதென்று கேட்டோம், கொடி போட்டிருக்கவில்லை என்று சொன்ஞர்கள். இதல்லாமல் இற்றைநாள் சாயங்காலம் நூற்றியைம்பது காப்பிரிகளை துறையிலிருக்கிற தொண்டிக் கப்பலிலே ஏற்றினர்கள்.

*1747* ஆ ஜுலை மீ 19 உக்கு பிரபவ ஸு ஆடி மீ 7உ (சவுமியவாரம்) புதவாரம்.

இற்றைநாள் சாயங்காலம் ஆறு மணிக்கு ஆற்காட்டிலேயிருந்து வக்கீல் சுப்பய்யன் காகிதமும் மகம்மதாக்கல் காகிதமும் வந்து சேர்ந்தன. அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: தேவனும்பட்டணத்து வக்கீல் முத்தியாலுநாயக்கன்

நாசற்சங்குக்குக் கொண்டுபோகிற ஒரு வெகுமானமும் பிடிப்பித்துக்கொண்டு நாசற்சங்கு மனுஷர்கூட ஆற்காடு வந்து சேர்ந்து நபாபு அன்வர்த்திகானுக்கு இருபத்தொரு அசர்பியும், உசேன் சாயபுக்கு பதினொரு அசர்பியும், சம்பதிராயனுக்கு ஐந்து அசர்பியும், பிச்சுலாலாவுக்கு ஐந்து ரூபாயும் இந்தப் படிக்கு நசர் வைத்துக் கண்டார்களென்றும், முத்தியாலு நாயக்கர் நபாபு அன்வர்த்திகான், உசேன் சாயபு முதலானவர்களுடனே சோராவாரியாய், பிராஞ்சுக்காரர் சென்னப்பட்டணம் பிடித்துக்கொண்டு கோரபடிதாபடியாய் திரவியம் எடுத்துக்கொண்டு போனார்களென்றும், அது மறுபடி வாங்குகிறதற்கு நாங்கள் நாசற்சங்கு அண்டைக்குப் போகிறோமென்றும், அதற்கு நீங்கள் சகாயம் சம்பத்தும்பண்ணி எங்கள் சென்னப்பட்டணம் மறுபடிக்கு எங்களுக்கு வாங்கிக் கொடுக்கவேணுமென்றும். பின்னையும் அதற்கடுத்த சங்கதியெல்லாம் உபசாரமாய்ச் சொல்லிக்கொண்டதற்கு நபாபு அவர்கள் ஆவாகன விசர்சனமில்லாமலிருந்ததாகவும், உசேன் சாயபு நீங்களிரண்டு பேரும் இரண்டு கண்கள் எங்களுக்கு என்று சொன்னதற்கு முத்தியாலு நாயக்கன் சொன்னது. ஆனால், பிராஞ்சுக்காரர் எங்களைச் சோராவாரிபண்ணி எங்கள் பட்டணம் பிடுங்கிக்கொண்டதற்கு நீங்கள் நியாயம் விசாரித்து வாங்கிக் கொடுக்கவேணுமென்று சொன்னதற்கு நியாயம் விசாரித்தாலுங்கள் பேரிலே நேரமிருக்குமென்று சொன்னாராம். சம்மதிராயனிடத்திலேயும் அப்படிதான். அதன் பேரிலே தேவனும் பட்டணம் சாமாசியர்கள் முத்தியாலு நாயக்கன் முதலானவர்கள் வெகு விசாரமாயிருக்கிறார்களென்று மினிமேல் நான்கு மூன்று நாளையிலே அப்பாலே சாகிப்போகிறதாயிருக்கிறதென்று மிதற்கு மகம்மதாக்கல் ரத்தினுசிபண்டிதர் பேசுகிறார்களென்றும் மாபூசுகான் நாசற்சங்கு அண்டைக்குப் போனவிடத்திலே ராச்சியத்திலே குடிகளையெல்லாம் நோவப்பண்ணி சீர்மையெல்லாம் குட்டிச்சுவராக்கினீர்களென்றும், சீர்மையை நிர்ப்பந்தம்பண்ணி நீங்களும் அபகீர்த்திக்கு ஆளானவர்கள் என் முகத்து முன்னே வரவேண்டாமென்று கோபம் பண்ணியிருக்கிறாரென்றும், தானியத்தைக் கட்டுவித்து, ராச்சியத்தைக் கரிப்பாக்கி, தானியத்தைக் குறைத்துவித்து, சனங்களைக் கொன்றவர்களென்றும் கோபம் பண்ணினார். அதன்பேரிலே இவர் இப்புறமிருந்துகொண்டு சமா

தானப்பேச்சு நடத்துகிறுரென்றும், இனிமேல் நடக்கிற வயணம் வந்தவுடனே எழுதியனுப்புகிறேமென்றும் வக்கீல் சுப்பய்யன் காகிதத்திலேயும் சிங்காரம் காகிதத்திலேயும் எழுதியிருந்தது. சிங்காரம் காகிதத்திலே சூரத்துக்குப் போன காசீதுகளை காவல் வைத்திருந்ததே அது அங்கே சூரத்திலே பிராஞ்சுக் கொட்டடியிலேயிருக்கிற வெள்ளைக்காரனுக்கு நீங்களனுப்பின காகிதத்தை இங்கிலீசுக்காரர் வாங்கிக்கொண்டது. அவ்விடத்திலேயிருந்த காசீதுகளுக்குப் பெரியவனுயிருக்கிற மிர்தா பண்ணுவித்தது அங்கங்கேயிருந்து போன காசீதுகளைக் காவல் வைத்திருந்ததே இப்போது அங்கே விட்டுவிட்டார்கள். அவர்களுமிவ்விடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். இனிமேல் எந்தக் காரியமும் அதன் மாரிபத்திலே நடப்பிக்க வேணுமென்று சுப்பய்யன் வேறே முகாந்திரமாய் நடத்துகிறதாயிருக்குதென்றும் எழுதினுன். இந்தச் சேதிகள் தவிர மற்ற தேவனும்பட்டணத்துச் சேதியும், மாபூசுகான் சேதியும், சூரத்து காசீதுகள் விடுதலையாய் வந்த சேதியும் சொன்னதின்பேரிலே நபாபுக்கும் மகம்மதாக்கலுக்கும் பகல் துரை எழுதி அனுப்பச்சொன்ன காகிதத்தை அனுப்ப வேண்டாமின்னும் பார்த்துக்கொள்ளுவோமென்று சொன்னுர். அந்தப்படிக்கு நிறுத்திப்போட்டோம்.

1747 ஆ ஜுலை மீ 23 உ நித்து பிரபவ ஞு ஆடி மீ 11 உ ஆதிவாரம்.

இற்றைநாள் ஆற்காட்டிலேயிருந்து வக்கீல் சுப்பய்யன், காகிதம் எழுதியனுப்பின சேதி: தேவனும்பட்டணத்தாருடைய தாலூக்கு முத்தியாலு நாயக்கன் முதலானவர்கள் நாசறுசங்குக்கு வெகுமானம் கொண்டுபோகத் தக்கதாக இவ்விடத்திலேயிருந்தவர்கள் நபாபு வெகுமானம் வேணும் என்று முத்தியாலுநாயக்கன் ரொம்ப பிரயாசைப் பட்டதற்கு ரூபு ரூபாய்க் கொடாதபடிக்கு இருபது இருபத்தைந்து ரூபாயிலே ஒரு சிறுப்பா கொடுத்தனுப்பினுரென்றும் மகம்மதாக்கலே முத்தியாலுநாயக்கரை இரண்டு மூன்றுதரம் உசேன்சாயபு அண்டைக்கு மகம்மதாக்கல் அழைத்துக்கொண்டுபோய் அந்த ரங்கம் பேசினதாகவும் அதன்பேரிலே திவான்சி அண்டைக்கும் மகம்மதாக்கலழைத்துக்கொண்டுபோய்ப் பேசிவித்ததாகவும் அப்பால் போகச்சே மகம்மதாக்கல் தன் வீட்டுக் கழைத்

துக்கொண்டுபோய் முத்தியாலு நாயக்கருக்கு ஒரு சிப்பம் சிகப்பு சகலாத்துக்கொடுத்தார்கள் என்றும், பின்னையும் அந்த ரங்கமாயவருக்கு என்னமாகிலும் கடபுசெய்யவும் இருப்பார்க ளென்றும் நாசற்சங்கு கொண்டுபோகிற வெகுமானம் முன் கூலி ஆள் தலையிலே எடுத்துப்போனதை ஐந்து ஒட்டை வாங்கி அந்த ஒட்டைமேலே போட்டுக்கொண்டு போனார்க ளென்றும் அந்தக் கூலிக்காரரையும், மல்ராசசு சேவகரையும், மல்ராசாவையும் அனுப்பிவிட்டு இற்றைநாள் பயணம் சாகிப் போனார்கள் என்று ஆருந்தேதி எழுதின காகிதத்திலே இந்தப் படி எழுதினார்களிந்தச் சேதியை, இற்றைநாள் காலத்தாலே துரையுடனே சொன்னதற்குத் துரை நபாபு அன்வர்திகானவர்களுக்குக் காகிதம் எழுதச்சொன்னார். எழுதச்சொன்ன வயணம் என்னவென்றால்: முன்னாலே திருவதி அண்டையிலே பிடித்த காரைக்கால் எசமான் ஒரு சினயோம் மாயே (Mahé) எசமான் ஒரு சினயோம், சிஞ்ஞோர் இவர்கள் இரண்டு பேர் நிமித்தம் முன்னாலே முசியே திலார்சை அனுப்பி உங்களுக்குச் சொல்லிக்கொண்டதற்கு நீங்கள் அப்துல் ஆசி (Abdul Haji) என்ற ஒருவனை அனுப்பி, தேவனாம் பட்டணத்துக் குவர்னதோரைக் கண்டுபேசிவிக்கச் சொல்லி அனுப்பி ஒரு மாதம்போலே ஆச்சுது. இந்தமட்டுக்கும் ஆசி (Abdul-Haji) தேவனாம்பட்டணம் வந்து அங்கே பதினைந்து நாளாச்சுது, இந்த மட்டுக்கும் ஒருத்தர்வாகிலும் தெரியவில்லை. ஆனபடியினாலே அவ்விடத்துச் சமாசாரம் எங்களுக்கு வந்தது அவர்களும் பரிச்சேதம் நபாபு உத்தரவுக்கு உபதேசரிட்டு நாங்கள் விடுகிறதில்லையென்று எங்களுக்குப் பத்து தரம் எழுதி வந்திருக்கிறது. எங்கள் தொப்பிக்காரருக்குள்ளே வாடிக்கை. ஒருத்தருக்கொருத்தர் மாற்றுகிறதும் வாடிக்கை. அந்தப்படிக்கு எங்களுக்குப் பிரிசோனிலிருக்கிற இங்கிலீசுக் காரர் சனம் புரண்டு அப்படி நாங்கள் மாற்றிக்கொள்ளாத படிக்கு உங்களுக்கு எழுதின தென்னவென்றால் : உங்களுக்கு இங்கிலீசுக்காரர் சொல்லுகிறது என்னவென்றால் : நாங்கள் சுலுமிசஸ்திபண்ணுகிறதில்லையென்றும், உங்கள் உத்தரவுபடிக்கு நடந்துக்கொள்ளுகிறோமென்றும், நாளதுவரைக்கும் உங்களுக்கு எழுதி அனுப்புகிறாம், உங்களுக்கு ரூபு ரூபாய்ச் சிறிது பேரைக்கொண்டு சொல்லிவித்ததும் உங்களுக்கு திர்வ்டாந்திரமாய் வேணுமென்றும், நாங்களுங்களுக்குச் சொல்லிக்

கொண்டு உங்கள் மனுஷரும் காகிதமும் தேவனும்பட்டணத் துக்கு அனுப்புவிக்கச் செய்ததும் மற்றப்படி அவர்களுக்கு அப்படி நடத்திறது. நாங்கள் நடந்துக்கொள்ளுகிறதும் தெரிந்த தேயென்றும், இதல்லாமல் சுலுமி சாஸ்தி பண்ணுகிறதில்லே யென்று அவர்களுக்குச் சொன்னதற்கும், எழுதினதற்கும் உங் கள் சீர்மை திருவதியிலே பிடித்ததைப் பார்த்துக்கொள்ளுங் கோளென்றும், இதல்லாமல் உங்கள் சீர்மையிலே இருந்து தானி யம்பிடித்து அவரதை அவர்கள் வழியிலே சேவகரை அனுப்பிக் கொண்டுபோய் தேவனும்பட்டணத்திலே போட்டுக்கொண்டு தானியத்தையும், மாட்டையும் எடுத்துக்கொண்டு இப்படிச் சிறிதுசம்மதி நடத்தியிருக்கிறார்கள். அப்படி நாங்கள் ஒன்றும் நடத்தினதில்லே. இதுவும் எங்கள் வழக்கப்படிக்கு நாங்கள் அந்த இரண்டு பேர்களேயும் மாற்றிக்கொள்ளுகிறோம். இதை நீங்கள றிந்திருக்கவேணுமென்றும், எழுதிறேமென்று நபாபு அவர்களுக்குக் காகிதம் எழுதி மகம்மதாக்கலுக்கும் வக்கீல் சுப்பய்யனுக்கும் காகிதமெழுதி அனுப்பச் சொன்னபடிக்குக் காகிதம் எழுதி இரண்டு மணிக்கு ஆற்காட்டுக்கு அனுப்பு வித்தோம்.

*1747* ஆ. ஜுலை மீ 28உக்கு பிரபவ ஸு ஆடி மீ 16உ. சுக்கிரவாரம்.

இற்றைநாள் சேக்கு அப்துல் ரயிமான் சமேதார் துரை யண்டைக்கு வந்து பிக்கன்கான் ஐந்தாம் தலைச்சேரியிலே யிருந்து தேவனும்பட்டணத்துக்கு வரவேணுமென்று வரச்சே திருநெல்வேலி சீர்மையிலே யிருந்து பாளையக்காரர் முன்னூறு பேருடனே வந்து பிக்கன்கானைத் தடைபண்ணினதாகச் சேதி கேள்விப்பட்டோம் என்று சொன்னதற்குத் துரை அவர்கள் இருந்துகொண்டு என்னை அழைத்து அவர்கள் தகப்பனர் சாபிருசாயபுக்கு அவன் நல்ல மருமகனை கலியாணம்பண்ணின தும் பிருஷுக்குச் சொல்லி அந்தப் பிக்கன்கானையும் முன்னூறு பேர் சேவகரையும் அவ்விடத்து பாளையக்காரருக்குச் சொல்லி, தடை காவல்பண்ணி. அப்படிதானே திருப்பிக்கொண்டு போகத்தக்கதாகப் பண்ணச்சொல்லி, அவர் குமாரன் மீர்குலா முசேனுக்குக் காகிதமெழுதச்சொல்லியும், தம்முடைய காகித மாய் ஒரு காகிதம் மேலே அவர்களை எழுதச்சொன்ன வயணப் படிக்குத்தானே எழுதச்சொல்லி உத்தாரம் கொடுத்து, என்

காகிதமாயும் ஒரு காகிதமும் எழுதி அனுப்பச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக்குத்தானே சமேதார் சேக்கு அப்துல் ரயிமானையும், மதனுக்கபண்டிதரையும் கூட்டிச் சாபிருசாயபு அண்டைக்கு அனுப்பி, அவர் காகிதம் எழுதுவித்து, துரை காகிதமொன்றும் எழுதுவித்து, சாபிருசாயபு அண்டைக்கு அனுப்பி, அவர் காகிதம் எழுதுவித்து, துரை காகிதமொன்றும் என் காகிதமொன்றுமெழுதுவித்து, சாபிருசாயபு மனுஷர் ஒருத்தன், சமேதாரன் மனுஷன் ஒருத்தன், நம்முடைய மனுஷர் இரண்டு பேர்களையுங் கூடக்கூட்டி, இற்றைநாள் ராத்திரி பத்து மணிக்குப் போகச்சொல்லி உத்தாரம் கொடுத்து அனுப்புவித்தேன்.

1747 ஆ ஜுலை மீ 29உ க்கு பிரபவ ஸ்ரீ ஆடி மீ 17உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஆற்காட்டிலே இருந்து வந்த சேதி; வக்கீல் சுப்பய்யன் எழுதின காகிதத்திலே எழுதியிருந்தது. துரைக்குச் சொன்னசேதி நாசற்சங்கு மைசூர் சீர்மை சேர்ந்து அவர்கள் பணம் உண்டானது கொடாததபடியினாலே அவர்கள் சீர்மையெல்லாம் கொள்ளையிடச்சொல்லி உத்தாரம் கொடுத்தாரென்றும், அதன்பேரிலே அவர்கள் முப்பது லக்ஷம் ரூபாய் கொடுக்கிறோமென்று சொன்னாப்போலேயும், அதற்கு அவர் ஐம்பது லக்ஷம் வராகன் கேட்கிறதாகவும் மாபூசுகான் சிற்பி நபாபுடனேகூட இருக்கிறதாகவும், பதினைந்து லக்ஷம் ரூபாய் வந்தால் காரியம் ஆகுமென்றும் இல்லாவிட்டால் காரியம் ஆகிறதாயிருக்கிறதில்லை யென்றும் எழுதி வந்ததாகவும், அதன்பேரிலே ஐந்து லக்ஷ ரூபாய்க்குக் காசிதாசி புக்கன்சிட்டு அனுப்பி மற்றதுக்குச் சீர்மை ராச்சியம் மழையில்லாமல் குடிகள் ஓடிப்போனதினாலே சீர்மை லுக்குசான் வந்தபடியினாலே பணம் வெகுசாய் நின்று போச்சுதென்றும், இத்துடனே பிரஞ்சுக்காரர் நூற்றைம்பது கிராமம் உம்முடைய சாகுரிலே நீபாத்தம்பண்ணிப் போட்டார்கள். அதனாலே வெகு லுக்குசான் வந்ததென்று முன்னுக்கு அதனமிருக்கும்படி கொடுக்கிறதற்கு என்னமாய் இப்போதானே இப்படியிருக்கக்கே முன்னுக்கு என்னமாய் அதனம் கொடுக்கிறோமென்று சம்மதித்து எழுதுவோம். இந்த வருஷம் மழை பேய்ந்து ராச்சியம் சுபிக்ஷமானாலும் இன்னும் மூன்று வருஷம் செல்லு

மென்றுமிந்தப்படி பின்னையும், அவர்கள் காரியமும் எழுதி நாசற்சங்கு நவாபு ஆசபுசாவுக்கு அவர்கள் பணத்து நிமித்த மும் முன்னுக்கு அதனம் கூட்டிக்கொடுக்கச் சொல்லி எழுதின தற்குப் பதிலுத்தாரம் இந்தப்படி எழுதினார்களென்றும், மகம்மதாக்கல் அண்ணன் குமாரத்தி ஒருத்தி காலம்பண்ணிப் போன எட்டாம் நாள் மகம்மதாக்கல் இளைய குமாரன் ஒருத் தன் விழுந்துபோனானென்றும், அவனுக்குப் பதினான்கு வயது உண்டென்றும், அதற்கு மூத்த பிள்ளை இப்போது கலியாணம் பண்ணினவனுக்குச் சரீர சுவஸ்தமில்லையென்றும், ஆசி ஆதி (Haji Hadi) ஆற்காட்டுக்குத் தேவனாம்பட்டணத்திலேயிருந்து காகிதத்திலே இங்கிலீசு குவர்னதோர் சொல்லுகிறது. மலை யிலே யிருந்தவர்கள் தங்களவர்கள் இங்கிலீசுக்காரரை வெகு பேரைப் பிடித்துப்போனார்கள். அதனாலே நாங்களும் இரண்டு பேரை திருவதியண்டை வரச்சே பிடித்தோமென்றும், அவர் களை விட்டாலிவர்களையும் விடுவார்களென்றும், ஆசி ஆதி (Haji Hadi) நபாபு அன்வர்திகானுக்குக் காகிதம் எழுதின தாகவும், அதற்கு சம்பத்திராயனும் உசேன்சாயபும் யோசனை பண்ணி, புதுச்சேரிக்கு எழுதியனுப்பி, மலையிலே பிடித்த இங்கிலீசுக்காரரையும் அழைப்பித்து, தேவனாம்பட்டணத் திலே பிடிபட்டிருக்கிற முசியே லெரி ரிஷிது ( M. de Leyritant M. Le Richie ) இரண்டுபேரையும் ஆற்காட்டுக்கு அழைப் பித்துச் சமாதானம்பண்ணி அனுப்புகிறதாய் யோசனைபண்ணி இருக்கிறார்களென்றும், இதுமுதலாகிய வயணமெல்லாம் முசியே தெலார்சு ஆற்காட்டுக்குப் போன செலவு கணக்கு நாசற்சங்கு இமாம்சாயபு முதலானபேர்களுக்குச் சோடாபண்ணி அனுப் பின செலவு சம்மதிக்குச் சிங்காரத்துக்குக் கொடுத்த ரூபாய் கணக்கு எழுதியனுப்பி, முற்கணக்குடனே சேர்ந்து, பிறகாலே அனுப்பிவிடுகிறோமென்றெழுதின காகிதச் சேதி துரையவர் களுக்குக் கணக்குச் சம்மதி தவிர மற்ற சம்மதியெல்லாம் துரைக்குச் சொன்னதற்குத் துரை தேவனாம்பட்டணத்திலே பிடிபட்ட இரண்டு பிராஞ்சுக்காரர் சம்மதிக்கு மலையிலே பிடித்த இங்கிலீசுக்காரரை அனுப்புகிறதற்கு நகைத்து உதட் டைப் பிதுக்கிப் போகச்சொல்லென்றார். அது எதனாலென்றால்: ஏழெட்டு நாளைக்கு முன்னே தானே தேவனாம்பட்டணத்திலே அகப்பட்ட முசியே தெப்பிமேவி தம்பி முசியே லெறிக்குச் சென் னப்பட்டணத்தில் துரைத்தனம்பண்ணின மேஸ்தர் மாசும்

காரைக்கால் கொம்மாந்தான் முசியே ரிஷித்துக்குப் பதில் முன் சென்னப்பட்டணத்தில் துரைத்தனம்பண்ணின மேஸ்தர் பேன்யோன் (M. Benyon) சகலபாடி மேஸ்தர் பாசுவேலும் (M. Perceval) இந்தப்படிக்கு மாற்றிக்கொண்டு அவர்கள் இரண்டுபேர் எழுதிக்கொடுத்த காகிதமும் அனுப்பிவிட்டு, முசியே லேறியும் முசியே ரிஷிதுமிவ்விடத்துக்கு வந்துசேர்ந்துபோனார்களென்றும், அதனாலே உதட்டைப் பிதுக்கிப் போகச்சொன்ன சாடையாய் எண்ணிக்கொண்டேன்.

1747 ஆ ஆகஸ்ட்டு மூ 1வ௳க்கு பிரபவ ஞு ஆடி மீ 23வ௳ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் என்னை அழைப்பித்து இன்றைக்கு மதாம் தெப்பிரமேனி சதுரங்கப்பட்டணத்துக்குப் போயங்கேயிருந்து புடுகிசுக்காரன் (Portuguese) கப்பலின்பேரிலே ஏறி பங்காளத்துக்குப் போகவேணுமென்று போனாள். ஆனபடியினாலே அவள் பிறகே இருபது முப்பது குதிரைக்காரரும் ஐம்பது சிப்பாய்களும் போகிறார்கள். இங்கிலீசுக்காரர் மனுஷர் வழியிலே இல்லாமல் பத்திரமாய் விசாரித்திருந்தால் முசியே கோசினு (M. Cochinot) போகிறான், அவனுடனே சொல்லச்சொன்னார். அந்தப்படிக்குத் தபால்காரருக்குச் சொல்லச்சொல்லி ஒரு சேவகனையும் கூடப்போகச் சொல்லித் திட்டம்பண்ணினேன். மற்றப்படி துரை இரண்டு மணிநேரம் உற்சாகமாய் லோகாபிராமமாய்ப் பேசினார். அப்போது சேக்கு அப்துல் ரயிமான் வந்தான். அவன் மகன் பத்து வயது பிள்ளையாண்டான் ஒருத்தன் வந்தான். அவனுக்குச் சாப்பாட்டுச் செலவுக்குப் போதாதென்று கேட்டதற்கு உற்சாகத்தின்பேரிலே இரண்டு ரூபாய் தானும் கூட்டிக்கொடுத்ததின்பேரிலே உற்சாகமாய்ச் சந்தோஷமாய் பேசியிருந்தார்.

பகலைக்கு மேலாக நாலரை மணி ஐந்து மணிக்கு மதாம் தெப்பிரமேனியும், மேலே எழுதப்பட்ட தாசுமானும், குதிரைக்காரரும் போனார்கள்.

இற்றைநாள் ஆறு மணிக்குச் சென்னப்பட்டணத்திலிருந்து முசியே பிரியேல் (M. Friel) கலகப்பிரியன் வந்து சேர்ந்தானினிமேல் சென்னப்பட்டணத்துக் காரியத்தில் என்ன கலகம் நடக்கிறதோ அறியவேண்டியது.

இற்றைநாள் கூடலூரிலே வந்திருக்கிற மல்ராசாவண்டையிலிருந்து ஒரு பிராமணன் வந்து, தான் இவ்விடத்துக்கு வருகிறதாய் ராசவட்டம் வந்து மல்ராசா வருகிறதாய் யோசனைபண்ணி இருக்கிறார். நீங்கள் வரச்சொல்லச் சொன்னால் உங்கள் சமுகத்துக்குச் சேருகிறோமென்று சொன்ன சேதியைத் துரையவர்களுக்குச் சொன்னதற்குத் துரை உன் மனதின்படியே செய்யென்று சொன்னார்.

*1747* ஆ ஆகஸ்டு மீ 11உ க்ஷய பிரபவ ஸ்ரீ ஆடி மீ 30உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் சாயங்காலம் நாலரை மணிக்குச் சயந்திராமய்யன் வந்து, ஊருக்குப் போகவேணுமென்று சொல்லி, துரையவர்களைப் பேட்டிகண்டு அனுப்புவித்துக்கொண்டு போகவேணுமென்கிறதாய் வந்து சொல்லிக்கொண்டார்கள். எனக்குச் சரீரம் சொஸ்தமில்லாமல் கால் நோவாயிருந்தபடியினாலே மதனாந்தபண்டிதரைக் கூட்டி துரையவர்களண்டைக்கு அனுப்புவித்து இவர்களுக்குச் செலவு வாங்கிக்கொடுக்கச் சொல்லி அனுப்புவித்தபடிக்கு அவர் அழைத்துக்கொண்டு போய் ஐந்துமணிக்கு ஸ்ரீ துரையவர்கள் பேட்டிபண்ணுவித்த விடத்திலே ஐந்து பீரங்கியும் போட்டு, வெகுமானம் கொடுத்த வயணம்: சயந்திராமய்யருக்குச் சிகப்பு சகலாத்துச் சிப்பம் 2

| | | |
|---|---|---|
| அனுமந்தய்யனுக்கு சிகப்பு சகலாத்து கெசம் | | 2 |
| கோரால்வார் குமாஸ்தாவுக்கு | ஷை | 2 |
| முப்பிரிசெட்டியார் குமஸ்தாவுக்கு | ஷை | 2 |

இந்தப்படிக்கு வெகுமானம் கொடுத்துத் துரையவர்கள் சொன்னதென்னவென்றால்: 'எங்களுக்கு நெல் தானியம் நீ அனுப்பவேண்டும். நீங்களொன்றுக்கும் சிந்தைபண்ணத் தேவையில்லை. தானியம் பழவேற்காடு வந்து சேர்ந்தவுடனே நமக்கு எழுதியனுப்பிவையுங்கள். அதன்பேரிலே நாமழைப்பித்துக்கொள்ளுகிறோம் என்றும் சொன்னார்கள். அதற்கு உத்தரவு அவர்களும் அப்படிதானே விஸ்தாரமாய் [illegible]புவிக்கிறோமென்றும், பின்னையும் சொல்லத்தக்கதாக உபசாரமாய்ச் சொல்லி அனுப்புவித்துக்கொண்டு ஐந்தரை மணிக்கு நம்முடைய வளவுக்கு வந்து சொல்லிக்கொண்டு நாளைக்கு

ஊருக்குப்போகவேணும் என்றுசொல்லிக்கொண்டு, அவர்கள் வளவுக்குப் போய்விட்டார்கள்.

இதல்லாமல் மாயேயிலிருந்து சொடா வந்தது. அதிலே வந்த சமாசாரம்: மாயே கப்பல்கள் விஸ்தாரமாக வருகிற தென்றும், கோவையிலிருந்து (Goa) ஒரு சுலுப்பு, அவ்விடத் திலேயிருந்து கடுதாசிகொண்டுவந்ததென்றும், அந்தச் சேதிக்கு மாயேயிலிருந்து காகிதம் வந்ததென்றும் ஸ்ரீ துரையவர்கள் சந்தோஷமாய்த்தானே சயந்திராமய்யருடனே சொன்னார் களாம். அந்தப்படிக்குக் கப்பல் ஏழெட்டு நாளையிலே இவ் விடத்துக்கு வந்து சேருமென்றும் சொன்னார்களென்றும் சயந் திராமய்யரும் மதனாந்தபண்டிதரும் வந்து சொன்னார்கள்.

இற்றைநாள் நபாபு அன்வர்த்திகானுக்குச் சரீரம்சுவஸ்த மில்லாமலிருக்கிறதென்று ஔஷதமனுப்பச்சொல்லி காகித மும் சாபிதா பூரங்கு எழுத்திலேயும் இப்படியாகலட்டச்சுவார் காகிதம் கொண்டுவந்தான். அதைத் துரை பார்த்தவுடனே வியாதி வந்து நபாபு அவர்கள் ஏதாகிலும் நமக்கு வியாதி வந்த போதாகிலும் நம்மை நினைத்தார்களேயென்று, முசியே கைபூரை (M. Cayer fourg) அழைத்துச் சாபிதாபடிக்கு மருந்து முஸ் தீதுபண்ணச் சொன்னார்கள்.

1747 ஆ ஆகஸ்டு மீ 12வ்க்கு பிரபவ ஸ்ரீ ஆடி மீ 31வ சனிவாரம்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: மத்தியா னம் பதினொருமணி வேளைக்குக் கும்பினீர் வர்த்தகர் எல்லாரும் வந்து எனக்குக் கால் நோய் சௌகரியமாயிருக்கிறதாவென்று விசாரித்து எல்லாரும் உட்கார்ந்து வார்த்தைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அப்போது அப்புமுதலியார் வந்து ஸ்ரீ துரையவர்கள் சொல்லச்சொன்னார்களென்று வந்து சொன்ன சேதி என்னவென்றால்: ரங்கப்பிள்ளை வரவில்லையாவென்று என்னைக் கேட்டார். அதற்கு நான் சொன்னது: அவருக்குக் கால் நோய் ஆனபடியினாலே நடக்கமாட்டாரென்று சொன் னேன். அதற்குத் துரையவர்களிருந்துகொண்டு இரண்டு பேர் கைலாகுலேயாகிலும் வரமாட்டாரா? அல்லவென்றால் நான்கு பேராய் தூக்கிக்கொண்டுவந்தாலும் இவ்விடம் விடமாட்டார்

களாவென்று கேட்டு, அதன்பேரிலே அப்புமுதலியாரை அழைத்து ஸ்ரீ துரை அவர்கள் சொல்லி அனுப்புவித்த வயணம்: அவர் வந்து கும்பினீர் வர்த்தகர் எல்லாரையுமிருக்கச்சொன்னது என்ன வென்றால்: சீர்மையிலேயிருந்து மெத்த மெத்த சந்தோஷங்கள் எல்லாம் வந்திருக்கிறது. இதல்லாமல் என்னுடைய மனது கோரிக்கைப்படிக்கு வந்திருக்கிறது. விஸ்தாரமாகக் கப்பல்கள் வருகின்றன. இதல்லாமல் சீர்மைச் சேதிகள் வெகு சந்தோஷமாய் வந்திருக்கின்றன.

இப்படிப்பட்ட வார்த்தைகள் வந்திருக்கச்சே ரங்கப்பன் வீட்டிலேதானே இருக்கிறதற்கு மனது வந்ததாவென்றும், என்னுடைய மனதிலே யிருக்கப்பட்ட சந்தோஷங்களெல்லாம் ரங்கப்பிள்ளையுடனே சொல்லவேணுமேயல்லாமல் மற்றப் படியேயல்ல. அவருடனே சொல்லுகிறமட்டுக்கும் நம்முடைய மனதிற்குச் சமாதானமாகிறதில்லையென்றும், மெள்ள மெள்ள எப்படியாகிலும் வரச்சொல்லியும், கப்பல் வருகிற சந்தோஷத்தையும் சகல சனங்களுக்கும் தெரியப்படுத்தச்சொல்லியும், இப்படியாகச் சொல்லச்சொன்னார்களென்றும், வந்து சொன்னார். அந்தச் சந்தோஷத்தினாலே அப்பு முதலியாருக்கு ஒரு ஓரகண்டியும், ஒரு பாகையும் கொடுத்தேன். அதன் பேரிலே கும்பினீர் வர்த்தகர் இரண்டு கெசம் சகலாத்துக் கொடுத்தார்கள். அது இது எல்லாம் வாங்கிக்கொண்டு அனுப்புவித்துக்கொண்டு போய்விட்டார். அதன்பிறகு கும்பினீர் வர்த்தகர் பின்னையும் சற்றுநேரமிருந்து பனிரெண்டு மணிக்குப் போய்விட்டார்கள்.

1747 ஆ ஆகஸ்டு மூ 13 உக்கு பிரபவ ஸூ ஆவணி மீ 1உ ஆதிவாரம்

இற்றைநாள் ஆதிவாரம் மத்தியானத்திற்குமேல் மூன்று மணிக்குமேலாகி ஸ்ரீ துரையவர்கள் பேட்டிக்குப் போகவேணுமென்கிறதாய் புறப்பட்டு துரையவர்கள் வீட்டுக்குப் போனேன். நான் போகிறபோது துரையவர்கள் சாலையிலே உலாத்திக்கொண்டிருந்தார்கள். எனக்குக் கால்நோவு நன்றாய் சொஸ்தப்படாமல் இன்னும் சற்று நொந்துகொண்டிருக்கிறபடியினாலே பல்லக்கைவிட்டு இறங்கினவுடனே இரண்டுபேரை கைலாகுலே பிடித்துக்கொண்டு மெள்ள

மெள்ள நடந்து போகச்சே துரையவர்கள் பார்த்து நகைத்துக் ©     டார்கள். நானும் சலாம்பண்ணினேன். அந்தமட்டிலே இப்புறத்திலே முன்னண்டைசாலையிலே உட்கார்ந்து சற்று யோசனைபண்ணினேன். அதற்குள்ளே கும்பினீர் வர்த்தகர்க ளெல்லாரும் வந்தார்கள். அவர்கள் எல்லாரையும் கூட அழைத் துக்கொண்டுபோய் துரையவர்கள் கையிலே எலுமிச்சம்பழம் கொடுத்துப் பேட்டிபண்ணிக்கொண்டேன். வர்த்தகர்கள் அவ ரவர் எலுமிச்சம்பழத்தைக் கொண்டுபோய்க் கொடுத்துப் பேட்டி பண்ணிக்கொண்டார்கள். அதன்பேரிலே துரையவர்களிருந்து கொண்டு சீர்மையிலேயிருந்துகப்பல்கள் விஸ்தாரமாய் வருகின் றன. விஸ்தாரமான வியாபாரம் நடக்கப்போகிறது. சீர்மை யிலே முசியே தும்மா காலம்பண்ணிப்போனார். இதல்லாமல் சீர்மை யிலே முன்னே கும்பினீர் காரியங்களிலே எல்லாம் விசாரிக்கத் தக்கதாக திரெக்தேராயிருந்தவர்கள் இரண்டு பேரையும் வாங்கிவிட்டு, இப்போது புதுச்சேரியில் புதிதாக இரண்டு பேரை அந்தவிடத்திலே வைத்திருக்கிறார்கள். முன்னே இருந் தவர்கள் லஞ்சம் பரிதானம் வாங்கினபடியினாலேயும் தங்கள் சுய காரியமாக ஆசைப்பட்டவர்களானபடியினாலேயும் அது ஒரு போக்காய் நடந்தது. இப்போது புதுச்சேரியிலே புதிதாய் வைத்தவர்கள் அப்படிப்பட்டவர்களல்ல. இவர் கள் பெரிய மனுஷர்கள் மகிமைப் பிரதாபமுள்ளவர்கள். வராகனைக் கொண்டுவந்து கட்டச்சொல்லு. கட்டுகிறமட்டுக் கும் சாவடியிலே காவல் வைத்து மெத்த அவமரியாதைபண்ணி இதுடனே நூலாமாலையாய்ப் போகப்பண்ணி, என்றென்றைக் கும் தலை எடுக்கவொட்டாமல் சொன்ன பேச்சு கேளாத தினாலே இப்படிச் சம்பவித்ததென்றும், பிள்ளைபிள்ளை தலை முறைக்கு என்னை நினைக்கத்தக்கதாகப் பண்ணுகிறேன் என் றும், பின்னையும் சற்று கோபமாய்த்தானே சொன்னார். அதற்கு அப்படி பொறுக்காமலும் நடக்காது. நீர் நல்லது செய்தீர் என்று அவரவர்கள் பிள்ளைகளைப் பேரிட்டுத் தலை முறை சொல்லத்தக்கதாக சுவாமியுங்களுக்குப் பரிபூரண மாகக் கடாக்ஷம்பண்ணியிருக்கிறபோது இப்படி ஏன் வரு மென்று மிந்தவூரிலே மாத்திரமா, டில்லி பரியந்தம் உம்மு டைய விஷயமானது பரந்து ஓங்கியிருக்கிறபோது அந்த ராச் சியத்திலேயும்முடைய பேர் மறந்துபோனாலும் போகப்போகு தென்று இப்போதுதானே, பிள்ளைகளுக்குப் பேரிட்டு வைக்

கிருர்களென்றும் அவருக்குச் சாகம் வர்த்தக்கதாக அப்படி பேச்சை வளர்த்தினேன். அவரும் உற்சாகமாகத்தானே கேட்டுக்கொண்டிருக்கிறபோது சம்பாக்கோவில் பாதிரிகளுடனேயும் உனக்கும் இப்போது என்னமாயிருக்கிறது. அவர்களண்டைக்கு நீ போகிறதில்லையாவென்று கேட்டார். எப்போதும் போக்குவருத்து இல்லை. முன் நான் மெத்த நல்ல வெகு திரவியஸ்தர். எப்போதும் கீர்த்தியைத்தானே சம்பாதிக்கத் தக்கதாகத் துஜங்கட்டியிருக்கிறவர்கள். ஆனபடியினாலே இனிமேல் கும்பினீர் காரியங்கள் மெத்த நன்ருய் நடக்குமென்றெறதாகவும். இப்படிப்பட்ட சந்தோஷ வார்த்தைகளெல்லாம் சொல்லி, கும்பினீர் காரியத்திலே பணத்தைக் காசைப் பாராமல் அறுபது லக்ஷம் வராகன் செலவுபண்ணி, கப்பல்களுக்குச் சாஞ்சாம சாமான்கள் சொல்தாதுகளுக்குச் செலவு சித்தாயம் சகல செலவும் கும்பினீர் பணத்தைச் செலவுபண்ணி, கீர்த்தி சம்பாதிக்கும்படியாய் நடந்திருக்கிருர்கள். ஆனபடியினாலே சுவாமி தயவினாலே உங்களுக்கு வெகு தொழில் நடக்கப் போகிறது என்று மெத்ததானே சந்தோஷமாய்ச் சொல்லி, இனிமேல் கோந்துராந்தை அட்டிபண்ணுமல் சீக்கிரமத்துக்குக் கையெழுத்துப் போடுங்கோளென்கிறதாய்ச் சொன்ஞர்கள். அதன்பேரிலே வர்த்தகரிருந்துகொண்டு, துரையவர்களை ரொம்பவும் ஸ்தவுத்தியமாய்ப்பண்ணி, அவருடைய தைரியத்தையும் அவருடைய பிரதாபத்தையும் ரொம்பவும் தோத்திரமாய்ச் சொன்ஞர்கள். அதன்பேரிலே முசியே தும்மா செத்துப் போனுரே ஆனுலிவ்விடத்திலே துரைத்தனம்பண்ணிச் சீர்மைக்குப் போகிற வர்த்தகர்களெல்லாரும் மெத்த நாள் இருக்கிறதாக இருக்கவில்லை. சீக்கிரம் சீக்கிரமாய் நாலு வருஷத்திலேயும் ஐந்து வருஷத்திலேயும் அதற்குள்ளேதானே செத்துப் போகிருர்கள் என்கிறதாகச் சொன்ஞர்கள். அதற்கு வர்த்தகர்களிருந்துகொண்டு சுவாமி உங்களுக்குத் தீர்க்காயுசு கொடுத்து வைக்கவேணும். வருஷத்துக்கு வருஷம் மேன்மேலும் கீர்த்திப் பிரதாபமும் சகல சாம்பிராச்சியமும் சுவாமி கொடுப்பாராகவும். எப்போதும் உங்கள் கெற்பவாசத்திலே நாங்களிருந்துகொண்டு சுகப்படக்கட [illegible]மென்று ரொம்பவும் உபசாரமாய்ச் சொல்லிக்கொண்டார்கள். அந்தமட்டிலே துரையவர்கள் எழுந்திருந்து உ[illegible] போனுர்கள். அதன்பேரிலே வர்த்தகர்களை [illegible]ப்புவித்[illegible]கொண்டுபோய்விட்டார்கள். அதன்பிறகு

என்னைமாத்திரம் தனியே உள்ளே அழைத்துக்கொண்டுபோய் சொன்னது என்னவென்றால்: நீ சொன்னபடிக்கெல்லாம் வந்திருக்கிறது. நீ சொல்லுகிறதொன்றாகிலும் தப்பிதமில்லை. நாம் நினைத்தபடிக்கெல்லாம் சந்தோஷமான சேதியெல்லாம் வந்திருக்கிறது. நீ சாஸ்திரக்காரன் சொல்லுகிறாப்போலே சொல்லுகிறாய். உன்வாக்கிலே என்ன பிறக்கிறதோ அந்தப்படிக்கெல்லாம் சரியாய் நடக்கிறது. உன்னுடைய காரியங்களும் செகற்பமாகும்படியாய் வந்திருக்கிறதென்றும், இன்னும் சிறிது காரியங்கள் நீயும் நானும் சாவகாசமாய் தனித்துப் பேசிக்கொள்ளவேண்டியிருக்கிறது. நாளை பகலைக்கு மேலாக வரக்கூடுமானால் வா, கண்டு பேசிக்கொள்ளுவோமென்றும், பின்னையும் இரண்டொரு அந்தரங்கமான விஷயங்களும் சொன்னார்கள். அது இன்னதென்று எழுதப்படாதபடியினாலே அதை இன்னமொரு வேளையிலே விஸ்தரித்து எழுதுவேன். அந்தமட்டிலே துரையவர்கள் புறப்பட்டுச் சுவாரி போனார்கள். நானும் புறப்பட்டுச் சுவாரி போய்ச் சாயங்காலம் வந்து சேர்ந்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஏழு மணி வேளைக்குக் கார்வேட்டி மகாராசாவினுடைய மனுஷர் இரண்டு பேர் பிராமணர் சிரோப்பாவும் ஒரு கிராமம்...... உப்பளமாக எழுதிக்கொடுத்த ........பத்திரமும் கொண்டுவந்து கொடுத்து அவர்கள் எழுதியனுப்பின காகிதமும் கொடுத்தார்கள். அதை வாங்கிக்கொண்டு அவர்களுக்கு விடுதி விடுவித்துச் சாமக்கிரியை அரிசி மற்றதும் அனுப்பி ராத்திரிக்கு ஆகாரவாய் இருந்து காலமே வரச்சொல்லி அனுப்புவித்தோம்.

1747 ஆ௵ ஆகஸ்டு ௴ 16 உக்கு பிரபவ ௵ ஆவணி ௴ 4௳ புதன்கிழமை.

இற்றைநாள் மாயேயிலிருந்து சொடா வந்தது. அந்தக் கடுதாசியிலே எழுதியிருந்த வயணம் என்னவென்றால்: மாயேயிக்கு மூன்று கப்பல்கள் வந்ததாகவும், மற்றக் கப்பலும் பிறகாலே காணுதென்றும், அதுவும் உடனே வரும் என்றும் எழுதி வந்தது. பின்னையும் என்னென்ன சேதி எழுதி வந்ததோ அது அறியவேணும். சொடா கொண்டுவந்த பிராமணர் சொன்னவாய் விசேஷமும் அப்படிதானே மூன்று கப்பல் மாயேயிக்கு வந்து சேர்ந்ததாகவும் மற்றக் கப்பலும் பிறகே காணுகிறதாகச் சொன்னார்கள்.

இற்றைநாள் சாயங்காலம் வடக்கேயிருந்து ஒரு சுலுப்பு ஓடிவந்தது. அந்தச் சுலுப்பைப் பார்த்து இந்தத் துறையிலே பாய்மரமில்லாமல் கிடக்கிற கப்பல்காரன் இரண்டு குண்டு போட்டான், சுட்டான். அந்தமட்டிலே அந்தச் சுலுப்புக்காரன் கரை நெருங்கி வருகிறாப்போலே அணியத்தை கிழக்கே திருப்பித் துறையே வருகிறாப்போலே வடக்கே ஒத்தி ஓடி அப்புறம் கிழக்கே திரும்பி வடமூலையாய் ஓடிப்போனான். ஓடச்சே பார்த்துப் பீரங்கியிலே குண்டுபோட்டுத் துறையிலே கிடக்கிற கப்பல்காரனும் பத்து பீரங்கிச் சுட்டான். கடலோரம் மூலையிலே கொத்தளத்திலேயிருந்து ஒரு பீரங்கியும் அதற்குத் தென்னண்டையிலே இருக்கிற கொத்தளத்திலே மறைந்திருந்து ஒரு பீரங்கி சுட்டான். அந்தமட்டிலே சுலுப்புக்காரன் ஓடிப் போய்விட்டான். இந்தச் சுலுப்பு இங்கிலீசுக்காரருடைய தென்றபடியினாலேயும் மறு கொடி போட்டுக்கொண்டு வந்த படியினாலேயும் இவர்கள் குண்டுபோட்டுச் சுட்டார்கள்.

1747 ஆ ஆகஸ்டு மூ 29 உக்கு பிரபவ ஹ ஆவணி மூ 17உ மங்களவாரம்.

இற்றைநாள் துரையவர்கள் அண்டைக்கு ராமய்யனையும் எல்லைச்சியப்பனையும் அனுப்பி அப்பு முதலியாருடனே சொல்லி கேட்கச்சொன்னதென்னவென்றால்: நாளை அரியாங்குப்பத்திலே திருநாளானபடியினாலே வெகு சனங்கள் போக்கு வரத்தாயிருக்கிறதாமே, அவரவர் மூட்டை முடிச்சு, தட்டு முட்டு, பல்லக்கு, குதிரையள், ஓலைதாளி சகலமான பேரும் போக்கு வரத்தாயிருக்குமே. அதுகளெல்லாம் சோதித்து விடுகிறதா அல்லவென்று சும்மா சீட்டில்லாமல் விடுகிறதாவென்று ஸ்ரீ துரையவர்களைக் கேட்டவிடத்திலே அவர்கள் சொன்ன உத்தரவு: நல்லது, இந்தத் திருநாள் பத்து நாளைக்கு சோதிக்க வில்லை. போகிற பேர் ரங்கப்பிள்ளையுடனே எச்சரித்துச் சீட்டு வாங்கிக்கொண்டுபோகிறது. சீட்டைப் பார்த்துக் கொண்டு விமிதத்திலே யிருக்கிறவர்களை விட்டுவிடுகிறது என்று உத்தாரங் கட்டளையிட்டார்கள்.

1747 ஆ செப்தம்பர் மூ 17உ க்கு பிரவப ஹ புரட்டாசி மீ 4உ

இற்றைநாள் மீர்தியானத்துல்லா தனக்கு ஆற்காட்டிலிருந்து உற்ற சேதி அவுரங்காபாத்திலிருந்து சாவுக்காரர்

களுக்கு எழுதி வந்ததென்றும், மதனுந்தபண்டி தருடனே சொல்லி அனுப்பின சேதி என்னவென்றால்: நிசாமன்முலுக்கு அவுரங்காபாத்தண்டையிலிருக்கிற தவுலத் துபாது கோட்டையின்பேரிலே போய் மௌனம் பண்ணி இருந்தாரே அவருக்குப் பைத்தியம் பிடித்ததென்று மிதன் பேரிலே தவுலத்தாபாது கில்லேதாரன் சூனியம் வைத்தா னென்றும் விசேஷம் ஓங்குதல் ஓட்டிலே வெள்ளை, கருப்பு, மஞ்சள், செகப்பு வர்ணங்கள், மயிர்கள், சோறுகள் பின்னை யும் சூனிய சாடைக்கு அடுத்ததென்னென்ன உண்டோ அதெல் லாம் அகப்பட்டதென்றுப்போலேயும், அங்கே நிசாமான் முலுக்குக்குப் பைத்தியம் பிடித்தபடியினாலே அவ்விடத்திலே அலங்கோலப்பட்டிருக்குதென்றும் எழுதி வந்ததாயும், நபாபு அன்வர்திகான் எழுபது குதிரைக்காரருடனே ஆற்காடு விட் டுத் திருச்சிராப்பள்ளிக்குப் பயணமாய் வாலிகொண்டைக்குப் போய்ச் சேர்ந்தானென்றும் நாசறசங்குக்கும் மைசூர்க்கார ருக்கும் ஒரு சண்டையாகி அதிலேயும் நாற்பது ஐம்பது பேர், இதிலேயும் ஐம்பது பேர் விழுந்தார்களென்றும், ஐம்பது நாற் பது லக்ஷம் வராகன் என்று ஒரு மொகலாய பவுஞ்சர் கேட்கி றுப்போலேயும் அவர்கள் இருபத்தைந்துக்கும் சம்மதித்தாப் போலேயும் இப்படிக்குப் பிகாடுவாய்த்தானேயிருக்கிறதென் றுப்போலேயும். இப்படி ஊர்ச்சிதமான சேதி வந்ததென்று சொல்லி அனுப்பினார். அந்தச் சேதி துரைக்குச் சொன்னேன்.

அப்பால் கூடலூர் தேவனாம்பட்டணம் முதலிய இடத்து சேதி என்னவென்று கேட்டார். இங்கிலீசு மணவார் கப்ப லொன்று பாயெடுத்துப் போகச்சே இருபது சலங்கும் இருபது கட்டுமரமும் கூட போச்சுதென்றும், துறையிலே இரண்டு கப்பல் கும்பினீர் கப்பலிருக்கிறதென்றும், புதிதாய் ஒரு கப்பல் வந்ததென்றும், அது பொம்பாயிலிருந்து வந்ததென்றும், அதிலே இரு நூறு பீப்பாய் மருந்தும் விஸ்தாரமான குண்டு துப்பாக்கிகளும் போக்க மாடு துத்துகளும் கொஞ்சம் பீரங்கி களும் வந்திருக்கிறதாய்ச் சேதி வந்ததென்றும், மேஸ்தர் மாசு கும்பினீர் தோட்டத்திலேதானே இருக்கிறாரென்றும், இது முதலான சேதிகளும் எல்லாம் துரைக்குச் சொன்னேன். அதன்பேரிலே அவர் சற்று யோசனையின்பேரிலே பிற்பாடு போய் படுத்துக்கொண்டு பத்தரை மணிக்கு ஒழுகரைக்கு

முசியே பர்தீ தோட்டத்திலே இறங்கியிருக்கிற மதாம் தொத்லே னண்டைக்குப் போனுர். மதாம் துய்ப்ளேய்க்ஸ் எட்டு மணிக்குப் பூசை கேட்டாப்போலேதானே போனுள்.

*1747* ஆ செப்தம்பர் மீ *19*உ க்கு பிரபவ ஸ்ரீ புரட்டாசி மீ *6*உ

இற்றைநாள் செவ்வாய்க்கிழமை குவர்னதோரண்டைக்குப் போயிருக்கச்சே முசியே கோர்னே வந்தான். கொர்னே பேசிவிட்டுப் போகச்சே ரங்கப்பிள்ளை வந்திருக்கிறுனே கோங்திராங்த்திலே மனுஷர் மைசிஞ்ஞார்டு விற்கவில்லையாவென்று கேட்டான். அதற்குத் துரையிருந்துகொண்டு மோன்சியேர் ( Monsieur ) ரங்கப்பன் வர்த்தகன் நாட்டிலே நூல் பஞ்சு பிரியமென்று நூற்றுக்கு ஒன்பது வர்த்தகர் கேட்கிருர்கள் என்றும் சொல்லி, இந்த வர்த்தகர்களுடைய சுபாவம் திரண்ட கப்பல்கள் வராதென்றும் கபுறுகள் கேட்டார்களே, சரக்குப் பிரியமாவென்று நூற்றுக்கு ஒன்பது கேட்கிருர்கள் என்றும், இங்கிலீசுக்காரர்கள் மனுஷர் வெளிகளிலே கலாபம் பண்ணுகிறதைத்தொட்டுப் பணம் காசு அனுப்புகிறதற்குப் புடவை சீலை வருகிறதற்குத் தடைகளுண்டாயிருக்கிறதென்றும் முசியே கோர்னேக்குச் சொல்லி அனுப்பிவிட்டு, அப்பால் என்னைப் பார்த்து, கோன்சேல் லிபேராசியோமிலே எழுதப்பட்டது. தீர்ந்ததற்கு அன்னிய தத்துவம் வரப்போமா, உனக்குத் தெரியாதாவெனப் பேச்சியை நம்பப்போகாதா, கடைசியிலே கோன்சேலிலே சொல்லி நூற்றுக்கு ஒன்பது விழுக்காடு கூட்டிக் கொடுக்கிருேமென்று சொன்னுல் நம்பாவிட்டால் இப்போது எழுதிக் கொடுத்தது ஆக்கியிருக்கிறது. நூற்றுக்கு முப்பது நாற்பது நஷ்டம் வரச்சேயா என் கையிலே ஆகாத சமஸ்தமும் என் அசலின்பேரிலே என்கிறது அவர்களுக்குத் தெரியும், உனக்குத் தெரியும். அவர்களுக்குத் தெரியாமலிருந்தாலும் நீ விசிதப்படச் சொல்லப் போகாதா ; உன் பேச்சை மீறி நடக்கிறவர்களும் இந்தப் பட்டணத்திலுமிருக்கிருர்களாம். நானிதுவரையில் எந்தப் பேச்சு சொல்லித் தப்பிப் போனேனென்று நீயுமவர்களும் பயந்தீர்கள் என்றும், பின்னையும் சற்றுச் சுருக்கான விசேஷமாய்த்தானே சொன்னுர். அதற்கு நான் எனக்குத் தெரியாதா, கோன்சேலிலே நீங்கள்

மிஞ்சி எழுதிப்போட்டபடியினாலே இனிமேல் மார்க்கமாய் வருத்திப்போட்டுவித்துக் கூட்டிக்கொடுக்கவேணுமென்று யோசனை பண்ணுகிறீர்கள். அந்த விவேகம் எனக்குமிருக் கிறது. வர்த்தகருக்குமிருக்கிறது. ஆனாலும் வர்த்தகர் பத்து பேர் கும்பலானபடியினாலே ஒருத்தன் புத்தியைப்போலே யிராதே. ஒருத்தன் தடையாய்ச் சொன்னாலும் நடவாது அதனாலே தடைப்பட்டு வராதென்று சாடையாய்ச் சொன் னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு என் பேச்சு அவர்களுக்கு நம்பிக்கை இல்லையாவென்று கேள். நம்பிக்கை என்கிறார்களா, கோந்திராந்திலே சுகமாய் கையெழுத்துப் போடச்சொல்லு. கோந்திராந்து கடைசியிலே நூற்றுக்கு ஒன்பது கூட்டிக் கொடுத்து அவர்கள் சுகப்படும் சாடை யாய் நடத்துகிறேன். இல்லை யென்றால் என் பேச்சு நம்பிக்கையில்லை என்கிறார்களா? மெத்தவும் நல்லதாச்சுது. என் பேச்சு அவர்களுக்கு நம்பிக்கை இல்லாதமட்டுக்கும் அவர் கள் நம்பிக்கையும் எனக்கு இல்லை. என் கையிலே வாங்கின சரக்குக்கு உண்டானவனென்றும், கிறிஸ்துவர்களுக்கு உபகாரம் பண்ணுகிறேன் என்றும் தெருக்களிலே கண்டவிடமெல்லாம் சொல்லுவார்கள். நீயும் நாங்களும் மோட்சத்திலேகூட இவ் விடத்திலேயிருக்கிற சிநேகத்தைப்போலேயிருக்கவேண்டாமா? அங்கே பிரிந்துபோவோமாவென்றும், உன் பேருக்கு இரண்டு மூன்று பேர்களுக்கும் பூசை சொன்னோம் என்றும், இப்படி பின்னையும் அநேகவிதமாய் உபசரிப்பார்கள். சனேர் பண்டி கைக்குப் போகிறபோது அந்தக் கும்பலிலே வா என்று நாலு நாழிகை நேரம் எனக்குபசாரம் பண்ணுவார்களப்படிப்பட்ட வர்கள் இப்போது கனகராயமுதலியார் செத்தபிற்பாடு நான் குர்த்தியேராயிருக்கிறேன் என்று பொறாமையினாலே தங்கள் கிறிஸ்துவருக்கு இந்த குர்த்தியேர் உத்தியோகமிருக்கப் பண்ணிக்கொண்டால் தங்களுக்குச் சகல கபுறும் ஆமென்றாப் போலேயும், தமிழராயிருந்தால் ஆகாதேபோ லென்றாப்போ லேயும் தாங்கள் ஊரிலே முக்காலே அரைக்கால் துரைத்தனம் பண்ணுகிறதல்லவா? அதற்குத் தமிழனால் நடவாதென்றும், கிறிஸ்துவனால் நடந்தேறுமென்றும் தங்கள் மனதின்படிக் குக் கிறிஸ்துவர்களைக் குர்த்தியேருக்கு வைக்கிறதே அல்லாமல் தமிழரை வைக்கவேண்டாமென்றும் ராசாவினுடைய காகிதம் வைத்திருக்குது. அது இந்தத் துரை தள்ளிப்போடுகிறானென்

றும் சீர்மையிலே இந்தக் கும்பினிகளிலே பேசுகிறதற்கு முசியே தும்மா, இவருக்குச் சத்துருவாயிருந்ததுமல்லாமல் கிறிஸ்துவருக்கு மெத்த ஆதரவாயிருந்தானென்றும், அவர் விழுந்துபோனன் என்ருப்போலேயும், ஆகட்டும் இனியொருத் தன் லபூர்தொனே இருக்கிருனென்ருப்போலேயும் இப்போது சீர்மைக்கு எழுதியிருக்கிருப்போலேயும், அதற்கு உத்தரவு சவுத்தாரவாய் வராமற்போனு லின்னமெழுதுவோ மென்ருப் போலேயும், இப்படியெல்லாம் சொல்லிக்கொண்டு, பின்னையு மிதற்கு அடுத்த நியாயங்களாய் கிறிஸ்துவர்களுக்கு நம்பிக் கைக்கொடுத்த தாங்கள் எப்படிச்சொல்லவேணுமோ அப்படி யெல்லாம் சொல்லுகிருர்களிதெல்லாம் நான் உங்களுடனே சொல்லுகிறதற்குக் குற்றமல்ல. அல்லவென்று சொன்னுலும் உங்களுக்குத் தன் காரியம் நிமித்தியமாய் சொல்லுகிரு னென்ருப்போலே அல்லவோ தோற்றுமென்று இந்தப்பிர காரம் வாயினுலே துதிக்கிறதில்லை. இப்போது நீங்களாய் விசாரித்துக் கேட்டபடியினுலே நானுமிதைச் சூட்சமாய் சொன்னேன். பிரஸ்தாபமாய் நீங்கள் விசாரித்தால் அப் போது அதனுடைய பூர்வோத்திரம் சவிஸ்தாரமாய் தெரிய வருமென்று சொன்னேன். அதன்பேரிலே துரை சொன்னது: அவர்கள் மோசக்காரர் அவர்களை மோசடியாய்க் கொண்டு போனுலே அல்லாமல் வெல்லக்கூடாதென்று சொல்லி நீ அவர்களைக் கண்டால் சற்று கள்ள ஆசாரத்துடனே தப் பட்டியளாவி அவர்களுக்குச் சந்தோஷம் வருகிருப்போலே பண்ணுவித்து, பிற்பாடு அவர்களை மோசம்பண்ணவேணு மென்று சொன்னுர். அதற்கு நான் ஒரு உத்தரவு சொல்லா மல் சும்மாயிருந்தேன். அதன்பேரிலே அவர்தானேயிருந்து கொண்டு, நீ யாதொரு சமயம்பார்த்து அந்தக் கோவில் சுப் பிரியரைக் கண்டுபேசி சொல்லவேண்டியதென்னவென்ருல்: நாமெப்போதும் உங்கள் காரியங்களிலேயும் கவைகளிலேயும் உங்களுக்குச் சந்தோஷம் வரத்தக்கதாக நடந்துகொண்டதும் நீங்கள் என்பேரிலே தயவுபண்ணி நடப்பித்துக்கொண்டு வந்ததும் இப்போது கொஞ்ச நாளாக அப்படியில்லாமல் உங்கள் வாக்கினுலே கொஞ்சம் விஷயங்களாய்ப் புறப்பட்ட வார்த்தைகள் கிறிஸ்துவர் நாலத்து ரெண்டுபேர் வந்து சொல லத்தக்கதாகக் கேட்டு எனக்கு மெத்த அத்திய ஆச்சரியமா யிருக்கிறதென்று நீ நகைத்தவாக்கிலே அவருடனே சொல்லி அப்பால் நீ சொல்லுகிறது நான் உங்கள் மனதின்படிக்கு

நடக்கவேணுமென்றிருக்கிற எனக்கு நீங்களப்படி சின்ன மனுஷருடைய விஷயங்களையெல்லாம் கேட்டு இப்படி சின்ன வார்த்தைகளெல்லாம் உங்கள் வாக்கிலே பிறக்கிறபடி யினாலே இனிமேல் உங்கள் மனதுபடிக்கு நடந்துகொள்ளு கிறதற்கில்லாமல் என் மனது முறிந்துபோனாப்போலே காணு தென்று சொல்லியும், இதன்பேரிலே அவர்கள் என்ன சாடை யாய் உத்தரவு சொல்லுகிறார்களோ அதை யறிந்துகொண்டு வா என்று சொல்லி, பின்னையும் அவர்களேதாகிலும் விசே ஷித்த உத்தரவுகள் சாடையாய்க் கொண்டுவந்தால், நீ புத்தி சாலி, அவர்கள் வாயை மூடத்தக்கதாக உத்தரவு சொல்லுவா யென்கிறது எனக்குத் தெரியும். ஆனபடியினாலே, அவர்களைப் போய்க் கண்டு பேசுகிறதற்கு நீ யோக்கியனென்று அனுப்பு விக்கிறேனேயல்லாமல் பின்னை ஒருத்தனையானால் நானிப்படி சொல்லி அனுப்புவிக்கிறதில்லை என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: யாதொரு காரியங்களை முன்னிட்டுக் கொண்டு அவர்கள்ண்டைக்குப் போகவேணுமே அல்லா மல் சும்மாபோகிறதல்லவென்று சொன்னேன். அதற்கும் ஒருசமயம் வரும், அந்தச் சமயத்திலே போய்க் கண்டுபேசி வா என்று சொன்னார். நல்லது, அப்படிதானே யாதொரு சமயம்பார்த்துப் போய்வருகிறேனென்று சொன்னேன். அதன்பேரிலே மதாம் காம்பிராவுக்குள்ளே மறுபடி வந்து, அவர்கள் மெத்த சமர்த்தர்; அவர்களைவிட நீ சமர்த்தனென்று உன்னை அனுப்புவிக்கிறேன். நீ போய், பேசுகிற தைரியத் திலே அவர்கள்பேரிலே சூசகமாகத் தக்கதாகப் பேசி அவர்கள் விஷயத்தைத் தெரிந்துகொண்டு வா என்று சொல்லிவிட்டு மறுபடி வந்து கும்பினீர் வர்த்தகர்களைக் கோந்துராந்திலே கையெழுத்துப் போடத்தக்கதாகப் பண்ணுவித்துப் போடென்று சொன்னார். சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

1747 ஆ செப்டம்பர் மீ 20 உக்கு பிரபவ ஞு புரட்டாசி மீ 7உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நான் கோட்டைக்குப் போய் முசியே கோர்னேயைக் கண்டுபேசி எழுத்துக்காரரை அழைப் பித்து மசுக்கரை குவர்னதோர் முசியே நவிது எழுதி அனுப்பு வித்தபடிக்குக் கட்டில் திரைக்குப் புடவையும் கிழித்துவிட்டுக் கூலியும் பேசி தீர்த்துக்கொண்டிருக்கிறவிடத்திலே துரை

யவர்களைக் கண்டு அவர்களழைக்கிறார்களென்று சொல்லிச் சேவகன் வந்துவந்து அழைத்தவிடத்திலே நான் போய் துரையவர்களைக் கண்டுபேசினவிடத்திலே போனார். சீர்மையிலேயிருக்கிற பாதிரியார் என் பேருக்கு ஒரு கடுதாசி எழுதி அனுப்புவித்தார். அந்தக் கடுதாசியிலே நபாபு மமுதல்லிகான் குமாரன் சாபர்அல்லிகான் அவ்விடத்திலேயிருக்கிற கிறிஸ்துவருடைய கோவிலைக் கட்டவொட்டோம் என்று சொல்லியும், அவ்விடத்திலே இருக்கப்பட்ட கிறிஸ்துவரையும், உபத்திரவம் பண்ணுகிறானென்றும், இனிமேல் அப்படி நடவாதென்றும் கோவில் கட்டிக்கொள்ளத்தக்கதாகவும் அவ்விடத்திலே இருக்கப்பட்ட கிறிஸ்துவர்கள் பேரிலே தயவுபண்ணி நடப்பித்துக்கொள்ளச் சொல்லிச் சிபார்சு சாபர் அல்லிகான் பேருக்கு எழுதி அனுப்புவிக்கச் சொல்லியும் இப்படியாக எழுதிவந்தது. நேற்று நாம் சொன்ன காரியத்துக்கு இது சமயமாச்சுது. இந்தக் கடுதாசியைக் கொண்டுபோய்ப் பாதிரிமார் கையிலே கொடுத்து இதற்கு என்ன உத்தரவு எழுதவேணும், இதற்கு என்ன வயணமென்று கேட்டு, அதன்பேரிலே நேற்றுச் சொன்ன சாடையைப் பிரஸ்தாபம் வருவித்து அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கிரகித்துக்கொண்டு வா என்று சொல்லி, அந்தக் கடுதாசியை என் கையிலே கொடுத்தார்கள். அந்தக் கடுதாசியை வாங்கிக்கொண்டு நான் சம்பாகோவிலுக்குப் போனேன். அப்போது அவரில்லை, வெளியே போய்விட்டார். பதினொரு மணிக்கு வருவாரென்று சொன்னார்கள். அதன் பேரிலே அந்தச் சேதியைத் துரையவர்களுடனே சொல்லி, பகலுக்கு மேலாய் நாலு மணிக்குப் போய்க் கண்டுபேசி வருகிறோமென்று சொல்லிவிட்டு, அதன்பேரிலே கொர்னே அண்டைக்குப் போய்க் கண்டுபேசி, வீட்டுக்குப் போய் ஸ்நானம் பண்ணிச் சாப்பிட்டுப்படுத்துக்கொண்டிருந்ததினாலே நாலரை மணி அடித்த பிற்பாடு புறப்பட்டுச் சம்பாகோவிலிலே இருக்கப்பட்ட சுப்பிரியேர் பாதிரி கடுதி யண்டைக்குப் போய் நான் வந்த சேதியை அறிக்கையிட்டு அதன் பேரிலே பிரகாசன் வந்து அவருடைய காம்பிராவிலே ஒண்டியாயிருக்கிறாரென்று சொன்னதின்பேரிலே நான் போய் உபசாரம் பண்ணி, ஆசாரம் பண்ணினவிடத்திலே இதென்ன மோட்சவாசலோ! நீரேது இவ்விடத்துக்கு வந்தது. உமக்குச் சரீரத்துக்கு என்ன உபாதி? இப்போது ஆரோக்கியமாயிருக்குதோ

வென்றுகேட்டார். உங்களுடைய ஆசீர்வாதம் என்னிடத்திலே பரிபூரணமாயிருக்கச்சே எனக்கு ஆரோக்கியமாகிறதற்குத் தடையென்னவிருக்கிறது என்று பதில் சொன்னேன். ஓ! எங்களுடைய ஆசீர்வாதம் உனக்கென்னத்துக்கு? ஓ அது உனக்குப் பிராமணருடைய ஆசீர்வாதமென்று சொன்னார். அதற்கு உத்தரவு என்னுடைய சுபாவமெல்லாம் சமனு யெண்ணி நடந்துகொள்ளுகிறதேயல்லாமல் அப்படி பேதமாக ஒருக்காலும் எண்ணுகிறதில்லை என்கிறது நானிதுவரைக்கும் நடந்துகொள்ளுகிற காரியங்களிலேயும் உங்களுடைய உபதேசிமார் மற்றப்பேர் என்னண்டையிலே வந்து காரியபாபம் சொல்லிக்கொண்டிருக்கிற சங்கதிகளிலே நான் நடந்து கொள்ளுகிற சம்மதி முதலானது அவர்கள் வந்து உங்களுடனே சொல்லியிருக்கிறது. நீங்களும் கேள்விப்பட்டு உங்கள் மனதுக்குத் தெரிந்தேயிருக்கும். அப்படி எப்போதும் நீங்களும் என் பேரில் பரிபூரண தயவுபண்ணி நடப்பித்துக் கொண்டு வந்தீர்கள். இப்போது கொஞ்ச நாளாய் என் பேரிலே உங்கள் மனதுக்குப் பேதகமாகத் தோற்றப்பட்டிருக்கிறது. அது என்னுடைய பொல்லாத வேளையின் குணம். அப்படி உங்கள் மனதுக்குத் தோற்றப்பட்டிருக்கிறதே என்று எண்ணிக்கொண்டிருக்கிறேனே யல்லாமல் வேறே ஒரு விதமாய் எண்ணவில்லையென்று சொன்னேன். அதற்கு அவர்கள் என்ன விதமாய் நடந்தாலும் கிறிஸ்தாமானால் எங்கள் மனதுக்கு நம்பிக்கையும் விசுவாசமுமிருக்கும். இதுவுமல்லாமல் இந்தக் கும்பினீர் குர்த்தியோர் உத்தியோகம் வராததற்கு முன்னமே உன் புத்தியும் உன் விசுவாசமும் எங்கள் மத்தத்தின் பேரிலே உண்டாயிருந்ததும் மெய்தான். இந்த உத்தியோகம் கைக்கு வந்த பிற்பாடு கொஞ்ச நாளாய் தமிழர் கோவில்களை ரொம்பவும் பிரபலம்பண்ணுகிறதும் அதற்கு ரொம்ப ஆதிக்கமும் பிராமணருக்குப் பிரபலமும் தமிழருக்கெல்லாம் பொங்குதலும் கிறிஸ்தவருக்கெல்லாம் மக்கினதும் இப்படியாக இருக்கிறதென்று சொன்னார்.

கிறிஸ்தவர்களுக்கும், தமிழர்களுக்கும், மற்றப்பேர்களுக்கும் மூன்று வருஷமாய்க் கப்பல் காடிகள் வராமல் தொழில் துறையில்லாமல் கரிப்புனலேயும், பணத்துக்கு அரைப்படி அரிசி விற்கச்சே மக்கின மதனனிச்சியாய் உண்டாய்ப் போச்சுது. ஒருத்தர்: உண்டாக்கவேணுமா, இந்த மட்டுக்கும் பட்டணம் நீற

கிறது. முசியே துய்ப்ளேக்ஸ் மகாராசா ஒருத்தன் இந்தச் சமயத்தில் இந்தப் பட்டணத்துக்குத் துரையாயிருந்தபடியினாலே நிருவாகத்துக்கு வந்ததென்று சொன்னதற்கு, முசியே துய்ப்ளேக்ஸ் உன் பேரிலே பட்சமல்லவாவென்று சொன்னார். இவர் மாத்திரம் என்ன, எங்கள் தகப்பனார் நாள்முதல் என் நாள் இருபத்திமூன்று வருஷம் பிடித்து, கனகராயமுதலியார் குடுத்தியேர் என்று பேர் மாத்திரமல்லாமல் அவருக்கு நடப்பிக்கிறதைப் பார்க்கிலும் இந்தமட்டுக்கும் பின்னையும் மூன்று பங்கு அதனமாய் மரியாதை அதிகாரங்கூட நடந்துவருகிறதே யல்லாமல் இந்தத் துரை மாத்திரம் நடப்பிக்கிறாரென்றும் இந்த குடுத்தியேர் உத்தியோகம் வந்த பிற்பாடு எனக்கு அதிகாரம் நடக்குதென்றும் எண்ணத் தேவையில்லையென்று சொன்னதற்கு, மெய்தான் அபத்தமல்ல, நீ பெரிய மனுஷன் பிள்ளை, உங்களுக்கு இரண்டு தலைமுறையாய் மேன்பாடும் மரியாதையும், பிரதிஷ்டையும், அதிகாரமும் துரைகளுடைய சனுவு பிரீதி உண்டாகி நடந்துவருகிறதை சமஸ்தமான பேர்களும் அறிவார்கள், நாமும் அறிவோம், கேள்விப்பட்டுமிருக்கிறோம். ஆனால், நீர் கிறிஸ்துவரானால் வேறே இடமில்லாமல் சமஸ்தமான பேரும் இந்தப் பட்டணத்துக்குள்ளே ஆவார்களென்று சொன்னார். அதற்கு நான், ஐயா, நீங்களிப்படி சொல்லுகிறது மெத்த சரியாயிருந்தது. இந்தப் பட்டணத்துக்குள்ளே கிறிஸ்துவராயிருக்கிற பேர்கள் ஒரு பங்கும் மற்றப் பதினைந்து பங்கும் தமிழராயிருக்கிறார்கள்; இதல்லாமல் கிறிஸ்துவருக்குள்ளே ஐஸ்வரியத்தனைகவும் அதிகாரத்துடனேயும் இருக்கிறது. கனகராயமுதலியார் கூட்டம், அண்ணன் தம்பிகள் தவிர, மற்ற கிறிஸ்துவர்கள் எல்லாரும் பிச்சைக்காரர்கள். இப்போதுதான் சிறிது நாளாக வெள்ளைக்காரர் தெருவிலேயும் துபாசித்தனங்கள்பண்ணியும் யாதொரு பேரும் வருகிறதிலே திரிந்து சிறிது பேர்கள் அன்னவஸ்திரங்களுக்கு அத்தாஷி இல்லாமலும் வீடு வாசல் கல்லாலே கட்டிக்கொண்டும் ராசாவாய், ஐம்பது, நூறு, இருநூறு, முன்னூறு ஆஸ்திகளுண்டாயிருக்கிறது. மற்றப் பேரெல்லாம் சேவகத்தனத்திலே யிருக்கிற பேரும் கூலிவேலை செய்கிற பேருமாக இருக்கிறார்களென்கிறது தங்கள் சித்தத்திற்குத் தெரிந்திருக்கிறதே! தமிழரிலே அப்படியல்ல. கும்பினீர் வர்த்தகம் பண்ணுகிற பேர் கடற்கரையிலே, சாவடியிலே, கோட்டையிலே புடவைக்கிடங்கு, இரும்புக்கிடங்கு, அரிசி, கோதும்பை முதலான கிடங்குகள்

கோட்டைக்குச் சேரன்டையிலே, கோட்டை, சில வெல்லம் போடுகிற பேர் உள்பட பெரியபெரிய உத்தியோகங்களிலே இருக்கிற பேர்கள் மற்றப்படி பட்டணத்துக்குள்ளே அவரவர் கள் தனித்தனியாய் பதினுயிரத்துக்கு, இருபதினுயிரமாகச் சரக்குகள் அழைப்பித்து, கோன்சேல்காரர் மற்றுமுண்டான வெள்ளைக்காரருக்குத் தேவையான சரக்குகள் கொடுக்கிறவர் கள் எல்லாரும் தமிழர். குண்டுகிராமக் குத்தகைபண்ணுகிற வர்கள் முதலாய்ச் சமஸ்த தொழில்பண்ணுகிறவர்களும் தமி ழரேயல்லாமல் கிறிஸ்துவரல்ல. இப்படிச் சமஸ்தமான பேர்களும் தமிழராயிருக்கச்சே நானொருத்தனும் கிறிஸ்துவனு ஞல் அவர்களெப்படி ஆவார்கள்? இதல்லாமல் என் பமிய் (famille), என் சாதி என் கை சாப்பாடேயல்லாமல் வேறே சாப்பாட்டுக்கு அவகாசமில்லாமலிருக்கிறவர்களானுல், நான் சற்று கையை முடக்கினுல் அவர்களுக்கு வேறே ஆதரவில்லை. ஆதலால், அவர்களிதுகளிலே வர்த்தகம்பண்ணு கிறவர்கள் எல்லாரும் செட்டிகளும், கோமுட்டிகளும், பிராமணுளும், குசிராத்தியருமாக இருக்கிறது. வர்த்தகம் பண்ணுகிற பேர்கள், அப்படி உத்தியோகம் பண் ணப்பட்ட பேர்கள், வெள்ளாமுரும், பிராமணுளும், எங்களி டையர் கூட்டத்திலே முத்தியப்பிள்ளை தவிர மற்றப்பேரும் ஆடு மாடு மேய்க்கிற பேர்களுக்கு ஒருத்தர் ஆதரவு மிகுதியு மில்லை, வழியுமில்லை. இப்படி சம்மதியெல்லாமிருக்கிறதும் அல்லாமல் அவனவன் மட்டுக்கும் அவனவனே அல்லாமல் ஒருத்தனுக்கு ஒரு காரியமானுல் ஒருத்தன் உதவியாகிறதே யில்லை. அப்படியிருக்க, ஒரு மதத்துக்குள்ளே போனுல் பின் ெனாருத்தன் வரப்போகிறதென்னவிருக்கிறது? இந்தச் சம்மதி களெல்லாம் உங்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோலே தெரிந்திருந்தும் இவனிதற்கு என்ன உத்தாரஞ்சொல்லுகிறுனே தெரியாதென்று என் புத்தி எம்மாத்திரம் என்றும் அறிய வேணுமென்றும் கேட்டதாய்க் காண்கிறதேயல்லாமல் நீங்க ளுண்மையாய்க் கேட்டதாய்க் காணவில்லை என்று சொன்னது மல்லாமல் கனகராயமுதலியார் கிறிஸ்துவனுயிருந்தும் இருபது வருஷம் உத்தியோகம் பண்ணினுனே! அரும்பாத்தபிள்ளை, சடையப்ப முதலியார் முதலாக அகமுடைய சாதி அவர் இனமாயிருக்கப்பட்டது வெகுபேரிருக்கிறுர்களே, அவர்களிலே யாரானுர்கள்? முன், அவர்கள் தகப்பனுர், பாட்டனுர் நாளை

யிலே ஆனவர்கள் அதன் பிற்பாடு நாட்டுப்புறத்துக்குப் போய் மாப்பிள்ளையைக்கொண்டு அதிலே பங்கு விரதியா யிருக்கிறதே அல்லாமல் மற்றப்படி இவர் உத்தியோகத்துக்கு வந்த பிற்பாடு யார் ஆனுர்கள்? இது முன்னிலையாய் உத்தரம் சொல்லவேணுமென்று சொல்லுகிறதே அல்லாமல் உங்களுக் குத் தெரியாதது ஒன்றுமில்லை. இப்போது கனகராய முதலி செத்து ஒன்றரை வருஷம் அல்லது இரண்டு வருஷமாகிறது. அதிலேயும் இப்போது ஒரு மாதம், இரண்டு மாதமாய் கஷ்ட காலமான பிற்பாடு ஆனுப்போலே ஒருக்காலுமானதில்லை யென்றுமிப்படி அவர்கள் பரஞ்சாட்டிச் சொன்னதற்கு நீர் என்ன சொன்னுலும் சரி, நீர் கிறிஸ்துவனுனல் இந்தப் பட்டண மெல்லாம் கிறிஸ்துவமாமென்று கிறிஸ்துவமானுல் நீர் இந்த குடுத்தியோர் உத்தியோகத்துக்கு இருக்கிறதற்கு எங்களுக்குச் சம்மதியில்லாவிட்டால் அந்த மட்டுக்கும் குவர்னதோர் முசியே துப்ப்ளேக்குடனேயும் அனேக விசை கிறிஸ்துவர்களை வைக்க வேணுமென்று பேசினேம், சீர்மைக்கு எழுதினேம், இன்னும் எழுதுவோம். இன்னும் வெகு பிரயத்தனம் பண்ணு வோம். இன்னும் கோன்சேலுக்குப் பேசுவோம். எங்களாலே ஆன எத்தனமெல்லாம் பண்ணிப்பார்ப்போம் என்று சொல்லி நாங்கள் இந்தக் குடுத்தியேர் உத்தியோகம் கிறிஸ்துவனுக்குக் கொடுக்கிறதேயல்லாமல் தமிழனுக்குக் கொடுக்கிறதில்லை யென்றும், ராசாவினுடைய காகிதம் அழைப்பித்துக்கொண்டு வைத்திருக்கிறேமென்று மிப்படி பின்னையும் அநேக விதமான உத்தரவு சொன்னதற்கு நான் சொன்னது: இந்த உத்தியோகம் வேணுமென்று நாஞெருக்காலும் பிரார்த்திக்கவில்லை. துரையா யிருந்து இந்த உத்தியோகம் நீ பார்க்கவேணுமென்றும் பிரார்த் தித்தபடியினுலே முன்னே நான் சம்மதிக்கிறதில்லை யென்று சொல்லி அப்பால் வரப்போகிற சாதுக்காக அந்த உத்தியோ கம் பார்த்து வருகிறேனென்றும், எனக்குப் பல்லக்கு அறிக்கை அதிகாரம் வியாபாரம் சமஸ்தமும் கனகராயமுதலி யிருக்கிற போதுகூட என் பேச்சு வட்டமாய் நடந்துவரச்சே எனக்கு இந்த உத்தியோகம் இச்சித்து வேண்டியிருப்பேன் என்றும் பலவந்தமாய் துரைகள் சொல்லுகிறதின்பேரிலே அவர்க ளூரிலே குடியிருக்கிறமட்டுக்கும் தள்ளப்போகாதென்றும், மேல்வாங்கு பார்த்து வருகிறேன் என்கிறதற்கு, கோன்சேல்

காரருக்கும், உங்களுக்கும் பட்டணத்திலே இருக்கிறவர் களுக்கும் தெரியும். ஆகிலும் உங்களுக்குப் பின்னையும் நன்ருய்த் தெரியும். இப்பவும் அதிலே நான் ஊணிக்கொள்ளாம லிருக்கிறதினுலே யிருக்கிறதே அல்லாமல் நான் வேணுமென்ருல் அப்படி இல்லை யென்று சொன்னதற்கு மெய்தான் இப்போது உன்னத்தனை கப்பாசி உள்ளவர்களில்லை. நீ சொன்ன பேச்சு எல்லாம் அபத்தமல்ல, மெய்தான். ஆனுலும் எங்கள் நினைப்பு எத்தனை கையிலே ஆகாதவனுனுலும் ஒரு கிறிஸ்துவனிருந்தால் வெகு கிறிஸ்துவருக்குப் பிழைப்பு உண்டு. நீ கிறிஸ்துவனுகி இந்த உத்தியோகத்திலே யிருந்தால் வெகுபேர் கிறிஸ்தவர்களாவார்கள். கனகராயமுதலியார் நானறிந்தமாத்திரம் அவரறிந்து மனுஷருக்குப் பிரித்தடைத்துச் சொல்லத் தெரிந்தால் வெகுபேர் கிறிஸ்துவராவார்கள் என்று சொல்லி, சுவாமி உனக்கு தம்முடைய பாதம் சேரவேணுமென்று நினைத்துச் சேர்த்துக்கொள்ளத்தக்கதாக தயவு கடாக்ஷம் பண்ணவேணும் என்று சொன்னுர். அதற்கு நான் அவர் சித்தத்தை ஒருக்காலும் தள்ளப்போகாதென்று சொன்னேன். அதற்குச் சும்மாயிருந்து துரை இந்த வேதபுரீசுரர் கோயில் நிமித்தியம் உம்முடனே மகாநாட்டாருக்குத் தெரியப்படச் சொல்லச்சொல்லி யிருக்கிறதென்று சொன்னுர். அது மெய் தானுவென்று கேட்டார். அது மெய்தான் என்னுடைய அரண பரணசக்தியும் பிரயாசைப்படுகிறேனென்று சொன்னேன். அதற்கு அவர் இந்த நன்றி, சுவாமி முன்னே நிற்குமென்று சொன்னுர். என்னுலே ஆனகாரியத்துக்கு வஞ்சனை பண்ணத் தக்கதில்லை என்று உபசாரமாய் மாவிலும்படாமல் மரத்திலும்படாமல் உத்தாரம் சொல்லிவிட்டு அப்பால் போனுர். அண்டையிலிருக்கிற பாதிரியார் துரைபேருக்கு அனுப்பின காகிதத்தைக் காண்பித்து, இதற்கு உத்தரம் எழுதவேணுமென்றும் துரையவர்கள் கேட்டதற்கு நாங்களிந்தக் காகிதம் வந்ததையே நாங்களறியோமென்று சொல்லி புஷ்பக்குறியென்று ஒரு கிராமமிருக்கிறது. அந்தக் கிராமம் வேலூரைச் சேர்ந்ததென்றும், அது போளூரை அடுத்தாப்போலேயிருக்கும் மமுதல்விகான் மகன் சபறல்விகானுக்கு இந்த கிறிஸ்துவர்கள் பே[illegible]லேயும் அந்தப் பாதிரியார்பேரிலேயும் தயவுபண்ணி நடப்பித்துக்கொள்ளச்சொல்லி எழுதியனுப்பவேணுமென்று சொன்னுர். அந்தமட்டிலே அவரை அனுப்புவித்துக்கொண்டு

வீட்டுக்குப் போனேன். நடந்த சேதியை துரையுடனே வந்து சொல்லுவோமென்று பாக்குக் கிடங்குக்கு வந்து வீட்டுக்குப் போனேன்.

1747 ஆ செப்தம்பர் மீ 21 உக்கிரு பிரபவ ஞு புரட்டாசி மீ 8 உ குருவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரண்டைக்கு வந்த விடத்திலே நேற்றைய்தினம் சம்பாகோவில் பாதிரியாரண்டைக்குப் போனீயே பாதிரி கடுது என்ன சொன்னுர் என்று கேட்டார். அவர் சொன்ன உத்தாரம்: நேற்று 7 உ புதவாரம் தினசரியிலே எழுதினபடிக்குச் சொன்னதற்கு, உன்னைக் கிறிஸ்துமாகச் சொல்லுகிருர்கள். கிறிஸ்துமாகாவிட்டால் குடுத்தியோர் உத்தியோகம் உனக்குக் கொடுக்கிறது சம்மதியில்லை அல்லவாவென்று உதட்டைப்பிதுக்கி இவர்கள் புதுச்சேரிக்குக் குவர்னதோர்களாயிருக்கிறதாக யோசனை பண்ணிஞர்கள். அவர்கள் சிறுபிள்ளை யோசனை அல்லாமல் இவர்களைத் தொட்டுச் சிறிது ஆகிறதுண்டா? அந்தக்காலம் முசியே எம்பெருடனே போச்சுது. சீமையிலே கூட இவர்கள் அபத்தக்காரர்கள் என்று தீர்த்து இவர்கள் பேச்சை மெய்யென்று யாரும் விசுவசிக்கிறதில்லையென்று துரை சொல்லி, பின்னையும் வேறே பிரஸ்தாபம் பண்ணவில்லையாவென்று சொன்னேன். அந்தப்பேச்சை அப்படி உமிழ்ந்துபோடு என்று சொன்னுர். இதிலே பாதிரிக்குத் தூர வந்தார் போளுர் பேச்சுக்கு காங்களெழுதி அனுப்பித் தெரிந்துகொண்டு சொன்ன பிற்பாடு எழுதியனுப்பவேணுமென்று சொன்னுர். நல்லது ரங்கப்பா, அப்படி இவர்கள் வந்து சொன்ன பிற்பாடு எழுதியனுப்பு என்று சொல்லி, துரையும் அவரும் பேசியிருந்தார்கள். ஊனிப்புறத்தே வந்தேன். அனுப்புவித்துக்கொண்டு போற வந்தவா, தம்பி ரங்கப்பிள்ளை அவ்விடத்துச் சேதி வந்தவுடனே உமக்குச் சொல்லி அனுப்புகிருேமென்று நானிருக்கிற சாலையிலே வந்து சொன்னுர், நானுமுபசாரமாய் நல்லதென்று ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணிவிட்டுப் போனுர்.

1747 ஆ செப்தம்பர் மீ 30 உக்கிரு பிரபவ ஞு புரட்டாசி மீ 17 உ சனிவாரம்

இற்றைநாள் நடந்த சேதி: இதற்கு நான் வந்த திருவாங் கோட்டு ராசாவினுடைய ஸ்தானுதிபதியாகி வந்திருந்த சோரா முதலி, மரைக்காயரையும் அழைத்துக்கொண்டு அவர்கள் கொண்டுவந்திருந்த ராசாவினுடைய கடுதாசி ஓலைகளிதுக ளெல்லாம் எடுத்துக்கொண்டுபோய் அவர்களை ஸ்ரீ துரை யவர்கள் பேட்டி பண்ணுவித்து ஓலை சமாசாரமும் சொல்லி அதிலிருந்த பறங்கி எழுத்துக் கடுதாசியை எடுத்து ஸ்ரீ துரையவர்கள் கையிலே கொடுத்தவிடத்திலே அந்தக் கடுதாசியை பார்த்துக்கொண்டு இந்தப்படிக்குத் தானே தமிழிலேயும் அப்படித்தானே எழுதியிருக்கும் ஆன படியினாலே அந்த ஓலை வயணமெல்லாம் நீ பார்த்துத் தெரிந் துகொண்டு வா; நாமும் இந்தக் காகிதத்திலே எழுதியிருக்கிற வயணமெல்லாம் சொல்லுகிறேன். இதிலே ஏறத்தாழ இருந் தும் அதிலே ஏறத்தாழ இருக்கிறதை யெல்லாம் பார்த்துக் கொண்டு யோசனை பண்ணிக்கொண்டு சொல்லுகிறோமென் றும், அல்லாமல் இப்போது இவர்களை விடுதிக்குப் போய் ஆசுதாபாய்ப் பண்ணிக்கொண்டிருக்கச் சொல்லி அனுப்பிவை என்று சொன்னார்கள். அந்தப்படிக்கு அவர்களைச் சொல்லி அனுப்புவித்தோம்.

*1747* ஆ அக்டோபர் மீ [வக்கு பிரபவ ஸு புரட்டாசி மீ *18* உ ஆதிவாரம்.

இற்றைநாள் மத்தியானம் பனிரெண்டடித்து மூன்று மணிக்குத் தேவனும்பட்டணத்திலே இருந்து இங்கிலீசுக்காரர் கப்பல் எட்டும், ஒரு சுலுப்பும் ஆக ஒன்பதும் ஓடிவந்து இந்தத் துறைக்கு நேராய் மேலாக ஓடி உயர்ந்து வைத்துப்பிடித்தான். அந்தமட்டிலே கடலோரத்து அலங்கத்துமேலே யிருக்கிற பீரங்கி யெல்லாம் குண்டு மருந்து போட்டுக் கிடித்து, தெற்கு வடக்கே இருக்கப்பட்ட பீரங்கி யெல்லாம் தயார்பண்ணிக் கொண்டு ஆசராயிருந்தார்கள். துரையும் ஆறரை மணி மட்டுக்குமிருந்தும் கோட்டையைவிட்டு வீட்டுக்கு வந்தார்.

இற்றைநாள் கபிசுக்கோவிலிலே மாதாவினுடைய திரு நாளானபடியினாலே சாயங்காலம் இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். இது எதனாலே எழுதினேனென்றால், எப் போதும் பீரங்கிச் சுடுகிறதில்லை. இன்றையதினம் இங்கிலீசுக்

காரர் கப்பல்கள் வந்திருந்தபடியினாலே அவர்களுக்கு அதிகாரியாயிருக்க வேணுமென்று பண்டிகையை சாக்கிட்டுப் பீரங்கிச் சுட்டார்கள்.

1747 ஆ அக்டோபர் மீ 5உக்கு பிரபவ ஞு புரட்டாசி மீ 22உ குருவாரம்

இன்றைய சாயங்காலம் ஆறரை மணிக்கு முசியே மேனவில் ஷணசாகி, கர்லியேர்-மோசு என்ற ஒரு ஒபிசியே பிள்ளையொரு ஒபிசியே பேர் விளங்கன் (Mr. Main ville changue) M. Gorlier-Mose.——) இவர்கள் ஐந்து பேருக்கும் ஐந்து டோலிக்கு நாற்பது பேர் போயண்டர்-கண்டானம் எருது ரெண்டும். மாயேயிக்கு வரப்போகவிருக்கிற பிராமணர் மூன்று பேரும், அப்துல் ரயிமான் சாயபு சிப்பாய்களில் மாயேக்குப் போக வரத்தாயிருக்கிற நாலு சிப்பாய்களும் மேலே எழுதப் பட்ட வெள்ளைக்காரர் மற்றப்பேருக்குச் செலவுக்கு நூறு பொன் வராகன் கொடுத்து, இதல்லாமல் ரெண்டு அறை பையிலே ஆயிரம் வராகன் கட்டிக் கொடுத்து, மாயேக்கு (Mahé) பயணமாகி அனுப்பினார்கள். இவர்கள் மாயே போய் இருக்கிறமட்டுக்கும் பதினைந்து நாளைக்குப் போயண்டாமைத்துமுண்டான பேருக்குப் படி கொடுத்து அனுப்புவித்தேன். இந்த வெள்ளைக்காரர் மாயே போய்ச் சேர்ந்து ஐந்நூறு பேர் சொல்தாதும் மத்தலோத்துகளுமாய்ச் சேர்த்துக்கொண்டு ஜனவரி மாதத்திலே இங்கே வந்து சேரச்சொல்லியும், இதற்கு முன்னே டிசம்பர் மாதத்திலேயே கோர்வைப்பட்டு வந்து சேருவார்கள்போலே கண்டால் அப்படி வந்து சேரச்சொல்லியும் உத்தாரங் கொடுத்து அனுப்புவித்தார்கள். மேலே எழுதப்பட்ட வெள்ளைக்காரரும் பயணம் சாகிப்போனார்கள்.

1747 ஆ அக்டோபர் மூ 5உ க்கு பிரவப ஞு புரட்டாசி மீ 22உ குருவாரம்.

இற்றைநாள் துரையவர்கள் உழவர்க் கரைக்குப் போகிறதற்கு முன்னே நான் முந்தாம்நாள் 20உ செவ்வாய்க்கிழமை ராத்திரி காலிங்கராய முத்தியமுதலியும் நம்முடைய வீரப் பிள்ளை குமாரன் முத்தும் இரண்டு பேரும் வந்து தாங்கள்

சடையப்பமுதலியார் குமாரன் சாமிநாதன் முகவார்த்தை யாய்க் கேட்டதும் பிரஞ்சு எழுத்திலே பிரங்கி மேஸ்திரி கையிலே என்பேரிலே பிராது எழுதிவைக்கப்போகிற பெத்தி சாமுக்குத் தமிழிலே எழுதின அட்டவணையைத் தாங்கள் படித்துப் பார்த்ததாயும், இது கிறிஸ்துவர் எழுதிவைக்கிறுப் போலே மலைக்கொழுந்துமுதலி மகன் வரலாமென்கிறபடியாலும் கனகாயமுதலி உடப்பிறந்தாள் மகளைக் கலியாணம்பண்ணியிருக் கிற முத்துக்குமாரனும் பின்னையும் இரண்டொருத்தர்கூட என்றுப்போலேயும் இந்தப்படி வந்து சொன்ன சேதியை யோசனைபண்ணிப் பார்க்குமிடத்திலே மதாமவள் அனுபோக மில்லாமல் அவளண்டையிலிருக்கிற துபாசி வரலாம் எத் தனம்பண்ணப் போகிறதில்லை என்று யோசனைபண்ணுமிடத் தில் அவனிதற்குக் காவாயிருந்து நடத்துகிறது என்னத்தினுலே என்றுல் பதினைந்து நாளைக்கு முன்பாக, ரங்கி வியாச்சிய நிமித் தியமாக, மதாம் துய்ப்ளேக்ஸ் ரங்கி பேரிலே வியாச்சியம் போட்டுக்கொண்டிருக்கிற திருவேங்கடமென்கிற திருட்டுப் பயலுக்காக ரங்கி கையிலே ஐந்நூறு, எழுநூறு வாங்கி மதாம் எடுத்துக்கொண்டாளென்று வெள்ளைக்காரத் தெருவிலெல் லாம் வெள்ளைக்காரிச்சிகள் உள்ளவர்கள், வெள்ளைக்காரர் உள்ளவர்களெல்லாரும் பேசிக்கொண்டிருக்கிறார்களென்று மஸ்லா லதுரா என்கிறவன் வந்து குவர்னதோராகிய முசியே துய்ப்ளேக்குடனே சொன்னுள். அவள் சொன்ன சேதி என்ன வென்றுல்: இந்தப் பட்டணத்திலே ஒரு தேவடியாளிருந்து செத்துப்போனுளாம். அவளுக்கு ஒருத்தரும் சுவாதீனமில் லாதபடியினுலே அதற்கொரு நட்டுவனைப் பாத்தியம் உண்டு பண்ணி அவன் கையிலே அறுநூற்றைம்பது வராகன் உம் முடைய பெண்சாதி வாங்கி எடுத்துக்கொண்டு விட்டாளென்று இந்தப் பட்டணத்திலே யுண்டாகிய வெள்ளைக்காரத் தெருவுகளிலே உண்டான வெள்ளைக்காரிச்சி யளெல்லாரும் இதுவே பேச்சாய்ப் பேசிக்கொண்டிருக்கிறார் கள். அது எனக்கு மெத்த வெட்கமாயிருக்கிறது. நீர் இந்தப் பட்டணத்திலேயிருந்து வெகு தூர மட்டுக்கும் மகத்தாகிய கீர்த்தி பெற்றீர். உம்முடைய பெண்சாதி இப்படிப்பட்ட அப கீர்த்தி சம்பாதிக்கிறுள். ஆகிலும், நாம் இந்தச் சேதியை உம் முடனே சொன்னுல் உமக்கு கோபமாயிருக்குமென்றும் எனக் குத் தெரியும். கோபமாயிருந்தாலும் இருக்கட்டுமென்கிற

தாய் நான் கேள்விப்பட்டது எனக்குச் சகிக்ககூடாதபடியி னாலே வந்து உம்முடனே சொன்னேனென்று சொன்னாள். இதல்லாமல், இந்த வியாச்சியம் சின்ன துரை மாரிபத்திலே வந்து விழுந்திருக்குதாம். அவரும் அறிவார்கள். இதல்லாமல் முசே திலார்ஷும் அறிவாரென்றும் சொன்னாள். அதன்பேரிலே ராசாவினுடைய புரோக்குய்ரேராகிய முசியே மேரையும் சின்ன துரையும் அழைத்துக்கொண்டு வரச்சொல்லி ஆளனுப்புவித்து முசியே கோக்கேத்தையும், முசியே துலாராமையும் அழைத்துக் கொண்டுவரச்சொல்லி அனுப்பிவிட்டு அதன்பேரிலே என்னை அழைத்து நீ ஏதாகிலுமிந்தச் சேதி அறிவாயா என்று கேட் டார். நான் ஒன்றும் அறியேன். தேவடியாள் செத்துப்போனது மில்லை; நட்டுவனை சுவாதீனம்பண்ணினதுவும் நானொன்றுமறி யேன் என்று சொன்னேன். அதன்பேரிலே லாசரைக் கேட்டு அனுப்பி அந்தச் சேதியைத் தெரிந்துகொண்டு சொல்லென்று சொன்னார். அவரைக்கேட்டு அனுப்புவித்தால் அவரும் நானொன்று மறியேன் என்று சொல்லி அனுப்பினார். அதன் பேரிலே மதாமை அழைத்து அனுப்புவித்தார். அவள் அந்த மெலுக்குவை அறிந்து சின்ன துரைக்கும், லாசருக்கும், மற்றப் பேருக்கும் சொல்லி அனுப்புவித்து, தன்பேர் எடுக்க வேண்டா மென்று சொல்லி அனுப்புவித்தாள். அதன் பேரிலே சின்ன துரை வந்தார். அவரைக் கேட்டவிடத்திலே அவரும் மதாம் பேச்சை நிருவகித்து, நான்தான் அந்த வியாச்சியத்தை மத்தி யஸ்தத்திலேவிட்டுதீர்த்துப்போடச் சொன்னேனென்று சொன் னார். அதன்பேரிலே இது விமித்ரியம் மதாம் துய்ப்ளேய்க்சு உமக்கேதாகிலும் சொல்லி அனுப்புவித்ததுண்டாவென்று கேட்டார். நான் அறியேன் என்று சொன்னார். அதன் பேரிலே முசியே கோக்கேத்தைக் கேட்டனுப்புவித்தார். சின்னதுரை யிருந்துகொண்டு நானிங்கே யிருக்கிறேனே அதல்லாமல் நான் அறிவேன். நான்தான் மத்தியஸ்தத்திலேவிட்டேன். அவரைக் கேட்டனுப்புவிக்க வேண்டியதென்னவென்று சொல்லச்சே சற்று சஷபிழையாய்ச்சொன்னார்.

அந்த மெலுக்குவை அறிந்து சாடையாய் விட்டுவிட்டார். அப்படியெல்லாம் நடத்திருந்தபடியினாலேயே இந்தச் சேதிகள் எல்லாம் நான் வெள்ளைக்காரத் தெருவிலே பிறப்பித்ததாகவும் நான்தானே ஒரு வெள்ளைக்காரனைக் கொண்டுவந்து விட்டு

விடச் சொல்லுவித்தேன் என்கிறதாகவும் மதாம் அண்டை யிலே யிருக்கிற சட்டைக்காரர் பின்னையும் பறலாம் முதல் இரண்டொருத்தர் சொல்லியிருந்ததின் பேரிலே அவள தற்குப் பதிலாக என் பேரிலே இந்த எடுபாடு எடுத்தாப்போலே இருக்குதென்று யோசனைபண்ணினேன். இந்தச் சேதியை இற்றைநாள் நான் போய் ஸ்ரீ துரையவர்களுடனே எச்சரிக்க வேணுமென்று சொல்லப் போய்த் துரையவர்களுடனே நான் சொன்ன வயணமென்னவென்றால்: இப்படியா; நான் என் பேரிலே ஒரு பெத்திஸியோமெழுதி உங்களண்டைக்கு வரு கிறது. அந்தப் பெத்திஸியோமிலே எழுதியிருக்கிற காரியத்தை நீர் நன்றாய் விசாரிக்கவேணும்; அதன்பேரிலே நேர உண் டான பேரை நீர் தண்டனைபண்ணவேணும் சும்மாவிடப் போகாது என்று சொன்னேன். ஆனால், உன்பேரிலே என்ன நிமித்தியம் பெத்திஸியோம் எழுதப்போகிறார்கள். யார் அப்படி எழுதுகிறவர்கள்? அதென்ன வயணமென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: அந்தப் பெத்திஸியோம் உங்கள் கைக்கு வந்த பிறகு எழுதுவித்தவர்கள் பேர் சொல்லுகிறேன். இப்போது எழுதுகிறவர்கள் கிறிஸ்துவரெல்லாரும் கூடி எழு துகிறதாய் அதிலே எழுதுகிற வயண மென்னவென்றால்; சென் னப்பட்டணத்து எழுத்துக்காரரை யழைப்பித்து வைத்துக் கொண்டு கும்பினீர் எழுத்துப்புடவை எல்லாம் அவர்கள் வழியிலே திருவிற்கிறபடியினாலேயும் உள்ளூர் எழுத்துக்கார ருக்குக்கொடாமல் அவர்கள் வழியாய்த் திருகிறதிலே வெகு ஆதாயம் கொண்டுபோகிறானென்றும், ஊரிலே சூதாடுகிற வர்களைப் பிடித்துக்கொண்டுவந்து உள்ளுக்குள்ளே அவரவர் கையிலே வாங்கிக்கொண்டு விட்டுவிடுகிறானென்றும், இதல்லா மல் சேவகர் சம்பளத்திலே ஆயிரம் இரண்டாயிரம் சம்பா தித்துக்கொண்டாரென்றும், முன்னே கனகராய முதலியார் நாளையிலே நியாயப்பிரகாரம் நன்றாய் நடந்ததென்றும், இப் போது ஒருவழியிலே விட்டு நடப்பிக்கிறபடியினாலே தன் சொந்தக் காரியத்திலே தாக்ஷண்யமில்லாமல் வெகுபணம் சம் பாதித்துப்போட்டானென்றும் இந்த உத்தியோகத்தை ஒரு கிறிஸ்துவன் வழியிலே நடப்பித்தீர்களானால் உங்களுக்கு மோட் சமும் உண்டு, காரியமும் உண்டென்கிறதாய் எழுதியிருக்கிற சாடையாய்க் கேள்விப்பட்டேன். பின்னையும், என்னென்ன

எழுதியிருக்கிறார்களோ தெரியாதென்றும் சொன்னேன். அதற்கு அவர் நல்லது, வந்த பிற்பாடு அவனுக்குப் புத்தி வருத்திவிட்டோம் என்று சொன்னார்.

1747 ஆ ஒக்தோபர் மீ 6 உக்த பிரபவ ஸ்ரீ புரட்டாசி மீ 23 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் சென்னப்பட்டணத்திலேயிருந்து வந்த சேதியென்னவென்றால்: நாலைந்து நாளைக்கு முன்னே தேவனாம் பட்டணத்திலேயிருந்து இது வழியாய்ப் போன இங்கிலீசுக் காரர்கப்பல்கள் எட்டும் திருவாமியூரண்டையிலே வந்திறங்கி யிருக்கிறார்களென்கிற சேதி வந்தவுடனே இவ்விடத்திலே யிருந்து முசியே தொந்தேல், முசியே புசு முதலான வெள்ளைக் காரர், குதிரை, கும்பினியும் (Shaikh Hasan) சேக்கசேன் மாயே சிப்பாய்கள், குதிரை கும்பினியும் பட்டணம் மட்டும் பனிரெண்டு மணிக்குச் சாகிப்போனார்கள்.

இதல்லாமல் இற்றைநாள் சேக்கு இப்ருஹீம் (Shaikh Ibrahim) மேட்டிலேயிருக்கிற சிப்பாய்கள் நூறு பேருமாகக் காரைக்காலிலேயிருந்து செஞ்சி வழியாய் வருகிற முசியே மொறேம் மற்றப்பேருக்கும் மற்றதாய் எதிரே போனார்கள்.

இன்றையதினம் தேவனாப்பட்டணத்திலேயிருந்து வந்த சேதிஎன்னவென்றால்: காரைக்காலிலேயிருந்து வந்த வெள்ளைக் காரர் வருகிறார்களென்கிற சேதி கேட்டுப் புதன்கிழமையன்று மல்லுராசாவும், சிறிதுபேர் ராணுவமுமாக மேற்கே பண்ணுருட்டி திருவிதி மட்டுக்கும் போனார்களென்கிற கபுறு வந்த வுடனே நான் போய் துரையவர்களுடனே சொன்னதின் பேரிலே சேக்கு இப்ருஹீமையும் (Shaikh Ibrahim) சேவகரையும் அனுப்பினது.

இற்றைநாள் சென்னப்பட்டணத்திலே யிருந்து வந்த சேதி என்னவென்றால்: சென்னப்பட்டணத்துத் துறையிலே யிருந்த நெப்புய்த்தின் (Neptune) என்கிற கப்பல்காரர் ராத்திரியிலே போயிருந்தபோது இங்கிலீசுக்காரர் கப்பல்காரர் நெப்புய்தின் கப்பலை ராத்திரியிலே போய்ப் பிடித்துக் கொளுத்திப்போட்டார்களென்றும், அதற்குக் கப்பித்தான்

பிளாக்கோரென்பவன் (M. Flacourt) கையாலே ஆகாதவ னென்று அவன் பின்னை ஒரு கப்பலை கிட்டவும், அந்தப்படியே போனதாகவும், அந்தக் கப்பல் கப்பித்தான் சாக்கிரதையாய் விழித்துக்கொண்டிருந்து பீரங்கியினாலே சுட்டவுடனே கோட்டையிலேயுமிருந்து பீரங்கினாலே சுட்டபடியினாலே பின் னிடைந்து அப்புறத்திலே வந்திருக்கிற சேதி வந்த பிறகுதான் இவ்விடத்திலே யிருந்து குதிரைக்காரரை அனுப்புவித்தது. இந்தக் குதிரைக்காரர் பயணப்பட்டுப் போகச்சே, நயினியப் பிள்ளைச்சாவடியண்டையிலே போகச்சே ஒரு சிப்பாயைக் குதிரை எடுத்துப்போட்டுப் பிராத்தைக் கிட்டே மெரித்துப் போட்டபடியினாலே நடக்கமாட்டாததினாலே பல்லக்கின் மேரிலே எடுத்துக்கொண்டு வந்து ஆஸ்பத்திரியிலே கொண்டு போய்ப் போட்டார்கள்.

இன்றையதினம் முப்பது பேர் சேவகரைச் சென்னப் பட்டணத்துக்கும் இதுக்கும் காதத்துக்கு மூன்று பேர் விழுக் காடு தபால் வைத்தார்கள்.

இற்றைநாள் சேக்கு இபுருஹீமை அழைத்து முசியே துக் கேன் அண்டைக்குப் போய் ஆயிரம் கடுதாசி வாங்கிக்கொண்டு வரச்சொல்லி அனுப்புவித்தேன். அவன் போய்க் கடுதாசியை வாங்கிக்கொண்டு ரங்கப்பிள்ளையைக் கேட்டால் அவரொன் றும் சொல்லவில்லை. கடுதாசி வாங்கிக்கொண்டு வரச்சொல்லு கிறேமென்று சொன்னர். நீர் அறிவீரா? எங்களை எங்கே அனுப்புவிக்கப் போகிறீர்களென்று கேட்டானும். அவனுக் குத்தெரியாதபடியினாலே முசியே துக்கேன், சேக்கு இபுருஹீமை (Shaikh Ibrahim) அழைத்துக்கொண்டு துரையண்டைக்குப் போய் இந்தச் சேவகர் நூறு பேரும் எங்கே போகிறார்கள் என்று கேட்டதின்பேரிலே துரையிருந்துகொண்டு ரங்கப்பன் சொல்லவில்லையாவென்று கேட்டாராம். அதற்கு அவனிருந்து கொண்டு, கடுதாசி வாங்கிக்கொண்டுவர உங்களுக்கு உத்தரவு சொல்லுகிறேமென்றும், சொல்லுமென்றும் சொன்னானும். அதன்பேரிலே நீ ரங்கப்பனண்டைதானே போ வயணம் சொல்லுவாரென்று சொல்லியனுப்பிவிட்டு முசியே துக்கேனைப் பார்த்து, பார்த்தாயா ரங்கப்பனுடைய புத்தியை மெத்தசியாது. அவனுடைய புத்திக்குச் சமானமில்லை. இப்படிப்பட்ட பெரிய காரியங்களுக்கெல்லாம் லாயக்கானவன். அவனிந்தக் காரியங்

களுக்குப் பாத்திரவானென்று சொன்னாராம். அந்தச் சேதி சேக்கு இபுருஹீம்தானே வந்து நம்முடனே சொன்னான்.

1747 ஆ ஒக்தோபர் மீ 7உ க்ஷய பிரபவ ஸு புரட்டாசி மீ 24உ சனிவாரம்.

இற்றைநாள் குவர்னதோரழைப்பித்துச் சொன்ன சேதி: சென்னப்பட்டணத்திலே யிருந்த நெப்புத்தீன் என்கிறகப்பலை இங்கிலீசுக்காரர் கொளுத்திவிட்டார்களே, அதிலே பிளாக்காரை (M. Flacourt) கப்பல் கப்பித்தானாக வைத்தபடியினாலே அப்படி நடந்தது. அவனில்லாதபோனால் அப்படி நடவாது; ஆனால் அந்தக் கப்பல்களண்டை கண்ட மாத்திரத்திலே கப்பலை விட்டுவிட்டுச் சலங்கிலே இறங்கி கரையிலே வந்துவிட்டான். அப்படி செய்த வேலைக்கு அவன் குற்றத்தைப் பொறுக்கக் கூடாதென்று சொன்னார். நல்லது இப்போது அவர்கள் சென்னப்பட்டணத்திலே போய் இரண்டு கப்பலிருக்குதென்றல்லவோ இத்தனை நடத்தியிருக்கிறார்கள். நல்லது, தேவனும் பட்டணம் இனிமேல் சாவாத்துமனாக நீக்க அறியாதென்று சொல்லி, திருக்காஞ்சி முதற்கொண்டு தேவனும்பட்டணம் மட்டுக்கும் மனுஷரை வைத்து ஆற்று ஆளர்களும் குண்டுக்குள்ளே யிருக்கிற பெண்ணையாற்றுக் கெடிலம் இந்த இரண்டு ஊற்றினுடைய அளவு அப்போதைக்கப்போது அழைக்கச் சொல்லி குண்டுசாலையிலே அவர்கள் மனுஷர்கள் எங்கெங்கே இருக்கிறார்களோ அந்தச் சமாசாரமும் அழைப்பிக்கச் சொல்லச் சொன்னதின்பேரிலே மலையப்பன் மனுஷரை அனுப்பச் சொல்லி அனுப்பவேண்டியதும் அப்போதைக்கப்போது கபுறு கொண்டுவரச் சொல்லவும் அனுப்புவித்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் மாயேயிலேயிருந்து பிராமணர் காகிதம் கொண்டுவந்தவர்கள் சொன்ன சேதி: மூன்று கப்பல்கள் வந்ததென்றும், இன்னும் ஐந்து கப்பல் சாமம் பத்து நாழிகையிலேயே காணுமென்றும் கப்பல்காரர்கள் சொன்னதாய்ச் சொன்னார்கள். துரை அந்தப் பார்ப்பாரைக் கப்பல் வந்த சேதியை யாருடனேயும் சொல்ல வேண்டாமென்று பத்திரமாய்ச் சொல்லிவைத்தார்.

1747 ஆ ஒக்தோபர் மீ 8 உ க்ஷய பிரபவ ஸு புரட்டாசி மீ 25 உ ஞாயிற்றுக்கிழமை

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போன விடத்திலே சந்தாசாயபு பெண்சாதி துரைக்குச் சாப்பாடு அனுப்புவிக்கிறோம். மத்தியானத்துக்குச் சாப்பிடவேணுமென்று உமக்கும் மதாமுக்கும் சலாம்பண்ணிச் சொல்லிவிட்டு வரச்சொன்னுளென்று ராசோ பண்டிதர் வந்து சொன்னர். அதற்குத் துரையவர்கள் சம்மதித்துக்கொண்டு, மதாமுக்கும் சொல்லச்சொன்னர். மதாமுக்குப் போய்ச் சொன்னர்கள். மதாமும் அங்கீகரித்தாள். அப்பால் பின்னையும் இரண்டு நாழிகைக்கு அந்தப்படிக்குச் சாப்பாடு வந்தது. அதை வாங்கி அவர்கள் மோகாபடிக்கு ஒபிசியேலே வைத்துப் பத்து ரூபாய் அவர்களுக்கு நன்கொடை கொடுக்கச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக்குக் கொடுத்தார்கள்.

இமாம் சாயபு குமஸ்தா அவர் அவாய் சாயபு அனுப்ப சொக்கப்பமுதலி வந்து சொன்னதென்னவென்றல். இன்று எட்டாம் நாள் தங்கள் கையிலே அனுப்புவித்துக்கொண்டு வந்தவர் இரண்டு மூன்று நாளையிலே ஒரு பொழுது தீர்ந்து குதுபா பண்டிகையில் குதுபா படிக்கிறதினலே ஒன்று ஆற்காட்டிலே எசமான் பின்னையும் பந்துக்கள் முதலானவர்கள் கூட இருக்கத்தக்கதாக அவர்களிடமாகக்கூட இருக்கவேண்டியது. அல்லவென்றல் நீர் என்றும் இமாம்சாயபு அவர்களென்றும் பேதகமில்லாதபடியினலே உங்களிடத்திலே இருக்க வேணுமென்று யோசனைபண்ணி ஆற்காட்டுக்கானல் போகக் கூடாதென்று இங்கேதானே பண்டிகை முடித்தபடியினலே இன்றைக்கு ஊருக்குப் போகிறோமென்று உத்தாரம் கேட்கச் சொன்னர் என்றும், நீர் இமாம்சாயபு அவர்களுக்குச் சர்தாவாய் நாங்களெண்ணி இருக்கிறபடியினலே நீங்கள் பல்லக்கு முதலான வெகுமதிகள் அநேகம் செய்ததை நாங்கள் மறக்கத் தக்கதில்லை. உங்கள் வேலைக்காரனயிருந்து உங்கள் வேலையிலே ஆஜராயிருக்கிறேனென்று சொன்னரென்று சொல்லி. அப்பால் சென்னப்பட்டணத்திலே இமாம்சாயபு அவர்கள் வீட்டிலே இந்த தினுசை முசியே துலேராமவர்கள் சோராவாரியாயெடுத்துப் போனர்கள். நபாபு இமாம்சாயபு அவர்களுடைமை என்றும், தங்களுடைமை என்றும் பேதகமில்லை. ஆனபடியினலே தாங்களெடுத்துக்கொண்டா-லும் சரி

கொடுத்தாலுஞ்சரி, நாங்கள் என்று சர்க்கார் உங்களுக்கும் அவர்களுக்கும் சர்க்காரானபடியினுலே நீங்களெப்படி உத்தாரம் கொடுக்கிறீர்களோ அப்படி நடந்து கொள்ளுகிறோமென்று சொல்லச் சொன்னுரென்று சொன்னுர். அதற்குத் துரையவர்கள் சொன்னது: இங்கே பண்டிகைக் கொண்டாடினது மெத்தவும் சந்தோஷமாச்சுது. இந்தப் பண்டிகைக்கு வந்ததே இன்னும் மோகரு பண்டிகைக்குப் பல்லக்கு (சுவாம்) கெசம் கொடுப்பாரென்று சொல்லி, அவர் ஊருக்குப் போகிறதற்குச் சுவாமியை நல்ல யாத்திரையைக் கொடுப்பார். சீக்கிரமத்துக்குப் போய் இமாம்சாயபு அவர்களுக்குச் சாகீர் நிமித்தியம் வழுதாவூர் தாக்கலுக்கும் வில்லிய நெல்லூர் தாக்கலுக்கும் நிமித்தியம் எழுதியிருக்கிறதே அதை இனம்பண்ணி அனுப்பச்சொல்லி எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதி அனுப்பி, காரியம் அனுகூலமாகிச் சேதி வந்தாலும் உமக்கு நல்ல வெகுமானம் சாவகாசமாய் நடக்கத்தக்கதாகக் கொடுக்கிறோமென்று சொல்லி, அப்பால் சென்னப் பட்டணத்திலே இமாம்சாயபு வீட்டிலேயிருந்த தினுசு முசியே துலோராம் எடுத்துப் போய்க் கோட்டைக் கிடங்கிலே வைத்துக் கொண்டுவிட்டதாய்ச் சொன்னீர்களே, அந்தச் சரக்கு உங்களுடையதானுல் நாங்கள் கொடுத்துவிடுவோம். அன்னியர் உடைமையை உங்களதுஎன்று சொல்லுகிறீரென்றும், அதிலே இங்கிலீசுக்காரர் சட்டைகள், குல்லாய்கள் முதலானதுகள் இருந்ததென்றும், அதுகள் அவசரமாய்க் கட்டினதுகளும், துண்டு துண்டாய், அலங்கோலமாய்ப் போட்டிருக்கிறதென்றும் இப்படி எழுதிவந்தபடியினுலே உங்களுடைமையானுல் இப்படியிருக்கக் கவையில்லை. அன்னியர் அந்தவூரார் யாராரோ உங்களிடமாகக் கொண்டுவந்து வைத்தால் அதை நீங்களவர்களுக்காக மேல் வாங்கிக்கொண்டு உங்களுடையது என்று சொல்லுகிறீர் என்று சொன்னதற்கு, சொக்கப்பமுதலி சொன்னது: இப்போது நாங்கள் எங்களுடையது என்று சொல்லுகிறதல்லவே. கோட்டையைப்பிடித்த மறுநாள் மூன்றும்நாள் தானே முசியே லபூர்தோனே வீட்டைச் சோதித்துப் பார்த்து ஒரு லீஸ்துரு எழுதிப்போனுன். அப்பால் முசியே தெப்ரமேனி நாளையிலே ஒரு தரம் சோதித்து ஒரு லீஸ்துரு எழுதிப்போனுர்கள். அந்த இரண்டு லீஸ்துரும் பார்த்தால் இப்போதிருந்து எடுத்துப்போன தினுசுக்கு லீஸ்துரும் எழுதியிருக்குமே,

அதைப் பார்த்தால் எங்களுடையதென்றும், அன்னியருடைய தென்றும் தெரியும் என்றும், அது எங்களுடைய உடைமை என்கிறது சந்தேகமில்லை. அப்பால் நீங்களெப்படிச் சொல்லு கிறீர்களோ அப்படிக் கேட்கிறேமென்று சொன்னதின்பேரிலே துரை சாடையாயிருந்தார். சொக்கப்பமுதலியைப் பார்த்துத் துரையுடனே சொன்னப்போலே ஆச்சுதே. இனிமேல் நடவும் அனுப்புவித்துக்கொண்டிருமென்று சொன்னேன். நல்லது என்று சொக்கப்பமுதலி சவரக்ஷணைபண்ணினர். துரையும் போங்கோளென்று உத்தாரங்கொடுத்தார் அப்பால் துரை என்னைப்பார்த்து இவர்களுடைமையானல் அதிலே இங்கிலீசுக் காரருடைய உடைமை யிருக்குமா? இதல்லாமல் அதை எடுத்துக்கொண்டு வந்து இரண்டு மூன்று மாதமாச்சுதே. இந்தமட்டுக்கும் சாடை சாடையாய் எச்சரித்துக்கொண்டிருந்த மாத்திரமே யல்லாமல் இவர்களுடைய உடைமை மெய்யானல் இதுவரைக்கும் இவர்கள் மனம் பொறுக்கிறதேது என்று சொன்னதற்கு நான் சொன்னது: கோட்டையைப் பிடித்த வுடனே முசியேலபூர்தோனே போய்ப் பார்த்து ஒரு லீஸ்துரு எழுதிக்கொண்டு வந்தார். பிற்பாடு முசியே தேப்ரமேனி நாளை யிலே ஒரு தரம் வந்து சோதித்துப் பார்த்து லீஸ்துரு எழுதிக் கொண்டு போனர்கள். பிற்பாடு எடுத்துக்கொண்டு போகிற போது ஒரு லீஸ்துரு எழுதிக்கொண்டு போனர்கள். அதையும் முன்னே எழுதினதையும் பார்த்தால் தெரியவருமென்று அவர் கள் கெட்டியாய்ச் சொல்லுகிறர்கள். இதல்லாமல் அவர்கள் சொல்லுகிறதென்னவென்ருல்: எங்களுக்கு இமாம் சாயபு அவர்களே துரை; துரையவர்களே இமாம்சாயபு எங்களுக்கு, அது பேதகமில்லை, நாங்கள் வந்து சர்க்காருக்குக் கொடுத்தாலும் வாங்கிக்கொள்ளுகிறேம்; கொடாவிட்டால் நீங்கள் சொன்னதை எழுதி அனுப்பிவிடுகிறேமென்று சொல்லுகிருர்களென்று சொன்னேன். அதற்கு ஒன்றும் உத்தரவு சொல்லாமல் மௌனமேஷம் எண் ணிக்கொண்டிருந்தார். அப்பால் பின்னையும் ஒரு நாழிகை பொறு, சென்னப்பட்டணத்திலேயிருந்து தபாலிலே கடுதாசி வந்தது. அதிலே எழுதியிருந்த சேதி யென்னவென்ருல்: இங்கி லீசுக்காரர் கப்பல் வந்தது ஒன்பது சுலுப்பு ஒன்றும் துரைக்குநேராய் வந்து அப்புறம்பாயெடுத்து ஒசந்து ஈசானிய மூலையிலே ஓடிப்போய்விட்டானென்று முசியே துலோராம்

எழுதி அனுப்புவித்த கடுதாசியை வாசித்துப்பார்த்துக்கொண்டு அந்தக் கடுதாசியை கையிலே பிடித்துக்கொண்டவாக்கிலே யிருக்கிற விடத்துக்கு வந்து சொன்னர். அதற்கு நானிருந்து கொண்டு உம்முடைய யோகம் என்னப்பட்டது இங்கிலிசுக் காரருடைய புத்தியெல்லாம் கலங்கியும் உமக்குக் கீர்த்தியும் அவர்களுக்கு அபகீர்த்தியும் வருமென்று சொல்லி நான் நாளது வரைக்கும் சொல்லிக்கொண்டு வரவில்லையா? அப்படியே சும் மாயிருந்தபடியேயிராமல் வருகிறுப்போலேயும் போகிறுப் போலேயும் காண்பித்து அப்புறம் ஓடிப்போகவும் இதிலேயும் உமக்கொரு கீர்த்தியும் அவர்களுக்கு அபகீர்த்தியும் வரத் தக்கதாகப்பண்ணிக்கொண்டு போனர்களென்று சொன்னேன். நகைத்துக்கொண்டு அறைக்குள்ளே போய்விட்டார். அவ் விடத்திலேயிருந்து என்னை அழைத்தார். நான் எழுந்திருந்து போனேன். போனவுடனே செயந்திரராமய்யனுக்கு இப்போது தானேயெழுதி அனுப்புவித்து தானியதவசம் நெல்லு நீர் என்ன என்ன காய் தானியம் வருமோ அதுகளெல்லாம் அந்தப்படிக்கு பாறு படகுமேலே ஏற்றிக்கொண்டு கூடலூருக்குப் போகிற தென்று சொல்லி எண்பித்து இவ்விடத்திலே கொண்டுவந்து சுகமாக ஏறிக்கொள்ளலாமென்றும் இங்கிலீசுக்காரர் கப்பல் களெல்லாம் ஓடிப்போய்விட்டது. இனிமேலவர்கள் கப்பல் இவ்விடங்களிலேயில்லை. அந்தப்படிக்கு சிக்கிரமத்துக்கு எழுதி அனுப்புவித்துத் தானியத்தை யழைப்பிக்கச் சொல்லச் சொன் னர். அந்தப்படிக்கு செயந்திரராமய்யன் பேருக்குக் கடுதாசி எழுதிச் சென்னப்பட்டணத்துக்குத் தபாலிலே அனுப்புவித் தோம்.

இப்பால் வாசுதேவபண்டிதர் வந்து துரையுடனே சொன்ன தென்னவென்றல்: வடக்கேயிருந்து வந்த புகையிலை மைலாப்பூரிலே வந்திருக்கிறது. அது இப்புறம் வந்து சேருகிற தற்கு அவ்விடத்துக் காகிதம் பத்திரம் எழுதி அனுப்பி அழைப் பிக்கவேணுமென்று சொன்னர். அதன்பேரிலே துரை யென்னைப் பார்த்து இப்படிப்பட்ட காரியங்களுக்கு எல்லாம் அடிக்கடி என்னை வருத்தப்படுத்தவேணுமா? இன்று முதல் இப்படிப்பட்ட காரியங்களென்ன உண்டோ அதுக ளெல்லாம் நீதானே விசாரித்துக்கொண்டு அதுகளுக்குக் காகித பத்திரங்களெழுதி அனுப்பி எந்தக் காரியங்கள் எப்படி

செய்யவேணுமோ அப்படி நடத்திக்கொள்ளப் போகாதா? இதற்கெல்லாம் நான் உத்தரவு சொல்லவேணுமோ என்று சொன்னார். அதன்பேரிலே வாசுதேவபண்டிதர் வந்து கோபால கிருஷ்ணய்யனைச் சென்னப்பட்டணத்துக்குக் காகிதம் எழுதிக் கொடுங்கோளென்று சொல்லிப் பேசிக்கொண்டே வெளியே புறப்பட்டு வந்தோம். நாளைக்கு எழுதியனுப்பிவிடுவோமென்று சொல்லிவிட்டு வீட்டுக்குப்போய் ஸ்நானம்பண்ணிச் சாப்பிட்டு உட்கார்ந்துகொண்டு பாக்குப் போட்டுக்கொண்டிருக்கச்சே அன்னபூரணய்யன் வந்து சொன்னதென்னவென்றால்: லூய்ப் பிரகாசன் வந்து தன்னை காரைக்கால் சாமியார் அழைக்கிறார் என்று சொல்லி அழைத்துக்கொண்டுபோய்க் காரைக்கால் பாதிரியார் முன்னே விட்டார். நான் போனவுடனே அவர் என்னைப் பார்த்து, நீ மெத்த நல்லவர், எங்கள் வார்த்தையைத் தட்டுகிறதென்கிறது இல்லை என்று எங்களுக்குத் தெரியும். நாம் உம்மை ஒரு மன்னுப்புக் கேட்கிறோம். அந்த மன்னுப்புக்கு வார்த்தைப்பாடு கொடுக்கவேணும் என்று கேட்டதாகவும், அதற்கு என்னைத்தொட்டு ஆகவேண்டிய காரியம் உங்களுக்கு என்ன இருக்கிறது என்று கேட்டதாகவும், அதன்பேரிலே ரங்கப்பிள்ளை உம்முடைய வார்த்தையைத் தட்டாமல் கேட்கிறாராம். நீ மெத்தவும் அவருக்குச் சொல்லி இந்த வேதபுரீஸ்வரர் கோவிலை மாத்திரம் இடித்துப் போடச் சொல்லுமென்றுச் சொன்னாராம். அதே ராதய்யா நான் சொல்லுகிறதுபோலே அவர் கேட்கிறதேது. அந்தக் கோவிலை இடிக்கிறதற்கு யாராலேயும் ஆகாது. அப்படி இடித்துப் போடுகிறதானால் முன்னே கனகராயமுதலி இருந்தாரே அவர் இடித்துப்போடலாகாதா? அதற்கு இவராலே ஆகாதது, நானும் சொல்லப்போகாதென்று இவர் சொன்னதாகவும் அதன்பேரிலே கனகராயமுதலி கிறிஸ்துவன் அல்லாமலும் இவரைப்போலே அவர் கட்பாசல்லா ஒரு நியாயத்துக்குப் பிரித்து அடைத்துக்கொள்ளமாட்டான். இவர் ஒரு காரியத்திற்கு ஆயிரம் விதத்திலே பிரிசு அடைத்து எதிராளி வாயை மூடத்தக்கதாக உளவடைத்து நியாயம் சொல்லுவார். இவர் எப்படிச் செய்யவேணுமென்றாலும் செய்யமாட்டார். அந்தப்படிக்குத் தெரியப்படச் சொல்லச்சொல்லி அந்தக் கோவிலை இடித்துப்போட்டுவித்திரானால் எங்கள்

கோவிலிருக்கிற மட்டுக்கும் உம்முடைய நன்றி மறவாமல் யிருப்போம் என்று அவர் சொன்னதாகவும் இந்தப்படிக்கு வந்து என்னுடனே சொன்னர். சொல்லிப்போட்டு சற்றே நகைத்துக்கொண்டு வழவழ கொழகொழ என்று அவர்களிப்படி யெல்லாம் சொல்லுகிறார்களே நமக்கென்ன அதனாலே என்று யிப்படியாக சொல்லவந்தார். இவரிப்படி சொல்லவந்தபோதே காரைக்கால் சுவாமியாருடனே அப்படியே செய்விக்கிறோ மென்று வார்த்தைப்பாடு கொடுத்துப்போட்டு வந்தாப்போலே காணுது.

1747 ஆ ஒக்தோபர் மீ 10 உக்கு பிரபவ ௵ ... ... சி மீ 27 உ

இற்றைநாள் செவ்வாய்க்கிழமை காலத்தாலே கொவர்ன தோர் வீட்டுக்குப் போனவிடத்திலே நேற்றையதினம் மால் தீவ் கப்பல் நகோதா கொண்டுவந்து கொடுத்துவைத்த இரண்டு கடல் தேங்காயும் குவர்னதோருக்கு கொண்டுபோய் காண் பித்து மால்தீவ் கப்பல் நகோதா கொண்டுவந்து கொடுத்து உங்களுக்கு காண்பிக்கச் சொன்னுர். தான் வந்து ரூபுரூபாய் விலை சொல்லுகிறேனென்று சொன்னுன் என்று சொன்னதற்கு என்கையிலே இரண்டு காயிருக்கிறது. முன் மால்தீவ் ராசா அனுப்பினது என்று சொல்லி அதை கையிலே வாங்கி இரண் டையும் பார்த்து மேசைமேலே வைத்தார். அப்பால் தேவனும் பட்டணத்திலேயிருந்து இங்கிலீசு எஸ்காதுரு சென்னப்பட்ட ணத்திலேயிருந்து அப்பால் போனது இன்னவிடத்திலேயிருக்கு தென்று கபுறுதெரியவில்லை. உனக்கேதாகிலும் சேதி வந்ததா வென்று கேட்டார். அந்தச் சேதியானுல் வரவில்லை. வங்காள கப்பலானுல் இங்கிலீஷ்காரருக்கு ஒரு கப்பல் வந்ததென்றும் அந்தக் கப்பல்காரன் பழவேற்காட்டிலிருக்கிற வெள்ளைக்கார ருக்கு சேதி சொன்ன தென்னவென்றுல்: இங்கிலீத்தோர்வி லிருந்து சண்டைக்கப்பல்களும் கும்பினீர் கப்பல்களுமாய் பத்து கப்பல் வங்காளம் வந்ததாகவும் அந்த கப்பல்கள் இவ்விடத் திற்கு சண்டை சரஞ்சாமுடனே வருகிறதாயும் கபுறு சொல் லிப்போட்டு. சென்னப்பட்டணத்திலேயிருக்கிற இங்கிலீஷ் கப்பல் எஸ்காதுரு கமாண்டோர் மேஸ்தர் தெரேபென்ஸ் கண்டு பேசிக்கொண்டு அந்தக் கப்பல் தேவனாம்பட்டணம்

துறை மூன்றாம்னாள் வைத்துப்பிடித்து சிறிது சொலுதாதுகளை யிறக்கினதாய் சேதி சொல்லுகிறதாய் கபுறு வந்து சொன்னார்களென்று சொன்னேன். அதற்கு துரையிருந்துகொண்டு இந்த இங்கிலீஷ்காரன் பழவேற்காட்டுக்கு வந்து சொன்ன கபுறு மெய்தான். அந்த கப்பல் தேவனும்பட்டணம் துறை வந்து சேர்ந்தது மெய்தான். இன்னம் நடக்கிற சமாசாரம் வருகிறது, வந்து சொல்லென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் பிக்கன்காலை அழைப்பிக்கிற மார்க்கம் என்ன உண்டோ அந்த மார்க்கம் பண்ணி அழைப்பிக்க வேணும். அதற்கு சகல பிரயத்தனமும் பாரென்று சொன்னார். உம்முடைய தயவைக்கொண்டு சகல பிரயத்தனமும் பண்ணுகிறேனென்று சொன்னேன் ஆனாலவன் வந்தால் அப்துல் ரஹிமானுக்கு நடப்பிக்கிறபடிக்கு நடப்பித்து ஆயிரம் வராகன் வெகுமானம் கொடுக்கிறேனென்றும் சொல்லி இதுக்கேத்தபிரயத்தனம் பாரென்று சொன்னார். நானும் பார்க்கிறேன். உம்முடைய அதிர்ஷ்டம் பார்கிறது உம்முடைய அதிருஷ்டத்தினாலே அவனிவ்விடத்துக்கு வந்தால் அவனும் கீர்த்திபெற்று மேன்பாடு பெறுவான் இல்லாவிட்டால் அவனுக்கு ஒரு பயம் செனித்து ஒரு பயம் கொடுத்து ஓடிப்போனானென்றும் அபகீர்த்தியை அடைவான். இது இரண்டிலே ஒன்று சுருக்கெதெரிடும். ஆங்கிலருக்கு நீர் நம்பப்போகிறீர் என்று சொன்னேன். அதற்கவர் நகைத்து அவன் தங்கள் ஆயுதத்துடனே அவ்விடத்திலிருந்து வந்தவர்களையுங்கூட கூட்டிக்கொண்டு வந்தானேயானால் இரண்டாயிரம் வராகன் தருகிறேனென்று அதற்கேற்ற மார்க்கமாய்ச் சொல்லியனுப்பு என்று சொன்னார். அதன் பிற்பாடு அவனுக்கு அடையாளம் தெரிகிறதற்கு நம்முடைய பாரிசு முத்திரை மோகர் ஒரு காகிதத்திலே போட்டு அடையாளத்துக்கு அனுப்பச் சொன்னார். அதற்கேற்ற மார்க்கம் பண்ணி அனுப்பி வைக்கிறேன் என்று சொல்லிவிட்டு வந்தேன்.

இற்றை நாள் நடந்தசேதி என்னவென்றால்: நேற்றைய தினம் அவாய்சாயபு அனுப்பின காகிதே சேதி என்றும், மதனாந்தபண்டிதனையும் கூட வைத்துக்கொண்டு துரைக்குச் சொன்னவிடத்திலே என்ன எழுதியிருக்குதென்று கேட்டதற்குச் சென்னப்பட்டணத்திலே இமாம் சாஹிபு வீட்டிலே

யிருந்த தினுசுகளெல்லாம் முசியே துலோராம் எடுத்துப்போய்க் கோட்டையிலே கொண்டுபோய் வைத்துக்கொண்டார்களென்று அந்த தினுசுகளைக் கொடுக்கச்சொல்லிக் கேட்டால், நீங்கள் தடைசொல்லிக்கொண்டு வந்தீர்கள். இமாம் சாஹிபு என்றும் நீங்களென்றும் பேதகமில்லை. ஆனபடியினாலேயும் நீங்களிப்போது சென்னப்பட்டணம் எங்களுடையதானபடியினாலே உங்கள் சொந்தப்பட்டணமாச்சுது என்றும் இங்கிலீசுக்காரர் நாளையிலே உங்கள் குமாரரிருந்தவன் இப்போது ஆற்காட்டுக்குப் போனது என்ன? இப்பவும் உம்முடைய குமாரனுக்கு எழுதியனுப்பிச் சென்னப்பட்டணத்திலேயாவது இவ்விடத்திலேயாவது வரச்சொல்லி எழுதி, சாயபு சாதார்ராவுக்கு இந்த வயணமாம்படியே எழுதி அனுப்புவித்தபடியினாலே அப்போதுதானே எடுத்துப்போகிற சரக்கு, தட்டு முட்டுகளை உங்கள் கூகிதத்தின் நிமித்தியம் வைத்துக்கொண்டோமேயல்லாமல் இல்லாவிட்டால் நாங்கள் அப்போதுதானே எடுத்துக்கொண்டு போகிறதல்லவா என்று சொல்லி இத்தியாதி நியாயங்கள் எல்லாம் சொன்னவிடத்திலே அதற்குத் துரையிருந்துகொண்டு அதிலே இங்கிலீசுக்காரர் சீர்மையிலே குளிருக்குப் போட்டுக்கொள்ளுகிற வெள்ளைக் குரும்பை ஆட்டுமயிரினாலே தைத்த குல்லாய்களும் இங்கிலீசுக்காரர் போட்டுக்கொள்ளுகிற கவாய்களும், சட்டைகளும், மேற்சோடுகளும் தருணத்தான பறக்காளா முதலாகிய வர்த்தகருடைய சரக்கேயல்லாமல் அதிலே துலுக்கருக்கான சரக்கு தினுசுகள் ஒன்றுமில்லை. அல்லவென்று துலுக்கருக்கான சரக்குத் தினுசுகள் கொஞ்சகஞ்சம் என்ன விருக்குதோ அதை மாத்திரம் கொடுத்துவிடச்சொல்லுகிறோம். அல்லவென்று அதை வாங்குகிறதில்லையென்றால் இந்த மட்டுக்கும் சென்னப்பட்டணத்திலே இமாம்சாஹிபு பேரைச் சொல்லி வெகு வர்த்தகருடைய சரக்கை அவர்கள் அப்புறப்படுத்தி இருக்கிறார்கள். அதற்குப் பதிலாக இந்தச் சரக்கை எடுத்துக் கொள்ளுவோமென்று சொன்னார். அதன்பேரிலே சொக்கப்ப முதலியாரிருந்துகொண்டு இமாம்சாஹிபு துரையவர்கள், துரையவர்களே இமாம்சாஹிபு அவர்களாய் நாங்களெண்ணிக் கொண்டிருக்கிறது. நாங்கள் சர்க்கார் அந்தச் சரக்கு அவர்களண்டைக்குப் போனாலென்ன, உங்களண்டையிருந்தால் என்ன, என்ன சொல்லுகிறீர்களோ அந்த இமாம்சாஹிபு

அவர்களுக்குச் சொல்லி அனுப்புவிக்கிறோம். அவர்கள் சொல்லி அனுப்புவிக்கிற விசேஷத்தை உம்முடனேசொல்லு கிறோம். அதுவேயல்லாமல் எங்களைத்தொட்டு என்ன இருக்கிறது என்று சொல்லிவிட்டு, பின்னையும் சொன்ன தென்னவென்றால்: சென்னப்பட்டணத்திலே எங்கள் பேரைச் சொல்லி நூற்றுக்கு 15, 20, 22. இந்தப்படி தீர்வை தீர்ந்துக்கொண்டு வெகு பேர் சரக்குகளைவிட்டிருக்கிறார்கள். அதற்கு வேண்டுமானால் கொண்டுவந்துவிடுகிறோம் என்று சொன்னார். பதிலாமைமாத்திரம் எங்கள்பேரிலே வைத்து எழுதிப்போட்டார்களென்றும் இப்படியாகச் சொன்னவிடத் திலே இந்த வார்த்தையெல்லாம் சொக்கப்பமுதலியாருக்குப் பார்க்கிற சாடைக்குச் சொல்லாதுபோலே யிருக்கவும், துரை அவர்களுக்கு அவர் சொன்ன சாடையெல்லாம் தெரியும்படி யாக மெலுக்குரையாய் அறியப்படுத்தினேன். அந்தச் சாடையை அறிந்து துரையவர்களும் மெலுக்குவைப்பட்டுச் சொக்கப்பமுதலியாரைக் கோபித்துக்கொண்டு அறைக்குள்ளே போய்விட்டார். அதன்பேரிலே நானவரைப் பார்த்து இந்த மட்டுக்கும் சால்சவாப்பு நடந்ததே, நாளை ஆகுதென்று சொல்லி அனுப்பிவிட்டோம். அவரும் நல்லதென்று சொல்லி அனுப்பு வித்துக்கொண்டு வீட்டுக்குப் போனார்.

இற்றைநாள் ஸ்ரீ துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே துரை யிருந்துகொண்டு தேவனாம்பட்டணத்துச் சேதி ஏதாகிலும் உண்டாவென்று கேட்டார், அதற்கு நான் சொன்னது. சென்னப்பட்டணத்திலே கண்டு மறைந்து போன கப்பல்கள் நாலைந்து நாளையிலே தேவனாம்பட்டணத்துக்கு வருமென்றும், அதிலே நாலு மூனுகப்பல் வங்காளத்துக்குப் போகுமென்றும் இப்படிச் சொல்லிக்கொள்ளுகிறார்கள் என்றும், தேவனாம்பட்டணத்தைச் சுற்றிலுமிருக்கிற கொத்தளங்களுக் கெல்லாம் குண்டு மருந்து ஏற்றுகிறார்களென்றும், இதல்லாமல் இரண்டு மூன்று நாளைக்கு முன்னே போன கப்பல் அரிசியை இறக்கிப்போட்டு மறுபடி பங்காளத்துக்குப் போகிறதற்கு உப்பு ஏற்றுகிறார்களென்றும், வெளியிலே யிருந்து ஆடு மாடு கள் பன்னிகள் விஸ்தாரமாய்க் குண்டுக்குள்ளே வருகிற தென்றும், மற்றப்படி அவர்களும் சண்டை முஸ்தீதாயிருக்

கிருர்களென்றும், பெண்ணையாறு தண்ணீர் மட்டாயிருக்கிற தென்றும் இப்படியாகக் கேள்விப்படுகிறது என்று சொன்னேன். இதல்லாமல் நாசற்சங்கு சேதி என்னவாகிலும் உண்டாவென்று கேட்டார். நாசற்சங்கு மைசூரின்பேரிலே வந்து இறங்கி யிருந்தவர்கள் இருபத்தைந்து லக்ஷம் வராகனுகத் தீர்த்துக்கொண்டு அப்புறம் இருக்கப்பட்ட கந்தனூர் சிறப்பை மற்றுமுண்டான சுவாவுகளை அவரவர் கில்லாவிலே அவரவரைப் போய்ப் பத்திரமாயிருக்கச்சொல்லி அனுப்பிவிட்டு அவருடைய தகப்பனுருக்குச் சரீரம் சொஸ்தமில்லை என்கிறதாய் ஒளரங்காபாத்துக்குப் போகிறதாக ஒரு மச்சிலி மைசூர் விட்டு இப்புறம் வந்த காரியமாய்ச் சொல்லுகிருர்களென்று சொன்னேன். இதல்லாமல் முத்தாலுநாய்க்கனும் பின்னையும் இங்கிலீசுக்காரர் மனுஷர் தண்டுக்குப் போனவர்களென்ன? இன்னும் வரவில்லை என்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: இவர்கள் கொண்டுபோன வெகுமானத்தை அவர்கள் வாங்கிக்கொண்டு போனதற்குச் செறிக்கிற நிமித்தியம் ஆற்காட்டுச் சபைக்குத் தாக்கீது எழுதி அனுப்புவிக்கிரும். அவர்களும் மற்றது அனுப்புவிப்பார்கள் என்று சொல்லி அவர்கள் பிறகே இரண்டு டலாய்த்து அனுப்பிவிட்டுப்போய்விட்டார்களென்று சொன்னேன்.

இற்றைநாள் சாயங்காலம் நடந்த சேதி என்னவென்ருல்: துரையவர்கள் என்னை யழைத்து முன்னுலே தேவனும்பட்டணத்துக்குப் பரஸ்பரமாய்ப் போகிற கடுதாசி ஓலைகளைப் பிடிக்கச்சொல்லி யிருந்து பிற்பாடு வேண்டாமென்று சொல்லி இருந்தோமே, இப்பவும் முந்தினபடிக்கு வெளியிலே சேவகரை வைத்துக் கடுதாசி ஓலைகளைப் பிடிக்கச் சொல்லி உத்தாரம் கொடுத்தார்கள். அந்தப்படியே ஐம்பது சேவகரைப் பயணம் பண்ணி யிருக்கிறேன். நாளைய காலமே அனுப்புவிக்கிறேன். இந்த நாள் மகா நவமி பூசை பண்டிகை.

*1747* ஆ. ஒக்டோபர் மூ *12* உக்கு பிரபவ ௵ புரட்டாசி மூ *26*உ குருவாரம்.

இற்றைநாள் காலமே நான் துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே துரையவர்கள் சொன்னது: ராத்திரி பனிரெண்டடித்து ஒரு மணிக்குத் தபாலிலே கடுதாசி வந்ததே

அதிலே எழுதிவந்த சேதி: முன் சென்னப்பட்டணத்து துறையிலே கண்டு மறைந்து போச்சுதே கப்பல், அந்தக் கப்பலிலே ஆறு கப்பல் மறுபடியும் காணுதே என்று எழுதி வந்ததே என்று சொன்னர். அதற்கு நான் சொன்னது: கரை துறைமுடிய இருக்கிற சேவகரும் அந்தச்சேதி வந்து சொன்னர்கள். அது மெய் தானென்று சொன்னேன். அதிலே ஒரு கப்பல் ஓடிவந்தது. இந்த ஊர் மார்க்-மோய்க் கூட-ஹாருக்கு ஓடிப்போய்ச் சாயங் காலம் ஆறரை மணிக்கு வைத்துப் பிடித்து ஒன்பது பீரங்கியும் போட்டான்.

1747 ஆ ஒக்தோபர் மீ 13 உ க்கு பிரபவ ஞு புரட்டாசி மீ 30 உ

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே சென்னப்பட்டணத்திலே காண்பித்த கப்பல் சேதியேதாகிலும் உண்டா என்று கேட்டார். தபால் சேவகர் வந்து சொன்ன சேதி யென்னவென்றல்: அந்தக் கப்பல் மறைந்துபோச்சுதே என்று சொல்லுகிருர்களென்று சொன்னேன். அதற்குத் துரையவர்கள் சொன்னது: இந்தச் சேவகரிருக்கிறது பள்ளம், கப்பலிருக்கிறது உயர்ந்திருக்கிறது. அவர்கள் போனதில்லை. உயர இருக்கிருர்களென்று சொன்னர்.

1747 ஆ ஒக்தோபர் மீ 15 உ க்கு பிரபவ ஞு அற்பசி மீ 2உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை கோவிலுக்குப் போய் வந்தபடியினலே நான் கிடங்கிலேயிருந்து வர 9 மணி அடித்தது.

இற்றைநாள் நடந்த சேதி: குவேர்னமாவுக்கு வந்த பிற்பாடு குவர்னதோர் நேற்றையதினம் காலமே வந்தக் கப்பல் அஞ்சாமுக்குப் பாயெடுத்ததே, பின்னை ஒரு கப்பல் எவ்விடத்துக்குப் போகுதென்று கேட்டார். அச்சை முதலான ரேவுகளுக்குப் போகவேணுமென்று உப்பு, புகையிலை, புடவை முதலானது, ஏருது, இரண்டு மூன்று நாளையிலே பாயெடுக்கும் என்று சொல்லி அப்பால் சென்னப்பட்டணத்துக்கு அப்புறம் பழவேற்காடுக்குச் சமீபத்திலேயிருக்கு தென்று மிதற்குத்

தேவனும்பட்டணத்திலேயிருந்து நாலு நாளைக்கு முன்பாக இரண்டு சலங்கின் பேரிலே நூறு சொலுதாதுகளை ஏற்றி இங்கிலீசுக்காரர் இஸ்காதுருக்கு அனுப்புவித்ததாகச் சேதி வந்ததாய்ச் சொன்னேன். நல்லதென்று சொல்லி, சதுரங்கப்பட்டணத்திலிருந்து கயிறு, பலகை, உத்தரங்களுக்கு எழுதி வந்ததைப் பிரஞ்சுபடுத்தி யெழுதி வரச்சொன்னார். அந்தப்படிக்கு எழுதுவித்து துரை கையிலே கொடுத்தேன். அதைப் பார்த்துக் கொண்டு மறுபடி என்கையிலே கொடுத்து நாளை காலத்தாலே கொண்டுவரச் சொன்னார். மற்றப்படி விசேஷமில்லை.

அப்துல்ரஹிமான் வந்து தேவனும்பட்டணத்திலேயிருந்து பிக்கன்கான் குவாடுதியிலிருந்தவர்கள் எண்பது பேர் வருகிறார்கள் என்று கபுறு வந்தது. அந்த ஆள் பிறகே வருகிறானென்று சொல்லிவிட்டுப் போனான். பனிரெண்டு மணி அடித்தது, நான் புறப்பட்டு வீட்டுக்குப் போனேன். ஒன்றரை மணிக்கு அப்துல் ரஹிமான் துரையண்டைக்கு வந்து தேவனும்பட்டணத்திலே இருந்து வந்த டலாயித்தர் சொன்னது: பிக்கன்கான் குவாடுதியில் இருந்து வருகிற மாயே சிப்பாய்கள் எண்பது பேரும் உம்முடைய கவுல் கேட்கிறார்கள் என்று கேட்டதற்குப் பிரஞ்சு வார்த்தையிலே எழுதி அதிலே பார்சு முத்திரை பெரியமோகரி பண்ணுகிறதற்கு மோகரா என்னைக் கேட்டனுப்புவித்தார். அப்போது சாராயக்கிடங்கிலிருக்கிற பீரோ சாவி எளச்சியப்பன் வசத்திலே இருந்தபடியினாலேயும், அப்போது நானும் வீட்டிலே இருந்தபடியினாலேயும். அப்போது எளச்சியப்பன் வீட்டிலேயும் கிடங்கிலேயும் காணாதபோனபடியினாலேயும் வீராநாயக்கனை அனுப்பிக் கிடங்கிலேயிருந்த சாயுமான பெட்டியைக் கருமானைக்கொண்டு திறப்பித்துப் பெரிய பாரிசு மோகர் எடுத்துத் துரையண்டைக்கு அனுப்பிவைக்கச் சொல்லி வீரா நாயக்கனை அனுப்பினேன். அந்தப்படிக்கு அந்தப் பெட்டியைக் கருமானைக்கொண்டு திறப்பித்துப் பெரிய மோகர் எடுத்துக் கும்பினீர் சேவகர் கையிலே கொடுத்துக் கொண்டு போய்க் கொடுக்கச் சொன்னான். அதைத் துரை வாங்கிப் பார்த்து அதனாலே முத்திரைப்போடக்கூடாதபடியினாலே தம்முடைய கையில் சின்ன முத்திரையிலே பாரிசிலே தம்முடைய பேரு வேட்டியிருக்கிறதே அதனாலே அரக்கு முத்திரைப் போட்டுக் கொடுத்தனுப்புவித்தார். அந்தக் கவுலை அப்துல்

ரஹிமான் வாங்கிக்கொண்டு தேவனும்பட்டணத்துக்கு அனுப்பு விக்கிறேமென்று வாங்கிப்போனுன்.

சாயங்காலம் ஆறு மணிக்கு மாயே காகிதம் வந்தது. அதிலே மாயேயிலிருந்து மூன்று கப்பல் பாயெடுத்து ஓடி வந்த தாய்ச் சேதி. அப்பால் ராத்திரி ஏழுமணி மணிக்குச் சமுத்திரத்திலே இரண்டு பீரங்கிச் சத்தம் கேட்டபடியினுலே, சாயங்கால வேளையிலே யிருந்து வந்த காகிதத்திலே தோடுந்தலேன் இஸ்காதருலே மூன்று கப்பலும் இந்தக் காகிதம் புறப்படுகிறதற்கு முன்னமே, நாலு நாளைக்கு முன்னமே பாயெடுத்த சேதி எழுதி வந்தபடியினுலே. இந்தக் காகிதம் பன்னிரண்டாம் நாள் வந்த படியினுலேயே ஆகபதினுறு நாளாச்சுதே கப்பல் புறப்பட்டது என்று இந்தப் பீரங்கிச் சத்தம் நம்முடைய கப்பல் வந்து சேர்ந்த அடையாளம் போட்டதாகவேணுமென்று யோசனை பண்ணி, கடற்கரைக் கொத்தளத்திலே யிருக்கிற 24 ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கியிலே குண்டுபோட்டுக் கெட்டித்திருக்கிறதே அதிலே ஒன்றைச் சுடச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக்கு ஒரு பீரங்கிச் சுட்டார்கள். அப்பால் குவர்னதோர் கொத்தளத்தின்பேரிலே போயிருந்து சமுத்திரக் கரையிலே கிடக்கிற கட்டைக் குத்திபொரைக் கொளுத்தி விடச்சொல்லச் சொன்னுர். அதைக் கொளுத்தி வெளிச்சமான பிற்பாடு பின்னையும் இரண்டு பீரங்கி சப்தம் கேட்டது.

அதன் பிறகு பின்னையும் ஒரு பீரங்கி கடற்கரை கொத்தளத்திலே குண்டுபோட்டுச் சுடச் சொன்னுர். அந்தப்படிக்கு தாம் கிட்டேயிருந்து சுட்டார்கள். அப்பால் இரண்டு பீரங்கி சப்தம் கேட்டது. தெற்கே கேட்டபடியினுலே இது தேவனும்பட்டணத்துச் சாடைபோலேயிருக்குதென்று பத்து மணிக்கு இறங்கி வீட்டே போனுர். நானும் பத்து மணி மட்டுக்கும் பாக்குக் கிடங்கிலேயிருந்து வீட்டுக்குப் போனேன்.

1747 ஆ. ஒக்தோபர் மீ 17 உ. க்ஷய பிரபவ ஹு அற்பிசி மீ 4 உ. மங்களவாரம்

இற்றைநாள் பகலேக்குமேலாக மூன்று மணிக்கு நடந்ததென்னவென்றுல்: நம்முடைய முத்து வந்து சாயங்காலம் ஏழு மணிக்கு நான் பாக்குக் கிடங்கிலேயிருக்கச்சே சொன்ன

படிக்கு எழுதின வயணமாவது: ஆனந்தரங்கப்பன் பேரிலே மதாம் குவர்னதோர் அண்டையிலேயிருக்கிற வற்லாமும் (Varlam), சவரிமுத்துமுதலி மருமகன் முத்துகுமாரனும், சடையப்பமுதலி மகன் சாமிநாதனும் பெத்திசியோம் எழுதுவித்து சிஞ்சோர் குவர்னதோர் சென்ருல் அவர்களுக்குக் கொடுக்க யோசனைபண்ணி எழுதுவித்துக்கொடுத்த வயணம்:

1-வது மகாநாடு கூட்டுவித்து, தமிழர் கோவில் நிமித்தியம் துரையவர்களிடத்திலே வந்து பிராது பண்ணுவித்தது ஒன்று.

2-வது எழுத்துப் புடவை கும்பினிருக்குத் தீருகிறதை உள்ளூர் எழுத்துக்காரர் பட்டாணியே கிடைக்கத்தக்கதாக அவர்கள் கையிலே கொடாமல் சென்னப்பட்டணத்து எழுத்துக்காரரை அழைத்துத் தருவிக்கிறபடியினுலே அதிலே ஆயிரம் வராகன் பிரயோசனம் உண்டென்று எழுதின சம்மதி.

3-வது சூதுக்காரரைப் பிடித்து அவர்கள் கையிலே சிறிது பிரயோசனப்பட்டுத்தான் தானே தண்டித்து அனுப்பிவிட்ட சம்மதி.

4-வது மலையப்பன் சேவகரிலே 50 பேர், வீராநாயக்கன் சேவகரிலே 40 பேர், சேக்கு இபுராஹீம் சேவகரிலே 30 பேருக்குப் படி சம்பளத் தன்றையதினம் எண்ணிக்கைக்கு மாத்திரம் கொண்டுவந்து கூலியாள்களை விட்டு எண்ணிக்கைக்கொடுத்து அந்த ஆதாயம் கொண்டுபோகிறதாய் எழுதி இதற்குச் சாக்ஷியம் மலையப்பன் சேவகருக்குச் சாக்ஷி முத்து, சேக் இபுருஹீம் சேவகருக்குச் சாக்ஷி தாசரி, வீராநாயக்கன் சேவகருக்குச் சாக்ஷி பரமானந்தன் ..... இதல்லாமல்.

5-வது சின்ன பரசுராமப்பிள்ளைக்கு உத்தியோகம் வாங்கிக்கொடுத்து ஐந்நூறு வராகன் பிரயோசனப்பட்டாரென்று எழுதின சம்மதி.

6-வது பட்டணத்துக்காரியங்களெல்லாம் அவர் முன்னிலையாய் நடக்கிறபடியினுலே எந்தச்சம்மதி பேசினுலும் தனக்கு

இம்மாத்திரமென்று பேசிக்கொண்டு அப்பால் துரைகளுடனே சொல்லுகிறதே யல்லாமல் சும்மா பேசுகிறதில்லே என்றும் எழுதின சம்மதி.

7-வது கிறிஸ்துவர்களைப் பரியாசம்பண்ணுகிறதும் தமிமுரைப் புகழ்ச்சியாய் மேன்பாடாய் சொல்லுகிருரென்று எழுதின சம்மதி.

8-வது கனகராய முதலியார் காலையிலே வெகு நீதியுடனே நடப்பித்தாரென்றும் இப்போது அநீதமாய் நடக்குதென்றும். இது காரியங்களெல்லாம் நியாயமாய் விசாரித்தால் உங்களுக்குப் புண்ணியமுண்டென்றும், பின்னையும், உபசாரமாக எழுதினதாகவும் வந்து சொன்னுன். உனக்கிது எப்படி வெளியாச்சதென்று கேட்டேன். அதற்கவன் சொன்னது: சடையப்பமுதலி மகன் சாமிநாதன், இந்தக் கோன்சேலிலே கூட விருந்து பெத்திலியோம் வெள்ளைக்காரர் கையிலே எழுதுவித்ததாகவும், அந்த சாமிநாதனை தான் அழைத்து மெள்ளன விசேஷம் பிடுங்கின விடத்திலே, எழுதினது மெய்தான் என்று சொன்னதாகவும், உன்னை ஏது அவர்கள்கூட வைத்துக்கொண்டு எழுதினதென்று கேட்டதின்பேரில் தனக்குச் சியாம் வெள்ளைக்காரனண்டையிலேயிருக்கச்சே கொடுக்கிருமென்று சொன்ன சம்மதிகள் ஒன்றும் கொடாமற்போனர். அதனுலே எனக்கும் மனது ரொம்பவும் வேசார்வாய் இருக்குதென்று சொன்னதாகவும், அதன் பேரிலே உனக்கு வரவேண்டியது என்ன உண்டோ அதுகளெல்லாம் நான் பிள்ளையுடனே சொல்லி வாங்கித் தருகிறேனென்று சொன்னதின் பேரிலே இதுகளெல்லாம் பிள்ளையவர்களுடனே சொல்லுவியோவென்று கேட்டதாகவும், நீ சொல்லச்சொன்னுல் சொல்லுகிறேன், இல்லாவிட்டால் நானேன் சொல்லுகிறேன் என்று சொன்னதாகவும், ஆனுல் இரண்டாம்பேர் அறியாமல் நீ போய்ச் சொல்லென்று சொன்னதாகவும், நல்லது நான் சொல்லுகிறேன் அல்லாமல் நீங்கள் பெத்திலியோம் எழுதினதுகளிருக்கிறதே அதை எனக்குச் சற்றே காண்பியென்று சொன்னதாகவும், நல்லதென்று எடுத்துக்கொண்டு வந்து காண்பித்ததாகவும், அதைப் பார்த்து இந்தமட்டுந்தானு எழுதினது; இன்னமேதாகிலும் உண்டோ என்று கேட்டதற்கு, இவ்வளவு

தான் எழுதினதாகவும் இந்தப்படிக்குப் பிரஞ்சு வார்த்தையிலே எழுதுவித்து அதைக்கொண்டுபோய் இன்றைய தினம் மூன்று மணிக்கு வற்லாம் (Varlam) கையிலே கொடுத்து அவனும் மதாம் குவர்னதோரண்டைக்கு கொண்டுபோனான். நானும் இப்போதுதான் சாப்பாட்டுக்குப் போகிறேனென்று சொல்லிவிட்டு சாமிநாதன் வீட்டுக்குப் போனானென்றும், முத்து வந்து சொன்னான். ஆனால், அந்த பெத்திசியோரிலே எழுதுவித்தது இப்பவும் எழுதியிருக்கிறோமே, அவ்வளவுதான் என்று சாமிநாதன் சொன்னது. மனப்பூருவமாய்தான் சொன்னானே அல்லவென்று பின்னையும் என்னென்ன எழுதுவித்திருக்கிறார்களோ தெரியாது. இனிமேல் அந்த பெத்திசியோம் வெளிக்கு வந்தபிறகு அறியவேணும்.......

1747 ஆ ஒக்தோபர் மீ 18 உக்கு பிரபவ ஞு அற்பிசி மீ 5 உ புதன்கிழமை.

இற்றைநாள் மாயேயிலேயிருந்து கடுதாசி வந்தது. அந்தக் கடுதாசியிலே வந்த சேதி: தொடுத்தலேன் (M. Dordelein) இசுக்காதரிலே மூன்று கப்பல் கோவாவிலேயிருந்து ஏழு ஓடிவரும்போது இங்கிலீசுக்காரரது ஒரு சீர்மைக் கப்பலும் ஒரு சுலுப்பும் எதிர்ப்பட்டதாகவும், அந்தக் கப்பலையும் சுலுப்பையும் பிடித்துக் கொண்டுவந்து ஏழு வந்து சேர்ந்ததாகவும் அதிலே பதிமூன்று லக்ஷம் பத்தாக்கு இருந்ததாகவும் காகிதமெழுதி அந்தக் கப்பலைப் பிடித்த கப்பித்தேன் பேர் மூசியே பேளலாம் (Peulam) என்றும் எழுதி வந்ததாகவும் காகிதமெழுதி இவர்களைப் பயணம்பண்ணி அனுப்பி இவர்கள் கோட்டைக்கு வந்த விடத்திலே இங்கிலீசுக்காரரது துபாசி அஞ்சாமிலேயிருந்து போகிறவன் இவர்களைக் கண்டு சீர்மைக் கப்பல் ஒன்றும் நாட்டுக்கப்பல் ஒன்றும் எங்களதைப் பிடித்துக் கொண்டார்களே, அதிலே வெகு தானியம் திரவியமிருந்தது. உங்கள் பிரஞ்சுக்காரருக்குப் போகக் காலமானபடியினாலே நன்றாய் வாச்சுது. இங்கிலீசுக்காரரை மாயேயிலேதானே வைத்தார்களா அல்லவென்று புதுச்சேரிக்கு அனுப்பினார்களாவென்று கேட்டதற்கு நாங்கள் புறப்படுகிறமட்டுக்கும் இந்தச் சேதி இல்லை. பிற்பாடு என்னமோ தெரியவில்லை என்று இந்தக் காகிதம் கொண்டுவந்த பிராமணர் சொல்லிவிட்டு வந்ததாகவும்,

மாயேத் துறையிலே கப்பல் வந்து நின்றதையும் இவர்கள் பார்த்து வந்ததாய்ச் சொன்னார்கள் என்று துரை சொன்னார். இது சந்தேகத்திலேயிருக்கிறது. எதனாலேயென்றால் காகிதத்திலே எழுதாதபடியினாலே காகிதம் வருந்தனியும் சந்தேகமென்று சொன்னார்.

1747 ஆ ஒக்தோபர் மீ 20 உக்கு பிரபவ ஸு ஐப்பசி மீ 7உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரண்டைக்கு நான் போன விடத்திலே நேற்று ராத்திரி எட்டு மணிக்குத் திருச்சிறாப்பள்ளியிலே நபாபு அன்வர்திகானுடைய தண்டிலேயிருக்கிற நம்முடைய வக்கீல் சுப்பய்யன் எழுதின காகிதத்திலே எழுதியிருந்த வயணம்:

காரைக்காலிலே முன்முன் குஜிராத்திக்காரனுடைய உடைமையை வாங்கி வைத்துக்கொண்ட சம்மதிக்கு நபாபு அன்வர்திகானுடைய பர்வானாவும் டலாயித்தும் புதுச்சேரி குவர்னதோர் பேருக்குக் கோவர்தனதாசு அவர்கள் குமஸ்தா வாங்கியனுப்புவித்தான் என்றும் நாசர்சங்கு இந்தப் பிராந்தியங்களுக்கு தேவனாம்பட்டணத்தார் போதனையின்பேரிலே வருகிறதாயிருக்கிறதாக எழுதி வந்தது. அதற்கு நவாபு அன்வர்திகான் அவர்கள் நாசர்சங்கு வராதபடிக்குப் பிராஞ்சுக்காரர் பலவந்தமும் இங்கிலீசுக்காரர் நாமுறுதத்தனம் ராச்சியம் கருப்பினாலே இறந்துபோய் இருக்கிறபடியினாலே தண்டு வந்தால் தாளாதென்றும், பின்னையும் அதற்கடுத்த காரியங்கள் என்ன உண்டோ அதுகளெல்லாம் எழுதி மாபூசுகானுக்குக் காகிதம் எழுதி எந்த ரூபத்திலேயும் இந்தப் பிராந்தியங்களுக்கு வராமற்படிக்கு எப்படி நடத்திச் செலவிட்டாலும் அப்படித்தானே போகிறுப்போலே நடப்பிக்கச் சொல்லியும் எழுதி அனுப்பின பிற்பாடு மாபூசுகான் காகிதம் சுலுப்பு சுவார் கொண்டுவந்ததாகவும், அதனாலே நாசர்சங்கு சுவார்கள் இருபத்து ஒன்று லக்ஷம் ரூபாய் மைசூர் மோகத்திற்கு மாற்றிக் கொண்டுஉட்டாஉட்டியாய்ப்போகிறதென்றும், தானும் பயிலவப் பண்ணிக்கொண்டு அனுப்பிவித்துக்கொண்டு வருகிறோமென் என்கிறதாய் அதன்பேரிலே நாசர்சங்கு இந்த நாசிப்பந்தைவிட்டு

அப்பாலே போய்விட்டாரென்கிற சந்தோஷத்தினாலே காகிதம் படித்துப்பார்த்தவுடனே மகா சந்தோஷத்துடனே இந்தச் சேதி கொண்டுவந்த சுலுப்பு சுவாருக்கு முன்னே ஒரு தரம் பதினைந்து ரூபாய் வெகுமானம் கொடுத்து இரண்டாவது திரும்பவும் சந்தோஷமாய்ப் பத்து ரூபாய் கொடுக்கச் சொல்லிச் சொன்னதாகவும், வெகு சந்தோஷத்தை அடைந்து இருக்கிறாரென்றும் இனிமேல் ஆற்காட்டுக்குப் போவானோ தஞ்சாவூரின்பேரிலே போவானோ தெரியாது. ஐந்தாறு நாளையிலே பயணம் புறப்படுகிறதாயிருக்கிறதென்றும் மருதல்லிகான் துறையூரின் பேரிலே ஐந்நூறு குதிரையுடனே போனான் என்றுமிப்படியாக எழுதியனுப்பின சேதியை துரையுடனே சொன்னவுடனே அன்வர்த்திகான் நாசற்சங்கு வருகிறபயம் எனக்கிருந்ததைவிட அவனுக்கு இரண்டு பங்கு அதனமாயிருந்தாப்போலேயிருக்குதென்று சொன்னார். அதிலே நான் மனதிலே யெண்ணிக்கொண்டது இவருக்கும் இத்தனை பயமில்லாமல் இந்த உத்தாரம் புறப்படாது என்று மனதிலே எண்ணிக்கொண்டு உம்முடைய யோகம் அன்வர்த்திகானைகூடக் காத்து நிசாமுக்கு சங்கட்டமாய் இருக்கிறபடியினாலே உட்டா உட்டியாய்போகவேண்டி வந்தது. இப்படி வரும் கடைசியிலே என்று தேவனாம்பட்டணத்தார் வெகுமானம் கொண்டுபோகச்சே நீ யோசனையாய் சொன்னதற்கு கடைசியிலே இங்கிலீசுக்காரர் வெகுமானத்தைக் கொடுத்துப்போட்டு மோசம்போய் வரப்போகிறார்களென்கிறார்களே நாசற்சங்கு சுருக்கிலே அவன் தகப்பனார் சேதி வந்தாகிலும் போவான் அல்லவென்று மறுபடி யாரைத்தொட்டாகிலும் அவன் ஐதராபாத்து கோல்க்குண்டாவுக்குப் போகப்போகிறான் எந்தவிதமும் இங்கிலீசுக்காரருக்கு அபஜெயமும் உமக்கு ஜெயத்துக்கு ஏதுவைக்குத் தக்கதாக வரும் என்றதற்கு நீங்களப்படித்தானே எண்ணப்போமாவென்று சொன்னதற்கு சென்னப்பட்டணம் வந்ததும் மாபூசுகான் சமாதானமானதும் இதுகளெல்லாம் சாதாரணத்திலே சாத்தியத்திற்கு வந்தபடியினாலே இதற்கு அடுத்ததாய் நாசற்சங்குக்கு அப்படித்தான் நடக்கும் இப்போது நான்சொல்லுகிறேன் ஆக்கிருக்கு அறியப்போகிறீர்கள் என்று நான் சொன்னதற்கு சும்மாயிருந்தீர்களே நான் சொன்னபடிக்கு நிசாமு - சங்கடமாய் நாசற்சங்கு சொல்

லாமல் புறப்பட்டுப் போகிறதாய் வந்ததென்று சொன்ன தற்கு நகைத்துக்கொண்டு மெய்தானென்று சொல்லி அப்பால் இனிமேல் இராசத்துகான் மகன் கலியாணத்துக்கு வருகிறுரா என்று கேட்டார், வருவாரென்று சொன்னேன். இதிலே முசியே பாதி வந்தான், அவனுடனே பேசிக்கொண்டிருந்தார். நான் புறப்பட்டு வந்துவிட்டேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஏழு மணி வேளைக்கு மாயே யிலேயிருந்து சொடா கொண்டுவந்த பிராமணர் மூன்று பேர் வந்து ஏழரை மணிக்கு அவர்கள் சொன்ன வயணம் என்ன வென்றுல்: மசுக்கரையிலே யிருந்து ராசாவினுடைய கப்பலிலே மத்திரி பொதுராம் (La Matrie Baudran) இரண்டு கப்பலு டனே மாயேயிக்கு ஓடிவரச்சே கோவா (Goa) கிட்டே இங்கி லீசுக்காரர் கப்பல் ஒன்றும் பசுருக் கப்பல் (Bussorah) ஒன்றும் ஓடிவந்தது. அது எதிர்ப்பட்டதாகவும் அதை ல மத்திரி பொதுராம் பிடித்துக்கொண்டு மாயேயிக்குக் கொண்டு வந்து சேர்த்ததாகவும் அதிலே பதிமூன்று லக்ஷம் பத்தாக்கு (Dollars) இருந்து அகப்பட்டதாகவும் அந்த வெள்ளியெல் லாம் இறக்குகிருர்களென்றும் அந்த மூன்று பேர் பிராமணரும் வந்துவாய் விசேஷமாய்ச் சொன்னுர்கள். ஆனுல் கடுதாசியிலே எழுதிவந்த சேதி காலை துரையண்டைக்குப் போன பிறகு சொல்லச்சே அறியவேண்டியது.

துரையவர்கள் சொன்ன சேதி என்னவென்றுல்: இங்கி லீசுக் கப்பல் இரண்டையும் பிடித்துக்கொண்டது மெய்தான். அதிலே சீர்மைக் கப்பல் ஒன்றும், பசுருக் கப்பல் ஒன்றும் பிச கில்லை. பசுருக் கப்பலிலே வெள்ளிப் பத்தாக்கும் சிறிது பொன்னும் சிறிது நிறுசுகளும் விஸ்தாரமாய் வந்தது பிச கில்லை. இம்மாத்திரம் என்று தொகை ஏற்படவில்லை. ஆன படியினுலே இம்மாத்திரமென்று நிதானித்துச் சும்மா சொல்லப் போகாது. அதுகளெல்லாம் தொகை போட்டுப் பார்க்கிறோம். ஆனுல் விஸ்தாரமாய் வந்திருக்குமே யல்லாமல் கொஞ்சமாய் இராது என்று சொன்னுர்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் என்னை அழைத்து தேவனும்பட்டணத்திலே பீரங்கிச் சுட்டதென்னவென்று கேட்

டார். கடலின்பேரிலே ஒன்றும் உருபடி காணுத்திஞலே ஒரு பண்டிகை ஆகவேணும், இல்லையென்ருல் குறி சுடவேணும் என்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டார். பிக்கன்கான் வருகிற சேதி என்னவென்று கேட்டார். உம்முடைய பங்கிலே சுவாமி கடாக்ஷமிருக்கிறபடியினுலே அவன் வந்து சேருகிறதாய் ஆச்சரியம். கோட்டைக்கூட அதிலேயிருக்கிற மனுஷர்கூட உம்முடைய வசமாக சீவிக்கிருமென்று சுவாமி சங்கல்பம் பண்ணியிருக்கச்சே வருகிறதற்கு அட்டியென்னவிருக்குதென்று சொன்னதற்கு நகைத்துக்கொண்டிருந்தார். அப்பால் தபால் சேதி சென்னப்பட்டணத்தண்டையிலே கப்பல் காண்பிக்குதாவென்று கேட்டார். சதுரங்கப்பட்டணத்தண்டையிலே ஒரு கப்பல் சண்டைக் கப்பலிருக்குதென்றும் அந்த கப்பலுக்கு தேவனும்பட்டணத்திலேயிருந்து ஒரு சின்ன செலங்கின் பேரிலே காகிதம் கொண்டு போய் கொடுத்துவிட்டு மறுபடி வரச்சே வழியிலே திருவாமூருக்கு அப்புறம் கோவளத்துக்கு (Covelong) வடக்கு அந்த வட்டங்களிலே இறங்கி அரிசி தண்ணீர் ஏற்றிக்கொள்ள வந்தவர் கள் சென்னப்பட்டணத்திலேயிருந்து பிரஞ்சுக்காரர் மனுஷர் வந்து பிடித்துக்கொண்டு சென்னப்பட்டணம் போய்ச் சேர்ந்ததாய் சேதி வந்ததென்று சொன்னதற்கு அந்தக் கப்பல் அவ்விடத்திலேதானே யிருக்கிறதாவென்று கேட்டார். அந்தச் சண்டைக்கப்பல் ஒன்று கோவளத்திக்கு வடக்கே சற்று ஒசந்து கிடக்குதென்று சொன்னதற்கு துரையவர்கள் தேவனும்பட்டணத்திலே என்ன சொல்லுவார்களோ வென்று கேட்டார். தேவனும்பட்டணத்திலே யிருந்த மேஸ்தர் கிரெபென் காமாண்டோர் இசுக்காதுரு கப்பல்கள் பங்காளத்துக்கு ரவானுவாச் சுது போகிருர்கள். சென்னப்பட்டணத்தின்பேரிலே போய் இருக்கப்பட்ட கப்பல்களை பிடித்துக்கொண்டு பேரவோமென்று யோசனைபண்ணிப் போனவிடத்திலே பங்காளத்திலேயிருந்து ஒரு கப்பல்காரன் ஓடிவந்தான், எதிரே போகிற சீர்மைக் கப்பல்காரன் சிறிது சீர்மைக் காகிதம் கொண்டுவந்ததை வங்காளத்திலே யிருந்துவந்த கப்பல்காரன் கையிலே கொடுத்துச் சொன்ன சேதி: சீர்மையிலே யிருந்து ஜனவரி மீ கடையிலே மனுவார்க் கப்பல் இரண்டும், கும்பினீர்க் கப்பல் இரண்டும், கும்பினீர்க் கப்பல்கள் எட்டும் சீர்

மையைவிட பதினைந்து நாழிகை பயணத்துக்கு அப்புறத்திலே ஒரு இடம் பேர்விளங்கன் அந்த இடத்திலே கப்பல் லங்கூரம் போட்டார்கள். நான் மாத்திரம் முன்னதாக புறப்பட்டு வந்தேன். வந்து சென்னப்பட்டணத்துக்குப் போகவேணுமென்றும், மைலாப்பூர் துறைக்குக் கிட்டே போகச்சே கட்டுமரக்காரன் வந்து பிடித்தான். சென்னப்பட்டணம் பிரஞ்சுக்காரர் பிடித்துக்கொண்டார்கள். நீங்கள் போகவேண்டாம் முன்னேயும் ஒரு கப்பல் இப்படித்தான் மோசம் போய் அவர்கள் கையிலே அகப்பட்டுப் போச்சுதென்று சொன்ன விடத்திலே அதிலே ஒரு இங்கிலீசுக்காரிச்சி முன் சென்னப்பட்டணத்திலே இருந்தவள் இந்தச் சேதியைச் சொல்லி நான் கேட்டு அதன் பேரிலே ஒசந்து பங்காளம் போவோமென்று புறப்பட்டேன். இப்போதும் பங்காளம் போகிறேன், இந்தக் காகிதங்களைக் கொண்டுபோய் தேவனும்பட்டணத்திலே கொடு என்று சீர்மைக் காகிதப் பக்கேத்தைக் கொடுத்துவிட்டு பங்காளம் போனதாய் அந்தக் கப்பல்காரன் வந்து கயாண்டோர் மேஸ்தர் கிரேபென் பழவேற்காட்டண்டையிலேயிருக்கச்சே சொல்லி அந்தக் கப்பல் தேவனும்பட்டணம் வந்து சீர்மைக் காகிதங்களைக் கொடுத்தான். ஆனபடியினாலே சீர்மைக் கப்பல் பத்து உருவும் வருகிறதென்றும் அது வந்தால் ஒரு வேளை பிரஞ்சுக் கப்பல்காரன் கையில் அகப்பட்டுப் போகிறது என்றும் பின்னையும் காரியத்தைக் குறித்துப் பங்காளத்துக்குப் போகிறதை நிறுத்தி இந்தப் பிராந்தியங்களிலேதான் இருக்கிறதாக தேவனும்பட்டணத்திலேயிருக்கிறவர்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள் என்று உற்ற கபுறு வந்ததென்று சொன்னதற்கு துரை மெய்தான் ஒரு கப்பல் செப்தம்பர் மீ 7௳ மைலாப்பூர் துறைக்குள்ளே நேராய்க் கண்டு அது சீர்மைக் கப்பல்போலேயிருந்து நாங்களும் இங்கிலீசுக் கொடி போட்டோம். துறை நெருங்கி வந்தவன் ஒசந்து போய்விட்டான். அது மைலாப்பூர் துறையிலே ஏதோ ஒரு கட்டுமரமிருந்து கபுறு சொன்னாப்போலே இருக்கிறதென்று எழுதியிருக்கிற காகிதத்தைப் பார்த்து இந்தக் கப்பல்தான் என்று ஏங்கிக்கொண்டார்.

1747 ஆ ஒக்தோபர் மீ 21௳ க்கு பிரபவ ஷு அற்பிசி மீ 8௳ சனிவாரம்.

இற்றைநாள் பனிரெண்டடித்தவுடனே நான் வீட்( )நப் போகச்சே எதிராக எச்சுப்போக்கு வருவதாயிருக்கிற. பிராமணன் வந்து சொன்ன சேதி என்னவென்றால்: நாங்கள் முசியே மேன்வில் முதலான வெள்ளைக்காரர் ஐந்து பேர் பிறகே மைசூர் கெடிலஸ்தலம் ஆத்தூரண்டையிலே போகச்சே அவர்கள் மறித்தார்கள். அவர்களுக்கு ஐம்பது ரூபாயும் ஒரு பிஸ்தோல் சோடும் கொடுத்துவிட்டு அப்பால் நாமகிரிப்பேட்டை என்று இருக்கிறது. அவ்விடத்திற்குப் போனவிடத்திலே அந்த மணியக்காரன் அழைத்தான். ஏன் அழைக்கிறீர்கள், நாங்கள் வர்த்தகர்கள், நாங்கள் வியாபாரத்திற்காக மார்க்கமாகப் போகிற எங்களை ஏன் மறிக்கிறீர்கள் என்று என்னமாய்ச் சொன்னாலும் அவர்கள் நீங்களிப்படி டோலியும் மனுஷரும் சத்துமாய்ப் போகிறதற்கு எங்களுக்குச் சேர்ந்தமங்கலமொன்று சமீபத்திலே கெடிலஸ்தலம் இருக்கிறது. அதிலே எசமான் இருக்கிறான், அவனுக்கு நாங்கள் சொல்லி அனுப்பி அவர்கள் உத்தரவு வந்தாலேயல்லாமல் விடப்போகாதென்று சொன்னவிடத்திலே, நல்லது எழுதியனுப்பிவையுங்கள் என்று சொன்னவிடத்திலே அந்தச் சேர்ந்தமங்கலம் கெடிலத்திலே இருக்கிற குப்பய்யருக்கு நாமகிரிப்பேட்டை மணியக்காரன் எழுதி வெள்ளைக்காரர் வந்த சேதி எழுதினதின்பேரிலே அவனிந்த வெள்ளைக்காரனைக் கூட்டி அனுப்புவிக்கச்சொல்லி சொன்னதின்பேரிலே இந்த வெள்ளைக்காரர் வழிமூடிய இந்த தொந்தரவானால் எப்படியென்று கேட்டதற்கு நீங்கள் டோலியும் இந்த ஆடம்பரத்துடனே போனால்போகவொட்டுவார்களா? என்று முன்னே தானே சொல்லவில்லையாவென்று பிராமணர்கள் சொன்னதின்பேரிலே டோலி, ஐந்து மெத்தை, தலைகாணி பின்னையும் சிறிது கைக்கு வராத புடவை, கைபெட்டிகள் கண்டா குண்டிகள் எல்லாவற்றையும் போன திங்கள் 3வ வெள்ளைக்காரர் மீ 16வ காலத்தாலே நாமகிரிப்பேட்டையிலே கட்டுப்போட்டு அப்பாலேயிருக்கிற சேர்ந்தமங்கலகோட்டைக்குப் போகச்சே குவர்னதோர் பேருக்கு மேன்வீல் (M. Mainville) காகிதம்கூட எழுதி டோலிகள் ஏறிக்கொண்டு போகிறதற்கு வழிகளிலே தொந்தரவுனாலே போகிறது பிரயாசையுமானபடியினாலே டோலிகள்கூட கட்டுப்போட்டுத் தீர்த்துவிட்டு அப்பாலே கால் நடையாய் நடந்துபோகிறோமென்றும், இந்தப் பார்ப்பார்

அவர்களைத்தொட்டுச் சங்கடமேயல்லாமல், இல்லாமற் போனால் நாங்கள் குறையாசமாய்ப் போவோம். இனிமேல் நாங்கள் பயணம் சுருக்காய்ப் போகிறோமென்று எழுதியனுப்பி விட்டு அப்பாலே சேர்ந்தமங்கலம் கோட்டைக்குப்போன விடத்திலே அவன் ஐந்து பேர் வெள்ளைக்காரரையும் சட்டைக் காரரையும் கோட்டைக்கு வெளியே விடவேண்டாமென்றும், இவர்கள் பிறகே வந்த தமிழர் சூத்திராள் வெளியே போகவா இருக்கட்டுமென்றும், எங்களெங்கள் எசமானனுக்குப் பட்ட ணத்திற்கு எழுதிக்கொண்டு அவ்விடத்திலேயிருந்து உத் தாரம் புறப்பட்டுப் பிறகு விட்டுவிடுகிறோமென்று சொன்ன தற்கு நாங்கள் அப்படி கேட்கிறதில்லை. பாட்டாச்சாரிகள் பதினாயிரம் பேர் போக்கு வரத்தாயிருக்கிறது. நீங்களேன் தடைபண்ணுகிறீர்களென்று கேட்டதற்கு உங்களைப் பார்த் தால் ஒரு துரைகள்போலே இருக்கிறது, விடப்போகாது. முன் வழியிலேயிருக்கிறவர்கள் ஆத்தூரண்டையிலே ஐம்பது ரூபாயும் ஒரு பிஸ்தோலும் வாங்கிக்கொண்டு விட்டார்களே அப்படி நாங்கள் விடத்தக்கதில்லையென்றும் பின்னையும் சொல் லத்தக்கப் பலவந்த வார்த்தைகளானதுகள் எல்லாம் சொன்ன தின்பேரிலே இந்தச் சேதிகளெல்லாம் அய்யனென்கிற பிரா மணன் சொல்ல அதன்பேரிலே அவர்கள் பிறகே ஆயிரம் புரைவார்கள் கொண்டுவந்த இரண்டு பிராமணனையும் நீங்கள் வெளியே போய் இருங்களென்றும், வாரோமென்றும் சொல்லி, பெருமாளையனைமாத்திரம் கூட வைத்துக்கொண்டு இவர்கள் ஆயுதபாணியாய் தயாராய் வெளியே புறப்பட்டதாகவும் இதற்கு முன் சேன்மூக்கு (Chonjoak) புறப்பட்டதாகவும் அதன்பேரிலே அவர்கள் மனுஷர் வந்து வளைத்துக்கொண்ட விடத்திலே வெள்ளைக்காரர் முன்னே கையாடி சுட்டதாகவும், அதன்பேரிலே அவர்களும் சுட்டார்கள். எப்போது கை கலந்து சண்டையாச்சோ நாங்கள் புறப்பட்டு வந்துவிட் டோம்; எங்கள் கையிலே ஆயிரம் வராகனிருக்கிறபடியினாலே யும் கலாபமானமட்டும் நாங்களகப்பட்டால் எங்களையும் காவல்பண்ணினால் அவர்கள்கூடச் சிக்கிப்போவோமென்று பயந்து வந்துவிட்டோமென்று சொன்ன சேதியைக் கேட்டு மறுபடி துரை வீட்டுக்கு வந்து இந்த பிராமணனையும் முன்னே விட்டு ஆயிரம் வராகன் இரண்டு அரைப்பையிலே கட்டியிருந் ததையும் பின்னே வைத்து நடந்த சேதியெல்லாம் சொன்ன

தற்கு இதோ பிராமணுளைத்தொட்டுவந்த போராட்டம் மசியே மேஸ்வில் நாளது மீ 16வ திங்கட்கிழமையன்று எழுதிவ ...கி தத்தைப் பார்த்தாயா? இவர்களைத்தொட்டு வழிகளிலே தொந்தரவே யல்லாமல் இல்லாமற்போனுல் நாங்கள் சுகமாகி விடுவோமென்று எழுதியிருக்கிறது பார்த்தாயா? இவர்கள் வெள்ளைக்காரர் கையிலே பத்து பணம் வாங்கிவித்து அவர் களுக்குப் பாதி கொடுத்துத் தாங்கள் பாதி எடுத்துக்கொள்ளு கிற நிமித்தியம் இப்படி நடப்பித்தார்கள் என்று பிராம்ணர் பேரிலே கோபம்பண்ணினுர். அதற்கு பிராமணர் சொன்னது! பதினைந்து வருஷமே உங்களாலே நாங்கள் சுகப்பட்டு இப் போது இப்படி துரோகம் நினைத்தோமேயானுல் நாங்கள் சுகப் படமாட்டோம், கெட்டுப்போவோம். எங்களாலேயே அப்படிப் பட்ட நினைப்பு உண்டானுல் இத்தனை நாள் உங்களிடத்திலே இருக்கமாட்டோமே என்றும், பின்னையும் அநேக சங்கதிகள் எல்லாம் சொல்லிக்கொண்டார்கள். அவர்களப்புறம் புறப் பட்டுப் போயிருப்பார்கள் என்று சொன்னுர். அதன்பேரிலே பிராமணுள் ஆயிரம் வராகனையும் துரை கையிலே கொடுத்து விட்டு இவர்கள் விடுதியே போனுர்கள் துரையவர்கள் என்னைப் பார்த்து அங்கே கலாபமாவதே இவர்கள் பயந்து ஓடிவந்து விட்டார்கள். இவர்கள் சாடை இம்மாத்திரந்தான். கடைசி யிலே ஓடிவந்துவிடுகிறது. கலாபமானமட்டுக்கும் என்ன நடக் கிறதோ தெரிந்துகொண்டு போவோமென்று இராமல் வந்து விட்டார்களென்று கோபமாய்ச் சொன்னுர். அதற்கு நான் சொன்னது: இவர்கள் இரண்டுபேர் கையிலேயும் வராகன் இருந்தபடியினுலேயும். கலாபமானமட்டுக்கும் அவர்கள் மனு ஷர் கண்டால் மோசம் வரும் கபுறு தெரிந்துகொண்டுவருகிற தற்கு இன்னும் இரண்டு பிராமணுளிருக்கிருர்களே என்று பணத்துக்கு மோசம் வரப்போகிறதென்றும், பணத்தைக் காப் பாற்றுவோமென்றும் சொல்லுகிறதற்கு எண்ணத்திலேயும், கடைசியிலே வெள்ளைக்காரர் அகப்பட்டமட்டுக்கும் இவர்கள் பணத்தைக் கொண்டுவராமல் அங்கே வைத்துக்கொண்டு வரா மல் இந்தமட்டுக்கும் இவர்கள் சுற்றத்தார் நினைத்து இத்தனை தொந்தரவுக்கிடம் கொண்டுவந்துவிட்டார்களென்றும், தேவ ரீர் மனதிற்குத் தோற்றப்போகாது என்று கபுறு கொண்டு வருகிறதற்கு மனுஷர் ரொம்பவும் இருக்கிருர்கள் என்று

சொன்னதற்கு நல்லது நீ வீட்டுக்குச் சாப்பிடப் போவென்று சொல்லித் தாமும் மேசையிலே போய் உட்கார்ந்தார்.

இற்றைநாள் ராத்திரி ஏழு மணி நேரத்திற்கு அரியாங் குப்பத்திலே யிருக்கிற கொத்தளத்திற்குப் பெரியவனுயிருக் கிறவன் துரையவர்களுக்கு எழுதினதென்னவென்ருல்: தேவ னும்பட்டணத்தார் இருநூறு சொல்தாதுகளும், மாயே சிப் பாய்கள் நானூறு பேரும், குதிரை சுவார்கள் நூறு பேரும் இப்படியாகப் பாகூரின்பேரிலே புறப்பட்டு இப்படியாக வரு கிறதாய்ச் சேதி வந்ததென்று எழுதின தின்பேரிலே இருநூறு சிப்பாய் குதிரைச் சுவார்கள்பண்ணுகிற வெள்ளைக்காரர் துலுக் கர் எல்லாம் ஏகத்துக்குச் சுவார்களையும் பயணம்பண்ணி அரியாங்குப்பத்துக்கு அனுப்புவித்தார்கள். அவர்கள் போகச்சே ஒன்பது மணியுண்டு. அப்போது நான் யோசனைபண்ணினது, தேவனும்பட்டணம், கூடலூர், திருவந்திபுரம், பாகூர் இந்த வட்டாரங்களிலே இருபது பேர் இருக்கச்சே ஒருத்தனுகிலும் வந்து சொல்வானு? ஆனபடியினுலே, அரியாங்குப்பத்திலே இருக்கிறவன் தப்பு கபுறு எழுதியிருக்கவேணுமென்று யோசனைபண்ணினேன். இந்தச் சேதியை நாளையதினம் அறிய வேண்டியது.

இற்றைநாள் நபாபு நாசற்சங்கு அவர்கள் மகுக்கரையிலே இருந்துவந்த மகம்மது அஹின், மகம்மது சமா என்கிறவர்சள் இரண்டு பேரும் முன்னுலே மாபூசுகான் சாயபு அவர்கள் சர்க் கார் இருந்த மைவாப்பூரிலே முசியே பரிதுக்தும் மாபூசுகானுக்குஞ் சண்டையாய் மாபூசுகான் ஓடிப்போனபோது இவர்களது குதிரை முதலானது கொள்ளைப்போனபடியினுலே மாபூசுகான் அவர்களுடைய சிபார்சு ஸ்ரீ பிள்ளையவர்களுடைய பேருக்குக் கொண்டுவந்து முன்னே நாற்பது ரூபாய் வாங்கிக்கொண்டு போனவர்கள் இரண்டு பேரும் இப்போது மாபூசுகான் அவர் களுடைய காகிதம் நபாபு நாசற்சங்கு அவர்கள் பக்கிஷ்மீருசா மகம்மதுகானவர்கள் காகிதம், வசுக்கருவாக்கானி அவர்கள் காகிதம் அங்கே லசுக்கரிலே ஸ்ரீ குவர்னதோர் அவர்களுடைய சிப்பாய் கிரிதாரிப்பும், இங்கிலீசுக்காரர் நாமறதி சங்கதிகள் தண்டிலே பிரஸ்தாபம் நடந்து நபாபு அவர்கள் சித்திர துர்க்கம் அந்தப் பிராந்தியங்களுக்குச் சாகிப்போன சங்கதி

எழுதின காகிதங்கள் வாங்கிக்கொண்டு வந்தபடியினாலே இந்தக் காகித சமாசாரம் விஸ்தாரமாய் ஸ்ரீ குவர்னதோரவர்களுக்குப் பிள்ளையவர்கள் அறியப்படுத்தின மாத்திரத்திலே இந்தக் காகிதங்கள் முசியே தெலார்சு கையிலே கொடுத்துத் திரான்சிலேட்டுப்பண்ணிக்கொண்டு வரச்சொல்லி உத்தாரம் கொடுத்தார்கள்.

1747 ஆ ஒக்தோபர் மீ 22உ க்கு பிரபவ ஞு அர்ப்பிசி மீ 9உ ஆதிவாரம்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: ஐந்து மணி அடிக்கிற வேளையிலே நானொரு சொற்பனம் கண்டேன். அதென்னவென்றால்: ஒரு பெண்சாதி ஒருத்தி கையிலே சிகாய் முத்திரைகளும் திறவுகோல்களும் ஒருக்காலே கொண்டுவந்து என் கையிலே கொடுத்து இது ஏழு எட்டுக் கோட்டைச் சாவியளும் முத்திரையளுமிதுகளெல்லாம் நீர் வைத்துக்கொண்டு சகலத்துக்கும் அதிகாரியாயிருக்கப்போகிறீர். நான் கொண்டுவந்து கொடுத்தேனே இது முதலாக உமக்குச் சிரேஷ்கரமாய் நடக்குமென்று சொல்லிக்கொடுத்தாள். அதை வாங்கிக் கையிலே பிடித்துக்கொண்டு ஒரு கையிலே பிரம்பை ஊன்றிக்கொண்டு மெத்தையின் பேரிலே ஏறிப்போகிறாப்போலேயிருக்குது. அப்படியிருக்கச்சே ஆறுமுகம் செம்புத்தைக் கொண்டுவந்து கையிலே வைத்துக்கொண்டு தட்டியெழுப்பினான். அவன் தட்டினது என்னமாயிருந்ததென்றால் மெத்தையின்பேரிலே போகச்சே கால் நோவினாலே சாயப்போகுதென்று அவன் எச்சரித்தாப்போலே கண்டது. அதற்குள்ளே நான் விழித்துக்கொண்டேனே! மெத்தைமேலே கட்டியிருக்கிற மணி ஐந்தடித்தது. அடித்தவுடனே எதிரிலேயிருக்கிற பாதிரி கோவிலிலே பூசை மணி விஸ்தாரமாய் அடித்தது. அந்த மட்டிலே எழுந்திருந்து இப்புறத்திலே வந்து உட்கார்ந்தேன். மெழுகுவத்தியைக் கிட்டே கொண்டுவந்து வைத்தான். வைத்தவுடனே பலபலவென்று பூவு மூன்றுதரம் உதிர்ந்தது. ஆனபடியினாலே இன்றையதினம் நான் கண்ட சொற்பனத்திற்கு எழுந்திருந்தவுடனே மணி அடித்ததும் மயிலைப்புவத்திலே புருஷினதும் என்னுடைய மனதுக்கு இருக்கிற சந்தோஷமும்

பார்த்தால், இன்று முதலாக மகத்தான அயிசுவரியமும் வரும். மெத்த மேன்பாடாய் நடக்கும். அதற்குப் பின்னையும் ஒன்றும் சந்தோஷமில்லை. அந்தப்படிக்குக் கெட்டியாய் சுவாமி தயவுபண்ணி வைப்பார் என்றெண்ணிக்கொண்டதுமல்லாமல் சுக்கிரதிசையிலே சனிபுத்தி இன்றைய தினத்துடனே நிவர்த்தியானபடியினாலேயும் நாளையதினம் முதற்கொண்டு சுக்கிரதிசையிலே புதன்புத்தியானபடியினாலேயும் நாளையதினம் முதற்கொண்டு கெசாந்த அயிசுவரியமும் பனிரெண்டு பட்டணத்துக்கு அதிகாரமும் வருமென்றும் எழுதினதற்கு ஏஷியமாயிருக்குதென்று எண்ணிக்கொண்டுவந்து உட்கார்ந்தவிடத்திலேதான் விளக்கிலே பூ உதிர்ந்தது. இனிமேல் நடக்கிற காரியம் மேலே எழுதப்பட்ட சொற்பனமும், சோசியமும், சகுனமும் விளங்கப்பண்ணவேண்டியது.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே தெற்கித்து வடக்கித்துச் சேதி ஏதாகிலும் வந்ததாவென்று கேட்டார். இன்னம் வந்ததில்லை யென்று சொன்னேன். அதன்பேரிலே தேவனாம்பட்டணம் குவர்னதோர் கூடலூர் ஆசையை விட்டுத் தேவனாம்பட்டணம் கோட்டை மாத்திரம் பலப்படுத்துகிறுனென்று கபுறு வந்தது என்னவென்று கேட்டார். காசிலவ்வை (Kasilavvai) அன்று தானே உங்களுடனே சொல்லவில்லை. முன் மருட்டியர் தாம் தாம்போதும் அப்படிதானென்று சொன்னேன். ஆனால், கூடலூர் ஆசையை விட்டுவிட்டார்களே இனிமேல் குண்டுலே மேலண்டை தென்னண்டை பாரிசமெல்லாம் பத்திரம்பண்ணவில்லை. மேலண்டை பக்கமாத்திரம் பத்திரம்பண்ணினார்கள். இதுவே பலனாக வெண்ணுகிறபாலமுண்டாவென்றார். அதற்கு நான் அவர்களுக்குப் பொல்லாத காலத்துக்குத் தக்க புத்தி கொடுத்திருக்கிறது என்று சொன்னதற்கு அந்த குவர்னதோர் மெத்த கப்பாசல்ல. இப்படி அந்தத் துறையிலே யிருக்கிற கப்பல் இன்ன விடத்திலே யிருந்துவந்த கப்பல் இன்னவிடத்திற்குப் போகிறதென்று நிட்டமாய்ச் சாமாசாரம் அழைப்பிக்கவேணும். இதல்லாமல் உச்சிமேட்டுக்கும், குண்டுசாலைக்குத் தெற்கு முகத்துவார பரியந்திரம். ஒரு கொத்தளத்துக்கு ஒரு கொத்தளம் எத்தனை மைல் தூரம் அதிலே யிருக்கிற மனுஷர் எம்மாத்திரம் என்றும் கபுறு எத்தனை நாளையிலே அழைப்

பிக்கப் போகலாமென்று கேட்டார். புதன்கிழமைக்கு அழைப் பித்துச் செல்லுகிறேன் என்று சொன்னேன். நல்லது அப்படி தானே சீக்கிரமத்துக்கு வந்து கபுறு சொல்லச் சொல்லிவிட்டு அப்பாலே முசியே மேன்வில் முதலான வெள்ளைக்காரர் ஐந்து பேரண்டையிலேயிருந்து வந்தேனென்று ஒரு போயண்டன் வந்துகபுறு சொன்னுவனை என்ன சேதியென்று கேட்டவிடத் திலே மைசூர் சீர்மையிலே சேர்ந்த மகாமகோடிஸ்தலத்திலே யிருந்து இவர்கள் போகவொட்டாமல் காவல்பண்ணினமட்டுக் கும் இவர்கள் வெளியே புறப்பட்டு கையாடினமட்டுக்கும் அதிலே மூன்று பேருக்குக் காயம் ஆச்சுது. முசியே மேன்வில் முதலானவர்கள் மாயேயிக்குப் போகிறவர்கள் பிறகே போன போயண்டனொருத்தன் கபுறு சொன்னதென்னவென்றால்: நேற்றையதினம் ஆயிரம் வராகன் கொண்டுவந்த பிராமணன் சொன்ன சேதி: வெள்ளைக்காரருக்குச் சேர்ந்தமங்கலம் கெடில ஸ்தலம் மனுஷருக்கும் கைகலந்தவுடனே நாங்கள் புறப்பட்டு வந்துவிட்டோமென்றல்லவோ சொன்னார்கள். இந்தப் போ யண்டன் சொல்லுவது வெள்ளைக்காரர்களுக்குச் சேர்ந்தமங் கலம் கோட்டையாருக்குச் சண்டையான பிறகு வெள்ளைக் காரர் சுட்டாப்போலே அவர்கள் விஸ்தாரமான பிரயாசமான படியினாலே ஈட்டிக் கழிகளும், மூங்கில் தடிகளுமாய் வந்து விழுந்தாப்போலே வெள்ளைக்காரர் துப்பாக்கிகளைப் போட்டுப் போட்டு மூலைக்கு மூலையாய் ஓடிப்போனதே அவர்களைத் துரத் திப்பிடிக்கச்சே அடி நல்ல அடி அடித்தார்கள். முசியே மேன் விலுக்கு ஒரு ஈட்டிக் காயமும் பட்டதென்றும், அதன் பிற்பாடு கோட்டையிலே கொண்டுபோய்க் காவல் வைத்தார்களென் றும், பிறகே போன பெருமாளய்யனையும் நல்ல அடி அடித் தார்கள். அவனையும் காவலில் வைத்ததாகவும், தட்டுமுட்டு கள் பெட்டிகள் பேழைகளிருந்ததெல்லாம் எடுத்துப் பத்திரம் பண்ணிக்கொண்டார்கள் என்றும், தாங்களிருந்தவர்கள் அனை வரும் திக்காலொருத்தனாய் ஓடிப்போனோமென்றும், இதிலே சேன்றாக்குக்கும் (Chenj-ak) பின்னையும் இரண்டு ஒபிசியேல் மாருக்கும் நல்ல காயம் பட்டதென்றும், மற்றப்பேர் பிழைப் பார்களென்றும் இவர்களும் பிழைத்தால் புனர்ச்செனனம் என்றும் இப்படி வந்து சொன்ன கபுறு துரையுடனே சொன்ன

தற்குத் துரை யிருந்துகொண்டு, நல்லது சேர்ந்தமங்கலம் கெடில ஸ்தலம் பெரியவனுக்கு ஒரு காகிதம் எழுதியனுப்பச் சொன்னர். நல்லதென்று வெகு பேர் பாட்டைச்சாரிகள் தங்கள் ராச்சியத்தின்பேரிலே தங்கள் சீர்மை வழியாய் லக்ஷம் தரம்படியாய்ப் போகச்சே அதிலே ஏழைகள் உத்தியோகமில்லாத பிரஞ்சுக்காரர்கள் உத்தியோகம் அமர்த்திக்கொள்ளுகிற நிமித்தியம் மாயே (Mahé) பந்தருக்குப் போகச்சே அவர்களை இப்படி அடித்துப் பிடித்துக் காவல்பண்ணலாமா? இது நியாயமாவென்றும், ராசா சகல தர்ம பரிபாலனம்பண்ணுகிறவர் என்றும், சகலமும் நியாய மார்க்கமாய் நடத்துகிறபடியினலே இந்த ராச்சியங்களுக்கெல்லாம் மேட்டியாய் நடந்துவரத் தக்கதாகச் சுவாமி தயவுபண்ணினர். அப்படி மகாராசாவினுடைய இயல்படியான கெடில ஸ்தலத்துக்கு அதிகாரம்பண்ணப்பட்டவர்கள் உங்களுடைய நினைப்பும், நடத்தையும், சத்தியமும், நியாயமும் அப்படிதானே யிருக்குமல்லாமல் அதற்கு விரோதமாய் இருக்கிறதில்லையென்று கெட்டியாய் நாங்கள் எண்ணிக்கொண்டு உங்களுக்குக் காகிதம் எழுதினோம். உங்கள் மனுஷர் தப்பிதமாக இந்த வெள்ளைக்காரர் பாட்டைச்சாரிகளாய்ப் போகிறவர்கள்பேரிலே யாதொரு குற்றத்தை வருத்துவித்து உங்கள் கர்திலே போட்டு அவர்களுடைமையை ஆக்கிரமிக்க வேணுமென்று யோசனைபண்ணின சின்ன மனுஷர்களை அதற்கேற்றபடி தண்டித்து இந்த ஏழை வெள்ளைக்காரருடைய தட்டுமுட்டுகளைக் கொடுத்து அவர்களை அனுப்பி நம்முடைய சிநேகிதத்துக்கும் சிநேகிதம் அபிவிருத்தியாய் நடக்கத்தக்கதாய்த் தூரதிருஷ்டிபண்ணி நடப்பீர்களென்று முழு மனதுடனே எண்ணி யிருக்கிறோமென்றும், உபசாரமாய் எழுதி இந்தப்படிக்குத் தெலுங்கிலே எழுதுவித்து முகர்பண்ணி வெங்கட்டநாராயணர் கையிலே கொடுத்து இவர் போகச்சே வெருங்கையுடனே போகலாகாதென்று சொல்லிச் சேர்ந்தமங்கலம் கெடில ஸ்தலத்துக்காரனுக்கு இரண்டு கெசம் சிகப்பு சகலாத்து, சின்ன விசிறி ஆறும், மடக்கு சூர்கத்தியிலே நான்கும், ஆயுதமிருக்கிறது இரண்டும், மடிப்பு பெரிய கத்தி இரண்டு, சின்ன சூர்கத்தி இரண்டு, கத்திரி நான்கு இதுகளெல்லாம் கொடுத்தனுப்புவித்தேன். இவர்களுக்குச் செலவுக்கு இருபது ரூபாயும், பிறகே போகிற மாயேயிக்குப் போக்கு வரத்தாயிருக்கிற குருவய்யனுக்கு ஆறு ரூபாயும் கொடுத்து ஒரு வேளை

சேர்ந்தமங்கலம் கோட்டையான ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு எழுதி அங்கே இருந்துவிடவேண்டாமென்று ஒடுதி வந்ததா? அல்லது அவ்விடத்திற்கு அனுப்பச்சொல்லி ஒடுதி வந்து மைசூருக்குப் போகவேண்டியிருந்தால் போய், கோபாலதாசு என்று முன் சம்புதாசு பிறகாலே சேது யாத்திரைக்குப் போகிறபோதும் வருகிறபோதும் வந்த துரை பேட்டிபண்ணிக் கொண்டு நமக்கு ரொம்பவும் சிநேகிதமாய் நடப்பித்துக் கொண்டவருக்கு துரை காகிதம் ஒன்றும், நம்முடைய காகிதம் ஒன்றும் இப்படி இரண்டு காகிதம் எழுதி வெள்ளைக்காரர் ஙிமித்தியம் மேலே எழுதின வயணப்படிக்குப் பின்னையும் சற்று விஸ்தரித்து எழுதி மகா-ர-ா-ஸ்ரீ தளவா அவர்களுக்கும் பிரதான பண்டிதருக்கும் சொல்லி விடுதலைபண்ணச் சொல்லியும், என் காகிதத்திலே ஐம்பது வராகன்மட்டுக்கும் தளவா பிரதான பண்டிதருக்கு நசர் மற்றது வைக்கவேண்டியிருந்தால் ஐம்பது வராகன் கொடுத்து இங்கே யார் வசத்திலே செலுத்தச் சொல்லுகிறார்களோ அவர்கள் வசத்திலே செலுத்திப் போடுகிறோம். அல்லவென்றால் யார் வசத்திலேயாகிலும் செலுத்தச் சொன்னால் செலுத்திப் போடுகிறோமென்றும், மற்றச் சேதிகளெல்லாம் வெங்கட்டநாராயணய்யர் வந்து சொல்லச்சே தெரியவருமென்றும் எழுதி பின்னையும் உபசாரமாய் எழுதியும் வெங்கட்டநாராயணய்யர் இவர்களைப் பயணம் பண்ணிக் காகிதங்களும் கொடுத்தனுப்புவித்தேன். அவர்களுடனே உபயமிரண்டும் சிநேகித மார்க்கமுங்கூடச் சொல்ல வேண்டியபடிக்குச் சொல்லியனுப்புவித்தோம். அவர்களும் பயணம் அனுப்புவித்துக்கொண்டிருக்கிற தறுவாயில் துவர்னதோர் அழைப்பித்து முசியே மேன்விலுந்த ஒரு காகிதமும் எழுதிக்கொடுத்து அரும்பாத்தைக் கையிலே முசியே மேன்விலுக்குச் செலவுக்குக் கொண்டுபோனதெல்லாம் பறித்துக்கொள்ளுவார்களோ ஆனபடியினாலே நூறு வராகன் வாங்கிக்கொண்டு கொடுத்தனுப்புமென்று சொன்னார். அந்தப்படிக்குப் பரசுராமப்பிள்ளை கையிலே பிறை வராகன் நூறு வராகன் வாங்கி வெங்கட்டநாராயணய்யனும் மாயே குருவய்யன் வசம் கொடுத்து மேன்வில் துரை கொடுத்த காகிதமும் இந்த நூறு வராகனும் கொடுக்கச்சொல்லி அனுப்புவித்தோம்.

*1747 ஆ ஒக்தோபர் மீ 23 உக்கு* பிரபவ ஸு அற்பிசி மீ *10உ* சோமவாரம்.

இற்றைநாள் ராசா அவர்கள், கார்வெட்டி ராசா அவர்கள் மனுஷர்களுக்கும் ஷை ராசாவுக்கும் அவர்கள் சமஸ்தான ஸ்தானாதிபதி சக்கரவர்த்தி சீனுவாசாச்சாரியார் முதலான பேர்களுக்கு வெகுமதியும் கட்டி, ராசாவுக்குப் பல்லக்கு முஸ்தீதுபண்ணி, மாடபூசி ஐயவாரய்யங்கா (Madapusi-Ayyavar Ayyangar) ரையும், சீனுவாசாச்சாரியாரையும், வரதய்யங்காரையும் ஆற்காட்டிலேயிருந்து ராமகிருஷ்ணசாஸ்திரியாரையும் போகச்சொல்லிக் காகிதங்களும் எழுதி அனுப்பினோம்.

*1747 ஆ ஒக்தோபர் மீ 24உ* க்கு பிரபவ ஸு அற்பிசி மீ *11உ* மங்களவாரம்.

இற்றைநாள் சாயங்காலம் முத்தியப்பிள்ளை தோட்டத்துக்குப் போய் பிரஞ்சு நாடகத்துக்கு வெள்ளைக்காரர் வேஷம், துலுக்கர் வேஷம் போட்டபடியினாலே போய்ப் பார்த்துக் கொண்டிருக்கச்சே துரை சேவகர்கள் வந்தழைத்தான். போனவிடத்திலே தேவனாம்பட்டணத்துத் துரை, கப்பல் சேதி வந்ததாவென்று கேட்டார். இன்னும் வரவில்லை என்று சொன்னேன். வேறு சேதி வந்தது. காலேயிலேயிருந்து தேவனாம்பட்டணத்துத் துறைக்கு வந்த ஒரு பட்டாணியன் சுலுப்பு சாராயமும் பாக்கும் ஏற்றி வந்தது. அந்தப் பட்டாணியன் தேவனாம்பட்டணத்துத் துரைக்குச் சொன்னது: காலேயிலேயிருந்து தன் கப்பல் புறப்பட்ட வுடனே ஐந்து கப்பல்கள் பெரிய சீர்மைக் கப்பல்கள் ஓசந்து ஓட்டுகிறான். கொடியைக் காணோம் அது இங்கிலீசுக்காரருடையதோ, பிரஞ்சுக்காரருடையதோ தெரியாதென்று சொன்னான். அதன்பேரிலே குவர்னதோர் மருந்து குண்டுகள் மற்றமுஸ்தீதுகளெல்லாம் முஸ்தீதுபண்ணி வைக்கிறது. சாக்கிரதையுடனே இருக்கிறதாய்ச் சேதி வந்தது என்று சொன்னேன். பின்னையும் அதை ரெட்டித்துக் கேட்டார். அதற்கு அந்த வயணந்தான் சொன்னேன். அப்பாலே தேவனாம்பட்டணத்திலேயிருந்து குவர்னதோர் பிளேயா என்கிறவர் ஒரு சோபுதாரன் கையிலே காகிதமும், இரண்டு சேவகர் வசம் ஐந்நூறு ரூபாயும், நாலு கூலிக்காரர் கையிலே நூற்றைம்

பது காரிக கமிசும், எழுபத்தைந்து வெஸ்தும், எழுபத்தைந்து சுல்சாமும் கொடுத்தனுப்பினுர். அந்த ரூபாயும் உடுபுடவையும் என்னை எண்ணி ஒப்புவித்துக்கொண்டுவந்து கபுறு சொல்லச் சொன்னுர். அதன்பேரிலே அவர் கணக்கு ரங்கப்பிள்ளையை எண்ணி ஒப்புவித்துக்கொள்ளச் சொன்னவிடத்திலே சரியா யிருக்கிறதென்று ரங்கப்பிள்ளை வந்து சொல்ல, அந்தப்படிக்கு நான் போய் துரைக்குக் கபுறு சொன்னேன். நல்லது, தேவனும் பட்டணத்திலேயிருந்து வந்த சோபுதாரன் சேவகர்கள் அவ் விடத்துச் சேதி மனுவார் கப்பல் சேதி சொல்லுகிருர்கள். அதைச் சாடையாய் அறிந்துவந்து சொல்லென்று சொன்னுர். அதன்பேரிலே ராத்திரி அவர்களுக்குப் படி கொடுக்கச்சொல் லிச் சாப்பிட்டு வரச்சொன்னேன் அந்தப்படிக்கு சாப்பிட்டு வந்த பிறகு இரண்டு தமிழர் சேவகர் சொன்னசேதி விஸ்தார மாய் சுவாரஸ்யமான வார்த்தையை மாத்திரம் எழுதுகிறேன்; என்னவென்ருல்: மனுவார்கப்பல் வங்காளத்துக்குப் பாயெடுத் தான் இதிலே சீர்மையிலேயிருந்து பத்துக் கப்பல் புறப்பட்ட சேதி வந்தபடியினுலே போகாமல் சென்னப்பட்டணத் துக்கு பழவேற்காட்டுக்கு நடுவே இருக்கிறதென்றும், அதிலே இரண்டுமூன்று கப்பல் இவ்விடத்திலேதானேயிருக்கு மென்றும் இப்போது துறையிலேயிருக்கிற கப்பல் சீர்மைக் கப்பலொன்றும் நாட்டுக்கப்பலொன்றும், சீர்மைக்கப்பலிலே இடிவிழுந்ததென்றும் இடிவிழுந்த மிஸ்துரு முஸ்தீதுபண்ணி, பங்காளத்துக்கு இன்றைக்குள்ளே நாளைக்குள்ளே பாயெ டுத்து ஓடிப்போமென்று சொல்லியும், பின்னை ஒரு நாட்டுக் கப்பல் ஐந்தாறு நாள் பொறுத்து அதுவும் பொறுத்து பங்கா ளத்துக்குத்தான் பாயெடுத்துப் போகுதென்றும் சொல்லி, தேவனும்பட்டணத்துக்குச் சேஷ்டாதேவி பிரவேசித்தால் மேஸ்தர் மாசு எப்போது உள்ளேவந்து பிரவேசித்தானே அப் போதே கோட்டை போச்சுதென்று எண்ணிக்கொள்ளுங் கோள். சென்னப்பட்டணம் ஒப்புவித்துப்போட்டான். இப் போது தேவனும்பட்டணத்தையும் ஒப்புவித்துப்போட்டு அப் பாலே போவோமென்று காத்துக்கொண்டிருக்கிருன் என்றும் இல்லாவிட்டால் குவர்னதோர் பேச்சு சின்ன துரைக்கு ஆகிற தில்லை. சின்ன துரை பேசியிருக்கிற பேச்சுக்கு ஆகிறதில்லை. அப்படி ஒன்றுக்கொன்று இட்டோட்டாகிடக்குது. அதற்கு

மூதேவி அடைந்தாள். உங்கள் துரைக்குச் சீதேவி அடைந் தாளானபடியினாலே தேவனாம்பட்டணம் உங்களை அடையும் அதற்கு அனுமானமில்லை. இல்லாவிட்டால் புதிதாய் வந்த மாயே (Mahé) சமேதாரன் பிக்கன்கானுக்கு அவர்களுக்கு ஆக வில்லை. அப்படி வில்லும் விளாங்காயுமாயிருந்து ஒன்றுக் கொன்று ஒவ்வாமல் இருக்கிறது. அந்தப் பொல்லாதவேளைக்கு வருகிற ஹேஷியமென்று சொன்னாளிந்தச் சேதியெல்லாம் கேட்டு அவனுக்குச் சாப்பாடுபோடச் சொல்லிப் போய்ப் படுத்துக்கொள்ளச் சொல்லச் சொன்னேன்.

முன் 7உக்கு 20உ சுக்கிரவாரம் நாள், நாசற்சங்கு லசுக் கருலேயிருந்து முன்னாலே மைலாப்பூரிலே மாபூசுகானுடன் கூடியிருந்து பறிகொடுத்து வந்தவர்கள் மாபூசுகானிவ்விடத் துக்குச் சமாதானத்துக்கு வந்தபோது இவர்கள் தட்டு முட் டைக் கொடுத்துவிடச் சொல்லிச் சொன்னதற்குத் துரை யிருந்துகொண்டு இவர்களுக்குக் கொடுத்தால் எல்லாருக்குங் கொடுக்கவேணுமென்று துரை பறிகரித்துப் போட்டதின் பேரிலே மாபூசுகான் வார்த்தைத் தட்டலாகாதென்று சொல்லி நான் நாற்பது ஐம்பது ரூபாய்க் கொடுத்து அவர்களுக்குச் சமா தானம் பண்ணி அனுப்பினவிடத்திலே அவர்கள் நாசற்சங்கு தண்டுக்குப் போய்ப் பிராஞ்சுக்காரருடைய சூரத்துவமும் இங்கிலீசுக்காரருடைய நாமுறுதமும் இவர்கள் சொல்லிக் கொண்டிருந்ததின் பேரிலே நாசற்சங்கு இவர்கள் விஸ்தார மாய் சொன்னதாகவும், அதன்பேரிலே இங்கிலீசுக்காரர் மனு ஷர் போய்ப் பேசி சென்னப்பட்டணம் வாங்கிக்கொடுத்தால் பத்து லக்ஷம் வராகன் கொடுக்கவும், அவர்கள் வருகிறதற்கு நடைகூலி நாள் ஒன்றுக்கு மூவாயிரம் கொடுக்கவும், ஒருவிடத் திலே தண்டயாய் நின்றால் அன்றைக்கு இரண்டாயிரம் வரா கன் கொடுக்கவும் இந்தப்படிக்கு உடம்படிகைப் பேசி சம்மதித்திருந்தவன் இந்த வார்த்தையைக் கேட்ட வுடனே இப்படிப்பட்ட மேட்டை மாரியன் பேச்சை நம்பி நாம் எப்படிப் போகிறது? இப்பவும் அவர்களை நம்முடைய தண் டிலேயிருக்கவொட்டாமல் துரத்திவிடுங்கோளென்று சொல்லி விட்டு அவர்கள் கொண்டுவந்த வெகுமானத்தையும் வாங்காமல் புறப்பட்டு அவர்கள் தகப்பனாரிருக்கிற அவுரங்காபாத்துக்குப் போகவேணுமென்று சித்திரகண்டிகள் மார்க்கமாய் மூன்று

மச்சிலிப்பயணம் சாகிப்போனுரென்று நாசற்சங்கு தண்டுக்குள்ளே எசமானனுயிருக்கப்பட்ட பக்கிரி மீருசா மகம்மதுகான் சாயபு என்கிறவன் கோகிலனும், அசரத்து நவாபு அன்வற்திகான் மகனும், மாபூசுகானும் தண்டிலே நடக்கிற சமாசாரமெல்லாம் அன்றாடம் கமவர்க்கானிவுசு எழுதி பாச்சாவுக்கு அனுப்புகிற சய்யதுகானும் இவர்கள் மூன்று பேரும் நம்முடைய பேருக்கு எழுதின பாரிசு கடுதாசியை முசியே திலார்சு திராஞ்சிலிட்டுப்பண்ணி பிராஞ்சு வார்த்தையிலே எழுதி துரைக்குக் காண்பித்துக் கடுதாசிக்கு நக்கல் எழுதி சாயுமான பெட்டியிலே வைத்திருக்கிறது.

நாசற்சங்கு மைசூரின்பேரிலே வந்திறங்கி ஐம்பது லக்ஷம் அறுபது லக்ஷம் வாங்கவேணுமென்று பெலத்திருந்தவன் இப்போது இருபத்தேழு லக்ஷம் ரூபாய்த் தீர்த்துக்கொண்டு இத்தனை உட்டா உட்டியாய்ப்போகிறது எதனுலேயென்ருல் நிசாம் அவுரங்காபாத்துக் கோட்டையண்டையிலே இருக்கிற தவுலத்தாபாத்து கோட்டையை வாங்கவேணுமென்று சொல்லி மூன்று வருஷமாக மோர்சா போட்டுச் சண்டைபண்ணிக்கொண்டிருக்கிற சமாசாரம் கில்லேதார் பார்சாவுக்கு எழுதியனுப்பினதின் பேரிலே அந்தச் சேதி பார்சா அறிந்து அப்போது அமீன் ஒமருலாயிருக்கப்பட்ட ஒரு பெரிய மனுஷரை அழைப்பித்து அறுபதுனுயிரம் குதிரையும், லக்ஷம் சிப்பாய் தளமும் கூட்டி நிசைமை ஒண்ணுகை இப்படியாய்ப் பிடித்துவருகிறது. அல்லவென்ருல் அவனுடைய தலையை வெட்டிக்கொண்டு வருகிறதென்றும், அவனுக்கும் நிர் உத்தாரமாகக் கொடுத்து அனுப்புவித்ததின்பேரிலே அவனும் அப்படிதானே தளங் கூட்டிக்கொண்டு பயணம் புறப்பட்டு நற்மதே என்ற நதிக்கப்பாலிருக்கப்பட்ட உசேனி முதலாகிய நிசாம் சாகீராகிய ராச்சியமெல்லாம் கட்டிக்கொண்டதுமல்லாமல் நிசாம் மனுஷரையெல்லாம் அங்கங்கே கைதுபண்ணித் தன்னுடைய மனுஷரைப் பதிலுக்குப் போட்டு அங்கங்கே தஸ்தா யிருக்கிற பணங்களெல்லாம் எடுத்துக்கொண்டு நற்மதே என்கிற நதிக்கு அக்கரையிலே வந்து இறங்கினுர் என்கிற கபுறு நிசாமுக்கு வந்து அதன்பேரிலே அவன் தன்னுடைய மகனுகிய நாசற்சங்குவை சீக்கிரமாக வரச் சொல்லியும் சாவு ராசாவை இரண்டு லக்ஷம் குதிரையும் அஷ்ட

பிரதானியாகிற ரகோசி போன சுரு, பத்தேசிங்கு முதலாகிய படைத்தலைவர்மாரையும் அனுப்புவிக்கச் சொல்லி எழுதின படியினாலே அது நிமித்தியம் நாசறசங்கும் உட்டா உட்டி யாய்ப் போனான் என்று கபுறு வந்து சொன்னார்கள்.

1747 ஆ ஒக்தோபர் மீ 27 உ கீத பிரபவ ஐ அய்ப்பிசி மீ 14 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரண்டைக்குப் போனவிடத்திலே ரங்கப்பிள்ளை, கபுறு கேட்டியா சீர்மைக் காகிதம் நேற்றுச் சாயங்காலம் சூரத்திலேயிருந்து வந்த காசி துக்கன் கையிலே வந்ததுகள் சென்னப்பட்டணம் பிடித்த சமாசாரம் கேட்டார்கள். கும்பினியார் வெகு குசாலாயிருக்கிறார்கள். பதினைந்து கப்பல் சண்டைக்கப்பல் கும்பினீர் கப்பல்கூட நேற்று மார்ச்சு மீ கடைசியிலே அனுப்பினோமென்று எழுதினார்கள். கும்பினீருக்கு அக்குசியோ முசந்தது கும்பினீரிலே வெகு திரவியமிருக்கிறதென்றும், பிராஞ்சு ராசாவிசுரும் பிச்சு இங்கிலீசுக்காரருக்கு நிற்கத் தாவில்லாமற்போச்சுதென்றுமிதன்பேரிலே வெகுசாய் ராச்சியம் நொந்துபோச்சுது இனிமேல் தாளாதென்று அவரவர் சமாதானம் பேசுகிறபடியினாலே சீக்கிரத்துக்குச் சமாதானமாய்ப் போய் 1748-ம் ஆண்டு சண்டையிராதென்று சமாதான சேதி வருமென்றும், தாமசு கொல்லிகான் (Tahmashquli Khan) பந்தபாசி முதலான சாகையெல்லாம் பிடித்துக்கொண்டிருந்த இங்கிலீசுக்காரரையெல்லாம் துரத்திவிட்டானென்றும், அந்தக் கலாபத்துக் காகப் பந்தபாசி பக்ராவிலேயிருக்கிற இங்கிலீசுக்காரர் பணம் ஏற்றிக்கொண்டு வரச்சே முசியே லே மத்திரி போதாராம் கையிலே அது அகப்பட்டது என்றும், அதிலே பத்து லக்ஷம் ரூபா இருந்ததென்றும், பின்னை ஒரு சீர்மைக்கப்பல் பிடித்ததிலே இரண்டுலக்ஷம் ரூபாய் இருந்ததென்றும், இரண்டு கப்பலும் அதனுடைய வகையரா மூன்று லக்ஷம் ரூபாய் ஆக பதினைந்து லக்ஷம் ரூபாய் என்றும் இதற்கு பிராஞ்சு ராசாவுக்கு ஐந்திலே ஒரு பங்கு, அமிலாருக்குப் பத்துலே ஒரு பங்கு ொ ் மற்றது கப்பல் கப்பித்தான் முதலான கிளாசுக்காரர் உள்பட பங்கு விதமாய் முடிய எடுத்துக்கொள்ளுகிறதென்றும் இவர்களுக்குச் சம்பளமில்லை இதுவே ஆதாயமென்றும்

இப்படியாகத் துரை சொன்னார். அப்படியானால் நல்லதென்று சேதி சொன்னேன். மெய்தான் இந்தக் கப்பல் இந்த மாதம் இந்த விடத்துக்கு வரக்கூடாதோ அச்சை-மெருகி (Achin-Mergui) இந்த வட்டாரங்களிலே இமவெறனூட்டுத் தேசம் பர்மீ பத்துப் பதினைந்து தேதியிலே வந்து சேருமென்று சொன்னார். இதல்லாம் சொல்லச்சே சந்தோஷம் கபுறு மெத்த உற்சாகமாகச் சொல்லவில்லோவேணும், அசந்தப்போலே சொன்னார். முன்னாலே முகமும் உற்சாகமும் தப்பி இருக்கிறது. இது எந்தச் சாடையோ தெரியவில்லை. இனிமேல் வசப்படும்.

இற்றைநாள் சாயங்காலம் பிடுதிசுக் கப்பல் (Portuguese ship) கப்பித்தான் அந்தோனி கைதானு தெக்காம்பு (Antonie de caettano de campos) என்று பேர். இந்தக் கப்பல் சதுரங்கப்பட்டணத்திலே பலகையும் கயிறும் இறக்கிப்போட்டு அங்கேயிருந்து மைலாப்பூருக்குப் போய்க் கட்டு ஏற்றிக் கொண்டு அவ்விடத்திலேயிருந்து கோவை (goa) க்குப் போகத் தக்கதாக இற்றைநாள் சாயங்காலம் நாலரை மணிக்கு வந்து சேர்ந்தது. இவ்விடத்திலே முசியே மறித்சோம் கூட்டின சரக்கும் ஏற்றிக்கொண்டு பிராஞ்சுக் கொமிசேல் லெவிசெனுக்கு அனுப்புகிற வெகுமானம் பல்லக்கு முதலான வெள்ளியின் பேரிலே பொன் முலாம்பண்ணி வெகு நேர்த்தியாக வேலைப் பாடாக செய்திருக்கிற தட்டுமுட்டுக் கிண்ணம் முதலானது எத்தோப்புதோர் முதலான புடவை தினுசும் ஏற்றிக்கொண்டு போகத் தக்கதாக வந்து துறை பிடித்துச் சினிபோட்டுப் பீரங்கியும் போட்டு முசியே லெஸ்தித்து என்கிறவனும் இறங்கி வந்தால் பிடித்து, கப்பல் கப்பித்தான் அந்தோனி கப்பித்தானும் தெக்கான் என்கிறவனும் மைலாப்பூரிலேயிருந்து சதுரங்கப் பட்டணத்துக்கு வந்து அவ்விடத்லேயிருந்து இவ்விடம் வந்து சேர்ந்தான். இற்றைநாள் ராத்திரி இங்கிலீசுக்காரன் கப்பல் ஒன்று இதற்கு நேராய் ஓசந்து வந்து வைத்துப் பிடித்து இரண்டு வாங்கு பெட்டியிலே சொல்தாதுகளை இறக்கிக் கப்பலண்டைக்கு அனுப்புவித்து, நீ என்ன என் பிறகே வருகிறாயா என்ன சேதி, என்று கேட்டனுப்புவித்தால் அந்தக் கட்டிலே நல்லது வருகிறோம், மூன்று பாயெடுத்து ராத்திரிதானே ஓடிப் போனான். போன கப்பற்காரன் காமாண்டோரைக் கண்டு

பேசி உத்தரவு வாங்கிக்கொண்டு மறுபடியும் வருவான் என்று சொல்லுகிறார்கள்.

தேவனாம்பட்டணத்திலேயிருந்த சீர்மைக் கப்பல் பங்காளத்துக்குப் பாயெடுத்ததென்று சேதி வந்தது. சென்னப்பட்டணம் அந்த வட்டாரங்களிலே போயிருந்த மனுவார்கப்பல் எட்டுக் கப்பலும் ஆலம்புரவை துறைக்கு நெருங்கி கிடக்குதென்றும், பிடுதிசுக் கப்பல்காரனும் (Portuguese Ship) கண்டோமென்று சொன்னான், நம்முடைய தபால் சேவகரும் கண்டுவந்து சொன்னார்கள், ஆலம்புரவையிலேயிருக்கிற காரியக்காரனும் எழுதி அனுப்பினான். சம்புதாசுவிசேரேக்கு அனுப்பின காகிதம் அவர்கள் மனுஷர் கொண்டுவந்து அந்தோனி கப்பித்தான் தேகாம்பு என்கிற கப்பல் கப்பித்தான் கையிலே இற்றைநாள் ராத்திரி கொண்டுவந்து கொடுத்தான். சம்புதாசு விசேரேக்கு எழுதினது என்னவென்றால்: அந்த நிமித்தியம் என்னவென்றால் அந்தோனி கப்பித்தான் தேகாம்பு என்கிறவன் மைலாப்பூருக்குப் போனவிடத்திலே சென்னப்பட்டணத்தாரானால் இப்படி பிராஞ்சுக்காரரைத் தொட்டுப் பார்த்துப்போச்சுதே, மைலாப்பூரிலே கனக்காயி பிடுதிசுக்கொடி (Portuguese flag) கொண்டு வந்து போட்டால் வர்த்தகரெல்லாரையும் அழைப்பித்து விக்கிறோம். பட்டணம் மாமூலாய் நடப்பிக்கிறோமென்று சொன்னதின்பேரிலே அப்படித்தானே விசேரேயுடனே (Viceroy) சொல்லி நான் வந்து மைலாப்பூரை மாமூலுபண்ணுகிறோமென்று என்னதைப் புளுகினானோ தெரியாது, அதின் பேரிலே அவனுக்குப் புடவை சீலை பூமான் மற்றது விஸ்தாரம் கொடுத்து அது நிமித்தியம் கடுதாசி எழுதியனுப்பினான். இனிமேல் அது முதலாகிய காரியங்களெல்லாம் தம்முடைய முகாந்திரமாய் நடக்கவேணுமென்று எழுதியனுப்பினான்.

1747 ஆ நோவம்பர் மீ 1௨ க்கு பிரபவ ஹு அற்பசி மீ ௨ புதன்கிழமை

இற்றைநாள் தேவனாம்பட்டணத்திலே இருந்து வந்த சேதி என்னவென்றால்: மாயேயிலேயிருந்து தேவனாம்பட்டணத்துக்கு வந்திருந்த சிப்பாய்களுக்கு எசமான் பிக்கன்கான் மமுதுகான் முதலான சமேதார் ஐந்தாறு பேரைப் பிடித்

நுக் கோட்டையிலே காவல்பண்ணினார்களாம். அது எதனாலே யென்றால், அவர்கள் புதுச்சேரியாருக்கு உளவாய் நடக்கிறார்கள் என்கிற கபுறு அறிந்து காவல் பண்ணினார்கள். நான் பிக்கன்கானுக்கனுப்பின சந்தனத்துக்கும்எனக்கும்எழுதின காகிதமவர்கள் ரங்கப்பனுயக்கன் மனுஷர்கையிலே அகப்பட்டதென்றும் கொண்டுவந்த மனுஷனையும் ஐம்பது அடி அடித்து அந்தச் சமேதாரரையும் கோட்டையிலே கிடங்கிலே போட்டார்கள். அதன்பேரிலே மாயேயிலேயிருந்து வந்த சிப்பாய்கள் சமேதாரர்பேரிலே நம்பிக்கைப் போச்சுது. பொம்பாயிலேயிருந்து வந்த சிப்பாய்களின்பேரிலேயும் சமேதாரன்பேரிலேயும் நம்பிக்கையாயிருக்கிறார்கள். அதுவும் என்னமாகிறதோ தெரியாது.

1747 ஆ நவம்பர் மூ 2உ க்கு பிரவப ஸு அப்பிசி மீ 20உ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே, பிரபு அண்டைக்குப் போன விடத்திலே மழை சுறுக்காய்ப் பெய்து, மனுஷர் வெளியேயிருந்துவந்ததில்லையாவென்றும், தேவனாம்பட்டணத்துச்சேதி துறையிலிருந்த ஒரு கப்பல் கூடலூர் முகத்துவாரத்தண்டையிலே உடைந்ததென்று கபுறு வந்தது. அந்தச் சேதி சொன்னேன். சண்டைக் கப்பல் சமாசாரம் தெரியவில்லையாவென்று கேட்டார். மற்றக் கப்பல்களெல்லாம் தப்பினப்போலேயும், அதிலே இரண்டொருத்தர் தெற்கே முறித்துக்கொண்டு போனதாய்ச்சேதி வந்ததென்று சொன்னேன். அப்பால் நடந்த சேதி ஒன்றும் தெரியவில்லை என்று சொன்னேன். இந்தவிசை நல்ல மழை பெய்தது. இன்னும் மழை பெய்யும் என்று பேசியிருந்தார்கள். அதிலே சேக்கு அப்துல் ரயிமான் சமேதாரன் வந்தான். இப்போது ஐம்பது பேர் தேவனாம்பட்டணத்திலேயிருந்து சிப்பாய்கள் வந்தார்களென்றும் அதிலே ஆறு பேர் என் தாலுக்குச் சேவகர் இவ்விடத்திலேயிருந்து தேவனாம்பட்டணத்துக்குப் போய் இருந்தவருள்ளே மறுபடியும் வந்தார்களென்று சொல்லி அதுகூட ஐம்பது பேர் என்று சொன்னார்கள். அதற்குத் துரை ரங்கப்பன் வசம்பண்ணவேணும் அவர்களை நீ வைத்துக்கொள்ளப் போகாது. உன் சம்பளத்துக்கு அரைவாசி சம்பளம் அவர் தாலுக்குச் சேவகருக்கு. ஆனபடியி

னுலே இனிமேல் ரங்கப்பர் தாலுக்குச் சேவகர் எல்லாரும் உத்தியோகம் கவையில்லையென்று சொல்லி அப்பால் தாலுக்கிலே சேரலாம் என்று புத்தி வருமென்றும், ஆனபடியினுலே அவர்களுக்கு வேணுமென்றால் ஒரு வெகுமானம்பண்ணுவார் என்றும் சொல்லி இந்தமட்டுக்கும் நானூறு சிப்பாய்கள் மாயேயிலேயிருந்து தேவனும்பட்டணம் வந்தவர்களிலே இந்த மட்டுக்கும் நானூறு பேர் இவ்விடத்துக்கு வந்தார்களே இனிமேல் கொஞ்சம் பேர் அங்கே இருக்கிறபேரென்று சொன்னப்போலே வெகு பேர் இன்னும் இருக்கிறார்களென்றும் சொன்னார். அதற்குத் துரை வந்தவர்களெல்லாம் ஐந்நூறு பேர் பின்னையும் ஐம்பது பேர் கூட்டிக்கொண்டு வந்தாலும் அதி நூற்றைம்பது ஆகாது. அதற்கு நானூறு பேர் இவ்விடத்துக்கு வந்து சேர்ந்தார்களென்று நிலவரம் எழுதுவித்ததாய் இன்னும் இருநூற்றைம்பது பேர்தானே உண்டென்று சொன்னார். இவன் இவ்விடத்திலே துரையுடனே நாளதுவரைக்கும் சேக்கு அப்துல் ரஹிமான் அபத்தம் சொல்லிக்கொண்டு ஆற்காட்டாரை அரும்பாத்தைச் சாவடியிலே வைத்து அவர்களுக்குத் துப்பாக்கிச் சாடை பழக்கிவைத்து அப்பால் மாயேயிலேயிருந்துவந்து தேவனும்பட்டணத்திலே இருந்தவர்களை அழைப்பித்தேனென்று பொய்ச்சொல்லிகொண்டுவந்தான். அதனாலே மலைத்து உத்தாரஞ் சொன்னான். அதுகளெல்லாம் நான் விஸ்தரித்துச் சொல்லாமல் லகுவாய் மெய்தானென்று சொல்லென்று சொன்னேன். அப்புறம் மெய்தானென்று சொன்னான். இந்தப்படி பொய்ச்சொல்லி காசுக் கொண்டுபோகிற பேரும் இருக்கிறார்கள். இதுகள் தெரியாமல் அற்ப செலவிலே துரை பிடித்துக் கெட்டியாக உத்தாரம் சொல்லுவார்.

1747 ஆ நொவம்பர் ௴ 7உ க்கு பிரபவ ஹு அற்பிசி ௴ 25உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரண்டைக்குப் போனவிடத்திலே முசியே சுவாசி (M. Choisy) சாவுக்கு மாத்திரம் புரிசே உபசாரம் சொல்ல, அவருக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தன. அவன் கலியாணம்பண்ணின பிற்பாடு ஒரு பிள்ளை முன்னே செத்துப்போச்சுது. மற்றொரு பிள்ளை அவன் சாகிற அன்று கூடச் செத்தது. ஆனபடியினாலே பாக்கியில்லை என்று சொல்லி, நல்ல குணவான், புத்திசாலி போய்விட்டான்

என்று தாபந்தமாய்ச் சொன்னார். அதற்கு அதைப் பெருக்கச் சொல்லி அப்பால் தெற்கே கூடலூர் தேவனாம்பட்டணம் சேதி மாயேயிலேயிருந்துவந்த பிக்கன்கான் முதலான சமேதாரனைக் காவல்பண்ணின பிறகு துக்கன் கன விலங்குப்போட்டுக் குண்டுசாலைக்குள்ளேயெல்லாம் கட்டுப்பண்ண வயணம் வெளி மனுஷர்கள் ஒருத்தரையும் உள்ளேவிடத் தேவையில்லை. உன் மனிதன் வெளியே போகவேணுமென்றால் ஒரு வெள்ளைக்கார னுக்குப் பரிக்ஷைக் கொடுக்க, அவன் சீட்டுக் கொடுத்தால் அந்தச் சீட்டை வாங்கிவந்து கொமிசேல் தெபியோர் சேருவைக் காரனுக்குக் காண்பித்து அவன் சீட்டு வாங்கிக்கொண்டு சாலை யிலே இருக்கிறவர்களுக்குக் கொடுத்து வெளியிலே போக வேணுமேயல்லாமல் சும்மா போகப்படாதென்று கட்டுபண்ணி னார்கள். ஆனபடியினாலே உள்ளே இருக்கிறவர்கள் வெளியே புறப்படுகிறது ரொம்பவும் பிரயாசம், வெளியே இருக்கிறவர் கள்தான் உள்ளே போகிறதுதானில்லையே! இப்படியிருக் கிறது. அவர்களிப்படி கட்டுபண்ணினது. ஆனபடியினாலே உன்கபுறு வருகிறது ரொம்பவும் பிரயாசம் என்று சொன் னேன். இப்படியானால் உள்ளே இருக்கிறவர்களுக்கு ரொம்பவும் பிரயாசமென்று சொன்னார். இதுமாத்திரம் இந்தச் சந்துக்கட்டிலே புதுச்சேரியார் வந்தார்களென்று வெள்ளைக்காரர் காதம் இரு நூறு காத வழியிலே யிருக்கிற நாசற்சங்கு தண்டுக்குப் போய் உம்முடைய கீர்த்தியும் சவுகரிய பராக்கிரமங்களையும் இங்கிலீசுக்காரருடைய நாமுருதத் தன மும் சொன்னவிடத்திலே அவன்கூட பயந்து வருகிறோமென்று இருந்தவன் அப்பாலே வேறே ஒரு பானு போட்டுக்கொண்டு போய்விட்டானென்று நாசற்சங்கு வசுக்கர் பக்குசியும், வாக் காவினிசும், ஆற்காட்டு நபா மாபூசுகானும் எழுதி அனுப்பி யிருக்க நீங்களிவர்கள் காரியத்துக்கு அட்டி சொன்னால் நானு கிலும் கொடுத்துப் போகச் சொல்லுகிறேன் என்று ஒரு நாழிகை மல்கட்டி உத்தாரம் சொன்னதின்பேரிலே அவர்கள் என்ன, போகக்கடித்துக்கொண்டார்களென்றும் சொல்லுகிறார் கள். என்றும் சொன்னார். இரு நூறு வராகனுக்கு அதனமே சொல்லுகிறார்கள். இதல்லாமல் குதிரைகள் இரண்டு வேறே சொல்லுகிறார்கள். இரு நூறு வராகன் மாத்திரம் கொடுத்தால் சமாதானமாய்ப் போவார்கள். மாபூசுகான் முதலான பக்குசு களுக்கு மக்காலூனிசிக்குச் சந்தோஷப்படுவார்கள். உங்கள் கீர்த்தியும் கொண்டாடுவார்களென்று சொன்னதின்பேரிலே

தம்முடைய கணக்கப்பிள்ளை ரங்கப்பிள்ளையை அழைத்து அறு நூற்றி நாற்பது ரூபாய் கொடுக்கச்சொன்னார். அந்தப் படிக்குக் கணக்கப்பிள்ளை கொடுத்தார். அதை அவர்களுக்குக் கொடுத்து மேலே எழுதப்பட்ட மாபூசுகான் சாயபு அவர்களுக்குக் காகிதம் எழுதிக்கொடுத்து இரண்டு சிப்பாய்களையும் பயணம்பண்ணிப் போகச் சொன்னேன். மற்றப்படி வேறே அதிசயமில்லை. பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன். பகலுக்கு மேலே சொக்கப்பமுதலியாருக்கு முன் ஒரு வைரக் கடுக்கன் கொடுத்ததும் அல்லாமல் இப்போது கொடுக்கவேண்டியதற்கு வாலாபேட்டை முத்தியப்பிள்ளை திருமலப்பிள்ளை பேருக்குக் காகிதம் எழுதிக்கொடுத்து ரவானாபண்ணி அனுப்பி விட்டேன். அவர் அனுப்புவித்துக்கொண்டு நாளையதினம் பயணம் போகிறோம் என்று சொன்னார்.

*1747* ஆ நொவம்பர் மீ 9௳ க்கு பிரபவ ௵ அற்பிசி மீ 27௳ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரண்டைக்குப் போனவிடத்திலே முசியே துய்ப்ளேக்ஸ் பங்காளத்திலே யிருக்கச்சே பண்ணின நாற்காலியை வைத்து ஏறுகிற பல்லக்குப் புதிதாக முஸ்தீதுபண்ணுவித்துக் கும்பினிருக்கு விற்றுப் போட்டு அதை விசெரேக்கு ( Viceroy ), கோவை ( Goa ) க்கு அனுப்பத்தக்கதாக முஸ்தீதுபண்ணச்சொல்லி முன் முசியே கோர்னேக்கு உத்தாரம் கொடுத்திருந்த முஸ்தீது எல்லாம் வாங்கிப்போட்டுப் புதிதாய் முஸ்தீது பண்ணிக்கொண்டுவந்து ஒரு நாள் ராத்திரி அதளகுதவப்பட்டதென்று சொன்னதற்குப் பயம் பிடித்துக்கொண்டதென்று சொல்லி, இப்படி யின்னையும் லோகாபிரமமாய்ப் பேசியிருந்தார்.

இற்றைநாள் சாயங்காலம் சென்னப்பட்டணம் திருவட்டீஸ்வரர் கோவிலிலேயிருந்து லோகபிரான்முதலியையும், கூட ஊர் மதுரைநாயகம்பிள்ளை குமாரன் ஐயாக்கண்ணையும், இரண்டு சேவகரையும் ஆக நாலு பேரையும் மாயே சிப்பாய்கள் இருபது பேர் பிடித்து வந்தார்கள். இங்கிலிசுக்காரருக்கு அவவிடத்துச் சமாசாரஞ் சொல்லியனுப்பினதாய் முசியே துலோராம் கபுறு கேட்டுப் பிடித்தனுப்பினதாக இற்றைநாள் கொண்டுவந்து சாவடியிலே காவல் வைத்தார்கள். மாயே

சிப்பாய்கள் சொன்னதாக மறுபடி ஏகாம்பரமுதலி மகன் லோக பிரான்முதலியல்ல; பிடிக்கச்சொன்ன ஆள் தப்பிப்போனான். ஆள் தப்பிதமாய்ப் பிடித்துவந்தோமென்றும் சொல்லுகிறார் களென்று கூட வந்தவர்கள் சொன்னார்கள். சவிஸ்தாரமாக இனிமேல் அறியவேணும்.

1747 ஆ நொவம்பர் மீ 8உ க்கு பிரபவ ஆ ஐப்பசி மீ 26 உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களிடத்துக்குப் போனவிடத்திலே தெற்கித்து வடக்கித்துச் சமாசாரம் வர வில்லையாவென்று கேட்டார். வடக்கித்துச் சமாசாரங்கள் வந்தன. ஆற்காட்டுச் சமாசாரம் வந்தது. மழை மிகுதியாக இவ்விடத்திலே பெய்ந்ததைப் பார்க்கிலும் அதிசயமான மழை யென்று சொல்லுகிறார்கள். தெற்கித்துச் சேதிமாத்திரம் வர வில்லையென்று சொன்னேன். மெய்தான் காரைக்கால் காகிதங் கள்கூட வரவில்லையென்று சொன்னார். நேற்றுத் துவக்கிக் காயுறபடியினாலே ஆறுகளெல்லாம் வடிவு கொடுக்கும், மனுஷர் போக்குவர்த்து உண்டாகி இருக்குமென்றும் சொன்னேன். மழை இன்னும் விட்டதில்லை. இதோ வடக்கே மப்பு வைக்கிற தென்று சொன்னார். தென்றல் காற்று வருகிறபடியினாலே மழை நின்றதாக எண்ணிக்கொள்ளுங்கோளென்று சொன் னேன். அப்படி எண்ணப்போகாதென்றும் அப்புறம் லோகா பிரமமாய்ப் பேசியிருந்தோம். அப்பால் நாசற்சங்கு லசுக் கரிலே யிருந்து உங்கள் கீர்த்திப் பிறக்கக் கட்டம்பண்ண இரண்டு சிப்பாய்கள் வந்து வெகு நாளாச்சுது. காத்துக்கொண் டிருக்கிறார்களென்று சொன்னதற்கு இவர்களுக்குக் கொடுத் தால் இனிமேல் மைலாப்பூரிலே மாபூசுகான் சண்டையிலே கொள்ளைக் கொடுத்தவர்கள் எல்லாரும் வந்து, அவர்களுக்குக் கொடுக்கவில்லையா, எங்களுக்கும் கொடுக்கவேணுமென்று கேட் பார்கள். ஆளுக்கொன்று கொடுத்துத் தீருமென்று சொன்னார். அவர்களைப்போலேயா இவர்கள் என்று காண்பித்தான். அதைப் பார்த்துக்கொண்டிருந்தார். அப்பால் என்னை அழைத்து விசராவுக்கு (Viceroy) திருவாங்கோட்டுப் பால மார்த்தாண்ட ராசாவுக்குப் பதிலுத்தரம் எழுதச்சொல்லி அவர்களின்னமனுப்பின காகிதமும் என் கையிலே கொடுத்து இவர்களுக்குத் தஸ்தாவேசு தருமாமல் உபசாரமாய் அவர்கள்

எழுதின காரியத்துக்குத் தக்கதாய்ப் பதிலுத்தரம் எழுதிப் போடச் சொன்னார். நல்லதென்று அவர்களனுப்பின காகிதத்தை என் கையிலே கொடுத்ததையும் வாங்கிக்கொண்டு வந்து பாக்குக் கிடங்குக்கு வந்தேன். அவர்கள் இரண்டுபேருக்கும் எழுதின காகிதத்துக்குச் சவ்வாது எழுதிக்கட்டியிருக்கிறது.

*1747* ஆ நொவம்பர் மீ *10*வ க்கு பிரபவ ஸு அற்பிசி மீ 28வ சுக்கிரவாரம்.

இற்றை நாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்கு வந்த விடத்திலே காவல் தபால்காரர் வந்து காரைக்கால் இன்றைந் தாம்நாள் கொடுத்த காகிதத்தையும் அந்தத்தபால் சேவகனையும் இங்கிலீசுக்காரன் மஷனூன் வந்து பிடித்துப்போனார்களென்று கபுறு வந்து சொன்னதைச் சொன்னமாத்திரத்திலே அவருக்குக் கோபம் வந்து அந்தச்சேவகனைத் தானே கொண்டுபோய்க் கொடுத்ததேயல்லாமல் இந்த மழையிலே அவர்கள் மனுஷர் ஏது வருகிறது என்று கோபமாய்ச்சொல்லி, அந்தத் தபாலை சிதம்பரமட்டுக்கு மிருக்கிறதை வாங்கிப் போடச்சொன்னது மல்லாமல் அவர்கள் உத்தியோகம் கூட பரிகரித்துப்போட்டு விடச் சொல்லச் சொல்லென்று கோபமாய்ச் சொன்னார். இந்த வேளை கோபமாயிருக்கிற வேளை, பேசப்போகாதென்று சும்மா வந்துவிட்டேன். ஒரு நாழிகை பொறுத்து அப்பால் பின்னையும் என்னை யழைத்து ஆறுகால் தண்ணீர் வடிவுண்டாயிருக்குதே நெற்கித்துச்சேதி வரவில்லையா வென்று கேட்டதின்பேரிலே இப்போது வடிவுண்டாயிருக்க, நாளை நாளையநன்றையதினத்திலே சேதி வரும். இந்த அரியாங்குப்பத்து அக்கரையிலே ஐந்நூறு, அறுநூறு பொதிவந்து ஆறுகடக்கமாட்டாமல் கரையிலே யிருக்குதென்று சேதி வந்ததைச் சொன்னவுடனே அது மெய்தான், பொதி வருகிறது பிரயாசந்தான், விலை எப்படி யிருக்குதென்று கேட்டார். இனிமேல் ஏற்படும் விளைகால் தானியத்தை மாத்திரம் வந்தவாசியாள் எடுத்துக்கொள்ளச் சொல்லி எருதுக்கார வர்த்தகரைச் சொல்லுகிறான். அவர்கள் மாட்டோம் என்று சொல்லுகிறார்கள் என்று முன்வந்த பொதிக்காரர்கள் சொன்னார்களென்று சாவடி கணக்கப்பிள்ளை சொன்னதைச் சொன்னேன். நல்லது பின்னையும் செஞ்சி வழுதாவூர் இந்தக் கோட்டைகளுக்கு றஸ்து சேர்த்துவைத்திருப்

பாரகளே அதிலே நானூறு கரிசை மாத்திரம் வாங்கிப்போடச் சொல்லி நிர்உத்தரவாய் உத்தாரம் கொடுத்தார். நல்லது சற்றுச் சவுக்கை முகம் பார்த்து வாங்குகிறேன் என்று சொல்லி விட்டு லோகாபிரமமாய்ச் சேதிபாதிகள் பேசியிருந்ததின் பேரிலே மழை வருகிறாப்போலே யிருக்கிறது. நாம் நினைத்த காரியத்திற்கு விரோதமாக இருக்கிறதென்று சொன்னார். சுவாமி உமக்குத் தயவுபண்ணியிருக்கிறார். இந்த நாள் தேவனாம்பட்டணம் பத்தே ஆகுமென்று சொன்னதற்கு நான்தானே போய்ச் சண்டைபண்ணுகிறேனென்றும் இந்த தடவை நான் போனால் முன்னேயேபோல வரத்தக்கதில்லை, பத்தேயானாலே யல்லாமல் என்று சொன்னார். மெய்தான் நீ போகவும் அட்டியாயிருக்கவும் என்று இப்போது அவர் நினைத்தபடிக்குச் சுவாமி முடிப்பிக்கிற காலமானபடியினாலே அதற்கு உத்தரவு சொல்லிவிட்டுப் பனிரெண்டு மணி வேளைக்கு வீட்டுக்குப் போனேன்.

மூன்றரை மணிக்குக் குவர்னதோர் அழைத்தனுப்பி பிடுகிசு (Portuguese) இங்கிலீசுக்காரர் கொண்டுபோனது பறங்கிப்பேட்டை வந்து சேர்ந்தது. ஆலம்பரவியிலே ஏதாகிலும் சம்பானுகளிருந்தால் இரண்டு உருப்படி நூற்றைம்பது அறுபது கட்டு ஏறுகிறதாய்ப் பார்த்துக் கேழ்வு பேசிக்கொண்டு வந்தால் அந்தப்படிக்குக் கேழ்வு உண்டானதும் கொடுத்து உருவுக்குச் சேதம் வந்தால் அதவும் கொடுக்கிறோம். கேழ்வு பின்னேயும் சற்றுக் கூட்டிக் கொடுக்கிறோம் என்று முசியே பிரீஞ்சோம் (M. Brignon) துரைகூட சொன்னார்கள். அதன் பேரிலே ஆலம்பரவியிலிருந்துவந்த முசல்யனையும் கும்பினீர்ச் சேவகரையும் அழைத்துக் கேட்டால் ஒரு உருவு ஆற்றிலே விட்டிருக்கிறதாகவும், ஒன்று வேலைசெய்கிறதாகவும் சொன்னார்கள். அதை அமத்திவரச்சொல்லி அவர்களைப் பயணம் பண்ணி அனுப்பினேன். அப்பால் துரை சவாரி போனார். நானும் கும்பினீர் வர்த்தகர் வீட்டுக்குப் போய் ராத்திரி பத்து மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

1747 ஆ நோவம்பர் மீ 11 உக்கு பிரபவ௵ அற்பிசி மீ 29உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே சேர்ந்தமங்கலம் கோட்டையிலே முசியே மேன்வில், சேன்ழாக்கு முதலானவர்கள் சரக்குகளுக்கு

வெள்ளைக்காரனரை காவல் வைத்திருக்கிறதே அந்த இடத்திலே யிருந்து வெங்கட்டநாராயணய்யன் ஒரு ஓலையும், வெள்ளைக் காரர் துரை பேருக்குக் காகிதமும், முசியே சேன்ழாக்த என் பேருக்கு ஒரு காகிதமும் எழுதியனுப்புவித்ததை குருவய்யன் என்கிற பிராமணன் கொண்டுவந்தான். வெங்கட்டநாராயணய் யன் எழுதின ஓலையில்தான் போனதும் நடந்ததும் வள்ள வாசகம் பனிரெண்டு ஏட்டுக்கு எழுதினான். அதிலே சுவாரசிய மான பேச்சைமாத்திரம் எழுதுகிறேன். தான் சேர்ந்தமங்கலம் கோட்டைக்காரனுக்குக் காகிதமும் கொடுத்து, இரண்டு சக லாத்துக் கத்திரி சூர்க்கத்திகளும் கொடுத்தபிற்பாடு அவன் ரொம்பவும் தாபந்தப்பட்டு இவர்கள் மார்க்கஸ்தராய்ப் போகிற வர்கள் ஒரு கெடிலஸ்தலக்காரர் அட்டியாய் நிறுத்தினாலும் நல்ல பேச்சாக சொல்லிப் போகிறதற்கில்லாமல் சுட்டபடியினாலே எங் கள் மனுஷருக்குக் காயம் பட்டது. நான் சாகாமல் தப்பினேன். அதனாலே பிடித்துக் காவல்பண்ணி என்னைத் தப்பித்துக் கொள்ளுகிறதற்கு இவர்கள் பேரிலே நேரத்தை ஏற்றி எழுதி னேன். சுத்துப்பட்டிலே யிருக்கிற கெடிலஸ்தலக்காரர் என் பேரிலே கோபமிருக்கிறதினாலே மார்க்கஸ்தராயிருந்து போகிற வர்கள் அவர்களை அடித்து அவர்கள் கொண்டுபோகிற தறவி எல்லாவற்றையும் ரத்தினங்களையும் கொள்ளையிட்டுப் போட்டுக் கொண்டானென்று எழுதினதின்பேரிலே தளவா சிரங்கப் பட்டணத்திலே யிருந்து மனுஷரையும் அனுப்பித் தட்டுகளை யும் பார்த்துச் சோதித்து எழுதுகிறதற்கு வெள்ளைக்காரரை விலங்கு போடுவிக்கச்சொல்லி எழுதி வந்ததாய் நான் தள்ளப் போகாதபடியினாலே விலங்கு போட்டேன். இனிமேல் அதைத் தள்ளப் போகாதே. அந்தப்படியே செய்தேன். இனிமேல் உங்களுக்காகப் பிரயாசைப்பட்டுக் கார்த்திகை மீ 10உ தேதிக் குள்ளே விடுதலைபண்ணுகிறேனென்று எங்கள் தமையன் பட் டணத்திலே போய் இருக்கிறான். அவனுக்குத் தயவாய் புதி தாய் வந்தபடியினாலே அவனுக்கும் பிரதானி பண்டிதருக்கும் எழுதித் தருகிறேன். அதற்கு முன்னூறு வராகனும் தளவாவுக் கும் பிரதானிக்கும் தங்கள் தமையனுக்கும் நூற்றைம்பது வராகனும் இந்தப்படிக்குக் கொடுத்தால் உங்கள் காரியம் அநுகூலம்பண்ணிக் கொடுக்கச்சொல்லி மூன்று பேருக்குக் காகிதம் எழுதிக் கொடுத்துத் தன்னையும் இந்த மீ 24உ ராத் திரி பயணம் அனுப்பினாரென்று தானும் சாகிப்போனேனென் றும் முன்னூற்றைம்பது வராகனால் காரியம் அநுகூலம்.

பண்ணலாமென்றும், இதற்கு உத்தாம் சீரங்கப்பட்டணத்துக்குச் சீக்கிரமத்துக்கு வந்துசேர அனுப்புவிக்கவேணுமென்றும் செலவு சித்தாயமில்லாமல் கோபாலதாசுடனே கண்டு பேசி என்றைக்கும் பிரஞ்சுக்காரர் மனுஷர் போகிறதற்கும் வருகிறதற்கும் தடையில்லை. அதனாலே சொன்னது வாங்கி வருகிறேன் என்றும், இதல்லாமல் தன் சிநேகிதன் ஞானம் என்றொருத்தன் ராசாவினிடத்திலே அதிக மோகமாயிருக்கிறான் என்றும், அவனைக்கொண்டாகிலும் செலவு சித்தாயமில்லாமல் பத்து நாளைக்குள்ளே இனம்பண்ணிக்கொண்டு வருகிறேனென்றும், ஒருத்தாலும் சும்மாய் வரத்தக்கதில்லையென்றும் இப்படியாக எழுதின ஓலையும் முசியே சேன்ழாக்த என் பேருக்கு எழுதின காகிதத்திலே முசியே மேன்வீல், முசியே இயோம், தான் மூன்று பேருக்கும் ஆரோக்கியமாச்சுதென்றும், முசியே மோசு, முசியே கர்லியே இவர்கள் இரண்டு பேருக்குங் காயமாற மின்னும் ஆறு நாள் செல்லும் என்றும் உன் மனுஷர் வந்தவர்கள் சீரங்கப்பட்டணத்துக்குப்போய் உனக்கு அங்கே யிருக்கிற சிநேகிதன் மூன்னிலையாய்ப் பேசினால் எங்கள் காரியம் கெட்டியாய் ஆகுமென்றும், இவ்விடத்திலே கெடிலஸ்தலத்திலே யிருக்கிற குப்பய்யல் என்கிற அதிகாரிகள் பொல்லாதவன் என்றும் தங்களுக்கு உன் மனுஷன் எனசிற கபுறு கேட்ட பிற்பாடு விலங்கு போட்டானென்றும், தங்கள் தட்டு முட்டுகள் இருக்கிறதைக் கொடுக்கிறதற்கு ஐயாயிரம் வராகன் கேட்கிறானென்றும் இப்படியாக எழுதினான்.

அமுல்தாரன் குப்பய்யர் தம்பி எழுதினது உங்கள் காகிதம் வந்தபிற்பாடு உங்கள் வக்கீல் வெங்கட்ட நாராயணய்யன் வந்து சொன்னபிற்பாடும் சகலமும் தெரியவந்தது என்றும், இவர்கள் முன்னாக வந்தவர் இப்படி நடக்கதக்கதில்லை யென்றும் இப்பவும் தன் தமையனாருக்குத் தளவா பிரதானி பண்டிதருக்குக் காகிதம் எழுதி அனுப்பி நடக்கவேண்டிய வயணத்துக்கு வெங்கட்ட நாராயணய்யனுடனே சொல்லி அனுப்பினேன். அவர் பட்டணத்துக்குப் போனவுடனே அந்தப்படிக்குச் சீக்கிரத்துக்குக் காரியம் அனுகூலம் பண்ணிக்கொடுக்கும்படி செய்வார் இவர்களை கார்த்திகை மீ 10வயிலே மாயேயிக்கு அனுப்புவிக்கிறேனென்றும், பல்லக்குக்கூட கொடுத்து வெகுமதியும்பண்ணி அனுப்புகிறோமென்றும். மிஞ்சிபட்ட

ணத்துக்கு எழுதி அனுப்பிவிட்டபடியினலே அவ்விடத்திலே யிருந்து விலங்குப் போடச்சொல்லி எழுதிவந்தது. அவ்விடத்திற்கு உத்தாரத்தை தள்ளப்போகாதென்றும், அந்தப்படிக்கு விலங்குப்போட்டேன் அவ்விடத்து உத்திரவில்லாமல் விடக்கூடாதென்றும் இப்படியாகத் துரைபேருக்கு ஒரு காகிதமும் என் பேருக்கு ஒரு காகிதமும் அனுப்பின சமாசாரமும் துரையுடனே சொல்லி அனுப்பின காகிதமும் கொடுத்தேன். அந்தக் காகிதமும் படிக்கச்சே அவருக்குக்கோபம் வந்தது. வந்த உடனே விலங்குப்போட காரியமென்ன, இங்கேயிருந்து பார்ப்பானையுங்கூடக் கட்டிக்கொண்டு நடத்தினுப்போலே காணுதென்று சொல்லச்சே அப்புறத்திலே போன வெங்கட்ட நாராயணய்யனைத்தொட்டு முன் போட்டிருந்த பெரும் விலங்கைத் தட்டிப்போட்டு வேறே மேலே மெல்லிசாய்க்கொடி விலங்காய் போடுவித்தான் என்றும் தங்கள் தட்டுமுட்டுகள் எல்லாம் வாங்கிக்கொடுத்தானென்றும் இவன் வந்தபிற்பாடு தங்களுக்குச் சவுகரியமென்றும், மைசூரிலே யிருந்து குறிமனுஷர் வந்தபடியினுலே இங்கே இருக்கிற காரியம் விசாரித்து எழுதினுர்கள்.

வந்த ரெங்கப்பன் மனுஷனும் சீரங்கப்பட்டணத்துக்குப் போனுனென்றும் இவன் சீரங்கப்பட்டணத்துக்குப் போனுல் ரங்கப்பன் சினேகிதனுக இருக்கிற வர்த்தகனைத்தொட்டுத் தங்களுக்குக் காரியமாமென்று எழுதியிருந்த பிறகு சந்தோஷமாக உத்தரவுசொல்லி, பதில் காகிதம் எழுதி அனுப்பச் சொல்லி, தாமும் ருசியே மேன்விலுக்து ஒரு காகிதம் எழுதி என் கையிலே உன் மனுஷனுக்குச் சேர்ந்தமங்கலம் கெடிலஸ்தலம் அதிகாரஸ்தனுக்குப் பதிலுத்தரவு எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதி என்னென்ன எப்படி யெப்படி அனுப்பவேணுமோ அபபடிச்செய்யச் சொல்லச் சொன்னுர்.

அந்தப்படிக்கு வந்து பாக்குக் கிடங்குக்கு வந்திருந்து கோபாலதாசுக்கு, பொக்கிஷம் வீரிசெட்டியாருக்கு, மன்னப்ப செட்டிக்கு வெங்கட்ட நாராயணய்யனுக்குக் காகிதங்கள் சீக்கிரமாக அனுகூலம் பண்ணிக்கொண்டு கொடுக்கச்சொல்லியும் இந்தச் செலவுக்கு அறுநூற்றி நாற்பது ரூபாய் கொடுக்கச் சொல்லிக் காசிதாசு புக்கன்சி குமாஸ்தா சிரங்கப்பட்டணத்

திலே யிருக்கிறவனுக்கு இந்த ஊரிலே சங்கர் தருவாடி உண்டி எழுதிக் கொடுத்தான். அந்த உண்டியை வெங்கட்டநாராயணய்யன் காகிதத்தைவைத்து அவ்விடத்துச் செலவு இதற்குள்ளே அடக்கிக்கொண்டு காரியம் அனுகூலம் பண்ணிக்கொண்டு சேர்ந்தமங்கலம் கோட்டைக்குப்போய், வெள்ளைக்காரரை விடுதலைபண்ணி, மாயேயிக்கு அனுப்பிவிட்டு வரச்சொல்லியும் செலவில்லாமல் நடப்பித்ததால் நீர் போனதற்கு எனக்கும் பிரபுவினிடத்திலே பிரதிஷ்டை வரும் செலவுபண்ணிக் காரியம் பண்ணிக்கொண்டு வந்தால் பிரதிஷ்டையில்லை. பணம் பெரிதல்ல, லக்ஷம் தரம் சம்பாதிக்கலாம். ஒரு சமயத்திலே கீர்த்தி சம்பாதிக்கிறது. ரொம்ப பிரயாசையென்று அதற்குத் தக்கதாப்போலே எழுதி அவரவர்களுக்கு எழுதின காகிதங்களுக்கெல்லாம் சவ்வாது எழுதிக் கட்டிக்கொண்டு, அப்பால் முத்திரைப்போட்டு மைசூருக்குப் பயணம்பண்ணிக்கொண்டு பிராமணரை அனுப்புவித்தோம். சேர்ந்தமங்கலம் கோட்டைக்கு இரண்டு பேரையும் பயணம்பண்ணிக் கோட்டை கெடிலஸ்தலம் குப்பய்யாதம்பிக்குத் துரை காகிதமும் என் காகிதமும் கொடுத்தனுப்புவித்தேன். அப்பால் காசுதாக புக்கன்சி குமஸ்தா ஹரிசங்கர் தருவாடிக்கு அவர் சீரங்கப்பட்டணத்து குமஸ்தாவுக்கு உண்டிகைக் கொடுத்து அறுநூற்றி நாற்பது ரூபாய்க்கு நாம் ஒரு உடம்படிக்கை எழுதிக் கொடுத்தோம். வெங்கட்டநாராயணய்யன் வசம் சீரங்கப்பட்டணத்திலே அறுநூற்றி நாற்பது ரூபாய் கொடுத்து அவரே ரசீது வாங்கி அனுப்பினால் உண்டாவணியும் வட்டியும் முதலும் கூட்டிக் கும்பினீரிலே வாங்கிக்கொடுக்கிறேன் என்று எழுதிக்கொடுத்து அதற்குச் சவ்வாது எழுதிக் கட்டிக்கொண்டேன்.

இந்தப்படி ஐந்து மணிக்கு ரவானாபண்ணி அனுப்பிவிட்டுத் துரை வீட்டுக்கு எதிராகப் பதினைந்து காணிக்கு முன்பாகச் சண்டைபண்ணுகிற சாடை வெள்ளைக்காரரும், மாயே சிப்பாய்களும், குதிரைகளும் அவர்களும் பீரங்கிகள் சுடுகிற சாடையாய்த் தோற்றிச் சாடையாம்படிக்கே சண்டைபண்ணி பழக்குகிறார்கள். துரைகள், மற்றப் பேர்கள், வெள்ளைக்காரரும் கோட்டை அலங்கத்தின்பேரிலே யிருந்து பார்த்தார்கள். நானும் சேஷாசலசெட்டி முதலான பேர்களும் கோன்சேல் வீட்டு

அண்டையிலேயிருந்து பார்த்துவிட்டு, அப்பால் பாக்குக் கிடங்கிலே வந்திருந்துவிட்டு வீட்டுக்குப் போனேன்.

*1747* ஆ நோவம்பர் மீ *12*உ கீத பிரபவ ஞூ அற்பிசி மீ *30*உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரமைப்பித்து ஆலம்புரவிக்கு இரண்டு சம்மானமத்திக் கொண்டுவரச்சொல்லி எழுதியனுப்பினியே, புடுதிசுக்காரன் (Portuguese) கப்பல் வந்ததே ஆனபடியினாலே கவையில்லையென்று எழுதி அனுப்பிவிடு. ஒருவேளை அவர்கள் சென்னப்பட்டணத்துக்குப் போய்ச் சரக்கு ஏற்றிக்கொண்டு இவ்விடத்திற்கு வருகிறதானால் வரச் சொல்லி எழுதியனுப்புமென்று சொன்னார். அந்தப்படிக்கு முசலய்யன் பேருக்குக் காகிதமெழுதி தபாலிலே கொடுத்து அனுப்பினேன். அப்பால் பிடுதிசுக் கப்பலுக்கு (Portuguese) முசியே பிரிங்சோம் (M. Brignon) கூட்டின சரக்குகளெல்லாம் ஏற்றுகிறார்கள். இவனுக்கு இங்கிலீசுக் கப்பல் எங்கே வருகிறதோ என்ற பயத்தினாலே சீக்கிரமத்துக்குக் கட்டுகளை ஏற்றச்சொன்னான். இவர்களும் முசியே பொடுத்தல்மே (Barthelemy) கூட கட்டு ஏற்றுகிறானிந்தவேளைக்கு இப்படி நடக்கிறது. அப்பால் மத்தியானம் வீட்டுக்குப் போனேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஆறு மணிக்கு நடந்த சேதி: பாக்குக் கிடங்குக்குப் போயிருக்கச்சே அப்புமுதலியண்டையிலே இருக்கும் பிராமணன் வந்து சொன்ன சேதி என்னவென்றால்: உங்கள் முத்திரைப்போட்ட காகிதம் ஒன்று நீங்கள் யாருக்காகிலும் அனுப்பியிருக்கிறீர்களோ என்னமோ, அந்தக் காகிதம் வந்ததைச் சேருவைக்காரர் மறைத்து வைத்திருக்கிறார்களென்று வந்து சொன்னார். அதன்பேரிலே சேருவைக்காரன் சாந்தப்பனையும் முத்தப்பனையும் அழைத்து அனுப்பினவிடத்திலே வந்தார்கள். காகிதமேது, வந்ததேது, நீங்கள் வைத்திருக்கிறதேதென்று கேட்டேன். அதற்கு மெய்தான், சென்னப்பட்டணத்து தபாலுக்குச் சேவகன் தபாலிலே வந்த காகிதங்கள் வாங்கிவந்தான். அதிலே ஒரு காகிதம் லகோடா கிழித்திருக்கிறது. உங்கள் முத்திரையும் போட்டிருக்கிறது. அதற்கு அந்தச் சேவகன் கையிலேதானே கொடுத்தனுப்புவித்தோம். அது உங்கள்ண்டைக்கு வந்து

சேரவில்லையாவென்று கேட்டார்கள். அது நான் கேட்டிருந்த காரியத்திற்கு இவர்கள் சொன்னதற்கு ஆச்சரியமாயிருந்தது. அப்போது நான் சொன்னது: நீங்கள் சேருவைக்காரர் இருக்கிற மட்டுக்கும் வருகிற காகிதங்கள் ஸ்ரீ துரையவர்களுக்குக் காண்பித்தபிற்பாடு வெள்ளைக்காரர் காகிதம் இருக்கிறது போகத் தமிழ்க் காகிதங்கள் உண்டாயிருக்கிறது எனக்குக் காண்பிக்க, அப்பால் யார் கையிலேயாகிலும் கொடுக்க வேணுமேயல்லாமல் நீங்கள் காகிதத்தை வைத்துக்கொள்ளக் காரியமென்னவென்று கேட்டு, நல்லது நீங்கள் காகிதத்தைச் சேவகன் கையிலே கொடுத்தனுப்பினது பொய், உங்கள் வசம் இருக்கிறது. நல்லது நாளைக்கு ஸ்ரீ துரையவர்களுடனே சொல்லுகிறேன். இனிமேல் நான் வேறே ஒரு சேர்வைக்காரனை கபுறு சொல்லுகிறதற்குத் துரையைக் கேட்டுவைத்துக்கொள்ள வேணுமே என்று என்ன செய்கிறது என்று சொன்னேன். ஐயா, அப்படிச் செய்வோமா, அந்தச் சேவகனை அழைத்து வருகிறோமென்று சொல்லிவிட்டுப் போனார்கள். நல்லது வருவார்கள் என்று இருந்தேன். ராத்திரி ஒன்பது மணிக்குப் பாக்குக் கிடங்கிவிருந்து வீட்டுக்குப் போனபிற்பாடு வந்த கபுறு என்னவென்றால்: சாயங்காலம் கப்சுகோவிலண்டையிலே துரை இருக்கச்சே தபால் வந்த காகிதத்திலே யிருந்த கிழிச்சலைப் பற்றிக் கேட்டார். உம்முடைய முத்திரை சிகப்பு அரக்கிலே போட்டிருந்ததென்றும், மேல்விலாசம் அய்யாக்கண்ணு என்று எழுதி யிருந்ததென்றும், அதைப் பார்த்தவுடனே சேருவைக்காரன் முத்தன் மலையப்பமுதலிக்குக் காண்பித்தானென்றும், முத்திரை ரெங்கப்பன் முத்திரை தான் காகிதம் அய்யாக்கண்ணு பேருக்கு எழுதியிருக்கிறதென்றப்போலே சேருவைக்காரன் முத்தையன் சீக்கிரமாக வாங்கிக்கொண்டு துரை பெண்சாதி கையிலே கொடுத்தானென்றும், அவன் வாங்கி சாக்கிலே போட்டுக்கொண்டானென்றும், மதுரநாயகமும் அய்யாக்கண்ணும் இங்கிலீசுக்காரருக்கு உளவாயிருந்து கபுறு எழுதினார்கள் என்றும், பிடித்துக்கொண்டு வந்து சாவடியிலே காவல் வைத்திருக்கிறதே அவனுக்கும் நமக்கும் சிறிது அந்தரங்கம் நடந்ததாய்ச் சிறிது காரியங்கள் இந்தக் காகிதத்திலிருக்குமென்றும் யோசனைபண்ணி, முத்தன் கொண்டுபோய் துரை பெண்சாதி கையிலே கொடுத்ததும் அவளும் முழுமனதுடனே நம்முடைய பேரிலே குற்றம் அகப்பட்டது. இதைத்தொட்டு

நம்மை வெட்டி வித்துப்போட்டுத் தன் மனதிலே யிருக்கிற பழியைத் தீர்த்துக்கொள்ளவாமென்று யோசனை பண்ணி, மகா உற்சாகத்தை அடைந்திருந்தார்கள். அந்நேரம் வரலாமென் கிற (Varlam) திருட்டுப் பயல் அங்கே இல்லாதபடியினாலே காகிதம் விழுத்துப் பார்க்கிறதற்கில்லாமல் அட்டியா யிருந்தது. ஆனால் நம்முடைய முத்திரைப்போட்ட காகிதம் அய்யாக்கண்ணு பேருக்கு வருவானேனென்றும் நாலைந்து வருஷமயவனுக்கும் நமக்கும் பேச்சுவார்த்தை ஒலைதாவில் சால்சவாது உத்தரம் பிரதி உத்திரம் ஒன்றும் நடவாமலிருக்க இந்தக் காகிதம் அய்யாக்கண்ணுபேரிருப்பானேன்? அதிலே நம்முடைய முத்திரை காரியமென்ன? நம்முடைய மனோவாக் காய கர்மங்களிலேயும் நாம் அறியோமோ? அப்படியிருக்க இது வங்கமட்டுக்கும் துரை பெண்சாதி முன் பெத்திஸியோம் எழுதிவித்துப் போடவேணுமென்று நினைத்ததற்குக் கூடாமற் போச்சுது. இப்படி ஒரு இடுவந்தியெப்போமென்று யோசனை பண்ணி நம்முடைய முத்திரை மோதிரம் மதனாந்த பண்டி தன், இளைச்சியப்பன், சிவராமசாஸ்திரி, ராயப்பிள்ளையும் ஒரு வேலையிலே காகிதக்கணக்கெழுதுகிறவர்கள் வசத்திலே யிருக் கச்சே முத்திரையை மோசமாய் இவர்கள் மூன்றுபேரிலே ஒருத்தர் உளவின் பேரிலே நடப்பித்தார்களோ? அப்படி நடப்பித்தாலென்ன! காகிதங்களுக்கு என் கையெழுத்து இருக்கவேணுமே, அதிலே பொய்யாப்ப்போம். என்ன அபான் டம் யார் போடவேணுமென்று நினைத்தாலும் நம்மிடத்திலே யாதொரு கவையிலே வாகிலும் எசமான் துரோகம் உண்டா யிருந்தால் நமக்கு வரும். இது நம்மிடத்திலே மனோவாக்காய கர்மங்களிலேயும் இல்லாமலிருக்கிறபடியினாலே அபாண்டமாய்ப் போமென்று நினைக்கிறவர்கள் பேச்சே அபத்தமாக்கிப் போடு வார் சுவாமியென்றும், எண்ணிக்கொண்டு தைரியமாயிதிலே பிரபு கன்றாய் விசாரிக்கப்போகிறார். எல்லாம் பொய்யாய்ப் போய் பிரபு எல்லாரையும் இதற்குள் வரயிருந்தவர்கள். எல் லாம் கேசபம் பண்ணப்போறாரென்று எண்ணினேன். இற்றை நாள் நடந்தசேதி இந்தச் சம்மதி. நாளையதினம் என்ன நடக்கிறதோ அறியவேணும்.

1747 ஆ நொவம்பர் மீ 13உ ந்த பிரபவ ஹு கார்த்திகை மீ 1உ சோமவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி நேற்றையதினம் காகிதம் நம் முடைய முத்திரையென்றும் நம்முடைய கையெழுத்துதான்

என்றும், அது ஆனி மாதத்திலே என் குமாரத்தி பாப்பா கலியாணத்திற்கு வரச்சொல்லி எழுதின காகிதமென்றும், அதிலே மஞ்சள்தடவி இருக்கிறதென்றும், அதன்பேரிலே நேற்று உற்சாகமாய்க் கொண்டுபோய்த் துரை பெண்சாதி கையிலே கொடுத்தவர்கள் முகம் செத்துப்போய் இருக்கிறதென்று கபுறு வந்தது. இந்தக் கலியாணத்திற்குச் சமஸ்தமான பேருக்கு எழுதினபோது அவனுக்கும் எழுதியிருக்குமென்றும் கலியாணத்திற்கு அவர் பேருக்கு எழுதினதற்கு எழுதி இருக்கிற லிஸ்துரு பார்த்தவிடத்திலே அவர் எழுதியிருந்தது மெய்தான் என்று ஒத்துக்கொண்டேன்.

*1747* ஆ நோவம்பர் மீ 17உக்கு பிரபவ ஷு கார்த்திகை மீ 5உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே திருவாங்கோட்டு வஞ்சிவால் மார்த்தாண்ட ராசாவினுடைய மனுஷர் சோமாக்காயரும் ராசாவுக்கு எழுதின காகிதமும் கொடுத்து இரண்டு கெஜம் சகலாத்தும் வெகுமானம்பண்ணி அனுப்பினார்கள். அவர்கள் அனுப்புவித்துக்கொண்டு போனார்கள். இப்படி இருக்கச்சே, வடுகநாதமுதலியை அம்மாளழைக்கிறாள் என்று அழைத்துப் போய், நீ கொடுத்த சீட்டிலே ராசஸ்ரீ அம்மாளென்று எழுதாமல் சும்மா அம்மாளென்று எப்படி எழுதுவாய்? ரங்கப்பன் அப்படிப்பட்டவன் இப்படிப்பட்ட பொல்லாதவன் என்னைச் சட்டைப்பண்ணுகிறதில்லையென்று அப்புறம் சிறிது உதாசினமாயும் சொல்லி இவனைப் பதினைந்து அடி அடித்துச் சொன்னாளாம். இனிமேல் என் பேருக்கு வந்து சொன்ன மனுஷனைத் தெத்துவாசலிலே விட்டாலே ஆச்சுது. இல்லாவிட்டால் இப்படி ரங்கப்பனை செய்வேனென்று சொல்லிப் போகச் சொன்னாள். அந்த விசேஷத்தைத் துரை கையிலே அனுப்புவித்துக்கொண்டு வந்தபிற்பாடு வீட்டுக்குப் போகச்சே வடுகநாதமுதலி வந்து சொன்னான். அப்போது எனக்கிருந்த துக்கம எழுதி முடியாது. துரை காலிலே போய் விழுந்து அழுவோமென்று யோசனைபண்ணினேன். திரும்பியும் ஆலோசனை பண்ணிச் செய்வோமென்று வீட்டிற்குப் போனேன்.

*1747* ஆ நோவம்பர் மீ 18 உக்கு பிரபவ ஷு கார்த்திகை மீ 6உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் அவர்கள் மற்றுமுள்ள கோன்சேலியேர்களும் பத்தரை மணி மட்டுக்கும் கோன்

சேல் கூடியிருந்து கலந்தார்கள். கலந்தபிற்பாடு துரையவர்கள் என்னை அழைத்து இத்தனை நேரம் வெகு வேலை செய்தோம். சண்டைக்குக் கோன்சேலிலே உத்தரவு வாங்கிக் கொண்டேன். நான்தானே சண்டைக்குப் புறப்படுகிறேன். புறப்பட்டமட்டுக்கும் தேவனும்பட்டணம் கோட்டையை வாங்கினாலே யல்லாமல் திரும்புகிறதில்லையென்று சொன்னார். நீங்கள் கணக்காய் நினைத்தால் அந்தக் காரியம் முடிந்ததென்று எண்ணிக்கொள்ளுங்கள். நீங்கள் நினைக்கவும் முடியாதது ஒன்று உண்டா? சுவாமி உம்முடைய விடத்திலே யிருக்கிற பக்ஷமும் கடாக்ஷமும் மெத்ததானபடியினாலே நீ நினைத்த காரியமெல்லாம் முடியுமென்று சொன்னேன். அதற்கு நகைத்துக்கொண்டு அக்கள்ளுநாயக்கன் காட்டு மனுஷன் இங்கே வந்து கண்டு பேசி நூறு பேர் சேவகருக்கு நாம் சம்பளம் கொடுக்கத் திட்டம்பண்ணி இருக்கிறோமே, அவர்களுக்குச் சொல்லியனுப்பி நமக்கு மற்றதாய் வந்திருக்கச் சொல்லு. வழிகளில் தண்ணீர் இவ்வளவு, சேர் இன்னும் இன்னவிடத்திலே இருக்கிறது. இதுகள் வழி திட்டமாய் விசாரித்துகொண்டேயிருந்து நான் கேட்டபோது சொல்லென்று முகத்துவாரம் ஓரம் நடப்பார்கள். அந்த வழியே நடக்கச் சொல்லியும், போகிறவர்களைத் திட்டம்பண்ணச் சொல்லியும், ஒட்டகம் துலுக்கர்கள் வருகிறார்களென்று அவர்கள் பிறகே வருமேயென்று கேட்டார். யானைகள்கூட வருமென்று சொன்னேன். எருதுகளும் கோலார் வண்டிகளில் கட்டிவருமென்று சொன்னதற்கு எத்தனை நாள் செல்லுமென்று கேட்டார். பத்து நாளையிலே வருவார்களென்று சொன்னதற்கு இந்தக் காரியங்கள் சான்சாமி பண்ணுகிறது. உன் வேலை தேவையானபோது இன்னதின்னது வேணுமென்று உன்னுடனே சொல்லுகிறேனிதோவென்று கொடுக்கவேணுமிதுகளின்பேரிலே எப்போதும் நினைப்பாயிருமென்று சொன்னார். நம்முடைய பட்டணத்திலே வந்ததை வெளியே ஒரு துரும்பாகிலும் உங்கள் சண்டைக்கு வேண்டிய சான்சாமிகளை விடத்தக்கதில்லை. வந்ததை நீங்கள் கேட்டபோது ஆசிர்பண்ணுகிறேன். வழிகளுடனே சேர்ந்த கபுறும் அப்படித்தானென்று சொன்னேன். அக்கள்ளுநாயக்கன் இப்போது இருக்கிறவன் நீங்கள் கொஞ்சம் சிப்பாய்கள் மாத்திரம் அனுப்புவித்தால், கூடலூர் திருப்பாப்புலியூர் இரண்டையும் பிடித்துத் தருகிறேன் என்று சொல்லுகிறார்களென்று

சொன்னேன். நல்லது அவர்களுக்குச் செலவுக்குக் கொடுத்து அவர்களை கையிலே வைத்துக்கொள்ளு. அவர்கள் நமக்கு அநு கூலமாயிருந்தார்களே அவர்கள் ஊரையும், வண்டிப்பாளையத் தையும், அவர்களுக்கானால் திருப்பாப்புலியூரையும் வண்டிப் பாளையத்தையும் அவர்களுக்குக் கொடுக்கிறோமென்று நான் சொன்னதாய்க் கெட்டியாய் வார்த்தைப்பாடு கொடென்று சொன்னார். நல்லதய்யாவென்று சொன்னேன். அப்பால் அதுலாபிமான் கணக்குப் பெத்திஸியோமும் கொடுத்தேன். முசியே போலோவை அழைத்து அவர் கையிலே கொடுத்து எனக்கு எழுதுகிற காகிதத்துடனே முசியே லூய்யேத்துக்கு எழுதியனுப்பி இந்தக் கணக்குப் பெத்திஸியோமும் கூடக் கொடுத்து அனுப்பச்சொல்லி இதற்குக் கொப்பி கொண்டுவந்து கொடுக்கச் சொன்னார். நல்லதென்று வந்தேன். பனிரெண்டு அடித்தபடியினாலே வீட்டுக்கு வந்தேன்.

இற்றைநாள் மத்தியானம் கான்பாதூர் வருகிறான். வாசற் படிக்குச் சீட்டுக் கொடுக்கவேணுமென்று கையெழுத்து வாங் கின பிற்பாடு நமக்குக் கொடுக்கவேண்டிய பணம் கொண்டு வந்தானோ இல்லையோவென்று கேட்டார். பணத்துக்குச் சந்தா சாயபு பெண்சாதி நமக்கு உத்தரிக்கதாய் இருக்கவேயிருக் கிறாளென்று சொன்னதற்கு, அது மெய்தான், நம் அண்டை யிலே சிப்பாய்த்தனம்பண்ணச் சொல்லென்று சொன்னார். சின்ன மனிதரிடத்திலே சிப்பாய்த்தனம்பண்ணுகிறார்கள். பண்ணி னாலும் அப்பிரதிஷ்டை, பெரிய மனிதரிடத்திலே சாக்கரத் தனம்பண்ணாலும் பிரதிஷ்டையும் கீர்த்தியும் சொல்லி முடி யாது. ஆனபடியினாலே இப்போது நீங்கள் பார்த்து இருக்கச் சொன்னால் இருப்பாரென்று குசாமத்தி வார்த்தை சொன்னதின் பேரிலே நல்லது வரச்சொல் என்று சொன்னார். வந்தால் வாசற் படியிலே பீரங்கிப் போடவேணுமென்று சொன்னபடிக்குப் பீரங்கி மேஸ்திரியை அழைத்து உத்தாரங் கொடுத்தார். இந்த கான்பாதூர் வருகிறதற்கு ஐந்தாறு நாளைக்கு முன்பாக சந்தா சாயபு பெண்சாதியின் குமாரன் உத்தாரப்படிக்கென்று ராசோ பண்டிதர் வந்து கான்பாதூர் இவ்விடத்திற்கு அழைப்பிக்கச் சொல்லி சந்தாசாயபு எழுதியனுப்பியிருந்தார். அதற்கு நாங்கள் எழுதியனுப்பியிருந்ததற்கு கான்பாதூர் புதுச்சேரி குவர்ன

தோர் அவர்களுக்கு வராகன் கொடுக்கவேணும். இதல்லாமல் ரங்கப்பனுக்குக் கொடுக்கவேணுமென்று எழுதியனுப்பினர். சந்தாசாயபு பெண்சாதியும் ஷை குமாரனும் அந்த வராகனுக்கு நாங்கள் சம்மதிபண்ணுகிறோம். உன் சம்மதியும் நாங்கள் கொடுத்துவிடுகிறோம். நாங்களும் துரையவர்களுக்கு வராகன் கொடுக்கவேண்டியிருக்கிறதே அதுகூட கான்பாதூர் சம்மதி கூட நாங்கள் சம்மதிபண்ணுகிறோமென்று அம்மாள் சொல்லி கான்பா தூரை உள்ளே அழைப்பிக்கிறதற்கு உத்தாரம் வாங்கி வரச் சொன்னுளென்று கேட்டான். நல்லது துரை வீட்டு மட்டுக்கும் போனேம். துரை உயர மெத்தையின்பேரிலே போய் இருக்கிறர். போகக்கூடாதே. நானப்படி ஏறமாட்டேன். காலத்தாலேயாகுது அல்லவென்றுகிறே இறங்கினுலும் சாயங் காலமாய் ஏழு மணி அடிக்கிற வேளையிலே காகிதமாடுகிறதிலே உட்காருவார். காலத்தாலே ஆகுது என்று நான் கூட, ராசோ பண்டிதர்கூட. மதனுந்தபண்டிதர் கூட பாக்குக்கிடங்குக்கு வரச்சே இப்போது துரையுடனே சொல்லவேண்டியதென்ன? துரை மனதிலே கான்பாதூர் சம்மதி நீங்கள் கொடுப்பீர்கள் என்றுதானினைத்துக்கொண்டிருக்கிறர். எவ் சம்மதிக்கு அப் படிதான் என்றிருக்க நீங்களிப்போது நாங்கள் சம்மதிபண்ணு கிறேமென்று சொல்லிக்கொள்ள வந்தால் பழம் நழுவிப் பாலிலே விழுந்தாப்போலே யென்று சொல்லி நான் எச்சரிக் கிறேன். அல்லவென்று எச்சரியாவிட்டாலும் பணம் கேட் கச்சே உங்களை கேட்கிறேமென்று நான்கூட மதனுந்தபண்டி தர்கூட சொன்னதற்கு அவரும் கான்பாதூர் கடன் நீங்கள் சந்தாசாயபு பெண்சாதிக்குப் பெரியதென்று எண்ணப்போகி றீர்கள். இதல்ல எவ்வளவு ஆனலும் பெரிதல்லவென்று பிடா யாய்ப் பின்னையும் அனேகம் பேச்சு பேசிவிட்டு நல்லது நீங்கள் சொன்ன பேச்சு சந்தாசாயபு பெண்சாதியுடனே சொல்லு கிறேன். நல்லது உம்முடனே எச்சரித்தது போதாது. இன்னந் துரையுடனேயும் எச்சரிக்கவேணுமென்று போகச்சொன்னுல் நாளையகாலத்தாலே வருகிறேன் என்று சொல்லிப்போனர். பகலைக்கு மேலாக கான்பாதூர் நம்முடைய தோட்டத்திலே வந்திறங்கினர் என்ற கபுறு வந்தாப்போலே ஐம்பது துப் பாக்கிக்காரர் மலையப்பன்நயினர், வீராநாயக்கன், மதனுந்த பண்டிதர் இவர்கள் குதிரைக்கட்டி மேலேவர எதிராகப்போய் நான் அழைத்துவரச்சே ஐந்தரை மணிக்கு, அப்போது வழுதா

ஓர் வாசற்படியிலே ஒன்பது பீரங்கிப்போட்டார்கள். இருக்கிற ஏழ்மை எழுதிமுடியாது. நான் போனவுடனே எழுந்திருந்து கூட்டிக்கொண்டு அப்புறம் பல்லக்கு மேலே ஏறச் சொல்லி ஏறச்சே பல்லக்குமேலே போட்டிருக்கிற பன்னுங்கும் குசுமத்துக்காரருக்குக்கூட அவகாசமில்லாமலிருந்து நடத்தி, களைப்பாத்தாப்போலே எனக்கு மெத்த துக்கம் வந்தது. பத்து லக்ஷம் வராகனுக்கு இவன் பாரிசமாய் ஆஸ்தி வைத்து இதல்லாமல் அறுபது எழுபது லக்ஷம் ரூபாய் வேறே ஆஸ்தியாய் வைத்து ஆற்காட்டு சுபாயிவனுக்கு நேமித்து செத்துப்போன சாதத்ததுல்லாகான் என்னென்ன நவ நீதியை வைத்தாலும் அதிர்ஷ்ட மில்லாமல் இவனுக்கு ஒன்றும் வரப் போகிறதில்லை, அந்தக்கதை அப்படியிருக்கட்டும்; கான்பாதுரை சந்தாசாயபு வீட்டிலே கொண்டுபோய் விட்டு, பாக்கு வெற்றிலை வாங்கிக்கொண்டு பிற்பாடு வீட்டுக்குப் போனேன்.

*1747* ஆ நோவம்பர்மீ *19*உ கீந பிரபவ ௵ கார்த்திகைமீ *7*உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை கோவிலுக்குப் போய் வந்தபிற்பாடு நானும் போனேன். அப்பால் சென்னப்பட்டணத்திலே இருக்கிற குடிகள் அனைவரும், அப்போது கண்டி வெங்கய்யரைப் பயணம்பண்ணித் துரை பேருக்கு ஒரு காகிதமும் என் பேருக்கு ஒரு காகிதமும் எழுதியனுப்பினார்கள். அந்தக் காகிதத்துத் தலைப்பு முன் சிந்தாத்திரிப்பிள்ளையார்கோவில் மட்டுக்கும் இடித்து சிரவினார்கள். அந்தமட்டிலே நிறுத்தியிருந்தது. இப்போது லாகிரி கடைகள்மட்டுக்கும் இடிக்கிறதாய்க் கூச்சலிட்டார்கள். நாங்கள் சர்வ சோபானமும் போக்கடித்துக்கொண்டு வீடாகிலும் தப்பினால் போதுமென்று நிழவிலே இருப்போமென்றும் இதையும் இடிப்போமென்றால் எங்களுக்கு விஷப்பிரயோகம்பண்ணிக்கொள்ளுகிறதே யல்லாமல் வேறே இல்லையென்றும், அப்பால் உபசாரமும் தங்களுக்கு வந்த கஷ்ட காலத்தையும் எண்ணி ரொம்பவும் எழுதி அவர்கள் அனைவரும் கையெழுத்துகள் போட்டனுப்பினார்கள். அந்தக் காகிதத்தில் இருந்தது என் கையிலே என்ன எழுதி இருக்குதென்று கேட்டார். தெலுங்கிலே எழுதி சென்னப்பட்டணத்து வர்த்தகர் குடிகள் அனைவரும் கையெழுத்துப் போட்டிருக்கிறார்களென்று உபசாரம் ரொம்பவும் எழுதின

தாய்ச் சொல்லிவிட்டுப் படிக்கச்சொல்லி உத்தரம் கொடுத்தீர்களா? முன் சென்னப்பட்டணம் கலாபத்திலே சர்வ சோபானமும் போக்கடித்துக்கொண்டு காலம் கருப்புகளினலே மெலிந்து வேறே ஆதரவில்லை. உம்முடைய ஆதரவாகிய நிழலில் வந்து சேர்ந்து சாக்ஷாமடம் பிரமமாகிய வெய்யிலிலே அடிப்பட்ட கங்கையைச் சம்பனம் பண்ணிக்கொள்ளுவோமென்று யோசனை பண்ணிவந்த எங்களை ரட்சிக்கிறது பெரிய காரியமேயல்லாமல் அட்டி சொல்லுகிறது பெரிதல்ல. சுவாமி தயவினலே உமக்கு வெகு கீர்த்தியும் புண்ணியமும் அநேக திக்கு விஜயமும் உண்டாகப்போகிறதென்று இத்தனை சனங்கள் எழுதிக்கொண்டமன்ருட்டின்படிக்குத் தயவு பண்ணினல் உமக்குச் சுவாமி மேலே எழுதப்பட்ட இத்தோத்திர ஐசுவரியமெல்லாம் கொடுப்பார் என்றும், அந்தப்படிக்கு நாங்கள் உத்தரவாதியென்று எழுதினர்களென்றும், பின்னையும் எப்படி ஸ்தோத்தரித்துச் செப்பனிடவேணுமோ அந்தப்படிக்கெல்லாம் சொன்னதற்கு அவர் ஒரு பேச்சாய் என் வாய் மூடத்தக்கதாகச் சொன்னர். நான் அந்தப் பட்டணம் வைக்கவேணுமென்கிற மனதிருந்தால்லவோ இந்தப் பேச்சுகளெல்லாம் கேட்கவேணும். அதைச் சுற்றித் தரையாக்கி அவர்களைக் கொண்டுவந்து புதுச்சேரியிலே சேர்த்துப் பெரிய பட்டணமாக்கவேணுமென்று நினைந்திருக்கிற எனக்கு நீ சொல்லவருகிற யோசனை சரிப்படுமா? சுவாமி தயவினலே இந்தப் பட்டணம் சென்னப்பட்டணத்தைப் போலே நூறு பங்கு அதனமாய்ப் பண்ணவேணும் என்று நினைத்திருக்கிறதற்கு நீ சகாவாயிருக்கிறாப்போலே காணவில்லை. உன் நினைப்பைப் பார்த்தால் என்று ஒரு வாட்டு போட்டார். அதற்கு நான் உம்முடனே போனவருஷந்தானே என்ன சொன்னேன். விபவ வரு முதற்கொண்டு இந்தப் பட்டணம் மாமூருயம் காபிரு பலமாய் நடக்கும்; அப்போது வெகு சனம் வீடுகட்டுகிறதற்கு இடமில்லாமல் திரியப்போகிருர்களென்று சொல்லவில்லையா? அதற்கு இன்னும் நாலு மாதம் கெடுவு போகவேணும் என்று சொன்னேன். நல்லது வந்த பிராமணனுக்குத் தெரியச்சொல்லி அந்தச் சனங்களெல்லாம் இவ்விடத்துக்கு வந்து வீடுகட்டியிருக்கத்தக்கதாக எப்படிச் சொல்லவேணுமோ அப்படிச் சொல்லி அதற்கு அவர்களுக்கு உத்தாரம் சம்பிரமமாயிருக்கத் தக்கதாக எழுதி பிராமணனுக்குத் தெரியச்சொல்லச் சொல்லியனுப்பிவிடு என்று சொன்னர். அவர் உங்களை பேட்டி பண்ணிக்கொள்ள வேணுமென்று

நினைப்பாயிருக்கிறுரென்று சொன்னதற்கு, என்னத்துக்குக் கவையில்லே. நான் சொல்லுகிற உத்தரவல்லவா நீ சொல்லு கிறாது என்று சொல்லித் தேவனும்பட்டணத்திலே புதுசாய் ஆற்று ஓரத்திலே கட்டின மண்கொத்தளம் இடிந்துபோச்சு தென்றும், காப்பிரிகள் பிடித்த கொத்தளம் இடிந்துபோச்சு தென்றும் கபுறு கேட்டேன். இரண்டு மூன்று நாளேயிலே திட்டமாய்க் கபுறு விசாரித்துச் சொல்லென்று சொன்னுர். நல்லது என்று அனுப்புவித்துப் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் வந்த கபுறு: சென்னப் பட்டணத்திலே துறைக்கு நேராய் இரண்டு கப்பலும், மைலாப்பூர் துறைக்கு நேராக ஒரு கப்பலும் காணுதென்று கபுறு வந்தது. கப்பல் இன்னுருதென்று தெரியாது. தேவனும்பட்டணத் திற்கு நாலாம் நாள் போன கப்பல் தண்ணீர் விறகு ஏற்றிக் கொண்டு நேற்றுப் பாயெடுத்து அப்பாலே போனதாய்ச் சேதி வந்தது.

*1747* ஆ நொவம்பர் மீ *21*உ க்கு பிரபவ ஞு கார்த்திகை மீ *9*உ மங்களவாரம்.

இற்றைநாள் கார்வேட்டி ராசா பாளேயத்திலேயிருந்து ராமகிருஷ்ண சாஸ்திரியார் எழுதின காகிதத்தில் தாங்கள் போய்ச் சேர்ந்ததும் பல்லக்கு, ஓரொப்பாவும் சேஷம ராசாவுக் குக் கொடுத்ததற்கு வெகு சந்தோஷப்பட்டாரென்று நமக்கு யாசனூர் (Yasananoor) என்கிற கிராமம் ஆடி மீ முதற் கொண்டு தஸ்த்தான பணமும் கொடுத்துவிடச் சொல்லிச் சொன்னூ எழுதிக்கொடுத்துக் கந்தப்பனென்கிறவனே கிராமத் திற்கு அமல்தாரனுக நாம் அனுப்பினபடிக்கு அவர்களும் நாலு வராகனுக்கு வெகுமானம் கொடுத்துக் கிராமத்திற்குப் போகச் சொன்னவிடத்திலே ராமகிருஷ்ண சாஸ்திரிகள்கூட வந்து பார்த்துக் குசமத்துப் பெரிய குடி ஒருத்தனுக்கு இரண்டு கெசம் வெள்ளே சகலாத்துக் கொடுத்துத் திலாசா சொல்லி, பின்னே ஒரு குடியானவனுக்கு ஒரு பாகை முக்கால் வராகனிலே கொடுத்தோமென்றும் கிராமம், சாகுபடி விஸ்தாரமாய்ப் பண்ணச்சொல்லிச் சொன்னேம் என்றும், கிராமத்திற்கு ஆற்று வாய்க்கால் ஒன்று, ஏரி ஒன்று இருக்கிறதென்றும்,

ஆற்று வாய்க்காலுக்கும் ஏரிக்கும் உள்ள வாய்க்காலுக்கு இருநூறு முன்னூறு செலவழித்தால் வருஷம் 1-க்கு ஆயிரம் வராகன். நன்றாய்க் காணுமென்றும், எல்லை விஸ்தாரம் என்றும் அக்கிரகாரத்திற்குத் தான் சாசனம் எழுதி கையெழுத்துப் போட்டு அனுப்புகிறதற்குக் கரவெட்டி ராசா சமயம்பார்த்துக் கையெழுத்து வாங்கவேணும்; அவருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதே. ஆனபடியினாலே சமயம்பார்த்துக் கையெழுத்து வாங்கி அனுப்புகிறோமென்றும், மற்றப்படி அரண்மனைக்குப் படிப்புக் கவை இல்லையென்றும், சம்புதாசுக்குப் புக்கன்சி அவர்களுக்கு இருபதினாயிரம் வராகன்மட்டுக்கும் கொடுக்கவேண்டியிருக்கிறதென்றும், இப்போது அனுப்பின படிப்புக் கவை இல்லையென்றும், இதற்கு நடக்கவேண்டிய வயணம் எழுதி அனுப்பச்சொல்லியும், சக்கரவர்த்தி சீனிவாசாச்சாரியார் பேச்சுத் தவிர மற்றப்பேர் பேச்சு இவ்விடத்திலே நடக்கிறதில்லையென்றும், முப்பதினாயிரம் வராகன் சீர்மை சேஷமராசா (Seshamaradja) ஆச்சாரியார் ராவுபண்ணி ஆற்காட்டுப் பணத்தோடே சேர்ந்து எல்லாம் சமுதாயத்திற்குக் கொள்ளச் சொல்லித் திட்டம்பண்ணினாப்போலேயும், ஆச்சாரியாரை இவ்விடத்திற்கு அழைத்துவரச் சொன்னால் அழைத்துவருகிறோம் என்று ராமகிருஷ்ணசாஸ்திரியார் தமக்குச் சோடு சால்வையும், சோமன் சோடும், பாகையும், அப்புறம் போனவர்களுக்கெல்லாம் வெகுமானம் பண்ணினார்களென்றும் ராமகிருஷ்ணசாஸ்திரியார் எழுதின காகிதம் வந்து பானோசி சொன்னபோதும். தெரியவந்தது. இதற்கு உத்தரம் நாளையதினம் எழுதி அனுப்புகிறோம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே குவர்னதோர் அவர்களுடனே ஆற்காட்டிலிருந்து அறுக்காறு சிங்காரம் எழுதின காகிதம் தலபு சொன்னது முன் காளயுத்தி ௵ அந்தம் சித்தார்த்தி ௵ ஆதியில் இராணிதேசத்துப் பார்சாவை வெட்டிப்போட்டு அவனிடத்தில் முன் குடியாயிருந்து, அப்பால் திருடனாய் தலையை வெட்டிப்போடச் சொல்லி, அப்பால் நூறு குதிரை சமேதாரனாய் அதன்பேரிலே பவுன்சுக்கு எசமானனாகி அப்பால் அந்த எசமானனாகிய பார்சாவை வெட்டிப்போட்டுத் தான் நாதுருஷா வென்று பேருமிட்டுக்கொண்டு, அப்பாலே டில்லிபார்சா மமுது

சாவின்பேரிலே நிசாறபித்துவாயின்பேரிலே வந்து கான்தோ ருவைக்கொன்றும், மமுதுசா பார்சா ஏறுகிற தகுதத்தும் பின் னையும் வெகுபார்சாக்கள் சம்பாதிக்கப்பட்ட அனேக பூஷணங் கள் திரவியங்கள் சமஸ்தமும் கொள்ளையாடிப்போன நாது ருஷா பார்சாவை அவன் தம்பி மகள் கொன்றுபோட்டு அந்தப் பட்டத்துக்கு அதலசா என்று பேரிட்டுக்கொண்டிருக்கிறார் என்றும், மமுதுசா பார்சாராச்சியம் காபூல் மூலித்தான் கந்த கார் என்கிறது அவன் கட்டியிருந்ததெல்லாம் திரும்பியும் மமுதுசா பார்சா கட்டிக்கொண்டாரென்றும், நிசாம் தலை வெட்டிப்போடச்சொல்லி மமுதுசா பார்சா சாவுராசாவுக்கு எழுதினாரென்றும், நிசாம் வசமாயிருக்கிற ரகசியத்தை எந்த ராச்சியத்தை நீ கட்டிக்கொண்டாலும் உனக்கு இனும் இருக்குதென்று எழுதினாரென்றும் அதன்பேரிலே சாவுராசா, ரகோஜிபோசுலா, பத்தேசிங்கு, ஸ்ரீபதிராய முதலான பேரை அழைத்து யோசனை பண்ணினாரென்றும், பாசிராயன் ஏசால் என்கிற கோட்டையை வளைத்துக்கொண்டிருக்கிறாரென்றும் அதன்பேரிலே நிசாம் சுவாரிபோகிறதாய் நாசறசங்கை சீக்கிர மாய் வரச்சொல்லி எழுதினதாகவும், நாசறசங்கும் சித்திரைக் கண்டிபாமன் பெசுகஷு மூன்று லக்ஷம் ரூபாயாய் தீர்த்துக் கொண்டு சாவனூர் பங்காளூர் புறத்தின்பேரிலே புறப்பட்டு லக்ஷம் தண்டு அப்பாலே போகிறாரென்றும், கிருஷ்ணம் தாண்டச்சே மாபூசுகானுக்கு உத்தாரம் கொடுத்து அனுப்பு வாரென்றும், இப்போது ஐந்து லக்ஷம் ரூபாய்க்கு நாசறசங்கு செலுத்தச்சொல்லி உண்டிகையும் ஐம்பதினாயிரம் ரூபாய் மாபூசுகான்காரருக்குப் போச்சுதென்றும் எழுதிவந்த சேதி யைத்துரையுடனே சொன்னதற்குத் துரை, நாதுருஷாவைக் கொன்றுபோட்டதும் நடந்த சேதியும் வெகுநாள், பனி ரெண்டு மாதம் ஆகிறதென்று சொன்னார்.

*1747* ஆ நொவம்பர் மீ 22உக்கு பிரபவ ஹ கார்த்திகை மீ 10உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோராவுக்குப் போன விடத்திலே துரையவர்கள் எல்லாக் கோன்சேலியேர்களையும் அழைத்துவரச் சொன்னார். அவர்கள் வந்து கோன்சேல்கூடி கலைந்துபோனார்கள். கலைந்துபோன பிறகு துரையவர்கள் என்னை அழைத்து வெகு குசாலுடனே முசியே துலோராம்

சென்னப்பட்டணத்திலே இருக்கிறவன் நடப்பித்துக்கொண்டு வந்த காரியம் அவனுக்கு மேல் ஒரு சுப்பிரியேர் இருக்கிருரென் றும் யோசனைபண்ணவில்லை. இதல்லாமல் கொம்மனன் நடப் பித்துக்கொண்டு வந்தும் முசியே துலோராமும் எண்ணுமல் நடந்த தும் இப்போது முசியே துலோராமை தகீர்பண்ணி முசியே பேடுத்தல்மியை இப்போது கோன்சேலிலே நியமித்தோம். முன்னே முசியே துலோராம் போகச்சேதானே முசியே மீராவுடனே சிறிது சம்மதிகளெல்லாம் சொல்லுவித்ததுகூட எண்ணுமல் நடந்ததற்கு இப்போது வந்த அனுபவம் பார்த்தாயே. இப் போது இங்கே வந்து குரங்குபோலேயிருக்கவேணுமென்று தன் பலனை அறியாமல் எதிரி பலனைப் பாராமல் விருதாவிலே பொறுக்கிருனே, அவனுக்கெல்லாம் இப்படிதான் சம்பவிக்கும் இப்போதுந்தாம் துலோராம் வெகு ஆசையுடனே அங்கே துரைத்தனம் பண்ணலாமென்று போனது இப்போது ஆம் பிடையானை அழைத்துவரப் போனதாச்சுதென்று மவனை மாத்திரமா வாங்கினேம். முசியே கோசு (M. Gosse) முசியே பனே (M. Panon) முசியே கோத்ரல் (M. Cotterel), இவர்கள் எல்லாம் ஏகத்துக்கு வாங்கி பதிலவ்விடத்திலிருந்து அனுப்பு கிறேனென்று சொல்லி, பின்னையும் முசியே துலோராமும் எப் போதும் வாயெறிந்துபேசியே அவன் காரியமெல்லாம் துரைத் தனத்திலே கெட்டுப்போனதென்றும் இப்படி அவன் தூஷ ணித்தானே இரண்டு நாழிகை பின்னையும் அதனம் அதனமாய்ச் சொல்லிவந்ததற்கு நானும் உம்முடைய அதிருஷ்டம் மெத்த நேர்த்தியுமக்கு எவன் சத்துரு ஆகிருனே அவனுக்கெல்லாம் பங்கம் வராதே போகாது முன்னையே நினைத்திருந்தேன். முசியே துலோராமும் இப்படி ஏறுகிறமட்டுக்கும் இவனுக்கும் ஏதாகிலும் ஒரு பொல்லாப்பு காணுமென்று யோசனை பண்ணு கிறதற்கு இந்தமட்டோடே போனது அவனுக்கு இவன் சற்று நல்லவேளை என்றே அறியவேணும். ஆனாலின்னம் என்ன சம்பவிக்கவிருக்கிறதோ நானறியேனென்று அவன் மனோபாவத்துக்குத்தக்கதாய் அதற்கதற்கு உத்தரம் சொல் லச் சொல்லச் சொல்லி அவர் உற்சாகமாய் நாலு நாழிகை நேரம் பேசினர்.

அப்பால் நேற்றிராத்திரி சாவடியார் வந்து கபுறு சொன் னதும் டாப்பு கொடுத்ததும் சொல்லி, டாப்பு படித்துக் கபுறு சொன்னேன். அப்பால் இங்கிலீசுக்கப்பல் மூன்று சென்னப்

பட்டணத்தண்டையிலே கண்ட கப்பல் இற்றைநாள் பனி ரெண்டு மணி வேளைக்கு இந்தத் துறைக்கு நேராய் வந்து கூடலூருக்கு நேராய் ஓடிப்போச்சுது.

1747 ஆ நொவம்பர் மீ 23உ க்ஷய பிரபவ ஞு கார்த்திகை மீ 11 உ குருவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: முன்னாலே இவ்விடத்திலே ருத்ரோத்காரி ஞு தை மாதத்திலே தீர்ந்த கடப்பை அனந்தராயன் வழக்குச் சம்மதி தீர்ந்தபோது விநாயகப்பண்டிதன் சம்மதி நாலாயிரத்து சில்வான் அவர்கள் தட்டு முட்டுப் புறம்பாய் எடுத்துவைத்து அதுவும் சாவடியிலே எழுதிக்கட்டி அந்த உடைமைக்கும் ராசஸ்திரி துரையவர்கள் சவுதா வாங்கிக்கொண்டு தீர்ந்துபோயிருந்த சம்மதி அந்த விநாயகப் பண்டிதனென்கிறவன் அப்போது அந்தத் தட்டுமுட்டுகள் எல்லாம் எடுத்துக்கொண்டு போகாமல் இவ்விடத்திலேதானே கடப்பை ஆனந்தராயன் தாயார் வசத்திலே வைத்துவிட்டு ஆறகாட்டுக்குப்போனவிடத்திலே அவ்விடத்திலே விநாயகப்பண்டிதன் என்கிறவன் செத்துப்போனபடியினாலே அவன் பெண்சாதி அண்டையிலேயிருந்து விநாயகப்பண்டிதன் மைத்துனன் சுப்புராயனும், வாசுதேவராயனும், அவனுடன் இரண்டு பேரையும் அனுப்பி அந்தத் தட்டு முட்டுகளை எடுத்துக்கொண்டு போக வந்தவிடத்திலே அவனுடைய தாயாதியார் ஒருத்தன் அவனை மாயே சிப்பாய் சமேதாரன் அப்துல் ரஹிமானும், அவன் தம்பி சேக்குசேனும், அதற்குப் பிரயத்தனம்பண்ணி அனந்தராவும் சீனிவாசராயனென்கிறவனையும் முன்னிட்டுக்கொண்டு இப்போது இரண்டு மாதமாக இது வேலையாய் திரிந்து சமேதாரன் இரண்டு பேரும், அனந்தராயன், சீனிவாசராயன்கூட பெத்திஸியோம் ஒன்று எழுதி ஆயிரத்தைந்நூறு வராகன் ஆனந்தரங்கப்பிள்ளை வாங்கிக்கொண்டு அந்தத் தட்டுமுட்டுகளுக்கு உளவாயிருந்து விட்டுவிட்டு அப்புறப்படுத்துகிறதாய் இருக்குதென்று பெத்திஸியோம் எழுதி நேற்றையதினம் ராத்திரி கொண்டுபோய்த் துரையவர்கள் கையிலே கொடுத்தார்கள். அவரந்தக் கடுதாசியைப் பார்த்துக்கொண்ட அந்தக்ஷணம் நான் அதற்கு அநுகூலித்து அந்த வராகனிலே நான் சிறிது பிரயோசனப்பட்டு அது நிமித்தியம் அந்தரங்கமாக அனுப்பி விடுகிறதாகத்தானே யோசனைபண்ணி முன் தீர்ந்துபோய்த்

தாமும் சவுதா வாங்கிக்கொண்டு தீர்ந்துபோய் இருக்கிற சம்மதியென்று தெரியாதபடியினலே அந்நேரம் நேற்றுச் சாயங்காலம் அஸ்தமித்த ஏழு மணிக்கு இரண்டு பேர் சிப்பாய்களை அனுப்பி கடப்பை நாகேசராயன் வீட்டிலேயிருக்கிற விநயகப் பண்டிதர் மைத்துனன் சுப்பராயன் வாசுதேவபண்டிதன் இரண்டு பேரையும் வெளியே தட்டுமுட்டு எடுத்துக்கொண்டு போகவிடாமல் அவர்களைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொண்டிருக்கத்தக்கதாக அனுப்புவித்துப் பத்திரப்படுத்தினர்கள். அந்தச் சேதி அந்நேரம் நானறிந்து காலமே போய்த் துரை அவர்களுடனே முன் தீர்ந்த வயணத்தைச் சொன்னேமானல் அதன்பேரிலே உத்தாரம் கொடுக்கிறர். அனுப்பிவிடுவோமென்று இருந்து பொழுதுவிடிந்து இன்றையதினம் காலமே ஏழு மணிக்கு ஸ்ரீ துரையவர்களண்டைக்கு நான் போய் பேட்டி பண்ணிக்கொண்டவுடனே ராத்திரி நம்முடையபேரிலே கடப்பையார் சம்மதி பெத்திலியோம் விழுந்து அது நாற்பது முப்பது வராகனுக்கு உண்டு. தட்டுமுட்டு அதனலே நான் நாலைந்து வராகன்மட்டுக்கும் வாங்கிக்கொண்டு விட்டுவிடு என்று அவர்கள் சொல்லி இருக்கிற துரிதத்தை மனதிற்குள்ளே வைத்துக்கொண்டு இருக்கிறபடியினலே என்னைக் கண்டவுடனே அதென்ன வர்த்தகர் ஜனவரி பண்டிகைக்கு எப்போதும் கொடுக்கிற குஸ்துமாதும் அப்போது பண்டிகை சம்மதியும் இன்னும் வாங்கிக்கொடாமல் இருக்கிறதென்னவென்றுகேட்டார். அவர்களுக்கு இப்போதுதொழில் துறையில்லாமலிருக்கிறபடியினலே காலதேச வர்த்தமானங்களின்படி இருக்கிறபடியினலே அவர்கள் சற்று தாபந்தப்பட்டுச் சொல்லிக்கொண்டார்கள். அதனலே நாலுநாள் ஏறத்தாழ வாங்கிப்போடுவோமென்று அதனலே அட்டியாயிருந்ததேயல்லாமல் மற்றப்படி நான் அப்படி நீங்கள் சொல்லுகிற மட்டுக்கும் நான் மறந்திருக்கிறதில்லையென்று சொன்னேன். இல்லையில்லை நடுவேயிருக்கிற மனுஷர் தின்றுபோட்டாப்போலே இருக்கிறதேயல்லாமல் இல்லாவிட்டால் இந்தமட்டுக்கும் அட்டிப்படாது என்று சொன்னர். அதுகளொருநாளும் அப்படி நடக்கத்தக்கதில்லை. அதுகள் எல்லாம் விசாரித்தால், அப்போது தேவரீர் சித்தத்துக்குத் தெரியவரும் என்று சொல்லிவிட்டுப் பின்னையும் சற்று நேரம் பொறுத்துப் போனவிடத்திலே கும்பினீர் வர்த்தகரையெல்லாம் அழைப்பீரென்று சொன்னர். அந்தப்

படி சேவகனை அனுப்பி வர்த்தரை அழைக்கச் சொல்லி விட்டு நான் போய் கடப்பை அனந்தராயன் சம்மதி விஞயகப் பண்டிதர் தட்டுமுட்டு இருக்கிறதை அவர்கள் மனுஷர் வந்து எடுத்துக்கொண்டு போகவேணு மென்றால் அதை நீங்கள் மனு ஷரை யனுப்பத் தடைபண்ணினீர்களாம்.

அந்தச் சம்மதி முன் ருத்ரோத்காரி ஞூ தை மாதத்திலே யிருந்து தீர்ந்து உங்களுக்குச் சவுதா கொடுத்தது தீர்ந்துபோன சம்மதி என்று சொன்னேன். அதன்பேரிலே அவருக்கு ஞாப கம் வந்தது. மெய்தானென்று ஒத்துக்கொண்டு ஆனந்தராயனை யும் சீனிவாசராயனையும் அழைப்பித்து இது முன்னாலே தீர்ந்து போன சம்மதியாமோ அல்லவோ யென்று கேட்டார். தீர்ந்து போனதுதான். இதல்லாமல் கடப்பையிலே அவன் கையிலே இருபத்தைந்து சேர் பொன் இருந்தது. அதைக் கொண்டுவந்து ஒளித்துவைத்துக்கொண்டிருக்கிறான். அது தீரவேணுமென்று சொன்னான். சீனிவாசராயன் விஞயகப்பண்டிதன் உடைமைக்கு நான் அவர்களுடைய ஞாதியானபடியினாலே எனக்குப் பங்கு உண்டென்றும், எனக்குக் கவையில்லையென்றுஞ் சொல்லி அவ னுடைய மகள் பிள்ளை சம்மதிராயன் மகம்மதாக்கல் சிபார்சு ரங்கப்பிள்ளைக்கு வாங்கிவந்து கொடுத்து ரங்கப்பிள்ளை யுடன் அன்சாரியின்பேரிலே அவருக்கு ஆயிரத்தைந்நூறு வராகன் மட்டுக்கும் கொடுத்து எல்லாவற்றையுங் கொடுத்து எடுத்துக்கொண்டு போகிறார்களென்று எழுதியிருந்தபடிக்கு அவன் சொன்னான். அதன்பேரிலே முன் தீர்ந்தபோது சாவடி யிலே ஊர் கணக்கன் கையெழுத்தாய் அந்தத் தட்டுமுட்டு விப ரம் எழுதியிருக்கிறோமே அந்தக் கணக்கை எடுத்துக்கொண்டு வரச்சொன்னார். அதன் பேரிலே சாவடி முருகப்பிள்ளை அந்தக் கணக்குச் சீட்டு நாட்டுகளெல்லாம் எடுத்துக்கொண்டு வந்து படித்துப் பார்த்துக்கொண்ட பிறகு திரிகரண சுத்தியாய் தெரியவந்து நம்முடைய பேரிலேயிருந்த களங்கம் வெளியாய் தீர்ந்துபோச்சுது. அதன்பேரிலே ஆனந்தராயனைக் கண்டித்து இந்தப்படிக்கு இருபத்தைந்து சேர் பொன்னிருக்குதென்று இப்போது சொல்லுகிற நீர் அப்போது கணக்குத் தீர்த்துக் கொண்டு கடப்பையிலே இரு நூறு வராகன் தட்டுமுட்டும விடும் தவிர மற்றப்படி வேறே யொன்றுமில்லையென்று அவள் சத்தியம்பண்ணினபோது அந்தப்படிக்கு அப்போது ஒப்புக்கொண்டு

போய் இந்தமட்டுக்குஞ் சும்மாயிருந்துவிட்டு இப்போது எப்படி வந்து சொல்லுவான் என்று கண்டித்தார். அதற்கு அவன் இருந்துகொண்டு அப்போது வெளியாகவில்லை இப்போது வெளியாச்சென்று சொன்னுன். அதன்பேரிலே அவனைக் கோபம்பண்ணிப் போகச்சொன்னுர். அதன்பிற்பாடு விஞயகப்பண்டிதன் சம்மதிக்கு சீனிவாசராயனென்கிறவனை அழைத்து உனக்கெப்படி பங்கு உண்டென்று பிடித்தாய். அதென்ன வயணமென்று கேட்டார். அந்த விஞயகப்பண்டிதனுக்குப் பிள்ளையில்லாமல் மகள் பிள்ளையை மஞ்சினீர் குடித்துக்கொண்டபடியினுலே நானவனுக்கு ஞாதிவர்க்கமானபடியினுலே எனக்குப் பங்கு உண்டென்று சொன்னேன். அதன்பேரிலே அவர் சாதியிலே நாலு பேர் பெரிய மனுஷராய்ப் பார்த்து மத்தியஸ்தம் கூட்டி பங்கு உண்டு இல்லை என்கிறது தீர்க்கச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். அதன்பேரிலே நான் இருந்துகொண்டு நீங்களறியாத நியாயம் ஒன்றுமில்லை. சகலமும் நீங்களறியாதது ஒன்றுமில்லை. உங்கள் நாளையிலே என் முகாந்தரமாய் இப்படி இரு நூறு வழக்குக்கொண்டு தீர்ந்து பாரிக்கத்துப் பிறந்திருக்கிறது. இதற்குத்தானே இப்படியாஞல் எல்லாவற்றிற்கும் அப்படிதானேவரும்; அது நன்ருய்க் காணவில்லை. அப்பால் தேவரீர் சித்தத்திற்குச் சம்மதியானபடியென்று இரண்டு வார்த்தையாய்ச் சுருக்கிச் சொன்னேன். அதன்பேரிலே தெரிந்துகொண்டு என்னை அழைத்து எனக்கு மனது சமாதானமாகும்படியாய் ரங்கப்பிள்ளையை இங்கே வா, உன்பேரிலே எந்நேரமும் விவாதங்களாய் என் வீட்டிலேதானே பொல்லாப்பான விஷயங்களாய்ச் சொல்லிக்கொண்டு வருகிருர்கள். அவர்கள் இனிமேல் வாயெடுக்காதபடிக்கும், இனிமேல் என்றென்றைக்கும் உன்னுடைய பேரெடுக்காமல் இருக்கத்தக்கதாக நான் பண்ணுவிக்கவேணுமென்று சொல்லியாங்காட்டும் இதை மத்திசத்திலே விட்டேன். அதனுலே ஒன்றுமில்லை; நீ சும்மாயிருவென்று சொல்லி இதற்கு மத்தியஸ்தம் லட்சுமணநாயக்கர், மேலுகிரி பண்டிதர் குமாரன் ராமச்சந்திரராயன், வாசுதேவபண்டிதர், சங்கரய்யன் இவர்கள் நான்கு பேரையும்விட்டு இந்த நியாயத்தையும் கேட்டுத் தீர்க்கச் சொல்லிவிட்டு வர்த்தகரை அழைத்து

அவர்கள் முன் ஜனவரி பண்டிகைக்கு ஒரு மோதிரமும், போகி பண்டிகைக்கு ஒரு மோதிரமும் கொடுத்திருந்தார்களே அந்த இரண்டு மோதிரங்களையும் கொடுத்துவிட்டு வராகனைக் கொண்டுவந்து கொடுங்கோளென்று சொல்லிவிட்டுச் சாப் பாட்டிலே போய் உட்கார்ந்தார். அந்தமட்டிலே வர்த்தகர், வீட்டுக்குப் போய்விட்டார்கள். நானும் வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுப் படுத்துக்கொண்டேன். இதற்குள்ளே துரை சேவகரை அனுப்பி, மேலே எழுதப்பட்ட மத்தியஸ்தாள் நாலு பேரையும் மூன்று மணிக்கு அழைப்பித்தார். ராமகிருஷ்ண செட்டி வீட்டு நடையிலே யிருந்து தீர்க்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். இந்தச் சேதி கேட்டு நானும் பாக்குக் கிடங்குக்கு வந்தேன். இப்படியிருக்கச்சே, நாலரை மணிக்குத் துரையவர் கள் சுவாரி போனார்கள். அதன்பிறகு மதாமவர்கள் மத்தி யஸ்தர் நான்கு பேரையும் அழைப்பித்து அவனுக்குப் பங்கு உண்டா? இல்லையா? என்று கேட்டாள். நான்கு பேரும் கூடி, பேசி எப்படித் திருகிறதோ அந்தப்படிச் சொல்லுகிறோ மென்று சொன்னார்களாம். அதன்பேரிலே அவர்களுக்குத் திலாசாய்ச் சொல்லி பங்கு உண்டாகத் தக்கதாக எப்படித் தீர்க்க வேணுமோ அப்படிப் பார்த்துத் தீர்த்துப்போடுங்கோளென்று ரங்கப்பனை ஆகாதவனென்று சொல்லி அனுப்பிவிட்டாள். அவர்களும் போய் ராமகிருஷ்ணசெட்டி வீட்டுத் தலைக்கடை யிலே இருந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள். அப்படி இருக் கச்சே, ஆறு மணிக்குத் துரையவர்கள், வீட்டுக்கு வந்தார்கள். அதன் பிறகு அவர்களை அழைப்பிக்கிறதற்குக் கூடாதபடி யினாலே அடிக்கடி அவர்களண்டைக்குப் பெலன்கட்டி வற்லா முடனே (Varlam) சொல்லி அனுப்புவித்துக்கொண்டேயிருந் தாள். அப்படியிருக்கச்சே, துரையண்டையிலே போய் மதாம் இந்தச் சம்மதிக்கு என்னமோ சொல்லப் போனவிடத்திலே துரையிருந்துகொண்டு ஆனந்தராயன் அபினி தின்னுகிறவன், கஞ்சா தின்னுகிறவன், சாருயம் குடிக்கிறவன், எந்நேரமும் தேவடியாள் வீட்டிலே திரிகிறவன், அவன் கிரகஸ்தனானால் கையிலே அகப்பட்ட பணத்தைப் போக்கடித்து இப்படித் திரி வானா? அவன் பேச்சை நீ பேசவேண்டாம் என்று கண்டிப் பான வார்த்தையாய்ச் சொல்லிவிட்டார். அதிலே அவனுக்கு மனது முறிந்துபோய் இந்த மட்டுக்கும் துரை பேசின காரிய மென்ன, இப்படியிப்படிச் சொல்ல வந்ததென்ன வென்கிற

தாய் மதாம் இருந்துகொண்டு வற்லாமுடனே (Varlam) ரங்கப்பன் எனக்குச் சக்களத்தியாய் வந்து நேரிட்டாள். நான் அவருடைய பெண்சாதியாயிருக்க அவன்பேரிலேயிருக்கிற மோகம் என்னிடத்திலே சற்றுகிலும் இல்லே. இதென்ன பாவமாயிருக்கிறது என்றும், ஆனந்தராயன் அபினி தின்னுகிறவனென்றும், ரொட்டிக் குடியனென்றும் இப்படிச் சரிப்போனபடிக்கெல்லாம் சொல்லுகிருனென்று வற்லாமுடனே (Varlam) சொன்னதாகவும், வற்லாம் வந்து வந்தவாசி திருவேங்கடத்துடனே சொன்னதாகத் திருவேங்கடம் வந்து என்னுடனே சொன்னுன். ஆனால் துரையவர்கள் மத்தியானம் ஆனந்தராயனைக் கண்டித்தபோது அபினி தின்னுகிறவன், தேவடியாள் வீட்டிலே திரிகிறவனென்று சொன்னபடியினலே இதுவும் நமக்குத் திருஷ்டாந்திரமாச்சுது. இப்படியிருக்கச்சே, மத்தியஸ்தர் நாலு பேருங்கூடி, அவனுடைய மகள்பிள்ளையை மஞ்சினீர் குடித்து அந்தப் பிள்ளையாண்டான் விஞயகப்பண்டி தனுக்குச் சமஸ்தகரம்பண்ணி இருக்கச்சே, தன் ரொணத்திற்கு அவனே கர்த்தனேயல்லாமல் இவனுக்கு அக்கரை இல்லையென்று தீர்த்து அந்தப்படிக்கு ஒரு சீட்டு எழுதி, நீர் முன்னே கையெழுத்துப் போடும், நான் முன்னே கையெழுத்துப்போடேனென்று தகரார் பட்டுக்கொண்டு எட்டரைமணிக்குத் துரை வீட்டுக்கு வந்தார்கள். அப்போது துரை கடுதாசி ஆடிக்கொண்டிருந்தபடியினலே கணக்கு ரங்கப்பிள்ளை கிடங்கிலே உட்கார்ந்திருந்தார்கள். ஒன்பது மணிக்குத் துரை எழுந்திருந்து மேசைமேலே உட்கார்ந்து சாப்பிட்டு எழுந்திருக்கிறமட்டுக்குமிருந்து சாப்பிட்டானவுடனே சீட்டை எடுத்துக்கொண்டு லட்சுமணநாயக்கர் போய் துரையுடனே என்னமோ சிறிது வார்த்தைச் சொல்லப் போனுர். போம் போம், போத்தா போத்தா என்று சொன்னுராம். அதன்பேரிலே முன்னே லட்சுமணநாயக்கர் கையெழுத்துப் போட்ட பிறகு மூன்று பேரும் கையெழுத்துப் போட்டார்கள். அந்தச் சீட்டை வாங்கிவைத்துக்கொண்டு அவர்களைப் போகச்சொல்லிவிட்டுப் படுத்துக்கொள்ளப் போய்விட்டார். அதன்பேரிலே பத்து மணிக்கு அவர்களும் அவரவர் வீட்டுக்குப் போனுர்கள். நானும் வீட்டுக்குப்போனேன். சமேதா ர சேக்கு உசேனும், அப்துல் ரஹிமானும், வேலூர் கோவிந்தராவும் மதாம் அண்டையிலே எட்டு மணிமட்டுக்கும் இருந்து இவர்கள் நாலாங்காலாய் சீனுவாசராயனுக்குக் கவை

யில்லை என்றும், விநாயகப்பண்டிதன் மகன் தத்துப்பு ர ஞக்க் கவையல்லாமல் இவனுக்குக் கவையில்லையென்றும் தீர்த் துக் கையெழுத்துப் போட்டதும் பகல்தானே ஆனந்தராயன் கோலம்பண்ணிப் போகச்சொல்லித் தீர்த்துப்போட்டதும் மதாம் துய்ப்ளேக்ஸ் ஒரு மாதமாய் இந்தக் காரியத்திலே இவனை பாகம்பண்ணலாமென்று யோசனைபண்ணி அப்தல் ரஹிமானும் கோவிந்தராவும் வெகு பிரயாசைப்பட்டுத் திரிந்ததெல்லாம் விருதாவாய்ப் போச்சுதென்று முகவாட்டத்துடனே போனார் கள். ஆனால், சுவாமி மத்தியஸ்தரானபடியினாலே மதாம் துய்ப்ளேக்ஸ் எடுத்த எடுபாடுக்குத் தப்பிப் போச்சேயல்லாமல் இல்லாமல் எவ்வளவாகிலும் குற்றமுண்டாயிருந்தால் மகா தப்பிதம் வரும். ஆனால், நாம் ஒருத்தருக்கும் பொல்லாப்பு நினையாமல் நன்மையையே நினைக்கிறபடியினாலே எல்லாரையும் சுவாமி காப்பார். எவர்கள் பொல்லாத காரியம் நினைக்கிறார் களோ அவர்களுக்குப் பங்கம் வரும்.

*1747* ஆ நொவம்பர் மீ 25உ க்கு பிரபவ ஸு கார்த்திகை மீ *13*உ சனிவாரம்.

இற்றைநாள் மதாம் துய்ப்ளேக்ஸ், மலையப்பன் சமேத்துச் சேருவைக்காரன் ஒருத்தனும் ஐந்தாறு சேவகரும் இரண்டு இரண்டரை மாதத்திற்கு முன்னே முத்தையன் வீட்டிலே சடையப்பமுதலி மைத்துனன் முத்தையமுதலி என்கிறவன் வீட்டிலே அவனும் மிட்டாய்க்காரனும் மாற்றைத் தம்பி கந்தப்பனென்கிறவனும், குடைக்கார நயினியப்பமுதலி மைத் துனன் சேவக வைத்தி அவன் மகன் முத்தையன் என்ற திருட் டுப் பயலொருத்தன், சேவக வரதப்பன் என்கிறவன் ஒருத்தன் ஆக ஐந்து பேரும் கூடிச் சூதாடச்சே மலையப்பன் சேவகர் போய்ப் பிடித்து மிட்டாய்க்காரனைக் கட்டி அவன் கையிலே யிருந்த இரண்டு பொன் உருட்டு ஒரு வராகன் பெறும், இரண்டு சிகப்புக் கால் கட்டுவர் மோதிரம் மூன்று வராகன் பெறும், ரூபாய் பத்தொன்பது இதுகளைச் சேவகர்கள் எடுத் துக்கொண்டு என்னுடனே ராத்திரி இரண்டு மணிக்கு வந்து கபுறு சொன்னார்கள். அப்போது முத்தையன் சொல்லி அனுப் பினது: நானறியாமல் தப்பித வேலை செய்தேன். இது வெளிக்கு வந்தால் எனக்குப் பாபத்தியும் சாபத்தியும் கொடுத்தால்

அவர்களுக்கெல்லாம் சந்தேகம் தோன்றும். அப்பால் நான் கெட்டுப்போவேனென்று மதிமாறிச் சொல்லி அனுப்பினபடியி னுலே நானும் இவன் பேச்சு வெளிக்கு வந்தால் முன்னேயே ஓட்டை ஓட்டை என்று சொல்லுகிறவிடத்திலே இது கூட என்முல் மோசம் வருமென்று நம்மைத்தொட்டு ஒரு பொல் லாப்பு ஒருத்தருக்கும் சம்பவிப்பானேன் என்று சொல்லி, நல்லது அவர்கள் ஐந்து பேரையும் விட்டுவிடு, அந்தப் பத் தொன்பது ரூபாயையும் கிரிஸ்து பிஷப்காரருக்குக் கொடுக்கச் சொல்லிக் கோவிலிலே கொடுத்துவிடு. அந்த மோதிரத்தை நீங்கள் எடுத்துக்கொள்ளுங்கோளென்று சொன்னேன். அந்தமட்டுக்கும் அப்படி நடந்தேறிப்போச்சுது. அதை மதாம் துய்ப்ளேக்கும் வல்லாழம் பள்ளிப்பயல் முத்தும் சொல்லி அந்த ஐந்து பேரையும் அழைப்பித்துப் பூருவோத்திரம் கேட்ட விடத்திலே இந்தச் சேதியைச் சொல்லி இந்தமட்டுந்தான் நடந்ததுஎன்று அவர்கள் சொன்னதற்குப் பின்னேயும் ஒன்றும் கலியாணத்திற்குக் கொடுக்கவில்லையாவென்று கேட்டாள். அவர் கள் கொடுக்கவில்லையென்று சொன்னதற்கு அப்போது ஆனந்த ரங்கப்பன் இடையன் அப்படிப்பட்டவன் இப்படிப்பட்டவன், அவனை அடிக்கிறேன் கொல்லுகிறேன் என்றும், தன் புருஷ ருக்கு ஊரையெல்லாம் கொள்ளையிட்டுவிட்டு அவன் கண்ணை மூடிப்போட ஊரிலே இவன் குவர்னதோர்த்தனம்பண்ணு கிருன் என்றும் வசையும் வார்த்தையுமாகச் சொல்லி, அந்த மலையப்பனைக் கட்டுவித்து அடித்துவிட்டு ஊரைக் கடக்கத் துரத்திவிடுகிறேனென்றும், நீங்களொன்றுக்கும் பயப்படத் தேவையில்லையென்றும் சொல்லிப் போகச்சொல்லி, அப்பால் சின்ன துரையை முட்டாளென்றும், நீக்குபோக்குத் தெரியாத வன் என்றும் தான் துரை பெண்சாதியானபடியினுலே தான் சொல்லுகிறதை மெய்யென்று விசுவாசமாய் எண்ணி அந்தப் படிக்கு நடத்துவானென்று மவனை அழைப்பித்து நீ எங்களுக் குத் தகப்பன், நியாயகர்த்தன் இப்படி இருக்க, என் புருஷன் கையிலே போட்டுக்கொள்ளுகிற நிமித்தியம் ஊரையெல்லாம் அநியாயம்பண்ணி அவனுக்குக் கொடுத்து அவன் கன்னத்தை மூடிப்போட்டுத் தான் ஊரிலே குவர்னதோர்த்தனம்பண்ணு கிறேனென்றும், நீ கேட்கப்போகாதா, குவர்னதோருக்குச் சொல்லப்போகாதா, இதெல்லாம் அவன் தன் வீட்டிலேயிருக் கிற தட்டுமுட்டெல்லாம் அப்பாலே தாண்டுவித்து அவனும்

சமயம் பார்த்து ஓடிப்போகவேணுமென்றிருக்கிருனென்றும், அப்பால் அந்தப்பக்கத்திலே மலையப்பன் சேவகர்கள் சூதாடின பேர்களை நடப்பித்ததைச் சொல்ல, மலையப்பன் சாவடி கம்பத்திலே கட்டுவித்து அடித்து இரண்டு காதையும் அறுத்து ஊர் கடத்தித் துரத்தவேணும். இந்த மனு எனக்குக் கொடுக்க வேணுமென்று கால் பிடியாத குறையாய்ச் சொல்லி அப்பால் ரங்கப்பன் தன் ஆம்படையானைக் கெடுத்துப்போடுகிறதினுலே ஆத்துமங் கெட்டுப்போகுதென்றும், தங்களுக்கு அபகீர்த்தி வருகிறதென்றும் இப்படியான மாரிச்சம் மாய்கை என்ன உண்டோ அத்தனையும் சொன்னுல் அதன்பேரிலே மலையப்பன் முன்னூறு பேருக்குத் தனியாயிருக்கிறவன், அவனை அடிக்கவும் போகாது, காதறுக்கவும் போகாது, காவலிலேயும் வைக்கவும் போகாது. ஆனல் விசாரித்து இனிமேல் இப்படிப்பட்டது வராமற்படிக்குச் சொல்லுகிறேன் என்றும், இதேயல்லாமல் ஆம்படையானுடனே நீ சொல்லப்போகாதா, நானெப்படிச் சொல்லுவேன் என்று சொன்னேன். அதற்கு நான் சொல்லிச் சொல்லிப் பார்த்தேன். அவன் காசு கொண்டுவந்து கொடுக்கிற மயக்கத்திலே என் பேச்சு கேட்கிருனு! ஆனபடியினுலேதான் உம்முடனே சொல்லுகிறதென்று சொன்னதற்குச் சின்ன துரை, நீ பெண்சாதியாயிருக்கிறவள், நீ சொல்லக்கூடாதா என்று சொல்லச்சே, நான் சொல்லப்போகாதே என்று சொல்லி என்னென்ன பேச்சுகள் நடந்ததோ தெரியாது. இதுமாத்திரம் மூசியே தெலார்சு சொன்னுரென்று முருகய்யன் சொன்னபடியினுலே தெரியவந்தது. இல்லாவிட்டால் தெரியப்போகிற தில்லை.

இதல்லாமல் சாவடிக்கு நீர் எசமானுக விருக்கச்சே ரங்கப்பன் பேச்சே அவர்கள் வேறே யுத்தரவில்லையென்று சொல்லுகிருர்கள். எப்படியிருக்கிறது. அவன் ஊரிலே துரைத்தனம் பண்ணுகிறதென்று மிப்படியாகப்பட்ட பேச்சு அனேகம் உண்டு. எழுதவேணுமென்ருல் இருநூறுகாகிதம் செல்லுமிந்தபடிக்கெல்லாம் சொல்லித் திட்டம்பண்ணி அனுப்பிவிட்டு அப்பால் லக்ஷ்மணநாயக்கரை அழைப்பித்து ரங்கப்பன் உன்னை அநியாயமாய்ப் பண்ணினுனுவென்றும் ரங்கப்பன் சீனிவாச ராயன் வழக்கைக் கவையில்லையென்று தீர்க்கச்சொன்னுனு வென்று கேட்டதற்கு அவாச்சேமிரா என்கிற சாடையாய்ச்

சொல்லிவிட்டு வந்திருப்பானென்று தோற்றுகிறது. இப்படி யெல்லாம் நம்முடைய சிந்தைப்படவேணுமென்று நினைத்து நடத்துகிருன்.

ஆனல், சுவாமி துரோகம்பண்ணினல் நம்மை சுவாமியும் விசாரிப்பார். அதற்குத் தக்கதாப்போலே நமக்குப் பொல் லாப்பும் சம்பவிக்குமிடத்திலே பரிசுத்தமிருக்கிறது மெய்யா னல் என்பேரிலே யாதாமொருத்தர் அபாண்டம் போடவேணு மென்று நினைக்கிறுர்களோ அவர்களுக்கு சுவாமி தானே ஆக் கினை கொடுப்பாரென்று திரிகரணசுத்திப்படி எண்ணிக் கொண்டு தைரியத்தை வருவித்துக்கொண்டு என்ன நடந்தா லும் நடக்கட்டுமென்று இருக்கிறேன்.

அப்பால் சாயங்காலம் துரை வீட்டிலே யிருந்து நான் வரச்சே முசியே தெப்ரேன் (M. Defrences) என்னை முசியே தோத் தேல் (M. de Auteuil) வீட்டிலே சின்ன துரையை அழைத்து உன்பேரிலே முடித்த முடியுள்ள மதாம் துய்ப்ளேய்க்கு, அவன் பொல்லாதவன், நீ பத்திரமாயிரு. முசியே துய்ப்ளேய்க் குடனே இதெல்லாம் சொல்லு என்று நான் உனக்குச் சினேகித னபடியினலே சொல்லுகிறேன் என்று யிப்படியாகச்சொன் னன். இப்படியெல்லாம் அவன் நடத்தினலும் குவர்னதோருக் குச் சமயம் பார்த்துச் சொல்லுவோமென்று யோசனைபண்ணி இருக்கிறேன்.

*1747* ஆ நோவம்பர் மீ 26வ க்ஷய பிரபவ ஸு கார்த்திகை மீ *14*வ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரை அவர்கள் கோவிலுக் குப் போய்வந்தார். நானும் குவர்னதோரவர்கள் வளவிலே போயிருந்தேன். அப்போது முசியே தெலார்ஷுக்கு நான் முரு கப்பிள்ளையுடனே முசியே லெகுவுக்கு (M. Legou) சொல்லச் சொல்லி அனுப்பினபடிக்கு முசியே தெலார்ஷ் (M Dolarche) வந்து சின்ன துரைக்கு நேற்றுச் சனிக்கிழமையன்று காலமே சொல்லியிருந்தபடியினலே மதாம் துய்ப்ளேய்க்கு சொன்ன காரியத்துக்கு ஒப்பாமல் சொன்ன சேதியை முசியே தெலார் ஷுடனே சொன்னர். அதற்கு முசியே தெலார்ஷ் ஒரு பெண்

சாதி இத்தனை காமகாரம்பண்ணி அபாண்டமாய் ஒருத்தலையை வெட்டுவிக்கவேணுமென்று நீர் எப்படி அவனை நீர் இப்படி நடத்துகிறது நியாயமல்ல. அல்லவென்று என்னைக் குவர்னதோர் யார் உமக்குச் சொன்னது என்று கேட்டால் உம்முடைய பெண்சாதி சொன்னுளென்று சொல்லுவேனென்று நீர் சொன்னீரேயானு லவள் உம்முடைய வழி வாராளென்று சொன்னூர். மெய்தானப்படிதான் சொல்லவேணுமென்று சொல்லு; இல்லாவிட்டால் பொழுதுவிடிந்து அந்திபட்டால் ரங்கப்பன்பேரிலே பிராதே பிராதாயிருக்கிறது. இவன் பெண்சாதிக்கும் இவனுக்கும் அக்கரை என்ன. இந்தக் காரியங்களெல்லாம் விசாரிக்கிறதற்கு என்ருப்போலேயும், இப்படி நீதானே சின்னதுரை முசியே தேலார்ஷுடனே சொல்லி ரங்கப்பனை இப்படி நீதானே கெட்டுப்போகச் சொல்லலாமா? என்னுடனே ஒரு பேச்சு சொல்லாதபடிக்கு இனிமேலப்படிச் செய்யவேண்டாம். உம்முடையபேரிலே மதாம் துய்ப்ளேய்க்ஸ் ரொம்பவும் ராசகாரியம் பண்ணுகிருளென்றும், நீ சற்றே சாக்கிரதையாய் இருமென்று சொல்லி அனுப்புவிடுமென்று சொன்னேன். நல்லதென்று சொன்னூர். அந்தப்படிக்குச் சின்ன துரை, நீ கோட்டைக்கு வந்த வேளையிலேயும் உம்மைக் கேட்பாரென்றும், ரங்கப்பிள்ளையை என்வண்டைக்கு வரப்போக விருந்தால் நல்லவேலை அவனுக்குச் செய்வேனென்றும், ரங்கப்பனுக்கு என்ன பயமிருக்கிறது. கோன்சேலியேர்கள் அனைவரும் கூடிக் கும்பினியாருக்குச் சீர்மைக்கு எழுதுகிற காகிதத்திலே புதுச்சேரி பட்டணத்திலே ரங்கப்பனைவிட வேறே கெட்டிக்காரனும் சமர்த்தனும், துலுக்கருக்குள்ளேயும் கர்னாடகத்தாரும, மைசூர், திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் இப்படிப் பட்டவாளுக்குள்ளேயும் இவன்பேரென்று சொன்னவிடத்திலே மெத்த மரியாதையும், எண்ணமும், கீர்த்தியும், பேரும் உண்டாயிருக்கப்பட்டவன். பெரிய மனுஷனுடைய பிள்ளை. பெரிய மனுஷன் ராசாக்களிடத்தில் ஸ்தானுதிபதியும் பண்ணத்தக்க புத்தியுள்ளவனைத் தேர்ந்தெடுத்துக் கும்பினீர் கொடுத்திவேராய் வைத்துக்கொண்டோமென்றும் கனகராயமுதலி தம்பி ஒருகழுதை, புத்தியில்லாதவனென்றும் இப்படி பின்னையும் ரங்கப்பனை மேன்பாடாக்கிக் கோன்சேலியர் காகிதத்திலே எழுதியிருக்கிறது. அதிலே துரை முதலாகிய கோன்சேலியேர் கூட கையெழுத்துப் போட்டிருக்கிருர்கள். அந்தக் காகிதம்

இப்போது சீர்மைக்குப் போகத்தக்கதாக பெறென்சேசு என் கிற கப்பல் மசுக்கரைக்கு அனுப்பி அவ்விடத்திலே யிருந்து சீர்மைக்கு அனுப்பத்தக்கதாக இருக்கிற கப்பலிலே இந்தக் காகிதத்தை அனுப்பத்தக்கதாக எழுதினது. இப்படியிருக்க, பயமென்ன! அப்பால் துரையினுடைய தயவும் பரிபூரணமாய் இருக்கிறது. தைரியமாயிருக்கச்சொல்லென்றும் இப்படியாக முருகப்பிள்ளையுடனே சொல்லியனுப்பினதாய் முருகப்பிள்ளை வந்து சொன்னார். நல்லது சந்தோஷமாச்சுது. அப்படியே போய் முசியே தெலார்ஷைக் கண்டு பேசுகிறோமென்று முருகப் பிள்ளைக்குச் சொல்லியனுப்பினேன்.

*1747* ஆ, நோவம்பர் மீ *27*உ க்கு பிரபவ ஞு கார்த்திகை மீ *15*உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே சென்னப்பட்டணத்திற்கு எசமானனுகப் போகிறவனுனபடியினலே குவர்னதோரண்டைக்கு வந்து அனுப்புவித்துக்கொண்டுபோக வந்தான். முசியே மூரோ இரண் டாவதானபடியினலே அவனுமனுப்புவித்துக்கொள்ள வந்தான்.

தம்பிச்சாமுதலி மருமகன் கனகராயமுதலிக்குச் சகலபாடி யாகிய வெள்ளைக்குஷ்டம் பிடித்த மலைக்கொழுந்துமுதலியைச் சென்னப்பட்டணத்துப் பெரிய துபாசித்தனம்பண்ணுகிறதற்கு ஏற்பாடுசெய்து விசாரித்து நியமித்து மலைக்கொழுந்து முதலியை முசியே பெடுத்தல்மிக்குக் காண்பித்து இவன் பெரிய துபாசி. இவனைக் கூட அழைத்து... ... ... ... ... ... ப் போவென்றும் அப்பால் திரிந்திடும் திருட்டுப் பயல், பள்ளிப் பயல், சுருட்டுப் பொறுக்கிக்கொண்டு, சின்ன துரை வீட்டிலே எச்சல் பீங்கான் எடுத்துக்கொண்டு திரிந்த நல்லதம்பி என்கிற பயலைப் பாளையக்காரனென்று காண்பித்து அவனுக்குத் தள வாய் நாய் பிடித்த சவுரி என்கிற பள்ளிப்பயலையும், அப்பால் மலைக்கொழுந்துமுதலி மகன் வர்லாமுக்கு (M. Varlam) மூத்த வன் கொழுந்தையப்பனென்கிறவனைச் சாவடிக்குத் துபாசி என்று நியமித்த பேரைக் காண்பித்து அழைத்துப்போகச் சொல்லிச் சொன்னார். அப்பால் முசியே பெடுத்தல்மேயையும் மோராவையும் (M. Barthelemy, M. Moreauw) சென்னப்

பட்டணத்திற்குப் போகத்தக்கதாகப் பயணமாயனுப்புவித்துக்கொண்டு போனார்கள். துபாசிகளும் பாளையக்காரரும் கூடப் போனார்கள். இந்தப் பெரிய துபாசியும் இந்தப் பாளையக்காரரும் வந்த வரலாறென்னவென்றால்: மதாம் துய்ப்ளேய்க்சுக்கு ஆயிரத்தைந்நூறு ரூபாய்மட்டுக்கும் நல்லதம்பி பள்ளிப்பயல் செலவழித்துப் பாளையக்கார உத்தியோகம் வாங்கிக்கொண்டான். இதல்லாமல் ஒரு உடம்படிக்கைச் சென்னப்பட்டணத்திலே முன்னேயிருந்த பாளையக்காரன் வாரினதெல்லாம் அவன் எடுத்துக்கொண்டு போனானென்றும், மனதிலே எப்போதும் தைரியத்தைப் பாராட்டிக்கொண்டிருக்கிறபடியினாலே துபாசிகளை பாளையக்காரன் எல்லாம் தன் மனுஷராய்ப் போட்டுச் சும்மா வாரிப்போடலாமென்றும், சகலமும் தன் அமுலாய்த் தன் அதிகாரத்தின்பேரிலே தன் சொல்லின்பேரிலே நடத்திக்கொள்ளலாமென்றும், பெடுத்தல்மி துரைத்தனம்பண்ணப்போகிறவன் முசியே துலோராம்போலே விவேகியல்லவென்றாப்போலேயும் இப்படியெல்லாம் யோசனைபண்ணி அந்தப் பக்கத்திலே எழுதப்பட்ட துபாசிகளையும் பாளையக்காரரையும் அமர்த்தி முசியே துய்ப்ளேய்க்சுக்கு, முசியே துலோராமும் நடப்பித்த காரியத்திற்கெல்லாம் சாதகம் வரவேணுமென்றாப்போலேயும் கொள்ளையிடுகிறதற்கு லகுவென்றாப்போலேயும் இப்படியாக அவர் புத்தியை மயக்கித் தன் அதிகாரம் செலுத்தவும், காசு சுற்றவும் யோசனைபண்ணித் துரை கையிலே உத்தாரம் வாங்கிக்கொடுத்து அனுப்புவித்தான். நான் பார்த்ததற்குள்ளே, கேள்விப்பட்டதற்குள்ளே ஸ்திரீகள் சாகசங்கள் புஸ்தகங்களிலே எழுதியிருக்கிறதுகூட இவன் சாகசத்திற்கு முன்னே அப்பிரயோசிகமேயல்லாமல் இவன் அம்சையிலே பதினாயிரத்திலே ஒரு பங்கு அவர்களுக்கில்லை என்றால் தப்பிதமில்லையென்று சொல்லவேணும். அது நன்றாய் எனக்குத் தெரியும். இந்தப் பட்டணத்திலுள்ளவர்கள் வெள்ளைக்காரன், வெள்ளைக்காரிச்சிகள், தமிழர்கள், துலுக்கர்கள் சமஸ்தமானபேரும் இவள் போய்க் கூட்டிலே படித்தவள் என்றும், இவளைத்தொட்டுப் பட்டணம் அழியுமென்று சொல்லத்தக்கதாகப் பேர்பெற்ற மகராசி அப்படிப்பட்ட நடத்தை என்று முசியே துய்ப்ளேய்க்ஸ் ஒரு வேளை அறிவார். ஒரு வேளை மறந்துபோவார். ஆனாலவர்கள் அதிர்ஷ்டப்படிக்கு நடக்கிறதேயல்லாமல் சிறிது பராமரிப்பும் விசாரிப்பும்பேரிலே நடக்கிற

தென்று யோசனைபண்ணிக்கொள்ளத் தேவையில்லை. இப்படி இருக்க, பத்தரை மணி வேளையிலே சின்ன துரை வந்து கண்டு பேசிப் போனபிற்பாடு முசியே துய்ப்ளேய்க்ஸாகிய குவர்னதோர் என்னை அழைத்து நடுசாலையிலே வைத்துக்கொண்டு, ரங்கப் பிள்ளை உன்பேரிலே இந்த ஆகாத மனதுள்ளவர்கள் உண் டாக்கின இரு வதந்தியைக் கேட்டியா? நீ உன் உடைமை யெல்லாம் அப்புறத்திலே தாண்ட வைக்கிறீராம். அதைக் கொண்டுபோய் உன் அம்மான் வீட்டிலே சேர்த்து அப்பால் சமயம் வந்தபோது ஓடிப்போக இருக்கிறீராம். இதல்லாமல் முத்தையப்பனும் நீயும் சென்னப்பட்டணத்திலே எடுத்த கொள்ளைத் திருட்டுப் புரட்டுச் சமஸ்தமும் உனக்கும் பாகம் பங்கிட்டுக்கொள்ளவேணுமென்றும் நினைத்து ஓடிப்போனாலே யல்லாமல் கூடாதென்று யோசனைபண்ணிக்கொண்டிருக்கிற தாய்ப் பிறப்பித்தார்கள் என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: ஐயா, பார்த்தீர்களா, என்பேரிலே பொய் அபாண் டத்தை இப்படிச்சொல்லி உம்முடைய மனதிற்கு என்பேரிலே ஒரு ஐயத்தைத் தோற்றுவித்து எனக்குச் சிறிது பொல்லாப்பு வருத்துவிக்கவேணுமென்றும், உமக்கு என்பேரிலே பூரண தயவைப் போக்கடிக்கவேணுமென்றும் இப்படி எடுப்பாய் எடுத்தார்கள். முன் சிறிது எடுத்தார்கள். அதிலே பலமில்லா மற் போச்சுதென்றும் இதிலே ஐயம் தோன்றி எனக்கு யாதொரு பொல்லாப்பு வருத்துவிக்கவேணுமென்று யோசனை பண்ணினார்கள். ஆனால், தேவரீர் என் மனுவை ஒரு நாழிகை மாத்திரம் மனம் பொறுத்துக் கேட்டு அப்பால் என்பேரிலே இருக்கிற குற்றமும், சொல்லுகிறவர்களின்பேரிலே யிருக்கிற குற்றமும், அப்பால் இது எந்த வழியிலே யிருந்து பிறக்கிறதோ அது தங்களுக்கு விசிதமாய்த் தெரியவருமென்று சொன்ன தற்கு, இது எங்கே யிருந்து வருகிறதோ அந்த வழியும் அறி வேன். இதுகள் சிறு பிள்ளை விளையாட்டுகள். இதைத்தொட்டு நீ மனதிலே ஒன்றும் எண்ணவேண்டாம். கும்பினீர் காரியத் திலே ஜாக்கிரதையாய்ப் பிரயாசைப்படு. இப்படி பதினாயிரம் பேர் சொன்னாலும் உன்னையொன்றும் செய்யாது, போவென்று சொன்னார். அப்படியல்ல, நடக்கிற சங்கதிகளை நான் சொல்லு கிறேன், இரண்டு வார்த்தை மாத்திரம் தயவுபண்ணவேணும். சொல்லப்போனால் இதுகள் சிறு பிள்ளை விளையாட்டு நானறி

வேன், நீ போவென்று சொல்லி, காம்பிராவுக்குள் போய்விட்டார். இனிமேல் சொன்னால் கோபம் வரும். ஆகட்டும் இன்னமொரு சமயமாகிலும் இதெல்லாம் உம்முடைய பெண்சாதி வழியிலே வருகிறது. நீ என்பேரிலே கடாக்ஷம்பண்ணி நடத்துகிறீர். அதைத்தொட்டு மைசூர், ஔரங்காபாத்து, டில்லிமட்டுக்கும் எனக்கு மெத்த எண்ணமும் கீர்த்தியும் உண்டாச்சுது. இப்போது என் பேரைச் சொன்னால் ஆற்காட்டு நபாபுபோலே ஒத்தவரும் பயமுண்டாக்கத் தக்கதாக நிசாமைப்போலே ஒத்தவர் தாரிப்பு பண்ணத்தக்கதாகவும், உம்முடைய அடிமையென்று இத்தனை மரியாதை நடத்தச்சே அம்மாள் என் பேரிலே கோபம்பண்ணி அவமரியாதை பண்ணினால் அதனாலே வரப்பட்ட நலம் எளப்பம் தேவரீரைச் சேர்ந்தாலும் எனக்கு அவரவர் பயப்படுகிறதும் போய், நான் என்ன சொன்னாலும் அங்கிகரிக்கமாட்டார்கள் என்றும், என்னை யாரும் சட்டைப்பண்ணார்கள் என்றும், நாலு வார்த்தையாய்ச் சொல்லுவோமென்றும், உற்று யோசித்தால் அவர் நானறிவேன் நானென்ன முசியே தும்மாவா என்று சொல்லிப்போனபடியினாலே இன்னமொரு சமயம் பார்த்துச் சொல்லுவோமென்று யோசனைபண்ணினதுமல்லாமல் இந்த அம்மாள் என்பேரிலே இப்படிப்பட்ட அபாண்டம் சொல்லுகிறவளுக்கு எத்தனைக் குரோதமிருந்து இப்படிப்பட்ட அபாண்டம் போடவேணும். இதல்லாமல் வெள்ளைக்காரரென்று வெள்ளைக்காரிச்சிகளெல்லாம் தன்னண்டைக்கு யார் வருகிறார்களோ அவர்களுடனேயெல்லாம் ரங்கப்பன் என் ஆம்படையானுக்கு மருந்து போட்டுக் கண்ணை மூடுவித்துப்போட்டான். ஊரெல்லாம் கொள்ளையிட்டுத் தன் ஆம்படையானுக்குக் கொடுக்கிறபடியினாலே அவன் கண்ணை மூடிக்கொண்டு துரைத்தன மிவனைப் பண்ணச் சொன்னான். இப்போது புதுச்சேரி குவர்னதோர் முசியே துப்ப்ளேய்க்ஸ் என்றிருக்கவேண்டாம். ரங்கப்பனுங்காட்டும் என்று பெண்டாட்டியைப்பார்க்கிலும் இவன்பேரிலே அதிக மோகமிருக்கிறதை லோகத்துக்குள்ளே கண்டதில்லையென்று மிப்படியாகச் சரிப்போனபடிக்கெல்லாம் சொல்லுகிறதுமல்லாமல் அபாண்டமும் போடுகிறான். சுவாமி விசாரிக்கவேணுமே யல்லாமல் மற்றப்படி விசாரிக்கிறவர்களைக் காணேன்.

1747 ஆ நோவம்பர் மீ 28உ க்ஷய பிரபவ ஞு கார்த்திகை மீ 16 உ மங்களவாரம்.

இற்றை நாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே ஏதாகிலும் சமாசாரமுண்டா என்று கேட்டார். தானியமானுல் நித்தியம் முன்னூறு பொதி நானூறு பொதி வருகிறது. முன்னைக்கிப்போது மணக்கத்தை ஐந்தரை படி, கார்நெல் ஐந்து படி, சம்பா நாலரை படி நாளுக்குநாள் உசந்து வருகுது அப்படியிருக்குது. இன்னம் பத்து நாளையிலே உசந்துபோம். காரறுப்பு உண்டாயிருக்குமென்று சொன்னேன். ஆனுல் இப்போது ஒரு விலை சொல்லப்போகாது என்று சொன்னுர். விலை நிஷ்கருஷைபண்ணினுல் வருத்து மட்டாய்விடும். தன்னிச்சையாய் உசந்துபோம் என்று சொன்னேன். மற்றப்படி தேவனும்பட்டணத்துப் பின்னை ஒன்றும் விந்தை கபுறில்லை. மேஸ்தர் தெறெபென் என்கிற காமாண்டோர் வந்திறங்கி ஒரு நாளிருந்து மறுபடி கப்பலின்பேரிலே அந்தக் கப்பல் மூன்று கப்பலும் நம்முடைய கப்பல் துறைக்கு நேராய்ப் போகிறதும் வருகிறதுமாகவிருக்கிறது. இதுவேயல்லாமல் மற்றப்படி வேறில்லையென்றும், தேவனும்பட்டணம் கொத்தளங்கள் கூடலூர் இதுகளெல்லாம் பீரங்கிகள் வைக்கிறதும் எடுக்கிறது மிப்படியாக ஏழைசனங்களுக்கு வேலையுண்டாக்கிக்கொண்டிருக்கிறுர்கள். இதுவே யல்லாமல் வேறே சேதியில்லை என்று சொன்னேன். அப்பால் மத்தியானமானபடியினுலே வீட்டுக்குப்போய் சாயங்காலம் ஆறுமணிக்கு முசியே தெலார்ஷ் வீட்டுக்குப் போனவிடத்திலே அவரும் நானும் மதாம் துய்ப்ளேக்ஸ் என்பேரிலே போடுகிற அபாண்டமும் அநியாயமும் நிஷ்காரணமாய் ஊரிலே வெள்ளைக்காரர் வெள்ளைக்காரிச்சிகள் சகலமான பேருடனேயும் நான் ஊரைக் கொள்ளையிட்டுத் தன் ஆம்படையானுக்கு மருந்து போட்டுக் கண்ணை மூடுவித்துப்போட்டு நான் ஊரை அதிகாரம் பண்ணுகிறேன் என்று சொல்லுகிற பேச்செல்லாம் வெள்ளைக்காரர்கள் வெள்ளைக்காரிச்சிகள் தம்முடனே சொல்லுகிற சேதியெல்லாம் சொன்னுர். அதற்கு நான் என்பேரிலே நிஷ்காரணமாய்க் கோபம்பண்ணி அபாண்டம் போட்டுக்கொண்டு திரிகிற சம்மதியை எல்லாம் சொல்லுகிறது நியாயமில்லையென்றும், வெளி

பேச்சாயிருக்கிறதேயானால் நாலத்து இரண்டு காரியம் சொல்லி முசியே லெத நம்மை மதாம் துய்ப்ளேய்க்ஸ் பேச்சைக் கேட்டுக் கொண்டு கேளாதபடிக்குப் பத்திரமாய்ச் சொல்லச் சொல்லி விட்டு அனுப்புவித்துக்கொண்டு வரச்சே, ஒரு குயுக்திபண்ண சமுதாக்கு வெகுமானம் கொடுத்து, ரொம்பவும் உபசாரமா கும்படி சொல்லி, உமக்குக் கும்பினீர் குடுத்தியோர்த்தனம் நிஷ்கரிஷைபண்ணி, கோன்சேலியேர்கள் கும்பினீருக்குக் காகிதம் எழுதினது பார்த்துக்கொண்டால் தெரியுமென்று கும்பினியாருக்குப் புதுச்சேரி கோன்சேல் எழுதின காகித கொப்பியைப் படித்துக் காண்பித்தார். அதைக் கேட்டு மிகுதி யும் அவருக்கு உபசாரமாய்ச் சொல்லி அனுப்புவித்துக் கொண்டு வீட்டுக்கு ஒன்பது மணி வேளைக்கு வந்தேன்.

**1747** ஆ நொவம்பர் மீ **29**உக்கு பிரபவ ஸு கார்த்திகை மீ **17**உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஸ்ரீ துரையவர்களழைத்தனுப் பினார். ஏழரை மணிக்குத் துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே அவர் எழுந்திருந்து காம்பிறாவிலே அழைத்துப் போய் முசியே துலோராம் எனக்கு நாளது மீ சென்னப்பட்ட ணத்துக்குப் போனதுமுதல் இவ்விடத்திய ஒடுதியைத் தள்ளி நடத்திக்கொண்டுவந்த சம்மதியை எல்லாம் நீ யறிவாயே. அது நிமித்தியம் அவன் பஞ்சிலே புரட்டுபண்ணியு சம்மதியைக் கோன்சேலிலே போட்டு அவனைப் பரிகரித்து முசியே பெடுத்தல் மியை அனுப்பினது இப்போது அந்தப் பஞ்சு அவன் இருபத் திரண்டு வராகன் விழுக்காடு வாங்கினான். அதை யொட்டி அவன்பேரிலே குற்றம் சுமத்தின மட்டுக்கும் அதை உடனே ஒசந்த விலையாய் விற்றோமென்று கோன்சேல் அறியவேணும். ஆனபடியினாலே இது இருபத்தாறு விலைக்கு இப்போதிருக்கிற எழுநூறு கட்டுக்கும் ஐந்நூறு பாரம் காணும். இதை எண் ணிக் கும்பினீர் வர்த்தகர் விற்கட்டும். நயநஷ்டம் எண்ணுது அவர்களுக்குக் கவையில்லை. என்பேர் வெளியானால் ஆயிரம் இரண்டாயிரம் போனாலும் போகுதென்று பணத்துக்கு ஏற் றுக்கொண்டான் என்று எண்பிப்பார்கள். பார்த்தவர் களுக்கு அப்படித் தோற்றும். ஆனபடியினாலே பிறத்தி வர்த்த கர் வந்துகொண்டதாய்க் கோன்சேலிலே அறியவேணும். ஆன

படியினலே, கும்பினீர் வர்த்தகர் கொண்டதாய்க் கோன்சே விலே எழுதுவித்துப்போடுகிறேன் என்று சொல்லி, அப்பாலிந்த வர்த்தகருக்குப் பெரிய சகாயம்பண்ணு கிறேன். இவர்கள் சரக்குக் கூட்டியிருக்கச் சொன்னல் நூற்றுக்கு ஒன்பதென்றும், அதுவும் நான் கடையிசிலே கூட்டியிருக்கிறேன் என்றும் சொன்னல் அதவும் நம்பிக் கையில்லாமல் கோந்திராந்திலே கையெழுத்துப்போட மாட்டோமென்று சொல்லுகிருர்களிந்த நியாயம் நான் எந்த மட்டுக்கும் அவர்களை நெருக்கவேணுமென்ருலும் நெருக்க லாம். அப்படி அவர்களை ஒருக்காலும் செய்யத்தக்கதில்லை. என்னைத்தொட்டு அவர்களுக்கு எப்போதும் உபகாரமா யிருக்கச் செய்வேனே யல்லாமல் ஒருக்காலும் அவர்களுக்கு நஷ்டம் வரப்பண்ணுகிறதில்லை. இப்பவும் இவர்கள் வாங்கின சரக்கு இப்போது கெடு எட்டுமாச்சுது. இப்போது வராகன் கேட்டால் அவர்கள் சம்மதிபண்ணித்தீரவேணும். ஆனல் அவர்களுக்குப் பெரிய சகாயம்பண்ணித்தருகிறேன். மாதம் 1-க்கு ஐயாயிரம் வராகன் ஆறுயிரம் வராகன் விழுக்காடு சென்னப்பட்டணத்துச் செலவுக்குக் கொடுத்துவரச் செலவும் இந்தப்படிக்குக் கொடுக்கிறமட்டுக்கும் நான் ரொம்ப ஆகுது. அவர்களுக்கும் ஏதுவாய்ப் பணம் வரப்பற்றிக்கொள்ளலாம். வட்டியும் ஆதாயமும் எல்லாம் வர்சை பண்ணிக்கொள்ள லாம். இதிலே யிருக்கிற சரக்கும் விற்றுக்கொள்ளலாம். இதைவிட இவர்களுக்கு என்னசகாயம், யார் செய்திருக்கிருர் களென்று சொன்ஞர். ஐயா அது மெய்தான், தேவரீர்கள் கிருபைபண்ணியிருக்கச்சேதான் அவர்கள் காரியமெல்லாம் சேகரமாய் வருகிறதும், இதுவுமல்லாமல் கும்பினிர் வர்த்த கருக்குத் துவர்னதோர்த்தனம் பண்ணுகிறவர்களுக்கு எப் போதும் உடைந்தையாயிருக்கிறது. ஆனலும், நீங்களவர் களுக்குத் தயவு பண்ணுகிருப்போலே எவர்களுக்கும் நடத்தின தில்லை. அதினலே இனிமேல் கும்பினீர் கூடி நடத்தத் தேவை யில்லை என்றும், சர்வமும் விற்றுப்போட்டுக்கொண்டிருந்தவர் கள் நீங்கள் சொன்னலும் போதுமென்று மறுபடியும் ஒப்பந் தம் பண்ணுகிறதற்குச் சம்மதித்துக்கொண்டதேதென்றும் அவர்களை எப்போ நீங்கள் தயவுபண்ணிக்கொண்டுவந்தாலும் அவர்களுக்கும் அதற்குப் பாத்திரந்தான். அந்த நன்றி அறிந்து

நடந்துகொள்ளுகிற மனுஷரவர்களும் சரியென்று பின்னையும் பட்டணத்தைக் காப்பாத்திக்கவேணுமென்றும், நிலத்தீர்வை விட்டது சர்வ சனங்களை ரட்சித்துக்கொண்டுவருகிற நேர்மையையும் இரண்டு நாழிகை நேரம் பேசினபிற்பாடு வர்த்தகருடனே அந்தப்படி நீ சொல்லென்று சொன்னார். அப்படியல்ல, தேவரீர்களண்டைக்கு எல்லாரையும் அழைப்பிக்கிறேன். உங்கள் முன்னே வந்தால் நீங்கள் வாயைத் திறந்து ஒரு வார்த்தைச் சொன்னால் போதும். மற்றதை நான் சொல்வித் திட்டம்பண்ணிப் போடுகிறேன் என்று சொன்னேன். நல்லதென்று சொன்னார். அதன்பேரிலே கும்பினீர் வர்த்தகரை அழைத்துவரச் சேவகரை அனுப்பி அழைத்துவரச் சொன்னேன். அவர்களும் போய் அழைத்துவருகிறதற்குள்ளே துரை மறுபடி என்னை அழைத்துப் பதினாயிரம் ரூபாய்க்கு உண்டி எழுதுவித்துக் கொண்டுவா, ரூபாய் கோட்டையிலே கொடுக்கச் சொல்லுகிறேனென்று சொன்னார். அப்பால் குண்டூர் பாலிசெட்டியை அழைப்பித்துப் பதினாயிரம் ரூபாய்க்கு உண்டிகை சென்னப்பட்டணத்திலே முசியே பெடுத்தல்மி கையிலே உண்டிகைக் குண்டூர் மானசுலுசெட்டி பேருக்கு உண்டிகை எழுதுவித்துத் துரைக்குக் கொண்டுபோய்க் கொடுத்தேன். அதற்குத் துரை சொன்னது: நாளைக் காலத்தாலே கோன்சேல் கூடி சென்னப்பட்டணத்திற்குக் காகிதம் எழுதப்போகிறோம். அப்போது கொண்டுவந்து கொடு. அந்தமட்டுக்கும் உன் கையிலே இருக்கட்டுமென்று சொன்னார். அதிலே கும்பினீர் வர்த்தகர்கள் வந்தார்கள். அவர்களைக் கொண்டுபோய்த் துரை முன்பாக விட்டேன். அப்போது துரையவர்கள் கும்பினீர் வர்த்தகரைப் பார்த்துச் சொன்னது: முசியே துலோராம் ரொம்பவும் இட்டோட்டாய்ப்பண்ணிக்கொண்டு வந்தான். ஆனபடியினாலே, அவன் பஞ்சிலே புரட்டின புரட்டைக் கோன்சேலிலே போட்டு அவனை உத்தியோகம் பரிகரித்து நடப்பித்த சம்மதிகளெல்லாம் ரங்கப்பா வயணமாய்ச் சொல்லென்று சொன்னார். அந்தப்படிக்கு வர்த்தகருடனே முசியே துலோராம் நாளதுவரைக்கும் எண்ணாமல், நடந்ததைப் பாராமல் நாம் அவனுக்குச் சென்னப்பட்டணத்துத் துரைத்தனம் கொடுத்து அனுப்பின பிறகு பின்னையும் அதனமாச்சுது. அப்படி நடக்கிறவன்தான் பரிசுத்தமாயல்லவோ நடந்துகொள்ளவேணும்.

அதை விட்டுவிட்டுத் தானே அவ்விடத்திற்குத் துரையாக எண்ணிக்கொண்டு தன்னுடனே மனதுப்படிக்குச் சகலத்தையும் திருடத் தலைப்பட்டான். அதன்பேரிலே பஞ்சை ஏலத்திலேபோட்டு விற்கச்சொல்லி எழுதியனுப்பினால் அதைக் குண்டூர் பாவிசெட்டிக்கு விற்றதாக இருபத்திரண்டு வராகன் விலை எழுதுவித்து எழு நூறு கட்டு ஐந்நூற்றிச் சில்வாணம் பாரம் உண்டு. அவர் எடுத்துக்கொண்டபடியினாலே அதைக் கொமிசேலிலேபோட்டு, அவனை நேரஸ்தனுக்கிப்போட்டோம் என்று சொல்லி எனத்துடனே சொன்ன வயணம் மேலே எழுதியிருக்கப்பட்ட வயணப்படிக்குச் சொன்னேன். அப்பால் துரையவர்கள் வர்த்தகரைப் பார்த்துச் சொன்னதற்கு இந்த பஞ்சு நம்முடையதாக நீங்கள் வைத்து வில்லுங்கள். நயம் வந்தால் நீங்கள் கொண்டுபோங்கள். நஷ்டம் வந்தால் நாம் ஒத்துக்கொடுக்கிறோம் என்று சொல்லி, இந்த விலை இருபத்தாறு வராகன், இந்தப்படிக்குக் கோன்சேலிலே சொல்லி எழுதுவித்துப்போடுகிறோம். இதல்லாமலும் உங்களுக்கு நாம் ஒரு சகாயம்பண்ணுகிறோம். அதென்னவென்றால்: இப்போது நீங்கள் வாங்கி இருக்கிற சரக்குக்குச் சம்மதி வராகனைச் சென்னப்பட்டணத்துச் செலவுக்கு மாதம் ஐயாயிரம் ஆறாயிரம் வராகன் விழுக்காடு கொடுத்துவந்தால் நீங்கள் கொடுக்க வேண்டிய வராகனுக்குச் சரியாய்ச் சொல்லுகிறபோது வெகு நாளாகிறது. இது உங்களுக்குப் பெரிய சகாயம் என்று சொன்னார். அதற்கு இவர்கள் கேட்டது எப்போதும் நீங்கள் தயவுபண்ணி நடப்பித்துக்கொண்டுவருகிற பாத்தியம் உங்களுடையதாயிருக்கச்சே இதென்ன ஆச்சரியமென்றும், பின்னையும் உபசாரமாய்க் கேட்டார். அதற்குத் துரையவர்கள் சொன்னது: இப்படி உங்களுக்கும் சமஸ்தமானபேருக்கும் உபகாரம்பண்ணச்சே நாம் எப்போதுமிந்த ஊரிலே இருக்கிறவர்கள் எல்லாரும் சுவாமியைப் பார்த்துப் பிரார்த்திக்கிறோம் என்று பட்டணத்திலேயிருக்கிற ஜனங்களெல்லாம் கோருகிறார்களாம். இது எனக்கு மெத்த ஆச்சரியமாயிருக்கிறதென்று சொன்னார். அதற்கு வர்த்தகர் சொன்னது: இந்த இங்கிலீசுக்காரர் கலாபத்திற்கு மகா கொத்தப்பட்டணம் கொள்ளைபோய்ச் சென்னப்பட்டணம், தேவனாம்பட்டணம், இதிலேயிருக்கிற வர்த்தகர்கள், துலுக்கர்கள், சீர்மையிலே இருக்கிற வர்த்தகர்

கள், பறங்கிப்பேட்டையிலே இருக்கிற வர்த்தகர்கள் முதலாய் ஓரிடத்திலேயும் நிற்க நிலையில்லாமல் சருவசோபானமும் ஒப்புவித்துப்போட்டவனும் அத்தியாய் அலைந்து கெட்டுத் திரிகிறார்களப்படியிருக்க உம்முடைய இருதய தைரியங்களும் நீர் இந்தபட்டணத்துச் சனங்களைத் தகப்பனானவன் பிள்ளைகளையெப்படி ரக்ஷிப்பானோ அந்தப்படி ரக்ஷித்ததற்குத் திருஷ்டாந்திரம் வேறே அறியவேணுமா? பிராஞ்சுக்காரருக்கும் இங்கிலீசுக்காரருக்கும் சண்டையானதற்குமுன் இந்தப் பட்டணத்துக்கு வந்த ஆதங்கத்துக்கு நாங்கள் நிர்ப்பமாயிருந்ததும், நிர்ச்சிந்தையாயிருந்ததும், அப்பால் சென்னப்பட்டணத்திலே யிருந்த வர்த்தகர் பட்டபாடுகளுக்கும் கெட்டகேடுகளுக்கும் இதுவே பெரிய திருஷ்டாந்திரம். இதல்லாமல் க்ஷாமத்துக்குத் தானியத்துக்குத் தீர்வைத் தள்ளினது சனங்களைக் காப்பாற்றும் பொருட்டு இப்படிச் சகல விதத்திலேயும் நீர் சனங்களை ரக்ஷிக்கிறவிடத்திலே உம்முடைய பேரிலே குறையாயிருக்கிற மனுஷர் பிறப்பிக்கிறார்கள். இதை நீர் நன்றாய் விளங்கினப்போலே அப்போது எந்தண்டையிலே யிருந்து இந்தப் பேச்சுப் பிறக்குதோ அதை அறிந்து அவர்களைத் தூக்கிப்போடவேணும். இப்போது எல்லாரையும் உமக்கிருக்கிற கீர்த்தி பார்சாவுக்குக்கூட இல்லை. அப்படிப் பட்ட கீர்த்தி சம்பாதித்தீர் உமக்கு இன்னும் மேன்மேலும் கீர்த்தியும் தீர்க்காயுசும் வரவேணுமென்று சுவாமியைப் பிரார்த்திக்கிறார்கள். அப்படியிருக்க, அதற்கு விரோதமாய் உம்முடைய பேரிலே சொல்லுகிறார்களென்று சொன்னவர்களை அழைப்பிக்கிறது. யார் சொன்னார்களென்று விசாரித்து மெய் பொய் என்று விளங்கி அவர்களைத் தூக்கிப்போடவேணுமல்லாமல் இப்படிச் சும்மாவிருக்க அபாண்டம் ரொம்பவும் போடுகிறார்கள். இதல்லாமல் முக்தாம்நாள் என் பேரிலே ஒரு அபாண்டம் தேவரீர்களுடனே சொன்னார்கள். அது அவர்களை அழைப்பித்து மெய் பொய் என்று விளங்கின லப்போது என்பேரிலே குற்றமென்று அல்லது சொன்னவர்கள் பேரிலே குற்றமென்று தெரியுமே எங்கே குற்றமென்று காணுகிறீரோ அவர்களை மறுபேச்சுக்கு இடமில்லாமல் தூக்கிப் போடவேணுமேயல்லாமல் சொல்லுகிறவர்கள் சொல்லட்டும் என்றிருந்தால் பொழுது விடிகிறதே ஒரு அபாண்டம்

போடுகிறுர்கள். இந்த அபாண்டம் போடுகிறதற்கு என்னவென்று இந்த விசாரத்துமேலே ஒரு காரியமும் தோற்றுமல் அப்படிக்குக் கெட்டுப்போகிறது. இப்போது என்பேரிலே பொழுது விடிந்தால் அந்திவிட்டால் ராச காரியம் தேடுகிறதே வேலையாயிருக்கிறுர்கள். எத்தனை காரியமென்று தேவரீர் சகிக்கப்போகிறீர். ஒரு வேலையில்லாவிட்டால் ஒரு வேலை எங்கே ரொம்ப வருகிறதோவென்று அதுவே விசாரமாயிருக்குமென்று இந்தமட்டுக்கும் சொன்னது போதாமல் இன்னும் சொல்லத்தக்கதாக ஆயத்தமாயிருக்கிறுர்கள். இப்படியானுல் என்னுலே நிருவாகம்பண்ணுகிறது ரொம்பவும் பிரயாசம்போலத் தொற்றுதென்றும் பின்னையும் அதற்கு அடுத்த வார்த்தைகளென்னமோ அதுகளெல்லாம் சொன்ன விடத்திலே அவரிருந்துகொண்டு அதுகளெல்லாம் நான் அறிவேன். ஒருத்தன் அதிகாரஸ்தனுயிருந்தால் அவன் பேரிலே வெகு பொறுமை சொல்லுகிறதுண்டு. ஆனுல் எங்களுக்குள்ளே திருஷ்டாந்திரம் உவமை சொல்லுவார்கள். நாய் குலைக்க அதிக சிரேய்சு வருமென்று சாமத்தையுண்டு. ரங்கப் பிள்ளையின்பேரிலே இந்த நாய்களாகிய சின்ன மனுஷர் சொல்லுகிறதினுலே அதிக சிரேய்சு என்று எண்ணிக்கொள்ளு. அது தப்பிதமல்ல. கெட்டியாய் உனக்கு அதிக சிரேய்சு வர ஏஷ்யம் என்று தெரிந்துகொள்ளு. என்னை சொல்லுகிறதற்கு நானும் அப்படித்தானே எண்ணிக்கொண்டேனென்றும் இப்படி பின்னையும் அநேக விதமாய் ஒருத்தருக்கொருத்தர் சொல்ல, கும்பினீர் வர்த்தகரனைவரும் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அப்பால் சுவாமி தயவுபண்ணி வைப்பார், போ என்றும் அனுப்புவித்தார். பனிரண்டு அடித்துப்போனபடியினுலே வர்த்தகரை வீட்டுக்கு அனுப்புவித்து நானும் வீட்டுக்குப் போனேன். பேசச்சே துரையிருந்த உற்சாகம் சொல்லி முடியாது. கும்பினீர் வர்த்தகரில்லாமலிருந்தால் இந்த அபாண்டம் வருகிறதும் மதாம் வழியிலே என்று விசிதப்பட்டுச் சொல்லுவேன். ஆனுல் கும்பலானபடியினுலே சொல்லவில்லை. இன்னுமொரு சமயம் பார்த்துச் சொல்லவிருக்கிறேன்.

1747 ஆ நொவம்பர் மீ 30உ க்கு பிரபவ ஞு கார்த்திகை மீ 18உ குருவாரம்.

இற்றைநாள் காலத்தாலே கோன்சேல் கூடி கலந்து சென்னப்பட்டணத்துக் கோன்சேலுக்குக் காகிதமெழுதச்

சொன்னேம். கும்பினீர் வர்த்தகர்களுக்குச் சொல்லச் சென்னப் பட்டணத்திலேயிருக்கிற காரியக்காரருக்கு எழுதியனுப்பிப் பஞ்சு நிறுத்திக்கொள்ளச் சொல்லி எழுதியனுப்பச் சொல்ல நாங்களும் கோன்சேல் காகிதத்திலே கும்பினீர் வர்த்தகர் மனுஷர்களுக்கு நிறுத்திவிடச் சொல்லி எழுதியனுப்புவிக் கிறோமென்று சொல்லிப் பதினாயிரம் ரூபாய் உண்டிகைக் காகிதம் எங்கேயென்று கேட்டார். என் கையிலே இருந்ததைக் கொடுத்தேன். அதை முசியே லேகு (M. Legou) கையிலே கொடுத்துப் பதினாயிரத்து எழுபத்தைந்து ரூபாய் உண்டாவணி கூட கொடுக்கச்சொல்லி ஒடுதினான்சு எழுதி கையெழுத்துப் போட்டுச் சின்ன துரை கையிலே கொடுத்தால் சின்ன துரை அந்த ஒடுதினான்சை என் கையிலே கொடுத்து நாளை காலத் தாலே பாலுசெட்டியைக் கோட்டைக்கு வரச்சொல்லிக் கொடுத்துவிடுகிறேன். நீயுஞ் அவர் கணக்குப் பேசக் கவையிருக் கிறதென்று சொன்னார். நல்லதென்று சொன்னர். மற்றப்படி துரை லோகாபிரமமான பேச்சு நடந்ததேயல்லாமல் எழுதத் தக்க காரியமில்லை. அப்பாலே வீட்டுக்குப் போனேன். பகலைக்கு மேலும் விசேஷ சேதியில்லை.

*1747* ஆ௵ தேசம்பர் ௴ 1௳க்கு பிரபவ ௵ கார்த்திகை ௴ 19௳ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே அமாவாசையானபடியினாலே பழையது சாப்பிடக் கவையில்லாதபடியினாலே ஆறரை மணிக் குப் புறப்பட்டுக் கோட்டைக்குப் போய்ச் சின்ன துரையைக் கண்டு பேசினாப்போலே அவர் எழுந்திருந்து வெளி கிடங் குக்கு வந்து உட்கார்ந்தார். நானும் கூடப்போனாப்போலே தாந்தானே எனக்கொரு நாற்காலிபோட்டு உட்காரச் சொன்னார். அந்தப்படிக்கு உட்கார்ந்த பிற்பாடு என்னைப் பார்த்து மதாம் துய்ப்பிளேய்க்கு, உன்பேரிலே ரொம்ப பிராது பண்ணுகிறார் என்று சொன்னார். ஆனால், நடந்த பூர்வோத்திர மும் இப்போது நடக்கிற பூர்வோத்திரமும் சூட்சமாய்ச் சொல் லுகிறேன், நயவுபண்ணிக் கேட்கவேணும் என்று சொன் னேன். நல்லது, சொல்லென்று சொன்னார். அப்பால், மதா முடைய நிலைப்பு வருகிற வியாச்சியம், வர்த்தகர் சம்மதி, நபா முதலானவர்களுக்கு எழுதுகிற காகிதங்கூட தன் மாரிபத்

திலே நடக்கவேணும், அப்பால் சண்டை காரியத்துக்கு வெகு மற்றதுகள் தன்தன் முகாந்திரமாய் நடக்கவேணும். அப்பால் ஊரிலே அதிகாரம் செலுத்துகிறது தன்னதிகாரமே யல்லா மல் வேறே அதிகாரமில்லாமல் நடத்தவேணும். சென்னப்பட் டணத்துக் கபுறு காரியங்கள், வர்த்தகர் குத்தகை காரியங்கள், கொள்ளை போகக் கொடுத்தவர்களிவர்களுமல்லாமல் பின்னை யும் பிராது சொல்ல வருகிறவர்கள் முதலாகிய சென்னப்பட் டணத்துச் சம்மதிகளுமிதுகளெல்லாம் தன் வழியிலே நடக்க வேணும். இதுகள் பின்னை ஒருத்தர் வழியிலே நடக்கிறது சர்வாத்துமனுகச் சம்மதியில்லை. அப்படியிருந்தும் சென்னப் பட்டணத்துக் காரியத்தோடே சேர்ந்தது. வர்த்தகர் மற்று முண்டான பேர் வந்து பேசுகிறது இப்போது அவ்விடத்திலே நடக்கிற சமாசாரம் அடிக்கடி அழைப்பித்துத் துரையுடனே சொல்லுகிறது. சமஸ்தமும் மதாம் துய்ப்பிளேய்க்சு அல்லா மல் மற்றப்படிக்கு அந்தச் சோலிக்கு நான் போகிறதில்லை யென்று சொன்னதற்குச் சின்ன துரை அப்படியே நடக்கிறது என்று சொன்னுர். மதாம் சென்னப்பட்டணத்துக்கு முசியே பிறியேலுக்கு(M. Friell) எழுதி அனுப்பி என் மனுஷரை முசியே பிறியேல் கோபித்துக்கொண்டு அதன்பேரிலே நான் முசியே துய்ப்ளேய்க்சுக்குச் சென்னப்பட்டணத்திலே அவர் முசியே பிறி யேலுக்குக் காகிதம் எழுதினதின்பேரிலே அவனென்ன துரைக்கு எழுதினுனே, துரை எங்களை அழைத்துச் சென்னப்பட்டணம் வர்த்தகர்களை அழைப்பிக்கிறது. பின்னையும், அவ்விடத்திலே இருக்கிற வர்த்தகருக்கு உடம்படிக்கைச் சொல்லி இவ்விடத் திற்கு அழைப்பிக்கிறது. அதுகளும் பின்னையும் சென்னப் பட்டணத்திலே நடக்கிற கபுறுகளுடனே சேர்ந்ததும், மதாம் தன் முகாந்திரமாய் நடப்பித்துக்கொள்ளுகிறுளென்று சொல்லுகிறுர்கள். அவள் தானே விசாரித்துக்கொண்டு போகட் டும்; நீ அந்தச் சோலிக்குப் போகவேண்டாம். உன் மனுஷ னுக்கு எழுதியனுப்பு என்று சொன்னுர். நல்லதென்று சொன் னேன். அதன்பிற்பாடு என் மனுஷன் சென்னப்பட்டணத் திலே யிருக்கிறவனுக்கு எழுதியனுப்பினதுமல்லாமல் நானும் சென்னப்பட்டணத்துக் காரியத்தோடே சேர்ந்த கபுறு சொல்லுகிறதுமில்லை. துரையும் என்னைக் கேட்கிறதுமில்லை. ஏதாகிலும் அவராகச் சென்னப்பட்டணத்திலே இப்படி

இப்படி நடக்குதாமென்று ஒருவேளை சொன்னால், அப்படியா வென்று கேட்டுவிட்டுப் போகிறதேயல்லாமல் நானொன்றும் சொல்லுகிறதில்லை. அதுமுதற்கொண்டு நாளதுவரைக்கும் ஆறு மாதமாய் மதாம் துய்ப்ளேய்க்ஸ் வழியிலே நடக்குதென்று சொன்னேன். அதுதானப்படி நடக்கிறதே புதுச்சேரி காரியமும் அப்படி நடத்திக்கொள்ளப் பார்க்கிருள். அது எனக்கு ஆயிரந்தரம் சம்மதியானல் அது முசியே துய்ப்ளேய்க்சுக்குச் சம்மதியில்லை. அதற்கு என்பேரிலே விருதாவாய்க் கோபம் பண்ணி அபாண்டம் போட்டுத் தலைவெட்டவேணும் எஎறு பார்க்கிருர்கள். ஆனல், சுவாமி ஒருத்தர் லோகத்துக்குள்ளே இருக்கிறபடியினலே ஒருக்காலும் நடக்கப்போகாது எனறு என் மனதிலே கெட்டியாய்த் தோற்றியிருக்கிறது.

அப்பால் என்ன நடக்கிறதோ நானறியேன் என்று சொன்னதற்குச் சின்ன துரை சொன்னது: நீர். இப்போது சொன்ன வார்த்தையை மெய்யாக நம்பு. அபாண்டம் போடு கிறவர்களுக்குச் சுவாமி ஆக்கினை கொடுப்பார். அதற்குச் சந்தேகமில்லையென்று சொல்லி வீராநாயக்கனைக் கூட வைத்துக்கொண்டு திருடத்தக்கதாக முன் திருடி ஓடினவனை மறுபடி ஊருக்குள்ளே அழைப்பித்து உத்தியோகத்திலே வைத்தானென்று சொன்னர். அதற்கு நான் சொன்னது: ரங்கப்பன் இந்தக் காரியத்திலே ஏந்திராரிடச்சேயில்லை. நானுங்காட்டும் நயினராயிருக்கிறவன், ஆனல் இருக்கிருன். சென்னப்பட்டணத்துக் காரியம் வெகுசாய்க் கெட்டுப்போகுதென்று குவர்னதோருடனே சொல்லி தளவாயாக வைப்பித்தது. அப்படியிருக்க அவன்பேரிலே சொல்லுகிறது நியாயமல்லவென்று சொன்னதின் பேரிலே அதற்கு வாயை மூடிக்கொண்டானென்று சொன்னர் இதுதான் ஒரு திருஷ்டாந்திரமாச்சுது. அப்பால் இப்பவும் ஐந்தாறு நாளைக்கு முன்பாக ஒரு பெத்திஸியோம் எழுதுவித்துக் கொடுத்தான். அந்த வயணம் 1744 ஆ ஜனவரி மாதத்திலே கடப்பையிலேயிருந்து ஒருத்தன் மகாராஷ்டிரனன பிராமணனை ஆனந்தராயனென்கிறவன் வந்து தன்னைப் புத்திர ஸ்வீகாரம்பண்ணிக்கொண்ட பிற்பாடு கிருஷ்ணுசிபண்டிதருக்குப் பிள்ளைப் பிறந்தது. எங்கள் தகப்பனர் இருக்கிறமட்டுக்கும் கூட இருந்து அவர் காலம்பண்ணிப் போனபிற்பாடு என்னைப் புத்திர ஸ்வீகாரப்பிள்ளையென்று புறம்பே பார்த்து

வயிற்றிலே பிறந்த பிள்ளையென்று ஆஸ்தியவனுக்கேயல்லாமல் எனக்குக் கவையில்லையென்று எங்கள் தாயார் உடைமைத் தட்டு முட்டுச் சமஸ்தமும் எடுத்துக்கொண்டு இருக்கிறதை இந்த ஊரிலே வைத்துக்கொண்டிருக்கிறானென்றும் சொன்னதின் பேரிலே அந்த வியாச்சியம் கேட்டுத் தீர்த்தார். அப்போது அந்த உடைமையிலே விநாயகப்பண்டிதன் என்றொருத்தன் அவனுடைமை நாலாயிரம் வராகனாகிறது. உடைமையும் ரொக்கமுமாயிருந்தது. அந்த உடைமை சம்மதியும் வியாச்சியப் பட்டு அதுவும் தீர்ந்து விநாயகப்பண்டிதனுடைமையை அவன் பெண்சாதி வசம்பண்ணிவிட்டு இதுகள் தீர்ந்ததற்குத் தபிலியேம் கையெழுத்தாய் எழுதி முசியே துய்ப்ளேய்க்ஸ் கையெழுத்துப்போட்டு ஒரு பிரதி வியாச்சியக்காரருக்குக் கொடுத்து ஒரு பிரதி சாவடியிலே கட்டியிருக்கிறது. அந்த விநாயகப்பண்டிதனுடைமை இவ்விடத்திலேயிருந்ததை அவர்கள் இரு நூறு முன்னூறுமாகப் பாதிமட்டுக்கும் எடுத்துக்கொண்டுபோனார்கள். மற்றப் பாதி இரண்டாயிரம் வராகனுக்குண்டு. அதை எடுத்துக்கொண்டு போகிறதற்கு வந்தாலதை முப்பதினாயிரம் நாற்பதினாயிரமிருக்கிறது, அதை எடுத்துக்கொண்டுபோக வந்தார்கள். எனக்குச் சம்மதிராயன் காகிதமும் மகம்மதாக்கலுடைய காகிதமும் கொண்டுவந்து கொடுத்து ஆயிரத்தைந்நூறு வராகனும் எனக்குப் பரிதானம் கொடுத்து அவர்கள் போகிறதாய் இருக்குதென்று கப்பித்தான் தேசிபாய் அப்துலாய்மான் வந்து சொல்லுகிறானென்றும் கிருஷ்ணாசிபண்டிதர் புத்திர சுவிகாரப்பிள்ளை ஆனந்தராயனென்கிறவன் வியாச்சியம் தீர்த்துக்கொண்டவன், கடப்பை தட்டுமுட்டுச் சிறிது பங்கிட்டுக் கொடுத்து இருபத்தைந்து சேர் தங்கம் இருக்குதாம், அவர்களையும் ரங்கப்பன் கையிலே வைத்துக்கொண்டு, அவர்கள் கையிலே சிறிது வாங்கிக்கொண்டு இவனுக்குப் பங்கிட்டுக் கொடுக்கவேண்டாமென்று சொல்லுகிறானென்று பெத்திஸியோ மெழுதுவித்துக் கொடுத்து என்பேரிலே சிறிது அபாண்டமாய் நான்தானே குவெர்னேராயிருக்கிறேனென்று சொன்னது சேனே உண்டு அப்பால் மறுநாள் முசியே துய்ப்ளேய்க்ஸ் குவர்னதோர் விசாரிக்கச்சே எல்லாம் பொய்யாகிச் சொன்னவர் பேரிலே எல்லாம் கோபம்பண்ணினார். சொன்னவர்கள் முகத்திலே கறுப்புத் தடவிக்கொண்டார்கள். இதல்லாமல் இப்போது வங்காரி என்று ஒரு தேவடியாள் சென்னப்பட்ட

ணத்திலே யிருந்துவந்தாள். அவள் காரியம் எழுதிக்கொடுத்ததும் நடப்பித்ததும் கடைசியிலே அவளுக்கும் இவனுக்கும் நடந்ததும், அப்பால் அவளைத் தனக்கு நானூறு மூன்னூறு கேட்டதும், அவள் என்ன காரியமாகப் பண்ணிக்கொடுத்தீர்களென்று அவள் புரண்டு பேசினது அவள் தெருத்தெருவிலும் கூவிக்கொண்டு திரிந்ததும், அது பட்டணமெல்லாம் பிரசித்தமாயிருக்கிறது. இது நான் விலக்கம்பண்ணிப் போட்டேன் என்று என் பேரிலே கோபம். என்னுடனே பேசாதபடிக்கு அவளைப் பத்திரம் பண்ணினது சேனேயுண்டு. இதல்லாமல் குவர்னதோர் உத்தாரத்தின்பேரிலே சீட்டுக்கொடுக்கொடுக்கிறது. அப்படியிருக்க, என் கணக்கப்பிள்ளை அந்த சீட்டிலே அம்மாளவர்கள் காகிதம் போகுது என்றெழுதிக் கொடுத்தான். அதற்கு குவர்னதோருக்கு மகா-ா-ா-ஸ்ரீ எழுதவில்லையா? எனக்கு அப்படி எழுதப்போகாதாவென்று அந்தக் கணக்கப்பிள்ளையைப் பிடித்துவந்து ஆறு ஏழு அடி அடித்தானபிற்பாடு அந்த இடையனை இப்படி அடிப்பேனென்று அவனுக்குச் சொல்லென்று வெகு உதாசீனம் பண்ணினுள். அப்போது அண்டர் சேவகர், சோபுதாரர்களிவர்கள் நூறுபேரிருக்கச்சே அவர்களெல்லாரும் கேட்க இப்படி அவமரியாதைபண்ணினால், இந்தப் பட்டணத்திலேயிருக்கிறவர்கள் எனக்கு எப்படி வணங்குவார்கள்? அப்பால் எனக்கு என்ன காரியம் நடக்கும்? இப்படி பெர்முதுவிடிந்தால், அந்திப்பட்டா விது வேலே அந்தம்மாளுக்கு. நான் துரை பெண்ஜாதியென்று எத்தனை மரியாதையாக நடந்துகொண்டாலும் இப்படி நடத்துகிருள். இப்படி நடத்தச்சேயும்பதறி குவர்னதோருடனே சொல்லலாகாது. சொன்னால் கோபம் பண்ணுவார். அப்படி ஏன் வரவேணும்? அந்தம்மாள்தானே தெரிந்துகொள்ளட்டும் என்று பார்த்தால், நானப்படி இருக்கிறது பயந்திருக்கிறதாக எண்ணினுளேயல்லாமல் மரியாதை நிமித்தியமா இருக்கிறதாக எண்ணவில்லை. அபாண்டம் போடவேணுமென்று நினைத்திருக்கிறதை இன்னம் விட்டதில்லை. இப்போது ஆறுக்காரர் ஏழெட்டுபேர்கள் இரண்டு மூன்று மாதத்துக்கு முன்னே ஒருநாள் ராத்திரி ஆடினார்கள். அவர்களைப் பிடித்துக்கொண்டுவந்து கபுறு சொன்னார்கள். இதிலே அவன் வர்த்தகனுடைபடியினாலே அவன் எனக்குக் கடனுண்டு அவன் பரபத்தியனுக நாணயமாயிருக்கிறவன்.

இது வெளியானல் அவன் கெட்டுப்போவேனென்று ரொம்பவும் தாபந்தப்பட்டுச் சொல்லிக்கொண்டபடியினுலே இது காரியம் வெளியாக்கிறதல்ல வென்று விட்டுவிடச் சொன்னேன். அந்தப்படிக்கு விட்டுவிட்டார்கள்.

அப்பால் மலேயப்பன் வந்து சூதாடினவர்களிடத்திலே யிருந்து பத்தொன்பது ரூபாயும், இரண்டு பொன்னுருட்டு மோதிரமும் ஒரு வராகன் பெறும், ஒருகலாகட்டு சிகப்பு நாலு வராகன் பெறும் இது கொண்டுவந்து காண்பித்தார்கள். ரூபாயைக் கிறிஸ்துவ பிக்ஷைக்காரருக்குக் கொடுத்துவிடச் சொன்னேன். மோதிரத்தை அந்தச் சேவகரை எடுத்துக்கொள்ளச் சொன்னேன். எப்போதும் ஐம்பது வருஷமாய் நடக்கிறது. தலேயாரிகள் கண்டால் கண்டவர்களே நாலுபோட்டுப் பிடுங்கிக்கொண்டுபோகிறது. அப்படிச்செய்யாமல் மலேயப்பன் சேவகர் என்ன நடந்தாலும் என்னுத்திரவில்லாமல் நடக்கிறவர்கள் அல்லாதபடியினுலே எனக்குக் கொண்டுவந்து காண்பித்ததற்கு அவர்கள் ராத்திரியிலே ஊர் காக்கிறபடியினுலே அவர்களுக்கு உற்சாகமாயிருக்கவேணுமென்று மோதிரத்தைக் கொடுத்து ரூபாயை பிக்ஷைக்காரருக்குக் கொடுப்பித்து, வர்த்தகன் பேச்சு வெளிக்கு வந்தால் அவன் கெட்டுப்போகாமற்படிக்கு அவனேயும் விட்டுவிட்டேனென்று சொன்னேன். மெய்தான், ஆனுல், ஒரு பேச்சு எனக்காகிலும் குவர்னதொருக்காகிலும் எச்சரித்தால், ஒருத்தர் புறம்பே ஒன்றுஞ் சொல்லக்கூடாதென்று சொல்லியாகிலும் இதென்ன குற்றமென்று நான் சொல்லவில்லே. மதாம் உன்பேரிலே போடுகிற அபாண்டத்துக்கு வாயை மூடத்தக்கதாகச் சொல்லுகிறேன். அதைத் தொட்டுக் குற்றமில்லே. அவளென்ன அபாண்டம் போட்டாலும் உன்னே ஒருத்தராலே ஒன்றுஞ் செய்யக்கூடாது. கும்பினீர் காரியத்திலே மாத்திரம் வழுதலேயில்லாமல் நடந்துகொள்ளு. மதாம் துய்ப்ளேக்சு உன்பேரிலே சொன்ன அபாண்டமான விசேஷங்களெல்லாம் நானும்கேள்விப்பட்டேன். ஆனுல், அதைத்தொட்டுப் பயப்படத்தேவையில்லே. ஆனுல், பார்த்தவர்களுக்கு மகிமைக்குப் பங்கமாயிருக்குதென்ருலல்லோ சொல்லவருகிருய் அது மெய்தான். ஆனுலவள் வெள்ளேக்காரர் வெள்ளேக்காரிச்சிகளுடனேயெல்லாம், தன் ஆம்படையானேக் கண்ணே மூடிப்போட்டு ஊரைக் கொள்ளேயிட்டுக்

கையிலே இரண்டு காசைச் சேர்த்துக்கொண்டு இவன் துரைத் தனம் பண்ணுகிருனென்று எல்லாருடனேயும் சொல்லுகிருன் அதைத்தொட்டு உனக்குப் பயமில்லையென்று சொன்னுர்.

*1747* ஆ டிசம்பர் மீ 2உ க்கு பிரபவ ளு கார்த்திகை மீ 20உ சனிவாரம்.

இற்றைநாள் குவர்னதோரவர்களுக்கு ஆற்காட்டிலேயிருந்து வந்த காகிதச்சேதி சொன்ன வயணம்: மராட்டியர் சிமனுசிராவு குமாரன் சதாசிவராயன் அறுபதினுயிரம் குதிரையுடனே வந்து நாசறுசங்குபேரிலே சண்டைக்கு வருகிருனென்றும், அந்தச்சேதி நபாபு ஆசப்ஷா அறிந்து குமாரனுக்கு எழுதினதென்னவென்ருல்: மராட்டிய ராவ் ராசா உத்தாரத்தின்பேரிலே சிமனுசிமகன் சதாசிவராயன் அவ்விடத்துக்கு வருகிருன். நாம் கந்தனூர் மைதானத்திலேயிருந்து அவ்விடத்திலேயிருக்கிற சுபேதாரர்களுக்குத் தாக்கீது எழுதினேம். அவரவர்கள் பவுன்சுடனே போய் நிசாமதவுல்லாவுக்கு மற்றது பண்ணுகிறது என்று எழுதிவ சன்னதை அவரவர்களுக்குக் கொடுத்தனுப்பி அந்த பவுன்சைக் கூட்டிக்கொண்டு உன்னண்டையிலேயிருக்கிற பவுன்சுடனே கூட ஏகத்துக்கு அந்த மைதானத்திலேயிருந்து மராட்டியர் பவுன்சு வராதபடிக்கு எப்படி தடைபண்ணச்சொல்லி எழுதினதாகவும், அந்தச் சேதி நாசறுசங்கு லசுக்கருக்கு வந்து நாசறுசங்கு லசுக்கரிலேயிருந்து காசிதிகள் நிசாம் சன்னதும், நாசறுசங்கு சன்னதும் கொண்டு வந்து ஆற்காட்டுக்கு வந்ததாயும், அதைச் சம்மதிராயன் பார்த்துக்கொண்டு அந்தக் காகிதங்களுடனேகூடத் தானும் ஒரு காகிதம் எழுதித் திருச்சிராப்பள்ளிக்கு நபாபு அன்வர்திகானை இப்படியாளுல் மராட்டியர் அவாசா உண்டாயிருக்கிறபடியினுலே நீர் அவ்விடம் விட்டு இவ்விடத்துக்குச் சீக்கிரமாய் வரச்சொல்லி எழுதினதாகவும், அந்தப்படிக்குக் காகிதங்கள் திரிச்சிராப்பள்ளிக்குப் போனதாகவும், நாசறுசங்குச் சாவனுர்கள் நூறு குதிரைக்காரர் பணத்து நிமித்தியம் வந்திருந்தவர்களை வரச்சொல்லியும், அதிலே ஒரு குதிரைக்காரனை மாத்திரம் இருக்கச்சொல்லி எழுதினதாகவும், அந்தத் தொண்ணூற்றென்பது குதிரைக்காரரும் ருசுமுரு தீர்த்துக் கொண்டுபோ தாயும், இராசத்துகான் மகன் புதுச்சேரிக்

குக் கலியாணத்துக்குப் புறப்படுகிறதாயிருக்குதென்றும், கோதும்பை வாங்கினதைப் பிறகாலே அனுப்புகிறோமென்றும் எழுதின சேதிகளையெல்லாம் துரைக்குச் சொன்னோம். அவரும் மராட்டியர் சேதி சுக்காயிருக்குதென்று நெல் உசந்து விற்கவேணும். மணக்கத்தை சின்னபடியிலே ஆறு படி விற்கச் சொல்லியும், கார் ஐந்து படியும், சம்பா நாலரை படியும் விற்கச் சொல்லி ஒரு உத்தாரம் கொடுக்கவேணுமென்றார் அதன் பேரிலே முருகப்பிள்ளை, வாசுதேவப்பண்டிதர், அப்பு முதலி கூடயிருந்துகொண்டு துரை உங்கள் பேரிலே யிருக்கிற பக்ஷத்தினாலே சொன்னாரென்றும் பின்னையும் சற்று விஸ்தாரமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். பின்னையும் ஒன்றும் விசேஷித்த சமாசாரமில்லை.

1747 ஆ டிசம்பர் மீ 3 உ க்கு பிரபவ ஹு கார்த்திகை மீ 21 உ ஆதிவாரம்.

இற்றைநாள் துரை கோயிலுக்குப் போய் பூசைகேட்டு வந்து சென்ட் பிரான்சிஸ்க் சவியேர் சின்ன பணவெஷன் ஷோம் பண்டிகையானபடியினாலே ஆடலும் பாடலும் சம்பிரமமாயிருந்தார்கள். அப்போது முருகப்பிள்ளைச்சாவடி கபுறு சொல்லப்போனபோது ரங்கப்புலே என்று என்னை அழைத்து, வாசுதேவப்பண்டிதன், அப்புமுதலி இவர்களிருக்கச்சே சொன்னது: நீ கும்பினீர் குடுத்தியேர். இந்த உத்தியோகம் ஏற்பட்டபடியினாலே உனக்கு ஒரு புத்தி சொல்லுகிறேன். சனங்கள் வாய் மூடவும், உனக்குப் பதிலாமையில்லாமை காரியமும், நெல் வியாபாரம் மாத்திரம் கட்டோடே விட்டுவிடவும், அது காரியமாத்திரம் நீ செய்யாமலிருந்தால் உனக்குப் பின்னை ஒன்றுக்கும் பயப்படவும் தேவையில்லை. பின்னையாருக்கும் பயப்படத்தேவையில்லை. கெட்டியா மனதிலே வைக்கவும் என்று சொன்னார். என்னுடைய கிரகத்தியத்துக்கு என்ன செல்லுமோ அது பத்து கரிசை தவிர அதற்குத்தக்கன வாய்ப் பரிச்சேதம் நான் வாங்குகிறதில்லையென்று சொன்னேன். அதைக் கேட்டாயா? இதை மனதிலே வைத்துக்கொண்டு சுவாமியுனக்குத் தயவுபண்ணுவாரென்று சொன்னார். ஐயா, அதுகாரியம் இப்பவுமில்லை, இனிமேலுமில்லையென்று சொல்லித் தீர்த்துப்போட்டேன்.

1747 ஆ டிசம்பர் மீ 4 உக்கு பிரபவ ௵ கார்த்திகை மீ 22 உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்கு வந்தோம். துரையவர்கள் காகிதமெழுதிக்கொண்டு முசியே பாதியும் கூட அலுவலாயிருந்தார்களானபடியினுலே கபுறுகள் சொல்லிவிட்டுப் பாக்குக் கிடங்குக்கு வந்திருந்து பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன். மற்றப்படிக்கு விந்தை சமாச்சாரங்களொன்றுமில்லை. சந்தா சாயபு குமாரத்தி, கலியாண நிமித்தியமா யிற்றைநாள் தக்காசாயபு பெண்ஜாதியும் ஷியார் குமாரன் அல்லிநக்கி சாயபும், குதிரை சுவார்கள் பத்து பேரும், எழுபது எண்பது சேவகரும், மூன்று ஒட்டகமும், ஒரு ஆனையும், இருபது எருதும் பசுவும் கூட வந்தார்கள். மற்றப்படி துரையவர்கள் தக்கா சாயபுக்கும் மழுதல்லிகானுக்கும் மராட்டியர் கலாபமாயிருக்கிறபடியினுலே தானியம் இவ்விடத்துக்கு அனுப்புவித்தால் மராட்டியர் கலாபமாயிருக்கிற சேதியினுலே உங்களுடைமைக்கு மாத்திரம் அல்லவென்று தாத்துக்கால விலைப்படிக்கு எடுத்துகொள்ளச் சொன்னுலும் எடுத்துக்கொண்டு பணம் கொடுக்கிருேமென்று எழுதியனுப்பச் சொன்னுர். அந்தப்படிக்கு உபாயமாய்த்தானே நெல் தேவை என்கிற சாடை காண்பித்துக் கொள்ளாமல் நெல் அனுப்பத்தக்கதாகவும், மராட்டியர் கலாபம் சாவடியினுலே பணத்துக்குப் பத்திரமென்றுப் போலேயும், சிநேகத்தைக் குறித்து எழுதினுப்போலேயும் இப்படி எழுதியனுப்பினேும்.

அப்பால் நேற்று கூனிமேட்டுக்கு அப்புறத்திலே ஆச்சிக்காட்டுத் துறைமுகத்திலே நிினிபோட்டிருந்த இங்கிலீசுகப்பல் மூன்று இப்போது பாயெடுத்து ஓடிவருகிருர்களென்று கபுறு சொன்னேன். சேக்கு உசேன் சமேதாரன், மகம்மது கமால் மகளைக் கலியாணம் பண்ணப்போகிருேமென்று உத்தாரம் கொடுக்கவேணுமென்று துரையை உத்தாரம் கேட்டான். கேட்டவிடத்திலே அவர் போகக்கூடாதென்று சொன்னுர். அதன்பேரிலே நானிருந்துகொண்டு இன்னமொருவேளை உத்தாரம் வாங்கலாம், வாருங்கோளென்று சொல்லிவிட்டு,

அவர்கள்கூட, நான்கூட மணி பனிரண்டடித்துப்போனபடியி ஞலே வீட்டுக்குப் போனோம்.

இற்றைநாள் சாயங்காலம் ஆறு மணிக்குத் துரை அழைத் தனுப்புவித்தார். போனவிடத்திலே மாயேக்குக் காகிதம் அனுப்பவேணும் நாலு பிராமணரை முஸ்திப்பாயிருக்கச் சொல்லு. பத்துபேர் துப்பாக்கிக்காரரைக்கூட உளுந்தூர் மட் டுக்கும் அனுப்பி அந்த நாலு பிராமணரும் அப்பாலப்பட்ட பிற் பாடு இவர்கள் வந்து சொன்னர் அப்படிச் செய்யப்போகா தென்று என்னமாய்ச்சொன்னலும் இன்னம் பத்து நாளையிலே எல்லாம் தன்னிச்சையாய் உசந்துபோமென்று சொன்னவிடத் திலே கேள்வியில்லை. அதன்பேரிலே முருகப்பிள்ளையுடனே இப்போது துரையவர்கள் சொன்னபடிக்குத் திட்டமாய் விற் கச்சொல்லும்படிச் சொல்லுவோம் என்று சொல்லிப்போகச் சொன்னபிற்பாடு நானூறு கரிசை நெல் எந்தவிதத்திலேயும் வாங்கவேணும்; அந்த எத்தனத்தின்பேரிலே இரு என்றுசொன் னர். நல்லது என்று சொன்னேன். இனிமேல் நெல் பேச்சுக்கு நான் உன்னுடனே சொல்லவேணுமென்றும், என்னை நீ கேட்க வேணுமென்றும் கவையில்லை என்று சொன்னர். விலையுடனே கூடினது எப்படிக்கு வருமோ, பார் என்றும் சொன்னர். நல்ல தென்று சொன்னேன். மற்றப்படி டங்காசாலை பாப்புராயரை அழைத்து அவர் கொலுசைக் கொடுத்துவரச் சொன்னர். அந் தப் பணம் நம்முடைய கையிலே கொஞ்சநாளைக்கு முன்னே முதலிட்டபடியினலே நான் முதலிட்டுப் போடுகிறேன் என்று சொல்லி, பாப்புராயரைப் போகச் சொன்னேன். மற்றப்படி விசேஷமாய் எழுதத்தக்கதில்லை.

1747 ஆ டிசம்பர் மீ 5உ க்கு பிரபவ ஞு கார்த்திகை மீ 23உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே எழுதத்தக்கது பின்னையும் ஒன்றுமில்லை. வாசுதேவபண்டிதன் வந்து அரும்பாத்தைப்பிள்ளை சாவடி யிலே புகையிலை விற்கிறபடியினலே சொல்தாதுகள் ஒபிசி யேல்மார்கள் விபரீதமாய்ப் புகையிலையைக் கொண்டுவருகிருர் களென்று வந்து துரையவர்களுடனே சொன்னவிடத்திலே

ஆறு மாசமாய் எந்நேரமும் இதுவே பிராதாய்ச் சொல்லிக் கொண்டுவருகிறபடியினாலே இற்றைநாள் பரசுராமப்பிள்ளை யை அழைத்து உங்கள்சாவடியிலே புகையிலை விற்கவேண்டாம் என்று உத்தாரம் கொடுத்தார்கள்.

1747-ஆ டிசம்பர் மீ 6 வக்கு பிரபவ ஸூ கார்த்திகை மீ 24 உ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் முசியே கோர்னேயைக் கண்டுபேசி முசியே லுக்காவுக்கு லாலாப்பேட் டையிலே துரையவர்கள் உத்தாரப்படிக்குக் கொடுத்த ரூபாய் இதுகளுக்கு முன்னூறு வராகனுக்குத்தொளாயிரத்தி அறு பது ரூபாய் கொடுத்ததுபோக நாளது தேதியில் இரண்டாயி ரத்தி இருபதுரூபாய் வாங்கிவந்தேன். மற்றப்படி அவ்விடத்தி லே இருந்து துரை வீட்டுக்கு வந்தேன் சாவடி கபுறு நெல்பொதி வந்ததைச் சொன்னேன். விடச்சொல்லு என்று உத்தாரங் கொடுத்தார். நல்லதென்று பத்துபேரை மூஸ்தீதுபண்ணி அந் தப்படிக்கு அனுப்பிவிட்டோம். இந்தக் காகிதத்திலே சீர் மைக்குப்போகிற காகிதங்கள்கூட போகிறுப்போலே காணுது சந்தேகமில்லை, மெய்தான் சீர்மைக் காகிதங்கள்கூடப் போகுது.

1747 ஆ டிசம்பர் மீ 7 உக்கு பிரபவ ஸூ கார்த்திகை மீ 25உ பிரகஸ்பதிவாரம்.

இற்றை நாள் துரை வீட்டுக்குப் போனவிடத்திலே நடந்தசேதி என்னவென்றால்: ஆறேழு நாளைக்கு முன்பாக மாயேக்குப் போகிற காகிதத்துக்கு மற்றதாகவும் முன் காகி தம் பறித்துக்கொண்டுபோன மனுஷர் அகப்படாமல் பிடித்து வரச்சொல்லியும் சொல்லியனுப்பினார். போனவர்கள், ஆத்தூர் தேசத்துமட்டுக்குங் காகிதம் கொண்டுபோகிறவர்கள் வழி விட்டுப்போட்டு மறுபடி வரச்சே ஆவெளிச் சேலத்தண்டை யிலே இங்கிலீசுக்காரர் காகிதம் ஒரு பிராமணன் கொண்டு போகச்சே பிடுங்கிக்கொண்டு வந்தார்கள். அந்தக் காகிதத் தைத் துரை கையிலேகொண்டுவந்து கொடுத்தார்கள். அதைத் துரையவர்கள் வாங்கிக்கொண்டு மனுஷனைக் கூட பிடித்து வராமற்போனீர்களென்று சொல்லி, நல்லது இருபது ரூபாய்

சேவகருக்கு இனம்கொடுக்கச்சொன்னுர். அந்தப்படிக்குப் பரசு ராமப்பிள்ளை கையிலே வாங்கிக்கொடுத்தேன். அப்பால் பனி ரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேம். நாலு மணிக்கு மாயேக்கு காகிதம் எழுதி இரண்டு பிராமணர் கையிலே கொடுத்து அவர்களுக்கு இருபது சேவகர் தையினுத்துக் கொடுக்கச் சொன்னுர். அந்தப்படிக்கு இருபது பேரும் கூடக் கூட்டிப் படிகொடுத்தனுப்புவித்தோம். நாசற்சங்கு தண்டு சித்திரிகண்டி பாமன்பேரிலே இறங்கியிருக்கிறது. பசுவா பட் டணத்தண்டையிலே அங்கேயிருந்து நாசற்கொல்லிகான் காகி தம் ரெண்டுபேர் அறக்காறுகள் கொண்டுவந்தார்கள். அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: தேவனும்பட்டணத்து வக்கீல்கள் வந்தவர்கள் முன்னே ரொம்ப பிரயத்தனமாய்ப் பயிர் ஏற்றினவிடத்திலே காரியம் ஆகாமற்போனபடியினுலே அந்தச் சம்மதியெல்லாம் எழுதியிருந்தோமே இப்பவும் அவர் கள் ரொம்பவும் புத்திமாறி சொல்லிக்கொண்டு, பின்னையும் சிறிது நயாகியசு ஒப்பினதின்பேரிலே ஆயிரத்தைந்நூறு குதிரைக்காரரும், அதற்கு எசமான்கள் இரண்டுபேரும் என்று அதற்கு ஒருத்தன் பேர் அயிவசுபெடுகான் என்கிறவனும், மற்ருெருத்தன் பேர் சபாயாபு பெகுகான் என்கிறவனும், சமேதாரனும் எசமானுக்கிக் கூட்டி அனுப்புகிறதாய் யோசனை பண்ணிக்கொண்டிருக்கிருர்கள். அதுவும் நாம் நிறுத்தித் தட் டிப்போடவே பார்க்கிருேம். ஆகிலும் நீங்கள் இருக்கிற சாக் சாக்கிரதையிலே சாக்கிரதையாயிருக்கவும் என்றும் மாபூசுகானுக்குத் துரையவர்களுக்கிருக்கிற அண்ணன் தம்பி மரியாதையினுலே என்னென்ன பிரயத்தனமுண்டோ அந்தப் பிரயுத்தனமெல்லாம் பண்ணி நிறுத்திப்போடத் தக்கதாகப் பண்ணிப்போடுகிறேன் என்று எழுதச்சொன்னதாகவும், ஆகி லும் மூனு நாலு சோடு அறுக்காறுகள் வாங்காமல் கிட்ட வைத்தால் அப்போதைக்கப்போது நடக்கிற சேதி எழுதி யனுப்புகிருேமென்று எனக்கு ஒரு காகிதமும் துரை அவர்கள் பேருக்கு ஒரு காகிதமும் எழுதியனுப்புவித்தார். அந்தக் காகி தச்சேதி துரைக்குச் சொன்னவிடத்திலே துரை சொன்னது: அவர்கள் என்ன பிரயத்தனம் பண்ணினுலும் வரவொட்டா மல் பண்ணுகிறதற்கு நமக்குத் தமையனுகவும் முறப்பியாகவு மிருகச்சே வரவொட்டப்போகிறதில்லை. அல்லவென்று வந்தா லும் பிராஞ்சுக்காரரின்னுரென்று அறிந்துவிட்டுப்போகிருர்கள்.

அவர்கள் பிராஞ்சுக்காரர் பலம் இன்னதென்று அறியாதபடி யினலே அவர்கள் அறிந்துபோகிருர்களென்றும் நம்முடைய சுக துக்கத்துக்கு நீர் உடந்தையானபடியினலே போன மாதத் திலே அடித்த காற்றுமழைக்கு இங்கிலீசுக்காரர் கப்பல்கள் ஐந்தாறு முழுகிப்போச்சுது. மற்றது இருக்கின்றன. காற்றிலே அலேக்கழிந்துபோய் நிருவாகம் இல்லாமலிருக்கிறதும், சீர்மையிலே நம்முடையவர்கள் ரொம்ப செயம்பெற்றி ருக்கிறதும், இங்கிலீசுக்காரருக்கு வந்த அபசயமும் எங்க ளுக்கு இருபது கப்பல் சீர்மையிலே இருந்து புறப்படுகிறதும், என்கிற சேதி முதலானதெல்லாம் எழுதிவந்தது. இது உமக் கெழுதவேண்டிய கடனுனபடியினலே எழுதினேமென்றும், நீரெப்போது சகல அதிசயத்துடனேயும் ஆற்காடு வந்துசேரு வீரென்று எதிர்பார்த்துக்கொண்டே யிருக்கிறேமென்றும், பின்னேயுமுபசாரமாய் மாபூசுக்கானுக்குச் சொல்லச்சொல்லி நாசற்கொல்லிகானுக்கு எழுதியனுப்பச் சொன்னர். அந்தப் படிக்குத் துரையவர்கள் காகிதமும் என் காகிதமும் நாசற் கொல்லிகானுக்கு எழுதி அனுப்புவித்தேன். இதல்லாமல் துரை யவர்கள் காகிதம் கொண்டுவந்து கொடுத்தவர்களுக்கு இனும் கொடுத்து அனுப்பச்சொன்னர். பரசுராமப்பிள்ளேயுடனே சொல்லி இனும் வாங்கிக் கொடுத்தனுப்பினேன்.

இற்றை நாள் மத்தியானம் அப்துலாயிமானும் சேக்கு அசேனும் வந்து கலியாணத்துக்கு சேக்கு அசேனுக்கு உத்தா ரம் வாங்கிக்கொடுக்கச் சொல்லிக் கேட்டார்கள். அதன் பேரிலே உத்தாரம் வாங்கிக்கொடுத்தேன். மயிலாப்பூருக்குப் போய் இருபது நாளேக்குள்ளே கலியாணம் பண்ணிக்கொண்டு வரத்தக்கதாகத் திட்டம்பண்ணிக்கொண்டு பின்னேயும் உத் தாரம் கொடுத்தார். சேக்கு அசேன் கலியாணம் பண்ணப் போகிறது அன்வற்திகான் வைப்புனுடைய மகன், மகம்மது கமால் என்கிறவன் மகளேக் கலியாணம்பண்ணப்போகிருர்.

இற்றைநாள் ராத்திரி கேள்விப்பட்ட சேதி என்னவென் ருல்: வற்லாம் (Varlam) சொன்னதாய், வந்தவாசி திருவேங்க டப்பிள்ளே வந்து சொன்ன சேதி: இற்றைநாள் சென்னப்பட்ட ணத்திலேயிருந்து முத்துப்பிள்ளே எழுதின காகிதத்தை மதாம் பிரித்துப்பார்த்தாளென்றும், அதிலே முசியே பெடுந்தல்மேயும் மோறவும் வந்த சேதியும், முசியே தாலோராழும், முசியே பெடுந்தல்

மேயு வசத்திலே ஒப்புவித்துப்போட்டுப் பறங்கிமலையிலே போயிருந்துகொண்டிருக்கிறார்களென்றும். பயணம் புறப்பட்டானென்றும், மலைக்கொழுந்துமுதலி துபாசித்தனத்துக்கு வந்தானென்றும், பாளையக்காரத்தனத்துக்குப் பள்ளிப்பயல் நல்லதம்பி வந்தானென்றும் மலைக்கொழுந்துமுதலி முதலானவர்களும் புறப்பட்டு வருகிறார்களென்றும் எழுதியிருந்ததென்று அந்தக் காகிதத்தைப் பார்த்துப் பரீக்ஷித்துப் போட்டானென்றும், இதல்லாமல் கோபாலகிருஷ்ணய்யனுக்கு எழுதின காகிதத்திலே முசியே தும்மாவுக்கு எழுதுகிற காகிதத்தை முசியே லத்தூசைக் கேட்டுச் சீக்கிரமாக வாங்கி அனுப்பச் சொல்லியும், கோபாலகிருஷ்ணய்யனுக்கு ஒரு காகிதமும், குருவப்பசெட்டிக்கு எழுதின காகிதமொன்றும் அம்மாள் வசத்திலேயிருக்கிறதென்றும், முசியே துலோராம் காகிதம் முஸ்தீதாயிருக்குதென்றும், கும்பினீர் காகிதம் முஸ்தீதாயிருக்குதென்றும் தபாவிலே அனுப்பவேண்டாம். தனிச் சேவகன் கையிலே அனுப்பிவைக்கவும் என்று எழுதி அனுப்பினதாகவும் எழுதியிருந்ததென்றும் முசியே தும்மாவுக்கு இவனுக்கு அனுகூலமாயிராவிட்டால் இவன் காகிதம் எழுதுகிறதென்று சொல்லவும். அதை முசியே பிரியேலைக் கொண்டு பிராஞ்சு எழுத்திலே எழுதுவித்துத் துரை கையிலே கொடுக்கத்தக்கதாகவும் கொடுத்து இந்தவயணம் சொல்லி நம்முடைய பேரிலே குறை வருத்துவிக்கவும், குருவப்பசெட்டிக்கு எழுதின காகித வயணம்: அம்மாள் உன்பேரிலே குறையாயிருக்கிறாளென்றும் பின்னையும் வருகிற பேர்களெல்லாம் உன் பேரிலே பிராது பண்ணிக்கொண்டு வருகிறார்கள். உன்னை வரச் சொன்னால் வருகிறதுமில்லை. அதனாலே என்ன வருமோ அதைப் பார்த்துக்கொள்ளு எனக்கானால் கவையில்லையென்று எழுதின காகிதம் ஒன்று வைத்திருக்கிறார்களென்றும் வந்து சொன்னான். முசியே தும்மாவின்பேரிலே பிரேக்குரோசாமி பண்ணியிருக்குது. இதல்லாமல் முசியே அருனோ (M. Arnault) சம்மதி அவர் உத்தரவாதியாய் எழுதிக்கொடுத்திருக்கிறார். அந்தச் சம்மதிக்காகக் காகிதமெழுதச் சொன்னேன். அந்தக் காகிதத்தை வாங்கி அனுப்பச்சொல்லி எழுதினேன். அதற்கு வேணுமென்றால் சவாதுகூட இருக்கிறது. வேணுமென்றால் பார்த்துக் கொள்ளுகிறார்கள். மடியிலே கனமானால் அல்லவோ வழியிலே பயம், அப்படியிருக்குது அதுசேதி. எப்படி வேணுமென்றால்

அப்படி விளங்கிக்கொள்ளட்டும் என்று சொல்லி அனுப்பு வித்தேன். ஆனால், அம்மாள் இப்படியெல்லாம் அபாண்டம் போடவேணுமென்று நினைக்கிறாள். நாம் தப்பிதம் நினைத்தா லல்லவோ அதற்குச் சுவாமி துணையாயிருப்பார். நாம் நினையாத படியினாலே அந்த அபாண்டத்துக்குச் சுவாமி ஒருக்காலும் துணையாகப்போகிறதில்லை.

1747 ஆ டிசம்பர் மீ 8உ க்கு பிரபவ ஞ கார்த்திகை மீ 26 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே நடந்த சேதி: கூடலூர் காகிதம் தலைச்சேரி போனதை நேற்று நம்முடைய சேவகர் பிடித்துக்கொண்டு வந்த காகிதத்திலே எழுதியிருந்த வயணமாவது: கமாண்டோர் மேஸ்தர் கேரே எழுதினது; தலைச்சேரி கப்பித்தானுக்குச் சீர் மைக்கப்பல் வருகிற சேதியும், தெரியாமற்போயிருக்கிற மூன்று கப்பல்கள் தவிர மற்றக் கப்பல்கள் போனமாதம் அடித்த காற்றுமழைக்குப் போனவிடம் இன்னவிடமென்று தெரியவில்லை என்று எழுதியிருக்குதென்றும், இந்த மூன்று கப்பல்களும் கம்பத்துமிதமில்லாமல் காணுதென்றும் என் னாலே ஆனமட்டுக்கும் நிருவாகம்பண்ணுகிறேன். இனிமேல் ஒரு இடம் பார்த்து இந்தக் கப்பலை விட்டு வேலைசெய்விக்கச் சமயமும், அதற்கேற்ற இடமும் காணோமென்று எழுதின தாகவும் துரையவர்கள் சொன்னார்கள். நானும் அதற்கு அவர்களுக்குப் பொல்லாத காலமும், உமக்கு நல்ல காலமும் இருக்கச்சே அதற்கடுத்தாப்போலே என்னென்ன நடக்க வேணுமோ அதுகளெல்லாம் நடந்து தீராதுபோமோ? இது தெய்வ பலம். லோக காரியத்துக்கு அவர்களுக்கு உன் னடியிலே இத்தனை பயமில்லாமற்போனால் நித்தியம் ஏன் தேவனாம்பட்டணத்திலே பயத்தோடே இதோ அதோ வந் தார்களென்று பயந்து உழைத்துக்கொள்ளுகிறார்கள். உன் பலனில்லாதபடியினாலேதான் அந்த அச்சம் எந்நேரமும் தோன்றிக்கொண்டிருக்குதென்று சொன்னேன். அதன்பே ரிலே மெய்தானென்று ஒத்துக்கொண்டார். பின்னையும் லோகாபிரமமாய் நாசர்சேல்லிகான் எழுதின சாடை, முத்தியாலுநாயக்கன் பிறகே இரண்டாயிரம் குதிரை கூட் டினதாயும், மகபூசுகானறிந்து நிறுத்திப்போட்டதாயும் எழு

தின சாடையும் பின்னை ஒன்றுமல்ல. இங்கிலீசுக்காரர் காரியம் வெளுத்துப்போயிருக்கும். அவனும் லக்ஷ ரூபாய் மட்டுக்கும் வாங்கிக்கொண்டவனானபடியினாலே மாபூசுகானுடைய தயினாத்துபண்ணி இவர்கள் தேவனாம்பட்டணம் பிராஞ்சுக்காரர் வாங்கிக்கொள்ளாதபடிக்கு இவர்களுக்கு மற்றது பண்ணு என்று சொல்லியிருப்பாராம். மாபூசுகானும் அப்படி தானே செய்கிறேனென்று சொல்லியிருப்பார். அதை ஒரு பூச்சி உண்டாக்கிச் சிறிது நடந்தாப்போலேயும், தன்னைத் தொட்டுச்சிறிது நிறுத்தினாப்போலேயும் அந்த ரெக்கொனுசியமேந்து நீங்களறிந்து நடந்துகொள்ளவேணுமென்றும் எழுதின சாடையென்று சொன்னேன். அது மெய்தானென்று ஒத்துக்கொண்டார். இதல்லாமல் பிராஞ்சுக்காரர் மகா நிக்கிரகசாலிகள் என்று அவர்கள் தண்டு வராதிருந்தாலும் நிறுத்தாவிட்டாலும் இவருக்குமுன் அபசயப்பட்டது பெரிய திருஷ்டாந்தரம் அல்லவா? அதிலே பாதி இவருக்கு ஒபிரிகாசியமாயிருக்குதென்று சொன்னேன். அதுவும் உள்ளதுதானென்று ஒத்துக்கொண்டு இப்படி பேசிக்கொண்டிருக்கச்சே முசியே கோர்னேத்து வந்தான். அப்போது, கோதும்பை வரவில்லையாவென்று அழைத்துக் கேட்டார். கோதும்பை சிறிது வாங்கினார்கள். வாங்கினதை பொதிக்கட்டி அனுப்பினார்கள். பிறகாலே வருகுதென்று சொன்னேன். இந்த தை மாதத்திலே நூற்றைம்பது கோடி காங்குப் புடவை போடுகிறோமென்று சொன்னாயே என்று கேட்டார். ஐயா, பதினைந்து நாளையிலே முஸ்தீதாகிறதைக் கொண்டுபோய்ப் போடுகிறேனென்று சொன்னேன். எழுத்துப் புடவை முஸ்தீப்பாச்சுதாவென்று கொர்னே கேட்டான். இப்போது சாயடி போடுகிறார்களென்று உத்தாரம் சொன்னேன். அப்பால் நேற்று மதாம் துய்ப்ளேக்ஸ் என்பேரிலே முசியே தும்மாவுக்கும் நமக்கும் காகிதம் நடக்குதென்று துரையுடனே சொன்னால் இவன் சாடை முன்னே எருதினுச்சு என்றாப்போலே கொட்டகையிலே கொண்டுபோய்க் கட்டு என்று சொல்லுகிறவனாச்சே! ஆனபடியினாலே நாம் நம்முடைய காரியத்து நிமித்தியம் எழுதினதேயல்லாமல் ஒருத்தரும் பொல்லாப்பு நிமித்தியம் எழுதினதல்லவே! இவன் பின்னையும் என்னென்ன சொல்லுவானோ தெரியாதே! ஆனபடியினாலே ஒருத்தருடைய போதனையின்பேரிலே பிறக்கிறபடியினாலே என்னமாய் எண்ணுவானோ தெரியாது. இதற்கு

உள்ள தத்துவமாகவும் இருக்கவேணும். அவன் சொன்னதும் தப்பித்துக்கொள்ளவேணுமென்று யோசனைபண்ணினேன். அதை நாளையதினம் பிரபுவுடனே எச்சரித்த வயணமும் நடந்த பூர்வோத்திரமும் எழுதுகிறேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஆறு மணி வேளைக்குச் சென்னப்பட்டணத்துத் துரைத்தனம் மாறிவந்த முசியே துலோராமும், அவருக்கு இரண்டாவது முசியே கோசும், முசியே துலோராமுடைய பெண்சாதி பிள்ளைகள், கணக்கப்பிள்ளை கொம்மணமுதலிகூட புதுச்சேரிப்பட்டணம் வந்து சேர்ந்தார்கள். வந்த முசியே துலோராமும், முசியே கோசும் குவர்னதோர் வீட்டுக்குப்போகாமல் செவ்வையாகத் தம்முடைய வீட்டிற்கே போனார்கள். முசியே துலோராம் குமாரன் மாத்திரம் துரையண்டைக்கு வந்து தகப்பனார் வந்த கபுறு சொல்லித் தங்கள் தட்டுமுட்டுகள் வந்ததை கெவுனிவாசலிலே மறித்ததற்கு உத்தாரம் கேட்டதாகவும் அதற்குத் துரையவர்கள் உத்தாரம் கொடுத்தார்கள்.

1747 ஆ டிசம்பர் ௴ 9உக்கு பிரபவ ௵ கார்த்திகை ௴ 27 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே முன் ஜனவரி பண்டிகைச் சம்மதி டங்காசாலையார் சந்திப்பு சம்மதி ஆயிரம் ரூபாயும் துரையவர்களுக்குக் கொண்டுபோய்க் கொடுத்து இப்படி முசியே தும்மா முன்னே சீர்மைக்கு இந்தியாவிலே இருந்து போகிறபோது எங்கள் தகப்பனார் முசியே கேர்மேன் ( M. Kermain ) முசியே அருனோ (M. Arnault) முசியே துனியோம் இவர்கள் சீட்டுச்சம்மதி புரோக்குய்ராஸியம்பண்ணி இவர்பேருக்குக் கொடுத்தனுப்பின சம்மதியும், இதல்லாமல் ஒரு வயிர மோதிரமும். சிறிது முத்துச்சரமும் இவர் வசத்திலே கொடுத்திருந்த சம்மதி இவர் அதற்கு ஒன்றுஞ் சம்மதிபண்ணதாய்க் காணவில்லை. எங்கள் தகப்பனார் நாளையிலே என் நாளையிலே அவர் துரைத்தனத்க்கு வந்தபோது முசியே அருனோ சம்மதி, முசியே கேர்வேன் சம்மதி, சிறிது பணங்காசு வந்திருக்குது, அது தானே! அந்தச் சீட்டுகளெல்லாம் கொண்டுவந்து கொடு என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பாலவர் நாலு ஐந்து தரம் சொன்னார், நானும் நல்லதென்று சொன்னேன்.

அப்பால் அவரும் மதித்ததில்லை, நானும் மதித்துக் கொண்டதில்லை. ஏனென்றால், அவர் குவர்னதோராயிருந்தபடி யினாலே அவரை நான் பொறசாதுபண்ணிக் கேட்கிற சாடை இல்லாததினாலே நானும் சும்மாயிருந்தேன். அவர் யாத்திரை போனபிற்பாடு ஒரு காகிதம் மூன்று வருஷத்துக்கு முன்னே எழுதியனுப்பினேன். அதற்குப் பதிலுத்தரவு இல்லை. போன வருஷம் ஒரு காகிதம் எழுதுவித்தனுப்பினேன். அதிலே முசியே தேலார்ஷ் சென்னப்பட்டணத்துக்குப் போனான். சென்னப் பட்டணத்திலே இருக்கிற என் மனிதனுக்கு இரண்டு மூன்று தரம் எழுதி அனுப்புவித்தேன். முசியே லத்தூசைக் கேட்டு வாங்கி அனுப்பச்சொல்லு. அதிலே இங்கே சீர்மைக் காகிதம் தரங்கம்பாடி கப்பலுக்குப் பயணமாய்ப் போய்விட்டது. இப் போது முசியே தும்மா காலம்பண்ணிப் போய்விட்டபடியினாலே தேவரீர் தயவுபண்ணி வரும்போலே இருந்தால் அவர் பத்த வேணும், அவருக்கு இத்தனை நாளும் முசியே துலோராமும், முசியே தும்மாவுடைய புரோக்குய்ரேரானபடியினாலே அவர் இந்த மட்டுக்கும் இவ்விடத்திலே இல்லாமலிருந்தபடியினாலே தேவ ரீருக்கு எச்சரிக்கவில்லை. நேற்றுதான் அவரும் வந்தபடியினாலே எத்தனம்பண்ணுகிறதுதானா இது சமயமென்று தேவரீருக்கு எச்சரிக்கிறேனென்று சொன்னேன். ஆனால் அந்தக் காகிதத் துக்கு ஒன்றுஞ் சேர்ந்ததில்லையாவென்று கேட்டார் அந்தக் காகிதத்துக்குச் சேர்ந்ததாய்க் காணவில்லை; கணக்கிலேயும் காணோம். அந்தக் காகிதங்கள் தேவரீரவர்களண்டைக்குக் கொண்டு வருகிறேன், பாருங்கோளென்று சொன்னேன். நல்லது பார்த்துச் சொல்லுகிறேன் என்று சொன்னார். அந்த மட்டிலே இனிமேல் யார் என்ன காகிதங் கொடுத்தாலும் பரி காரம் உண்டாவென்று யோசனைபண்ணிக்கொண்டு சாலை யிலே வந்து உட்கார்ந்தேன். அரை நாழிகைக்கெல்லாம் மதாம் காம்பிருவுக்குப் போய்வந்து என்னையழைத்து அந்த முசியே தும் மாவுடைய காகிதம் எங்கே இருக்குது என்று கேட்டார். வீட் டிலே யிருக்குது நாளைக்காத்தாலே கொண்டுவருகிறேன் என்று சொன்னேன். அப்படியல்ல, இந்த க்ஷணமே வீட்டுக் குப் போய்க் காகிதங்களை எடுத்து வா. நான் பார்க்கவேணும் என்று சொன்னதினாலே நான் ஆலோசனைபண்ணினது இவர் மதாமண்டைக்குப் போய் இப்படி ரங்கப்பனுக்கு முசியே தும்மா கொடுக்கவேண்டிய சம்மதியென்று ரங்கப்பன் என்னுடனே

சொன்னுனென்று உற்சாகமாய்ச் சொன்னவிடத்திலே அவள் போய் அவனிப்படி காகிதம் எழுதினுனென்று ஏதாகிலும் சொல்லி அதன்பேரிலே வந்து இத்தனை துறையாய்ச் சொன்னுரேயல்லாமல் அவர் சுபாவம் மூசியே தும்மா, துலோராம் பேரிலே இருக்கிற அக்கசினுலே இதைக் கேட்டதினுலே அதைப்பார்த்து அதிலே சற்றே உண்டானுல் வாங்குகிறது சந்தோஷமாமே! அதனுலே துரையாய்க் கேட்டாரோ தெரியாது இரண்டு யோசனையும்பண்ணிக்கொண்டு கிடங்கைப் போய் வீரராகுவை அழைப்பித்துக் காகிதங்கள் முறிகள் எடுத்துக் கொண்டுவரச்சொல்லி, அதிலே மூசியே தும்மா சம்மதி ஒன்பது காகிதங்கள் இருந்தன. அந்த ஒன்பது காகிதமும் எடுத்துக் கொண்டுபோய்த் துரைக்குக் காண்பித்தேன். அவர் பார்த்து அதை யெல்லாம் புள்ளிபோட்டு ஆயிரத்து முன்னூற்றிச் சிலவாணம் வராகனுச்சுது. இதல்லாமல் வச்சிர மோதிரத்துக்கு முத்துச்சூருக்கு விலை எழுதவில்லை. உங்கள் கணக்கிலே விலை எழுதவில்லையாவென்று கேட்டார். கணக்கிலேயும் மோதிரம், முத்துச்சூர், ரத்தினமாலை என்று எழுதியிருந்ததேயல்லாமல் விலை எழுதவில்லை என்று சொன்னேன் நல்லது நடந்த பூர்வோத்திரமாம்முடிய பெத்திஸியோ மொன்று எழுதி அதிலே மூசியே தும்மாவுடைய உடைமை எங்கேயிருந்தாலும் இதற்கு ஈடு, அதற்குத் தழைவுபோலேயென்று அந்தப் பெத்திஸியோமிலே எழுதிக்கொடுக்கச் சொன்னுர். நல்லதென்று சொல்லிவிட்டு இப்பாலே வந்து மதாம் துய்ப்ளேய்க்ஸ் அபான்டம்போடவேணுமென்று நினைத்து நடத்தினதற்கு சுவாமி ஒரு விதத்திலே தெலுபடிபண்ணுவித்து நாமும் துரையவர்களுக்கு முன்னே சொல்லத்தக்கதாக சுவாமி புத்திகொடுத்து நடத்தினதும் பார்த்தால் நமக்கு முன்னுக்கு நல்லகாலமிருக்கிறபடியினுலே இப்படி சேதியாய். அதற்குத் தக்கதாய் நடந்தது என்று எண்ணிக்கொண்டேன். இனிமேல் அவர் அந்தக் காகிதத்தைக் காண்பித்துச் சொன்னுலும் அல்லவென்று முன் சொல்லியிருந்தாலும் துரையவர்கள் மனதிலெ வித்தியாசமாய் எண்ணத்தக்கதில்லை.

இதன் ஒரு நாழிகைக்குப் பிற்பாடு முசியே துலோராமும் முசியே கோகும் வந்து பேசியிருந்து போனவுடனே துரையவர்கள் என்னை அழைத்து ரங்கப்புள்ளே, முசியே துலோராமும் கோகும் பஞ்சு ஏலத்திலே போடச்சே இருபதுக்கு உசந்து ஒருத்தருமே கேளாமல் போனுர்கள். அதனாலே இருபத்திரண்டு விழுக்காடு கேட்கிறார்களென்று உங்களுக்கு எழுதினோம். நீங்களந்தப்படிக்கு விற்றுப்போடச்சொல்லி எழுதினீர்கள். அந்தப்படிக்கு விற்றுப்போட்டோம். இப்போது அது கவையில்லை. பஞ்சை மறுபடி கும்பினிருக்கு முதலிடச்சொல்லியும், விற்றது கவையில்லையென்றும் எழுதினீர்கள். நல்லது இந்த நியாயம் பேசிக்கொள்ளுகிறபோது பேசிக்கொள்ளுவோமென்று ஒப்புவித்துப்போட்டோம் என்று சொன்னுர்கள். ஆனபடியினுலே அப்போது ஏலத்திலே போடாமல் நிறுத்தினதாய் இவர்கள் எடுத்துக்கொள்ளும் பொருட்டாய் விலை வரவில்லையென்று பேரிட்டு ஏலத்தை நிறுத்தித் தாங்களே எடுத்துக்கொண்டதாய் ஒரு காகிதம் அழைப்பிக்கவேணுமென்று கேட்டார். இதல்லாமல் முசியே துலோராம் நடத்தின காரியம் உனக்குத் தெரியுமேயென்று கேட்டார். இதல்லாமல் நீங்கள் எப்போது சென்னப்பட்டணத்துக் காரியத்திலே எந்திராரிடவேண்டாமென்று சொன்னீர்களோ, அன்றுமுதல் இன்றுவரைக்கும் நானதை விசாரித்ததில்லையென்று சொன்னேன். நல்லது பஞ்சு நிமித்தியம் என்ன நடந்ததோ! அந்த மத்தலபும் தெரிந்துகொண்டு மேலே எழுதின வயணம்படிக்கு ஒரு வர்த்தகன் இவ்விடத்துக்கு எழுதுகிறதாயும், அதிலே அந்த வர்த்தகன் கையெழுத்துப் போட்டுவிட்டு அழைப்பிக்கவேணுமென்றும் சொன்னுர். நல்லது எழுதியனுப்பி அந்தச் சங்கதியை அறிந்து உங்களுக்கு உத்தாரம் சொல்லுகிறேன் என்று லகுவிலே சொன்னேன். அப்படியல்ல; கெட்டியாய் நடத்தித் தீரவேணும்; எப்படியாகிலும் அழைப்பித்துத் தீரவேணும் என்று சொன்னுர். நல்லதய்யாவென்று சொல்லாமற்போனுல் கோபம் வருமென்று எண்ணிக்கொண்டு சொல்லிவிட்டு வந்தேன். திரும்பியும் அழைப்பித்து ரங்கப்பிள்ளை, இன்னெரு வேலைசெய்யவேணும்: இந்த மாதத்துக்குக் கும்பினீர் வர்த்தகர் சென்னப்பட்டணத்துக் கும்பினிருக்குச் செலுத்து

கிற செலவுக்காக ஐயாயிரம் ஆறுயிரம் வராகன் வருக் காடு மாதாமாதம் செலுத்திவிடச்சொன்னேனே அதில் இந்த மாதத்துக்குச் செலுத்துகிறதும் பிறக்கிற மாதத்துக் குச் செலுத்துகிறதையும் பஞ்சு சம்மதிக்கு என்று ரசி திலே எழுதுவித்து வாங்கச் சொன்னதுமல்லாமல் அப்பால் பஞ்சத்தொகையை முன்சம்மதிபண்ணி அப்பால் செலுத்திவரு கிறதைச் சரக்குச் சம்மதிக்காக என்று ரசிது வாங்கச்சொல்லி நடப்பியென்று, அப்படியே செய்கிறேன் என்று சொன்னார். அப்பால் பின்னையும் லோகாபிரமமான வார்த்தைகள். நடந்தன. அவைகளெல்லாம் எழுதத்தக்கச் சம்மதியில்லை ஆனபடியினாலே பனிரெண்டு மணிக்குப் புறப்பட்டு வீட்டுக்கு வந்தேன். சாயங்காலம் ஐந்தரைமணிக்குச் சேவகர் கணக்கு எழுதுகிற கந்தப்பனென்கிற பிள்ளையாண்டான் வந்து, அம்மாள் துரை பெண்சாதி ஆறுமுகப் பண்டாரத்தை இருபத்தைந்து அடியடித்து இன்றுமுதல் ஒருத்தர் பேச்சை ஒருத்தருடனே செல்லவேண்டாம், அல்லவென்று துரைவீட்டு வழி எங்கேயும் நடவேண்டாம் அல்லவென்று இனிமேல் இப்போது என்னுடன் சொன்ன பிரசங்கம் பின்னை எங்கே யாகிலும் எடுத்தாலும் இந்த வீட்டு வழி வந்தாலும் ஐம்பது அடியடித்து இரண்டு காதையும் அறுத்து ஊர் கடக்கத் துரத்துவிப்பேன் . என்று சொன்னாள். அதைப் பட்டுக் கொண்டு வெளியே வரச்சே இன்னாசி (M. Ignace) பறங்கி செருப்புக்காலாலே இரண்டு உதைப் போட்டானும், அதையும் பட்டுக்கொண்டு செவ்வையாய் வீட்டுக்குப் போய் அவருக்குச் சரீரம் சுவஸ்தமில்லாமலிருக்கச்சே அவருக்குத் தாதுவைப்பார்த்து அவருக்கு நடக்கவேண்டிய காரியத்துக்குத் திட்டம் சொல்லிப்போட்டு அப்பாவு சத்திரம்பிள்ளைக்குச் சரீர சுவஸ்தமில்லாமல் இருக்கச்சே அவருக்குத் தாதுவைப் பார்த்து அவருக்கு நடக்கவேண்டிய காரியத்துக்கு வயனம் சொல்லிப் பேசியிருந்து பாக்கு வாங்கிப் போட்டுக்கொண்டு அப்பால் வீட்டுக்குப் போனானென்று கபுறு வந்து சொன்னான். ஆனவனை இந்த ஊருக்கு வரச்சே மெத்த அன்ன வஸ்திரங் களுக்கு இக்கட்டாய் வந்து, முதல் நம்முடைய வீட்டாலே குதிர் அன்னவஸ்திரங்களுக்குத் தாக்ஷியில்லாமல் அகப்பட் டான், அப்பால் பரசுராமப்பிள்ளை வீட்டைத்தொட்டு ஆயிரம்

மாடு கொண்டுவந்து போட்டு கும்பினீருக்கு அதனாலே நாலாயிரம் ரூபாய் ஐயாயிரம் ரூபாய் மட்டுக்குஞ் சேர்ந்தபடியினாலே இவனுக்குத் துராங்காரம் ரொம்பபிடிபட்டு பரசுராமப் பிள்ளை மரம் கர்மம் உடைந்தையாயிருந்தவனானபடியினாலே தெரிந்திருக்குமே அதையும் நம்முடையபேரிலே துரை பெண்சாதி கோபமாயிருந்த சாடை அறிவாளே, அதனாலே நம்முடைய பேரிலே என்ன சொல்லப்போகிறான் என்று ராசுவுக்கு வந்தது என்ன! ராசுவுக்கு வராதது என்ன! ஆனால் முடைய பேரிலே தாறுமாறு சொன்னால், எசமானிக்குச் சந்தோஷமாயிருக்குமென்று அறிவானே. அதனாலேதான் இவனும் சொன்னான். அவளும் கேட்டு அப்படியிப்படி நடத்துவாள். இதிலே பரசுராமப்பிள்ளை சர்க்கரை பேச்சு சொல்லி வழ்லாமுக்த (Variam) அந்தச் சட்டைக்கார இன்னாசிக்கு ஆசை வார்த்தைச் சொன்னதினாலும் நானும் வந்தவாசி திருவேங்கடம்பிள்ளை முன்னில்லையாய் வழ்லாமுக்த (Varlam) ஆறுமுகப்பண்டாரத்தை அடிப்பித்தால் உனக்குச் சந்தோஷம் பண்ணுவிக்கிறேனென்று ஆசைவார்த்தைச் சொல்லியனுப்பியிருந்ததினாலே ஆறுமுகப்பண்டாரத்தை ஒரு பேச்சைப் போட்டு ஒரு பேச்சைத் துவக்கி அடித்துவிட்டான். இந்தப்படி என் பெண்சாதி புருஷனை அல்லாமல் காசுக்கு ஆசைப்பட்டு அடித்து ஊரிலே அநியாயம் பண்ணத் துவக்கினாள். பட்டணம் அன்று கெட்டது. ஆனால் சுவாமி ரக்ஷிக்கவேணும். இல்லாவிட்டால் இவளுடைய பொல்லாத காலத்திலே அகப்பட்டுக்கொண்டு விருதாவாய் வேசடைப்படாமல் இந்த முக்கரை காத்தை சீக்கிரமத்துக்கு அடக்கி, சுவாமி சனங்களை ரக்ஷிக்கவேணும்

1747 ஆ டிசம்பர் மூ 10 உக்கு பிரபவ ஞூ கார்த்திகை மீ 28 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே துரையவர்கள் கோவிலுக்குப் போய் பூசை கேட்டு வந்தபடியினாலே வெள்ளைக்காரர் சச்சு ரொம்ப வந்திருந்து அவரவர் கபே குடித்து வீட்டுக்குப் போனபிற்பாடு இவர் உலாத்தச்சே சாவடி டாப்பு கபுறு சொல்லி அப்பால் நபா அன்வற்திகான் அனுப்பின காகிதத்திலே சென்னப்பட்

டணப் பெஷ்கஷு இரண்டு வருஷத்திற்கு உண்டானதையும் முசத்திகளுக்கு உண்டான குஸ்துமாதும் அனுப்புவிக்கச் சொல்லி எழுதி நிசமான்முலுக்கு அவர்களுக்கு அனுப்புகிற தற்கு மூக்குக்கண்ணுடி, தூரத்துப் பார்வையும் கிட்டத்துப் பார்வையுமாக இருக்கிற கண்ணுடிகள் சிறிது அனுப்பினல் தங்களுடையதாய் நிசாமன்முலுக்கு அவர்களுக்கு அனுப்புகிரே மென்று எழுதினுரென்று சொன்னேம். அந்தப்படிக்கு மூக்குக்கண்ணுடி கொடுத்து முசியே கோற்னேயைக் கேட்டு வாங்கி யனுப்பச்சொல்லியும், சென்னப்பட்டணத்துக்கு பெஷ்கஷுக்கு ஒரு வருஷத்திற்குத்தான் கொடுக்கவேண்டியது. அப்படி யிருக்க இரண்டு வருஷம் புரட்டாசி மீ 6உ துவக்கி இந்த வருஷம் கேட்கிறதற்கு நியாயமில்லே. போன வருஷம் புரட்டாசி மீ 6உ துவக்கி இந்த வருஷம் புரட்டாசி மீ 8உக்கு வருஷம் 1. அதன்பேரிலே மூன்றுமாச்சுது. இப்போது ஒரு வருஷத்தியதைக் கொடுக்கிறேம். குறை 9 மாதமும் சேர்ந்தாப்போலே குறை வருஷத்துக்குச் சரியாய்க் கொடுக்கிறேம். அப்படியிருக்க, இரண்டு வருஷமென்று எழுதினுப்போலே எப்படி கொடுக்கிறதென்று எப்படி வயண மாய் எழுதியனுப்பவேணுமோ அந்தப்படிக்கு எழுதியனுப்பச் சொன்னர். அந்தப்படிக்கு நபாபு பேருக்குத் துரையவர்கள் காகிதமும், குலாபுசிங்கு பேருக்கு என் காகிதமும் எழுதி, சுப்பய்யன் பேருக்கு எழுதி. மூக்குக்கண்ணுடி பிறகாலே அனுப்புவிக்கிறேமென்று எழுதியனுப்புவித்தோம். மற்றப்படி விசேஷித்த சமாச்சாரம் எழுதத்தக்கது இல்லே.

*1747* ஆ டிசம்பர் மீ *11*உ க்கு பிரபவ ஞு கார்த்திகை மீ *29*உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போயிருக்கிற விடத்திலே முசியே நுலோராம் சென்னப்பட்ட ணத்துக் கணக்குக் கொண்டுவந்து கொடுத்தார். அதன்பேரிலே முசியே மேரை அழைப்பித்து அவர் கையிலே கொடுக்கச்சே உரத்த பேச்சாய் நடந்தது. மற்றப்படி எழுதத்தக்க சங்கதி களான சேதி விசேஷ காரணமே ஒன்றுமில்லே.

**1747 ஆ தெசம்பர் மீ 12உ க்த பிரபவ ஷு மார்கழி மீ 1 உ மங்களவாரம்.**

இற்றைநாள் குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே குவர்னதோரவர்கள் மற்றுமுள்ள கோன்சேலியேர்களும் கூடிக்கொண்டு கோன்சேல் பண்ணிக்கொண்டிருந்தார்கள். அப்பால் கோன்சேல் கலைந்தபிற்பாடு சாவடி கபுறு சொல்லி யான பிற்பாடு சந்தாசாயபு பெண்சாதி சேதியும் அவர் வீட்டுக் கலியாணச் சேதியும் லோகாபிரமமாய்ப் பேசி இருந்தார்.

பட்டணத்திலே நடந்த அதிசயமென்னவென்றால்: கோம் மணமுதலி இது சென்னபட்டணத்திலிருந்து தேக்கம்பெட்டி ஒன்று ஐந்தடி நிகளமும் மூன்றடி அகலமும் உள்ள பெட்டி யிலே இரண்டு வாரைப்போட்டு, இருபத்திரண்டு ஆள் காவடி போட்டு எடுத்துக்கொண்டு வருகிறார்களென்றும், அதிலே வெகு திரவியமும் தட்டுமுட்டு மிருக்குது. எடுபடாமல் எடுத் துக்கொண்டு வந்து சதுரங்கப்பட்டணத்திலே ராசப்பமுதலி யார் வீட்டிலே ஒளிக்கவைத்தாளென்றும் இப்படியாக உப தேசி மகன் கோவளத்திலே யிருந்து தமக்குக் கபுறு எழுதிக் கொண்டிருக்கிற மதுரநாயகமென்கிறவன், அம்மாள் அவர் களுக்கு எழுதியனுப்புவித்தான். அந்தச் சேதியை அம்மாள் போய் துரையவர்களுடனே ஒன்றைநாலாய்ச் சொல்லிக் கூலிக் காரர் பத்துபேரை அமத்தி, அவர்கள் பத்துபேருக்கும் பத்து ரூபாயும் கொடுத்துச் சேருவைக்கார முத்தனென்கிற பள்ளிப் பயலுக்கு மூன்று ரூபாயுமாகப் பதிமூன்று ரூபாய் தன் னுடைய கைப்பணத்தைக் கொடுத்து அந்தப் பெட்டியைக் கொண்டுவரச்சொல்லி, ரெண்டாம்பேர் அறியாமல் வெகு பத் திரமாய்ச் சொல்லி, சேருவைக்கார முத்தனென்கிறவனை அனுப்புவித்தான். அப்படி யிருக்கச்சே, இவ்விடத்திலே முசியே துய்ப்ளேய்க்கு அவர்களுடனே சொல்லி, முசியே தெப் ரேனை அழைத்து அந்தப்பெட்டி வந்தவுடனே சாவடியிலே கொண்டுபோய் வைத்து, அந்தப்பெட்டியைத் திறந்து பார்த்து அதிலேயிருக்கிறதெல்லாம் வயணமாய் எழுதிக்கொண்டுவரச் சொல்லி தெப்ரேனை சட்டங்கட்டி ஆளாக்கிவைத்திருந்தார்கள் அதல்லாமல் ஒருவேளை சின்ன துரை உத்தாரம் கொடுத்துவிடப்

போகிருரென்று அவருடனேயும் நம்மை அறியாமல் விடவேண்டாமென்று சொல்லிப் பத்திரப்படுத்தி இவ்விடத்திலே இத்தனே பந்தோபஸ்து பண்ணிக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கச்சே, இந்தப் பள்ளிப்பயல் போய்ச் சதுரங்கப்பட்டணத்துக்கு அப்புறத்திலே வரச்சேதானே அந்தப் பெட்டிக்காவி கொண்டுவருகிறதைக் கண்டு அந்தப்படியே இந்தப் புறம் அடித்துக்கொண்டு, கொண்டுவந்தான். அந்தப் பெட்டி வந்தவுடனே சாவடியிலே கொண்டுவந்து வைத்து முசியே தெப்ரேன் போய் கிட்டேயிருந்து இதிலே என்ன இருக்கிறதென்று சொல்லி எழுதிக்கொள்ளப் போனவன் அதைத் திறந்தவுடனே அதிலே பீங்கானும் உமியும் ஓட்டையும் உடைச்சலுமாய் இருந்ததைக் கண்டவுடனே லெஷிக்துப் போய் ( M. Legou ) துரையுடனே இந்தச் சேதியைக் கபுறு சொன்னமாத்திரத்திலே அவருக்கு முகம் வெளுத்துப்போய்ச் சாடையாய் பெண்சாதியிருக்கிற காம்பிருவைப் போனர். போனமட்டுக்கும் பெண்சாதியுடனே திட்டமாய்க் கபுறு விசாரித்துச் சொல்லாமற்போனுயென்று வேசாரிகொண்டு வெளியே புறப்பட்ட சாடையாய்க் கண்டது. அவர் உள்ளே போய்ப் புறப்பட்ட சாடையைப் பார்த்தேன். என்னவாகிலும் பெண், பெண்சாதி வழியிலே நடத்தினல் அப்பிரதிஷ்டை வருமென்று சற்றுகிலும் தோற்றுதபடியினலே இப்படி நடக்கிறது. இதுவும் ரொம்பவும் நீடித்து நடவாது. சுவாமி அப்போதை அடக்க இனம்பண்ணியிருப்பான். அது கிறமேனு தெரியும்.

இற்றைநாள் இடிக்கிற வீடுகள் கோட்டைச் சுற்றிச் சுவருக்கு முன்னூறு துபாசி வீடு வாசலில்லாமல் மைதானம் பண்ணி நியமித்து இடித்து நிரவின நிலத்தைக் குண்டுகிராம குத்தகைதார் குமரப்பிள்ளே, வீராநாயக்கர் முதலான பேர் வந்து கண்டு பேசினர்கள். அதன்பேரிலே துரைக்கு ஐந்நூறு ரூபாய் பேசிக்கெண்டு துரைமுன்பாக விட்டு, அந்த நிலம் அவர் பாரிசம்பண்ணுவித்தனுப்புவித்தேன். இவர்கள் நமக்கு ஏதாகிலும் நடத்துகிறேமென்று சொன்னர்கள். என்ன சொல்லுகிருர்களோ அறியவேணும்.

1747 ஆ டிசம்பர் மீ 13உ க்கு பிரபவ ஞு மார்கழி மீ 2உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரவர்கள் வளவிலே போனவிடத்திலே கோன்சேல்கூடி யிருந்தார்கள். கோன்சேல் கூடின காரியத்தை இன்னதென்று அறியக்கூடாவிட்டாலும் ஒரு சாடைமாத்திரம் தெரியவந்தது. முசியே கோர்னேயை அழைத்து முன் ஆயிரத்தொன்பது கட்டு ஏற்றி, தெப்ரேன் சேசு மெலி என்கிற கப்பலே மசுக்கரைக்குப் பயணம்பண்ணி அனுப்புகிறதாய் மொகூபு ஆயிருந்ததை மறுபடியும் ஆயிரத் தொன்பது கட்டும் ஏற்றி மசுக்கரைக்குப் பாய் விரித்து அனுப்பத்தக்கதாக யோசனைபண்ணினதாய்ச் சாடை, முசியே கோர்னே பருத்தூர் கொண்டுபோன சாடையிலே தோற்றிற்று. மற்றப்படி மமுதல்லிகான் காகிதமொன்று உடையார்பாளையத் தண்டையிலே இறங்கியிருக்கிற பாளையத்தண்டையிலே யிருந்து வந்தது. அதிலே மின்சிகாரி ஆடவேணும் தங்கூசு என்கிறது அனுப்பவும் என்று துரையவர்களுக்கு எழுதின காகி தத்திலே எழுதியிருந்தது. தங்கூசு என்கிறது தெரியாமல் கான் பகதூர் முதலான பெரிய மனுஷர் நன்றாய்ப் படித்தவர்களண் டைக்குப் போய்த் தெரிந்துகொண்ட விடத்திலே அவர்கள் தங்கள் பேர் நிகண்டு புஸ்தகங்களைப் பார்த்து அகப்படாமற்போன படியினாலே பாரிசுபேச்சே அல்லவென்று சொன்னார்களென் றும் மதனாந்தபண்டிதர் வந்து சொன்னார். அந்தப்படியே துரை யுடனே சொன்னதற்குத் துரையவர்கள் இன்னம் நன்றாய் விசாரித்துப்பாருங்கோவென்றும் அகப்பட்டாலாச்சுது அகப் படாவிட்டால் இவ்விடத்திலே பேர் தெரியவில்லை, வயணம் எழுதியனுப்பச்சொல்லி எழுதியனுப்புகிறதுதான் என்று சொன்னார். இவ்விடத்திலேதானே அந்தப் பேர் விசாரிக்கிற தாய்த்தானே பார்க்கவேண்டியதேயல்லாமல் அவ்விடத்துக்கு எழுதி அனுப்புகிறதல்லவென்று சொன்னேன். எப்படியோ அப்படி பார்த்து எழுதியனுப்பு என்று சொன்னார். நல்லது என்று சொன்னேன். மற்றப்படி மிருத்திசல்லிகான் சீரொப் பாவும் குதிரையும் வந்ததென்று சொன்னேன். நல்லது, நாளைக்கு ஒழுகரைக்குப்போகிறேன். நாளைநாளன்றைக்கு வாங்கிக் கொள்ளுவோமென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

சிரோப்பா துரைக்கும் துரை பெண்சாதிக்கும், எனக்குங்கூட வந்து சிரோப்பா மாத்திரம் கொடுக்கலாகாது. ஐந்நூறு ரூபா குதிரை ஒன்று கூட கொடுக்கவேணுமென்று இந்த அவா சாயபு மருமகன் அல்லிசாயபுடனே சொல்லி, அவனும் சம்மதித்து வேலூருக்கு எழுதியனுப்பிவிட்டான். குதிரை ஏதாகிலும் ஒன்று இழுத்துவிட்டு மறுபடி கொடுத்துவிடு. ரூபாயை அழைப்பித்துக் கொடுக்கிறதாய் துரைக்குக்கூடச் சொல்லிப் போட்டேன்.

இற்றைநாள் சாயங்காலம் பக்கிரீது பண்டிகை என்று கான்பகதூர் அல்லிநக்கி சாயபு, சாபர் சாயபு, சந்தா சாயபு மகன் மீருகுலாமுசேன் தகப்பன் இவர்கள் அண்டைக்கு நசர் அவ்வைந்து ரூபாய் கொண்டுபோய்க் கண்டதற்கு அல்லிநக்கி சாயபும் சந்தா சாயபு மகனும் ஒவ்வொரு ரூபாய் எடுத்துக்கொண்டு மற்றதைக் கொடுத்துவிட்டார்கள். கான் பகதூர் வல் வருத்தத்துடனே எடுத்துக்கொண்டான். மீரு குலாமுசேன் தகப்பன் சீக்கிரமாய் நன்ருய்த் தடவி எடுத்துக் கொண்டான். சாபர் சாயபு அண்டையிலே மீராஷு மிருந்து கொண்டு தங்கள் தோட்டம் கோட்டைக்கு வெளியே யிருந்த மரத்தை வெட்டிக்கொண்டிருக்கச்சே ஒரு பேச்சு சொல்லாதேபோனுர்களென்று ரொம்ப நிஷ்டூரம் சொல்லி அதற்குப் பரிகாரமாய் வார்த்தையை ரொம்ப உபசாரமாய்ச் சொல்லித் தணியச் சொன்னேம். அப்பால் அல்லிநக்கி சாயபு கும்பினீர் வர்த்தகர் கையிலேச்கலாத்துக்கு வராகன் கேட் டார்களென்றும் யானைமாவுத்தனை நாலு மாதத்திற்கு முன்னே ராத்திரியிலே மலையப்பன் சேவகர் அடித்தார்க ளென்று கோபமாகவும் இப்படி கோபசாடையாய் அவரும் பேசினர். அதற்கு மெத்த உபசாரமாய்ச் சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தேன்.

1747 ஆ டிசெம்பர் மீ 14 உக்கு பிரபவ ஸு மார்கழி மீ 3 உ வியாழக்கிழமை

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரவர்களுக்கு ஒழுகரைக்குச் சவாரி எட்டு மணிக்குப் போய் ஆறு மணிக்கு மறுபடியும் வந்தார். நாமும் நம்முடைய அக்கிராகரத்துக்கு

ஒன்பது மணிக்குப் போய் ஆறு மணிக்கு வீட்டுக்கு வந்தேன். சாயங்காலம் ஏழு மணிக்கு சுலுப்பு ஒன்று இன்னுரு தென்று தெரியாது. துறையிலேயிருக்கிற கப்பலுக்கு நேராய் வந்தது. அதன்பேரிலே கப்பல்காரன் குண்டுபோட்டுச் சுலுப்பைப் பார்த்துச் சுட்டான். இவன் சுட்டதைச் சுலுப்புக் காரன் உசந்துபிடித்து ஓடினுன். அதைக் கண்டு கப்பல்காரன் சிறிது பீரங்கிச் சுட்டான். கோட்டைக்காரனும் கடற்கரை யிலே கொத்தளத்திலேயிருந்து சிறிது பீரங்கிகள், இருபது பீரங்கிகள்மாத்திரம் சுட்டான் அப்பால் சுலுப்புக்காரன் ஓடிப் போய்விட்டான். இந்த அதளகுதளம் ஊரிலே சற்று நேரத் துக்குள்ளே காபுருப்பட்டுப் போனுர்கள். சுலுப்பு ஓடிப் போய்விட்டதென்று அவர்கள் குதிரி நின்ருர்கள்.

இற்றைநாள் சாயங்காலம் யநாம் நூற்ப்(மேளப்பில்) ஒழு கரையிலிருந்து வரச்சே குண்டுசாலே அண்டையிலே யிருக்கிற சேக்கு இபிருமை அழைத்து என்க்கு அப்துலாயிமான், சேக்கு அசேன் இரண்டு பிள்ளே அண்டையிலே சிப்பாய் கள் போகிருர்களென்று சேதி கேட்டேன். மெய்தானே என்று கேட்க, சம்பளம் போதாதென்று அரிசி கேட் கிருர்களென்று அது இல்லே என்றதினுலே போகிறேமென்று சொன்னுர்களென்று இவன் சொன்னதற்கு, நல்லது நான் துரையவர்களுக்குத் தெரியச்சொல்லுகிறேனென்று சொல்லி விட்டுப் போனுன் என்று இளேச்சியப்பன் தானும் அப்போது கூட விருந்ததாய் வந்து சொன்னுன். அவளடித்த அடி யாருக்குந் தெரியாது. இனிமேலவனே அழைத்து புசலாபித்து நம்முடைய பேரிலே சிப்பாய்கள் சம்மதியிலே ஏதாகிலு முண்டா என்று கேட்டு ராச்சியகாரியம் பண்ண நினைத்து, சேக்கு இபுருமை அழைத்து அடிப்படை போட்டுவைத்தாள். இனிமேல் நாளே அவனே அழைப்பிக்கப்போகிருள், என்ன நடத்துகிருளோ அறியவேண்டியது. இப்படி நூறுவிடத்திலே இப்படி அபாண்டம் போட்டாள். அதிலே யெல்லாம் வெட்கம் கெட்டாள். இதிலேயும்சுவாமி அப்படியே நடப்பிப்பார் என்று எண்ணியிருக்கிறேன்.

**1747 ஆ டிசம்பர் மூ 15உக்கு பிரபவ ஸு மார்கழி மீ 4உ சுக்கிரவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே ஆறு மணிக்கு வந்த கபுருவது: நேற்று மூன்றுந்தேதி வியாழக்கிழமை ராத்திரி இருபது நாழிகைக்குத் தேவனாம்பட்டணம் இங்கிலீசுக்காரர் மனுஷர் மல்லு ராசா தாலூக்கா சேவகரும், கடையம் வெங்கடாசலநாயக்கன் சேவகரும், முப்பது குதிரைகளும் கூட வந்து அழிசபாக்கம் கொள்ளையிட்டு, அழிசபாக்கத்தார் சிறிதுபேர் சிங்கிரிகோவிலிலே இருக்கிறார்கள் என்று சிங்கிரிகோவிலைக்கூட கொள்ளையிட்டு ஒருத்தனை மூக்கை வெட்டிச் சிங்கிரிகோவில் துலுக்கன் ஒருத்தன் எதிராய் வந்து, இங்கே வந்து கொள்ளையிடுகிறதேதென்று கேட்டதின்பேரிலே அவனைத் தோள்பட்டையிலே வெறித்ததிலே குத்தி சூரியப்பிள்ளை இது அவ்விடத்திலே கட்டியிருந்த அச்சைக் குதிரையையும் பிடித்துக்கொண்டுவந்து ஆடுகளை வெட்டியும் பிடித்துக்கொண்டும், இரண்டொரு வீடுகளையும் கொளுத்தியும் இப்படி நாலாவிதமாய்ப்பண்ணி அப்பால் கும்பினீர் சேவகர் நாலு பேர் அங்கேயிருந்தவர்களில் முசீயே துலோபாமை சம்பளம் கேட்க வந்து புதுச்சேரியிலே இருந்தார்கள். அவ்விடத்திலே யிருந்த ஒரு சேவகனையும் பிடித்துக்கொண்டு நான்கு துப்பாக்கியும் கூட எடுத்துக் கொண்டுபோய்ப் பிடித்துக்கொண்டுபோன சேவகனைக் கிழிஞ்சிப்பட்டுமட்டுக்கும் கொண்டுபோய் விட்டதாகவும் படியாகச் சேதி வந்தது. இந்தச் சேதியெல்லாம் துரையவர்கள் அண்டைக்குப் போய் அவர் எழுந்திருக்கிறமட்டுக்கும் காத்துக் கொண்டிருந்து சொன்னவிடத்திலே அதற்கு அவர் சொன்னது: அவர்கள் இங்கிலீசுக்காரர் மனுஷர் அல்ல, யாரோ திருடரென்று சொன்னார். அப்படிச் சொல்லப்போகாது. இங்கிலீசுக்காரர் மனுஷரில்லாவிட்டால் திருடரென்றால் முன்னூறு பேர் நானூறு பேர் வருவார்களோ? நேற்றையதினம் நீங்கள் ஒழுகரைக்குப் போன சாடை அப்படி ஏதாகிலும் வருவார்களோ என்னமோவென்று சேவகரை வைத்தார்கள். அப்பால் நீங்கள் ஒழுகரையை விட்டு ஆறு மணிக்குப் புறப்பட்டவுடன் இவ்விடத்துக்கு வந்த கபுறு வாங்கிக்கொண்டு அவர்கள் போகிறபோது கபுறு ஆகிறதற்குப் பனிரெண்டு மணி செல்லும். அந்தக் கபுறு வந்தவுடன் போகிறபோது அழிச

பாக்கத்திலேயும் சிங்கிரிகோவிலிலேயும் கொள்ளையிட்டுப் போட்டுப்போனதாயும் காணுது. அப்பால் எசமான் உத்தாரம் இல்லாமல் செய்யப்போமாவென்று சொன்னதற்கு நன்ருய்க் கேட்காமல் போனுர். அதிலே முசியே ஒஷே வந்தான். நேற்று ராத்திரி வந்த சுலுப்பு யாருடையதோ கட்டுமரம் விட்டு அறியாமல் போனுயென்று சொன்னதற்கு அவன் ராத்திரி கட்டுமரம் தள்ளினதால் கடலோரத்திலே போகக்கூடாமற் போச்சுது. எனக்கேற்க இப்போது ஒரு கட்டுமரம் அனுப்புவித்துக் கப்பலிலே என்னமாய்க் கண்டு சுட்டான், எவ்னமாய் நடந்ததென்று கபுறு அறியவேணும்போலே தோன்றுதென்று சொன்னுர். நல்லது, அப்படியே அனுப்புவிக்கிறேனென்று சொன்னுன். அதன்பேரிலே நானிருந்துகொண்டு இங்கிலீசுக்காரருடையதானுல் துறையிலே கப்பலிலிருக்கிறவன் சின்ன உடுக்காரன் மேலாக ஓடுவானேயல்லாமல் உள்ளாக ஓடி வருவானே? இவன் வடக்குப் பாலேசரம் அந்தப் பிராந்தியங்களாக இருக்கவேணும். இவ்விடத்தில் வந்து பிடிக்க வந்தவன் குண்டுபோட்டுச் சுடுகிறதைப் பார்த்துதான் நின்றுநின்று பார்த்து, பின்னையும் கோட்டை பீரங்கியும் கப்பல் பீரங்கியும் சுடுகிறதைப் பார்த்து, அப்பாலே போய் கூடலூர் துறை முகத்தைப் பிடித்தவனுகவேணுமென்று சொன்னேன். அப்படிதானுகவேணுமென்று சொன்னுர். அதன்பேரிலே முசியே ஒஷேயை அனுப்புவித்துக்கொண்டு போனபின்பிறகு மோன்சியேர் கோமண்ணமுதலியார் இங்கேதானுயிருக்கிருன் என்று கேட்டார். ஆமென்று சொன்னேன். வரதப்பசெட்டி என்கிறவன், சென்னப்பட்டணத்திலே இருந்தவன் ஓடிப் போனுனென்று சொன்னுர். அவன் ஒரு பக்கீராயிருந்தவன். சென்னப்பட்டணம் வர்த்தகர் கலாபத்துக்கு ஓடிப்போன பிற்பாடு இவனவ்விடத்திலே யிருந்தானே சரக்கு மற்றது இவன் வழியிலே அந்த வர்த்தகர் வாங்கினுர்கள். அவர்கள் புரோக்குய்ரேரா யிருக்கிறபோது குப்பினீரிலே ஏலம்போட்ட சரக்கெல்லாம் இவன்தான் வாங்கினுனென்று சொன்னேன். இப்போது அவ்விடத்து வர்த்தகர் இவ்விடத்துக்கு வந்தாலாச்சுது. இல்லாவிட்டால் அவர்கள் தட்டுமுட்டுச் சமஸ்தமும் கும்பினீருக்கு எடுத்துக்கொள்ளுவோமென்று சென்னப்பட்டணத்திலே யிருக்கிற கோன்சேலுக்கெழுதி அந்த வர்த்தகருக்குச்

சொல்லச் சொன்னேமென்று சொன்னார். நல்லகாரியம் பண்ணினீர். அப்படிதான் செய்யவேணுமென்று சொன்னேன். கோமண்ணமுதலி மச்சான் ஓடிப்போனனென்று சொன்னான்' அவனெப்படிப்பட்டவனே! நானறியேன் என்று சொன்னேன். அவன் தம்பியைப் பிடித்துக் காவல்பண்ணியிருக்குதென்று சொன்னார். ஐயா அப்படியா என்று சொன்னேன். அதன்பேரிலே உடுத்திக்கொள்ள எத்தனம்பண்ணினார். நானிப்புறம் புறப்பட்டு வந்து உட்கார்ந்தேன். அப்புறம் அங்கேதானே உடுத்திக்கொண்டு கபே குடித்தானவுடனே துரை, செக்ரெத்தேர் எழுதுகிற கபினேத்திலே ஒபிசியேல்மார் கப்பித்தான்மார்களெல்லாரும் கூடி கோன்சேல்பண்ணி, கையெழுந்துப் போட்டு ஒரு காகிதம் முசியே புரீ கையிலே கொடுத்தார்கள். முசியே புரீ அந்தக்காகிதம் கொண்டுபோய்த் துரைகையிலே கொடுத்தார். துரை அந்தக்காகிதத்தை வாங்கிப்பார்த்துக்கொண்டு தகராறு பண்ணிப் பேசினார். அந்தப்படிக்குப் பேசிக்கொண்டிருந்தார்கள். அதன்பிற்பாடு இற்றைநாள் மீறுத்நசல்லிகான் வெகுமானம் கொண்டுவரத் தேவையில்லையாவென்று கேட்டார். நீங்களெப்போது உத்தாரம் கொடுக்கிறீர்களோ அப்போதுதானென்று சொன்னேன். நல்லது, நான் உடுத்திக்கொண்டு வருகிறேன் என்று சொன்னார். இதல்லாமல் சிங்கிரிகோவிலிலே ஒரு பிராமணனிருக்கிறனென்றும் அவனுக்கு நாலு வராகன் சம்பளம் என்றும், அரியாங்குப்பத்திலே நாலுபேர் பறையர்களிருக்கிறார்களென்றும், இவ்விடத்திலேயிருந்து ஓலைத்தாளிகள் அனுப்புகிறார்களென்றும், காசிலவ்வை இன்னம் வரவில்லையென்றும் சொன்னார். சிங்கிரிகோவில் சமாசாரத்துக்கும் மனுஷரை வைத்து அந்தப் பிராமணன் இவ்விடத்துக்கு வந்து நுழையச்சே பிடிக்கச் சொல்லியும் இதல்லாமல் பொம்பாயிலேயிருந்து காகிதம் வருகிறதாம், அதிலே வெகு காரியங்களெல்லாம் எழுதிவருகிறதாம். அதற்கு ஆற்காட்டுவழியாவது, வந்த வழியாக வரும். இந்த இரண்டு வழியிலேயும் ஆள் வைத்துப் பிடிக்கவேணுமென்று உளுந்தூர் வழி அந்த வட்டாரங்களிலே மனிதரை வைத்துப் பிடிக்கச்சொல்லியும் சொன்னாரங்கேயெல்லாம் இங்கிலீஷ்காரர் மனுஷர் நிறைந்திருக்கிறார்களென்றும், பத்துபேர் ஐந்துபேர் சேவகர் போனால் அவர்கள் முன்னே நிருவாகத்துக்கு வருமாவென்று கேட்டால் வெள்ளைக்காரர் துப்

பாக்கியாளரும் கர்நாடக ஆயுதத்துடனே போய் இருக்கச் சொல்லிச் சொன்னார்.

அதற்கு வயணம் கேட்டால் கோடம் வருமென்று சொல்லி அப்படிதானே நடக்கிறேனென்று சொல்லிவிட்டு வந்தேன். திரும்பியும் அழைப்பித்து முசியே பாதியும் முசியே மேரும் கூட வந்தார்கள். அழைத்துக்கொண்டுபோய் வெகுமானத்தைக் கொண்டுவா என்று சொன்னார். பதினொரு பீரங்கிப்போட வேணுமென்று சொன்னேன். நல்லது போடுகிறேன் என்று சொன்னார். அப்பால் நம்முடைய தோட்டத்துக்கு மேள தாளத்துடனே மேலே எழுதப்பட்ட இரண்டுபேர் கோன்சேல் காரரையும் கூட்டிக்கொண்டு போனோம்.

அப்பால், துரைக்கு ஒரு கில் காப்பும், ஒரு முக்கிஷி பாகையும், ஒரு நடுக்கட்டும், ஒரு கோகப்போசும், அப்பால் குதிரைக்கு ஐந்நூறு ரூபாயும், துரை பெண்சாதிக்கு ஒரு கில் காப்பும், ஒரு சரிகை ஒனியும், ஒரு சகிலை சாமெவாரும் இந்தப் படிக்கு வந்தன. அவைகளைக் கொண்டுவந்து துரையினுடைய வீட்டிலே சேர்த்தபோதே பதினொரு பீரங்கியும் சுட்டார்கள் மீருசத்து அல்லிகான் மனுஷனாக வந்த அவ்வை சாயபு மருமகன் அல்லிசாயபுக்குப் பாக்கு வெற்றிலை பன்னீர் கொடுத்தது. மீருசத்து அல்லிகான் யோக க்ஷேமம் இவர் கேட்க, இவர் யோக க்ஷேமம் அவர் கேட்கச் சொன்னாரென்று அல்லி சாயபு சொல்ல அப்படி ஒருத்தருக்கொருத்தர் குசலை பிரான்சின பிற்பாடு நல்லது விடுதியிலே போய் இறங்கும், ஆசீர்வாதம் பண்ணிக்கொள்ளுங்கோளென்று துரையவர்கள் அனுப்புவிக்க அனுப்புவித்துக்கொண்டு விடுதிக்குப் போனார்கள். அவர்களுக்கு உலுப்பை மற்றது குஸ்துமாதுபடிக்குக் கொடுக்கச் சொன்னேன். அப்பால் மீருசத்து அல்லிகான் உபசாரமாய் எழுதின காகிதத்தைப் படித்துக் காண்பித்தேன். அப்பால் அதற்குக் குதிரையும் சிரொப்பாவும் வந்து சேர்ந்ததற்கு உபசாரமாய் எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதியனுப்பச் சொன்னார். நல்லதென்று சொல்லிவிட்டு வந்துவிட்டேன். து - யவர்கள், சிங்கிரிகோவிலிலே இருக்கிற பார்ப்பானை தேவனாம்பட்டணத்துக்கு வேகு கொண்டுபோகிறவனென்றும்,

அவனுக்கு நாலு வராகன் சம்பளமென்றும்; அரியாங்குப்பத்திலே நாலு பறையரிருந்து சமாசாரம் கொண்டுபோகிறதும் பொம்பாயிலேயிருந்து சிறிது சேதிகள் எழுதின காகிதம் வருகுதென்று சொன்ன சேதியும், துரை பெண்சாதி என் பேரிலே போட்டியாக ஆள்விட்டு விசாரித்துச் சொன்னது, இதையெல்லாம் மதாம் துரைக்குச் சொன்னது, அங்கேயிருந்து எழுதிவந்ததாய் ஒரு ஓலை எழுதுவித்துக்கொடுத்து அதைத் தான் தானே வற்லாமை ( Varlam ) படிக்கச்சொல்லி பிராஞ்சு எழுத்திலே எழுதித் துரை கையிலே கொடுத்தது. அதிலே உம்மை சூனியம்வைத்துக் கொல்ல எத்தனம்பண்ணியிருக்கிறார்களென்று எழுதிக் கொடுத்தாள். அந்தச் சேதியும் துரை சொன்னார். இந்தச் சாடை வந்தவாசி திருவேங்கடமும் வந்து வற்லாம் ( Varlam ) சொன்னானென்று துரை சொன்ன சாடை சரியாய்ச் சொன்னாள். இப்படி மதாம் துய்ப்ளேய்க்ஸ் எடுப்பாட்டுத்து நம்முடைய பேரிலே யாதொரு விரோதமும் தேடி மோசம்பண்ணிவிடவேணுமென்று வெகு எத்தனமெல்லாம் பண்ணுகிறாள். சுவாமி எவர்கள் அக்கிரமமாய் நடக்கிறார்களோ அவர்களை ஆக்கினை யிடுவாரானபடியினாலே இனிமேல் அவள் அபாண்டம் போடுகிறதற்கு என்ன ஆக்கினையிடுகிறாரோ தெரியாது. அதை அறியவேண்டியது.

அப்பால் சிங்கிரிகோவில் காரியத்துக்கு அரியாங்குப்பத்திலேயிருக்கிற பறையர் காரியத்துக்கு, அரியாங்குப்பம் முத்து சேருவைக்காரனை அழைத்து அந்தப்படிக்கு அந்த மனுஷரைக் கொண்டுவந்தால் இரண்டு சேர்லே வெள்ளிக்காப்பு பண்ணி இரண்டு கைக்குப் போடுகிறோமென்று சொல்லி அனுப்பினேன். சேவகரை வந்தவாசி, திருவொற்றியூர், விழுப்புரம், திருக்காஞ்சி முதல் வைத்து, பொம்பாய் காகிதம் இங்கிலீசுக்காரருக்கு வருகிறது. அதைப் பிடித்துவந்தால், ஐம்பது வராகன் கொடுக்கிறோமென்று சொல்லித் திட்டமாய்ப் பண்ணியனுப்பிவிட்டேன். இத்தனை நாள் கும்பினிருக்கு லாலாப்பேட்டையிலேயிருந்து நம்முடைய நாற்பது பல்லா கோதுமை வந்தது. மூன்றாம்நாள், நாலாம்நாள் நாற்பது பல்லா கோதுமை வந்து மதுரைக்கு எச்சரித்தேன். இன்னம் அழைப்பிக்கச் சொன்னார்.

இற்றைநாள் பகலுக்கு மேலாக ஐந்து மணி வேளைக்குக் குவர்னதோர் சவாரி புறப்பட்டுப் போகிறபோது அழிசபாக் கத்துக் குடியள் நேற்று ராத்திரி பறிகொடுத்தவர்களும், காயம் பட்டவர்களும் இருபது முப்பது பேர் தலையை விரித்துக் கொண்டுவந்து காலிலேவிழுந்து அழுதார்கள். அந்தச் சேதி சேருவைக்கார சாந்தப்பன் சொல்லப்போனுன். அப்போது ஒன்று நடையின்பேரிலே போட்டு, அப்பால் வண்டியின் பேரிலே ஏறி இரண்டு அனுப்பினேன். வெள்ளைக் குதிரையை கட்டினது அது இழுக்கச்சேதானே பிரண்டு பண்ணிற்று. அப்பாலே மகனும் தானும் ஏறிக் கொண்டு நடத்திச் சென்னப்பட்டணம் வாசற்படி யண்டேபோய் இறங்கி வில்லைப்பார்த்துப்போட்டு மறுபடி ஏறி நடத்தச்சே ஒரு நாழிகை மல்லுகட்டின குதிரையை அதட்டி, அகரத்தை சேவிர் ஒருமாயி நடத்திக்கொண்டு போகச்சே வழுதாவூர் வாசற்படிக்குக் தென்னண்டை புறத் திலேயிருக்கிற கொத்தளத்தண்டை திரும்பச்சே குதிரை அகரத் திலே பாஞ்சுது. நாலு வண்டிலும் அகரத்திலே சாய்வில்லா மல் சேற்றிலே பதிந்தது. ஆனல், நான் சுவாமியைப் பிரார்த் தித்திருந்த பூசாபலனென வேண்டிக்கொண்டேன். அப்படிச் செவ்வையாய்க் குதிரை அகரத்திலே பாஞ்சதும், அதற்கடுத் தாபோல வண்டியிலும் சாயாமல் ஒருவண்டிமேலே ஒருவண்டி கிழேவிழாமல் அல்லது குதிரையாகிலும் சரிந்து விழாமல் குதிரை பாஞ்சதும், அதற்கடுத்தாப்போலே வண்டியும் நேர் மையாய் பத்துபேர் கொண்டுவைத்தாப்போலே நின்றதும், இவருக்கு அதிஷ்டம் நன்றாயிருந்தபடியினுலேயும், பட்ட ணத்திலே யிருக்கப்பட்ட சகல சனங்களும் செய்த அதிர்ஷ்ட மும் பூசாபலத்தினுலேயும் பட்டணம் இங்கிலீசுக்காரர் கையிலே அகப்படாமல் பிரஞ்சுக்காரர் வசத்திலேதானே யிருக்கிற பிராப்தியும் பிராஞ்சுவமிசத்துக்கு இன்னம் வெகு கீர்த்தி இந்தியாவிலே சம்பாதிக்கவேண்டியிருக்கிறபடியி னுலே முசியே துய்ப்ளேக்ஸ் குவர்னதோர்சென்ருல் மகாராசா வுக்குக் கைகால் சரீரம் எங்கும் நோய்க்கூட காணும். கட்டில் மேலே இருக்கிறவரை எடுத்துப்போய் வைத்தாப்போலே யிருந்தது. ஆனல், பெண்ணுக்காகிலும் எங்கேயாகிலும், காய மாகிலும், நோக்காடாகிலும் காணத்தேவையில்லையா. என்

ருல், இவர் கூட இருந்தபடியினுலே அதற்குக்கூட ஒன் றுமில் லாமற்போச்சுது. போட்டுக்கொண்டிருந்த சட்டை நனைந்தது கையிலே போட்டிருந்த ஆயிரத்தைந்நூறு வராகன் வச்சிர மோதிரத்தில் இங்கிலீசு கமலம் ஒன்று விழுந்துபோச்சுது. கூடப்போன சிப்பாய்கள் கைகொடுத்துத் தூக்கிவிட்டார்கள். பெண்ணும் தாமும் கரையேறி வந்தார்கள். வண்டியையும் எடுத்துக் கரையிலே போட்டார்கள். குதிரையையும் வெளியே கொண்டுவந்தார்கள். இதிலே வீட்டுக்குப்போய் உடுப்பு எடுத் துக்கொண்டு வந்தார்கள். வரச்சே பெண்டாட்டிக்குச் சேதி யாகி, பெண்டாட்டியும் மச்சினிச்சியும் வந்தார்கள். அப்பால் சக்கருவன் தோத்தேல் வந்தான். அப்பால் சின்னதுரை வந்தார். இப்படி சேதிகேட்டவர்கள் மாத்திரம் சிறிதுபேர் வந்தார்கள். இதற்குள்ளே உடுப்பும் வேறே போட்டுக்கொண்டு, பெண் ணுக்கும் உடுப்பு வேறே போட்டு, பெண்ணை, முன்னே பெண் டாட்டி வந்த கூண்டிலே அனுப்பிவிட்டுத் தாமே வச்சிரமோ திரம் விழுந்துபோனதை அகரத்திலைச் சோதிக்கச் சொல்லி விட்டு அங்கே சிறிது வெள்ளைக்காரரையும், மாயே சிப்பாய் களையும் காவல்வைத்துவிட்டு வீட்டுக்கு வந்தார். நானும் போய் உபசாரம் சொன்னேன். ஊரிலேயுண்டான வெள்ளைக் காரரிலே பெரிய மனுஷர்கள், வர்த்தகர்கள், யோக்கியமான வெள்ளைக்காரர் அத்தனைபேரும் வந்து விசாரித்தார்கள். இவ ரும் உற்சாகமாய்ப் பேசிக்கொண்டிருந்தார். அப்பால் ஏழு மணி அடித்தது. அவரவரை அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக் குப் போனார்கள். நானும் அனுப்புவித்துக்கொண்டு பாக்குக் கிடங்குக்கு வந்து அங்கேயிருந்து ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

இற்றைநாள் துரையவர்கள் அகரத்திலே விழுந்தபோது எடுத்த துலுக்க சிப்பாய்களுக்கும் பிசைக்காரருக்கும் முன் னூறுரூபாயும், சம்பாவிலுகோவிலுக்கும் கபுசுகோவிலுக்கும் நூறுரூபாய் விழுக்காடு இரு நூறு ரூபாயுமாக ஐந்நூறு ரூபா யும் செலவு பண்ணதுமல்லாமல் விழுந்துபோன வச்சிரமோதி ரத்தை எடுத்துவருகிறார்களோ அவர்களுக்கு நூறு வராகன் கொடுக்கிறோமென்று துரை சொன்னார்.

1747 ஆ டிசம்பர் மீ 16உ க்கு பிரபவ ஸு மார்கழி மீ 5உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே வேறே ஒன்றும் பிரஸ்தாபமில்லை. தாம் நேற்றையதினம் விழுந்ததும் தமக்கும் பெண்ணுக்கும் காயம்படாமல் தப்பினதும் இதுவே பிரஸ்தாபமாய்ப் பேசியிருந்தாரேயல்லாமல் மற்றப்படி வேறே ஒன்றுமில்லை. தேவனாம்பட்டணத்துத் துறையிலே முன் இரண்டு கப்பல் பாயெடுந்து ஓடிப்போனதுமல்லாமல் இற்றைநாள் ஒரு கப்பலும், ஒரு சுலுப்பும் பாயெடுத்து ஓடிப்போனுனென்றும் அவர்களும் சர்வசாக்கிரதையுடன் இருக்கிறுர்கள் என்றுப் போலேயும் சேதி வந்தது. மற்றப்படி எழுதத்தக்க விந்தை ஒன்றுமில்லை.

1747 ஆ டிசம்பர் மூ 17 உ க்கு பிரபவ ஸு மார்கழி மூ 6 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் கோவிலுக்குப் போனவிடத்திலே அங்கே போய் பூசை கேட்டுவந்து கபே குடித்தான பிற்பாடு நான் போனேன். அப்போது துரையவர்களிருந்துகொண்டு நேற்றுச் சொன்னபடிக்கு அங்கங்கே மனுஷரை அனுப்பினியாவென்று கேட்டார். அனுப்பினேன் என்று சொன்னேன். காற்றுனல் ரொம்ப சுறுக்காயிருக்கிறது. மழை வரும்போல் இருக்குதென்று பேசிக்கொண்டிருக்கச்சே ரசோபண்டிதர் வந்து நபா ரயிஸ்த்தான் குமாரன் மாப்பிள்ளை இன்றைக்கு வருகிருன். சாயங்காலம் எதிர்கொண்டுபோய் அழைத்துவா என்று சொன்னுர். நடக்கவேண்டியதென்னவென்று கேட்டார். இரண்டு கோன் சேல்காரர் மேளதாளத்துடனே போய் அழைத்துக்கொண்டு வரவேணுமென்று சொல்லி, பின்னையும் அதற்கு நடக்க வேண்டியதெப்படியென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: கெவுனிவாசலிலே நுழையச்சே பதினைந்து பீரங்கியும், அப்பால் வீடு நுழைந்தாப்போலே பதினைந்து பீரங்கிப் போடவேணும். நாளையதினம் வெள்ளைக்காரர் மாயே சிப்பாய்கள் நூறு பேர் மாத்திரம் குவாடுது வைத்தால் மெத்த பிரதிஷ்டையாய் இருக்கும். சந்தாசாயபுக்குப் பதிலாக நீங்களிருந்து

நடப்புவித்தால் இந்தக் கீர்த்தி இந்த மூந்திருக்கிறமட்டுக்கும் இருக்கும். மற்றப்படி சின்ன மனுஷருக்குச் செய்ததினாலே என்ன பிரயோசனமிப்படி சூபா ஆண்ட பேருக்கு ஆதங்கம் வந்தவிடத்திலே வைத்துக் காப்பாற்றினதுமல்லாமல் அவர்கள் பட்டணத்துக்குள்ளே நடவாத மரியாதையெல்லாம் நடத்தினார்கள் என்று துலுக்கருக்குள்ளே டில்லி பரியந்திரம் பெறும் என்றும், இதிலே நவாயத்தருக்கே சுபையாலால் புதுச்சேரி யாரரய்த்தானே ஆற்காட்டு சுபாகூட நடக்குமென்று பின்னையும் சந்தாசாயபு இப்போது எத்தனம்பண்ணியிருக்கிறபடியினாலே நீர் செய்திருக்கிற தந்திரத்திலே சுவைக்கு வந்தால் செய்யத் தேவையில்லையென்றும் இப்படிக்குப் பின்னையும் உபசாரமாய்ச் சொல்லி, நாளைக்கு சந்தாசாயபு மகன் கலியாணத்துக்கு கொம்மாந்தேரிட வருவாரென்று சொன்னேன். அவர் நகைத்து, நல்லது பீரங்கி மேஸ்திரியை அழைப்பியென்று சொன்னார். அவனும் வந்தானென்று கபுறு சொன்னதின் பேரிலே தெத்துவாசற்படியிலே நுழையச்சே பதினைந்து பீரங்கியும். மாப்பிள்ளை வீட்டுக்கு வந்து சேர்ந்தவுடனே பதினைந்து பீரங்கிப் போடச்சொல்லியும் உத்தாரம் கொடுத்து, முசியே பாரதீயையும், முசியே தோத்தேலையும் அழைத்து மூன்று மணிக்கு ரங்கப்பிள்ளை வீட்டுக்குப் போங்கோள் அவன் எப்போது அழைக்கிறானோ அப்போது கூடப் போங்கோளென்று உத்தாரம் கொடுத்தார். அவர்களும் ரங்கப்பிள்ளை உன் வீட்டுக்கு மூன்று மணிக்கு முன்னேயே வொரோமம்தே முஸ்தீதுபண்ணுவிக்கவேணுமென்று சொன்னார்கள். நல்லதென்று சொன்னேன். அப்பால் துரையவர்கள் நீ சீக்கிரமாய்ப் போய்ச் சாப்பிட்டு இந்த சிஞ்ஞோர்களையும் கூட அழைத்துக்கொண்டு போய் மாப்பிள்ளையைக் கொண்டுவந்து வீடு சேர்த்துவிட்டு வாருங்கோள். மாப்பிள்ளை விடுதி பெதுரு வீடும், அவர்கள் சாமான்கள் தட்டுமுட்டு வைக்கிறதற்கு மேலண்டை பெதுரு கிடங்கும் முஸ்தீதுபண்ணியிருக்கிறதே அங்கே கொண்டு வந்து விட்டுவிட்டு நமக்கு வந்து கபுறு சொல்லுங்கோளென்று சொன்னார். அதன்பேரிலே அனுப்புவித்துக்கொண்டுவரச்சே, அகரத்திலே காணாமற்போன வச்சிர மோதிரம் அகப்பட்டதென்று அப்புமுதலியார் எடுத்துக்கொண்டு எதிர்கொண்டு வந்தார். அவர் கொண்டுபோய் துரையவர்கள் கையிலே கொடுத்தார். அதன்பேரிலே துரையவர்கள் சந்தோஷப்பட்டு அதை எடுத்த அரிப்புக்காரருக்கு நூறு வராகன் கொடுத்தார்.

மத்தியானத்துக்கு நான் வீட்டுக்கு வந்து சாப்பிட்டுப் படுத்துக்கொண்டவுடனே மழை பிடித்துக்கொண்டு சாயங்காலம்வரைக்கும் விடாமல் பெய்தது. இதற்குள்ளே நான் வீட்டுக்கு வந்தவுடனே ரசோபண்டிதர் நம்முடைய வீட்டுக்கு வந்து துரையவர்கள் கெவுனிவாசல்மட்டுக்கும் எதிரே அழைத்துக்கொண்டுவரவேணுமென்று சொன்னார். அது ஒருகாலும் நடவாது என்று சொன்னேன். அப்படியல்ல; எப்படியாகிலும் வரவேணுமென்று ரொம்பவும் போராடினார்.

அதற்கு நான் சொன்னது: அவரானால் சர்வாத்துமனுக இவர் போகிறதில்லை. இதுவரையிலே நானெந்தப் பேச்சு சொன்னாலும் யுக்தமான காரியத்தைச் சொல்லுவேன். அந்தப் படிக்குத் தட்டாமல் நடத்துவார். இது எனக்கே யுக்தமாய்க் காணவில்லை. அத்தோடே மழையானால் வீட்டை விட்டுப் புறப்படவொட்டாமல் அடிக்குதே. இப்படியிருக்கச்சே, அவர் தான் எப்படி வருவார். நாங்கள் வருகிறதே மோசமாயிருக்கிறதே! ஆகச்சே, நீங்கள்தானே போய்ச் சொல்லி அழைத்துப் பாருங்கோளென்று சொன்னேன். அதன்பேரிலே அவரும் நாலைந்து குதிரையுமாக எதிர்கொண்டு அழைக்கப்போனார்கள். அதன்பேரிலே நான் அந்த மழையிலே புறப்பட்டுத் துரையவர்களண்டைக்குப் போய் எச்சரித்து முன் சொல்லப்பட்ட கோமிசேல்காரர் இரண்டு பேரையும் அழைத்துக்கொண்டு மேளதாளத்துடனே நனைந்துகொண்டு எதிர்கொண்டு போனோம். இதற்குள் கெவுனிக்குள்ளே நுழையச்சே பதினைந்து பீரங்கிப் போட்டார்கள். இப்புறப்பட்டு முச்சியன் கடையண்டை வரச்சே எதிரேபோனோம் நான் போனவுடனே இராசத்துகான் மகன் பல்லக்கை விட்டு இறங்கிக் கட்டிக்கொண்டான். அந்தமட்டிலே வெள்ளைக்காரரை, பல்லக்கு மேலே இருக்கச்சேதானே அவர் விடுதியாகிய கனகராய முதலி வீட்டிலே போய் இறங்கினார்கள். இறங்கச்சே கோட்டையிலே பதினைந்து பீரங்கிப் போட்டார்கள் அதன்பேரிலே முசியே மோக்தூர் ரூபாயிலே ஒரு சிரொப்பாவும், முசியே பாகிகத இரு நூறு ரூபாயிலே ஒரு சிரொப்பாவும் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு துரையவர்களண்டைக்குப்போய் கபுறு சொல்லிவிட்டு அவரவர் வீட்டுக்கு வந்துவிட்டோம்.

போய் மறுபடி வீட்டுக்கு வருகிறமட்டுக்கும் மழையிலே நனைந்துகொண்டே வந்தோம். அவர்கள் பிறகே வந்த ஆனை மூன்று, குதிரை இரு நூறு, பல்லக்கு ஆறு, பெண்டுகள் காடி எட்டு, ராணுவம் ஆயிரம். இதல்லாமல் அரிசி நெய் சாமான்கள் எடுத்துக்கொண்டுவந்த எருதுமாடு கால்நடை இரு நூறு இதுகளெல்லாம் மேளவாத்தியம் நவபத்துகூட வந்தது இவர்கள் பிறகே வந்தவன் மாப்பிள்ளை, நல்லமான விக்கிரபாண்டிய அஸ்துல்பா சாயபு, அவன் தம்பி அலிதாலலி உடப்பிறந்தாள் ஆம்படையான், காவேரிபாக்கத்துக்கு கில்லேதாரன் சாதத்தும் நதுகானும் வந்தார்கள். சந்தாசாயபு வீட்டிலே இருந்து சாப்பாடு வந்தது.

1747 ஆ தெசம்பர் மீ 18உக்கு பிரபவ ஹ மார்கழி மீ 7 உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்குப் போனவிடத்திலே துரையவர்களிருந்துகொண்டு இவர்களுக்கு என்ன மரியாதை நடத்தவேணுமென்று கேட்டதற்கு அவர்கள் நவாபு கிரிபண்ணவர்கள் அவர்களுக்கு எந்த மட்டுக்கும் மரியாதை பண்ணினாலும் அதற்கெல்லாம் யோக்கியந்தான் உங்களுக்கு வெகு பிரதிஷ்டை வரும். இப்படி நவாபு கிரிபண்ணவர்கள் ஆதங்கத்தினாலே போயிருக்கிறவர்களுக்குக் கலியாணம் வந்தவிடத்திலே நவாபு கிரிபண்ண நாளைப் பார்க்கிலும் அதன மரியாதை பண்ணினார்கள் என்று இதைவிட யுமக்குக் கீர்த்தி வேறேயில்லை என்றும், பின்னையும் சொல்லத்தக்க உபசாரமாய்ச் சொன்னதின்பேரிலே பெண் வீட்டண்டையிலே இருபது பேர் வெள்ளைக்காரர்களும், ஐம்பது பேர் மாயே சிப்பாய்களும், பத்து குதிரை சுவார்களும், குதிரை சுவார்கள் குதிரையின்பேரிலே ஏறிக்கொண்டு கத்தி உருவின வாக்கிலேயிருக்கவும் இந்தப்படிக்குத் திட்டம்பண்ணி ஒரு ஒபிசியேல் கூட நேமித்து கோட்டையிலேயிருந்து கூடாரம் கொண்டு வந்து போட்டு கூடாரத்துக்குள்ளே போய் குவாடுது இருக்கச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக்குப்போய் இருந்தார்கள். மற்றப்படி லோகாபிரமமாய்ப் பேச்சேயல்லாமல் எழுதத்தக்க சேதியில்லை.




இற்றைநாள் கேட்ட சேதி என்னவென்றால்: நாளைய தினம் கோமண்ணமுதலியைக் காவல் வைக்கிறதாய் மதாம்

துய்ப்ளேய்க்கு புருஷனுக்குச் சொல்லி, பல முகாந்திரமாய் நடக்கிறதாய்ச் சேதி கேள்விப்பட்டேன். ஆனாலின்னம் நன்றாய் அறியவேணும். மாப்பிள்ளை பெதுரு வீட்டிலே யிருந்து பெண்டுகள் இறங்கியிருக்கிற அந்த வீட்டுக்கு மேலண்டை கிடங்கு வரச்சேயும் வெள்ளைக்காரர் பாறுவைத்து, பெரிய துரைக்கு அடிக்கிற தம்பூர் அடிக்கிறதும், கவிலே யிருந்து அவரிருக்கிறவிடத்துக்கு வரச்சேயும் மறுபடி வரிசை நின்று தம்பூர் அடிக்கிறதும் இந்தப்படிக்கு மரியாதையாய் நடப்பித்தார்கள். சாந்துமுதலியார் வீடு, சாதத்து மந்துகான் (M. S'aadat-mund-khan) விடுதி, தொம்மை வீடு குசினிக்குவிட்டார்கள். முத்தியப்பிள்ளை வீடு, சந்தாசாயபு குமாரன் வேளிக்கைப் பார்க்கிறது, விருந்து சாப்பிடுகிறது, உறைமுறைக்கும்.

*1747* ஆ டிசம்பர் *மீ 19*உக்கு பிரபவ ஞு மார்கழி *மீ 8*உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் குவர்னதோர் வீட்டிலே போயிருக்கச்சே சந்தாசாயபு மகன் ரசாசாயபு கலியாணத்துக்கு அழைக்க வந்தான். வந்து ரொம்பவும் உபசாரம் சொன்னான். அதன் பேரிலே துரை அவசியமாய் வருகிறேன் என்று சொல்லிப் போகச் சொன்னார். அவர் அனுப்புவித்துக்கொண்டுபோன பிற்பாடு, பீரங்கி மேஸ்திரியை அழைப்பித்து இருபத்தொரு பீரங்கி கொண்டுபோய் சந்தாசாயபு வீட்டண்டையிலே வைத்துக்கொண்டு, பீரங்கிச் சுடுகிறவர்களையும் வைத்துக் கொண்டு, அவர்கள் எந்நேரம் பீரங்கி சுடச்சொல்லுகிறார்களோ அந்நேரம் சுடச்சொல்லி உத்தாரம் கொடுத்து பீரங்கி மேஸ்திரியுடனே வாணவித்தைக் கட்டச்சொல்லியும் இந்த ஐந்தாறு நாளைக்குள்ளே எம்மாத்திரம் கட்டலாமோ அதுமட்டுக்கும் கட்டச்சொல்லி உத்தாரமும், சிறிது தித்திப்பு முஸ்தீதுபண்ணிவைக்கச்சொல்லி உத்தாரமும் கொடுத்தார். அப்பால் முசியே வர்லாம் ( M. Varlam ) பதினொரு மணிக்கு வந்து இரண்டு தரம் பேசினான். அப்போது யோசனைபண்ணினேன். கோமண்ணமுதலியைப் பிடித்துக் காவல்பண்ணி வைக்கிற யோசனைதான் ஆகவேண்டுமென்று நினைத்தேன். அதன் பேரிலே பனிரெண்டு மணி வேளை ஆச்சுதென்று முகவிசல்லிகான் மகனண்டைக்குப் போகவேணுமென்று போகச்சே கோமண்ணமுதலியையும், துபாசி எல்லப்பிள்ளை தம்பி அம்மை

யப்பனையும் காவல்வைத்தார்களென்று சொன்னார்கள். அப்பால் சென்னப்பட்டணத்திலே யிருந்து முசியே பெடுத்தல்மி, மலைக்கொழுந்துமுதலி, தபாலிலே யிருந்த சேவகன் என்றவன் நயினாராய் வந்த நல்லதம்பி எச்சல் பீங்கானெடுத்தவன். இவனுக்கு நயினார் உத்தியோகம்பண்ணவும் பெரிய துபாசித்தனம் பண்ணவுமிவர்கள் யோக்கியரல்ல. வேறே அனுப்பச்சொல்லி இப்படியாகச் சென்னப்பட்டணத்திலேயிருந்து முசியே பெடுத்தல்மி இவ்விடத்து கொமிசேலுக்கு எழுதியனுப்பினார். அவர் எழுதியனுப்புவித்தது, அவர்களை அவ்விடத்திலே சிறிது காரியம்பண்ணி அதன்பேரிலே இவ்விடத்துக்கு எழுதினார். அவர்களை அவ்விடத்திலே நடப்பித்த காரியமென்னவென்றால், நல்லதம்பி என்கிற பள்ளிப் பையன் பாளையக்காரனும் வற்லாம் தமையன் சாவடி துபாசி கும்பினீர் கொடுத்தியோர் முகாந்திரமாக உத்தியோகத்துக்கு ஏற்பட்டு அதிகாரம்பண்ணிக்கொண்டு வருகிற சமயத்திலே அவ்விடத்திலே அரும்பாத்தைப்பிள்ளை உத்தியோகமாய்ப் போயிருக்கிற திருக்காமிப்பிள்ளை குமாரனும், முத்தய்யனும், சுப்பய்யன் குமாரனும், செல்லப்பிள்ளையும், இவர்கள் இரண்டு மூன்றுபேரும் கூடிக்கொண்டு அவ்விடத்திலே முசியே மோறவுடனே என்னென்ன சொன்னார்களோ தெரியாது. அதன்பேரிலே ஒரு நாள் வேளையிலே முசியே மோற சாவடி நியாயத்துக்குப் போனவிடத்திலே நல்லதம்பி என்கிற பள்ளிப்பையன் சிறிது நியாயங்கள் சொல்லப்போனவிடத்திலே மனதிலே ஒன்றை நினைத்துக் கொண்டு அவனை ஏன் என்னுத்தாரமில்லாமல் காவல்வைத்தாய், அவனை ஏன் விட்டுவிட்டாயென்று ஒன்றைப்போட்டு ஒன்றை நேரத்தைச் சேமத்தி, உனக்கும் பாளையக்கார உத்தியோகத்துக்கும் எத்தனை தூரம். உனக்கு எச்சல் பீங்கான் எடுக்கத் தெரியுமேயல்லாமல் இந்த உத்தியோகத்துக்கு நீ பாத்திரமா? உனக்கென்ன தெரியுமென்று பாளையக்கார உத்தியோகத்துக்கு வந்தாயென்று சொல்லி, பெரம்பை எடுத்துக் கொண்டு பத்துப் பதினைந்து அடி வரிசையாய் மாட்டிவிட்டு, சூத்தமேலே இரண்டுஉதை போட்டுத் துரத்திவிட்டார். அதன் பேரிலே வற்லாம் (Varlam) தமையன் சாவடி துபாசித்தனம் பண்ணிப்போனவிடத்திலே அவனுக்கு பேச்சு நன்றாய் தெரியவில்லை யென்கிறதாய் இந்த உத்தியோகத்தினுடைய சாடையுனக்கென்ன தெரியுமென்கிறதாய் சூத்துமேலே இரண்டு

உதையைக்கொடுத்து போகச்சொல்லிவிட்டு முசியே பெடுத்தல்மி அண்டைக்குப் போய் இவர்கள் இங்க உத்தியோகத்துக்கு யோக்கியரல்ல பெரிய துபாசி கும்பினீர் கொடுத்தசியோமாய் வந்திருக்கிற மலைக்கொழுந்துமுதலி டபாலிலே சேவகனுயிருந் தவன். இவனுக்கு வர்த்தகருடைய தாரதமியம் தெரியுமா? அவரவருடைய மட்டந்திட்டந் தெரியுமா? பெரிய மனுஷரு டைய சாடையே தெரியுமா? இவனுக்கு என்ன தெரியுமென்று துபாசியாய் அனுப்புவித்தார்கள்! இந்த உத்தியோகத்திலே பெரியமனுஷனுகவும் யோக்கியனுகவும் இருக்கவேணுமே யல் லாமல் இப்படிப்பட்ட சுருட்டுப்பொருக்கிகளையா வைக்கிற தென்றும், மலைக்கொழுந்துமுதலியையும் ஒரு நாள் குத்துமேலே உதைத்து நீ டபால் சேவகனுயிருந்த உனக்கு இந்த உத்தி யோகத்தின் லக்ஷணமே தெரியுமாவென்று சொல்லி, அதன் பேரிலே இவர்களெல்லாரும் முட்டாள்கள்; இவர்கள் மதா முடைய ஒத்தாசை அனுசரணையின்பேரிலே இவ்விடத்திலே யிருக்கிறதெல்லாம் கொள்ளையிட்டு அனுப்புவிக்கிருேமென்று சொல்லி வந்திருக்கிருர்களென்று யோசனைபண்ணி, அவ்விடத் திலே அவர்களுக்குத் தக்கனபடிக்கு நடத்திப்போட்டு இவ் விடத்துக் கோமிசேலுக்கு எழுதிக்கொண்டார்கள். வேறே மனுஷரை அனுப்பச்சொல்லி எழுதினுர்கள். அப்படியிருக்க, அவ்விடத்திலே உதையும்பட்ட பெரிய மனுஷர் இவ்விடத்து மதாமுக்கு எழுதிக்கொண்டதென்னவென்றுல்: முத்தையனும், சுப்பையன் குமாரனும், செல்லப்பிள்ளையும் சொல்லி அடிப்பித் தார்களென்று சொல்லி எழுதியனுப்பின கடுதாசியை மதாம் திரான்சிலிட்டுபண்ணி துரையவர்கள் கையிலே கொடுத்தாள். அந்தக் கடுதாசியைப் பார்த்துக்கொண்டு அவர்கள் இரண்டு மூன்று பேரையும் இவ்விடத்துக்கு அனுப்புவிக்கச்சொல்லி எழுதி முசியே பெடுத்தல்மிக்கு எழுதின காகிதத்திலே அவர்க ளுக்குத் தெரிந்ததும் தெரியாததற்கும் பத்து நாளைக்குக் கவை யிருந்தார்களானுல் தன் இச்சையாய் தெரிந்துவிட்டுப்போகுது அவர்கள்பேரிலே சற்று தயவுபண்ணிக்கொண்டு வரவேணு மென்று உபசாரமாய் எழுதியனுப்புவித்தார்கள். மற்றப்படி இனிமேலவர்கள் இவ்விடத்துக்கு வந்த பிறகு என்ன நடக் குதோ அறியவேணும்.

இற்றைநாள் நாலு மணிக்கு முசியே துலோராம் வந்து என் னுடைய கணக்கப்பிள்ளையைக் காவல்பண்ணி வைக்கக் காரிய

மென்னவிருக்கிறது. அவன் சென்னப்பட்டணத்திலே நடத்தின காரியத்துக்கு அவன்பேரிலே சிம்தலேயான் நேற்றெல்லாம் நான் உத்தரவாதியாய் இருக்கிறேன். அவனை விட்டுவிடுமென்கிறதாய் அவர் வந்து கேட்டவிடத்திலே அதற்குத் துரையவர்கள் சொன்னதை உம்முடையபேரிலே யிருக்கிற கறத்துக்கு அவன் உத்தரவாதியுமேயல்லாமல் நீ இந்தப் பேச்சுக்குப் பேசத் தேவையில்லை என்று சொல்லி, உதறினைப்போலே சொல்லிக்கொண்டு காம்பிருவிலே போய்விட்டார். அதன்பேரிலே முசியே துலோராழம் திரும்பிக்கொண்டு அவர் வீட்டுக்குப் போய்விட்டார். இப்போது கோமண்ணமுதலியைக் காவல் வைத்தது என்னதைக்குறித்து என்றால், சென்னப்பட்டணத்திலே புகையிலை குத்தகை, முன் குத்தகை பண்ணின பாப்பய்யப்பிள்ளையைத் தள்ளிவிட்டு வேலப்பிள்ளையை இவனை வைத்துக் குத்தகை கொடுத்தபடியினலேயும், அந்த வேலப்பிள்ளை என்கிறவன் ஓடிப்போனபடியினலேயும் அவன் பேரிலே நூற்றைம்பது வராகன் கும்பினீருக்கு வரவேண்டியிருக்குதென்றும் அதனலே பிடித்துக் காவல் வைத்தார். அவன் பேரிலே வரவேண்டிய சம்மதிக்கு எப்படியென்றால்: குத்தகைச் சம்மதிக்கு மோசம் முன்னூற்றைம்பது வராகன் விழுக்காடு மாதாமாதம் செலுத்திக்கொண்டுவரச்சே ஒரு மாதத்துப் பணம் வராமல் நின்றுபோன வராகன் 350, இதல்லாமல் அவனுக்கு முதலுக்குக் கடனுக்க் கொடுத்த வராகன் 100, ஆக வராகன் 450 வரவேணுமே, அதைக்கொடென்று ஆரம்பித்துக் காவலிலேவைத்தது. இனிமேல் விசாரிக்குமிடத்திலே என்னென்ன விளங்குதோ அறியவேணும்.

இற்றைநாள் சந்தாசாயபு அவர்கள் கலியாணத்துக்கு வந்த உறவின்முறையாருக்கு விருந்து சொன்னபடியினலே சாப்பாட்டுக்கு அயிதரலிகான் அவர்களும் மற்ற உறவின் முறையாரும் போனர்கள். இன்றையதினம் இராசத்துகான் மகளுக்கு வந்தபடியினலே போகிறபோதும் வருகிறபோதும் சொல்தாதுகளும் சிப்பாய்களும் வரிசையாய் நின்று தம்பூர் அடித்தார்கள். ராசஸ்ரீ துரையவர்கள் இன்றையதினம் சாயங்காலம் ஐந்து மணிக்குச் சவாரி புறப்பட்டு மாப்பிள்ளை யிருக்கிற கனகராயமுதலி வீட்டுத் தெரு வழியாய்ப் பார்த்துக் கொண்டே வந்து வீட்டுக்குப் போனர்.

ஆறு மணி வேளைக்கு இராசத்துகானவர்கள் சந்தாசாயபு வீட்டுக்கு வந்து வரிசை வைத்து நூற்றைம்பது தட்டிலே பழ வகைகள், பாக்கு வெற்றிலை, சர்க்கரை, கற்கண்டு, புடவை சீலை இது முதலாகியதும் மேளதாளத்துடனே நவபத்தும், மாயே சிப்பாய்கள், ஆனை குதிரையும் கூட சம்பிரமத்துடனே கொண்டுபோனார்கள். நபாபு இராசத்துகான் மெத்தையின் பேரிலே நாலு நாழிகைமட்டுக்கும் கேளிக்கைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். பெருமுக்கல் அயிதரல்விகானும், அவர் தம்பி யும் கலியாணத்துக்காக வந்தவர்கள். அவர்களுக்கு விடுதி, தரகு நல்லதம்பிமுதலியார் புடவைக்கிடங்கு, கோவர்த்தன தாஸ் குமாஸ்தாவுக்குக் கொல்லத்துக்கார வெளி வீடு வீதி.

1747 ஆ டிசம்பர் மூ 20உ க்கு பிரபவ ஸு மார்கழி மீ 9 உ புதவாரம்

இற்றைநாள் துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத் திலே கலியாண சமாச்சாரம் கேள்விப்பட்டிருக்கிற சாடை யென்று கேட்டார். துலுக்கருக்குள்ளே வழக்கமென்னவென் றால், மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டாருக்கு ஒரு நாளைக்கு நலங்கு கொண்டுபோகிறது; அன்றையதினம் மாப்பிள்ளை வீட்டாருக்கெல்லாம், பெண் வீட்டிலிருந்து விருந்து பண்ணு விக்கிறது. இப்படி சகலதும் புறப்பட்டுப் பெண் வீட்டுக்கு மாப்பிள்ளை போய்த் தாலிகட்டுகிறதற்கு எத்தனை நாளிருக் குதோ அந்தமட்டுக்கும் மாப்பிள்ளை வீட்டார், பெண்வீட் டார் ஒருநாள் மாற்றி மாற்றி நலங்கும் வரிசையும் அனுப்பு கிறது வாடிக்கையாம். அந்தப்படிக்கு நடக்குதென்று சொன் னேன். நான் என்றையதினம் அவர்கள் வீட்டுக்குப் போகிற தென்று கேட்டார். வெள்ளிக்கிழமைதினமாகிற இன்றைக்கு என்று சொல்லுகிறார்களென்று சொன்னேன்.

அப்பால் தேவனும்பட்டணத்துச் சேதியும் இங்கிலீசுக்கார ருக்கு இருக்கிற பலவீனமும் பேசிக்கொண்டுவரச்சே, சென் னப்பட்டணத்து வர்த்தகர்கள் பணம் அனுப்புகிறார்களா வென்று கேட்டதற்கு பத்தொன்பதினாயிரத்திருநூறு ரூபாய் தருவாடி கையிலே கொடுத்து உண்டிகை பண்ணியனுப்புகிற தற்கு யோசனைபண்ணிப் பணமும் கொண்டுபோய் முதலியா ரவர்கள் நாளையதினம் உண்டிகை அனுப்புவிப்பார்கள் என்று

சொன்னேன். அதன்பேரிலே கிடங்குக்கு வந்து கும்பினீர் வர்த்தகரை அழைப்பித்து இன்னம் உண்டிகை அனுப்பவில்லையா? முந்தாம்நாள்தானே அனுப்பிவிடச் சொல்லியிருக்க அனுப்பாமற்போனதென்னவென்று கேட்டவிடத்திலே, அவர்கள் வழி ராசிகம் தெய்வீகம் யார் உத்தரவாதம் பண்ணுகிறவர்கள் என்று கேட்டார்கள். அதற்கு நான் சிறிது நியாயமும் அடமானமும் சொன்னதின்பேரிலே சம்மதித்துக்கொண்டு அந்தப்படியே நாளையதினம் உண்டிகை வாங்கி அனுப்புவிக்கிறோமென்று சொல்லிவிட்டுப் போனார்கள்.

கலியாணத்துக்கு வந்த இராசத்துகான் குமாரனும் சாதத்து பந்துகான் முதலானவர்கள் ஸ்ரீ துரையவர்கள் பண்ணுகிற ஆடம்பரம் தவிர அவர்கள் ஆடம்பரம் ஒன்றுமில்லை. ஆனால், மாப்பிள்ளை வீட்டார் என்கிறதற்கு அடையாளம். எல்லாரும் செகப்பு குசும்பாவிலே தைத்த அங்கி, அசாபி பாகை, நடுக்கட்டு இதுகள் செகப்பாய்ப் பிரகாசிக்கிற அழகேயல்லாமல் மற்றப்படி வேறே ஒரு சம்பிரமும் காணோம். ஆனால் நவபத்து வாத்தியம், பின்னையும் வாத்தியங்களும் ராத்திரியும் பகலும் காதுகள் செவிட்டுத்தனமாய்ப் போகத்தக்கதாக அடிக்கிற சத்தத்தினாலேயும் செகப்பு குசும்பாபோட்ட சட்டைகள் மயமாய் எல்லாரும் புறப்படுகிறபடியினாலேயும் இதுவே கலியாண அலங்கிருதமாய்க் காணுது. எனக்கு மாப்பிள்ளை வீட்டார் ஒரு குசும்பா அங்கி, அசாபி பாகை, நடுக்கட்டு அனுப்புவித்தார்கள்.

இற்றைநாள் இராசத்துகான் அவர்கள் வீட்டுக்கு விருந்துக்காக வந்தவர்கள் கான்பாதூர்த்தசாயபு, அல்லிநக்கிசாயபு, படேசாயபு குமாரன் சைனல் அதிகான், மற்றும் இருக்கப்பட்ட உறவின்முறையார் வந்து மத்தியானத்துக்கு விருந்து சாப்பிட்டார்கள். மறுபடி இரண்டு மணிக்குப் போய்விட்டார்கள். சாயங்காலம் ஆறு மணி வேளைக்குச் சந்தாசாயபு அரண்மனையிலேயிருந்த இராசத்துகானை இவ்விடத்துக்கு வரிசை வந்த விபரம் நூற்றைம்பது தட்டிலே மஞ்சள், பாக்கு, வெற்றிலை, மிட்டாய், சர்க்கரை, கற்கண்டு இது முதலானது வைத்து மேல் கட்டுபோலே ஒன்று சோடித்து, நாலு மூலைக்கு நாலு வெள்ளிக்கம்பத்திலே கட்டித்தாக்கி, நாலு பேர் பிடித்துக்கொண்டு அதற்குள்ளாகத் தாய்கள் கையிலே நாலு தடுக்

இலே சர்தார் புடவை நடப்பித்துக்கொண்டு, பத்து இவட்டி யுடனே சொல்தாதுகள் வரிசை வைத்துத் தம்பூர் அடித்துக் கொண்டு துரையவர் நீசான் இரண்டு வெள்ளை நீசானும் பிடித்துக்கொண்டு, த்ரோம்பேத், கிண்ணாரம், டங்கா, நவ பத்து, மாயே சிப்பாய்கள் ஐம்பது பேர், குதிரைச் சுவார்கள் பத்து பேர், பின்னையும் மேளவாத்தியத்துடனே வரிசையை மாப்பிள்ளை வீட்டுக்குக் கொண்டுவந்து பகலிலே ஒப்புவித்து அந்த ஜாபிதாவைக் கொண்டுவந்து மாப்பிள்ளை கையிலே கொடுத்தார்கள். அதை அவர் பார்த்துக்கொண்டு வரிசை கொண்டுவந்தார். ரசோபண்டிதருக்கும் மற்றப்பேருக்கும் பாக்கு வெற்றிலை கொடுத்தனுப்பினார்.

1747 ஆ டிசம்பர் ௴ 21உ க்கு பிரபவ ஞு மார்கழி ௴ 10உ வியாழக்கிழமை.

இற்றைநாள் சந்தாசாயபு அவர்கள் மாப்பிள்ளை வீட்டுக் காரருக்கு விருந்து சொன்னபடியினாலே விருந்து சாப்பிட்டு வந்தவர்கள் மகம்மது அசத்துல்லாசாயபு, அயிதரல்லிகான், மற்ற உறவின்முறையாரெல்லாரும் சந்தாசாயபு வீட்டிலே விருந்து சாப்பிட்டு வந்தார்கள். மகம்மது அனேதுல்லாசாயபு அவர்கள், நபாபு இராசத்துகானுக்கு வரிசை அனுப்புவித்தது: சரிகைப் புடவையும், நசர் வைக்கிறதற்கு இரு நூறு ரூபாயும், சர்க்கரை கற்கண்டு இது முதலான தினுசுகளும் தட்டிலே வைத்துக்கொண்டு மேளதாளத்துடனே கொண்டுவந்து கொடுத் தார்கள்.

இன்றையதினம் சாயங்காலம் சந்தாசாயபு வீட்டுக்கு இராசத்துகான் அவர்கள் வரிசை அனுப்புவித்தது: நூற்றைம் பது தட்டிலே மஞ்சள், பாக்கு வெற்றிலை, புடவை சீலை முத லானது அனுப்புவித்தார்கள். இன்றையதினம்முதல் சொல் தாதுகளுக்கு இரண்டு வேளை சோறு கொடுத்துப்போட உத் தாரம் கொடுக்கச் சொன்னார்கள்.

1747 ஆ தேசம்பர் ௴ 22 உக்கு பிரபவ ஞு மார்கழி ௴ 11 உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: அயிதரல்வி கான் துரையவர்களண்டைக்குப் போய் பேட்டிபண்ணிக்

கொண்டு நசர் ஐந்து நகை வெகுமானமும் கொண்டுபோய்க் கொடுத்துச் சந்தித்துக்கொண்டார். அப்போது கோட்டையிலே பதினொரு பீரங்கிப்போட்டார்கள். அதன்பேரிலே துரையவர்களை கலியாணத்துக்கு வரச்சொல்லி அழைத்தார். ராசஸ்ரீ துரையவர்கள் சந்தாசாயபு வீட்டுக் கலியாணத்துக்குப் போகிறது எப்போதென்றார்?

இற்றைநாள் சாயங்காலம் ஐந்து மணிக்குத் துரையவர்கள் வீட்டண்டையிலே முஸ்தீதுபண்ணினது இரு நூறு பேருக்குண்டு. மாயே சிப்பாய்களும், சவுளகக்கழிக்காரரும், ஆனையின்பேரிலே நீசானும், குதிரைகள்பேரிலே நவபத்துமாய்ப் பல்லக்கின்பேரிலே ஏறிக்கொண்டு துரையவர்கள் வீட்டுக்குக் கிழண்டையாய்ப் புறப்படத்தக்கதாகப் பயணமாயிருந்து, ஆறு குதிரை கட்டின வண்டியைச் சந்தாசாயபு வீட்டுக்கு அனுப்புவித்தார்கள் இதற்குள்ளே இருநூறுபேர் சொல்தாதும், இரு நூறு பேர் மாயே சிப்பாய்களுமாய்ச் சந்தாசாயபு வீடு முதற்கொண்டு மாப்பிள்ளை இறங்கியிருக்கிற கனகராயமுதலியார் வீடு மட்டுக்கும் இருபுறமும் வீதியிலே பாருவ்வத்துக்கொண்டு தயாராயிருந்தார்கள். அந்தச் சமயத்திலே அந்த ஆறு குதிரை கட்டின வண்டியின்பேரிலே ரசா சாயபும், அல்லிநக்கியும் ஏறிக்கொண்டு துரையவர்களை அழைக்க வந்தார்கள். அதன்பேரிலே துரையவர்கள் ஐந்து மணிக்கு வீடு விட்டுப் புறப்பட்டார்கள். புறப்படச்சே துரையவர்களுடனே சின்ன துரை முசியே கில்லியார், முசியே மீரா, முசியே மே, முசியே புரீ, முசியே துக்கேன், முசியே பரதீ இவர்கள் முதலாகிய துரைத்தனக்காரரும், காடுது குதிரை வெள்ளைக்காரரும், மாயே சிப்பாய்கள் குதிரைக்காரருமாய் ஐம்பது குதிரையின்பேரிலேறி வெள்ளைக்காரரெல்லாரும் கத்தி உருவிக்கொண்டு த்ரோம்பேத், கின்னரம், நாகசுரம், மேளம், நவபத்து வாத்தியங்களுடனே ஆனையின்பேரிலே நீசான் பிடித்துக்கொண்டு துரையவர்கள் வீட்டுக்குக் கிழண்டையாய்ப் புறப்பட்டு கோட்டைக்குத் தென்னண்டையாய்ப் புறப்பட்டுச் சந்தாசாயபு வீட்டண்டை போட்டிருக்கிற டேராவிலே வந்து உட்கார்ந்தார்கள்.

உட்கார்ந்தவுடனே ஈசுவரன் கோவிலண்டையிலே வைத்திருக்கிற பீரங்கியில் இருபத்தொரு பீரங்கிச் சுட்டார்கள்.

துரையவர்கள் பிறகே மதாமும், அவர்கள் பிறகே பெண்டுகள், பிள்ளையும், ஆறு பல்லக்குக்காரரும் கூட வந்தார்கள். அவர்கள் ஆறு பல்லக்குக்காரர் பெண்டுகளும் சந்தாசாயபு பெண்சாதி இருக்கிற மகலுக்குள்ளே போனார்கள். மற்றப்படி துரையவர்களும் மற்றுமுள்ள கொமிசேல்காரரும் டேராவிலே உட்கார்ந்தவுடனே பாக்கு வெற்றிலே பன்னீர் கொண்டுவந்து கொடுத்தார்கள். அதை வாங்கிக்கொண்டு சற்றுநேரம் கலியாணம் சம்பிரமத்துடனே பேசிக்கொண்டிருந்து அவ்விடத்திலே யிருந்து துரையவர்களும் மற்றுமுள்ள கொமிசேல் காரரும், அல்லிநக்கிசாயபும், ரசாசாயபும், மற்றுமுண்டான பேரும் அவ்விடத்திலே யிருந்து கால்நடையாய்ப் புறப்பட்டு நபாபு இராட்த்துகான் அவர்கள் இறங்கியிருக்கிற கனகராய முதலியார் வீட்டுக்குப் புறப்படச்சே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். இருபுறமும் பாரா நிற்கத்தக்கதாக நடுவே வந்தார்கள்.

வந்தவுடனே எதிராகத்தெருவாசற்படிமட்டுக்கும் அயிதர் அல்லிகான் வந்து அழைத்துக்கொண்டுபோனார். அங்கேயிருந்து மெத்தையின்பேரிலே ஏறுகிறபோது நபாபு அவர்கள் மேலே இருக்கிற படி மட்டுக்கும் எதிரே வந்து அழைத்துக் கொண்டுபோனார். அப்புறம் கூடத்திலே போய் எல்லாரும் உட்கார்ந்தார்கள். அதன்பேரிலே கலியாண சம்பிரமமாய்ப் பேசிக்கொண்டிருந்து பிற்பாடு பாக்கு வெற்றிலே பன்னீர் கொடுத்துத் துரையவர்களுக்கு ஒரு குதிரையும், ஐந்து நகையும், ஒரு சிரொப்பாவும் கொடுத்தனுப்பினார்கள். அவர்கள் கையிலே அனுப்புவித்துக்கொண்டு, மறுபடியும் சந்தாசாயபு வீட்டண்டையிலே போட்டிருக்கிற டேராவிலேபோய் உட்கார்ந்து சற்று நேரமிருந்து அவர்கள் கையிலே அனுப்புவித்துக்கொண்டு மறுபடியும் புறப்படச்சே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அவ்விடத்திலேயிருந்து புறப்பட்டு கோட்டைக்கு மேலண்டையாய்த்தானே வந்து துரையவர்கள் வீட்டைச் சுற்றினாப்போலே துரை வீட்டுக்குக் கீழ்ப்புறமாய் வந்து வீட்டே போனார்கள். கொமிசேல்காரர் அவரவர் வீட்டுக்கு அவரவர் போய்விட்டார்கள். அதன் பிறகு இவ்விடத்திலே யிருந்த மேளவாத்தியம் சவுளக்கழிக்காரர்கூட மதாமை அழைக்கப்போனார்கள். அவ்விடத்திலேயிருந்து மதாம் ஏழு மணிக்குப் புறப்பட்டு அவர்களும் கோட்டைக்கு மேலண்டை

யாய்ப் புறப்பட்டு கொமிசேல் வீட்டுச் சந்தாலே வந்து வீடு சேர்ந்தார்கள். நபாபு இராசத்துகான் வீட்டுக்குச் சந்தாசாயபு அவர்கள் வரிசை அனுப்பினது: நூற்றிருபது தட்டிலே சர்க்கரை, கற்கண்டு, பாக்கு, வெற்றிலை, புடவை, சீலை, சரிகை நகைகள் கூட கொண்டுவந்து கொடுத்தார்கள். நபாபு வீட்டுக்கு அல்லிநக்கிசாயபும், ரசாசாயபும், மற்ற உறவின்முறையாரும் ஆறு மணிக்குச் சாப்பாட்டுக்கு வந்தார்கள்.

**1747 ஆ டிசம்பர் மூ 23 உ ந்து பிரபவ ஞூ மார்கழி மூ 12 உ சனிக்கிழமை**

இற்றைநாள் சாதத்து பந்துகானவர்கள், நபாபு அவர்களுக்கு வரிசை அனுப்புவித்தது: நூறு தட்டிலே சர்க்கரை, கற்கண்டு, பாக்கு வெற்றிலையும், ஆறு தட்டிலே சரிகைப் புடவையும் அனுப்புவித்தார்கள். இன்றையதினம் சந்தா சாயபு அவர்கள் வீட்டுக்கு மகமது அசுதல்லா, அயிதரல்லிகான், சாதத்து பந்துகான், பின்னையும் அவர்கள் உறமுறையார் எல்லாரும் விருந்து சாப்பிடப் போனார்கள். இவர்கள் பெண்டுகள் ராத்திரி பத்து மணிக்குச் சந்தா சாயபு வீட்டுக்குப் போனார்கள்.

இன்றையதினம் துரையவர்கள் வரிசை அனுப்புவித்த சம்பிரமம்: நூற்றைம்பது தட்டிலே சர்க்கரை, கற்கண்டு, வாழைப்பழம், கொய்யாப்பழம், பாக்கு வெற்றிலை, புடவைசீலை, கரும்பு சுமையும் எடுப்பித்துக்கொண்டுவந்து மேளவாத்தியத் துடனே இருநூறு பேர் மாயே சிப்பாய்களும் நூறு சொலுதாதுகளும் பாருவைத்தார்கள். ... ... ... ... ...
அதிலே மாப்பிள்ளை வீட்டுக்குத் துரை வீட்டிலே இருந்து வந்த தித்திப்பு, வெள்ளித்தட்டு 22, மரத்தட்டு ஐம்பது கொண்டுபோனார்கள். கொண்டுபோனவர்களுக்கு மாப்பிள்ளை வீட்டிலே பதினைந்து ரூபாய் இனும் கொடுத்தார்கள். மரத்தட்டுகளும் வெள்ளி வசியிலே வந்த தித்திப்பும், கரும்பு சுமையும், புடவை சீலையும் சந்தாசாயபு வீட்டுக்குக் கொண்டு போய்க் கொடுத்தார்கள். இதல்லாமல் சகலாத்து சிப்பம் 10, கன்னாடி 3, மெழுகுவத்தி வைக்கிற விதர் முதலான தினுசுகளெல்லாம் கொண்டுபோய் வரிசை கொடுத்தார்கள். கொண்டு போனவர்களுக்கு இனும் ரூபாய் கொடுத்தார்கள். இன்றைய

தினம் மத்தியானம் நபாபு இராசத்துகான் துரையவர்களுக்குச் சாப்பாடு மூன்று காவடியும், பதினைந்து தட்டும் கொடுத்தனுப்பினார்கள். கொண்டுவந்த பேருக்குத் துரையவர்கள் இருபது ரூபாய் இனும் கொடுத்தார்கள்,

இன்றையதினம் சாயங்காலமான ஏழு மணிக்குச் சந்தா சாயபு வீட்டுக்கு மாப்பிள்ளை இராசத்துகான் பதினாறு தட்டிலே சரிகைப்புடவையும், ஒரு தட்டிலே உடைமை தட்டுமுட்டும், வெள்ளிச் சொம்பு ஐந்திலே எண்ணெயும், தண்ணீர் வார்த்துக்கொள்ளுகிற சவுக்கமணை வெள்ளியினாலே பண்ணின காலுள்ள நாற்காலிமணை ஒன்றும், பன்னீர்ச் சொம்பும், சம்மங்கி எண்ணை இரண்டு சீசாவும், மல்லிகைப்பூ எண்ணை மூன்று சீசாவும், நூறு தட்டிலே சர்க்கரை கற்கண்டும், பத்து ஒட்டகத்தின்பேரிலே சொலுதாதுகளையும் மாயே சிப்பாய்களையும்கூடக் கூட்டிச் சந்தாசாயபு வீட்டுக்கு அனுப்பினார்கள். அதுபோல் அவ்விடத்திலே சேர்ந்தவுடனே ஏழு பீரங்கிப் போட்டார்கள். இந்தத் தட்டுமுட்டுகள் சாமான்களெல்லாம் பகலிலே போய்ச் சேர்ந்தவுடனே பதினைந்து பீரங்கிப் போட்டார்கள். ராத்திரி நாலு நாழிகை மட்டுக்குங் கேளிக்கைப் பார்த்தார்கள்.

1747 ஆ. தெசம்பர் மீ 24உ-க்கு பிரபவ ஞு மார்கழி மீ 13 உ ஞாயிற்றுக்கிழமை.

இற்றைநாள் சந்தாசாயபு அவர்கள் நபாபு இராசத்துகானவர்களுக்கு விருந்து சொன்னபடியினாலே கான்பாதூர் ரசாசாயபு குமாரன் மற்றுமுண்டான உறமுறையாரும் விருந்துக்குப் போனார்கள். நபாபு இராசத்துகானவர்கள் வீட்டுக்குச் சந்தாசாயபு அவர்கள் வரிசை அனுப்புவித்தது ஒரு ஆனையும், அந்த ஆனையின்பேரிலே வெள்ளி அவுதாவும், வெள்ளியினாலே காலுக்குத் தகடு அடித்த நாற்காலி ஒன்றும், ஆறு தட்டிலே சரிகைநகை 26-ம், பின்னையும் சர்க்கரை, கற்கண்டு, மிட்டாய், பாக்கு வெற்றிலை, சகல சாமக்கிரியை தினுசுகளும், நூறு தட்டிலே அனுப்பினார்கள். ராத்திரி இரண்டு மணிக்கு இராசத்துகானவர்கள் சரிகசத்துப் புறப்பட்ட சம்பிரமம்: சரிகசத்துப் புறப்படுகிறதற்கு மாப்பிள்ளை

வழுதாவூர் கெவுனியண்டையிலே போயிருந்து, அவ்விடத்திலே யிருந்து திவட்டி ஐந்நூறு, ஏழுமுகத் திவட்டி 10, ஐந்து முகத் திவட்டி 10, மூன்று முகத் திவட்டி 10, மூங்கிலினாலே படல் போலே கட்டி, கடுதாசிகளை மேலே ஒட்டி, தாமரைப்பூப் போலே கடுதாசியிலே கத்தரித்து அதற்குள்ளே யெல்லாம் விளக்கு வைத்து அப்படி ஒரு நூறு கிரண்டு. இதல்லாமல் வாண வித்தை: வழுதாவூர் கெவுனிமுதற்கொண்டு சந்தா சாயபு வீடுமட்டுக்கும் இருபதடிக்கு ஒரு கம்பம் நட்டு, இதற்குள்ளே விறுசுகளும், மத்தாப்புகளும், சக்கரமும் ஓயாமல் கொளுத்திக்கொண்டு வரத்தக்கதாக மேளவாத்தியம் நவபத்தும், கூட ஆனையின்பேரிலே நாககுர மேளவாத்தியம் முழங்கத் தக்கதாக மாப்பிள்ளை குதிரையின்பேரிலே ஏறிக்கொண்டு சுருணைப்பட்டையிலே கட்டின குடை பிடித்துக்கொண்டு வந்து வழுதாவூர் கெவுனியண்டையிலே யிருந்து சரிகசத்து புறப்பட்டு, நேர் கிழக்கே கனகராயமுதலியார் வீதி வந்து கிழக்கே திரும்பி, சந்தாசாயபு வீட்டுக்கு அப்புறத்திலே போட்டிருக்கிற டேராவிலே இறங்கி, சற்று நேரமிருந்தார். இறங்கியவுடனே 21 பீரங்கிப் போட்டார்கள். அந்தமட்டிலே எழுந்திருந்து மகலுக்குள்ளே போனார்.

உள்ளே போனவுடனே 21 பீரங்கிப் போட்டார்கள். அப்போது மூன்றரை மணி வேளையுண்டு. அப்புறம் உள்ளே போய் அவ்விடத்து சடங்குகள் முடிகிறபோது மதாமவர்களுக்கும் கலியாண சம்பிரமம் பார்க்கத்தக்கதாக மூன்று மணிக்கு வந்து சந்தாசாயபு வீட்டிலே யிருந்தாள். அவ்விடத்துச் சடங்குகளெல்லாம் தீர்ந்து கலியாணத்திற்குப் பிறகு ஐந்து மணிக்குப் பெண்ணையும் அழைத்துக்கொண்டு மாப்பிள்ளை புறப்பட்டு அவர்கள் விடுதியாகிய கனகராயமுதலியார் கிடங்குக்குப் போய்ச் சேர்ந்தார். பெண் வீட்டிலே யிருந்து புறப்பட்டு வருகிறபோது இருபத்தொரு பீரங்கிகள் போட்டார்கள். மதாமும் ஐந்து மணிக்குப் புறப்பட்டுத் துரை வீட்டுக்கு வந்துவிட்டாள்.

இற்றைநாள் ராத்திரி சரிகஸத்து புறப்படுகிறதற்கு முன்னே ராத்திரி எட்டு மணிக்கு இராசத்துகான், கனகராய முதலியார் வீட்டின் மெத்தை மேலே கேளிக்கைப் பார்த்துக்

கொண்டிருக்கச்சே நானும் மதனுந்தபண்டிதரும் போய் உட்கார்ந்து கேளிக்கைப் பார்த்துக்கொண்டிருந்து வீட்டுக்கு அனுப்புவித்துக்கொண்டு வரச்சே நமக்கு ஒரு சிரோப்பா கொடுத்தார்கள். அதை வாங்கிக்கொண்டு அனுப்புவித்துக் கொண்டு நம்முடைய வீட்டுக்குப் போனோம்.

*1747* ஆ டிசம்பர் மூ 25 உக்கு பிரபவ ஸ்ரீ மார்கழி மூ *14*உ சோமவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: ராசஸ்ரீ துரையவர்கள் வாணவேடிக்கை பண்ணவேணுமென்று சொல்லி, வெள்ளைக்காரரைக்கொண்டு வாணம் கட்டுவித்து அந்த வாணமெல்லாம் கொண்டுவந்து துரையவர்கள் வீட்டுக்குத் தென் அண்டையிலே கும்மட்டங்கள் கட்டுவித்து அதிலே வாணங்கள் எல்லாம் கட்டி, சரவத்தியும் வைத்து, தயார்பண்ணின உடனே, இன்றையதினம் ராத்திரிக்கு வாணவேடிக்கைப் பார்க்கவேணுமென்று சொல்லியனுப்பினவிடத்திலே மார்ப்பிள்ளைக்கு இன்றைக்குக் கங்கணம் அவிழ்க்கிற சடங்கானபடியினாலே வரக்கூடாது, நாளையானால் வருகிறோமென்று சொல்லியனுப்பினார்கள். அதைப் போய்த் துரையவர்களிடத்திலே சொன்னதும் அவர் கோபித்துக்கொண்டு அப்படியானால் நேற்றே ஏன் சொல்லாதே போனார்கள். எல்லாம் முஸ்தீதாகி வத்திகூட வைத்து எல்லாம் தயார்பண்ணியிருக்கிறது. இன்றைக்கிருந்தால் கெட்டுப்போமென்று பீரங்கி மேஸ்திரி சொல்லுகிறான். இன்றையதினத்துக்கு வந்தாலாச்சுது இல்லாவிட்டாலும் நாம் அதைக் கொளுத்திப் போடுவோமென்று சொன்னார்.

அந்தச் சேதியை மறுபடியும் அவர்களுக்குச் சொல்லிச் சமாதானப்படுத்திவருகிறோமென்று சம்மதி பண்ணுவிக்கிறதற்கு இரண்டு மணி மட்டுக்குஞ் சென்றது. அந்தமட்டுக்கும் நாம் சாப்பாட்டுக்குக் கூடப் போகாமலிருந்து அந்த உத்தரவு வந்தபிறகு நான் போய் துரையவர்களுடனே சொல்லிவிட்டு வீட்டுக்குப்போனேன். வீட்டுக்குப்போய்ச் சாப்பிட்டுச் சாயங்காலத்துக்கு வந்தேன். இதற்குள்ளே சாயங்காலமான ஆறு மணிக்கு நபாபு மீரசத்துகான், மகம்மது அசதுல்லாகான், அயிதால்லிகான், சாதத்துபந்துகான், அயிதாதில்லுகான், அவர்

தம்பி ரசாசாயபு, அல்லிகக்கிசாயபு இவர்கள் எல்லாரும் வந்தார்கள். வந்தவுடனே துரையவர்கள் வீட்டு வாசற்படியண்டை போனவுடனே, சேந்தினேர் காக்கிறவிடத்துக்கப்புறம் துரை வந்து நின்ருர். இதற்குள்ளே இவ்விடத்திலேயிருந்து போனவர்கள் எல்லாரும் இப்புறத்திலேதானே பல்லக்கை விட்டிறங்கி உள்ளே போனவுடனே நபாபு கையை துரை பிடித்துக்கொண்டு மெத்தைமேல் நடந்தார். மற்றுமுண்டான பெரிய மனுஷர்கள்கூட மெத்தைமேலே போனுர்கள். அவ்விடத்திலே போய் உட்கார்ந்தவுடனே அவ்விடத்திலே விசைக்கயிற்றிலே கட்டியிருக்கிற சரவத்தியைக் கொளுத்தினவுடனே அது அந்தக்கயிற்று விசையிலே போய்த் தென்புறத்திலே கட்டியிருக்கிற வாணக்கூட்டிலே பத்திக்கொண்டு இரண்டு நாழிகைமட்டுக்கும் வாணவித்தையைப் பார்த்து வெகு சந்தோஷப்பட்டு இப்படிப்பட்ட வித்தையும் இத்தனை கோர்த்தியான வாணமும் நாங்களெங்கேயும் பார்த்ததில்லையென்று சந்தோஷப்பட்டுச் சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்து, பாக்கு வெற்றிலை பன்னீர் கொடுத்து அனுப்புவித்தார்கள். அவர்களும் அனுப்புவித்துக்கொண்டு எட்டு மணிக்கு வீட்டுக்குப் போய்விட்டார்கள்.

1747 ஆ தெசம்பர் மீ 26வ க்கு பிரபவ ஞு மார்கழி மீ 15 உ மங்களவாரம்

இற்றைநாள் காலத்தாலே பத்து மணிக்குச் சாதத்துபந்தகான் துரையவர்களுக்கு ஒரு சிரொப்பா வெகுமானம் கொடுத்தனுப்பினுர். நாம் அவர் வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் நமக்கு ஒரு சிரொப்பா கொடுத்தார்.

சாயங்காலம் ஐந்து மணி வேளைக்குத் துரையவர்களும் கொமிசேல்காரரும் மேளவாத்தியத்துடனே, நவபத்து, குடை கோஷகிலை, நாகசுரமேளம், சவுளக்கழி, மாயே சிப்பாய்கள் பாராவைத்துக்கொண்டு குதிரையின்பேரிலே காடுது வெள்ளைக்காரர் கத்தியுருவி பிடித்துக்கொண்டு இந்தப்படிக்குச் சகல சம்பிரமத்துடனே சந்தாசாயபு வீட்டுக்குக் கலியாணம் நிறைவேற்றின சந்தோஷமென வரத்தக்கதாகப் புறபட்டுப் போய்ச் சந்தா சாயபு வீட்டண்டையிலே போட்டிருக்கிற சவுக்கதி கூடாரத்திலே போய் இறங்கினவுடனே இருபத்

தொரு பீரங்கிப் போட்டார்கள். அவ்விடத்திலே இரண்டு நாழிகை கூடாரத்திலே யிருந்து கேளிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அதன்பிறகு துரையவர்களுக்கு முத்து தாவடத்திலே பதக்கம் கோத்திருக்கிற தாவடம் 1-க்கு வராகன்......... பச்சையிழைத்திருக்கிற பாகுபந்து 1-க்கு வராகன்............ மூன்று சீரொப்பாவும் கொடுத்தார்கள்.

இதல்லாமல் ஒரு சொலுதாது ஒரு வெள்ளைக்காரனைக் குத்திப்போட்டபடியினாலே அவனைப் பிடித்துக் தூக்குப் போட வேணுமென்று சொல்லிக் கோட்டைக்கிடங்கிலே போட்டிருந்தவனை கொல்லாமல் மாப்புபண்ணி விடவேணு மென்று ரசா சாயபு தயவுபண்ணி கேட்டபடியினாலே அந்தப் படிக்கு மாப்புபண்ணி விட்டுவிடுகிறோமென்று உத்தாரங் கொடுத்தார்கள். அந்தமட்டிலே அனுப்புவித்துக்கொண்டு துரையவர்கள் வீட்டுக்குப் போகிறதற்குப் புறப்பட்டவுடனே இருபத்தொரு பீரங்கிப்போட்டார்கள். அவர் புறப்பட்டு வீட்டுக்குப் போய்விட்டார். பிறகு நமக்கும் மதனாந்தபண்டி தருக்கும் (இரண்டு பேருக்கும்) இரண்டு சீரொப்பா கொடுத் தார்கள்.

இன்றையதினம் ராத்திரி பத்து மணிக்குக் கங்கணம் அவிழ்க்கிற நிமித்தியம் நபாபு அவர்களும் அவர் பெண்சாதி யும் மேளவாத்தியம் திவட்டி வாணவித்தையுடனே சந்தா சாயபு வீட்டுக்கு வந்தார்கள். அப்போது இருபத்தொரு பீரங்கிச்சுட்டார்கள். அவ்விடத்திலே ராத்திரி இரண்டு மணிமட்டுக்குமிருந்து மறுபடியும் மாப்பிள்ளையும் பெண்ணும் புறப்பட்டு மாப்பிள்ளை வீட்டுக்கு வந்துவிட்டார்கள். அப் போது இருபத்தொரு பீரங்கிப்போட்டார்கள். இதல்லாமல் மதாம் அவர்கள் கலியாண சந்தோஷமென வரத்தக்கதாகச் சந்தாசாயபு விட்டுக்கு அம்மாளவர்களை தாயிகள் வந்தழைத்த படியினாலே ராத்திரி எட்டுமணிக்கு மதாமும் அவள் தாயாரும் வெகு சம்பிரமத்துடனே புறப்பட்டுச் சந்தாசாயபு மகலுக் குப் போனார்கள். அவ்விடத்துக்குப் போனவுடனே இருபத் தொரு பீரங்கிப்போட்டார்கள். சந்தாசாயபு அவர்கள் மதா முக்குக் கொடுத்த வெகுமானம் சாமேவார் அங்கியும், ஒது சாதுராவும் கொடுத்தார்கள். அதை வாங்கிக்கொண்டு நாலைந்து நாழிகையிருந்து அனுப்புவித்துக்கொண்டு புறப்

பட்டுவந்துவிட்டாள். வரச்சே, இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். ராத்திரி எட்டு மணிக்குச் சந்தாசாயபு அவர்கள் வீட்டிலே யிருந்து மூன்று அண்டியிலே பிஞ்சி பண்ணினதும், பத்து தட்டிலே பழவகையும் மேளவாத்தியத்துடனே நபாபு இராசத்துகான் வீட்டுக்குக் கொண்டுபோகத் தக்கதாகப் புறப்படச்சே பதினைந்து பீரங்கிச் சுட்டார்கள். அதைக் கொண்டுபோய் இராசத்துகான் மகளிலே கொடுத்தார்கள். இன்றையதினம் நபாபு இராசத்துகான் அவர்கள் நமக்குச் சீதாகுதேதனுப்புவித்தார்கள்.

1747 ஆ டிசம்பர் மீ 27உக்கு பிரபவ ஞு மார்கழி மீ 16உ புதவாரம்.

இற்றைநாள் நபாபு இராசத்துகான் அவர்கள் சாயங்காலம் ஐந்து மணிக்குப் படேசாயபு அவர்கள் வீட்டுக்கு மாப்பிள்ளையும் அவர் பெண்சாதியும் (இரண்டு பேரும்) கலியாணம் பண்ணிக்கொண்ட சம்பிரமத்துக்கு யினவப்போனவிடத்திலே மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் இரண்டு சீரொப்பா கொடுத்தார்கள். அதை வாங்கிக்கொண்டனுப்புவித்துக்கொண்டு வந்தார்கள். ஆறு நாழிகை வேளைக்கு இராசத்துகானும் அவர் பெண்சாதியும் புறப்பட்டுச் சந்தாசாயபு வீட்டுக்குப் போய் இராத்திரிக்கு அவ்விடத்திலேதானே யிருந்தார்கள். இன்றைய தினம் சப்தா உசேன்கான் மகளும் அவர்கள் பிறகே கூடவந்த பேர்களும் பயணமாய்ப் புறப்பட்டுக் கலவைக்குப் போனார்கள்.

1747 ஆ நேசம்பர் மீ 28 உக்கு பிரபவ ஞு மார்கழி மீ 17 உ குருவாரம்

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: நபாபு இராசத்துகானவர்கள் கோட்டை பார்க்கவேணுமென்று சொல்லி அனுப்புவித்தபடியினாலே அப்படியே துரையவர்கள் உத்தாரம் கொடுத்து முசியே வேசாமையும் நம்மையும் கூடப்போய்க் காண்பிக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்தார். ஆகையினாலே முசியே வேசாமும் நாமும் இராசத்துகானை அழைக்கப்போன விடத்திலே முசியே வேசாமுக்கு மூன்று நகை வெகுமானம் கொடுத்தார். அதை அவர் வாங்கிக்கொண்டு நாலு மணிக்குக் கோட்டையைப் பார்க்கத்தக்கதாக இராசத்துகானும், சாதத்துபந்துகானும், மகம்மது அசுதுல்லாகானும், அபிதுல்லி

கானும், அயிதரல்லிகானும், மற்றுமுள்ள உறமுறையார் நாலத்திரண்டுபேரும்கூட அழைத்துக்கொண்டு கோட்டைக்குள்ளே போய்க் கோட்டையின் நாலு மூலையையும் காண்பித்தோம். அதன்பேரிலே மருந்து, குண்டுகள், பிரங்கிகள், துப்பாக்கிக் கிடங்குகள் இதுகளெல்லாம் பார்த்து மெத்தவும் சந்தோஷப்பட்டார்கள். அவ்விடத்திலே யிருந்து புறப்பட்டு ஒப்பித்தால் போய்ப் பார்த்து, அவ்விடத்திலேயிருந்து கடலோரத்துக்கு வந்து சமுத்திரமும் பார்த்துவிட்டு ஆறு மணிக்கு வீடுவந்து சேர்ந்தார். அவர்களை வீட்டிலே கொண்டுவந்து விட்டுவிட்டு வந்துவிட்டோம்.

*1747*-ஆ டிசம்பர் மீ *29*வ க்கு பிரபவ ஸு மார்கழி மீ 18 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: இன்றைய தினம் சாயங்காலம் மூன்று மணிக்கு மாயே சிப்பாய்கள், சொலுதாதுகள் எல்லாரையும் அழைப்பித்து இங்கிலீசுக்காரரும் பிரஞ்சுக்காரரும் சண்டைகொடுக்கிற பாவனையாக கோட்டைக்குக் கிழண்டையிலே வரிசைவைத்து மாயே சிப்பாய்கள் குதிரைக்காரரும், காடுது வெள்ளைக்காரரும் குதிரைகள் வரிசையாய் பவுஞ்சு பவுஞ்சாய் ஏற்பட்டு முஸ்தீதாய் இருந்துகொண்டு துரையவர்கள் இராசத்துகானையும், ரசா சாயபு, அல்லிநக்கிம் மற்றபேர் துலுக்கரெல்லாரையும் அழைத்துக்கொண்டுவரச்சொல்லி மனுஷரை அனுப்பிவிட்டு நாலு மணிக்குத் துரையவர்கள்போய் கோட்டையின்பேரிலே ஏறினார்கள்.

அப்படியிருக்கச்சே, ரசாசாயபும் அல்லிநக்கிசாயபும் முன்னே வந்து அவர்களும் கோட்டையின்பேரிலே ஏறி துரையவர்களண்டை போய் உட்கார்ந்தார்கள். அதன்பிறகு இராசத்துகானும், மகம்மது அசுதுல்லாவும், சாதத்து பந்துகானும், அயிதரல்லிகானும், மற்றுமுள்ள உறமுறையாருங்கூட ஐந்து மணிக்குக் கோட்டை வாசற்படியண்டை வந்தவுடனே வரிசைவைத்துத் தம்பூர் அடித்தார்கள். கோட்டைக்குள்ளே நபாபு பல்லக்கையும், மகம்மதுல்லா பல்லக்கையும், சாதத்து பந்துகான் பல்லக்கையும் உள்ளே விட்டார்கள். அவர்கள் வந்து கோட்டைக்குள்ளே இறங்கினவுடனே எதி

ராக முசியே பராதியும், முசியே மீராவும் வந்து கோட்டைமேலே அழைத்துக்கொண்டு போனார்கள். அவர்கள் எல்லோரும்போய் துரையவர்களண்டையிலே உட்கார்ந்தார்கள். அதன்பேரிலே மாயே சிப்பாய்களும், சொலுதாருகளும், குதிரைக்காரரும் பவுஞ்சுபவுஞ்சாய்ப் பிரிந்து ஒருத்தருக்கொருத்தர் எதிர்த்துச் சண்டைபோடுகிற பாவனையாய்க் குண்டு போடாமல் மருந்து மாத்திரம் போட்டு இரண்டு மூன்று வரிசை கொளுத்தினார்கள். இதற்குள்ளே நாலு பீரங்கி வைத்து ஒரு மினித்துக்கு இருபத்தொரு வேட்டு சுடுகிற பீரங்கியை ஓய்வில்லாமல் நாலு பக்கத்திலேயும் கொளுத்த, கோட்டையின்பேரிலே யிருந்து பெரிய பீரங்கியை ஐந்தாறு கொளுத்த, திக்குமுக்காடி பிரமித்துப் போய்ப் பார்த்துக்கொண்டிருந்து, இந்தப் பீரங்கிச் சுடுகிற அதிசயத்தைப் பார்த்து ஆச்சரியப்பட்டு வெகு தாரிப்புபண்ணினார்கள். அதன் பிறகு தென்னண்டை கொத்தளத்திலே வைத்திருக்கிற குந்தாணி பீரங்கியிலேயும், வடவண்டை கொத்தளத்திலேயும் இருக்கிற குந்தாணி பீரங்கியிலேயும், குண்டுபோட்டு இரண்டு பீரங்கிச் சுட்டார்கள். இதற்குள்ளே ஆறு மணி அடித்து அந்தமட்டிலே வேடிக்கையெல்லாம் பார்த்து, துரையவர்கள் கையிலே உத்தரவு வாங்கிக்கொண்டு, அவரவர் விடுதிக்குப் போய்விட்டார்கள்.

இன்றையதினம் மூன்று மணிக்கு நபாபு பிறகே வந்த பெண்டுகளெல்லாரும் ஏழெட்டு ரதத்தின்பேரிலே ஏறிக்கொண்டு சமுத்திரம் பார்க்கிறதற்குப் போய் வேடிக்கைப் பார்த்து நாலரை மணிக்கு வீட்டுக்குப் போய்விட்டார்கள்.

இற்றைநாள் மத்தியானம் மூன்று மணிக்கு இராசத்துகான் சந்தாசாயபு வீட்டிலேயிருந்து புறப்பட்டு மமுது அசுதுல்லா வீட்டுக்குப் போய் அந்த விடமெல்லாம் பார்த்து அங்கே இரண்டு நாழிகையிருந்து மறுபடியும் தம்முடைய விடுதிக்கு வந்து சேர்ந்தார்.

*1747* ஆ டிசம்பர் மீ *30*உக்கு பிரபவ ஞு மார்கழி மீ *19*உ சனிவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி: இராசத்துகானவர்கள் மதாம் அவர்களுக்கு பதக்கம் 1-க்கு வராகன்......

சரிகைப் புடவை 4.

இன்காப்பு 1-ம் வெகுமானம் கொடுத்தனுப்பு வித்தார். மகம்மது அசுதுல்லாகானவர்கள் துரையவர்களுக்கு ஐந்து நகை, புடவைகள் அனுப்பினார்கள். நபாபு இராசத்து கானவர்கள் சாத்துக்கடைக்குப் போகத்தக்கதாகத் துரையவர்கள் பேட்டிக்கு மூன்று மணிக்கு வந்தார்கள். துரையவர்கள் வீட்டுக்கு வந்து நுழைந்து பேட்டியானவுடனே பதினைந்து பிரங்கிப் போட்டார்கள். அவருக்குத் துரை கொடுத்த வெகுமானம்.

| | |
|---|---|
| சகலாத்துச் சிப்பம் | 6. |
| செகப்பு இரண்டு வர்ண சகலாத்துச் சிப்பம் | 1. |

முகமல் பொன்பூபோட்ட சுருட்டி கிசம்......................., சூர்கத்தி......... ........, ஆகுதுங்கிரி......................, கண்ணுடி ......................கும்புகு, வத்திவைக்கிற வீதர்......................,

மகமது அசுதுல்லாவுக்கு:

| | |
|---|---|
| சகலாத்துச்சிப்பம் | 2 |
| கண்ணுடி | 2 |
| மெழுகுவத்தி வைக்கிற வீதர் | 1 |

அயிதால்லிகானுக்கு:

| | |
|---|---|
| சகலாத்துச் சிப்பம் | 2 |

கிருஷ்ணஜிபண்டிதருக்கு:

| | |
|---|---|
| சகலாத்துச் சிப்பம் | 1 |
| லாலா முன்ஷிக்கு சகலாத்து கிசம் | 1 |
| வேங்கட்டராவுக்கு: சகலாத்து கிசம் | 1 |
| ஆசாரியவர்களுக்கு: சகலாத்து கிசம் | 1 |

இந்தப்படியாக அவரவருக்கு வெகுமானம் கொடுத்த பிறகு நபாபு அவர்கள் துரையவர்களை மனுவாய்க் கேட்டுக் கொண்டது. வீராநாயக்கன் மகன் குண்டுக்கு வெளியிலே இருந்தபடியினாலே அவனை ஊருக்குள்ளே வந்திருக்கத் தக்கதாக மனுவாய்க் கேட்டுக்கொண்டபடியினாலே துரையவர்கள் அப்படியே உத்தாரம் கொடுத்தார்கள். அந்த மட்டிலே துரையவர்கள் கையிலே அனுப்புவித்துக்கொண்டு தம்முடைய விடுதிக்குப்போய் அங்கேயிருந்து சந்தாசாயபு மகனுக்கு வந்து, பகலுக்கு மேலாகச் சாப்பிட்டார்கள். அந்தமட்டிலே

நம்முடைய வீட்டுக்கு வரவேணுமென்று நாம் சொல்லி அனுப்புவித்தபடியினாலே அப்படியே வருகிறோமென்று சொல்லி யனுப்புவித்தார். அப்படியே அவர் ஐந்து மணிக்குப் பயணம் புறப்பட்டுப் போகச்சே இராசத்துகான் நம்முடைய வீட்டுக்கு வந்தார். அவருக்கு நாம் கொடுத்தது சகலாத்துச் சிப்பம் 2

| | | |
|---|---|---|
| அயிதரல்லிகானுக்கு | ,, | 2 |
| மகம்மது அசுதுல்லாவுக்கு | ,, | 2 |
| சாதத்து பந்துகான் | ,, | 2 |
| லாலாவுக்கு | ,, | 2 |
| படேசாயபுக்கு | ,, | 2 |
| கிஷ்ணசிபண்டிதருக்கு | ,, | 2 |
| வெங்கட்டராவுக்கு | ,, | 2 |

இந்தப்படிக்கு நம்முடைய வளவிலே வெகுமானம் வாங்கிக் கொண்டு அவர் பெண்சாதியையும் அழைத்துக்கொண்டு வெளியே புறப்பட்டு ஊருக்குப் போகத்தக்கதாகப் போகச்சே கெவுனிவாசலிலே பதினைந்து பீரங்கிப் போட்டார்கள். நாமும் கூடத்தானே கெவுனி மட்டுக்கும் போய் வழிவிட்டனுப்பு வித்துக்கொண்டு வந்துவிட்டோம். சொலுதாதுகளுக்கு இரு பது ரூபாயும், சேவகருக்குப் பத்து ரூபாயும் இனம் கொடுத்து விட்டுப் போய்விட்டார்கள்.

இற்றைநாள் காலத்காலே இராசத்துகான் மாப்பிள்ளை, முசத்தி வெங்கட்டராயன் என்கிறவர் வந்து நபா அவர்கள் சொல்லச் சொன்னார்களென்றும், பையம்பாடி சீனிவாசாச் சாரியார் கூடவிருந்தாரென்றும் அவருடன் வந்து சொன்ன சேதி: நபா இராசத்துகானவர்கள் முன் சென்னப்பட்டணத் திலே ஒரு வீடு வாங்கி அதிலே பத்துபேர் கொல்லர், ஒரு அலுக் கன் கூட இருந்தார்கள். கொஞ்சம் ஆஸ்தியும் இருந்தது. போன வருஷம் சென்னப்பட்டணத்துக் கலாபம் ஆரம்பித்தாப்போலே அதையெடுப்பித்துப் போய் கலவையிலே சேர்த்துவைத்தோம். இப்போது அதை இந்த ஊரிலே ஒரு வீடு பெரியதாய் வாங்கி, அதிலே கொண்டுவந்து வைக்கிறதாய் யோசனைபண்ணியிருக் கிறது. அந்தப்படிக்கு உங்கள் காத்திரம் அறிந்துவரச் சொன்னார் என்று சொன்னார். மெத்த உத்தமமாச்சுதென்று

சொல்லி, குவர்னதோர் பெண்சாதிக்கு ங்கள் சரிகைப்புடவை கொடுக்கிறது நல்ல வஸ்திரமாய்க் கொடுக்கவேணும். இதல்லாமல் ஐந்நூறு ரூபாயிலே ஒரு பதக்கமாகிலும் அல்லது ஒரு நகையாகிலும் கொடுக்கவேணுமென்றார். சொலுதாதுகளுக்கு ஐந்நூறு ரூபாய்க் கொடுக்கிறது உத்தமம். அல்லாத பக்ஷத்துக்கு முன்னூறு ரூபாய் கொடுத்தத்திரவேணும். அந்தப்படிக் குக் கொடாவிட்டால் உங்கள் பெரியதனத்துக்கும் நீங்களிவ் விடத்திலே வந்து கலியாணம் பண்ணுகிறதற்கும் இவ்விடத்துப் பிரபுவும் மரியாதைகள் நடப்பித்ததற்கும் இன்றைய தினம் நீங்களிவ்விடத்துக்குச் சேர்ந்து அனுப்புவித்துக் கொள்ளவேணுமே! அப்போது உங்களுக்கு மரியாதை நடக்க வேணுமே! அதுவும் வெகுமதியாகத்தானே நடப்பித்துப்போடு கிறேன். இந்தப்படி நடப்பியாவிட்டால் உங்கள் மேன்பாட்டுக்கு வெகு அப்பிரதிஷ்டை. நாங்கள் சவுக்கார் மாமூலாயிருக்கிறவர்களுக்கு விஷயமல்லவே. நீங்கள் நபாபுகிரிபண்ணுகிற உங்களுக்குப் பெரியதாவென்று சொன்னதுமல்லாமல் முப்பதினாயிரம் நாற்பதினாயிரம் ரூபாய் கலியாணச்செலவு பண்ணுகிற உங்களுக்கு ஐந்நூறு ரூபாயும், ஆயிரம் ரூபாயும் ஒரு விஷயமல்ல. இவ்வளவு செய்தால் ரொம்ப சோபிக்கும். இவ்வளவு செய்யாமற்போனால் ரொம்ப அசோகமாயிருக்கும் என்று சொன்னவிடத்திலே மெய்தானென்று ஒத்துக்கொண்டு அது நபாபவர்கள் திருஷ்டிக்கு இதெவ்வளவு பெரிய காரியமென்று நீங்களித்தனையாய்ச் சொல்லுகிறீர்களென்று சொல்லி நபா அவர்களுக்கு எச்சரித்து, சீனிவாசாச்சாரியாருடனே சொல்லி அனுப்புவிக்கிறேன் என்று சொல்லிவிட்டுப் போகச்சொன்னார். அப்போது நபா அவர்கள் உங்கள் பேரிலே பிரீதியாயிருக்கிறார்கள். வன்னிப்பேட்டு நூறு வராகனுக்குச் சோத்திரியம்பண்ணிக் கொடுப்பிக்கிறேனென்று சொல்லி அனுப்புவித்துக்கொள்ளச்சே அவர் இருபது ரூபாய்சாலுவைதான் கொண்டுவந்து கொடுத்தாரே! பின்னையும் நானாவிதமாகவும் காரியமிருக்குதே என்று யோசனை பண்ணி இருபது வராகனெடையுள்ள மணிலா சரப்பளி ஒன்று கொடுத்துப் பாக்குவெற்றிலையும் கொடுத்து அனுப்புவித்தேன். இதல்லாமல் இரண்டு மார்க்கமாய்க் குத்தகை நேராய் வாங்கித்தாரேன் என்று சொல்லிவிட்டுப் போனார். அப்பால், இராசத்துகான் அண்டைக்குப் போய்ச் சொன்ன விடத்திலே அவர் சம்மதித்தாரென்று பையம்பாடி சீனிவா

சாச்சாரியாருடனே சொல்லியனுப்ப, அவரதைப் பருமை கூர்மையாய் பின்னேயும் சற்றே விஸ்தரித்துச் சொல்லி ஒரு பதக்கம் ஐந்நூறு ரூபாயிலே அழைப்பித்து வையுங்கோள். சரிகைப் புடவை நாங்கள் வரச்சே கொண்டுவருகிறோமென்று மாப்பிள்ளை சொன்னதாக ஆச்சாரியார் வந்து சொன்னார். அப்பால், நான் பாக்குக் கிடங்குக்குப் போய் மதனாந்தபண்டிதரை அழைப்பித்து மதாம் துய்ப்ளேய்க்ஸ் அண்டைக்குப் போய் உனக்கு வருகிற வெகுமானத்துக்கு பதக்கம் ஒன்றும், ஐந்நூறு ரூபாயிலே சம்பாதிக்கச் சொல்லி, அவர்கள் ரூபாய் கொடுக்கிறோமென்று சொன்னார்கள்.

அசலிலே வாங்குவோமென்றால் நூறு ரூபாய் உடைமை நூற்றிப் பத்தாயிருக்கும். ஆனபடியினாலே நீங்கள் ஒரு உடைமை கொடுத்தால் அந்த உடைமையை உனக்கு வெகுமானம் சரிகைப்புடவையுடனே கொண்டுவந்து கொடுத்துவிடுகிறோமென்று சொல்லி, ஒரு நகை வாங்கிவாருமென்று சொல்லி அனுப்பினதற்கும் மதனாந்தபண்டிதன் போய்ச் சொன்னதற்கு அவள் நீ இராசத்துகானண்டைக்குப் போய்ச் சொல்லுகிறதென்னவென்றால் நாங்கள் பணத்துக்கு ஆசைப் பட்டிருக்கவில்லை. எங்களுக்கு உங்கள் வெகுமானமும் நவையில்லை. உங்கள் சினேகம் இருந்தால் போதும். எவர்கள் மத்தியே பேசினார்களோ அதுபொய். நீர் அனுப்புவித்துக்கொள்ள வந்தால் நாமுமக்கு வெகுமானம் பண்ணியனுப்புவிக்கிறோமென்று சொல்லி, வாவென்று சொல்லி, அப்பால் இந்தப் பேச்சுப்படியே சொல்லி, வராவிட்டால் உன்னைக் காதறுப்பேனென்றும், உங்கள் தகப்பன், குரு, வேதம் இதுகளின்பேரிலே ஆணையென்று சொல்லியனுப்புவித்தாள். அதைக் கேட்டுக் கொண்டு மதனாந்தபண்டிதன். ... ... ... ... ... ... ...

1748 ஆ சனவரி மீ 1 உக்த பிரபவ ஹ மார்கழி மீ 21 உ திங்கட்கிழமை.

சம்பா பச்சை அரிசி விலை கரிசை 1-க்கு வராகன் $84\frac{1}{8}$ விற்கிற விலை 94

| | | | | |
|---|---|---|---|---|
| சம்பா புழுங்கலரிசி | ,, | ,, | ,, | 83 பணம் $\frac{1}{8}$ |
| காரரிசி புழுங்கல் | ,, | ,, | ,, | $71\frac{1}{8}$ |
| சம்பா நெல் | ,, | ,, | ,, | 41 பணம் 16 |

| | | | | |
|---|---|---|---|---|
| கார் நெல் | விலை கரிசை 1-க்கு வராகன் 35¾ | | | |
| சோளம் | " | " | " | 41 பணம் 16 |
| கேழ்வரகு | " | " | " | 45 " 11 |
| வரகு | " | " | " | 26 |

லாவணம் தேவனும்பட்டணம் சமாசாரம் விசாரிக்க அரியாங்குப்பத்து முத்து சேருவைக்காரனுக்குப் பத்து பேரை லாவணம் எழுதிக்கொள்ளச் சொன்னேன். சனம் 1க்கு பணம் 1½ ஆக, மாதம் 1-க்கு ரூபாய் 4 பணம் 5 ஆக, முத்து சேருவைக்காரனுக்கு ரூபாய் பத்தாக உடம்படிக்கைப் பண்ணியனுப்பினது.

இற்றைநாள் காலத்தாலே சனவரிபண்டிகையானபடியினாலே ஸ்ரீ குவர்னதோர் அவர்கள் சமுகத்துக்குப் போய் பொம்பளிமாஸ் கொடுத்துச் சந்தித்து, புது வருஷம், புது மாதம் புதுப்பண்டிகை உமக்குச் சகல ஆரோக்கியமும், சிரஞ்சீவியும், இன்னும் சகல விஷயங்களும் கொடுக்கத்தக்கதாகவும். உம்முடைய மனதிலே எண்ணியிருக்கிறபடிக்குச் சுவாமி முடிப்பாராகவும் என்றும், பின்னையும் எனக்குத் தோன்றின மட்டுக்கும் உபசாரம் சொன்னதற்கு முகமலர்ந்து நகைத்தவாக்கிலே என என்றபடிக்குத் தயவுபண்ணவேணுமென்று முகத்தைப் பார்த்துச் சொன்னார். அதற்கு நான் சொன்னது: சுவாமி உம்முடைய ஸ்வரூபம் பண்ணுகிற போதேதானே நீ நினைக்கிறபடிக்கு உனக்குச் சஹாவராயிருந்து முடிப்பேனென்று வாக்குத்தத்தம் பண்ணினபடிக்குத்தான் இப்போது நடத்திக்கொண்டு வருகிறார் என்று சொன்னேன். அதற்கு, பியேன் ஒபிலிசெ புறவொரு கெருபோனகோர் என்று சொல்லிவிட்டு, அப்பால் மெனவ வந்தவர்களை உபசாரம் சொல்லுகிறவர்களுக்கு உத்தாரம் சொல்லிக்கொண்டு அப்பாலே போனார். பிறகு நான், மதாம் துய்ப்ளேய்க்ஸ் கோவிலிலே இருந்து பூசைகேட்டு வந்ததிலிருந்து அவளுக்கும் உபசாரம் சொல்லி, எலுமிச்சம்பழம் கொடுத்துவிட்டு, அவ்விடம் விட்டு அப்பால் கோன்சேல்காரர் முதலான வெள்ளைக்காரர் வீட்டுக்குச் சின்ன முதலியையக் கூட அழைத்துக்கொண்டு, வெள்ளைக்காரர் தெருக்களில் மெனவுகிறபோது இதிலே குவர்னதோர் அழைக்கிறார் என்று சேவகன் வந்து அழைத்தான். போனவிடத்

திலே, ரங்கப்பிள்ளை தேவனும்பட்டணம் சண்டை யாத்திரைக்கு சரன சரன பண்ணச் சொல்லச் சொல்லி யிருக்கிறது; மறந்துபோகப் போகிருய். எருதுகள் மூஸ்தீது பண்ணுவித்தாயா வென்று கேட்டார். மூஸ்தீதாகி இருக்கிற தென்று சொன்னேன். நல்லதாகுதென்று சொல்லி அல்லிநக்கி சாயபுக்கு வெகுமானம்பண்ணவேணுமென்று அவர் அனுப்பு வித்துக்கொள்ள வருகிருரென்று சொல்லியிருந்தாயே என்ன வென்று கேட்டார். நாளையதினம் பிறை காணுகிற தினம். பிறை கண்டால் பிறலு பண்டிகை மாதம். எங்களுக்குள்ளே துக்கமாதமானபடியினலே இல்றையதினம் உங்கள் கையிலே அனுப்புவித்துக்கொண்டு பயணம் புறப்பட்டு நாளைய சாயங் காலம் வந்தவாசி சேரவேணுமென்று சொன்ஞனென்று சொன்னதற்கு, இப்போதுதானே அழைப்பி என்று சொன்னர். இப்போது பத்தரை மணி வேளையாச்சுது, அவன் உங்களுக்குச் சிரொப்பா அனுப்பவேணுமென்றிருக்கிருன். இவ்விடத்திலே வெகுமானமும் முஸ்தீதாகவேணுமென்று சொல்லி, சந்தா சாயபு மகனும் வந்தவாசிக்குப் போகிறதாக இருக்கிருரென்று சொல்லி, நீங்கள் மூன்று மணிக்கு விஜித்துக்குப் போய் ஆறு மணிக்கு வருகிற வேளைக்கு அவரையும் அழைத்துவருகிறேன் என்று சொல்லி அல்லிநக்கி சாயபுக்குப் பதுவேங்கு பீரங்கிப் போடவேணும். அப்பால், அவா ஊருக்குப் போகிறபோது வழுதாவூர் வாசற்படியிலே பதினேந்து பீரங்கிப் போடவேணு மென்று கேட்டதற்கு அப்படியே உத்தரவு கொடுக்கிருே மென்று சொன்ஞர். அதன்பிற்பாடு நான் அனுப்புவித்துக் கொண்டு வெள்ளைக்காரருடைய தெருவுக்கு மெனவப் போய் அங்கே என் மிமித்தியம் காத்துக்கொண்டிருந்த தானப்பமுதலி யார் முதலானவர்களையும் கூடக் கூட்டிக்கொண்டு வெள்ளைக் காரர் வீட்டிற்குப் போய், அங்கேயிருந்து சம்பா கோவிலுக் குப் போய், அங்கேயிருந்து சின்ன துரை வீட்டிற்குப் போய், அங்கேயிருந்து நம்முடைய கிடங்குக்கும் போயிருந்து, சின்ன முதலியார் மற்றுமுள்ள பேரை மிஸியோனேர் கோவிலுக்குப் போகச்சொல்லிவிட்டு அல்லிநக்கி சாயபு அனுப்புவித்த நடு நாயகம் கெம்புக்கல் வைத்துக் கல்விழைத்த துருவும், முழுக வச்சிரம் வைத்து நடுநாயகம் ஓலாந்தா கமலம் வைத்திருக்கிற சிரபேஸ்தரும் ஆக இரண்டு நகையும் அதனுடைய உடல் ஒரு விடிபச்சையும் அனுப்பி இதை வைத்துக்கொள்ளவேணுமானல் வச்சிரம் பதித்த சிர்பேஸ்தரை அனுப்புவிக்கிறது. வச்சிரம்

பதித்த சீர்பேஸ்தரை வைத்துக்கொள்ளுகிறதானால் பச்சையை அனுப்பிவிடுகிறதென்று சொல்லி அனுப்பியதன்பேரிலே வச்சிர சீர்பேஸ்த்ரு விலை இருநூற்றைம்பது வராகன், பாத்தா பச்சை நூற்றியைம்பது பார்த்தார்கள். துருய் எழுபது பார்த்தார்கள். ஆனபடியினாலே பச்சையை அனுப்பிவிட்டு வச்சிரம் இழைத்த சீர்பேஸ்த்ராவையும் வைத்துக்கொண்டு சீரொப்பா நூற்றைம்பது ரூபாய் பெறும். மதாமுக்கு ஒரு சரிகை ஒகிணியும், சரிகைச் சாமெவாரும் பாயசாமாவுக்குக் கொண்டுனுகூட இருநூறு ரூபாய் பெறும். மிரயனுயத்துல்லா, துரைக்கு ஒரு சீரொப்பா இருநூறு ரூபாய் பெறும். இந்தப்படி அனுப்பினதை மூன்று மணிக்குக் கொண்டுபோய் துரைக்குக் கொடுத்து அப்பால் அல்லிநக்கி சாயபுக்கு வெகுமானம் கொடுக்கிறதற்கு லீஸ்து எழுதினது :

| | |
|---|---|
| சகலாத்துச் செகப்புச் சிப்பம் | 3 |
| பச்சை உகமல் கெசம் | 20 |
| இரண்டு வர்ண சகலாத்துச் சிப்பம் 2-க்கு கெசம் | 40 |
| இரண்டு ஜோடு பாதம் வைத்த வீதர் | |
| மெழுகுதிரி வைக்கிற இரண்டு ஜோடு, உயரக் கட்டித் தூக்குகிறது | |
| கத்திரி சால் | |
| ஆகுதுங்கிரி சம்பரெல மெவிசிய | |
| பெரிய கண்ணுடி 3-க்கு வராகன் 10 பெறும் | |
| ஒவ்வொன்று மிரிகாயத்துல்லாவுக்கு | |
| சகலாத்துச் சிப்டம் | 2 |
| மொகமல் கெசம் | 8 |
| வீதர் ஜோடு | 1 |
| பாதம்வைத்த மெழுகுதிரி வைக்கிறது தூக்குகிறது ஜோடு | 1 |
| ஆகுதுங்கிரி சின்ன கண்ணுடி | 2 |

இந்தப்படி எழுதுவித்து, துரை கையெழுத்து வாங்கி முஸ்தீதுபண்ணுவித்து, ஆறு மணிக்குள்ளே இதுகளெல்லாம் அழைப்பித்து முஸ்தீதுபண்ணுவித்து, துரை மெனவிவிட்டு வந்தவுடனே துரைக்குச் சொல்லி அல்லிநக்கி சாயபுவையும்

பாபனுய்த்துல்லா சாயபுவையும் அழைப்பித்து அவர்கள் வாசற்படியிலே வந்து பல்லக்கு இறங்கினவுடனே முசியே புரத்தும், முசியே காசாமும், இரண்டுபேரும் வந்து எதிர்கொண்டு அழைக்க, துரையவர்கள் சாந்தினேர் காக்கிறவிடத்துக்கு வந்து கட்டிக்கொண்டு உள்ளே அழைத்துப்போக, அப்பால் உட்கார்ந்தவுடனே பதினைந்து பிரங்கிச் சுட்டார்கள். அப்பால் ஒருத்தருக்கொருத்தர் சகல பிரச்னை ஆனபிற்பாடு சபிதல்லிகான் பிள்ளை தாரிபு துரை கேட்க, அதன்பேரிலே பிள்ளையாண்டான், புத்திசாலி என்றும் ஒருத்தருக்கொருத்தர் மன்ருடிக் கொடுப்பாரென்று பெரிய மனுஷர் தாரதம்மியம் அறிந்து உத்தரவு சொல்லுவாரென்றும், கொஞ்ச நாளைக்குள்ளே இவ்விடத்துக்கு வந்து உங்கள் பேட்டிபண்ணுவித்துக்கொள்ளுவாரென்றும் சொன்னர்.

இற்றைநாள் மத்தியானம் இரண்டு மணிக்கு திவான் சாயபு அவர்களும் அக்பர் சாயபு மகளும் இங்கேயிருந்து வேலூருக்குப் பயணமாய்ப் போய்விட்டார்கள்.

இன்றையதினம் மூன்று மணிக்கு அல்லிநக்கி சாயபு அவர்கள் துரையவர்களுக்குச் சிரோப்பாவும் கல்விழைத்த துருவும் அனுப்பினார்கள்.

அம்மாளவர்களுக்குச் சரிகைப்புடவையும், மூன்று நகையும், சரிகை கின்னரு இரண்டும் அல்லிநக்கி அனுப்பினர்.

பிரசானதுல்லா அவர்களுக்கு சிரோப்பா அனுப்பினர்.

அல்லிநக்கி சாயபு அவர்கள் வந்தவாசிக்குப் போகத்தக்கதாக துரையவர்கள் கையிலே அனுப்புவித்துக்கொள்ள வந்தார். வந்து துரை பேட்டியானவுடனே பதினைந்து பிரங்கிப் போட்டார்கள். அப்பால் துரையவர்கள் அல்லிநக்கிக்குக் கொடுத்த வெகுமானம்.

| | |
|---|---|
| சகலாத்துச் சிப்பம்... ... ... ... ... ... | 2 |
| வர்ண சகலாத்துச் சிப்பம்... ... ... ... ... | 2 |
| மெழுகுவத்தி வைக்கிற வீதர்... ... ... ... | 2 |
| குர்கத்தி......கண்ணுடி ... ... ... ... ... | 3 |
| ஆகுதுங்கிரி கருசா ... ... ... ... ... | |

மிசாதுல்லாவுக்குச் சகலாத்துச் சிப்பம் ... ...
கண்ணாடி ... ... ... ... ... ... ... ...

இந்தப்படிக்கு வெகுமானம் வாங்கிக்கொண்டு ஊருக்குப் போகிறோமென்று செலவு பெற்றுக்கொண்டு, அனுப்புவித்துக் கொண்டு அவர் வீட்டிற்குப் போனார்கள்.

1748 ஆ சனவரி மீ 2உக்கு பிரபவ ஞு மார்கழி மீ 22உ மங்களவாரம்.

இற்றைநாள் தக்கேசாயபு அவர்கள் மகளும், அவருடைய குமாரன் அல்லிநக்கி சாயபும் காலமே எட்டு மணிக்குப் பயணம் புறப்பட்டு வந்தவாசிக்குப் போகிறதற்காகப் போகச்சே கெவுனியிலே பதினைந்து பீரங்கிப் போடச்சொல்லி துரையவர்கள் உத்தரவு கொடுத்திருந்தபடியினாலே சேவகன் போய் கெவுனியிலே எச்சரித்துவிடத்திலே, பீரங்கியெல்லாம் குண்டுபோட்டுக் கெட்டித்திருக்கிறதினாலே சுடப்போகாது என்று சொல்லி அனுப்பிவிட்டார்கள். இவ்விடத்திலேயிருந்து மறு உத்தரவு பெறுகிறதற்குள்ளே அல்லிநக்கி சாயபும், அவர் தாயாரும், ரசா சாயபும் பயணம் புறப்பட்டு வந்தவாசிக்குப் போய்விட்டார்கள். பீரங்கிச் சுடாமல் நின்றுபோன சங்கதி கட்டுமின்னதினாலேயென்று அவருக்குத் தெரியாதபடியினாலே அல்லிநக்கி சாயபுக்கு மனதிலே குறையாயிருக்கப்போகுதென் கிறதாய் இந்த வயணம் அவருக்குத் தெரிய எழுதியனுப்பி னோம். அல்லிநக்கி சாயபு பயணம் போகிறபோது மதாமும் மதனந்தபண்டிதரும் அவர் வீட்டிற்குப் போயிருந்த விடத் திலே நமக்கு ஒரு சீரொப்பாவும், மதனந்தபண்டிதருக்கு ஒரு கட்டாரியும் வெகுமானம் கொடுத்தார்.

1748 ஆ சனவரி மீ 7உக்கு பிரபவ ஞு மார்கழி மீ 27உ ஆதிவாரம் ரேவதி நக்ஷத்திரம் அஸ்த அஷ்டமா.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டிற்குப் போனவிடத்திலே துரையவர்கள் தேவனாம்பட்டணத்துச் சண்டைக்குப் போகிற மூஸ்தீதுக்குக் கடைகள், பத்துப் பன்னிரண்டு மூஸ்தீது பண்ணுவிக்கவேணுமென்றும் குதிரை கள் இருபது முப்பது இனம்பண்ணிக் கொடுக்கவேணுமென் றும், குதிரை பெச்சு பட்டணத்திலே இருக்கிறதிலே ஒன்றும்,

வெளியே போகத்தக்கதில்லை என்றும் சொன்னார். இதல்லாமல் மகாநாட்டார் சந்திப்பு பண்ணுவிக்கிறதெப்போ வென்றும் கேட்டார். பதினொரு மணிக்கு என்று சொன்னேன். அப்பால், டங்காசாலையார், மகாநாட்டார், சேஷாசலசெட்டியார் இவர்க ளெல்லாரும் வந்து பாக்குக்கிடங்குக்கண்டையிலே கூடி, அவ் விடத்திலேயிருந்து மேள தாளத்துடனே போய் துரையவர்களை பேட்டிபண்ணுவித்து, கும்பினீர் வர்த்தகர் கொண்டுவந்த நாலு பணமும் மதாமுக்குக் கொடுப்பித்து, டங்காசாலையார் கொண்டுவந்த ஒரு சுருட்டியும் கொண்டுபோய் மதாமுக்குக் கொடுத்துப் பேட்டிபண்ணுவித்து, அவ்விடத்திலே யிருந்து மேலே எழுதப்பட்ட மகாநாட்டுக்கும், சலுஆ வெங்கடாசல செட்டியும் கூட சின்னதுரை வீட்டிற்குப் போய் பேட்டி பண்ணுவித்து, அங்கேயிருந்து மகாநாட்டார், வர்த்தகர், மற்றுமுண்டானவர்கள் கூட மேளதாளத்துடனே, நட்டு முட்டுக்காரர், நாடகசாலைகள் சமஸ்தமான பேரும் சந்திப்புச் சம்பிரமத்துடனே கூட நம்முடைய வீட்டிற்கு வந்த பேருக் கெல்லாம் பாக்கு வெற்றிலை கொடுத்து அனுப்புவித்துவிட்டு, அப்பால் ஸ்நானம் பண்ணவும் சாப்பிடவும் மூன்று மணி அடித்தது. அப்பால் நித்திரைபண்ணி எழுந்திருக்கிற வேளை யிலே சாயங்காலமான ஆறு மணியாச்சுது. அப்போது திருவேங் கடப்பிள்ளையவர்கள் மருமகள் மங்கத்தா வயிறு நொந்து படுகிறாளென்று வந்து சொன்னார்கள். இதிலே தேவனாம்பட் டணம் கோட்டை ஊர்வழி மார்க்கமிதெல்லாம் எழுதியிருக் கிற படத்தை அறை வீட்டிலே யிருந்துபார்த்துக்கொண்டிருக் கச்சே அழகப்பிள்ளை வந்து தண்டுபிறகே போகிற கடைக் காரருக்குப் பரசுராமப்பிள்ளையுடனே சொல்விப் பேருக்கு நூறு ரூபாய் விழுக்காடு கொடுக்கவேணுமென்று சொன்ன தற்குப் பரசுராமப்பிள்ளையை அழைப்பித்து அந்தப்படிக்குக் கொடுக்கச் சொல்லி உத்தாரம் கொடுத்து அதன்பேரிலே துரையவர்கள் சொன்னது: சொலுதாதுகளுக்கு நாள் ஒன்றுக்கு இவ்வளவு மோசுறு என்று தீர்ந்துகொண்டு, அப்பால் சொலு தாதுகளுக்கு அந்தந்த வேளைக்குத் தாமதமில்லாமல் தீனி சாமான் கொடுக்கச்சொல்லித் திட்டம்பண்ணச் சொன்னீரே, அந்தப்படிக்கு நீர் ஏற்றுக்கொண்டு நடத்தவேணுமென்று சொன்னதற்கு யோசனைபண்ணிக்கொண்டு வருகிறேனென்று சொன்னீரே அதற்கு என்ன சொல்லுகிறீரென்று கேட்ட

தற்கு, அப்படி என்னுலேநிருவாகத்துக்குவராதென்று சொல்ல வந்தார். அப்படி உம்மாலே நிருவாகத்துக்கு வராதென்று சொன்னுல் அதற்கேத்தபேரை நேமிக்கவேண்டியிருக்குமே! என்னத்திற்கு, நீங்கள் எப்படிசொன்னுலும் அப்படி கேட் கிறேன். இந்தக் காரியத்துக்குமாத்திரம் எந்த விதமாலுைம் தெரியப்படச்சொல்லி இப்போது முசியே நெப்ரோனை நேமித் திருக்கிறது. இந்தக் காரியங்களை விசாரிக்கிறதற்கு அவருடனே கூடவிருந்து தாட்சியில்லாமல் நிருவாகம் பண்ணுகிறேனே யல்லாமல் மோசுரு பண்ணிக்கொள்ளமாட்டேனென்று சொல்லி விட்டுப் போனுர். அப்பால் அழகப்ப முதலியார் பேசியிருக் கச்சே எழுதித்து எட்டு ஒன்பது மினுய்த்து வேளை. அப்போது நான் எழுதிக்கொண்டிருக்கிற கபினேத்திலே இருக்கச்சே, ராமநாதமுதலி, ஞாதி குமாரப்பமுதலி மகன் வெங்கடாசலம் வந்து ஆண்பிள்ளை பிறந்ததென்று சொன்னுன். அப்போது லக்னம், கடகலக்னம். அதன்பேரிலே சுப்பம்மாள் போய் குண்டூர் வர்லிசெட்டியுடனே சொன்னதற்கு அந்தம்மாளுக்கு ஒரு வராகன் சேலை வெகுமானம் பண்ணினுர். வேங்கடகிருஷ் ணையங்கார் போய் அருணுசலசெட்டியுடனே சொன்னதற்கு ஒரு வராகன் பாகைக்கொடுத்தார். எம்பெருமாள்பிள்ளையண் டைக்குப் போய்ச் சொன்ன பிராமணனுக்கு ஐந்தாறு வராகன் பெத்தபட்டுச் சாலுவை ஒன்று கொடுத்தார். இந்தப்படி அவ ரவர் பட்டணத்திலே உண்டான பேரெல்லாரும் சம்பிரமமாய்த் தானே, பண்டிகைபோலே கொண்டாடினுர்கள். என்னண் டைக்குக் கும்பினீர் வர்த்தகர் மேளதாளத்துடனே சர்க்கரை வழங்கிக்கொண்டே வந்து கண்டார்கள். சின்ன பரசுராமப் பிள்ளை கேட்டவுடனே சர்க்கரை வழங்கினுர். பின்னையும் ஊரிலே உண்டான வர்த்தகர், பெரிய மனுஷர், சமஸ்தமான பேரும் வந்து கண்டார்கள் அதன்பேரிலே நானும் ஸ்நானம் பண்ணி அரை கரிசை நெல்லுவிதை வழங்கினதுமல்லாமல் ஐம்பது வராகன் பணமும், அறுபது எழுபது ரூபாயும் பிரா மணுள் முதல், தாசிகள், மற்றுமுண்டான பேர்களுக்கெல்லாம் கொடுத்து விரயம்பண்ணி, பாக்கு வெற்றிலையும் கொடுத்து அவரவர் சந்தோஷமாய் வளவுக்குப் போனுர்கள். பட்டணத் திலே உண்டான சனங்களெல்லாம் என் பேரிலே பரிபூரண மான கடாக்ஷமானபடியினுலே அவரவர் வளவிலே புத்திர சந் தோஷமுண்டானுல் எப்படி சந்தோஷமோ அந்தச் சந்தோஷத்

தைப்பார்க்கிலும் அதிக சந்தோஷமாகி சகலமான ஜனங்களும் பண்டிகை கொண்டாடினார்கள்.

இதல்லாமல் பட்டணத்திலே இருக்கப்பட்ட துலுக்கர், சந்தாசாயபு அவர்கள், படேசாயபு வீடு மீருகுலாமுசேன் மற்றப்பேரெல்லாரும் முபார்க்குபாதி சொல்லியனுப்புவித்த படியினாலே புஷ்பமனுப்புவித்து முபார்க்குபாதி சொல்லி அனுப்பினார்கள்.

இராத்திரி பனிரெண்டு மணிக்குச் செங்கு முனிரபட்டு சேஷாத்திரிப்பிள்ளையவர்களுக்கும், நார்ச்சனப்பிள்ளையவர்களுக்கும், நம்முடைய திருமலைப்பிள்ளையவர்களுக்கும் காகிதம் எழுதி இரண்டு பேருக்கும் நாலு ரூபாய்க் கொடுத்து ஒன்றரை நாளிலே கொண்டுபோய்க் கொடுக்கச் சொல்லி, சன்மப் பத்திரிகையும் எழுதி சேஷாத்திரிப்பிள்ளையவர்கள் காகிதத்துக்குள்ளே வைத்துப் பயணம்பண்ணி, காலத்தாலே போகச் சொல்லித் திட்டம்பண்ணினேன். ஆனபடியினால், காலமே பயணம் போகிறதானபடியினாலே இப்போதுதானே வழிக்குச் சீட்டுக்கூட கொடுத்துத் திட்டம்பண்ணினேன்.

செனனி சென்ம சௌக்கியானும் வர்த்தனி குலசம்பதாம் பதவீ பூர்வபுண்ணியானும் லிக்கியதே சென்மபத்ரிகா. பெற்றூர் பிறந்தார் பிறவித்துயர் தீர உற்றூர் குலந்தழைக்க உண்மையாய்த்தே ராமனெழுதியபடியதனை எல்லாரும் காண வழுத்திஞேம் பத்திரிகை வாய்ந்து உ சுவஸ்த ஸ்ரீ சாலிவாகன சகாப்த ௵ 1669—கலியுகாப்த ௵ 4848க்கு மேல் செல்லாநின்ற பிரபவ ௵ மார்கழி மீ 27உ ஆதிவாரம். பூர்வபக்ஷம் சப்தமி 21¾, ரேவதி நக்ஷத்திரம் 50க்கு, சிவநாமயோகம் 52 7/8, வணிகரணம் 21½, திரி 24½ உத்திராடம் கலி சூரியன் 24½, திருவோணம் 2-ல் சுக்கிரன் 26 உத்திரட்டாதி 25-14க்கு மேல் ரேவதிக்கு சுபதினத்தில் ஸ்ரீ பிரம்பூர் தி. திருவேங்கடப்பிள்ளையவர்கள் குமாரன் ஆனந்தரங்கப்பிள்ளை அவர்களுக்கு ஸ்ரீமத் புண்ணியகுமாரர் செனனமானதற்குக் காலக்கிரகநிலை: இராத்திரி 2-3¼க்கு மேல் கற்கடக லக்கினத்தில் செல்லு 2—2½க்கு கடுசந்திரவோரை விருச்சிகச் செவ்வாய், திரிகரணம் விருச்சிகச் செவ்வாய், நவாங்கிசம் தனுர்குரு, துவாதிசங்கிசம். குத்திரிங்காங்கிசம் 104. வேளை சென்ம லக்கினம் கற்கடக லக்கினத்திலே ஆயில்யம், 4-ங் காலில் மீனமிஷையில்

கற்கடக லக்னத்தில் கேது. துலாமிடமான துலாத்தில் சுவாதி, 4-ங் காலில் மீனுமிசையில் சனி, ஆறுமிடமான தனுசில் உத்திதற்காலில் தனுராமிசையில் சூரியன் இதில் மூலம் ரெண்டாங்காலில் கன்னியாங்கிசையில் இராகு. இதில் திருவோணம். ரெண்டாங்காலில் ரிஷபமாமிசையில் சுக்கிரன். இதில் உத்திராடம். ௪-ங் காலிலே மீனுமிசையில் ராசா. எட்டாமிடமான கும்பத்தில் சதயம். மூன்ருங்காலில் கும்பாமிசையில் செவ்வாய். 9-ம் இடமான மீனத்திலே ரேவதி. மூன்ருங்காலில் கும்பாமிசையில் சந்திரன் ரேவதி. ஆதியந்தம் 2—61க்கு மூன்றும் பாதத்தில் செல்லு 2—7 நின்ற நாழிகை 8 1/4 புதன் மகா திசையில் செல்லுக்கு 10½ நின்ற வருஷம் 6½. புத்தி அறிய புதனில் ராகு புத்தி. வருஷம் 1⅓, நாள் 15. சுபமஸ்து. தீர்க்காயுஷ்யமஸ்து.

1748 ஆ சனவரி மீ 8உக்கு பிரபவ ஞு மார்கழி மஉ 28உ திங்கட்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டிற்குப் போனவிடத்திலே துரையவர்கள் சொன்னது: எருது நூறுக்குச் சொல்லியிருந்தேனே, முன்னூறு எருது முஸ்தீதுபண்ணி வைக்கவேணுமென்று சொன்னுர். நல்லதென்று சாவடி மணியக்காரர் அழகப்பமுதலியார், முருகப்பிள்ளையை அழைப்பித்து முன்னூறு மாடு முஸ்தீதுபண்ணுவிக்கச் சொல்லச்சொன்னேன். கர்நாடக துபாக்கி ஐம்பது மாத்திரம் அழைப்பித்து லிமித்திலே இருக்கிற சேவகருக்குக் கொடுக்கச் சொன்னுர். அதற்கு நான் சொன்னது: இவ்விடத்திலேயானுலில்லை. வெளியே சொல்லியனுப்பி அழைப்பிக்கவேணுமென்று சொன்னேன். நல்லது அந்தப்படிக்குச் சொல்லியனுப்புவித்து அழைப்பி என்று சொன்னுர். அதன்பேரிலே வேட்டவலத்துக்கும் உய்யாலுவார்பாளையத்துக்கும் காகிதங்கள் எழுதி அனுப்புவித்தேன். அப்பாலச்சால துபாக்கி என்கிறது நிகளமாய் இருக்கிறது. துலுக்கர் வழக்கப்படிக்கு இருக்கிறது. அது எட்டு துபாக்கி, பத்து துபாக்கி அகப்படுமாவென்று கேட்டார். மீருகுலாமுசேன் வீட்டிலே இருக்கிறதென்று சொன்னேன். அதை வாங்கி முஸ்தீதுபண்ணி வை என்று சொன்னுர். அப்பால் தேவனும்பட்டணம் சமாசாரம் வந்ததா என்று கேட்டார். அவனும் இவ்விடத்தியார் வருகிருர்களென்று கொத்தளங்கள்

முஸ்திதுபண்ணுகிறதும், மஞ்சகுப்பம் தோட்டத்திலே ஆல் பர்ட்டு என்கிறவனும் சிறிது ரா்ணுவங்களுமாக வந்திருந்து கொண்டு அங்கே சாமான்கள் சாஞ்சாமெல்லாம் முஸ்திது பண்ணுகிறது. அங்கே இருந்தாப்போலே ஸ்ரீராமநு மரி கிருஷ்ணுபுரம் மட்டுக்கும் வந்து சுத்திக்கொண்டு போகிறது மாக இருக்கிருர்கள். இதல்லாமல் பெண்ணையாற்று முகத் துவாரம் நன்ருய்த் தண்ணீர் ஓடுகிறது. கெடிலமும் அப்படி தான். அவர்களும் எச்சரிக்கையுடனே இருக்கிருர்கள். ஊரிலே உண்டான வர்த்தகர்கள், குடிகள் இருந்தவிடத்திலே இருக்க வில்லை. எல்லாம் வெளியே போய்விட்டது. பெரிய மனுஷர், வர்த்தகர், ஆண் பிள்ளைகள் மாத்திரம் போக்கு வருத்துமாய் இருக்கிருர்கள். இதல்லாமல் இரண்டு வெள்ளைக்காரர் இவ் விடத்திலேயிருந்து ஓடிப்போனதாகவும் அவ்விடத்திலே வந்து சேர்ந்திருக்கிறதாகவும் சேதி வந்தது. அவர்கள் இவ்விடத்திய நிலவரம் கேட்டதாகவும் அவர்கள் ஆயிரத்தி நூறு சொல் தாதுகளும், மாயே சிப்பாய்களும் இவ்விடத்திலே ஆயிரத்தி நூறு இரண்டாயிரம் பேர் இருக்கிருர்கள் என்றும், தமிழ்ச் சேவகர் முன்னூறு பேர்கள் இருக்கிருர்கள் என்றும் இவ் விடத்துக்குச் சண்டைக்கு வரத்தக்கதாகப் பயணமாகி அரி யாங்குப்பத்துக்கு ரஸ்த்துகொண்டு சேர்க்கிருர்கள் என்று சொன்னதாக எழுதிவந்ததென்று சொன்னதற்கு, விமித்திலே இருக்கிறவர்கள் இப்படி சாரியில்லாமலிருக்கிருர்கள். மெய் தான், ரெண்டு பேர் போனது என்று கண்டிலே சொல்லாமல் சாடையாய்ச் சொல்லி, நீ சீட்டுக் கொடுத்தனுப்பினியாங் காட்டுமென்று சொன்னுர். நான் சீட்டுக் கொடுக்கிறது, முசியே புரி கையெழுத்து உம்முடைய ஒடிதியில்லாமல் வெள்ளைக் காரர்களுக்குச் சீட்டுக் கொடுக்கிறதில்லை என்று சொன்னேன். அப்பால் அவர்கள் அதை விஸ்தரித்துக் கேட்கவில்லை. ஆனபடியினுலே அவர்கள் இரண்டு பேரும் அரியாங்குப்பத்தி லிருந்து ஓடிப்போயிருக்கவேணும். அல்லது சென்னப்பட்ட ணத்துக்குப் போக்கு வருத்தாயிருக்கிற வெள்ளைக்காரர் ஏதா கிலும் பாஸ் போர்ட்டு வாங்கிக்கொண்டு கழண்டுபோயிருக்க வேணும். அதுவுமல்லாமல் இவ்விடத்திலேயிருந்து இரண்டு பேரை போய் அவ்விடத்து மர்மம் அறியச் சொல்லியும், தாங் கள் சண்டைக்கு வந்தவிடத்திலே வந்து கலந்துகொள்ளச் சொல்லியனுப்பின சாடைபோலேயும் கண்டது. ஏனென்ருல் அதிலே முகமிருந்த சாடையைப் பார்த்தால் அவர்கள். சேதி

சொல்லச்சே கோபமில்லாமல் சற்று நகைத்த முகம் கண்ட படியினாலே அப்படித் தோற்றிற்று அப்பால் பன்னிரண்டு மணி வேளையானபடியினாலே நான் புறப்பட்டு வீட்டிற்குப் போனேன்.

இற்றைநாள் மத்தியானத்துக்குமேல் சாப்பிட்டுப் படுத்துக்கொள்ளப் போகையிலே வாணிய வாசறு அண்ணன் மகன் கையிலே வர்லாம் ஒரு காகிதமெழுதியனுப்பினான். அதைப் பார்த்தவிடத்திலே எழுதியிருந்த வயணம்: தேவனாம்பட்டணம் வேகுகாரர் மதாம் துய்ப்ளேய்க்குத்த ஒரு ஓலை எழுதியனுப்பினதாகவும், அந்த ஓலையிலே எழுதியிருந்த வயணம், புதுச்சேரியிலேயிருந்து இங்கிலீஷ்கார மனுஷருக்கு ஓலைத்தாள்கள் எழுதிவருகிறதாகவும், அதை மதாம் துய்ப்ளேய்க்ஸ் ஸ்ரீ துரையவர்களுடனே சொன்னதாகவும், அதற்குத் துரையவர்கள் ரங்கப்பிள்ளை, சீட்டில்லாமல் வெளியே போகக்கூடாதே! எப்படி போச்சென்று சொன்னாப்போலேயும், அதற்கு ரங்கப்பிள்ளைக்கு அலுவல் ரொம்ப. அதைத்தொட்டு ஐம்பது சீட்டு, நூறு சீட்டுக்குக் கையெழுத்துப்போட்டு ஒரு கணக்கப்பிள்ளை கையிலே கொடுத்துவைக்கிறதும், அவர்கள் வந்து அந்தக் கணக்கப்பிள்ளையைக் கேட்டு வாங்கிக்கொண்டு போகிறதான படியினாலே எவனாகிலும் வந்து கேட்டாப்போலே கொடுத்து விடுவான். ஆனபடியினாலே வெளியே போகுதென்று சொன்னாப்போலேயும். அதற்கு ஒரு பரீஷை: ஒரு பிச்சைக்காரனை அனுப்பி ஒரு சீட்டு வாங்கிக்கொண்டு வரச்சொன்னதாயும், அம்மாள் லகுவிலே சொன்னபடியினாலே இனிமேல் சீட்டுகளிலே முன்னதாகக் கையெழுத்துப் போடவேண்டாமென்றும் இந்தக் காகிதம் படித்துப்பார்த்தவுடனே பரிகரித்துப் போடச் சொல்லியும் எழுதினான். அந்தப்படிக்குப் படித்துப் பார்த்துக் கொண்டு பரிகரித்துப் போட்டேன். ஆனால், துரையவர்கள் என்னைக் கேட்டால் அதற்கு உத்தரவு நான் சொல்லவேணுமென்று யோசனைபண்ணிக்கொண்டிருந்து வேறே அவரப்படி கேட்டாரேயானால் இந்தச் சேதி சொன்னவர்கள் வாயை மூடத் தக்கதாகச் சொல்லுவேன். அவர் அதைக் கேளாதபடியினாலே அதை விஸ்தரித்து எழுதி காரியமென்ன என்கிறதினாலே எழுதவில்லை.

இற்றைநாள் பனிரண்டு மணி அடித்து ஒரு மணிக்குச் சென்னப்பட்டணத்திலேயிருந்து ஒரு சுலுப்பும் குருப்பும்

வந்தது. அதிலே இரு நூற்றைம்பது சொலுதாதுகளும் அவ ரவர்கள் ஆயுத முஸ்திப்புடனே வந்திறங்கினார்கள்.

இற்றைநாள் ராத்திரி ஒன்பது மணி வேளை பாக்குக்கிடங் கிலே இருந்து வீட்டிற்கு வந்தபிற்பாடு பெருமுக்கல் மியா சாயபு தம்பி மாத்துமல்லிகான் நமக்குக் குழந்தை பிறந்ததற் குச் சர்க்கரை, கற்கண்டு, பழங்களும் ஒரு சிரோப்பாவும், எனக் குப் பிறந்த குழந்தைக்குச் சரிகை சட்டை ஒன்றும், குல்லா ஒன்றும் மதப்படியே வைத்துக்கொண்டு மேளதாளத்துடனே சம்பிரமமாய் வர, செத்தி மாதவராய பெரியபிள்ளை கூட வந்தார்கள். அவர்கள் உபசாரம் சொல்ல, நாம் உபசாரம் சொல்ல, இந்தப்படிக்கு உபசாரம் சொல்லி, அப்பால் வந்த வெகுமானத்தை வாங்கிக்கொண்டு, வந்த கிசுமத்துக்காரர் மேளக்காரருக்கு ஆறு ரூபாயும், மாதவராயருக்குப் பத்துப் பதினைந்து ரூபாயிலே ஒரு சாலுவை, கோவிந்தப்பண்டிதருக்கு இரண்டு கெசம் பச்சை சகலாத்து, பெரியபிள்ளைக்கு இரண்டு கெசம் பச்சை சகலாத்தும் வெகுமானம் பண்ணினோம். அவர் களனுப்புவித்துக்கொண்டு போனார்கள். மற்றப்படி இவ் விடத்திலே இருக்கப்பட்ட ரங்காச்சாரியார், விசயருக்கு, வாசி யார் தேவநாயகய்யங்கார், பிரம்பை ஆச்சாரியார், கம்பாலய் யர், நாராயணசாஸ்திரியார். மற்றுமுண்டான பிராமணாள், யோக்கியாளாயிருக்கப்பட்டவர்களுக் கெல்லாம் நேற்றைய தினம் சந்தடியினாலே, கூடாதபடியினாலே, இன்றைக்கு அரி யாலூர் சாதுரு, பேருக்கு ஒன்று விழுக்காடு எல்லாருக்கும் வெகுமானம் பண்ணினோம்.

1748 ஆ ஜனவரி மீ 9உக்கு பிரபவ ளு மார்கழி மீ 29உ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் காலமே குவர்னதோர் வீட்டிற்குப் போன விடத்திலே துரையவர்கள் சொன்னது: முன்னூறு எருது வேணும். ஆளுகள் இருநூறு முன்னூறு பேர் வேணுமென்று சொல்லி, சிவனுகிரெட்டி வரக் கவையில்லை. அவர்கள் மனுஷர் கள் திருப்பாதிரிப்புலியூரிலே இருக்கிறார்களென்று சொன் னீரே! இவர் வந்தால் அவர்களுக்கு உபத்திரவம் வரும். ஆன படியினாலே இவர் வரக் கவையில்லை. அவர் மனுஷர் நூறு நூற் றைம்பது பேரும் வந்தால் பார்த்துக்கொள்ளுவோமென்று

சொன்னார். எல்லாம் இது சாஞ்சாபிபம். இது வெளியிலே அடிக்கடி முஸ்தீது பண்ணச்சொல்லிச் சொல்லுகிறதும். ஊரிலேயிருக்கிற குதிரைகளெல்லாம் அழைப்பிக்கச்சொல்லிச் சொல்லுகிறதும் இந்தச் சாடையினாலே இருக்கிறபடியினாலே இதை விஸ்தரித்து எழுதவில்லை.

முசியே நாசி முதலான பேர் சென்னப்பட்டணத்திலே யிருந்து சிறிது ஒபிஸியேல்மார்கள்கூட வந்தார்கள்.

இதல்லாமல், சேத்துப்பட்டிலே யிருக்கிற மனுவேல்த் தெகுனயே என்கிற பளங்கிக்காரன் துரைபேருக்குக் காகிதம் எழுதினதென்னவென்றால்: இருபத்தைந்து சொலுதாதுகள் தருகிறோமென்று சொல்லுகிறார்கள். அவர்கள் இப்போது போகவேணுமென்றால் இரண்டு மாதத்திய சம்பளம் முன் வாங்கினதைக் கொடுத்துவிட்டுப் போக உடம்படிக்கையான படியினாலே மாதம் 1க்கு சனம் 1க்கு ரூபாய் இருபதாக இரண்டு மாதத்துக்கு அது ஐந்நூறு ரூபாயும், அவரவர்களுக்குக் கொடுக்கவேண்டிய கடன் ஐம்பது ரூபாயும், அவர்கள் வருகிறதற்கு வழிச்செலவுக்குப் பேருக்கு ஒரு ரூபாய் விழுக்காடு இருபத்தைந்து ரூபாயும் ஆக ஐந்நூற்றி எழுபத்தைந்து ரூபாயும் அனுப்பினால் அந்த இருபத்தைந்து பேர் வெள்ளைக்காரரையும் அனுப்புவிக்கிறோமென்று எழுதினான். அந்தக் காகிதத்தை என் கையிலே கொடுத்து இந்த ஐந்நூற்றி எழுபத்தைந்து ரூபாயும் சேத்துப்பட்டுக்கு அனுப்பி அந்த இருபத்தைந்து சொலுதாதுகளையும் அழைப்பி என்று சொன்னார். நல்லது அந்த ரூ. 575-க்குச் செலவுக்குக் கொடுக்கிற 25 ரூபாய்ப் போக மற்ற 550 ரூபாயும் அவ்விடத்திலே சராப்பு காவிரால் வெங்கடேச செட்டி என்கிறவன் சொல்லிக்கொள்ளுவான். கபுறு வந்துசேர்ந்தவுடனே அங்கே பணம் கொடுத்துவிடுவான் என்றும், நுவேல் தெகூஞ் என்கிற பறங்கிக்காரனுக்கு ஒரு காகிதமெழுதிக் கொடுங்களென்று சொன்னேன். அந்தப்படிக்குத் துரையவர்களும் காகிதமெழுதிக் கொடுத்தார்கள். அந்தக் காகிதத்தையும் கொடுத்து காவிரால் வெங்கடேச செட்டியண்டைக்கு அந்த ஐந்நூற்றி எழுபத்தைந்து ரூபாயும் கூட்டி அவர் பேருக்கு ஒரு கடுதாசியும் எழுதி அந்தக் கடுதாசியிலே இந்த ரூபாய் 575-ம் வரப்பார்த்துக்கொண்டு, திவானத்துக்குச் சொல்லிக்கொண்டு, அந்த இருபத்தைந்து பேர் வெள்ளைக்

காரரும் இவ்விடத்துக்கு வந்து சேர்ந்தவுடனே சர்க்காருக்கு ரூபாய் 550 செலுத்திப்போடவும், மற்ற இருபத்தைந்து ரூபாயும் சொலுதாதுகளுக்கு வழிச்செலவுகளுக்குக்கொடுத்தனுப்புவிக்கவும் என்றெழுதி மார்க்க நாராயணசெட்டி கையிலேயும் ஒரு கடுதாசி வாங்கிக்கொடுத்துச் சேவகரைப் பயணம்பண்ணி 5வ கொடுத்து அனுப்பிவிட்டோம்.

இதல்லாமல் இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: கீழ் அழிஞ்சிப்பட்டிலே ஒரு சேவகன் சோடாக்காரன், போக்கு வருத்தாயிருக்கிறவன், அவனைப் போய் முன்னாலே அரியாங்குப்பத்திலே முத்து சேருவைக்காரனண்டையிலே யிருந்து நமக்குச் சேதிபாதி கொண்டுவந்துகொண் டிருந்தவன் அவன் போய் அந்த டபால்சேவகனை வேகுகாரனென்று பிடித்துக் கொண்டுவந்து மதாம் அண்டையிலே விட்டான். மதாம் கொண்டுபோய் அவனைக் கிடங்கிலே போடச் சொன்னாள்.

*1748*-ம் ஆ சனவரி மீ *10*வ பிரபவ ஹு மார்கழி மீ *30*வ புதவாரம்

இதல்லாமல், இற்றைநாள் நடந்த சேதி, தேவனாம்பட்டணத்திலேயிருந்து வந்த சேதி என்னவென்றால்: தேவனாம்பட்டணத்திலே மாசு அண்டையிலேயிருக்கிற துபாசி பெருமாள் முதலி தம்பி லக்ஷ்மணன் என்றவன் முன்னாலே அவ்விடத்துச் சேதி பாதிகள் நமக்கு அந்தரங்கமாய் எழுதிக்கொண்டிருந்தவன் பிற்பாடு மதாம் வழியிலே திரும்பியந்நேரம் அடிக்கடி அவ்விடத்துச் சமாசாரங்கள் மதாமுக்கு எழுதிக்கொண்டேயிருப்பான். அப்படியிருக்கச்சே இப்போது மேஸ்தர் மாசு கடுதாசி ஒன்று ஊர் பேரில்லாமல் இங்கிலீஷ் எழுத்தினாலே எழுதின கடுதாசி ஒன்று, அவன் துபாசி பெருமாள்முதலி தம்பி மதாம் துய்ப்ளேய்க்சு பேருக்கு எழுதின கடுதாசி ஒன்று ஆக இரண்டு கடுதாசியும் ஒரு சட்டைக்காரன் கொண்டுவரச்சே வழியிலே மரிகிருஷ்ணாபுரத்துமேட்டிலே பிடித்துக்கொண்டு, அந்த தொப்பாச் சட்டைக்காரனையும் பிடித்துக்கொண்டு, அவன் கையிலேயிருந்த இரண்டு கடுதாசிகளையும் கொண்டுபோய்த் துரை முன்னேவிட்டுச் சொன்னவிடத்திலே அந்தச் சட்டைக்காரனை அடித்துப் பிடித்துக் கேட்டவிடத்திலே அவன், மேஸ்

தர் மாசு துபாசி லக்ஷ்மணன் என்கிறவன் கொடுத்தானென்று சொல்ல, அதன்பேரிலே அந்த துபாசி பெருமாள்முதலி தம்பி லக்ஷ்மணன் என்கிறவனைப் பிடித்துவந்து கட்டிவைத்து ஐந்நூறு ஐந்நூறு அடி உண்டு கொர்டாவாலே அடித்துக் கேட்டவிடத்திலே நான் எழுதினது மெய்தானென்றும், பறங்கியெழுத்துக் கடுதாசி புதுச்சேரி துரைக்கு மாசு எழுதினுனென்றும், என்னையும் அவர்தான் எழுதச்சொன்னூர், ஆனபடியினுலே எழுதினேனென்றும் இப்படியாகச் சொன்னதாகவும், அதன் பேரிலே மாசை அழைப்பித்து, நீராஞல் முன்னே சென்னப் பட்டணத்தை ஒப்புவித்துவிட்டு இவ்விடத்திலே வந்தீர். இனிமேல் இந்தக் கோட்டையையும் ஒப்புவித்துவிடவேணு மென்கிறதினுலேயல்லவா எழுதினீர், இப்படிச் செய்யலாமா என்று கேட்டதற்கு நானறியேன், கடுதாசி எழுதினதுமில்லை, இந்தப்பிரசங்கம் அறியேனென்று சொன்னதாகவும், அதன் பேரிலே லக்ஷ்மணனை அழைப்பித்து முன்னேவிட்டுக் கேட்ட விடத்திலே அவன் ரூபுரூபாய் இவர்தான் எழுதினது. இவர் சொல்லின்பேரிலேதான் நானும் கடுதாசி எழுதினேனென்று சொன்னுன். உமக்கு மாசு சொன்னது என்பேரிலே பழிக்கு யாரோ சொல்லுகிருர்களென்று சொன்னதாகவும், அது எப்போது இங்கிலீஷிலேயே கடுதாசி எழுதி உம்முடைய துபாசி கொடுத்தனுப்பினமட்டுக்கும் உம்முடைய பேரிலே நேரமாச்சுதென்றுசொல்லி அந்நேரமே மேஸ்தர் மாசைக் கொண்டு போய்க் கோட்டையிலே காவல் வைத்ததாகவும், அவர் துபாசி லக்ஷ்மணனை அடித்து விலங்குபோட்டு, சட்டைக்காரனையும் காவல்பண்ணி வைத்திருக்கிறதென்று சேதி வந்தபடிக்கு நான் போய் துரையவர்களுடனே சொன்னவுடனே அவர் சொன்னது: மாசு அப்படிச் செய்கிறதில்லை. யாரோ குருத்துரோகம் நினைத்து இப்படிபண்ணினூர்களென்று சொன்னூர்.

இதல்லாமல், தேவனும்பட்டணத்துச் சேதி வந்ததென்ன வென்றல்: முன்னுலே கோட்டைக்கு மேலண்டையிலே சப்படுத்தியூர் என்கிறது வெள்ளைக்காரரைப் புதைக்கிறவிடத்திலே கட்டின கொத்தளம். மெத்த நேர்த்தியாய்ப் பதினையாயிரம் வராகன் செலவழித்துக் கட்டின கொத்தளத்தின் பேரிலேயிருக்கிற பீரங்கியை எடுத்துக்கட்டி கோட்டையைப் பார்த்துச் சுட்டவுடனே அந்தக் குண்டுபோய் நடுக்கோட்டையிலே விழுந்ததாகவும், ஆனுல் இந்தக் கொத்தளம் இருக்க

லாகாதென்று இடித்துப்போடச்சொல்லி உத்தாரம் கொடுத்த தாகவும் அந்தப்படிக்கு இடித்துப்போடுகிறுர்களென்றும் இப்படியாகச் சேதி வந்ததாகச் சொன்னேன். அதன்பிறகு சற்று நேரம் பேசிக்கொண்டிருந்து பாக்குக்கிடங்குக்கு வந்துவிட்டேன்.

இதல்லாமல், இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றுல்: சிங்கிரிகோவிலிலே இருக்கிற வைஷ்ணவ பிராமணர் இரண்டு பேர் அண்ணன் தம்பியள் தேவனும்பட்டணத்துக்கு வேகுகாரராய்த் திரிவார்கள். அவர்களைப் பிடிக்கவேணுமென்று வேகு வைத்துக்கொண்டிருந்தவிடத்திலே அவர்களகப்படாமல் மெலுக்குவாய்த் தப்பித்துக்கொண்டு திரிந்தார்கள். அவர்கள் தமையன் ஒருத்தன் இவ்விடத்திலே வழுதாவூர் ஆயத்திலே இருந்தான். அவனைப் போய் அருளப்பனென்கிறவனும் சேருவைக்கார முத்தும் பிடித்துக்கொண்டுவந்து அம்மாளண்டை விட்டவிடத்திலே அந்தப் பிராமணனைக் கொண்டுபோய்க் கோட்டையிலே விலங்குப்போட்டு, அவன் தாயாரைக்கொண்டு போய்ச் சாவடியிலே விலங்குப்போட்டுவைத்தார்கள். அவனைப் பிடிக்கவேணுமானுல் அப்போதானே பிடித்துக்கொள்ளலாம் அவன் உத்தியோகம் வேறே, அவனிருக்கிறதும் இந்த ஊரிலே தான். ஆனுல் எவனெவனெந்த வேலை செய்கிருனே அவனைப் பிடிக்கவேணுமேயல்லாமல் இவனைப் பிடிக்கிறதில்லையென்று இருந்தோம். அவனை இப்போது மதாம் அண்டையிலே இருக்கிற பசங்கள் போய்ப் பிடித்துவந்து மதாம் முன்னே விட்டு மதாம் காவலிலே வைத்தார்கள்.

*1748* ஆ௵ சனவரி ௴ *11*உக்கு பிரபவ ௵ தை ௴ 1-ம்உ வியாழக்கிழமை.

இற்றைநாள் காலமே நான் துரை வீட்டிற்குப் போய் துரையவர்களைக் கண்டு வார்த்தைச் சொல்லி, தேவனும் பட்டணம் எழுதியிருக்கிற கடுதாசியைக் கொண்டுபோய்த் துரையவர்களுக்கு இரண்டு பேச்சு அந்த வயணமெல்லாம் காண்பித்துச் சொன்னேன்.

1748 ஆ௵ சனவரி ௴ *12*உக்கு பிரபவ ௵ தை ௴ 2உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் மாட்டுப்பொங்கலானபடியினுலே மத்தியானத்துக்குமேல் சுவாமி பாரிவேட்டைப் போடுகிறதற்கும்,

இவ்விடத்திலிருந்து தேவனும்பட்டணத்துக்குச் சண்டைக்குப் போகிறதற்கும் முஸ்தீதுகள்பண்ணி, அரிசி, குண்டு, மருந்து, கடையன் மற்றுமுண்டானதும்; சொலுதாதுகள் ராணுவம், மற்றுமுண்டானபேர் சகலசாமான்களும் சாரிப்போகிறபடியி னுலே சுவாமி எழுந்தருளப்பண்ணுகிறதற்கு ஆள்களில்லாமல் வெகு நேரம் தாமசப்பட்டிருந்து பிற்பாடு கேடயத்தின்பேரிலே எழுந்தருளப்பண்ணச்சொல்லி உத்தாரம் கொடுத்தோம். ஆன படியினுலே சாயங்காலம் சுவாமியை கேடயத்துமேலே எழுந் தருளப்பண்ணி, வழுதாவூர் வாசற்படியாலே வெளியே போய் ... ... ... ... ... மட்டுக்கும் போய்ச் சாயரட்சைக்குக் கெவுனிக்குள்ளே வந்து, அப்புறம் கிராமப் பிரதக்ஷணம் வந்து பெருமாள், காளத்தீஸ்வரன், வேப்பூரீஸ்வரன் ஆகிய இவர்கள் அவரவர் கோவிலிலே அவரவர் போய்ச் சேர்ந்தார்கள்.

தேவனும்பட்டணத்துச் சண்டை முஸ்தீதுகளெல்லாம் பண்ணி சாம்சாம்பண்ணி அனுப்புவிக்கிற அலுவலைவிட்டு எனக்கு வரக்கூடாமல் ஒன்பது மணிமட்டுக்கும் துரையவர்கள் வீட்டிலேதானே இருந்து பீரங்கிப்போட்ட பிறகு வளவுக்கு வந்து எதிர் கூடத்திலே சமுக்காளம், ரத்தினக் கம்பிளி போட்டு முன் நபாபு சாதத்தல்லிகான் கச்சேரியிலே மசிலிசு பண்ணி, மசிலிசு நடுவே மொகமல்லிலே எல்லாம் சரிகை நூலி னுலே புட்டா தைத்திருக்கப்பட்ட வேலை நேர்த்தியான திண்டு திவாசு முதலானதுகள் போட்டுக்கொண்டு நபாபு சாதத் துல்லாகான் போட்டிருந்த தவுலத்து செலப்பட திண்டு திவாசு முதலானதுகளெல்லாம் போட்டு மசிலிசுபண்ணி வைத்திருக் கையில் அதன் மத்தியில் நான் வந்து உட்கார்ந்திருந்து பட்ட ணத்திலே உண்டாகிய பெரிய மனுஷர், வர்த்தகர், சமஸ்த மான பேரும் வந்து காணத்தக்கதாக அவரவர்களுக்குச் சக லாத்துகள், சாலுவைகள், புடவை, சீலைகள், சாதுராவுகள் முதலான வஸ்திரங்கள் அவரவர் தாரதம்மியத்துக்குத் தக்க தாக வெகுமானங்கள் கொடுத்து, பாக்கு வெற்றிலை கொடுத்து அனுப்புவித்துக்கொண்டேயிருக்க, பனிரெண்டு மணி அடித் தது. அதன்பேரிலே எழுந்துபோய்ச் சாப்பிட்டுப் படுத்துக் கொண்டேன்.

இற்றைநாள் மதாம் துய்ப்ளேய்க்ஸ் மாயே சிப்பாய்களுக்கு சமேதாரனயிருக்கிற அபுதுல்லாய்மானுக்கு, அவன் தம்பி

சேக் அசேனுக்கு இரண்டு பேருக்கும் வெகுமானம்: மூத்தவனுக்கு மூன்று பேட்டை மணிலாக் கொலுசும் சின்ன பதக்கமும், இளையவனுக்கு இரண்டுபேட்டை கொலுசும் சின்ன பதக்கமும் கொடுத்தான். அது பேருக்கு இருபத்தைந்து வராகனுக்கு உண்டு. அந்தப்படிக்கு மதாம் கையிலே அனுப்புவித்துக் கொண்டு போய்விட்டார்கள்.

*1748* ஆ சனவரி மீ 13௳க்கு பிரவப ஞு தை மீ 3௳ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் டீனுவுர் வந்து அழைக்கிறார்களென்று அழைத்தார்கள். நான் போனவிடத்திலே மாடுகள், கூலிக்காரர்கள் இன்னும் வரவில்லையென்று பிராதுபண்ணுகிறார்களென்று சொன்னார். இப்போது நூற்றி ஐம்பது மாடும், முன்னூறு பேர் கூலிக்காரரையும் அனுப்புவித்தேனையா என்று சொன்னேன். நல்லது, அது போதாது இன்னும் நூற்றியைம்பது மாடும், முன்னூறு நானூறு ஆளும் சமைபண்ணி அனுப்பிவிடென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அதன்பேரிலே தேவனாம்பட்டணத்துக்குப் போகிறதற்கு வழிமார்க்கமெப்படி என்று கேட்டார். அது வயணம், பிராஞ்சு எழுத்திலே எழுதிக் கொண்டுபோய்க் கொடுத்த வயணம்:

அரியாங்குப்பத்துக்கும் கருக்களாம்பாக்கத்துக்கும் 2 நாழி வழி

கருக்களாம்பாக்கத்துக்கும் செல்லுஞ்சேரிக்கும் 1½ நாழி வழி

செல்லுஞ்சேரிக்கும் தூக்கணாம்பாக்கத்துக்கும் 1 நாழி வழி

தூக்கணாம்பாக்கத்துக்கும் திருப்பணாம்பாக்கத்துக்கும் 2 நாழி வழி

திருப்பணாம்பாக்கத்துக்கும் குருவிநத்தத்துக்கும் 1 நாழி வழி

குருவிநத்தத்துக்கும் பூவரசங்குப்பத்துக்கும் 1/2 நாழி வழி

பூவரசங்குப்பத்துக்கும், பாதிரிகுப்பத்துச்]சாவடிக்கும் 1¾ நாழி வழி

இதற்கு நடுவே பெண்ணையாறும் கெடிலமும் இரண்டு ஆறு.

பாதிரிகுப்பத்துச் சாவடிக்கும் திருப்பாதிரிப்புலியூருக்கும் 1 நாழி வழி

திருப்பாதிரிப்புலியூருக்கும் தேவனும்பட்டனத்துக்கும்
1 1/2 நாழி வழி.

இந்தப்படிக்கு, பிராஞ்சு எழுத்திலே எழுதி துரையவர்கள் கையிலே கொடுத்தோம். அதைப் பார்த்து வாங்கி வைத்துக் கொண்டார்.

இற்றைநாள் மத்தியானம் பத்து மணிக்கு நடந்த சேதி என்னவென்றால்: துரையவர்களண்டையிலே முசியே தேப்ரேனும், முசியே தோத்தேலும், முசியே புரியேலும் ஆகிய இவர்கள் இரண்டு மூன்று பேரும் கூட இருக்க, நான் போனவிடத்திலே முசியே தோத்தேலிருந்துகொண்டு துரையவர்களுடனே, ரங்கப்பிள்ளை சண்டைக்குப் பயணம் புறப்படுகிறதற்கு முஸ்தீதாய் இருக்கிறார். பிஸ்தோலுக்கும் மற்றதுகளுக்கெல்லாம் லெஸ்து பண்ணுவித்துக்கொண்டு பயணமாய் இருக்கிறார். துபாக்கி மாத்திரமில்லை, நல்ல துபாக்கியாய் இரண்டு துபாக்கிமாத்திரம் கொடுக்கவேணுமென்று சொன்னதின்பேரிலே துரையவர்கள் இருந்துகொண்டு, அவர் எங்கே வருகிறார்? நாம் வெளியே போகிறமட்டுக்கும் இவ்விடத்துக் காவைக்கு அவரிருக்கவேணுமென்று சொன்னார். அதன்பேரிலே நானிருந்துகொண்டு, நீங்களிருக்கிற விடத்திலே நானுங்கூட இருக்கிறதேயல்லாமல் உங்களை விட்டுவிட்டு நான் அவ்விடத்திலே இருக்கிறதில்லை என்று சொன்னேன். அதிலே முசியே தோத்தேலும் முசியே தெப்ரேனும் இருந்துகொண்டு, மெய்தான். நீரிருக்கிற விடத்திலேதானே ரங்கப்பிள்ளையும் இருக்கவேணும். அது நியாயம், சரிதானென்று சொன்னார்கள். அதற்கு துரையிருந்துகொண்டு, சின்ன துரையை இவ்விடத்திலே வைத்துப்போகிறோமே, அவர் நல்லவர்தான் மெத்த சாது. அவருக்குப் பின்னைபொன்றும் தெரியாது. ரங்கப்பிள்ளையைப்போலே கப்பாசல்லா, ரங்கப்பிள்ளை என்னுடைய கையுங்கீழுமயிருந்து எல்லாம் வாடிக்கைப் பட்டு என்னுடைய புத்தியிலே தோன்றுகிறபடிக்கு, அதற்கு முன்னமேயே எல்லாக் காரியமும் சேகரித்து நடத்தத் தக்க வாறுமிதல்லாமல், துலுக்கருடைய காகிதங்களுக்கு உத்தரவு பிரதி உத்தரவும் தெரிந்து எழுதி சமதாயிருக்கிறதற்கு வாடிக்கைப்பட்டவன். என்னுடைய புத்திக்குச் சமானமாய் நடத்தத் தக்க யோக்கியனானபடியினாலேயும், என்னிடத்திலே ரொம்ப மருவி வாடிக்கைப்பட்டவனானபடியினாலேயும், அவனிங்கே

தானே யிருந்து இவ்விடத்திய காரியங் சுவையெல்லாம் சமா ளித்துக்கொண்டிருக்கவேணும். ஆனபடியினாலே அவர் போகாது இவ்விடத்திலே இருக்கவேணுமென்றார். அதன் பேரிலே நானிருந்துகொண்டு, ஐயா, நான் ஒரு வார்த்தைச் சொல்லுகிறேன் கேட்கவேணுமென்று சொன்னேன். என்ன என்றார். ஐயா, உம்முடைய யோகத்தினாலேயும் உம்முடைய அதிர்ஷ்டத்தினாலேயும் நீங்களின்னம் அநேகமான கீர்த்தி சம்பாதிக்கத் தக்கதாக ஆயத்தப்பட்டிருக்கிற கனயோகசாலி யானபடியினாலே உம்முடைய யோகநாதனே எங்கே போனா லும் திக்கு விசயமாகிறதேயல்லாமல் பின்னே யொருத்தனைத் தொட்டிருக்கிறதென்று யோசனைபண்ணத் தேவையில்லை. இப்போது சொல்லுகிறது: மூசியே பாதீ போய்க் கெலித்தா னென்றும் மற்றவன் கெலித்தானென்றும் இவனைத்தொட்டு நிருவாகமாயிருக்குதென்றும் இப்படியாகச் சொல்லப்படுகிற தென்னவென்றால்: நீர் மா யோக்கியசாலியானபடியினாலே உங்களை நாங்கள் சேர்ந்திருக்கிறபடியினாலே உங்களுடைய சாயை எங்கள்பேரிலே சேர்ந்திருக்கிறபடியினாலே மற்றப் பேருக்குக் கீர்த்தியேயல்லாமல் மற்றப்படி ஒருத்தரைத்தொட்டு ஆகிறதென்ன விருக்கிறது? உம்முடைய யோகமே தேவனும் பட்டணத்துக் கோட்டையிலே நிசான் கொண்டுபோய்ப் போடு விக்கப் போகிறது. ஆகையினாலே ஒருத்தருக்கும் பிரயாசை இல்லையென்று சொன்னேன். நானிப்படியெல்லாஞ் சொன்ன வுடனே துரையவர்களும், மூசியே தோத்தேலும், மூசியே தெப்ரே னும் எல்லாரும் நகைத்துக்கொண்டிருந்தார்கள். துரையவர்கள் நகைத்து ரங்கப்பிள்ளை எப்போதும் இப்படிதானே சொல்லு கிறதென்றும் சொன்னார். ஆனால் அவர் சொன்னது பின்னையும் ரொம்பவும் உண்டு. ஆனாலும் அதிலே காரியத்தைமாத்திரம் எழுதினேம். இன்னும் அவர் சொன்னபடிக்கெல்லாம் விஸ் தரித்து எழுதினால் இவர் ஷடைக்கு எழுதினதாயிருக்கும். ஆனால், உண்டானபடி நடந்த காரியத்திலேயும் சூசனையாய் எழுதினேன்.

இற்றைய தினம் அரியாங்குப்பத்துக்கு இவ்விடத்திலே யிருந்து ராணுவங்கள், சிப்பாய்கள், சாமான்கள் சமஸ்தமும் சாரிப்போச்சுது.

இதல்லாமல், இன்றையதினம் காலமே ராசஸ்ரீ துரை யவர்களுடனே சொல்லி நேற்றையதினமானால் அபுதுலாருயி

மானுக்கும் சொக்கேசனுக்கும் வெகுமானமாச்சுதே. சேக்கிபுரும் முன் ஐந்நூறு பேருக்கு எசமானனுச்சுதே, அவனுக்கு ஒரு வெகுமானம்போலே கொடாமற்போனுல் அவன் மனதுக்கு ஸ்மானமாய் இராதென்று சொன்னேன். என்ன கொடுக்க வேணுமென்று கேட்டார். இவனுக்கு ஒரு சரப்பளி கொடுக்க வேணுமென்று சொன்னேன். ரப்பி......,..இல்லையேயென்று சொன்னுர். அதன்பேரிலே காளஸ்ரீ அய்யன் வீட்டிலேயிருந்து மணிலா கொலுசு மூன்று பேட்டை இருபத்தைந்து வராகனுக்குக் கொண்டுவந்து துரையவர்கள் கையிலே கொண்டுவந்து கொடுத்து, துரையவர்கள் கையினுலே சேக்கிபுரும் கழுத்திலே போடுவித்து நாலு கிசம் சகலாத்தும் வெகுமானம் பண்ணுவித்தோம். இதல்லாமல் அல்விகான் பின்னையும் இரண்டொருத்தருக்கு சகலாத்தும் வெகுமானம் வாங்கிக்கொடுத்தோம். வெகுமானம் கொடுத்தபிற்பாடு துரையவர்கள் சேக்கிபுருமைப் பார்த்து இனிமேல் அபுதுலாருயிமானுக்கு நடக்கிறபடிக்கு உனக்கு நடப்பிக்கிறோம், அந்தப்படிக்குச் சம்பளமும் அரிசியும் கொடுத்து நடப்பிக்கிறோம், சந்தோஷமாயிருங்கோளென்று சொன்னுர். அந்தமட்டிலே அனுப்புவித்துக்கொண்டு வந்து அவனும் அவனுடைய ராணுவமும் சாயங்காலத்துக்கு அரியாங்குப்பத்துக்குப் போனுர்கள்.

இற்றைநாள் சாயங்காலம் துரையவர்கள் மூசியே போசேத்துக்கு உத்தாரம் கொடுத்ததென்னவென்றுல்; விமித்துக்கு சேவகர், மற்றப்பேரை ரங்கப்பிள்ளை வைத்திருக்கிறுர். அதுகளையெல்லாம் அப்போதைக்கப்போது விசாரித்துக்கொண்டிரு என்று உத்தாரம் கொடுத்தார்.

இற்றைநாள் ராஜஸ்ரீ துரையவர்கள் உத்தாரங்கொடுத்ததென்னவென்றுல்: நாபாபு அன்வர்திகானவர்களுக்குக் காகிதமெழுதி அனுப்பச்சொல்லி உத்தாரங்கொடுத்தார்கள். அந்தக் காகிதத்திலே எழுதின வயணம் என்னவென்றுல்: முன்னுலே இங்கிலீசுக்காரருக்கும் எங்களுக்கும் கலாபமாயிருந்ததையிட்டுத் தாங்களெழுதியனுப்புவித்தது. இனிமேல் அவர்கள் உங்கள் சோலிக்கு வருகிறதில்லை. ஆனபடியினுலே நீங்களும் தேவனும் பட்டணத்தார் வழிக்குப் போகத் தேவையில்லை என்று எழுதி இருந்தார்களே, அந்தப்படிக்குத் தங்களுக்கும் தகப்பன்

பின்னை மரியாதையாய் நடக்கிறபடியினாலே அந்தமட்டிலே சும்மாவிருந்தோம். அப்படியிருக்க, தேவனாம்பட்டணத்தார், நம்முடைய ஊர் மனுஷர் போக்குவருத்தாயிருக்கிற பேரை அடித்துப் பிடித்துப் புடவை சீலைகளைப் பறித்தும் இப்படியெல்லாம் அலங்கோலப்படுத்துகிறதுமல்லாமல், நம்முடைய கிராமங்களிலே வந்து முசாஸ்த்திபண்ணியும் போயிருக்கிறார்கள். தாங்கள் எழுதியனுப்பியிருக்கிறார்களென்று என்ன மனம் பொறுத்துப்பார்த்தாலும் சஹிக்கவில்லை. அல்லாமலும் நம்முடைய தகப்பனார் உத்தாரத்தை மீறிநடத்தினார்களென்ற ரோஷத்தினாலே தங்களுக்கு எழுதினால் கோபம் வரும். அப்பால் தங்களுக்கென்னத்துக்குப் பிரயாசமென்கிறதாய் நாம் தேவனாம்பட்டணத்தார் பேரிலே சண்டைக்குப் போகிறோம். அதைத் தாங்கள் அறிந்திருக்கவேணுமென்று எழுதினோமென்கிறதாய் பார்சிலே எழுதி, பின்னையும் எழுதவேண்டிய உபசாரமாய் எழுதியதல்லாமல் நம்முடைய தண்டு உங்கள் கிராமத்து வழியாய்ப் போகிறபடியினாலே நம்முடைய மனுஷருக்கெல்லாம் தாக்கீதுபண்ணி வழியிலே ஒரு சுலுமு சாஸ்த்தி பண்ணுதபடிக்குத் தாக்கீதுபண்ணியனுப்பியிருக்கிறோம். தங்கள் சீர்மையாகிய திருவதி, பண்ணுருட்டி, வில்லியநல்லூர் சீர்மை வெங்கட்ராமாபேட்டை, புவனகிரி இந்த விடங்களிலே இருக்கப்பட்ட அமுலுதாரருக்கு எழுதியனுப்பி நம்முடைய மனுஷருக்குத் தேவையான அரிசி, பருப்பு, காய்கறி, வைக்கல் செத்தை தேவையானது உள்ள விலையை வாங்கிக்கொண்டு கொடுத்து நடப்பித்துக்கொள்ளச்சொல்லி எழுதச்சொன்னார் அந்தப்படிக்கு எழுதி முத்திரைப் போட்டும், இதல்லாமல் திருவதி அமுல்தாரன், வில்லியநல்லூர் அமுல்தாரன், புவனகிரிப்பட்டணம் அமுல்தாரன், விழுப்புரம் அமுல்தாரன் இவர்களுக்கெல்லாம் அந்தப் பிரகாரம் கடுதாசி எழுதி, அந்தக் கடுதாசியிலே எழுதின வயணம்: தேவனாம்பட்டணத்து மேலே சண்டைக்குப் போகத்தக்கதாக நம்முடைய தண்டு உம்முடைய கிராமத்து மேலே வருகுது. நீங்கள் ஒன்றுக்கும் பயப்படத் தேவையில்லை. சுகமாக இருக்கவேணுமென்று எழுதி அவர்களுக்குத் தேவையான ஏஸ்த்துக்கள் கொடுத்து நடப்பித்துக் கொள்ளச்சொல்லி எழுதி, கடுதாசிகளெல்லாம் எழுதி, முத்திரைப் போட்டுத் தயாராய் வைத்திருக்கிறது. எப்போது

அனுப்பச்சொல்லி உத்தாரம் கொடுக்கிறீர்களோ அப்போது அனுப்பிவிடுகிறது.

1748 ஆ சனவரி மீ 14 உ க்கு பிரபவ ளூ தை மூ 4 உ ஆதிவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: ராசமானிய மகாராச ராசஸ்ரீ துரையவர்கள் செவ்றால் முசியே ஷெவாலியேர் துய்ப்ளேய்க்சு மகாராசாவானவர் தேவனாம்பட்டணத்துக் கோட்டையிலே பிராஞ்சுக்கொடி போடுவிக்கிறனென்று துவசங் கட்டின மகாராசன் தேவனாம்பட்டணத்து மேலே சண்டைக்குப் போகத்தக்கதாகப் பயணப்பட்டு இன்றைய தினம் காலமே ஆறு மணிக்கு இவ்விடத்திலேயிருந்து பயணம் புறப்பட்டு அரியாங்குப்பம் போய்ச் சேர்ந்தார். நானும் ஆறரை மணிக்குப் புறப்பட்டு அரியாங்குப்பத்துக்குப் போய் தண்டு முஸ்திதுகளும் பார்த்து, துரையவர்களையுங் கண்டு பேசிக்கொண்டு மறுபடியும் பத்து மணிக்கு இவ்விடத்துக்கு வந்துவிட்டோம். இவ்விடத்திலே வந்தபிற்பாடு, ஆள்கள், மாடுகள், பின்னையும் தேவையான சரஞ்சாமிகளெல்லாம் முஸ்திதுபண்ணி அனுப்புவிக்கிறோம். இதல்லாமல் சாயங்காலம் ஆறு மணிக்கு வந்தயாசியிலேயிருந்து நாலு யானை வந்துசேர்ந்தது. அந்த நாலு யானையையும் அரியாங்குப்பத்துக்கு அனுப்புவித்தோம்.

இற்றைநாள் தண்டு பிறகே போன அப்புமுதலியார் அண்ணனும் நடந்த சேதியை எழுதிக்கொண்டுவந்து எழுதி வைத்தபடிக்குத் தண்டு சமாசாரம் எழுதிவைத்த வயணம்:

இற்றைநாள் சகலமும் சண்டை முஸ்திதுடனே புறப்பட்டு அரியாங்குப்பத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். சேர்ந்தவுடனே சகல ராணுவங்களும் படைத்தலைவரும் அறியத்தக்கதாக பாறு நிறுத்தி, தம்பூர் அடித்து, முசியே பாதி, முசியே பிஷார், பின்னையும் இரண்டொரு துரைகளுக்கும் படைத்தலைவர்மார் உத்தியோகம் கொடுத்து. இவர்களைப் படைத்தலைவர்மார் என்றறியுங்கோளென்றும், மற்றப்பேருக்கெல்லாம் உத்தாரம் கட்டளையிட்டு, பிற்பாடு சம்பாவு கோவிலிலே வந்திறங்கி, காடுது குதிரைக்காரர்களை அனுப்பி வழியிலே எதிராளி ராணுவ ரவுத்து ஏதாகிலும் இருக்குதா

வென்று போய்ப்பார்த்துவரச் சொல்லியனுப்புவித்தார்கள் அவர்கள் போய் அப்படியே மரிகிருஷ்ணபுர மட்டுக்கும் போய்ப்பார்த்து எங்குமில்லையென்று சொன்னார்கள். பிற்பாடு நூறு மண்வெட்டிக்காரர்களை அனுப்பி, மேடுபள்ளம், வாய்க் கால் வெட்டி கிரவிலவத்துப் போடச்சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள். அப்படியே காதவழி மட்டுக்கும் போய் கிரவிப்போட்டு வந்தார்கள். பிற்பாடு தட்டுமுட்டுத் தளவா டம் எடுக்க மாடுகள். ஆள்கள், கூலிக்காரர்கள் எல்லாரும் வெஸ்தா இருக்கிறார்களாவென்று கேட்டார்கள். அதை விசா ரித்து நான் சொன்னது என்னவென்றால்: நாலு நாளாய் வந்து சேர்ந்த சாமான்கள் எல்லாம் நீங்கள் புறப்படுகிற பயணத் துக்கு உங்களுடனே கூட நடக்கமாட்டாது என்று சொன் னேன். அது எதனாலே என்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: கொண்டுவந்த மாடுகளும் கூலிக்காரரும் அப்போ தைக்கப்போது சுமைகளை இறக்கிப்போட்டுப் புதுச்சேரிக்குப் போய்விட்டார்கள் என்று சொன்னேன். அதன்பேரிலே துரையவர்கள் காரியத்துக்காரரைக் கோபித்துக்கொண்டு, உங்களுக்குக் கடுதாசி எழுதியனுப்புவித்தார்கள். அனுப்பு வித்தபிற்பாடு, நீங்கள் ஆள்களும் முஸ்தீது பண்ணுவித் தனுப்புவித்தீர்கள். அவைகளும் வந்துசேர்ந்தன.

1748 ஆ சனவரி மீ 15உக்கு பிரபவ ஹு தை மீ 5உ திங்கட்கிழமை.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: நேற்றைய தினம் இவ்விடத்திலேயிருந்து அரியாங்குப்பத்துக்குப் போயி ருந்தோம். மதாம் துய்ப்ளேய்க்சு, மதாம் பெடுத்தல்மீ மற்றப்பே ரெல்லாரும் நேற்று ராத்திரி அரியாங்குப்பத்திலே துரையவர் களுடனேகூட தீனிதின்றுவிட்டுப் பதினொரு மணிக்கு அவ்வி டத்திலேயிருந்து புறப்பட்டுப் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார் கள். நாலு மணி வேளைக்கு அரியாங்குப்பத்திலேயிருந், தண்டு குதிரைகள், ராணுவ வெள்ளைக்காரர் மற்றப்பேரெ லாரும் ஸாரிப்போனார்கள். துரையவர்களும் இன்றையதின காலமே ஏழு மணிக்குப் பயணம் புறப்பட்டுத் தேவனாம்பட்ட ணத்துமேலே சண்டைக்குப் போகத்தக்கதாகப் புறப்பட்டார் கள்.

இற்றைநாள் காலமே சின்ன துரையவர்கள் கோட்டை யிலே இருந்தபடியினாலே, நானும் கோட்டைக்குப் போய் பதி னொன்றரை மணி மட்டுக்குஞ் சின்னதுரையுடனேகூடவிருந்து தண்டுக்கு அனுப்பவேண்டிய ஸாமான்களெல்லாம் பயணம் பண்ணி அனுப்பிக்கொண்டிருக்கச்சே, சீர்மையிலேயிருந்து ஒரு பிறகாத்து வந்து துறைப்பிடித்துப் பத்து மணிக்கு அந்த பிறகாத்து கப்பித்தான் இறங்கிவந்தான். ஆனால், இந்த பிற காத்து சீர்மையை விட்டுப் புறப்பட்டு.........ஆச்சுது. இந்தக் கப்பித்தான் சொல்லுகிற சேதி என்னவென்றால்: சீர்மையிலே யிருந்து சண்டைக் கப்பல் இருபது கப்பல்கள் பயணப்பட்டு வருகுதென்றும், இன்னும் ஐந்தாறு நாளையிலே எல்லாரும் ஸந்தோஷ கபுறு கேட்கப் போகிறீர்களென்றும் சொல்லுகிற தேயல்லாமல் அதை ஒன்றும் வெளியாய்ச் சொல்லவில்லை. அந்த ஸமாசாரம் இனிமேல் அறியவேணும்.

கோட்டையிலேயிருந்து சின்ன துரை பதினொன்றரை மணிக்கு வீட்டிற்குப் போனார். அவர் வெளியே புறப்படுகிற போது வரிசைவைத்துத் தம்பூரடிக்கவில்லை அது எதனாலே என் றால், கோட்டையிலே உண்டான சொலுதாதுகளெல்லாம் தண்டு பிறகே போய்விட்டபடியினாலே உண்டான சொலு தாதுகளெல்லாம் கோட்டைக் காக்கிறதற்கு மநுஷர் இல்லாத தினாலே கொமிசேல்கார கணக்கப்பிள்ளைகள் பெரிய மநுஷரா யிருக்கப்பட்டவர்களெல்லாரும் பத்திரம் கட்டிக்கொண்டு, துபாக்கியைத் தோளில் வைத்துக்கொண்டு காவல் காக்கிற படியினாலே சின்ன துரை தானே பதுவாம கேட்டுக்கொண்டு தம்பூரடிக்கவேண்டாமென்று சொல்லிக்கொண்டார்.

சாயங்காலம் நாலரை மணிக்குத் துரையவர்களும், முசியே பாதியும், அவர் பிறகே ஐம்பது குதிரை காடுது வெள்ளைக்கார ரும், ஒரு நிசானும், ஒரு தம்பூர் குதிரைக்காரனும் இந்த மட் டுக்கும் வந்தார்கள். இவர்கள் வந்தக் காரியமென்னவென்றால்: காலமே பத்து மணிக்கு சீர்மையிலேயிருந்து இவ்விடத்துக்கு வந்த பிறகாத்திலே வந்த கப்பல் கப்பித்தான் இறங்கின சீர்மை கடுதாசி சிப்பத்தை இறக்கி இவ்விடத்திலே வைத்து விட்டு அந்தக் கப்பித்தான் போய் முத்திரிசப்பிள்ளை சாவடி யிலே இறங்கியிருக்கிற துரையவர்கள் முசியே துப்ப்ளேய்க்ஸ் அவர்களண்டைக்குப் போய் கபுறு சொன்னவுடனே அந்தக்

கடுதாசியை கொம்பிஸியோம் கூடி வாசித்துப் பார்க்கவேண்டிய நிமித்தியம் இவ்விடத்துக்கு வந்தார். வந்து அந்தக் கடுதாசியைப் பார்த்து அதிலே இருந்த சேதியை அறிந்துகொண்டு மறுபடியும் ஐந்து மணி ஐந்தரை மணிக்கு இவ்விடத்திலேயிருந்து புறப்பட்டு அவர் பிறகே வந்த குதிரைக்காரருடனே கூட பயணம் புறப்பட்டுத் தண்டுக்குப் போய்விட்டார். ஆனால் சீர்மைக் கடுதாசியிலே எழுதியிருந்த வயணம் என்னவென்றால்:

இற்றைநாள் பொழுதுவிடிய நாலு மணிக்குத் தம்பூர் அடித்து, பாளையம் கூச்சுபண்ணி, பாளையம் கதலி போகத் தக்கதாக ஏழு மணி ஸமீபமாச்சுது. முதல் பாறு துவக்கி கடைசி மட்டுக்கும் போனபிற்பாடு ஸகல ஸாமான் புறப்படப் பார்த்து பிற்பாடு ராஜஸ்ரீ துரையவர்கள் புறப்பட்டார்கள். முன்னே நடந்த துரைமார்களில் மூசியே பாதியும், நாலத்து ரெண்டு துரைமார்களும் சுண்ணும்பாறு கடந்தவுடனே பூரணாங்குப்பத்துக் கடலோரத்து மேட்டுமேலேறிப்பார்த்துத் தேவனாம்பட்டணத்துத் துறையிலே ஏழு கப்பல் சீர்மைக் கப்பல் கிடக்குதென்று சொன்னார்கள். அவர்கள் எதனாலே சொன்னார்களென்றால், நாளது தினம் ஒரு கப்பலும் சுலுப்பும் தேவனாம்பட்டணத்துக்கு வந்தது, அதைக்கண்டு சொன்னார்கள். அந்தச் சேதியை ராஜஸ்ரீ துரையவர்கள் மெய்யென்று கேட்டு யோசனை பண்ணிக்கொண்டிருக்கச்சே புதுச்சேரியிலே இரண்டு பீரங்கி வெடி போட்டார்கள். அதைக்கேட்டவுடனே இரண்டு துரைமார்கள், குதிரைக்காரரைப் புதுச்சேரிக்கும் அரியாங்குப்பத்துக்கும் அனுப்பிக் கபுறு விசாரித்துவரச் சொல்லிவிட்டுத் துரையவர்கள் தாம்தானே பூரணாங்குப்பத்துக்குப் போனார். அவர் பிறகே ஐம்பது காடுது வெள்ளைக்காரரும் ஐம்பது சொலுதாதுகளும், நாலைந்து துரைமார்களும் கூடப் போனார்கள். போனவிடத்திலே துரையவர்கள் தூரதிருஷ்டிக் கோவியைவைத்துப் பார்த்தவிடத்திலே முன்னிருந்த கப்பலில்லாதே ஒரு கப்பலும், ஒரு சுலுப்பும் கண்டது. முன் அவரவர்கள் சொன்னது அபத்தமென்று வடக்கே திரும்பிப்பார்க்கச்சே புதுச்சேரிக்கு நேராய் ஒரு கப்பல் கண்டது. அது இன்னார் கப்பலென்றறியவேணுமென்று சற்றுநேரம் அங்கேதானே பார்த்துக்கொண்டிருக்கச்சே வெள்ளைக் கொடி கண்டது. மெத்த சந்தோஷமாய்ப் பேசிக்கொண்

டிருக்கச்சே, முசியே லெது அவர்கள் கப்பல் சேதிக்குக் கடுதா சிக்கு அனுப்புவித்தார். ஆனதுகொண்டு பாளையத்தை முத்தி ரிசப்பிள்ளை சாவடியிலேதானே நிறுத்தினர். துரையவர்கள் கடலோரம் விட்டுப் பாளையத்துக்கு வரச்சே லிங்காரெட்டிப் பாளையத்திலே கூக்குரலாச்சுது. அதேது கூக்குரலென்று விசாரித்து வரத்தக்கதாக காடுது குதிரைக்காரரையும் சிப் பாய்களையும் அனுப்புவித்தார்கள். அவர்கள் போய் விசாரிக்கு மிடத்திலே காப்பிரிகளும் வெள்ளைக்காரர்களுமாய்ப் புகுந்து பல்லக்குக்காரர் கூட்டப்போய்க் கொள்ளையிட்டு, வீடுவாசலைப் பிடுங்கி அலங்கோலப்படுத்தினர்கள். அதன்பேரிலே அவர்கள் எல்லாரையும் பிடித்துவரச்சொல்லி உத்தாரங் கட்டளையிட் டார்கள். அந்தமட்டிலே எல்லாரும் புறப்பட்டு ஓடிப்போனர் . அதிலே ஒரு பல்லக்குக்காரன் மாத்திரம் அகப்பட்டான். அவனைப் பிடித்துவந்து, கட்டிவைத்து அடித்துவிட்டார்கள். அப்பால் பாளையத்திலே வந்திறங்க ஸகல ஜனமும் அறியத்தக் கதாக நமக்கு நல்ல சேதி வந்தது என்றும், திரண கப்பல் வரு குது என்றும் சேதி சொன்னர். அதைக் கேட்டவுடனே பாறு வைத்திருந்த சொலுதாதுகளும், துரைகளும், எல்லாரும் தொப் பியைக் கழட்டிக்கொண்டு, ராஜா வாழ்க வாழ்க வென்றும் வீவ் லெருவா என்றும் கூப்பிட்டார்கள். அந்தப்படிக்குக் கூப் பிட்டுச் சந்தோஷ வார்த்தைப் பேசிக்கொண்டிருக்கச்சே, புதுச்சேரியிலேயிருந்து கப்பலில் வந்த கடுதாசி வந்தது. அப் போது விபரமாய் பதினறு கப்பல் வருகுதென்றும், திரண்ட மநுஷர் வருகிறர்களென்றும் மெத்த சந்தோஷமாய்ப் பேசிக் கொண்டிருந்து சாப்பிட்ட பிற்பாடு மூன்று மணிக்குப் புறப் பட்டுப் புதுச்சேரிக்கு வந்தார். வந்தவிடத்திலே கொம்பிஸி யோம் கூட்டி, அந்தக் கப்பலிலே வந்த கடுதாசியெல்லாம் பார்த்துக்கொண்டு, புறப்பட்டு ராத்திரி ஏழு மணிக்கு வந்து பாளையத்திலே சேர்ந்தார். ராத்திரி எட்டு மணிக்குச் சாப்பிட் டபிற்பாடு உங்களுக்குக் கடுதாசி எழுதியனுப்பச் சொன்னர். அந்தப்படியே கடுதாசி எழுதி ஒரு குதிரைக்காரன் கையிலே கொடுத்து, கதவைத்திறக்கிறதற்குத் தாமும் உத்தரவு கடு தாசி சீட்டில் வாசற்படிக்குக் கொடுத்தனுப்பினர். கடுதாசி கொண்டுவந்தவன் கெவுனியிலே கூப்பிட்டுக் கடுதாசியைக் கொடுத்து உள்ளே வருகிறதற்குச் சாமர்த்தியமில்லாதபடியி னலே கதவைத் திறக்கமாட்டோமென்று சொல்லி ராத்திரி தானே மறுபடியும் சும்மா வந்துவிட்டான். அப்போது துரை

யவர்களுடனே கபுறு சொல்லுகிறதற்குச் சமயமில்லாதபடி யினாலே அந்நேரம் சொல்லவில்லை.

1748 ஆ ஜனவரி மீ 16உ க்ஷய பிரபவ ஹு தை மூ 6உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் காலமே நாலு மணிக்குப் பாளையம் கூச்சு பண்ணித் தம்பூரடித்தாவபிறகு இந்தக் குதிரைச்சுவாரும் மறுபடியும் இந்தக் கடுதாசியைக் கொண்டுவந்த வயணம், துரையவர்களுடனே சொன்னேன். மறுப்படியும் அந்தப் பிரகாரம் கடுதாசி எழுதி, ஒரு குதிரைக்காரன் கையிலே கொடுத்துச் சீக்கிரமாய் அனுப்புவிக்கச் சொன்னார். அந்நேரமே அனுப்பிவிட்டேன். பிற்பாடு பாளையம் கதலிப்போச்சுது. போகச்சே வழியிலே சிலமாடுகள் குண்டுகளைப் போட்டுவிட்டுப் படுத்துக் கொண்டதும், சில மாடுகள் கூடாரத்தைப் போட்டுவிட்டதும், சில மாடுகள் மருந்து பீப்பாயைப் போட்டுவிட்டதுமாய் இப்படி யிருந்தது. இதுகளைக் கண்டபோதெல்லாம் துரையவர்கள் பல்லக்கை விட்டிறங்கி அதுகளை எடுப்பித்து நடப்பித்துக் கொண்டு, பதினொரு மணிக்குத் தூக்கணாம்பாக்கத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். சேர்ந்து அவரவரங்கே யிருக்கிற ஸ்தானத்துக்குள்ளே யிருந்து சாப்பிடுகிற வேளையானபடி யினாலே சாப்பாடு காரியங்களை அங்கங்கே எத்தனம்பண்ணிக் கொண்டு சாப்பாடு சாப்பிட்டான பிற்பாடு அப்படி யிருக்கச்சே ஒரு பிராமணனை வேதகாரனென்று சொல்லி, துரை முன்னே பிடித்துவரச் சொல்லிவிட்டார்கள். அவனைப் புதுச்சேரிக்கு அனுப்பிவிட்டார்கள். பிறகு நாலரை மணிக்குப் பாளையம் ஒரு சின்ன முறிச்சலாய் முறிஞ்சது. அது எதனாலே என்றால், துரையவர்கள் பாளையத்திலே இறங்கி யிருக்கிற விடத்திலே சுற்றி அரை நாழி வழி தூரம் இருபது சிப்பாய்களை வைத்துக் காவல் காக்கிற வாடிக்கை. அதற்கடுத்தாப் போலே வேலங்காட்டண்டையிலே வர குறுக்குநேராய் பத்து குதிரை இங்கிலீஷ்கார குதிரைச் சிப்பாய்கள் இருக்கிறதற்கு ஒரு வழி தூரத்திலே வந்தார்கள். அதைக் கண்டு சிப்பாய்கள் கூக்குரல் போட்டதைப் பார்த்து அருகாமையிலிருக்கிற அஞ்சல்காரவர்களுக்கு ஒத்தாசையாய் ஓடிப்போனார்கள். பின்னையும் அதற்கடுத்த அஞ்சல்காரரும் ஓடினார்கள். இவர்கள் ஓடுகிறதெல்லாம் பாளையத்துக்கு நன்றாய்த் தெரிந்

தது. ஆனபடியினாலே அந்தச் சேதி விபரமாய்த் தெரியாமல் கடைக்கார மனுஷரும் சற்றே முறிந்து காபுறு பட்டது. அந்த க்ஷணமே தம்பூரடித்துப் பாறு வைத்த சற்று நேரத்துக்குள்ளே அவர்கள் போய்விட்டார்களென்கிற கபுறு வந்தது. ஆனதுகொண்டு, நாளது ராத்திரி பின்னையும் அதிகமாய் சொலுதாதுகளையும் அஞ்சல் வைத்தார்கள். ராத்திரி ஏழு மணிக்குத் திருவதியிலே யிருந்து இரண்டு கொல்லச் சேவகர், மீருசாயபு அவர்கள் சேவகரும் பணம் தண்டுகிறதற்கு ஆளுக்கொரு சீட்டு கையிலே பிடித்துக்கொண்டு கிராமத்துக்குப் போகிறவர்கள் சிப்பாய்கள் அஞ்சலிலே அகப்பட்டார்கள். அவர்களைப் பிடித்துக்கொண்டு எங்கே போகிறீர்களென்று கேட்கிறபோது, பணம் தண்டப்போகிறோமென்று சீட்டைக் காண்பித்தார்கள். சீட்டைக் காண்பித்தவுடனே அதைப் பார்க்குமிடத்தில், இன்ன ஊர் நிலுவை, இம்மாத்திரம் பொன், இம்மாத்திரம் பணமென்று எழுதி யிருந்தது. சீட்டுக் கொடுத்தவன் இன்னான் என்று பேர் எழுதியிருக்கவில்லை. அந்தச் சந்தேகத்தினாலே அவர்களைப் பிடித்துக்கொண்டு வந்து துரை அவர்கள் முன்னே விட்டார்கள். துரையவர்கள் சந்தேகப்பட்டு இரண்டு பேரையும் இரண்டு மரத்திலே கட்டுவித்து, பத்து பத்து அடி அடித்துக் கேட்கச் சொன்னார். அடிக்கச்சே ஒருத்தன் கையிலே நாலைந்து ஈயக் குண்டு இருந்து எடுத்தார்கள். அந்தக் குண்டைப் பார்த்து இங்லீஷ்காரன் குண்டு என்று சந்தேகப்பட்டு விபரீதமான அடியடித்து இல்லை என்னப்பட்ட பயங்கரமான விசேஷமெல்லாஞ் சொல்லிக் கேட்டார்கள். என்ன அடித்தும் நாங்கள் மீருசாயபு மனுஷரென்றும் விசாரித்து அறிந்த பிற்பாடு தலையை வெட்டிப்போடுங்கோளென்று ஒரே பேச்சாய் சொன்னார்கள். பிற்பாடு அவர்களை அவ்விடத்திலேதானே கப்பித்தான் சிப்பாய் கையிலே ஒப்புவித்தார்கள்.

*1748* ஆ. சனவரி மீ 17௨க்கு பிரபவ ஷு தை மீ 7௨ புதவாரம்.

இற்றைநாள் காலமே பழையது சாப்பிட்டு ஏழு மணிக்குக் கோட்டைக்குப் போய் சின்ன துரையவர்களைக் கண்டு பேசிக் கொண்டிருக்கச்சே, கடலிலே கப்பல்கள் காணுதென்று சொன்னார்கள். அதை தூச்சுக்குழல் வைத்துப் பார்த்ததிலே

ஆறு கப்பல்களும் ஒரு சுலுப்பும் கண்டது. அதிலே இங்கிலீஷ் கொடி போட்டிருந்தது. அந்தக் கப்பல்களைக் கண்டவுடனே மூலைக்கொத்தளத்திலே எழு பீரங்கிச் சுட்டான். அந்தப் பீரங்கிச் சத்தம், தண்டு தூக்கணும்பாக்கத்துக்கப்புறம் போகச்சே துரையவர்களுக்குக் கேட்டதாகவும், அந்தச் சாடை அறிந்த அந்நேரமே திருப்பிக்கொண்டு தண்டு, மற்றது சாமான்கள், சகலமும் திருப்பி மறுபடி வந்துவிடச் சொல்லிவிட்டுத் துரையவர்களும், முசியே பாதியும் ஐம்பது காடுது குதிரையுடனே 11½ மணிக்கு வீட்டிற்கு வந்து சேர்ந்தார்கள். மற்ற தண்டு ராணுவம், வெள்ளைக்காரர், சொலுதாறுகள், சாமான்கள் எல்லாம் ஒன்று பிறகே ஒன்று வந்துவிட்டார்கள். இங்கிலீஷ் கப்பல்கள் வந்தாலும் வரட்டுமென்று ஒரு கை பார்ப்போமென்று இராமல் வந்துவிட்டது. தேவனும்பட்டணம் இங்கிலீஷ்காரருக்கு இன்னுமிருக்கப் பிராப்தமிருக்கிறபடியினாலே முசியே துய்ப்ளேய்க்குத்தப் பேதை புத்தித் தோன்றி வந்துவிட்டார். முன் போகச்சேதானே இந்தப் பலனையெல்லாம் யோசனை பண்ணிப் போகவேண்டியது. அப்போது பெண்சாதி, வேகுகாரர் வந்து சொன்ன பேச்சை மெய்யென்று நம்பிப் புறப்பட்டுத் தூக்கணும்பாக்கம் மட்டுக்கும் எஜமான்தான் தானே போய்த் திருப்பிக்கொண்டு வந்து அப்புறம் திசையை அடைந்தான். முன் தான் போகாமல் முசியே புரி துரையை அனுப்பின போது குண்டுக்குள்ளே போய்க் கொத்தளங்களை வாங்கி, கும்பினீர் தோட்டத்தையும் பிடித்துக்கொண்டு திருப்பாதிரிப்புலியூரைக் கொள்ளையிட்டு, கூடலூர்மட்டுக்கும் ஓடிப்போக எதிராளிகளைத் துரத்திக் கூடலூரையும் பிடித்துக்கொள்ளுகிறதாயிருக்கச்சே கோட்டையிலே இருக்கிறவர்களும் சலங்குகள் அமத்திக்கொண்டு பாயை விரிக்கிறமட்டுக்குமிருக்கச்சே கப்பலைக் கண்டு பிடிபட்டு வந்துவிட்டார்கள். இப்போது அதுதானுமில்லாமல் எஜமானனே போனவிடத்திலே தூக்கணும்பாக்கத்து அத்துக்கு இப்புறமே புறப்பட்டு வந்துவிட்டது எப்படியிருந்ததென்னவென்றால், முன் பயணம் புறப்பட்ட இரண்டுநாளென்றைச்சேதானே எனக்கு வந்த ஓலைச்சேதி. ஆனால், மேலே கமாண்டோர் இஸ்காதுரு ஐந்தாறு கப்பல்கள் இருக்கிறதாகவும், அதுகளை வரச்சொல்லி எழுதினதாகவும், அதுவும் வருமென்று இப்போது ஒரு கப்பலிலே ஆறு நூறு

சொலுதாதுகள் வந்திறங்குகிறார்களென்றும் இப்படி எழுதி வந்த சேதியைப் போய்ச் சொன்னாப்போலே உனக்குச் சேதி அனுப்பினவன் மெய் எழுதவில்லை என்று சொல்லி, கமான்டோர் வரச்சொல்லி எழுதினதற்கு, என் கப்பலை வெதாபாக்கம் கொண்டுபோகிறேன் வரக்கூடாது. நீயாச்சுது கோட்டையாச்சுது ஸரிப்போனபடி பார்த்துக்கோவென்று எழுதியனுப்பினானென்று சொன்னதுமல்லாமல் மேஸ்தர் மாசை அழைத்து கோன்சேல் கூடி, இனிமேல் நடக்கவேண்டியதென்னவென்று கேட்டாப்போலேயும், இனிமேல் வேறே அடமானமில்லை. நாங்கள் சென்னப்பட்டணம் ஒப்புவித்தாப்போலே நீங்களும் ஒப்புவித்துப்போடுங்களென்று சொன்னதாயும், அதன்பேரிலே அவர் தட்டுமுட்டுகளை அப்பால் படுத்துகிறதாகச் சேதி வந்திருக்கிறதென்று சொன்னார். மற்றச் சேதியெல்லாம் அப்படி இருந்தாலும் கோன்சேலிலே மேஸ்தர் மாசு அப்படிச்சொல்லி வரச்சொல்லிச் சொல்லாவென்று யோசனை கூடப் பண்ணுகிறதற்கில்லாமல், பெண்டாட்டி தனக்கு வந்த சேதியென்று எழுதிக்கொடுத்தாப்போலே அது மெய்யென்று எண்ணி தேவனும் பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போன புத்தியைப் போலே வந்துவிட்டாரென்று தோற்றுது. இதுவும் அல்லாமல் எகதாளிபண்ணுகிற ஜனங்கள் விசேஷம் காதுகொடுத்துக் கேட்டு முடியவில்லை என்று என் புத்தி கேட்டு நடக்கிறவர்களுக்கெல்லாம் வருகிற அப்பிரதிஷ்டை இப்படிதான் என்று அறியவேண்டியது.

இற்றைநாள் பாளையம் கூச்சுபண்ணி அணிவகுத்து நடக்கச்சே தூக்கணும்பாக்கத்துத் தென்மேற்கே மூன்று நாழிகை வழிக்கப்பாலே போகச்சே, புதுச்சேரியிலே போட்ட பீரங்கி வெடி, ரெண்டு வெடி கேட்டது. கேட்டவுடனே அப்போதே பாரு நடக்கவொட்டாமல், சந்தடிபண்ணாமல் நிறுத்தினார். சற்று நேரத்துக்குள்ளே அப்படியே ஒருவருக்கொருவர் பேசாமல் நின்றார்கள். நின்றபிறகு முசியே பெடுந்துலக் என்கிற செக்ரெத்தேர் கையிலே எழுதியிருந்த கடுதாசியைப் பார்த்துக்கொண்டு வரச்சொல்லப் படித்துப் பார்த்துத் துரையவர்கள் சொன்னது: இன்னும் சற்று நேரத்துக்குள்ளே ஐந்தாறு வெடி பீரங்கிக் கேட்குமென்று சொன்னார். அப்படியே கேட்டது. கேட்டவுடனே மனது மெத்த விசனமாய்க் கால் நாழிகை பரியந்தம் குதிரைமேலே இருந்தபடியே மவுனமாயிருந்து குதி

ரையை விட்டிறங்கி கையை முறித்துக்கொண்டு, காலே பூமியிலே உதைத்து இப்படி நிர்ப்பாக்கியத்தனம் எங்கேயாகிலும் உண்டா என்று சொல்லி, முன்னேயும் புறப்பட்டபோதெல்லாம் இப்படி ஒவ்வொரு காரியமும் சம்பவிக்கிறதென்று சொன்னார். சொல்லி, சற்று நேரத்துக்குள்ளே. மழோர், மற்றுமுண்டான பேரை அழைத்துப் பாளயத்தைப் புதுச்சேரிக்குத் திருப்பச் சொல்லிவிட்டு, பல்லக்கேறிக்கொண்டு சற்றிடம் வந்து ஒரு மரத்தின் கீழே இறங்கி, ஒரு துண்டு ரொட்டி ஸாப்பிட்டு, ஒரு வீதர் சாராயங் குடித்துப் பல்லக்கிலே ஏறிக்கொண்டு தாமும் காடுது குதிரைக்காரரையும் நாலத்து ரெண்டு துரைகளுமாத்திரம் புறப்பட்டு இரண்டு நாழிகை வழி பிறகே வந்து இறங்கி காரைக்காலிலேயிருந்து பறங்கிப்பேட்டையிலே வந்திறங்கியிருக்கிற சொலுதாதுகளுக்குக் கடுதாசி எழுதியனுப்பி, அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, செவ்வையாய்ப் புதுச்சேரிக்கு வந்துவிட்டார். புறப்பட்ட நாலு நாளும் நாளுக்குநாள் பாளையும் கூச்சு ஆகிறது. அதிசீக்கிரம், அதிசீக்கிரமாக நடந்து ஜனங்களுக்கு ரஸ்து தின்பண்டங்களுக்கு மேன்மேலாய், குதிரை இல்லாமல் நடந்து பாளயம் புறப்பட்டு கதலிப்போகிறதைப் பார்த்தால் எதிராளி கெர்ப்பம் கலங்கிப்போம். அவர்களும் மனசு உற்சாகமாயிருந்து, கோமுட்டிசெட்டி கூலிக்காரர் முதலாய் வெகுதைரியத்துடனே இருந்தார்கள். பாளயம் கதலிப்போகிறபோது ஜனங்கள் வெள்ளம் புரண்டாப்போலே சற்றேறக்குறைய பதினாயிரம் பேருக்குக் குறையாது. பின்னையும் சில்லரைச் சேதிகள் எழுதவேணுமானால் எழுதலாம். அதிலே அதிசயமில்லை.

பின்னையும் வழியிலே பாளயம் நடந்துபோகிறபோது இறங்கினபோது குடிபடைகள் வந்து பயிர்பச்சை அழிந்து போகுது சுலும்பு பண்ணுகிறார்கள் என்று சொன்னால் அந்த க்ஷணமே சிப்பாய்களை அனுப்பி தாக்கீதுபண்ணி, அவர்களுக்கு நாலு, ஆறு ரூபாய்க்கொடுத்து ஸந்தோஷம் பண்ணிக்கொண்டு போனார். முன்னே இரண்டொருவிசை தண்டெடுத்துப் போனபோது இதிலே அரைக்கால் வாசி திட்டவட்டமில்லை. இப்படிக்கொத்த திட்டவட்டம் மகா-ள-ள-ஸ்ரீ குவர்னதோர் முசியே துய்ப்ளேய்க்கு அவர்களுக்குச் செல்லுமேயல்லாமல் மற்றவர்களுக்குச் செல்லாது. ராஜஸ்ரீ துரையவர்கள் நல்ல ஸாப்பாடு வேணுமென்றும், நல்ல நித்திரை வேணுமென்றும் பாராமல்

ராணுவப் பேருடனே கூடின ஸாப்பாடுபோலே சாப்பிட்டுக் கொண்டுவந்தார். ருசிபார்த்துக்கொண்டிருக்கவில்லை.

1748 ஆ ஜனவரி மூ 19உக்கு பிரபவ ஞு தை மீ 9உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: சென்னப் பட்டணத்திலேயிருந்து வந்த நாசுமாம் முசியே துப்பி என்கிற வனும், முன்னேவந்த வெள்ளைக்காரரும் கூடப் பயணம் புறப் பட்டுச் சென்னப்பட்டணத்துக்குப் போனார்கள். இதல்லாமல் சீர்மையிலேயிருந்து கப்பல்கள் வருகிறதென்கிற சேதிகொண்டு வந்து சுலுப்பை இற்றைநாள் பயணம்பண்ணி அந்தச் சீர்மைக் கப்பல்களை எதிரே போய் அழைத்துக்கொண்டு வரத்தக்க தாகப் பயணம்பண்ணி இற்றைநாள் பாயெடுத்து ஓடிப்போச் சுது.

1748 ஆ ஜனவரி மீ 20உக்கு பிரபவ ஞு தை மூ 10உ சனிவாரம்.

இற்றைநாள் வேட்டவலத்திலே யிருந்து.........சேவகரும் இரண்டு பேர் குதிரைக்காரரும் வந்து சேர்ந்தார்கள். அவர் களுக்குப் படிப்பந்தலைக் கொடுத்தோம்.

இற்றைநாள் பறங்கிப்பேட்டையிலே யிருந்து வந்த சேதி என்னவென்றால்: காரைக்காலிலே யிருந்து வந்த நாசுமா எல் லாரும் மறுபடி காரைக்காலுக்குப் போய்விட்டார்களென்றும், நாலு பேர் கூட உடம்பு சொஸ்தமில்லாமல் விழுந்தவர்களை விட்டுவிட்டுப் போனபடியினாலே தேவனாம்பட்டணத்திலே ஒரு சலங்கிலே சொலுதாதுகள் போய் இறங்கி அந்த நாலு பேரையும் பிடித்துக்கொண்டு வந்ததாய்ச் சொன்னார்கள். அந்தச் சேதி தேவனாயகசெட்டி நமக்கெழுதி அனுப்புவித் தான். அந்தச் சேதியை நான் போய் ஸ்ரீ துரையவர்களுடனே சொன்னேன்.

1748-ம் ஆ ஜனவரி மூ 24உக்கு பிரபவ ஞு தை மீ 14உ புதவாரம்.

இற்றைநாள் காலமே நான் ராஜஸ்ரீ துரையவர்கள் வீட் டிற்குப் போனவிடத்திலே துரையவர்கள் உத்தாரம்கொடுத்த

தென்னவென்றால்: குண்டுகிராமம், ஒழுகரை, முருங்கப் பாக்கம், அரியாங்குப்பம் இந்த நாலு கிராம குத்தகைக் காரரையும் அழைப்பித்து ஆயிரத்தி எழுநூற்றி நாற்பத்தி ஏழாம் ஆண்டு தெசம்பர் மீ அறுதிக்கு நாலு கிராமத்துக்கும் நெல் அளந்துவிடத்தக்கதாக அந்தக் குத்தகைக்காரரை அழைத்தனுப்புவித்துப் பேசி உடம்படிக்கைப் பண்ணிப்போ டென்று சொல்லி உத்தாரம் கட்டளையிட்டார்கள். அந்தப் படியே குத்தகைக்காரரை அழைப்பித்து மேலே எழுதியிருக்கப் பட்ட நாலு கிராமத்துக்கு முன் 1747 ஆ தெசம்பர் மீ அறு திக்குச் செலுத்தவேண்டிய நாலாயிரம் வராகனுக்கு நெல்லாய் நமக்கு அளந்துவிடவேணுமென்று சொன்னோம். அதன்பேரிலே நல்லது அதுகளெல்லாம் யோசனைபண்ணிக்கொண்டு வந்து சொல்லுகிறோமென்று சொல்லிவிட்டுப் போனார்கள்.

இற்றைநாள் மத்தியானம் பத்து மணி வேளைக்கு வடக்கே யிருந்து வந்த நாலு கப்பல் டன்னதமாய் கரை நெருங்கி ஓடி வந்தது. அந்தக் கப்பலிலே கொடி போடாமல் சும்மா ஓடி வந்தபடியினாலே பிராஞ்சுக் கப்பலென்று சொல்லி இவ்விடத் திலே கோட்டையிலே கொடி போட்டார்கள். இந்தக் கொடி யைக் கண்டவுடனே கப்பலிலே இங்கிலிஷ் கொடியைப் போட்டுக்கொண்டு தெற்கே ஓடிப்போச்சுது.

இன்றைபதினம் மத்தியானம் பனிரெண்டு மணிக்கு, தம்பு சாமி முதலியார் குமாரன் கனகராய முதலியார் பெண்சாதி யுடனே கூடப் பிறந்தவன் கடலோரத்திலே கேசவய்யனுக்குப் பதிலாய் உத்தியோகத்திலே யிருந்தவன், சீனுவாசமுதலி என் கிறவன் பரலோகத்தை அடைந்துபோனான். ராத்திரி எட்டு மணிக்கு எடுத்துப் போய் கல்லறையிலே அடக்கம்பண்ணினார் கள்.

இற்றைநாள் சாயங்காலம் நாலு மணிக்கு ஒழுகரையிலே கனகராய முதலியார் கட்டின கோவிலிலே திருநாள் பண்ணு கிற நிமித்தம் இவ்விடத்திலே சம்பாகோவிலிலே யிருந்து சிலை களை கேடயத்தின்பேரிலே எடுப்பித்துக்கொண்டு கனகராய முதலியார் வீட்டுத்தெரு வழியாய் ஒழுகரைக்கு எடுத்துக் கொண்டு போனார்கள்.

இற்றைநாள் பின்னையொன்றும் அதிசயமான சேதி எழுத வேண்டியது ஒன்றுமில்லை.

1748 ஆ சனவரி மீ 25உ க்கு பிரபவ ஸு தை மீ 15உ வியாழக்கிழமை.

இற்றைநாள் முத்தியப்பிள்ளை குமாரன் லக்ஷ்மணனுக்கு இரண்டு மூன்று மாதமாய்ச் சரீரம் சொஸ்தமில்லாமல் படுத்துக்கொண்டிருந்தபடியினாலே இன்றையதினம் தாது நஷ்டமாகி சேஷ்பத்திலே விழுந்திருக்கிறபடியினாலேயும், மேல் சுவாசம் வாங்கிக்கொண்டிருக்கிறபடியினாலேயும் இனிமேல் நிருவாகமாகிறதாயிருக்கவில்லை. கடைத்தேறுகிறது பிரயாசமாய் இருக்குதென்று வைத்தியரெல்லாரும் சொன்னபடியினாலே இன்றையதினம் சாயங்காலமான ராத்திரி குண்டு போடுகிற வேளைக்குச் சருவ பிராயச்சித்தமும் பண்ணுவித்தோம்.

இற்றைநாள் வியாழக்கிழமை ராத்திரி பனிரெண்டு அடித்து நாலரை மணி வேளைக்கு வெங்கட்பிள்ளை குமாரன் முத்தியப்பிள்ளை வளர்த்துக்கொண்ட பிள்ளை பாப்பாள் புருஷன் லக்ஷ்மணப்பிள்ளை வைகுந்த பிராப்தி ஆனான்.

1748 ஆ சனவரி மீ 26உ க்கு பிரபவ ஸு தை மீ 16உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் ஏகாதசி பொழுதுவிடிந்து ஒன்பது மணிக்கு மேல் ஸ்மசானத்துக்குக் கொண்டுபோய்த் தகனம்பண்ணுவித்து வந்துவிட்டோம்.

1748 ஆ சனவரி மீ 27உ க்கு பிரபவ ஸு தை மீ 17உ சனிவாரம்.

இற்றைநாள் காலமே போய் பால் தெளித்துவிட்டு வந்து எட்டு மணிக்கு வீடு சேர்ந்து பனிரெண்டு மணிக்குமேல் நலக்கட்டும் கட்டிக்கொண்டார்கள்.

இற்றைநாள் நடந்த அதிசயமென்னவென்றால்: கும்பினீர் வர்த்தகனாயிருக்கிற சித்தம்பல செட்டியார் தம்பி ராமலிங்க செட்டி என்கிறவன் காலமே ஏழு மணிக்குக் குளத்துக்குப்

போய், பல் விளக்கிக்கொண்டு பூந்தோட்டத்துக்கு ஏ
போய் பத்திரமெடுக்கச்சே மாரடைத்துக்கொண்டு கீழே
விழுந்தாராம். விழுந்தவுடனே மூர்ச்சையாகிப்போனாரென்று
ஏணைகட்டிக்கொண்டு வீட்டுக்கு எடுத்துக்கொண்டுவரவே
அப்போதானே சிவலோகப்பிராப்தி ஆயிப்போனார்.

இற்றைநாள் நடந்தசேதி முசியே ஷோஸி மச்சிலிபந்தரிலே முன்னாலே சென்றுபோனபடியினாலே அவர் பெண்சாதி மச்சிலிபந்தரிலேயிருந்து என்னத்துக்குப் போய் அவ்விடத்திலேயிருக்கிற தட்டுமுட்டுகளெல்லாம் எடுத்து ஒரு ஒலாந்தே கப்பலிலே ஏற்றிக்கொண்டு மதாம் ஷோஸியும் அந்தக் கப்பலிலே ஏறிப் பழவேர்க்காட்டிலே வந்திறங்கி அங்கேயிருந்து இவ்விடத்துக்கு வருகிறோமென்றெழுதி அனுப்பியிருந்தார்கள். அவள் எழுதியனுப்பின கடுதாசிபடிக்கு இன்றையதினம் இவ்விடம் வந்து சேர்வார்களென்று லெக்கு பார்த்துக்கொண்டு அவர்களுக்கு விடுதி கொமிசேல் வீட்டிலே மேலண்டையிலேயிருக்கிற வீட்டை ஒழித்து விடுதி விட்டுவைத்து, துரையவர்கள் எதிர்கொண்டு கோட்டைக்குப்பம் நயினியப்பிள்ளைச் சாவடி அந்தமட்டுக்கும் போயிருந்து, ஆறு மணி மட்டுக்கும் பார்த்துக்கொண்டிருந்து அந்த மட்டுக்கும் வராதபடியினாலே அவ்விடத்திலேயிருந்து நம்முடைய சாவடிமட்டுக்கும் சேவகரை அனுப்பி, கபுறு தெரிந்துகொண்டு வரச்சொல்லிவிட்டு வீட்டிற்கு ஆறு மணிக்கு வந்து சேர்ந்தார். அதுவும் பின்னாலே ஏழு மணிக்கு மதாம் ஷோஸியும் வந்து துரைவீடும் சேர்ந்தாள். அவள் வந்தவுடனே அவரவர் கட்டிக்கொண்டு அங்கலாய்த்தார்கள்.

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: சுங்கு சேஷாசல செட்டியார் தம்பி லக்ஷ்மபதி செட்டியார் கூடலூரிலே போயிருந்தவிடத்திலே நேற்றையதினம் ஏகாதசிக்குப் பலகாரம் பண்ணினதின்பேரிலே ராத்திரிக்குப் பேதிகண்டு மூர்ச்சித்துக் கீழே விழுந்தமட்டிலே வைகுந்தம் சேர்ந்தானென்கிற கபுறு இன்றையதினம் எழுதிவந்தது.

இன்றையதினம் மத்தியானம் சாப்பிட்டுப் படுத்துக்கொண்டு ஸாயந்திரம் எழுந்திருந்தேன். எனக்குச் சரீரம் பளு

வாயிருந்தபடியினலே ஸாயங்காலம் வெளியே போகவில்லை, வளவிலேதானே இருந்தேன்.

இற்றைநாள் ராத்திரி எட்டு மணிக்குச் சாவடி மணியக் காரர் வந்து சொல்லச்சே சொன்ன சேதி என்னவென்றுல்: ராஜஸ்ரீ துரையவர்களுக்கு கடலோரம் ராமச்சந்திரய்யனை அழைத்து நேற்று, முந்தாநேற்று, இன்றைக்கு வந்த படகிலே வந்த தானியத்தை விலைபேசி வாங்கிப்போடச் சொல்லி உத் தாரம் கட்டளையிட்டார்கள். அந்தப்படகுமேலே தானியம் கொண்டுவந்த வர்த்தகரை அழைப்பித்து விலை கடையிலே விற் கிற விலைப்படிக்குக் கொடுக்கச் சொல்லிச் சொன்னுர்கள். கடை யிலே விலை எப்படியென்றுல் பெரிய படியாலே நாலு படி விற்குதென்று சொன்னுர். அதன்பேரிலே துரையவர்கள் சாவடி மணியக்காரரை அழைப்பித்து இந்தமட்டுக்கும் கார் நெல்லு பணம் 1-க்கு பெரிய படியாலே மூன்றரை படியும் சின்ன படியாலே ஏழுபடியும் விற்குர்களே, இனிமேல் நாளை முதற்கொண்டு பணம் 1-க்கு கார் நெல்லு சின்ன படியாலே எட்டு படியும், பெரிய படியாலே நாலு படியும் குறையாமல் விற்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தார்களாம். அதற்கு மணி யக்காரரிருந்துகொண்டு, அப்படி உயர்த்தி விற்கச் சொன்னுல் ஒருத்தரும் கொண்டுவாரார்கள். பிரியமாய்க் காணும். கொண்டுவருகிற பேர் புதுச்சேரியிலே கும்பினீருக்குத் தானி யம் பிடிக்கிற நிமித்தம் உயர்த்திப் போடுகிருர்களென்றும், ஒருத்தரும் கொண்டு வாரார்களென்றும், அப்படி கட்டுபண் ணப் போகாதென்றும் சொன்னுர்களாம். அதற்கு உத்தரவு அவர்களிந்த ஊரைத் தவிர பின்னே எங்கே கொண்டுபோகப் போகிருர்கள்? தனக்குத்தானே கொண்டுபோகப் போகிருர் கள். தனக்குத்தானே கொண்டுவருவார்கள். உங்களுக்குத் தெரியாது சும்மா விற்கச் சொல்லுங்கோளென்று உத்தாரம் கொடுத்தார்களாம் அந்தப்படிக்கு நல்லதென்று சொல்லிக் கொண்டு வந்து நம்முடனே சொன்னுர்கள்.

இற்றைநாள் லாலாபேட்டையிலேயிருந்து கோதும்பை மாதிரி கொண்டுவந்த கவரைகள் சிங்கிரி லச்சய ராமணய்யன் இவர்கள் நாலைந்து பேரும் வந்து அன்னபூரணய்யன் முகாந் திரமாய் ஐம்பது அறுபது பல்லாமாத்திரம் லாலாபேட்டை யிற்காட்டிலே வந்திருக்குதென்று சொல்லி, அந்த மாதிரியை

வைத்து விலை ஆற்காட்டு பல்லா 1-க்கு சென்னப்பட்டணம் செலாவணி வராகன் 4 7/8 ஆகவும், பொதி இவ்விடத்துக்கு எடுத்து வருகிறதற்கு சத்தம் பல்லா 1-க்கு பொதி 1-க்கு ரூ. 2 5/8 ஆகவும் இந்தப்படிக்குப் பேசித்தீர்ந்து மாதிரியை வாங்கிக்கொண்டு அச்சாரம் முப்பத்திரண்டு ரூபாயும் கொடுத்து லாலாபேட்டைக்கு முத்தப்பிள்ளைக்கும் திருமலைப் பிள்ளைக்கும் கடுதாசி எழுதிக்கொடுத்து இந்தப் பொதியின் பிறகே இரண்டு சேவகரைக்கூட்டி, வழியுமறிந்துகொண்டு வரச்சொல்லியும் அவ்விடத்திலே நிறுக்கதைக் கட்டியும் அனுப்புவிக்கச் சொல்லி இந்நேரமெழுதியனுப்புவிட்டோம்.

1748 ஆ சனவரி மீ 28 உ க்கு பிரபவ ஸு தை மீ 18 உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலமே நான் குவர்னதோர் வீட்டிற்குப் போனவிடத்திலே அப்புமுதலியும், தியாகும் பெரிய துரையவர்கள், உமக்குப் பிள்ளை பிறந்திருக்கிற சேதியைக் கேட்டு மிகுதியும் ஸந்தோஷப்பட்டு தமக்கு ஏன் கபுறு சொல்லவில்லையென்று ரொம்பவும் துரிதமாகச் சொன்னார். பிள்ளை பிறந்தபோது நீங்கள் தேவனும்பட்டணம் போகப்போகிறதறுவாயாயிருந்தபடியினாலே எச்சரிக்கவில்லை. அப்பால் வந்ததின் பேரிலே நீங்களிருந்திருக்கிறீர்களென்றிருந்த சாடையாய்க் காணுமென்று சொன்னதின்பேரிலே, நம்மப்பனுக்குப் பிள்ளை வேணுமென்றும் காபிறுதிச்சான் சுவாமிக்கு அவன் மனதின் படிக்குச் சந்தோஷம் பண்ணினானென்றும், நானப்போது அறியாமற்போனேனென்றும், மாப்பிள்ளை லக்ஷ்மணப்பிள்ளை காலம் பண்ணிப்போனதற்கு வியாதியைச் சரீரத்திலே வைத்துக்கொண்டு எப்படி சொல்லாமல் இருந்தானென்று அவன் பேரிலே கோபமாய்ச் சொன்னாரென்றும், இது காரியத்துக்கு ரங்கப்பன் தாபந்தப்படக் கவையில்லையென்று சொன்னாரென்றும், ரங்கப்பன் தம்பி திருவேங்கடம் ஸ்ரீ வித்தைகளிலே ரொம்ப திரிந்து வியாதிகளை வாங்கிக்கொண்டு வீட்டிலேயிருந்து போனானிவன் முன்னுக்கு வரத்தக்கவனல்லவென்று துரை அவர்கள் சொன்னார்கள். இந்தப்படி பெத்துநாயகனும் நேற்றையதினம் அப்புமுதலியைக் கேட்டதும் துரை சொன்ன உத்தாரமும் வந்து சொன்னான். இந்தச் சேதியைக் கேட்டுக்

கொண்டு அப்பாலே சாலையிலே நுழைந்தேன். அங்கே துரையவர்கள் அலுவலிலே யிருந்தபடியினாலே சேன்தினேர் கார்க்கிற நாளிலே தானப்பமுதலி யிருந்தார், அவனும் நானும் லோகாப்பிரமமாய்ப் பேசியிருக்கச்சே குவர்னதோர் வந்து என்னை அழைத்தார். நான் கையிலே குண்டுகிராமத்து நெல் இவ்வளவு காணுமென்றெழுதினது கையோடிருக்கச்சே என்ன வென்று கேட்டார். குண்டுகிராமங்களுடைய தானியத்துக் கையேடு என்று சொன்னேன். நல்லது இருக்கட்டும். உன் மருமகன் செத்துப்போனானே அவனுக்குர்த்தி சேஷ்டை கண்டிருந்ததைச் சொல்லாமல் ஒளித்து அதன்பேரிலே அதுவிஸ்தாரமாகி மரணத்தை யடைந்தாரென்று சொன்னார்கள், மெய் தானாவென்று கேட்டார். மெய்தான், ஆயுசு அவ்வளவுதான் என்று சொன்னேன். ஆனாலப்படி ஒளிக்கிறதல்ல. சுவாமி உன் மகளைக் கொண்டுபோனதற்கு அந்தத் துக்கம் தீரத்தக்கதாகவும், உன் ஆஸ்தி எசமானாகவும், உன் வசமும் விருத்தி பண்ணத்தக்கதாகவும் ஆண்பிள்ளை கொடுத்த சேதி எனக்கு என்னத்திற்குச் சொல்லாமற்போனாயென்று கேட்டார். அப்போது நீங்கள் தேவனாம்பட்டணம்பேரிலே போகப்போகிற சாம்சாம் சேர்க்கிற சுருக்கினாலே சொல்லவில்லையென்று சொல்லி, உங்கள் பேர் வாங்குகிறதற்கு உங்களடிமை வேலை செய்யவும் பிறந்தானென்று சொன்னதற்கு நகைத்துக்கொண்டு பிறந்த தினந்தானே என்னத்திற்குச் சொல்லாதே இருந்தாய் என்று சொல்லிவிட்டு, பெண்சாதியண்டைக்குப் போய் மறுபடி வந்து, தானியம் எத்தனை கரிசை நெல்லு குண்டுகிராமங்களிலே காணுமென்று கேட்டார். இன்னும் விசேஷித்துக் காணும், அது முன்னும் பின்னும் அறுப்பும் புஞ்காச நிலை சம்மதியிலே போகாதா? தற்காலம் நூற்றி முப்பது கரிசை காணும். இதற்கு விதைக்குக் களைக்கூலிக்கு நிறுத்தி குறையதை நிறுத்தி மற்றதைக் கும்பினீருக்கு அளந்துகொள்ளுகிறதுதானென்று சொன்னேன். நல்லது, அதற்கு விலை தீர வேணுமே. தீர்த்துப்போடென்று சொன்னார். உங்களபிப்பிராயம் சொன்னால் அந்தப்படிக்குப் பேசித் தீர்த்துப்போடுகிறேனென்று சொன்னதற்கு அது எனக்குத் தெரியாது. உனக்கு எப்படி யுக்தமோ அப்படி தீர்த்துப்போடென்று சொன்னார்.

பிறகு, உனக்கு முன்னே எத்தனை பிள்ளைகள் பிறந்தது, இப்போது எத்தனை இருக்கிறதென்று கேட்டார். நாலு பெண்

பிறந்து மூத்த பெண்ணும் அதற்கு நேரிளைய பெண்ணும் போச்சுது. இப்போது இரண்டு பெண்ணிருக்கிறது. நேற்று ஒரு ஆண் பிள்ளை, உங்கள் பேர் வாங்கிக்கொள்ளவும், அடிமை வேலை செய்யவும் பிறந்திருக்கிறுனென்று சொன்னதற்கு, நீ அப்போதே என்னுடனே சொல்லாதே போனதென்னவென்று கேட்டார். நானும் முன் சொன்னபடிக்கு தேவனும்பட்டணத்துச் சாம்சாமும் சண்டைக்குப் போகிற அலுவலவசரத்தின்பேரிலே இருக்கிற அலுவல் வேளையானபடியினுலே சொல்லவில்லை என்று சொன்னதற்கு, திரும்பியும், நீ சொல்லாதேபோனதென்னவென்று அதைத்தானே இரண்டு தரம் மூன்றுதரம், நாலு தரம் கேட்டார். அவரபிப்பிராயம் இன்னதென்னதென்று நன்றுய் நிச்சயமாய்ப் படவில்லை. அப்பால் தேவனும்பட்டணம் சமாசாரமும் கேட்டுத் திரும்பியும் உன் மருமகன் செத்துப்போன துக்கத்தைப் பரிகாரம் பண்ணத் தக்கதாக சுவாமி கட்டளையிட்டாரென்று சொன்னுர். நானும் அதற்கு உபசாரமாய்ச் சொன்னேன். இப்படி பின்னையும் சற்றுநேரம் பேசியிருந்த பிற்பாடு, வேட்டவலத்துச் சேவகர்களும், மனுஷர்களும், வந்தவர்களும் வந்துகொண்டிருக்கிறுர்கள். அவர்களை அனுப்பிவிடத் தேவையில்லையா என்று கேட்டதற்கு, சனம் 1-க்கு ஒரு பணம் விமுக்காடு கொடுத்து அனுப்பிவிடச்சொல்லியும், வந்த குறிமனுஷருக்குப் பேருக்கு ரெவ்வெண்டு கெசம் சகலாத்துக் கொடுத்தனுப்பி, வேட்டைவலத்துப் பண்டாரத்துக்கு உபசாரமாய்க் கடிதம் எழுதி அவனுக்கு ஏதாகிலும் ஒருவெகுமானமும் அனுப்புவோமென்று சொல்லி, சேவகர்களையும் குறிக்காரர்களையும் முன்னே அனுப்பிவிடு என்று சொன்னுர். நல்லதென்று சொல்லி, அப்பால் உடையார்பாளையத்திலிருந்து தம்பாச்சியார்பிள்ளையும், விஸ்வபதி அய்யனும் இரு நூறு பொந்திலியாரைக் கூட்டி அனுப்புவித்தேன் என்று எழுதின சேதியைச் சொன்னதற்கு, மறுபடி அவர்கள் திரும்பிக்கொண்டு போகச்சொல்லி மனுஷரை அனுப்பச் சொல்லியும், புறப்பட்ட நாள் முதற்கொண்டு வேட்டவலத்தாருக்கு அந்தப்படிக்கு நடப்பிக்கச்சொல்லி உத்தாரங்கொடுத்தார். நல்லதென்று சொல்லி அனுப்புவித்துக்கொண்டு பகல் சாப்பாட்டுக்கு வீட்டிற்கு வந்தேன்.

இற்றைநாள் ராத்திரி வேட்டவலத்தாரை, குதிரைச் சுவார்களையும், குறிக்காரரையும் அழைப்பித்து அவரவர்

களுக்குக் கொடுக்கிறபடிக்கு வெகுமானம்பண்ணி, படியும் தீர்த்துக் கொடுத்து, பேருக்கு ஒரு ரூபாய் கொடுத்து அனுப்பி விட்டேன். உடையார்பாளையத்தார் வருகிறவரண்டைக்கு தம்பாச்சியார்பிள்ளை மனுஷர் அய்யங்காருக்கும் சேவகரும் வந்திருந்தவர்கள் மேலே எழுதினவர்களுக்கு அந்தப்படிக்கு இவர்களுக்குத் தீர்த்துக் கொடுப்பித்து மறுபடி திரும்பிக்கொண்டு சிக்கிரமத்துக்குப் போகச்சொல்லி அனுப்புவித்தேன்.

1748 ஆ சனவரி மீ 29உ க்கு பிரபவ ஹ தை மீ 19உ திங்கட்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் முசியே கோர்னேக்கு காங்குப்புடவை நூறு வந்ததையும் சுக்கடுத்த மறமை சொல்லாவும், எப்போது கட்டுப்போட்டுக்கொள்ளுகிறீரென்று கேட்டதற்கு, சின்ன துரை சரீரம் சுவஸ்தமில்லாமல் இருக்கிறாரே, அவர் நாளைநாளையன்றையிலே வருவார். வந்தவுடனே கட்டுப்போட்டுக்கொள்ளுவோமென்று சொன்னான். அப்பால் முசியே லூக்கா லாலாபேட்டையிலே பற்றிக்கொண்ட ரூபாய் 3365 நேற்று மாலையில் எழுதிக்கொடுத்த ரசீதிலே, 360 ரூபாய்க்கு எழுதிக்கொடுத்த ரசீதிலே கையெழுத்துப் போட மறந்துபோனானோ என்னமோ தெரியாது. அதைத் தகராறு பண்ணினான். அதற்கு ரசீது முடிய அவன் கையெழுத்தா எழுதியிருக்கச்சே கையெழுத்துப் போடாதே போனாப்போலே தகராறு அல்லவென்று சொன்னதின்பேரிலே பின்னையும் இரண்டொரு வெள்ளைக்காரரும் மெய்தானென்று ஒத்துக்கொண்டான். அப்பால் நாட்டுப்புறத்திலேயிருக்கிறவர்கள் கையெழுத்து என்று வேறே தெரியுமா? ஒருக்கால் பேனாவினாலே பத்து வரி எழுதினதே சரியென்று பார்த்துக் கொண்டார்களென்று சொன்னதற்கு, மெய்தானென்று ஒத்துக்கொண்டு, நல்லது குவர்னதோருக்குக் காண்பித்து நீ எழுதிக் கொடுத்திருக்கிற ரசீதை கொடுத்துவிடுகிறேனென்று சொன்னதுமல்லாமல் அதனயிருக்கிறதைக் கூடக் கொடுத்து விடுகிறோமென்று சொல்லிவிட்டு, குவர்னதோர் வீட்டிற்கு வந்து இதிலே துரையவர்கள் சேவகன் அழைக்க வந்தான். நானும் துரை வீட்டிற்கு வந்தேன். துரை கோட்டைக்குக் காங்குப்புடவை அனுப்பவில்லையாவென்று கேட்டார். அதற்கு

முசியே கோர்னே இருந்துகொண்டு நூறு கோடி காங்குக்கிழு வும் கொடுத்த மறமைசொல்லா வந்த சேதி சொன்னான். நல்லதென்று சொல்லி, அப்பால் தானியம் கடையிலே கொள்ளச்சொரன்னோமே, எத்தனை கரிசை சேர்ந்த தென்று கேட்டார். பத்து கரிசை சேர்ந்ததென்று சொன்னேன் அதற்கு அவர் இனி பத்துநாள் மட்டுக்கும் தானியம் வருத்து மட்டாய் இருக்கும். ஏனென்றால் கார்நெல் பெரிய படியாலே நாலு படியும், சம்பா மூன்றரை படியும் விற்கச்சொன்னோமே முன் விலைக்கு ஒரு படி ஒசத்தியானபடியினாலே அவரவர்கள் கொண்டுவருகிறவர்கள் சற்று கசந்து அப்பால் குதிரிவருகிற தற்குப் பத்துநாள் செல்லும் என்று சொல்லுார். அது மெய்தா னென்று சொன்னேன். இந்த வருஷத்துக்கு என்ன விலை விற் குமென்று கேட்டார். பெரிய படி ஐந்து படி விற்குமென்று சொன்னேன். அப்படிதான் தோற்றுதென்று சொன்னார். அதிலே முசியே கோர்னே, முசியே பெற்சே, வடக்கத்திய நெல் வந்ததை அளக்கிறதற்குச் சற்று அட்டி சொன்னான். அதன் பேரிலே கண்டித்து அளந்துபோடு விலையுடனே சேர்ந்தது. வேணுமானால், குவர்னதோருடனே பேசிக்கொள்ளென்று சொன்னேனென்று சொன்னதற்கு, கடை விலைப்படிக்குத் தன்னிச்சையாய்க் கொடுத்துவிடுவான், அப்படி கண்டியாதே என்று ஒப்புறவாய்ச் சொன்னார். அதன்பேரிலே சென்னப்பட் டணத்திலேயிருந்து கும்பினீர் வர்த்தகர் மனுஷர் பஞ்சு நிறுத் துக்கொண்டது இத்தனை ராத்தல் என்று தெலுங்கிலே எழுதி பெரியம்பலசெட்டி, அம்மையப்பசெட்டி, தாண்டவராய செட்டி கையெழுத்துப் போட்டு வந்த காகிதத்தைக் காலத் தாலே முசியே கோர்னே கையிலேபோலே கொடுத்திருந்தான் அதைத் துரைகையிலே கொடுத்துச் சேதி சொன்னான். அதற் குத் துரையவர்கள் எனக்குக் காகிதத்தைக் காண்பித்து, கும் பினீர் வர்த்தகர்கள் கையெழுத்துப் போடுவித்து, முசியே கோர்னே கையிலே கொடுப்பாயென்று சொன்னார். நல்ல தென்று அந்தக் காகிதத்தை வாங்கி முசியே கோர்னே கையிலே கொடுத்து வர்த்தகரை அழைத்து வருகிறோமென்று சொல்லி விட்டு அப்பாலே வந்தேன். இதிலே கோர்னேயை அனுப்புவித் துக்கொண்டு போனபிறபாடு குவர்னதோர் என்னை அழைத்து தேவனாம்பட்டணத்துச்சேதி ஏதாகிலும் வந்ததாவென்று கேட் டார். பதினாலு கப்பல்களும் சுலுப்புகளுமிருக்கிறது சிறிது

வெள்ளைக்காரர் இறங்கினது அவர்கள் தாங்களிருக்கிற விடத்திலே பத்திரம் பண்ணிக்கொண்டிருக்கிற சாடையும் சொன்னதின்பேரிலே.முத்தியப்பன் என்னசெய்கிறான், எங்கே இருக்கிறானென்று கேட்டார். உத்திரமல்லூரிலே இருக்கிறார். நேத்திரம் தெரியாது சரீரம் ரொம்ப தளர்ச்சி என்று சொன்னதற்கு, முத்தியப்பன் செத்துப்போனதாக ராத்திரி யாரோ சொன்னாப்போலே இருந்ததென்று சொன்னார். அதற்கு நான் உம்முடைய தய்வு தப்பினமட்டுக்கும் அப்படிதானென்று சொன்னேன். அதற்கு அவர் இங்கே யாரோ சொன்னதாக ஞாபகமிருக்குதென்று சொல்லி, அவனுக்குப் பிள்ளையுமில்லை அல்லது புத்திரஸ்ததிகாரமாயிருந்த பிள்ளையும் செத்துப்போனாப்போலே ஆச்சுதே. வார்சுகாரர் யாரென்று கேட்டார். ஞாயாதிகள் பெரியப்பன் பிள்ளைகள், சிற்றப்பன் பிள்ளைகள் ஒருத்தரையுங் காணோம். இனிமேல் புத்திரஸ்ததிகாரம் பண்ணிக்கொண்டாலுண்டு என்று சொன்னேன். ஆனால், தபிலியம் ஊர் கணக்கு நடக்குது. இவனுக்குப் பிற்காலம் யாரைச் சேருமென்று கேட்டார். அப்போது அந்த ஆதினத்துக்கு ஒரு பிள்ளையை வளர்த்துக்கொள்ளாமல் இரார்களென்று சொன்னேன். வீடு வாசல் சம்பாகோவிலாருக்கு அடகு அல்லவா வைத்திருக்குது என்று கேட்டார். ஆம் என்று சொன்னேன். அப்போது முசியே துலோமாம் சின்ன மனுஷன். அப்படி அவனுடைய நடத்தை அதற்குத் தக்கதாப் போலே என்றும், பின்னையும் அவனைத் தூஷித்து அநேகம் வார்த்தைச் சொன்னார். அப்பால் சிரகந்தனெங்கே என்று கேட்டார். அவர் நாட்டுப்புறத்திலே இருக்கிறான். கொஞ்சம் நஞ்சம் கையிலே காசு கொண்டுவந்தவனானபடியினாலே அங்கே சத்தே பேரம்பண்ணிக்கொண்டு அவ்விடத்திலேதானே இருந்துகொண்டு வருகிறான் என்று சொன்னேன். இவனுக்குப் பணம் நல்ல சம்பாத்தியமல்லாதபடியினாலே ஒரு காசாகிலும் நில்லாது. எப்படி அநியாயமாய்ச் சம்பாதித்தார்களோ அப்படியே போய்விடுமென்று சொன்னார். அதற்கு இவன் மாத்திரமல்ல. சென்னப்பட்டணத்திலே யாதாமொருத்தர் சம்பாதித்தார்களோ எல்லாருக்கும் அப்படிதான் என்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் நானிருந்துகொண்டு அன்வர்கானவர்கள் சென்னப்பட்டணம் குத்தகைப் பணம் கேட்டு எழுதியனுப்பினபடியினாலாச்சுது. அது ஒரு வருஷத்துக்கு உண்டானது கொடுத்து அனுப்பிவிடவேணுமே

என்று சொன்னதற்கு, பிறியேலை அழைத்துக் கேட்டார். பிறியேல், உனக்கென்னவாகிலும் தெரியுமாவென்று கேட்டான். ஆயிரத்திருநூறென்றும், நூறென்றும் தெரியவில்லை. இத்துடனேகூட ஏதாகிலும் சகலாத்து, பன்னீர், மேவா தினுசுகளிருக்கும். இதல்லாமல் முசத்திகளுக்குக் கஸ்தூரி உண்டென்று அவர்களெழுதினர்களென்று சொன்னதற்கு நல்லது, முசியே பெடுதல்மி பேருக்கு ஒரு காகிதம் இங்கிலீஷ்காரர் தஸ்திரமிருக்கிறதைப் பார்த்து எழுதியனுப்பச்சொல்லி எழுதியனுப்பச் சொன்னர். அந்தப்படிக்கு முசியே பெடுதல்மியண்டைக்குப் போய் ஒரு காகிதம் எழுதுவித்து, துரை கையெழுத்துப் போடுவித்து, அப்பால் முத்திரை போடுவித்து, சென்னப்பட்டணத்துக்கு அனுப்புவித்துப்போட்டு, நானும் குலாபுசிங்குக்கு ஒரு காகிதமும் இவ்வளவு தொகை கண்டெழுதி அனுப்பச்சொல்லியும், முஸ்தீதுகளுக்குக் கொடுக்கிறதுகூட எழுதியனுப்பச்சொல்லிக் காகிதமெழுதி ஆற்காட்டிலிருந்து பணத்துக்கு வந்த இரண்டு பேரிலே ஒருத்தனை பயணம்பண்ணி அனுப்புவித்துவிட்டு வீட்டிற்கு வந்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் சாரிப்போய் பாக்குக்கிடங்குக்குப் போனமாத்திரத்தில் கணக்குக்கூடம் தாண்டவராயப்பிள்ளைக்கு கடினமாயிருக்குதென்று சின்ன பரசுராமப்பிள்ளையும், மாரியப்பமுதலியும், வீராநாயகன், காளவிராய குமரப்பிள்ளையும் வந்துசொல்லி, தாண்டவராயப்பிள்ளை மனுஷன் முத்துகுமாரப்பிள்ளையை காலின்பேரிலே போட்டு, தாண்டவராயப்பிள்ளை உத்தியோகம் இவனுக்குக் கொடுத்து நடப்பித்துக்கொள்ளவேணுமென்றுசொல்லி, சின்ன பரசுராமப்பிள்ளை கண்ணிலே சலம்விட்டு அழுதான். அதற்கு நானிருந்துகொண்டு சுவாமி தயவுபண்ணுவார். அவருடைய சித்தமில்லாமல் ஒரு காரியமும் நடக்கிறது அரிதென்று சொன்னேன். அதற்கு, சின்ன பரசுராமப்பிள்ளை என்னைச் சேரப்பிடித்து என் வீட்டை நிலைநிறுத்தினீர் இந்தப்படிக்கு இதையும் நிலைநிறுத்தவேணுமென்று சொன்னதற்கு, சுவாமி ரக்ஷிப்பாரென்று சொல்லிப் போகச்சொன்னதற்கு, நாங்கள் போகிறதற்குள்ளே தாண்டவராயப்பிள்ளை பேச்சு ஆயிப்போயிருக்கும்போலே இருக்குதென்று சொன்னதற்கு, சுவாமி இவனுடைய சித்தத்தின்படியே ஆகிற காரியத்துக்கு மனுஷ எத்த

னம் என்னவிருக்குதென்று சொல்லியனுப்புவித்து, வீட்டிற்கு வந்தபிற்பாடு ராத்திரி பனிரண்டடித்த பிறகு முருகப்பிள்ளை வந்து அந்த உத்தியோகம் சம்மதிக்குச் சிறிது பிரயோசனம் வருத்துவித்துக்கொண்டு அவரவர்களுக்குத்தானே கொடுக்கலாம் என்று சொல்லிவிட்டுப் போனுன்.

அப்பால், அரும்பாத்தாபிள்ளை குமாரன் முத்தையப்பிள்ளை வந்து எனக்கு அந்த உத்தியோகம் வாங்கிக் கொடுக்க வேணுமென்று உபசாரமாய்ச் சொல்லிவிட்டுப் போனபிற்பாடு, காளவிரய குமரப்பிள்ளையையும், வீரானாயகனையும் மூன்றரை மணிக்கு அனுப்புவித்தான். அவர்கள் வந்து துரைக்கு எனக்கு சிறிது பிரயோசனம் சொல்லி முத்தையப் பிள்ளைக்கு எப்படியும் உத்தியோகம் வாங்கிக்கொடுக்கவேணுமென்று ரொம்பவசரமாய்க் கேட்டதற்கு, நல்லது சுவாமிசித்தமிருந்தால் தப்பாதென்று மார்க்கமாய் அவர்களுக்குச் சொல்லியனுப்புவித்தேன். இவர்கள், கையிலே நான் லஞ்சம் வாங்குவேனென்றெண்ணினுர்கள் மனது அறியாமல். ஆனுல் இது காரியா நரி.

1748 ஆ சனவரி மீ 30உ க்கு பிரபவ ஸு தை மீ 20உ மங்களவாரம்

இற்றைநாள் காலத்தாலே சின்ன துரையவர்கள் சரீரம் சுவஸ்தமில்லாமலிருந்தபடியினுலே நானும் போய் விசாரிப்போமென்று சொல்லி, சின்னதுரை வீட்டிற்குப் போய் சின்ன துரையை ஆரோக்கியம் கேட்டு, அப்பால் பட்டணத்துச் சமாசாரங்கள் பேசியிருந்து, நெடு முழம் ஓரப்பின்பேரிலே இஸ்பித்தாலுக்கு முப்பது நாற்பது கோடி ஒன்பதுகால் நெடுமுழம் வேணும். அது உடையார்பாளையத்து நெடு முழமானுல் ஓரப்பின்பேரிலே யிருக்கும் அதை அழைப்பிக்கவேணுமென்று சொன்னுர். அதற்கு ராசிகம் ரொம்ப என்கிற நியாயமெல்லாம் சொன்னுலும் அதை வீராசெட்டியுடனே சொல்லி அழைப்பி என்று சொன்னுர். நானும் இவருக்கு என்ன சொன்னுலும் தெரியாதமட்டுக்கும் இனிமேல் சொல்லுகிறதிலே காரியமில்லையென்று அப்படியே சொல்லுகிறேனென்று சொல்லிவிட்டு, பெரிய துரையவர்கள் வீட்டிற்குப் போனவிடத்திலே சாவடி கபுறு சொல்லி, அப்பால் கணக்குக்கூடம்

தாண்டவராயப்பிள்ளை காலம்பண்ணிப்போன சேதியறிவித்து அப்போது பெரிய துபாசியான தினமாயிருக்கிறது. கனகராய முதலியாரை உத்தியோகம் வாங்கிப்போட்டு, குருவப்பிள்ளை சீர்மைக்குப் போயிருந்தபோது பெரிய துபாசித்தனம் ஏற்படாமல் மூன்று நாலு வருஷம் இருந்தபடியினாலே அரும்பாத்தாப்பிள்ளை ஆடியபாதப்பிள்ளைக்குக்கூட சம்பளம் கும்பினீரிலே நிஷ்கரிஷையாகி அது முதற்கொண்டு பெரிய துபாசிக்குக் கொடுக்கிற சம்பளம் நின்றது. அப்பால் குருவப்பிள்ளை சீர்மையிலேயிருந்து வந்து இரண்டு வருஷம் துபாசித்தனம் பண்ணினார். அப்போது அவருக்குப் பத்துபணம் வெகுமானம் ரூபமாய் நடப்பித்து போட்டபடியினாலே அவர் நுட்பம் பாராத மனுஷனானபடியினாலேயும் அப்படி நடந்தேறிப் போச்சுது. அப்பால் கனகராயமுதலியார் வந்த பிற்பாடு அவருக்கு உத்தியோகமே சீர்மைக்குப் போய் உத்தரம் வருந்தனிலும் அலத்து என்று ஒரு சாடையாய் இருந்தார் அப்பால் தரகு வருகிறதும் பின்னையும் ஏதாகிலும் அந்தரங்கமாய் நடத்திக்கொண்டு வந்தபடியினாலே இப்போது இதை விஸ்தரித்து நாம்கை சம்பளம் கொடுப்பானென்று யோசனைபண்ணி வந்ததை வரப்பற்றிக்கொண்டு போனார். இப்போது அமுல் நடந்தபடிக்கு நடக்கவேணுமென்று நான் சொல்லவில்லை. இப்போது இருக்கிறவனையே வைப்போம். ஆனால் உமக்கு ஒரு பிரயோசனத்தை அடையப்பண்ணி அவர்களுக்கு ஒரு கிருக்கு வேணுமென்று சொல்லுகிறேனேயல்லாமல் முன்னே முனியப்பிள்ளையைப் பிடித்துக் காவல் பண்ணினவுடனே கனகராயமுதலி உத்தியோகம் இரண்டு வருஷமட்டுக்கும் நடந்தது. அதுவரைக்கும் நடந்தபடிக்கு நடக்கவேணுமென்று கேட்கவில்லை என்று சொன்னேன். அதற்கு அவர், நீ எப்படி நடத்தச் சொன்னாய் அந்தப்படிக்கு நடத்துகிறேனென்று சொன்னார். நல்லதையா, உங்கள் காரியத்துக்கு மார்க்கம் பண்ணிக்கொண்டு அவன் மருமகனைத்தானே வைப்போமென்று சொன்னதற்கு உனக்குச் சம்மதியானபடிக்குச் செய்யென்று சொன்னார். அதிலே முசியே திலார்சு நெல்கடைக்காரர் நெல் எட்டு படி விற்கிறதற்குச் சம்மதியாமல் மெத்த தாபந்தப்பட்டார்கள் அதன்பேரிலே நான் அவர்களுக்கு வெளியிலே விற்கிற விலை நியாயமல்லவென்று சொன்னேன். ஆனால் அவர்களுக்கு

ரொம்ப நஷ்டம் வந்ததென்று சொன்னுன். துரையவர்கள் நகைத்துக்கொண்டிருந்தார்.

அப்பால் நிசாம்பேரிலே பரசிராயன் லக்ஷம் குதிரை கூட்டிக்கொண்டு சண்டைக்குப் போகவேணுமென்றிருக்கிறதும் நிசாம் சமாதானத்துக்கு மனுஷரை அனுப்பியிருக்கிறதும், நாசற்சங்கை சீக்கிரமத்துக்கும் வரச்சொல்லி எழுதியனுப்பினதும், மாபூசுகானேக்கூட நாசற்சங்கு அழைத்துப் போகிறதாயிருக்கிறசேதி முதலானதுகளெல்லாம் பேசியிருக்கச்சே துரையவர்கள், ரங்கப்புள்ளே டில்லிக்கு அறுபதினுயிரம் எழுபதினுயிரம் ரூபாய்க்கு உண்டிகைக் கொடுக்கவும் சாக்கிற ஸன்னது வாங்கிக்கொண்டு அப்பால் இந்த ரூபாயை முதலிடவும் அந்தக் காகித ஸன்னதை நமக்குக் கொடுக்கவும். ஸன்னதுவராத பக்ஷத்துக்கு ரூபாய் கொடுக்கவும் இப்படிக்குத் தறுவாடியுடனே பேசி உத்தாரஞ் சொல்லென்று சொன்னர் நல்லதையாவென்று சொன்னேன். அப்பால் பகலைக்குமேலாக நடந்ததை எழுதவேணும்.

இற்றைநாள் ராத்திரி வந்த கடுறு என்னவென்ருல்: அருர்பாத்தாபிள்ளை குமாரன் முத்தப்பிள்ளையும் அரியப்ப முதலி இரண்டுபேரும் மதாம் துய்ப்ளேய்க்கு, துபாசி வர்லாமுடனே கண்டுபேசி மதாம் துய்ப்ளேய்க்குடனே சொல்லி, செத்துப்போன கணக்குக்கூடம் தாண்டவராயப்பிள்ளை உத்தியோகம் முத்தய்யப்பிள்ளைக்கு வாங்கிக்கொடுக்கவும், அதற்கு துரைக்கு இவ்வளவு, மதாமுக்கு இவ்வளவு, அப்பால் வர்லாமுக்கு இவ்வளவு பேசினதாகவும் அதற்கு நாங்கள் ரங்கப்பன் வழியிலே பேசுவோம். ரங்கப்பன் சின்ன பரசுராமன் வழியிலே நிற்கிறபடியினுலே நாங்கள் உன் வழியிலே பேசுகிருேமென்று சொன்னதாகவும், அதற்கு அவன் நல்லது அப்படிக்குப் பேசுகிருேமென்று சொன்னதாகவும் சேதி வந்தது. சொன்ன மனுஷனை இனிமேல் வெளிப்படுத்துகிறேன்.

*1748* ஆ சனவரி மூ *31*உக்கு பிரபவ ஹு தை மீ *21*உ புதவாரம்.

இற்றைநாள் காலமே எட்டு மணிக்கு ராஜஸ்ரீ துரையவர்கள் வீட்டிற்கு நான் போய் கண்டுபேசி சலாம்பண்ணிக்

கொண்டு இப்புறத்திலே சான்றினோர் காக்கிற விடத்திலே வந்து நான் உட்கார்ந்துகொண்டிருக்கச்சே, ஒன்பது மணிக்கு சாவடி மணியக்காரன் முருகப்பிள்ளை வந்து சாவடி கபுறு துரையவர்களுடனே சொன்னான். அதன்பேரிலே அவனை அழைத்து இன்று முதலாக சாவடி கபுறு காரியத்தோடே சேர்ந்து நீங்கள் போய் ரங்கப்பிள்ளைக்குச் சொல்லுகிறதே யல்லாமல் நம்மண்டைக்கு வந்து கபுறு சொல்லத் தேவையில்லை என்று சொன்னார். நல்லதையாவென்று சொல்லி, சலாம்பண்ணிக்கொண்டு வந்து இப்புறத்திலே நான் உட்கார்ந்துகொண்டிருக்கிற சாலையிலே வந்து துரையவர்கள் இன்று முதலாக தம்மண்டைக்குக் கபுறு சொல்ல வரத் தேவையில்லை என்று உங்களுடனே கபுறு சொல்லச்சொல்லி உத்தாரம் கட்டளையிட்டார்கள் என்று சொன்னார். நல்லதென்று எழுந்திருந்து போய் துரையவர்களை சலாம்பண்ணிக்கொண்டு இப்புறத்திலே வந்து உட்கார்ந்திருந்தோம்.

இதிலே வீராநாயகனும் நயினாரும் இரண்டு பேரும் வந்து சொன்ன கபுறு என்னவென்றால்: கப்சு பாதிரி கோவிலை இடித்துப்போட்டு புதிதாய்க் கட்டுகிறபடியினாலே பின் பக்கம் வெளியாயிருந்தபடியினாலே அவ்விடத்திலே பனைமரத்தை நட்டு நிறைச்சலாய்க் கட்டி, தென்னையோலையும் பனையோலையும் போட்டுக் கட்டியிருந்தபடியினாலே அதிலே எப்படியோ நெருப்பு விழுந்து பத்திக்கொண்டு அதற்கருகாமையிலே பீடம் வைத்திருந்தபடியினாலே அந்தப் பீடத்திலேயும் சுருபத்திலேயும் தாவி ஏகமாய்ப் பத்திக்கொண்டு அவ்விடத்திலே கட்டியிருந்த படங்களும் இன்னும் சீருகளெல்லாம் வெந்துபோனதாகவும் இப்படியாகக் கபுறு வந்து சொன்னார்கள். இந்தச் சேதியை ராஜஸ்ரீ துரையவர்களுடனே சொன்னேன். ஆனால் என்ன செய்வோம் என்கிறதாய்ச் சொன்னார்கள். இதனாலே பட்டணத்துக்கு என்ன அசுபம் காணுதோ அறியவேணும்.

---

*1748* ஆ. பிப்ரவரி மீ 1வக்கு பிரபவ ஞு தை மூ 22வ வியாழக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரவர்கள் வீட்டிற்குப் போனேன். அவ்விடத்திலே நடந்த சமாசாரம் என்ன

வென்றால்: இமாம்சாயபு காகிதம் வந்ததே அந்தச் சேதி என்ன, சொல்லவில்லையே என்று கேட்டார். மூன்று வரகனம் பண்ணி மதனுந்தபண்டிதர் நேற்றையதினம் பத்தியம் சாப்பிட்டார். இன்றையதினம் வருவாரென்று சொன்னேன். அதற்கு, அவன் செத்துப்போய்விட்டானே என்று கேட்டார். அந்தரங்கமான சேதிகளிருந்தால் பின்னை ஒருத்தர் அறிய வேண்டியிருக்குமே! ஆனபடியினாலே, அவர் நாளையதினம் வருவாரென்று சொன்னேன். அதிலே அவரும் வந்தார். அப்பால் காகித சமாசாரம் என்னவென்று கேட்டார். மதனுந்த பண்டிதன் படித்துச்சொல்ல, நானவருக்குச் சொன்ன சேதி என்னவென்றால்: தாமனுப்பின காகிதம் வந்து சேர்ந்து வாசித்துக்கொண்டு மிகுதியும் சந்தோஷமானேன். தாங்கள் என் குமாரன் அசனல்லிகான் மோகர்பட காகித ரசீது வாங்கிக் கொண்டு காசி அவாய் சாயபுமாரிடத்தில் கொடுத்த சேம்பு முதலான தினுசுகள் வந்து சேர்ந்ததென்றும், அப்பால் நிசாம் கச்சேரியிலே உங்கள் சவுரிய பல பராக்கிரமங்கள், தைரியம் முதலான கீர்த்தி எப்போதும் மசிலிலே நடக்குதென்றும், சென்னப்பட்டணம் முதலான இங்கிலீஷ்கார பட்டணங்களையும் பிடித்து, சுலுப்பையும் தெருத்தி அடித்த கீர்த்தி இந்துஸ்தான தக்கனவெல்லாம் வெகு கீர்த்தியாய்ப் பார்ச்சாவுக்குப் பார்ச்சாவாய் ராஜாதி ராஜாக்களாலேயும் ஆகாத காரியங்கள் உங்களாலே ஆச்சுதென்ற கீர்த்தி டில்லியிலேகூட கொண்டாடுகிறார்களென்றும், சுவாமி இன்னும் உமக்கு மேன் மேலும் அதிசயம் கொடுப்பாரென்றும், சிப்பந்தி விஸ்தாரமாய் வைக்கிறீர்களென்றும் கபுறு கேட்டான். அப்படி சிப்பந்திகள் வைக்கக் காரியமென்னவிருக்குதென்றும், அது நஷ்டம் தங்களுடையது நம்முடையதானபடியினாலே எழுதினேனென்றும், சென்னப்பட்டணத்திலேயிருக்கிறவர்கள் அட்டிபண்ணுகிறார்கள். தாங்களறிந்தால் அட்டியாய் நிற்கத்தக்கதில்லை. அவர்களுக்குத் தாக்கீதுபண்ணித் தினுசு விட்டுவிடச் சொல்ல வேண்டியது. நபாபு நாசறசங்கு அவர்கள் சாமான் சிறிதுகள் அதிலே கூட விருக்கிறபடியினாலே அது வரவில்லை என்று ரொம்பவும் பிரார்தாயிருக்குதென்றும், ஆனபடியினாலே சென்னப்பட்டணத்தில் நம்முடைய வீட்டிலேயிருந்த தினுசை விட்டுப்போடச்சொல்லி எழுதியனுப்பச்செல்லியும், துரை சொந்தக் கடன் கொடுக்கவேண்டிய இருபத்தையாயிரம் வராகன் கொடுக்கவேணுமென்றும், நூறு பாரம் ஈயம் வேணு

மென்றும், நீர் குடிக்கிற சாராயம் நல்ல சாராயத்தில் நாலு காவடி அனுப்புவிக்கச்சொல்லியும், வழுதாவூர் சீர்மை, வில்வநல்லூர் சீர்மை, காமின்பெரிசும், தாத்துக்காலித மதஸ்த்தாகிற பெரிசும் எழுதியனுப்பின பிராதும் வந்து சேர்ந்தது. நாசற்சங்கு வந்தவுடனே அப்படி இனம்பண்ணி சன்னது அனுப்புவிக்கிறோமென்றும், கபே அனுப்பச்சொல்லியும், அவாசாயபுக்குப் பல்லக்குக் கொடுத்த சேதி நிசாமுக்குக் கபுருய் தன்னைக் கேட்டாப்போலேயும், அதற்கு சமாசாரம் தங்களுக்கும் நமக்கும் பேதகமில்லையென்று சொல்லிப் பல்லக்கு நடக்கிறதற்கு அவருக்கு எழுதியனுப்புவித்தேன். அவர் தங்களுக்கு எழுதியனுப்புவாரென்றும், நாசற்சங்கை சீக்கிரமாய் வரச்சொல்லி நிசாம் காகிதமெழுதினர். அவரும் வருகிறோமென்று எழுதினர் என்றும், இப்படியாக எழுதியிருந்த சேதியெல்லாம் சொல்லி இருபத்தையாயிரம் வராகன் சொந்தத்திலே கடன் வாங்கியிருக்கிறதைக் கொடுக்கச்சொல்லி எழுதின சேதி தவிர மற்றதெல்லாம் சொன்னேன்.

இப்படியிருக்கச்சே, முசியே ஒசே என்கிற வெள்ளைக்காரன் வந்து சதுரங்கப்பட்டணத்திலேயிருந்து தேக்குமரம், உத்திரங்கள் தெப்பமாய்க் கட்டி வைக்கிறது. அதற்கு சகாயமாய் ஒரு சலங்கு வருகிறதும் பார்த்து, துறையிலே நேற்று துவக்கிக் கொண்டுவந்து வைத்துப் பிடித்திருக்கிற இங்கிலீஷ்காரன் தன் கப்பல் வத்தலை இரண்டை இறக்கி, வெள்ளைக்காரரை ஏற்றி, சலங்கும் தெப்பமரத்தின்பேரிலேயும் விட்டான். ஆனால், அவர்கள் கரைதட்ட விடுவார்கள். அவர்கள் கரையில் இறங்கி வராதபடிக்குச் சொல்தாதுகளாகிலும், சிப்பாய்களாகிலும் அனுப்பவேணுமென்று வந்து சொன்னான். அப்போது சேக் இப்ரும் அங்கே வந்திருக்கிறவனைப் பார்த்து குண்டுதறையிலே வடக்கு வழிமட்டுக்குள்ளே இருக்கிற சிப்பாய்களை அழைத்துக்கொண்டு தேக்குமரம், தெப்பம், சலங்கு வருகிறதை இங்கிலீஷ் வத்தல்காரர் தடைபண்ணிப் பிடிக்க வந்தார்கள். கரையிலே தட்டவிட்டார்கள். நீங்கள் போய் அந்த வெள்ளைக்காரன் கரையிலே இறங்கிவந்து தெப்பம் சலங்கை இழுத்துவந்து போகாமல் காருங்கோள். அவர்கள் சமீபத்திலே துபாக்கிகளினலே சுடுங்கோள், இன்னும் சிப்பாய்களை அனுப்புவிக்கிறோமென்று சொன்னர். அந்தப்படிக்கு அவன் நல்லதென்று சேக்கிபுரும் போனர். இதிலே குவர்ன

தோர் சமுத்திரக்கரைக்குப் போனர். அங்கே யிருந்த மாயே சிப்பாய்களையும் வைத்தால் துபாக்கிலே ஆறு துபாக்கே கூட எடுத்துக்கொண்டு ஐம்பது பேரைப் போகச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். நம்முடைய சாவடியண்டையிலே தெப்பம் சலங்கையும் தட்டவிட்டபடியினலே சேக்கிபுரும் மாயே சிப்பாய்களும் போய்ச் சேர்ந்தார்கள். இதிலே வத்தல்காரன் இந்தச் சேவகரைக் கண்டாப்போலே நாலு பீரங்கி வத்தவிலே யிருந்து சுட்டான். மூன்று குண்டு கரையோரத்திலே விழுந்தது. ஒரு குண்டு சேவகர்பேரிலே ஓடிப்போச்சுது. அப்போது புடவை விசிறி, கை காட்டி, வத்தல்காரனை அழைக்க அவர்கள் சிறிய கப்பல் அங்கே மீன்பிடித்த பட்டணவர் கையிலே மீனைப் பிடுங்கிக்கொண்டு இரண்டு வத்தல்காரரும் கப்பலுக்குப் போனர்களென்றும், சேதி சொல்லியனுப்பினர்கள். அதற்குத் துரையவர்கள் மரம் எடுத்து வருகிறதற்குக் கூலிக்காரரை அனுப்பி மரங்கள் வந்து சேருகிறமட்டுக்கும் நீங்களிருங்கோளென்று சொல்லியனுப்பினர்.

இற்றைநாள் சாயங்காலம் வந்த சேதி: அரும்பாத்தை முத்தையப்பிள்ளை, அரியப்பமுதலி வர்லாமுக்கு எழுதியனுப்பின காகிதம் நம்மண்டைக்கு வந்து பார்த்து அனுப்புவித்தேன். அந்தக் காகிதத்திலே அரியப்பமுதலி எழுதினது மதாமுக்குச் சொல்லி, காரியத்தை அனுகூலம்பண்ணிக்கொண்டு நீர் வந்தால் காரியம் ஆன சந்தோஷ பலனை அடைந்துபோவீரென்றும், சமத்துக்காரமெழுதி, ராத்திரி சொன்ன தொகையைப் பார்க்கக் கவையில்லை. பின்னையும் கொஞ்சம் ஏறினலும் பாரமல்ல. எந்த விதமும் காரியமனுகூலம்பண்ணி வருவீரென்று, எதிர் சந்தோஷம் சொல்லவேணுமென்று காத்துக்கொண்டிருக்கிற என்னைச் சந்தோஷப்படுத்தி வரவும் என்றெழுதியிருந்தது அதைப் பார்த்துக் காகிதத்தைக் கொடுத்து அனுப்புவித்தேன். கொண்டுவந்த மனுஷன் பேர் இனிமேல் எழுதுகிறதிலே வெளியாக்குகிறேன்.

1748 ஆ ௵ பிப்ரவரி ௴ 2 உ க்கு பிரபவ ௵ தை ௴ 23 உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டிற்குப் போனேன். வந்தவிடத்திலே குவர்னதோர் கோவிலுக்குப்

போய்ப் பூசைகேட்டு வந்தபிற்பாடு, தேவனும்பட்டணத்துச் சேதி ஏழெட்டு நாளைக்கு முன்பாக வந்த சீர்மைக்கப்பலிலே வந்த சேதி என்னவென்று கேட்டார். சீர்மையிலேயிருந்து போன வருஷம் மார்ச்சு மாசம் புறப்பட்ட கப்பலாம், அதிலே ஐந்து கப்பல்கள் வந்து சேர்ந்தனவாம். சென்னப்பட்டணம் பிடித்த சேதி, இந்தக் கப்பல் புறப்படச்சே அறியார்களாம், இந்தக்கப்பலிலே சென்னப்பட்டணத்துக்கு என்று முன்னூறு சொல்தாதுகள் வந்தார்களென்று சொன்னமாத்திரத்திலே அவருக்கு வந்த கோபத்தைக் காகிதத்திலே எழுதிமுடியாது. அப்பால், அவர் வாயைத்திறந்து சொன்ன உத்தரம், முன் போலே கும்பினீர் வேலையிலே ஜாக்கிரதையாய்த் திரிகிற தாய்க் காண்பிக்கவில்லையென்றும், இப்படி சத்துருக்களுக்குப் பலன் வந்ததென்றும், எனக்குப் பயங்காட்டுகிறுயாவென்றும், பின்னையும், தசுபுசு என்று கோபமாய் மதாம் இருக்கிற காம்பிரவிலே போனுர். நானும் இந்த ஸந்துக்கட்டிலே போய் அவர் கணக்கு ரங்கப்பிள்ளை கிடங்கிலே போயிருந்தேன். ஆனால் எனக்கு வந்த காகிதத்திலே சீர்மைக் கப்பல் எனக்கு மார்ச்சு மாதத்திலே புறப்பட்ட கப்பல்களென்பதென்றும், இதற்கு ஐந்து கப்பல் வந்து சேர்ந்ததென்றும், இரு நூறு பெட்டி வெள்ளியும், சகலாத்துக் கட்டுகளும், பவழப் பெட்டிகளும், பின்னையும் சீர்மையிலிருந்து வருகிற தினுசுகளென்னென்னமோ அதுகளெல்லாம் வந்துசேருமென்றும். இந்தக்கப்பல்கள் புறப் படச்சே சீர்மையிலே சென்னப்பட்டணம் பிடிபட்ட சேதி அறியார்களென்றும், சென்னப்பட்டணத்துக்குச் சொல்தாது கள் இல்லையென்றும், முன் மேஸ்தர் மாசு கும்பினியாருக்கு எழுதியிருந்ததாகவும், அதற்காக இந்தக் கப்பலின்பேரிலே ஐந்நூறு சொல்தாதுகளை அனுப்பினதற்கு இப்போது வந்த ஐந்து கப்பலிலே வந்ததுபோக மற்றது பிறகே நாலு கப்பலிலே யும் வந்து சேருமென்றும், அதற்கு இருநூறு பேர் மாத்திரம் இறங்குகிறுர்களென்றும், குறை பேர் இன்று நாளைக்குள்ளாக இறங்குவார்களென்றும், பங்காளத்திலே யிருந்து இரண்டு மூன்று கப்பல்கள் வந்தாப்போலேயும், அதிலே பட்டு நூல் முதலான பங்காளத்து தினுசுகள் வந்ததாகவும், அதன்பேரிலே மேஸ்தர் மாசு பெண்சாதியும், மேஸ்தர் குரு பெண்சாதியும் வந்தாப்போலேயும், புதுச்சேரி பட்டணத்தின்பேரிலே சண் டைக்கு வருகிறதற்கு மற்றக் கப்பல்களும் வந்து சேர்ந்த

பிற்பாடு வரவேணுமென்றிருக்கிறார்களென்றும், முத்தியாலு நாசசற்சங்குக்குப் போயிருந்தவன் வருகிறான். தாமாலு சேவகன் மாயே கடந்து புறப்பட்டாப்போலே அல்லது ஆற்காடு வந்து சேர்ந்தாப்போலே எதிர்கொண்டு மனுஷரை அனுப்பவேணுமென்றாப்போலே யோசனையாய் இருக்கிறார்களென்று எழுதிவந்த சேதிகளையே முற்றிலும் கேட்டால் என்னமாய்க் கோபம் வருமோ தெரியாது. இவர் சுபாவம் எதிராளி கையாலே ஆகாதவன், பலனே இல்லையென்று சொல்லிக்கொண்டிருக்கவேணும். அப்படி சொன்னால் ஒரு வேளையிலே இப்படி வந்திருக்கச்சே அப்படி ஏன் சொன்னாய். அதனாலேயே மாறி இருக்கிறோமென்று பதிலாமையும் சொல்லுவார். ஆனபடியினாலே இவர் சுபாவமறிந்து எதிராளியை எகிதாளிபண்ணினாப் போலேயும், அவனுக்கு நடக்கிற காரியத்தை உபாயமாகும்படியே அங்கேயிருக்கிற பின்னையும் பலனில்லாததையும் பஞ்சுட்டுப்பார் மெத்திராப்போலே சொல்லிக்கொண்டு வருகிற எனக்கு அவர் எடுத்தாப்போலே கோபித்துக்கொண்டு அப்பாலே மதாம் காம்பிறாவிலே போனபடியினாலே மேல்பேச்சு சொல்லுகிறதற்கும் கூடமாமற்போச்சுது. மீதி மிச்ஸிகோம் ஒன்று அதனமாச்சுது. இந்த வேளை இப்படியிருந்தால் இன்னும் ஒரு வேளை ஆகுதென்று நானும் சாவடையாய் வந்துவிட்டேன்.

இதல்லாமல் மதாம் துய்ப்ளேய்க்ஸ் எக்நேரம் தேவனும் பட்டனாற்கபுறு மனுஷரை அனுப்புவித்துப் பிரான்ஸிலே தான் எழுதிக் கொடுக்கிறபடியினாலே இப்போது இரண்டு மாசமாயும், ஒரு மாசமாய் பின்னையும் சற்று சுருக்காய் நடக்கிறபடியினாலே நானும் அசார்சியமாய் சாவடையாய் ஒதுங்கிப் போகிறதெல்லாம் நல்லதென்று புறப்பட்டு வந்துவிட்டேன். இனியேல் தேவனும்பட்டணம் கபுறு நான் சற்று சாவடையாய்ச் சொல்லி வரவேணுமென்று யோசனைபண்ணினேன். நாம் சுருக்காய் திரிந்தால் மதாம் துய்ப்ளேய்க்குக்கு மனதிலே கோபம் உண்டாகுது. இதிலே சுகம் தக்கனபாடுமல்ல, விரதம் தக்கனபாடுமல்லவென்று லகுவாய் ஒதுங்கி சாவடையிலே வரலாமென்று யோசனைபண்ணித் தீர்த்துக்கொண்டேன். அப்பால் சாபோசிராசா மகன் சக்கிராசா தாளயம்பெற்ற பாட்டன் சுந்தரேசி காட்டிகை குமாரன் மாமா கோயாசி காட்டிகை இவ்விடத்துக்கு வரவேணுமென்று காரைக்காலுக்கு மனுஷரை

அனுப்பி முசியே ரீஷ்காது காகிதம் வாங்கிக்கொண்டு ஸ்ரீ துரைகளுக்குக் கொண்டுவந்து கொடுத்து இவ்விடத்துக்கு வரவேணுமென்று சொல்லி கோயாசிகாட்டிகை அரும்பாத்தபிள்ளை சாவடியிலே இருந்துகொண்டு அவருடைய குமாஸ்தா கையிலே ரிசிக்கு காகிதத்தையும் கொடுத்து ஸ்ரீ துரையவர்களைக் கண்டு வார்த்தைச் சொல்லி அனுப்புவித்தார். அவர் கொண்டுவந்த காகிதத்தைக் கொண்டுபோய் துரையவர்கள் கையிலே கொடுத்து அவர்கள் சொல்லுகிறதினால் இப்போது அவர்களுக்குச் செலவுக்கு நீங்கள் கொடுத்து நடப்பித்த காரியமும் சாதித்துக்கொடுக்கிறதாயிருந்து வரச்சொன்னால் வருகிறோம். அல்லவென்று அப்படி கூடாதென்று சொன்னால் இப்படிதானே போய்விடுகிறோமென்று சொல்லுகிறார்களென்று சொன்னேன். நல்லதிருக்கட்டுமென்று சொன்னார். பிறகு இற்றைநாள் போய் அவர்கள் வந்து... ... ... ...நாளாச்சுது. செலவுக்கில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். நானும் பத்து வராகன் மட்டுக்கும் கொடுத்தேன். இனிமேலவர்களை சும்மா போகச் சொல்லியனுப்பிவிட்டாலும் வழிச்செலவுக்கு நூறு வராகன் கையிலே கொடுத்து, பிறகு அனுப்பவேணுமென்று சொன்னேன். செலவுக்கு நாம் கொடுக்கவேணுமாவென்று சொன்னார். செலவுக்குக் கொடாவிட்டால் அவர்களுக்கு ஆளில்லையென்று சொன்னேன். ஆனால் அழைப்பி என்று சொன்னார். அதன்பேரிலே இற்றைநாள் அன்னபூரணய்யரையும் ஸதாசிவரய்யரையும் அரும்பாத்தாபிள்ளை சாவடிக்கு அனுப்புவித்தோம். அவர்கள் ரெண்டுபேரும் போய் கோயாசிகாட்டிகையை அழைத்துக்கொண்டு வந்தார்கள். அவர்களுக்கு விடுதி, பிராமணத் தெருவிலே சின்னய்யா வீட்டிலே விடுதி விட்டு அவர்கள் இறங்கியிருக்கச்சே நான் போய்க் கண்டு பேசினேன். அதற்கு அவர்கள் சொன்னது: எல்லாம் எங்களுடைய காரியமும் உங்களுக்கு நடப்பிக்கிற காரியங்களும் எழுதித் தருகிறோம். அந்தப்படிக்கு எங்களுக்குச் செலவுக்கும் கொடுத்து எங்கள் காரியம் கெட்டியாய்ச் சாதித்துக் கொடுக்கிறோமென்று பரவசமாய்ச் சொன்னால் சரபோசிராசா மகன் சக்கிராசாவை அழைப்பிக்கிறோமென்று சொன்னார். அதன் பேரிலே, நல்லது எல்லாம் காலமே எழுதிவையுங்கோவென்று சொல்லிவிட்டு, அனுப்புவித்துக்கொண்டு வளவுக்கு வந்துவிட்டேன்.

இற்றைநாள் ஒழுகரையிலே கனகராயமுதலியார் கட்டி வைத்த கோவிலிலே பத்து நாள் திருநாள் நடந்து இன்றைய தினம் உபகாரமாதாவை வாணவித்தையுடனேயும், தீவட்டி வெளிச்சத்துடனேயும், மேளதாளத்துடனேயும் கொண்டுவந்து சம்பா கோவிலிலே சேர்த்தார்கள்.

இன்றையதினம் துரையவர்கள் சொன்னது: வேட்ட வலத்திலே பாளையக்காரனுக்கும், உடையார்பாளையத்துப் பாளையக்காரனுக்கும் அவனவனுக்குத் தக்கதாக ஒரு வெகுமானம் அனுப்பு என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்போது முசியே கோர்னே பேருக்கு ஓர்தொனுன்ஸ் வாங்குகிறதற்குப் பனிரெண்டடித்துப் போனபடியினாலே கணக்கரெல்லாம் சாப்பாட்டுக்குப் போய்விட்டபடியினாலே நாளையதினம் ஆகுதென்று புறப்பட்டு வந்துவிட்டேன்.

*1748* ஆ பிப்ரவரி மீ 3வக்கு பிரபவ ளூ தை மீ 24உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நான் குவர்னதோர் வீட்டிற்குப் போனவிடத்திலே சென்னப்பட்டணத்திலேயிருந்து முசியே பேடுதல்மி இவ்விடத்துத் துரையவர்களுக்கு எழுதின காகிதத்திலே வளத்தக்கரை மாதாமாதம் செலுத்தச்சொல்லி திட்டம் பண்ணின ஆயிரம் வராகனுக்கு எண்ணூயிரம் ரூபாய்மாத்திரம் செலுத்தினார்கள். மற்ற ரூபாய்க்கு நாலைந்து நாளையிலே கொண்டுவந்து செலுத்துகிறோமென்று சொன்னார்கள். சம்பளங்களுக்குப் போதாதென்று எழுதின காகிதம் பார்த்தவுடனே கோபமாய் உத்தாரம் சொன்னார். அதற்கு நான் பதினையாயிரம் ரூபாய் சென்றிருக்குது. நாலாயிரத்தி நூறு ரூபாய் ஐந்தாறு நாளையிலே செல்லுமென்று எழுதிவந்தது. அப்படியிருக்க முசியே பேடுதல்மி இப்படி எழுதினானென்றால் இனிமேல் நான் சொல்லவேண்டியது என்னவிருக்குதென்று நான் சொன்னதற்கு அங்கே இருக்கப்பட்ட வர்த்தகர்களுடைய மனுஷர் மெத்த மேதாவியல்லவென்று சொன்னார். மெய்தான் ஐயா சமுதாயித்துச் சொல்லமாட்டாமற்போனானென்று சொன்னேன். அப்பால் இருபத்து மூன்று விழுக்காடு ஆனால் எல்லாம் எடுத்துக்கொள்ளுகிறோமென்று வர்த்தகர் கேட்கிறதாகவும் அதற்கிவர்கள் சம்மதியில்லையென்று சொன்னதின்பேரிலே

நூறு பாரம் இருபத்துநாலு விழுக்காடு கேட்டதாகவும், அதற்கு ஸம்மதியாமல் எழுதியனுப்பினர்களென்று சொன்னேன். நஷ்டம் நம்முடையபேரிலே விழுகுதென்று வர்த்தகர் ரொம்ப பிரயாசைப்படக் கவையில்லாமல் அசிரத்தையாய் இருக்கிறர்களென்கிறதாய்ச் சொல்லவந்தார். அதற்கு நான் அப்படி ஒருக்காலும் எண்ணுகிறவர்களல்லவென்று சொன்னதின்பேரிலே சற்று கோபமாய் அந்தப் பஞ்சு நஷ்டம் ஏற்றுக் கொள்ளத்தக்கதாகக் கோபமாகி எந்தெந்த அடுக்கிலே சொல்லவேணுமோ அப்படி எல்லாம் கோபமாய்ச் சொன்னர். நானும் அதற்கெல்லாம் உத்தரம் சற்றுத் தாவாய்த்தானே சொல்லிக்கொண்டு வந்தேன். இப்படி நாலு நாழிகை நேரம் கோபமாய்த்தானே பேசினர். நானும் சுவாமி கொடுத்த புத்தியினுலே அவர் உத்தாரம் சொல்லக்கூடாமலிருக்க உத்தரம் சொல்லிக்கொண்டு வந்தேன். அப்பால் கும்பினிருக்கு நூறு கோடி காங்குப்புடவை கொடுக்கிறேமென்று சொன்னியே எங்கே என்று கேட்டார். கோட்டையிலே கொண்டுபோய் வைத்திருக்கிறது. முசியே லேதை திங்கட்கிழமைக்குக் கட்டுப் போட்டுக்கொள்ளுகிறேமென்று சொல்லி இன்னம் இருபது முப்பது கோடி காங்குப்புடவை பத்துநாளையிலே கொடுக்கிறேமென்று சொல்லி, தறணத்தான்சு கொடுத்த கிண்டன் இதுகளும் கொஞ்சமிருக்குது. அதுகூட கட்டுப்போட்டு விடுகிறேனென்று சொன்னதின்பேரிலே, நல்லது அப்படியே செய் என்று சொன்னர். முசியே துக்கேன் ஏதுக் கேன் வந்தான்? அந்தப் பேச்சின்பேரிலே இருந்தார். அப்பால் பனிரெண்டு மணி அடிக்கிற வேளையாச்சுதென்று வீட்டிற்குப் போனேன். இன்றையதினம் இப்படி நடந்தது.

1748 ஆ பிப்ரவரி மீ 4 உக்கு பிரபவ ஷு தை மீ 25உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டிற்குப் போனவிடத்திலே, துரையவர்கள் இமாம்சாயபு அவர்களுக்குப் பதில் காகிதம் எழுதச் சொன்னர்கள். அதற்கு நக்கலிலிருந்து பார்த்துக்கொள்ளலாம். அப்படி எழுதத்தக்கனது என்னவிருக்குது எப்போதும் நடக்கிற வேடிக்கைப் பேச்சுகள்தான் நடந்தது. அதை எழுதவேண்டிய காரியமில்லை. பகலுக்குமேல் மதாம் பெநிந்தல்சி, அவள் புருஷன் சென்னப்பட்டணத்திலே

இருக்கிறவனண்டைக்குப் போகவேணுமென்று துரையவர்கள் கையிலே அனுப்புவித்துக்கொண்டு நாலு மணிக்கு மதாம் பெடுத்தல்மி, முசியே சென்ச்வோர் தெப்ரேன், பின்னையும் இரண்டு கணக்கர்கள்கூட இவர்கள் பயணமாய்ப் போனார்கள். துரை அவர்களும் அழிசப்பாக்கத்தண்டையிலே இறங்கியிருக்கிற தண்டுக்குப் போய் வந்தார்.

1748 ஆ பிப்ரவரி மீ 5 உக்கு பிரபவ ஹு தை மீ 26உ திங்கட்கிழமை.

இற்றைநாள் காலமே கோட்டைக்குப் போய் நம்முடைய சொந்தம் முப்பத்தொரு கட்டு, சாயக்கிழுவு கட்டுப்போடுவித்துப்போட்டு, பிற்பாடு துரை அழைத்தனுப்பினபடியினாலே துரை வீட்டிற்கு வந்தவிடத்திலே துரையவர்களுடனே கசங்குப் புடவை கட்டுப்போட்ட சேதி சொல்லியானபிற்பாடு நெல்லுக்கடை பிராதுகள் நெல்லு அளக்கவில்லை. சாவடி கணக்கப்பிள்ளைகள் பணம் வாங்கிக்கொண்டு பெஷியமாய் விடுகிறார்களென்று முசியே பாலியோ தன் துபாசி கையிலே எழுதியனுப்ப, அதை துரை அழைத்தனுப்ப என்னுடனே சொல்ல, அதெல்லாம் அபத்தமென்று சொல்லி, அதற்கடுத்த நியாயங்களெல்லாம் சொன்னதின்பேரிலே, மெய் என்று ஒத்துக்கொண்டார். அப்பால் அழகப்பிள்ளையைக் கண்டு பேசின விடத்திலே முசியே பாலியோ மனுஷன் அழைத்துக் கேட்க இருபது வராகனுக்கு நெல்லு கேட்டவிடத்திலே கொடுக்க மாட்டோமென்று சொன்னார்களென்று சொல்ல, அதன் பேரிலே அழகப்பிள்ளை சொன்னது: அவன் வந்து இருபது வராகனுக்கு நெல்லு வேணுமென்று கேட்டான். அப்படி ஒரு மிக்க அளக்கப்போகாது. வேணுமானால் ஒரு வராகனுக்கானால் அளந்துகொண்டு போ என்று சொன்னோம். நீ அளந்துகொண்டு வந்து போடென்று சொன்னான். கவையானால் அளந்துகொண்டு போ என்று சொன்னார். ஆனால் அதன்பேரிலே துரையவர்கள் இருந்துகொண்டு எந்நேரமும் வந்து பொய்யான வார்த்தைகளைத்தானே சொல்லுகிறீர்கள். அவர்கள் என்ன உங்கள் வீட்டு வேலைக்காரர், ஒரு வராகனுக்கு வேணுமானால் போய்க் காத்துக்கொண்டிருந்து அளந்துகொண்டு போங்கள். இருபது முப்பது வேணுமானால் வெளியே போய் எடுத்துக்கொண்டு வாருங்கோளென்று சொல்லிப் போகச்சொன்னார். அந்தமட்டிலே போய்விட்டார்கள்,

**1748 ஆ** பிப்ரவரி மூ 6வெக்கு பிரபவ ஞூ தை மூ 27உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் துரையவர்கள் வீட்டிற்குப் போனவிடத்திலே துரையவர்களிருந்துகொண்டு கணக்குக்கூடம் தாண்டவராயப்பிள்ளை மாமுலாவுடனே சேர்ந்தது என்ன? தீர்த்துப்போடாமற்போனியே என்று சொன்னார். நல்லது அப்படியே தீர்த்துப்போடுகிறேனென்று சொன்னேன். அதன்பிற்பாடு ராமோசி காலம்பண்ணிப்போனானே அந்தக் காரியத்தோடே சேர்ந்ததென்ன? ஒன்றும் விசாரிக்கவில்லையா என்று கேட்டார். அது காரியமும் விசாரித்துச் சொல்லுகிறேன் என்று சொன்னேன். அப்படியிருக்கச்சே பதினொரு மணி வேளைக்கு ஆத்தூரிலேயிருந்து கடுதாசி வந்தது. அந்தக் கடுதாசி முசியே பிரியேல் எழுதியனுப்புவித்தது என்னவென்றால்: சுப்பய்யன் என்கிறவன் வெங்கடநாராயணப்பய்யன் பேர்வைத்து, தப்போலையாய் எழுதியனுப்பின பேச்சைத்தானே மெய்யென்று ஆயிரம் ரூபாய் தீர்ந்திருக்குது. அந்த ஆயிரம் ரூபாயும் இப்போது அனுப்புவித்தால் அவர்களை விட்டுவிடுவார்கள் என்றெழுதியிருந்த கடுதாசியைப் பார்த்தவுடனே புறப்பட்டு, இதென்ன அப்படி எழுதினது. எனக்கானால் ஒன்றும் தெரியவில்லை, அவ்விடத்திலே என்ன பண்ணியிருக்கிறார்களோ. அந்தக் கடுதாசிகளையெல்லாம் பார்த்துக்கொண்டு உத்தரவு சொல்லென்று சொன்னார். அதன்பேரிலே நானிருந்துகொண்டு, அப்படி வருகிறதில்லை. முன்னைக்கிப்போது நேராயிருக்குதென்றும் குறிக்காரர் வந்த பிறகு விலங்கிவிட்டார்களென்றும், இப்படியெல்லாம் எழுதி வந்திருக்க, அவனாரோ ஒருத்தன், தப்புந்தாருமாய் வந்து சொன்னானால் அவனை வரவேணுமென்று சொல்லுகிறது தானே என்று சொன்னேன். நல்லது எல்லாத்துக்கும் கடுதாசிகளைப் பார்த்துக்கொண்டுவந்து மறு கடுதாசி எழுதுகிறதற்கு வயணம் சொல்லென்று சொன்னார். நல்லதென்று வாங்கிக்கொண்டு சாப்பாட்டுக்கு வந்து சாப்பிட்டு அந்தக் கடுதாசிகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கச்சே அழிச பாக்கத்தண்டையிலே இறங்கியிருக்கிற தண்டிலேயிருந்து முசியே புரி ஒரு கடுதாசி துரைக்கு எழுதியனுப்பினான். அதென்னவென்றால்: ஒரு வெள்ளைக்காரன் குதிரையின் பேரிலே ஏறிக்கொண்டு தண்டிலேயிருந்து மேற்கே சுவாரி

போனான். அவன் என்னத்தைக் கண்டு பிரண்டானே தெரி யாது. அவன் வந்து முசியே புரியுடனே தெற்கே இங்கிலீஷ் காரர் தண்டு வருகிறாப்போலே இருக்குது. இங்கிலீஷ் கொடி யும் பிடித்துக்கொண்டு வருகிறார்களென்று சொன்னதாகவும், அதன்பேரிலே முசியே புரி இருந்துகொண்டு, நூறு பேர் காடுது வெள்ளைக்காரரையும், நூறு பேர் மாயே சிப்பாய்கள் குதிரைக் காரரையும் பயணம் பண்ணியனுப்பிவிட்டு, தெற்கேயனுப்பி விட்டு, அந்தச் சேதிக்கு இவ்விடத்துக்கு எழுதிவந்தவுடனே இவ்விடத்திலேயும் பிரண்டு இவ்விடத்திலே இருக்கப்பட்ட சொல்தாதுகள், போயிகள் எல்லாரையும் கூட்டி, முசியே துக்கேனையும் கூட்டி அரியாங்குப்பத்துக்கு அனுப்பினார்கள். உடனே அதுகளெல்லாம் ஒன்றுமில்லை. குதிரைமேலே ஏறிக் கொண்டுபோன வெள்ளைக்காரர் சாராயத்தைக் குடித்துவிட்டு வந்து பினாத்தினானென்று மறுபடி எழுதி வந்தது அந்த மட்டிலே அடங்கிவிட்டது. அரும்பாத்தப்பிள்ளை சாவடியிலே இருக்கிற சத்தியபூரணசாமி தரிசனத்துக்கு இன்றைக்கு வருகிறோமென்று அவர்களுக்குச் சொல்லியனுப்பி விட்டு நானும் தயாராயிருந்தேன். இதற்குள்ளே சேர்ந்தமங் கலத்துக் கடுதாசி வந்தபடியினாலேயும், அரியாங்குப்பத்துத் தண்டிலே ஒரு காபரூப்பட்டபடியினாலேயும், போகக்கூடாமல் பரசுராமப்பிள்ளையை அனுப்பிவிட்டு நான் போகவில்லை.

1748 ஆ பிப்ரவரி மீ 7உக்கு பிரபவ ஸு தை மீ 28உ புதவாரம்.

இற்றைநாள் காலமே முசியே கோர்னேந்தண்டைக்கு கோட்டைக்குப் போய் சென்னப்பட்டணத்திலேயிருந்து வந் திருந்த கலந்தரு அபரஞ்சாய் இது முதலாகிய தினுசுகள், வங்காளத் தினுசுகள், இவைகள் முதலாகிய தினுசுகள் எல்லாம் அருணாசலசெட்டி, தரணிசெட்டி, முத்தையசெட்டி அழகப்பசெட்டி, வீருசெட்டி இவர்களுக்குக் காண்பித்த பிற் பாடு வீருசெட்டியை சின்ன துரையண்டைக்கு அழைத்துக் கொண்டுபோய் நாம் முன்னே கும்பினீருக்குப் போட்டிருக்கிற பதினேழு சில்லரைக்கோடி நெடுமுழம் முப்பத்தைந்தே, சில் லரைக்கோடி முறுக்குக் கிண்டனும் வீருசெட்டியினுடையது என்று சொல்லி, அவருக்கு வராகன் சேரவேணுமென்று இப் போது கொண்டுவந்து போடச்சொல்லுகிற பதினைந்து இருபது

கோடி நெடுமுழத்துக்கு இருபதுகோடி முறுக்குக்கிண்டனுக்கு கூட ஏகத்துக்குக் கும்பினீர் வர்த்தகர் வாங்கியிருக்கிற சரக்கு களிலே வீருசெட்டியாருக்கு முன் போட்டிருக்கிற சரக்குக்கும், இனிமேல் போடவேண்டிய சரக்குக்கும் ஏகத்துக்கு அவருக் குக் கொடுத்துவிடச்சொல்லி உத்தாரம் கொடுக்கவேணு மென்று சொன்னோம். அந்தப்படியே முசியே கோர்னேத்தை சின்ன துரை அழைத்து அந்தப்படிக்குக் கும்பினீர் வர்த்தகர் வரவு வைத்துக்கொண்டு வீருசெட்டிக்குப் பதினாயிரம் ரூபாய் கொடுக்கச்சொல்லி, கும்பினீர் வர்த்தகர் பேருக்குச் சீட்டுக் கொடுக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தாராம். அந்தப்படிக்குக் கொர்னேத்து கையிலே சீட்டு வாங்கி வர்த்த கருக்குக் கொடுத்தேன். இதற்குள்ளே துரையவர்கள் அழைக் கிறார்களென்று சொல்லி, சேவகன் அழைக்க வந்தான். ஒருத் தன், இரண்டு பேர். மூன்று பேர் சேவகர் அழைக்க வந்தார் கள். அதன்பேரிலே சின்ன துரை கையிலேயும், முசியே கோர் னேத்து கையிலேயும் அனுப்புவித்துக்கொண்டு துரை வீட் டிற்கு வந்து துரையவர்களைக் கண்டு பேசின விடத்திலே துரை யவர்களிருந்துகொண்டு, ரங்கப்பா, சம்பாக்கோவிலார் சொன்ன சேதி, நீ கேட்கவில்லையாவென்று சொன்னார். அதென்னய்யா என்று கேட்டேன். சம்பாக்கோவிலாரா ஓழுகரையிலே இருக் கிற ரெட்டிகள் நிலமெல்லாம் எங்களுக்கு அடைமானமென்றும், அந்த நிலத்தில் அறுவாகிற நெல் எங்கள் கோவில் செலவுக்கு வேண்டியதென்றும், அது எப்போதும் எங்களை அடைகிறது. இப்போது ரங்கப்பன் கும்பினீருக்குக் கவையென்று அந்த நிலத்தில் பயிராகியிருக்கிற நெல் தங்கள் மனுஷரைக்கூட வைத்தனுப்புவித்து ஒப்படிபண்ணி எடுத்துப்போகிறதா யிருக்குதென்றும், அந்த நெல் எங்களை அடையத்தக்கதாக உத்தாரம் கொடுக்கவேணுமென்றும் கேட்டார்கள். சீட்டிலே நெல் கொடுக்க எழுதியிருக்கிறதா? பணம் கொடுக்க எழுதியிருக் கிறதென்று சொன்னார்கள். ஆனால், பணம் வாங்கிக்கொள் ளுங்கோளென்று சொல்லி நீங்கள் கும்பினீர் நிலத்தை அடை மானம் பண்ணிக்கொண்டு பணம் கொடுத்தோமென்று சொல் லுகிறது என்ன நியாயம். கும்பினீர் நிலத்தில் யாருக்காகிலும் சுதந்தரமுண்டா? அல்லவென்று கொடுத்திருந்தால் மோசம் போவீர்களென்று சொல்லிப் போகச்சொன்னேன், இவ்விடத் திலே பார்த்தால் இவர்கள் கையில் கடன் வாங்காதவர்களைக்

காணோம். வெளியிலே கிருமாம்பாக்கத்திலிருந்து இங்கிலீஷ் காரனுக்கு வேகு சொல்கிருனென்று பிடித்துவந்து போட்டிருக்குதே, அவன்கூட தங்களுக்குக் கடன் கொடுக்கவேண்டியவன் அவனை விடவேணுமென்று வந்து கேட்கிருர்கள். இப்படி வெளியிலே இருக்கிறவர்கள்கூட, உள்ளே இருக்கிறவர்கள் கூட இவர்கள் கையில் கடன் வாங்காதவர்கள் ஒருத்தருமில்லை யென்ருப்போலே தோற்றுதென்று சொன்னுர். மெய்தானையா, அவர் கடன், வட்டியைக் குறித்துக் கொடுக்கிறதல்ல. எங்கள் கையில் கடன் வாங்கினுல் அவன் தங்கள் பேச்சுக்கு வணங்கி நடந்து கொள்ளவேணுமே ஆனபடியினுலே எவனுக்கும் கடன் மூலமாய்ப் பத்துப்பணம் கொடுத்திருந்தால் எவனும் தங்கள் சொல்லுக்குக் குற்றமில்லாமல் நடக்கவேணுமென்றும், பார்த்தவர்களுக்கும் இவர்களுக்கும் செல்வாக்கு நடக்கிருப்போலே ஒருத்தருக்கும் நடக்கிறதில்லையென்கிற ப்ரம்மியிருக்கவேணுமென்றும், கிரஸ்தரமாக சிறிது பேர்கள் வருகிறவர்களுக்குப் புதுச்சேரிக்கு ஆதிப்த்யம் இவர்களுடையதேயல்லாமல் வேறே இல்லை. பணம் இவர்களுக்கு இருக்கிருப்போலே ஒருத்தருக்குமில்லை. வேண்டியமட்டுக்கும் பணமும் அகப்படும். அதிகாரம் இவர்களுடையதாயிருக்கிறபடியினுலே வேணுமென்ற உத்தியோகம் பண்ணிக்கொள்ளலாமென்று தோற்றி வரவேணுமென்றும், அப்பாலும் பணம் கொடுக்கிறதற்கு வட்டிகூட வருகுதென்றும் இப்படி நாலுவிதமாக யோசனைக்கும் அனுகூலமாய் இருக்குதென்று நடத்துகிருர்களென்றும், எவர்கள் வந்து என்ன சொல்லிக்கொண்டாலும் சீக்கிரமாக அதை மேல்வாங்கிக்கொள்ளுகிற சாடையும் தங்களுக்குத்தான் அனுபவமாமே என்று சாடையாய்ச் சொன்னேன். மெய்தானென்று ஒத்துக்கொண்டு, சீர்மையிலே இவர்கள் திரியாவாக்காரரென்றும் அபத்தக்காரரென்றும், வஞ்சனைபண்ணுகிற தொழில் இவர்களிடத்திலே பிறந்ததென்றும் ஸமஸ்தமான பேருக்கும் வெளிச்சமாய்த் தெரிந்து ஒருத்தருமிவர்கள் பேச்சை விசுவாசிக்கிறதுமில்லை. ஆனுல் கடன் கொடுத்து வட்டி வாங்குகிறசேதி அறிந்தால் இதைத்தொட்டு மெத்த பொல்லாப்பு நடக்கும். ஆனுலும் பொல்லாதவர்கள் இவர்களை முசியே பேனுவார் நன்ருயடக்கினுனென்றும் சொல்லி, முசியே தும்மா அத்தனை கப்பாசு அல்லாததினுலே சற்று விசுரும்பித்தார்களென்று சொன்னுர். அதற்கு உம்

முடைய நாளை விசுரும்பித்து அவர்கள் துரைத்தனம் பண்ணு கிறப்போலே எந்த நாளையிலேயும் இல்லையென்று மனதிலே எண்ணிக்கொண்டு ஐயா, முசியே பெனுவார் அடக்கினுரையா, நீர் அடக்கினீர் என்று சற்றே ஸ்தவுத்தியமாய்ச் சொன்னேன். அதற்கு அவர் முசியே தும்மாவுக்கு ஒரு பேர் தெருமில்லை, அப் பாலும் கப்பாசுமல்ல என்று சொல்லி, பணம்மாத்திரம் நன் ருய்ச் சம்பாதித்தான் என்று சொன்னுர். அதற்கு அப்படி நூறு பங்கு பணம் திரண்ட பிராயமாய்ச் சம்பாதிக்கலாம். நீர் இந்த ராச்சியத்துக்குச் சுபேதாரனை செயித்து ஆற்காடு மட்டுக்கும் தெருத்தின குறத்தியும் சென்னப்பட்டணம் வாங் கின கீர்த்தி டில்லி பரியந்திரம் கல்லின்பேரிலே எழுதி ஸ்தா பித்தாப்போலே அவனவன் இருதயத்திலே பாற்சாக்கரையிலே ஆகாத காரியம் உம்மாலே ஆச்சுதென்று பாளையக்கார ராசாக் கள்கூட ஸ்தவுத்தியம் பண்ணத்தக்கதாகக் கீர்த்தி சம்பாதித் தார். இதற்குச் சமானமான வஸ்து லோகத்துக்குள்ளே ஒன்றுமில்லை. மற்ற வஸ்துவுக்கு அழிவு உண்டு. இதற்கு அழிவில்லை என்றும், பின்னையும் சொல்லத்தக்கன சாடை யாய்ச்சொன்னதற்கு, பிரியேல்கூட இருந்தபடியினுலே ரங்கப் பன் புத்தி ஒருத்தருக்குமில்லையென்று என்னைச் சற்றே புகழ்ச்சி யாய்ச் சொன்னுர். முசியே பிரியேல், அதற்கு ரங்கப்பன் சொன்னது: உள்ளதுதானென்று ஒத்துக்கொண்டு இப்படி பேசியிருக்கச்சே, இங்கிலீஷ்காரர் பட்டணவர்களை வத்தக்கல் விட்டுப் பிடித்துக்கொண்டு போனுரென்று சொன்னுர்கள். அதன்பேரிலே ஞாபகமாயிருந்தார். அப்பால் எழுதத்தக்க சேதி ஒன்றுமில்லை. அதனுலே விஸ்தரித்து எழுதவில்லை,

*1748* ஆ பிப்ரவரி மீ *8*உக்கு பிரபவ ஞு தை மூ *29*உ வியாழக்கிழமை.

இற்றைநாள் நான் விரோசனத்துக்கு வாங்கிக்கொண்ட படியினுலே துரையவர்கள் வீட்டிற்குப் போகவில்லை. துரை யவர்களுக்குச் சேத்துப்பட்டிலேயிருந்து வந்த மனுவேல் தேதந் னுடைய பறங்கிக் காகிதமும் அதைப் பிரஞ்சிலே எழுதின காகிதமும் ஆக இரண்டு காகிதங்களும் குவர்னதோர் என்னண் டைக்கு அனுப்பினுர். அதைப் பார்த்தவிடத்திலே அதிலே முன் எழுதினபடிக்கு இருபத்தைந்துபேரையும் நான் கொண்டு

வந்து ஒப்புவிக்கிறேன். நீங்கள் உங்கள் வர்த்தகனுக்கும் உங்கள் பிராமணனுக்கும் நான் கேட்ட பணத்தைக் கொடுக்கச் சொல்லி எழுதியனுப்புவிக்கவேணுமென்றும், நான் இந்தத் துலுக்கர் கையிலே படுகிற அவஸ்தை சொல்லி முடியாதென்றும், அதனாலே உம்முடைய காலிலே விழுந்ததாய் எண்ணிக் கொண்டு நீங்கள் தயவுபண்ணி என்னை அழைப்பித்துக்கொள்ள வேணுமென்றும், பின்னையும் உபசாரமாய் எழுதியிருந்தது. இந்தச் சமாசாரம் நாளைக் காலமே போய்ச் சொல்லுவோமென்கிறதாயிருந்தோம்.

அப்பால் பதினொரு மணிக்குத் துரையவர்கள் அப்புமுதலியார் கையிலே வச்சிரமொன்று கொடுத்து, அதை விலை மதித்துக்கொண்டு வரச்சொல்லி அனுப்புவித்தாரென்று கொண்டு வந்து கொடுத்தார். அதை வாங்கி மூஞ்சானூர் பெருமாள் செட்டியும், சின்ன பெருமாள்செட்டியும், உத்துரா பெத்து செட்டியும் அழைப்பித்துக் காண்பித்தவிடத்திலே அவர்கள் விலை மதித்த வயணம்: பாரம் 1-க்கு மஞ்சடி 5 7/8 மூஞ்சானூர் பெருமாள்செட்டி சொன்னது: மஞ்சடி 1-க்கு வராகன் 80, சின்ன பெருமாள்செட்டியும் பெத்துசெட்டியும் மதித்தது மஞ்சடி 1-க்கு வராகன் 100 ஆகவும், மதிப்புச் சொல்லி இந்தக் காத்திரமான வைரத்துக்கு அயிபு இல்லாமல் நல்ல வெள்ளையாய் சுப்பிரமாயிருந்ததானால் மஞ்சடி 1-க்கு வராகன் 150-க்கு மேலே. அதன்மேல் பெறுமென்றும் சொன்னார்கள். அந்தப்படிக்குச் சொல்லி அந்த வைரத்தையும் அப்பு முதலியார் கையிலே கொடுத்து மறுபடி துரையவர்களண்டைக்கு அனுப்பிவிட்டோம்.

இற்றைநாள் சீரங்கப்பட்டணத்துக்கு வந்து பவான் தாசுக்கும் வெங்கடரமணய்யருக்கும் கடுதாசி எழுதிக் கொடுத்து சேலத்திலே சென்னராயசெட்டி பேரிலே இரண்டாயிரம் ரூபாய்க்கு குண்டூர் வாலிசெட்டி கையிலே உண்டிகை வாங்கிக் கொடுத்து அவருடைய மனுஷன் சின்னாங்குட்டி செட்டி என்கிறவனையும் கூடக்கூட்டி, சேலத்திலே போய் உண்டிகையைக் கொடுத்து இரண்டாயிரம் ரூபாயும் கொண்டு வந்து, சீரங்கப்பட்டணத்திலே கொண்டுவந்து செலுத்திவிட்டு வரச்சொல்லி, அவர் பிறகே ஒரு சேவகனையும் கூட அனுப்புவித்தோம்.

இற்றைநாள் எனக்குப் பத்துபனிரெண்டுதரம் பேதியாச் சுது. அதனாலே சரீரம் ஆரோக்கியமாயிருந்தது. இற்றைநாள் தென்னண்டை வீட்டை முஸ்தீதுபண்ணியிருந்தபடியினாலே அந்த வீட்டிலே கட்டில்போட்டு, இறையதினம் மத்தியானம் அந்த வீட்டிலே சயனித்துக்கொண்டு நித்திரை பண்ணினோம். இராத்திரியும் இரண்டு நாழிகை உட்கார்ந்திருந்து பிற்பாடு கூடத்திலே போய் படுத்துக்கொண்டோம்.

இற்றை நாள் அழிசபாக்கத்துக் குடியண்டைக்கு நாம் மணியக்கார வெங்கடப்பிள்ளையை அனுப்புவித்து அறுப்பு அறுக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தனுப்பியிருக்கச்சே,அந்தப் படிக்கு நடவாமல் பிச்சுக்கவுண்டனென்கிறவன் ராத்திரியிலே ஏழெட்டு காணியை மாத்திரம், அறுத்துவிட்டு அறுத்துக் கொண்டுபோய், நெல்லை எடுத்துக்கொண்டுபோய் அந்த நிலத் தை மறுபடியும் உழுது சேடைவிட்டபடியினாலே அதைக் கண்டுபிடித்து அந்த நெல்லைக் கொண்டுவந்து ஒப்புவிக்கச் சொல்லிக் கண்டித்ததின்பேரிலே' அந்தக் குடிகள் போய் மூத் திரிசப்பிள்ளைசாவடியிலே இறங்கியிருக்கிற முசியே புரியுடனே சொன்னபாவனையாய் அய்யா, தம்பியுடனே சொல்லி மலையன் சேவகரை நாலுபேரை அழைப்பித்துக்கொண்டுபோய் வெங் கப்பனை மொட்டினபடியினாலேயும் அவர்கள்தானே அவனை ஒளிக்கவைத்தபடியினாலே அந்தக் கபுறு நமக்கு வந்து உடனே இங்கேயிருந்து மலையப்பனையும் நாலைந்து சேவகரையும் அனுப் புவித்து அந்த நாட்டார் நாராயணரெட்டி, வெங்கடபதி ரெட்டி, பிச்சுக்கவுண்டன், பின்னையும் அந்தச் சேவகர் மூன்று பேரையும், சாயங்காலம் மலையப்பன் அழைத்துக்கொண்டு வந்து விட்டான். அவர்களையெல்லாம் சாவடியிலே கொண்டு போய்க் காவல் வைக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தோம்.

1748 ஆ பிப்ரவரி மீ 9 உக்கு பிரபவ ஸு மாசி மீ 1௳ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டிற்குப் போய் சேத்துப்பட்டிலேயிருந்து மனுவேல் தேகூஞ் என்கிறவன் துரைக்கு அனுப்பின பறங்கிக் காகிதமும், அதை திரான்ஸி லேட்டுபண்ணின பிராஞ்சுக் காகிதமும் எனக்கு வந்த காகிதச் சேதியும் துரை கையிலே கொடுத்தவிடத்திலே அவர் சொன் னது: அங்கே சாவுகார் ஒப்புக்கொள்ளவும், அந்த வெள்ளைக்

காரர் இங்கே வந்து சேர்ந்தாப்போலே கொடுக்கவும். ஆனால், அந்தப்படிக்குச் சொல்லிக்கொள்ளச் சொல்லு; இல்லாவிட்டால் வந்துவிடச் சொல்லென்றார். நல்லதென்று அந்தப்படிக்கு ஸ்ரீ சோயாவுக்கு காவிறுல் வெங்கடேசசெட்டிக்கும் எழுதியனுப்புவித்தேன். அப்பால் நேற்றையதினம் அறிசபாக்கத்திலே ரெட்டிகள் நடப்பித்ததும் அவர்களைக் கொண்டுவந்து காவல் வைத்திருக்கிற சேதியும் சொன்னேன். அவர்களை என்ன செய்யவேணுமோ அப்படிச் செய்யென்று சொன்னார். மூன்று சேவகரையும் இருபத்தைந்து அடி விழுக்காடு அடித்து ஊர் கடக்கத் தெருத்திவிடவேணும். இந்த ரெட்டிகள் எடுத்துப்போன நெல்லை மறுபடி கொண்டுவந்து முதலிட்ட பிற்பாடு விடுகிறேனென்று சொன்னேன். அப்படிச் செய்யென்று சொன்னார். அப்பால் அங்கேயிருந்து தறமசெட்டி பெண்சாதி சீமந்த கலியாணத்துக்கு அவர் வீட்டிற்குப்போய் அங்கேயிருந்து வீட்டிற்கு வந்து நேற்று துண்டரிக்கப்பண்ணின மலையப்பன் சேவகர் மூன்றுபேரையும் ரெட்டிகளையும் அழைப்பித்து ரெட்டிகள் முன்பாக அந்த மூன்று சேவகரையும் இருபத்தைந்து விழுக்காடு அடிப்பித்து ஊருக்கு அப்புறத்திலே கொண்டுபோய் விடச்சொல்லி ரெட்டிகளைக் கொண்டுபோய்க் காவலிலே இருக்கச் சொன்னேனென்றார்.

இற்றைநாள் காலமே இவ்விடத்திலேயிருந்து ஐம்பது பேர் சொல்தாது கூனிமேட்டிலே போய் அவ்விடத்திலேயிருந்து இரண்டு மாசிலப் படகிலே ஏறிக்கொண்டு துபாக்கி வைத்துச் சுடுகிறதற்கு சலங்கிலே துவாரம்விட்டுதப்பத்தோர் அடைத்து வைத்துக்கொண்டு வடக்கேயிருந்து ஓடிவருகிற பாவனையாய் வரச்சே, நம்முடைய சாவடியண்டையிலே வரச்சே, நயினியப்பிள்ளை சாவடிக்கு நேராய் நடக்கிற இங்கிலீஷ் கப்பல்காரன் ஒரு லாங்கு போட்டிலும் விட்டான். அதிலே சிறிது வெள்ளைக்காரரும் சிப்பாய்களுமாய் வந்தார்கள். அவர்கள் அந்த லாங்கு போட்டிலு மேலே ஏறிக்கொண்டு இந்த மாசிலிப்பட்டணம் பிடிக்கவந்தார்கள். அவர்கள் கிட்டே வருகிறமட்டுக்கும் சும்மாவிருந்து கிட்டே சமீபத்திலே வந்தவுடனே அந்த லாங்கு போட்டிலே யிருந்து இரண்டு வெடி சுட்டார்கள். அதற்குள்ளே இந்த மாசிலிப்படகிலேயிருக்கிற பிராஞ்சுக்காரர் தப்பதோரெல்லாம் பிடுங்கிப்போட்டு ஒரு க்ஷிப்பிறமாய் ஒரு வரிசை தீர்த்தார்கள். அதற்குள்ளே பதினறுபேர் விழுந்து

போனார்கள். அந்தமட்டிலே புறப்பட்டு தண்டு வலித்துக் கொண்டு கப்பலண்டைக்குவரச்சே எதிரே ஒரு லாங்குபோட்டிலும் வந்து இரண்டும் கூடிக்கொண்டு கப்பலைப்போய்ப் பிடித்து மாசிலிப்படகிலேயிருந்த பிராஞ்சுக்காரருள்ளே ஒருத்தனுக்குமாத்திரம் நடு மார்பிலே குண்டுபட்டு செத்துப் போனான். ஒருத்தனுக்குக் காயம் அந்தமட்டிலே வந்துசேர்ந்து போனார்கள். தேவனாம்பட்டணத்திலே யிருந்து சேதி வந்ததும் பதினொருபேர் விழுந்துபோனது மெய்யென்றுதான் சேதி வந்தது. அவர்கள் தமிழருட்படவென்று ஏமாறி வந்தபடியினாலே மோசம்போய் விழுந்துபோனார்கள்.

இற்றைநாள் ராத்திரி மூன்று மணிவேளைக்கு தேவனாம்பட்டணத்திலே யிருந்து மூன்று லாங்குபோட்டிலே வெள்ளைக்காரர் ஏறிக்கொண்டு மருந்து பீப்பாயும் ஏற்றிக்கொண்டு வந்து புதுச்சேரி துறையிலே யிருந்த வடக்கத்துக் குறுப்புகள் சுலுப்பு உள்பட ஐந்து உருபடியை பீரங்கி மருந்தைக் கொட்டிக் கொளுத்திப்போட்டு ஓடிப்போய்விட்டார்கள். அதற்கு நங்கூரத்தையும் கொளுத்திவிட்டபடியினாலே அலைகளிலே எரிந்துகொண்டிருந்து இரண்டு துறையிலேதானே மூழ்கிப் போச்சுது. அப்புறம் தெற்கே இரண்டு நாழிகை தூரமட்டுக்குப்போய் மூன்று உருப்படி மூழ்கிப்போச்சுது. இந்த ஐந்து உருப்படியிலே சேதமாய்ப் போன சரக்குகள் திறைகள் சுலுப்புப் படகு குறுப்புகள் கிரயமும் இப்புறம் எழுதுகிறேன்.

1748 ஆ பிப்ரவரி மூ 10உக்கு பிரபவ ஞு மாசி மீ 2உ சனிக்கிழமை.

இற்றைநாள் காலமே பத்து மணி வேளைக்குப் பட்டணத்துக்கு மேற்புறமாய் இருக்கிற வாணப்பட்டடை பத்திக்கொண்டு சேதப்பட்டுப்போச்சுது. அதிலே ரெண்டுபேர் செத்துப்போனார்கள். ரெண்டுபேர் சாவு காயம். ஒன்பதுபேருக்கு அசல் காயம். அவர்கள் பிழைப்பார்களென்று சொன்னார்கள்.

1748 ஆ பிப்ரவரி மீ 14 உ க்கு பிரபவ ஞு மாசி மீ 6 உ புதவாரம்.

இற்றைநாள் துரைவீட்டிற்குப் போனவிடத்திலே விசேஷ அதிசயம் பின்னே ஒன்றுமில்லை [illegible]

பாறு வைத்தபடியினுலே நானும் பாறு பார்க்கப் போனேன். அங்கே துரை மேலே இந்த வாதாடி இறங்கி வந்தவர் என்னைக் கண்டவர் நான் இருந்த கருமாரக் கூடத்து அண்டைக்கு வந்து, பார்த்தாயா? சண்டை சாம்சான் என்று கேட்டார். ஆம் ஐயா, பணம் விருதாவாயிருக்குதென்று சொன்னேன். அது மெய்தானென்று ஒத்துக்கொண்டு, கும்பினியாருக்கு எத்தனை விதத்திலே நஷ்டமாயிருக்கிறது. ஆனலும், காலதேச வர்த்தமானத்துக்குத் தக்கதாய் நடந்துகொள்ளவேணுமென்று சொன்னர். அதன்பேரிலே மெய்தானையா, அதிலேயும் நீங்கள் செலவு செத்தாயங்களை நெருக்கிக்கொண்டு வந்தபடியினலே இந்தமட்டுக்கும். இல்லாவிட்டால் இப்படி மூன்றத்தனை நாலத்தனை செலவும் செல்லுகிறது. மூன்று வருஷம் நாலு வருஷம் செல்லுமென்று சொல்லிப் பின்னையும் ஸ்தவுத்ரியமாய் அநேக பேச்சுகள் பேசிக்கொண்டு கருமாரக் கூடத்துக்கு வந்தவுடனே இதோ பார்த்தாயா, சென்னப்பட்டணத்திலிருந்துவந்த பதினெட்டு ராத்தல் குண்டு பீரங்கி என்று காண்பித்தார். அதற்கு நான் இருபத்துநாலு ராத்தல் குண்டோறபீரங்கிகளுமிருந்ததென்ருர்களே அது வரவில்லையோவென்று கேட்டதற்குப் பத்துப் பனிரெண்டு பீரங்கி வந்தது. கடற்கரை கொத்தளங்களிலே வைத்திருக்கிறது. சிறிது முசியே லபூர்தோனே ஏற்றிக்கொண்டான். சிறிது சென்னப்பட்டணத்திலே யிருக்கிறதென்றும், முசியே துலோராம் போனவன் மெத்த கொஞ்ச வேலையெல்லாம் செய்தானென்றும் சொன்னர். அப்பால் முசியே லூக்கர் அனுப்பின இரண்டாயிரத்தித் தொளாயிரத்தி ஐம்பத்தேழு ரூபாய் ரசீதைக் காண்பித்தேன். அதைப பார்த்து இப்போது அவன் எங்கே என்று கேட்டார். கடப்பைக்குப் போனனென்று சொன்னேன். முசியே கோர்னேத்து கையிலே கொடுத்துப் பணம் வாங்கிக்கொள்ளென்று சொன்னதற்கு நல்லதய்யாவென்று சொன்னேன். அப்பால் ஆடியபாதப் பிள்ளை குமாரன் தாண்டவராயப்பிள்ளை என்கிறவன் காலம் பண்ணிப் போனனே அவன் உத்தியோகத்துக்குப் பெத்தி அரும்பாத்தை பேசினனென்று சொன்னேன். அதற்கு நீ தீர்த்துப் போடு என்ருர். பெத்தி அரும்பாத்தைக்குக் கொடுத்தால் பரசுராமனுக்கு மனதுக்குச் சமாதானமாயிராது. அதற்குப் பின்னையும் அதிகமாய்த்தானே வாங்கித்தாரேனென்று சொல்லி அந்தமட்டுக்கும் நடத்தாமல் விட்டுவிட்டாயென்று சொன்னர்.

நல்லது அந்தப்படிக்குத்தானே தீர்த்துப் போடுகிறேனென்று சொன்னேன்.

சென்னப்பட்டணத்திலே இருநூறு மாடுகள் இருக்குது. அதுகள் சிறிது தினுசுகள் எடுப்பித்துக்கொண்டு இவ்விடத் துக்கு வருகுது. அது கவைக்கு வருமா என்று கேட்டார். அது வடக்கத்துமாடு நமக்குக் கவைக்கு வருமென்று சொன்னேன். ஆனால், வண்டியிழுக்கிறதற்கும் மற்றக் கவைக்கும் வைத்துக் கொள் என்று சொன்னார். நல்லதய்யா வென்று சொன்னேன். பிற்பாடு துரையவர்கள் சொன்ன தென்னவென்றால்: சென் னப்பட்டணத்திலே ஒரு கிடங்கிலேயிருந்து இரண்டாயிரம் சாக்கு கோதும்பை அகப்பட்டது. ஆனபடியினாலே முசியே லூக்காவுக்கு எழுதியனுப்பி இனிமேல் கோதும்பை வாங்க வேண்டாமென்று எழுதியனுப்பச் சொன்னார். நல்லதென்று சொன்னேன். இந்தப்படிக்கு நடந்துகொண்டே பேசிக்கொண்டு துரையவர்கள் வீடுமட்டுக்கும் வந்தோம்.

அப்பால் தேவனாம்பட்டணத்தார் சின்ன மனுஷர். அவர் கள் ஆண்பிள்ளையானால் எங்கள்பேரிலே அல்லவோ சண் டைக்கு வரவேணும். அதை விட்டுப்போட்டு ஏழைப்படகுகளை சுட்டுப்போட்டார்கள். பார்த்தாயாவென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது. சிங்கமாகப்பட்டது யானையினு டைய மஸ்தகத்தைப் பிளக்கும் நாயாகப்பட்டது எலும்பும் தோலும் பொருக்கும் அப்படிப்போலே உங்களுடைய புத்தி வாங்கினால், சென்னப்பட்டணம், தேவனாம்பட்டணம், கூடலூர், இப்படிப்பட்ட கோட்டை ஸ்தலமாகிய பட்டணங் களை வாங்குகிறது அவர்களுடைய புத்தி என்னவென்றால்: இப்படிப்பட்ட காரியங்கள், படகுகளைச் சுட்டுவிட்டு ஓடிப் போகிறதும், கட்டு மரங்களைப் பிடிக்கிறதும் என்கிறதாய்ச் சொன்னேன். அதற்கு நகைத்துக்கொண்டு உள்ளே நுழைந் தார். அதன்பிறகு மேல் வீட்டின்பேரிலே ஏறப்போனார். ஏறப்போகச்சே என்னைப் பார்த்து, வெகு தூரம் நடந்து வந் தாயே உனக்கு. கால் சற்று நோவாச்சுதே. மேல் வீட்டின் பேரிலே நீ ஏறமாட்டாய். நீ போய் சற்றே இளைப்பாறு போ என்று சொல்லிவிட்டு மெத்தைமேலே ஏறினார். நானும் அனுப்புவித்துக்கொண்டு பாக்குக் கிடங்குக்கு வந்து கோதும் பைச் சேதிக்கு இந்தமட்டுக்கும் வாங்கிப் போட்டதுபோக

இனிமேல் பரிச்சேதம் வாங்கத் தேவையில்லை என்று முசியே லூக்காவுக்கு, நம்முடைய மாளிகைக்கும் கடுதாசி எழுதி இற்றை நாள் ராத்திரி சேவகனைப் பயணம்பண்ணி அனுப்பிவிட்டு, ஒன்பதரை மணிக்கு வீட்டிற்கு வந்தோம்.

1748 ஆ பிப்ரவரி மீ 15உக்கு பிரபவ ஞு மாசி மீ 7உ வியாழக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக் கதவு சாத்தி துரை உள்ளே உடுத்திக்கொண்டிருக்கிறார்களென்று சொன்னார்கள். அதன்பேரிலே பாக்குக் கிடங்கிலே வந்திருக்கச்சே முசியே புரியேலை அழைப்பித்து வடக்கத்துப் படகுக்காரர்கள் சுலுப்புக் கொறுபுகள் முதலானது சுட்டுப்போனதிகரை தட்டவிட்டது உருப்படி எட்டுக்கும் இங்கிலீஷ் பாஷையிலே பெத்திஸியோமும், அதுகள் சேதத்துக்கு வர்த்தகர் கையெழுத்து வாங்கச் சொல்லச்சொல்லிக் கொடுத்துவிட்டுப் போனான். அப்பால் அதை வாங்கிக்கொண்டு பாக்குக் கிடங்குக்கு வந்தேன். அதிலே குவர்னதோர் அழைத்துவரச் சொன்னாரென்று சேவகன் வந்து அழைத்தான். துரை வீட்டுக்குக் குசினி வழியாய்ப் போய் துரையண்டைக்குப் போனால் துரை உடுத்திக்கொண்டு காகிதமெழுதிக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறார். இவரிருக்கிற சாடையும் தெருக் கதவு சாத்தி இருக்கிறதும் பார்த்தால் நன்றாய்க் காணவில்லை. என்னமோ வீட்டிலே வேறே ஆலோசனையின்பேரிலே இருக்கிறாப்போலே காணுதென்று யோசனைபண்ணிக்கொண்டு துரையண்டைக்குப் போனேன்.

துரை எத்தனை நெல்லு பொதி வந்ததென்று கேட்டார். சாவடி டாப்புப்படிக்குப் படித்தேன். நெல்லு பொதி கொஞ்சம் வந்ததென்று கோபித்துக்கொண்டார். அப்பால் வடக்கத்தியார் பெத்திஸியோமிலே கையெழுத்துப் போட்டார்களா என்று கேட்டார். போட்டார்களென்று சொன்னேன். அதற்கு அவர்கள் போனாலும் சரி என்று வேசடையாய்ச் சொன்னார். அதற்கு நான் மறு உத்தாரம் கொடாமல் சும்மா நின்றேன். அப்பால், அங்கே இரு என்று சொன்னார். அதன்பேரிலே நான் கணக்கு ரங்கப்பிள்ளையிருக்கிற கிடங்கிலே வந்து உட்கார்ந்துகொண்டிருந்தேன். இதிலே பெண்சாதி ஒரு காகிதமெழுதிக்கொண்டுபோய்க் கொடுத்து என்னமோ ஒரு நாழிகை

பேசியிருந்தான். அதின்பேரிலே சின்ன துரை, முசியே லேதவை அழைக்கச்சொன்னார். அவர் வந்தவுடனே என்ன வினைத்துக் கொண்டாரோ; நாம் உம்மை அழைக்கச் சொல்லவில்லை. யாரோ அழைத்தவர்கள் தப்பிதமா யழைத்தார்களென்று சொல்லிப்போகச் சொல்லி, அப்பால் என்னை அழைத்து இந்தப் பட்டணத்திலே இருக்கப்பட்ட பெரிய மனுஷர்கள் தேவனும்பட்டணத்துக்குச் சேதி எழுதி யனுப்புகிறார்கள். அவர்களுக்கு என்ன வருகிறதோ இதிலே, என்ன ஆதாயம் படைக்கப்போகிறார்கள். சென்னப்பட்டணத்து வர்த்தகர்களை வர வேண்டாமென்று சொன்னார்கள். அவர்கள் என்ன அனுப்புவித்தார்கள்? பட்டணத்துக்குள்ளே இருந்தால் மோசமென்று வெளியே போனவிடத்திலே மாபூசுகான் தண்டுக்காரரை விட்டு சமஸ்தமும் பறித்துக்கொண்டார். கொஞ்சநஞ்சம் பட்டணத்திலே யிருந்ததை பிரான்சுக்காரர் எடுத்துக்கொண்டார்கள். அப்படியும் கெட்டார்கள். இப்படியும் கெட்டார்கள். இந்த ஊரிலே இருக்கிற பெரிய மனுஷர்கள் தட்டு முட்டு வெளியே கொண்டுபோகிறவர்களுக்கும் இப்படித்தான் சம்பவிக்கும் என்று சொன்னார். அதற்கு நான் ஐயா, அப்படி நடத்துகிறவர்களுக்கு உபய பிரஷ்டத்துவம் வந்து அப்படித்தான் சம்பவிக்கும். ஆனால் இந்தப் பட்டணத்திலே இருக்கப்பட்டவர்கள் தட்டுமுட்டுகளைப் பயந்து அப்பால் கொஞ்ச நஞ்சம் படுத்தினபேருண்டாயிருக்கும். நானும் உங்களுக்கு அப்போதைக்கப்போது கபுறு சொல்லிக்கொண்டு வந்தேன். நானும் அவர்களைக் கண்டித்துச் சொன்னது மூன்று வெள்ளைக்காரர்தானே அவரவர் தட்டுமுட்டை அப்பால் படுத்தச்சே தமிழர்களுக்குப் பயம் தோற்றுகிறதற்கு அட்டியிருக்கிறதா? ஆனால் சுவாமி, உனக்கு மாத்திரம் சகல புத்தியும் கொடுத்த படியினாலேயும், சகல கீர்த்தியும் உமக்கே வருத்துவிக்கும் பொருட்டாய் எல்லாரையும் மடையனாக்கினார். ஆனால் அதற்கு நீர் சந்தோஷப்படவேணுமே யல்லாமல் அதற்கு நீங்கள் விசனப்படத் தேவையில்லை. ஆனாலிவ்விடத்திலிருந்து சேதி எழுதியது.

**1748 ஆ பிப்ரவரி மீ 16 உக்கு பிரபவ ஞ மாசி மீ 8 உ வெள்ளிக்கிழமை**

இற்றை நாள் காலத்தாலே சண்டை கோன்சேல் பண்ணி முத்திரிசப்பிள்ளை சாவடியிலிருக்கிற தாசுமானிலிருந்து

ஓடிப்போய்ப் பிடித்துவந்த ஆறு சொல்தாதுகளையும் விசாரிக்கும் பொருட்டுத் துரை, படைத்தலைவர் கோன்சேலிலே யிருக்கிறார்கள் என்று சொன்னபடியினாலே பாக்குக் கிடங்கிலே யிருந்து நேற்று துரையவர்களை கும்பினீர் வர்த்தகர்கள் பேரிலே தேவனும்பட்டணத்துக்குக் கபுறு எழுதுகிறார்கள் என்று சொன்ன சம்மதிக்கு கேட்கிறதற்குக் கும்பினீர் வர்த்தகரை நேற்று அழைத்தனுப்பினதற்கு, சகாயருக்குத் தலை நோயினாலே வரக்கூடாமல் என்றும் நாளையதினம் வருகிறோமென்றும் சொன்னபடிக்குப் பாக்குக் கிடங்குக்குக் கும்பினீர் வர்த்தகர் அனைவரும் வந்து சேர்ந்தார்கள் என்று வந்து கபுறு சொன்னதின்பேரிலே வெளியிலே இருந்த நான் உள்ளேபோய் வர்த்தகரை நேற்றைக்குத் துரையவர்கள் சொன்ன பேச்சை நீங்கள் கூடலூருக்குச் சேதி எழுதுகிறீர்கள் என்றும், இதல்லாமல் பட்டணத்தைக் காபுறு பண்ணினீர்கள். எப்படியென்றால், நீங்கள் உங்கள் தட்டு முட்டையெல்லாம் அப்பால் படுத்தினதைக்கொண்டு பட்டணத்து ஜனங்கள் கும்பினீர் வர்த்தகருக்குத் தெரியாத காரியமா இவர்கள் குஞ்சு குழந்தைகள், தட்டுமுட்டுகள் அப்பாலே போகிறமட்டுக்கும் நாமென்ன நிர்வாகம் பண்ணப்போகிறோமா என்று சமஸ்தமானபேரும் புறப்பட்டுப்போனார்கள். இது உங்களுக்கு ஏதாகிலும் சேதி வராமல் நீங்கள் இந்தப்பட்டணத்தை ஐயப்படுத்தக் காரியமென்ன? ஆனபடியினாலே அவ்விடத்துச் சேதி ஏதாகிலும் வந்தல்லவோ நீங்கள் நடத்தவேணும் என்று கேட்டதற்குக் கும்பினீர் வர்த்தகர் சொன்னது; நாங்கள் இந்தக் கும்பினீர் தோன்றின நாள் முதற்கொண்டு நாங்கள் இந்த பிரான்சு கும்பினீரிலே தலைமுறை தலைமுறையாய் வர்த்தகம்பண்ணி, சம்பாத்தியம்பண்ணிச் சாப்பிட்டு அந்தரங்கங்கள் எங்கள் சரீரமெல்லாம் இருக்கிறதுமல்லாமல் எங்கள் பிள்ளைகள் அவர்களுடைய பிள்ளைகளுமல்லாமல், எங்கள் பாட்டன் தகப்பன்மார்கூட அப்படியிருக்கச்சே நாங்கள் இந்தப் பட்டணத்துக்கும் இந்தப் பிரான்சுக்காரருக்கும் துரோகம்பண்ணினால் அந்தக்ஷணமே கெட்டு, அன்னம் கிடையாமல் துக்கப்படுகிறதுமல்லாமல், பின்னையும் வெகு துக்கத்தை அடைவோம். அப்படி ஒருக்கா[illegible] துரோகமான காரியம் செய்திருந்தால் நாங்கள் இப்படிச் சுகப்பட்டிருக்கமாட்டோம். நாங்கள் அப்படி நினைத்ததுமில்லையென்று இந்தப் பட்டணம் இன்னும் வெகு விறதியை அடைந்து இந்தப் பட்டணத்தை ஆளுகிற பிரபுவுக்கும் சகல

மேன்பாடும், சகல திக்விசயமும், கீர்த்தியும் வரவேணுமென்றும், நம்முடைய பிரபுவினுடைய சத்துருவுக்குச் சகல அபசெயமும் வந்து எதிரி பட்டணம் கைவசமாகவேணுமென்று சுவாமியை எப்போதும் நினைக்கிறோம். ஆனலப்படி நினைத்தால் நாங்கள் சுகப்பட்டிருக்கிறதும், மாறுபாடா நினைத்தால் கெட்டுப்போகிறதுமே திருஷ்டாந்திரம் என்று சொல்லி, பின்னையும் அநேக விதமாய் தங்களாலே வந்ததில்லையென்று நியாயமுமாய்த் தீர்க்கிறோமென்று கெட்டியாய்ச் சொன்னார்கள்.

அதற்கு நானிருந்துகொண்டு சேதிபாதி சொல்லியனுப்பினதில்லையென்றுதான் உத்தரப் பிரதி உத்தாரம் கெட்டியாய்ச் சொன்னீர்களே, இதுதானும் அப்புறம் ஏதாகிலும் தத்துவம் சேனையாய்ப் பார்த்துக்கொண்டு இவர்கள் தப்பிதமாய் நடந்தால் இவர்களுக்கு இக்கட்டு வராதாவென்று யோசனைபண்ணிக்கொள்ளச் சொன்னீர்களல்லவா என்று சொன்னதற்கு அப்படிக் கவையில்லை. துரோகம்பண்ணுகிறதற்கு விகுத்புத்தி சாக்ஷி ஏதாகிலும் ஒன்றுக்கொன்று வந்துவிட்டு சமுசாரத்துடன்கூட தூக்குப்போட்டு, இருக்கிற ஆஸ்தியை எடுத்துக்கொள்ளுகிறதற்கு எங்களுக்குப் பதினாயிரம்தரம் சம்மதி. அந்தப்படிக்குச் சீட்டு நாட்டெழுதி வாங்கிக்கொண்டு, சொன்னவர்களைக் கொண்டுவந்து ருசுவு பண்ணுவித்து எங்களை ஆக்கினை பண்ணுகிறதுமில்லாமல் எங்கள் பேரிலே அபாண்டம் சொன்னால் அவர்களை அந்தப்படிக்கு ஆக்கினைபண்ணுகிறதென்று மெத்த பலமாய்ச் சொன்னார்கள். அதற்கு நான் சொன்னது: இது இம்மாத்திரம் பெலப்பாய்ச் சொன்னீர்களேயல்லாமல் தட்டுமுட்டுகள் அனுப்பின பேச்சுக்கு ஒன்றும் சொல்லவில்லையே என்று கேட்டதற்கு, அதற்கு அவர்கள் சொன்னது: தட்டுமுட்டு வைக்கிறதற்கு இது சிறிது பெலனென்று எண்ணி நடத்தினால் எங்களுக்குச் சரக்கு ஒவ்வொருத்தனுக்கு ஐயாயிரம் பதினாயிரம் வராகனுக்கு இருக்கிறது. அதற்கு யோசனைபண்ணுகிறாயாவென்று கேட்டார்கள், அதற்கு நான் சொன்னது: மெய்தான் இது கும்பினீர் உடைமையை வைத்துக்கொண்டிருப்போம். நாமானல் நலமதானுகுதே இல்லாவிட்டால் நஷ்டமாய்க் கொள்ளைப் போச்சென்று சொல்லுவோமென்று யோசனைபண்ணியல்லவா சொந்த உடைமையையும் குஞ்சு குழந்தைகளையும் தாண்டுவித்தீர்கள் என்று சொன்னதற்கு மழுமழுவென்று பல்லைத் திறந்தார்கள். இது

உங்களுக்கு மரியாதையல்லவென்று சற்று கோபமாய்ச் சொல்லி அவர்கள் தட்டு முட்டுகளையும் குஞ்சு குழந்தைகளை யும் அழைப்பியாவிட்டால் இதைத்தொட்டு ரொம்பவும் பொல் லாப்பு வரும் என்று கெட்டியாய்ச் சொல்லி, சென்னப்பட்ட ணத்துக்குப் பத்தொன்பதாயிரத்தி இருநூறு ரூபாய் அனுப்பச் சொல்லித் திட்டப்படுத்தி அனுப்பிவிட்டு, அப்பால் துரை சமுகம் விசாரித்தால் ஆறு பேர் சொல்தாதுகளுக்கு ஒருத்தனை மாத்திரம் முத்திரிசப்பிள்ளை சாவடியிலிருக்கிற தாசுமான் சன்னடையிலே கொண்டுபோய்த் தூக்கவும், மற்ற ஐந்து பேரை யும் சீர்மையில் ராசாவினுட்சமெலரிலே வேலை செய்யவும் கோர்ந்தனுரிட்டுத் துரை வெளியிலே புறப்பட பதினெரு மணி யாச்சுது. அப்பால் மற்றப்படி துரையண்டை போக சமயமில் லாதபடியினலே பனிரெண்டு மணி வேளைக்கு வீட்டுக்குப் போனேன்.

இற்றைநாள் சாயங்காலம் நான் பாக்குக் கிடங்குக்கு வந்தவுடனே துரையும் சுவாரி போய் வந்தார். துரை மெத்தை யின்பேரிலே யிருந்து அழைத்தனுப்பினர். போனவுடனே சுண்ணும்பு எடுத்துவரச் சொல்லி ஆலங்குப்பத்துக்கு அனுப்பி னல் ஏழுரை பாறை சுண்ணும்பு எல்லாம் கொண்டுவந்தார்கள். இப்போது புதசாய் பீரங்கி மருந்து குண்டிமுக்க முஸ்தீது பண்ண வண்டிக்காரர் ஒரு கமுதை ஒரு பாறை எடுக்குது. இரண்டு மாடு கட்டியிருக்கிறது. இரண்டு மாடு விருதி கட்டு கிறதற்கு ஐய்வேசு இப்படியிருக்கிற வண்டி ஏழு பாறை சுண்ணும்பு கொண்டுவந்ததென்றுல் இந்த வண்டிக்காரர்களை என்ன செய்யவேணும். நாலு வண்டிக்காரராச்சே போனது. இரண்டு பேர் வந்தால் மற்ற இரண்டு பேர் எங்கே என்று கேட்டார். அவர்கள் மறுபடி வண்டி கட்டிக்கொண்டு அரியாங் குப்பத்துக்குப் போனர்கள் என்று சொன்னர்கள். அதன் பேரிலே இவர்கள் இரண்டு பேரையும் கட்டுவித்து அடிக்க வேணுமென்று சொன்னர். இப்படியிருக்கிற தறுவாயிலே முசியே துக்கேன் முத்திரிசப்பிள்ளை சாவடி அண்டையில் இருக் கிற தண்டுக்கு தூக்கக் கொண்டுபோன வெள்ளைக்காரனைத் தூக்குப்போட்டு கபுறு சொன்னர்கள்.

பிறகு மலேயப்பன் சேவகர் ஐம்பது பேர் அங்கேதையினுத் திருக்கிற பேருக்குச் சம்பளம் கொடுக்கவில்லை என்று பிராது

பண்ணினார்களென்று சொன்னதின்பேரிலே என்னவென்று கேட்டார். இன்றுதான் சம்பளம் கொண்டுபோனார்கள். இன்னும் கொடுத்திருக்கும் என்று சொன்னேன். மாசம் பிறந்து பதினாறு நாளாச்சுது. இப்பவா சம்பளம் கொடுக்கிறது என்று கேட்டார். பனிரெண்டாந்தேதி பரசுராமப் பிள்ளை சம்பளம் கொடுத்தான். இரண்டு நாள் சென்றது இவ்விடத்திலே சம்பளம் கொடுக்க, அவ்விடத்திற்கு இன்றைய தினந்தான் கொண்டுபோனார்களென்று சொன்னேன். நன்றாய் இருந்தது. மாசம் பிறந்து இத்தனை நாளாய்க்கூட மேல் இருக்கிறதென்ன? பரசுராமப்பிள்ளையையும், முசியே தில்லியாரை யும் அழைக்கச் சொன்னார். இதிலே முசியே தில்லியார் வந்தார். அவரை அழைத்துக் கோபித்துக்கொண்ட சாடையைக் காகிதத்திலே எழுதி முடியாது. அதற்கு அவரும் சிறிது உத்தரப் பிரதி உத்தரம் நடப்பித்துக்கொண்டுவந்தாலும் இவர் புலி போலே கோபித்துக்கொண்டு கடைசியிலே இறங்கி வரச்சே படி முனையிலே நான் நின்றேன். என்னண்டை வந்தாப்போலே முசியே தில்லியாரைப் பார்த்து, உனக்கு ஒரு மூன்று பிரூந்தி வார்த்தேன் சுடச்சுட என்று சொன்னார். அதற்கு முசியே தில்லியார் சொன்னது: கலாபத்தினாலே பிரூந்தி சாராயம் வரவில்லையே. அதனாலே நீங்கள் பிரூந்தி குடிக்கவேண்டியது நியாயந்தான் என்று சொன்னார். அப்பால் துரையவர்கள் முசியே தில்லியாரைப் பார்த்து, பரசுராமனை செலவெழுதி வரச் சொல்லி அது பார்த்துக்கொண்டு பணம் கொடுக்கிறதுதானே! ரங்கப்பா பார்த்தாயா, இந்த சின்யோர் மூவாயிரம் வராகன் முதல் தேதியிலேதானே சம்பளக்காரருக்கு என்று கொடுத்தாராம். அரும்பாத்தை செய்கிற வேலையைப் பார்த்தாயாவென்று கேட்டார். ஐயா, முப்பது, நாற்பது வருஷமாக அரும்பாத்தை வாடிக்கை இப்படித்தான் நடக்கிறது. பத்து நாள் ஏறக்குறைய வருகுதுதானென்று சொல்லிவிட்டு, அப்பால் பரசுராமப்பிள்ளை வந்தால் அங்கேதானே நிற்கச் சொல்லென்று ஒருத்தனைக்கொண்டு சொல்லியனுப்பி, துரை படி விட்டு இறங்கச் சொன்னார். ஒரு படி இறங்கிவந்த பிற்பாடு உள்ளே போகிறவர் என்னை அழைத்து வண்டிக்காரனை பேருக்கு பத்தடி போட்டு, நாளை முதற்கொண்டு வண்டி நிறை பாரமாய் ஏற்றிவரச் சொல்லென்று சொன்னார். நல்லதய்யா, அந்தப்படிச் சொல்லி அனுப்புகிறேனென்று சொல்லிவிட்டுப்

பாக்குக் கிடங்குக்குப் போய் உட்கார்ந்திருக்கச்சே பரசுராமப் பிள்ளை வந்தான். வந்தவுடனே நடந்த சேதி, இனிமேல் உமக்குப் பணம் கொடுக்கிறபோது முசியே தீல்லியார், துரை உத்தரவு வேணுமென்று சொல்லுவான்போலே இருக்குதென்று சொல்லி, நீர் இருக்கிற காரியத்திலே ஜாக்கிரதையாய் இரும். கோப வேளை, தப்பித்துக்கொண்டாப்போலே யாச்சுதே. இனிமேல் கப்பல் வருந்தனிலும் சற்று போராட்டமா யிருக்கும். அப் பாலே தாழ்த்தியாய் நடக்கும். அதேதென்றால், கோட்டை யிலே பணம் கடிசலானபடியினாலே இந்நேரத்துக்கும் அப்படி நடந்தல்லோ விஸ்தாரமாய் வந்தால் எதாப்பிரகாரம் நடக்கு மென்று சொன்னேன். நல்லது போய் வாரேனென்று சொல்லி விட்டுப் போனார். அப்புறம் வண்டிக்காரரை அழைத்து நாளை முதற்கொண்டு வண்டி நிறைபாரமாய் ஏற்றிக்கொண்டு வந்தாலாச்சுது இல்லாவிட்டால் அதற்குத் தக்கனுப்போலே ஆக்கினை நடக்குமென்று தாக்கீது சொல்லிப் போகச் சொன் னேன். பின்னையும், இரண்டு நாழிகைப் பொறுத்து வீர ராகவநாயகன், முத்திரிசப்பிள்ளைசாவடியிலே இருக்கிற தண் டிலே இருந்துவந்து சொன்ன சேதி என்னவென்றால்: வெள்ளைக் காரனை கழுத்திலே கயிறுபோட்டு ஏணிமேலே யிருந்து புரட்டி விட்டாப்போலே, கயிறு அறுந்து, தாழே விழுந்து எழுந்திருந்து கிட்டே யிருந்த பாதிரியைப் பார்த்து என் பங்கு சுவாமீ, என் குற்றத்தைப் பொறுத்து என்னை ரக்ஷித்தார். நான் தப்பினே னென்று பாதிரியார் கிட்டே வந்தமாத்திரத்திலே, பாதிரியார் பார்த்து, நீ செய்த குற்றத்திற்கு மனம் பொறுக்கத் தக்கன தில்லே என்று சொன்ன பேச்சு, முசியே திம்மரேன் கேட்டு, பாதிரியார் சுத்த மடையர் என்றெண்ணிக்கொண்டு முசியே திம்மரேன், வேறே கயிறு கொண்டுவரச்சொல்லி மறுபடி தூக்கு வைத்துப் போட்டானென்றும், எங்கும் லோகத்துக்குள்ளே வழங்குகிற வழக்கம், தூக்குப் போடுகிற சமயத்தில் கயிறு அறுந்ததேயுண்டானால் கிட்டே யிருக்கிற பாதிரிமார் நொஷத் தனை அழைத்து, தாங்கள் வசம்பண்ணிக்கொண்டு தங்கள் மேலே இருக்கிற புடவையை அவன்மேலே போத்தி, நீ செய்த குற்றத்திற்கு சுவாமி ரக்ஷித்தாரென்று நியாயக்காரருக்கும் பாதிரிமார் சொல்லவேண்டியது. அவன் செய்த குற்றத்திற்கு சுவாமி அவனை ரக்ஷித்தார். அவன் இனிமேல் நொஷத்தன் அல்லவென்று சொல்லி நியாயக்காரர் கேளாமற்போனாலும், அவனுக்குப் பதிலாய் நம்மைத் தூக்குப் போடுமென்று

சொல்லவேண்டிய நியாயத்துக்குப் பாதிரிமார்தானே மறுப்படி தூக்குப் போடுவோமென்று அவனுடனே சொன்னபடியினாலே நியாயக்காரனாக இருந்த முசியே திம்மரேன் தூக்குப்போடச் சொன்னான். ஆனபடியினாலே சகல சமஸ்தமான பேரும் பாதிரியாரை சொல்லாத பேச்சுகள் சொல்லி வெள்ளைக்காரர் முதலான பேர் அனைவரும் நிந்தித்தார்கள்.

*1748* ஆ பிப்ரவரி மீ 17உக்கு பிரபவ ஸு மாசி மீ 9உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோரவர்கள் வீட்டிற்குப் போனவிடத்திலே, நெல்லுப் பொதி விஸ்தாரமாய் வரவில்லையென்று துரையவர்கள் கோபமாய்ச் சொன்னார். அதற்குள்ள ராச்சியமெல்லாம் அறுப்பு மாசி மீ 15உக்குமேல் விஸ்தாரமாயறுபடும். ஆனபடியினாலே கொஞ்சம் கொஞ்சம் வருத்துவுருத்து உண்டாயிருக்கிறது. இனிமேல் மாசி மீ 15உ முதற்கொண்டு தானியம் விஸ்தாரமாய் வருமென்று சொன்னேன். இதெல்லாம் முன் வந்தவாசி சீர்மை அன்வர்திகான் குமாரன் மமுதல்லிகானுக்கு நடந்தது. அது அவருக்குத் தகிராயிப்போ அன்வர்த்திகானுக்குப் பக்தி ஆச்சுது. அதனாலே பழைய அமுல்தாரர்கள் போய் புது அமுல்தாரர் வந்து குடிகளுக்கு ராசிபண்ணி சீர்மையிலே அறுப்புவிடவேண்டியபடியினாலேயும் திருவதி சீர்மையும் அந்தப்படிக்கு இருக்கிறபடியினாலேயும் நாலு நாள் கால தாமசமாச்சுது. இப்பவும் சீர்மையிலே அறுப்புவிட்டு அறுக்கிற தானியங்களெல்லாம் அவர்களுக்கு இந்தப் பட்டணத்திலே வந்து விற்றுப் பணம் உருவாக்கிக்கொள்ளவேணுமே யல்லாமல் பின்னை வேறே எவ்விடத்திலே கொண்டுபோய் விற்றுக்கொள்ளப் போகிறார்கள். சீர்மையிலேயிருந்து வருகிற தானியமெல்லாம் இந்தப் பட்டணத்திலேதானே கொண்டுவருவார்களென்று சொன்னேன். அதற்குப் பட்டணத்துக்குள்ளே ஜனங்கள் அரிசி நெல்லு அகப்படாமல் திரிகிறபடியினாலே நான் சொல்லுகிறது, அவர்களுக்கு மெய்யாகத் தோன்றவில்லை. அப்புறம். லோகாப்பிரமமாய் அநேகம் பேச்சு வார்த்தைகள் நடந்தன. அதுகளெல்லாம் எழுதத்தக்கன சமாசாரமல்ல. ஆனபடியினாலே எழுதவில்லை. இதற்குள்ளே மணி இரண்டு ஆச்சுது. உடனே வீட்டிற்கு

வந்து அப்பியங்கஸ்நானம்பண்ணிச் சாப்பிட்டு நித்திரைக்குப் போய்விட்டேன்.

எழுந்திருந்தவுடனே துரை அழைக்கிறார் என்று சேவகர் வந்து அழைத்தார்கள். அதன்பேரிலே துரை வீட்டிற்குப் போனபிறகு சின்ன துரை வந்து முசியே தோஞ்சறேமுதத சம்பாவுல் பாதிரிகள் நாற்பது சட்டை நெல்லு அழைப்பித்த வர்கள், சாவடியிலே சொல்லாமற்படிக்கு தோஞ்சறேம் வீட்டிலே போடச்சொன்னபடியினாலே சத்தக்காரர் கொண்டு போய்ப் போட்டார்கள். அதன்பேரிலே நெல்லு இப்படி கொண்டுவந்து போட்டுக்கொள்ளவேண்டியதென்ன? அந்த நெல்லு சாவடியிலே கொண்டுபோய்ப் போட்டுவிக்கச்சொல்லித் துரையவர்கள் உத்தாரம் கொடுத்ததுமல்லாமல் அந்த நெல்லு கொண்டுவந்த சத்தக்காரர் சாவடியிலே எச்சரியாமல், தீர்வை தீர்க்காமல் கொண்டுபோய்ப் போட்டதென்னவென்று, நெல்லு கொண்டுவந்த சத்தக்காரரைச் சாவடியிலே சகலமான பேரும் அறிய இரண்டு சாமம் காவலிலே வைத்து. இருபதடி அடித்துத் துரத்திவிடச்சொல்லச் சொன்னதற்கு, இது நிமித்தம் சம்பாவுலுகோவில் பாதிரியார் கேட்டு அப்படிச் செய்யலாகாதென்று சின்ன துரையுடனே போய்ச் சொல்லிக்கொண்டு அந்தச் சத்தக்காரரை அடிக்காமல் விட்டுவிடச்சொல்லி மனுவு சொல்லச்சொல்லிச் சொல்லிக் கொண்டார்கள். அதன்பேரிலே சின்னதுரை வந்து மனுவு கேட்டதற்குத் துரை அதற்குச் சம்பாவுல்கோவில் பாதிரியார் ஊரிலே துரைத்தனம் பண்ணுகிறதாயிருக்கிறதேயல்லாமல் நாம் துரைத்தனம் பண்ணுகிறதாயிருக்கவில்லை. பின்னையும், அவர்கள், பட்டணத்துக்குள்ளே நடத்துகிற காரியங்கள் ஒருக்காலும் மனுப்போருது என்று அந்த க்ஷணமே அந்தச் சத்தக்காரர் பேரிலே இருபது அடி அடிக்கச்சொல்லி முசியே திலார்ஷ்க்த சொல்லியனுப்பிவித்தார். அவரும் அந்தப்படியே சத்தக்காரரை பத்தடி அடிக்கச்சொல்லித் துரத்திவிட்டார்கள். அந்தச் சேதி கேட்டுக்கொண்டு சின்னதுரை இருக்கச்சே நான் போய் சலாம்பண்ணினேன். என்னைப் பார்த்து, கடைக்குத் தானியம் வாங்கவில்லையாவென்று கேட்டார். அதற்கு நான் இன்றையதினம் முன்னூறு பொதிமட்டுக்கும் வந்தது. திங்களன்று முதற்கொண்டு விஸ்தாரமாய் தானியம்

வருமென்று சொன்னேன்: கிராமத்துத் தானியங்கள் கும்பி னிக்கு எவ்வளவு உண்டு போட்டதென்று கேட்டார். நாற்பத் தைந்து கரிசை மட்டுக்கும் முஸ்தீதாயிருக்கிறது. கிடங்கிலே முசியே கோர்னே வசத்திலே பதினைந்து கரிசை மட்டுக்கும் வந்துசேர்ந்து மூட்டைக்காரர் எடுத்துக்கொண்டு வருகிறபடி யினாலே மெதுவாய் வந்து சேருமென்று சொன்னேன். அதன் பேரிலே துரை சுவாரி போகிறதற்கு முஸ்தீதாய்ப் பல்லக் கிலே ஏறினவர் கவையிருக்கிறது கண்டு பேசவேணுமென்று சொபுதாருடனே சொல்லி அனுப்புவித்தார். நல்லதென்று சொல்லிப் பதில் உத்தரம் சொல்லியனுப்புவித்தேன். அப் புறம் சின்னதுரை புறப்பட்டு அவர் வீட்டிற்குப் போனார். நான் புறப்பட்டுப் பாக்குக் கிடங்குக்கு வந்தேன். அப்பால் துரை சுவாரிபோய் வந்து எட்டு மணிக்கு என்னை அழைத் தனுப்புவித்து, துரை கேட்ட சேதி என்னவென்றால்: பட்ட ணத்துக்குத் தானியம் வராமல் பண்ணுகிறாயென்று என்னு டனே அவரவர்கள் வந்து சொல்லுகிறாரென்று சொன்னார். அதற்கு நான் சொன்ன உத்தாரம்: இராச்சியத்திலேயிருந்து வருகிற தானியம் இந்தப்பட்டணத்திலே வருஷத்துக்கு நாலு லக்ஷம் வராகன் தானியம் விற்கிரயமாகி வராகன் திவானத் துக்குச் செல்லுகிறது. இதை என்னாலே தடைபண்ணி, இந்த நாலு லக்ஷம் வராகனும் கொடுக்கிறதற்கு எனக்கு எங்கே யிருக்கிறது? அப்பாலும் இந்தப் பட்டணத்துக்கு வருகிற தானியம் நிறுத்தினாலே எனக்கு வருகிற ஆதாயமென்ன? ஆற் காட்டிலே நபாபு என் உத்தாரத்தின்மேலேயல்லவா நடந்து கொள்ளுகிறார். ஆனபடியினாலே, நான் அனுப்பவேண்டா மென்று எழுதினாற்போலே தடைபண்ணவும், அனுப்பச் சொல்லி எழுதினாற்போலே அனுப்பவும் என் கைக்குள்ளேயா யிருக்கிறார்கள். ஆகிலும், இதிலே நடக்கப்பட்ட நியாயம் உங்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது. எங்களுக்குள்ளே ஒரு வழக்கம் சொல்லுவார்கள்: பொன்மலையைச் சார்ந்த காக் காயும் பொன் நிறமாகுமென்று சொல்லுகிற வழக்கப்படிக்கு மகத்தாகிய உங்களுடைய தயவை நான் சம்பாதித்தபடியினாலே என்னுடைய ஆக்கினைப்படிக்கு அன்வர்திகான்கூட நடந்து கொள்ளுகிறான் என்கிற கீர்த்தி புதுச்சேரியிலே உண்டாச்சுது. ஆனபடியினாலே அன்வர்திகானைப்போலே ஒத்த சுபேதாரன்

ஆக்கினைப்படிக்கு நடந்துகொள்ளுகிறன் என்கிற பொருள் உங்கள் வாக்கினாலே இந்த வார்த்தைச் சொன்னபடியினாலே எனக்கு இனிமேல் மகத்தாயிருக்கப்பட்ட யோகமிருக்கிறதற்கு எழுதியுமிருக்கச்சே தேவரீரவர்கள் வாக்கினாலே புறப்பட்ட தென்று சொன்னதற்கு நகைத்து, மெய்தான், எனக்கெல்லாம் தெரியும். உன்மேலே அவர்கள் துவேஷத்தினாலே சொல்லு கிறார்கள் என்கிறதும் தெரியும். இனிமேலும் நீ மகத்தான யோகவானானபடியினாலே அவரவர் வந்து இப்படிப்பட்ட விசேஷங்கள் சொல்லுகிறார்கள்; அது எனக்கு நன்றாய்த்தெரியு மென்று சொன்னார். அதன்பேரிலே நான் சொன்னது: பட்ட ணத்துக்குத் தானியம் வராமற்படிக்கு நான் செய்ததேயுண் டானால் கும்பினிக்குத் துரோகவானானேன். இப்படிப்பட்ட விசேஷங்கள் அபாண்டம் எப்போதும் சொல்லிக்கொண்டிருக் கிறார்கள். இப்படி அநேக காரியங்கள் வந்து சொன்னவிடத் திலே ஒரு காரியமாகிலும் தேவரீர் விசாரித்து மெய்யானால் என்னையாகிலும் ஆக்கினை பண்ணவும், இந்த வார்த்தைகள் பொய்யானால் எந்நேரமும் உங்களுடனே சொல்லுகிறவர்களை ஆக்கினைபண்ணவேணுமென்றும் சமஸ்தமான பேரும் அறிய என்னையாகிலும் வந்து சொல்லுகிறவர்களையாகிலும் ஆக்கினை பண்ணினால் என் மனதுக்குச் சமாதானமாயிருக்குமேயல்லாமல் தேவரீர் அவர்கள் சும்மா ஒரு காரியம் செய்யாமல் சும்மாவிருந் தால் எனக்குச் சமாதானமாயிராதென்று சொன்னேன். இது களுக்கெல்லாம் அவர் நகைத்துக்கொண்ட வாக்கிலே இது விருதாவான பேச்சு. இதை ஒரு காரியமாய் பிரஸ்தாபம் என்னத்திற்கு என்று சொன்னார்கள்.

1743 ஆ பிப்ரவரி மீ 18உ க்கு பிரபவ ஹு மாசி மீ 10உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலமே துரையவர்களும் துரை பெண்சாதி யும் முத்திரிசப்பிள்ளைசாவடிக்குப் போய் பகலைக்கு அவ்விடத் திலேயிருந்து சாப்பிட்டு, அவ்விடத்திலே இருக்கையிலே துரை யவர்கள் சும்மா இங்கிலீஷ்காரர்கள் வந்து விழுந்தார்களென்று ஒன்றையுண்டாக்கி விளையாடிவிட்டுச் சாயங்காலம் ஊர் வந்து சேர்ந்தார்கள். பின்னொரு அதிசயமும் எழுதத்தக்கதில்லை.

இற்றைநாள் சாயங்காலம் முன் வந்தவாசிக்குப் போய் இருந்த சந்தாசாயபு குமாரன் ராஜாசாயபு புதுச்சேரி வந்து சேர்ந்தான்.

1748 ஆ பெப்ரவரி ௴ 19உ க்கு பிரபவ ஸ்ரீ மாசி மீ 11உ திங்கட்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டிற்குப் போனவிடத்திலே குவர்னதோரவர்கள் கபே குடித்து உட்கார்ந்துகொண்டிருந்தார். அப்போது போய் சலாம்பண்ணிக் கொண்டு நின்றதற்கு, நெல்லு பொதி விஸ்தாரமாய் வந்ததா வென்று கேட்டார். நேற்று ஞாயிற்றுக்கிழமையல்லவா, அதனாலே வரவில்லை. இன்றையதினம் விஸ்தாரமாய் வருமென்று சொன்னேன். அதிலே முசியே லாசு வந்து, மலையப்பன் சேவகர் வந்து சம்பளம் வரவில்லையென்று சொன்னார்களென்று துரையுடனே சொன்னதற்கு, துரை என்னுடனே இந்தப் பிராதா? பொழுது விடிந்தால், அந்திப்பட்டால் என்று வேசாடையாய்ச் சொன்னார். அதற்கு நான் சொன்னது: இது அபத்தம். நன்றாய் விசாரித்தால் அப்போது தெரியுமென்று சொன்னேன். அதன்பேரிலே முசியே லாசரைக் கேட்டார். உனக்கார் சொன்னதென்று கேட்டார். சிப்பாய்களையும் சேவகரையும் விசாரிக்க சேவகனை வைத்தேன். அவன் சொன்னானென்று சொன்னேன். அதன்பேரிலே நீ ஒரு கணக்கப்பிள்ளை வைக்கவும், அவனுக்குச் சம்பளம் கொடுக்கவும் ரங்கப்பா அவனை வாங்கிப் போடவும். இனிமேல் இப்படிப்பட்ட செலவு வேணுமென்று சொல்லி, கோபமாய் அப்பாலே போனார். நானும் சாடையாய்ப் புறப்பட்டு வந்துவிட்டேன்.

இற்றைநாள் ஆற்காட்டு வக்கீல் எழுதின காகிதத்திலே முத்தியாலு நாய்க்கன் இங்கிலீஷ்காரர் காரியமாய் நாசற்சங்கு தண்டுக்குப் போயிருந்து அங்கே காரியம் சாதகமெல்லாம், போன வெகுமானம் நகத்து செலவுகூட மூன்று லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் விருதாவிலே கறுசுபண்ணிக்கொண்டு சாதகமில்லாமல் கடப்பை வந்து சேர்ந்து செலவுக்கு இல்லாமல் எயர்கான் சக்கிரீகான் என்கிற பட்டாணியன், முன் நவாயத்தண்டையிலே சேவகம் இருந்து நீசாம் ஆற்காட்டிலே இருக்கவேண்டாமென்று துரத்திவிட்ட பட்டாணியருக்குள்ளே இரண்டு பேர், மேலே எழுதப்பட்ட பேருடையவர்கள் கையிலே இரண்டாயிரம், மூவாயிரம் வராகன் மட்டுக்கும் கடன் வாங்கிக்கொண்டு அவர்களை சேவகத்துக்கு இருநூறு குதிரைக்காரரைக் கூட அழைத்தால் வாரரென்கிறதாய் நவாபு அன்வர்திகான், சம்பதி

ராயன், அன்வர்திகான்முதலான பேர் கச்சேரியிலே ஒருத்தருக்கொருத்தர் பேசிக்கொண்டு இங்கிலீஷ்காரருக்கு அதிர்ஷ்டம் போனவுடனே புத்தியும் கூடப் போச்சுது. அங்கேதான் போய் விருதாவாய் செலவழித்தாப்போலே யாச்சுதே. இங்கே என்னத்துக்குக் கடப்பையிலே விருதாவாய் பட்டாணியரை இரு நூறு குதிரைக்காரரைப் பெருமைக்கு வைத்துக்கொண்டு வந்து அதனாலே பாதி செலவிட்டுக் கெட்டுப்போகிறதேயல்லாமல் மற்றப்படி ஒரு சாதகமுமில்லையென்று ஏகதாளிப் பரிகாசம் பண்ணிக்கொண்டிருந்தார்களென்று சித்தோசி கோபப்டா குமாரன் முறாரிராயன் மூவாயிரம் குதிரையுடனே வந்து வெங்கடகிரியிலே இருக்கிற பாளையக்காரனைத் துரத்திவிட்டு, வெங்கடகிரி என்கிற துர்க்கத்தைக் கட்டிக்கொண்டு சாத்துக்கடைசீர்மையிலே சிறிது கிராமம் வைக்கிறாரும். ஆமூர் வானம்பாடியண்டையிலே யிருக்கிற சயந்தல்விகான் சாவிரிலே சிறிது கிராமங்களும், வேலூர் கிராமங்களிலே சிறிது கிராமங்களையும் மருட்டியர் குதிரை வந்து கொள்ளையிட்டுத் தாம்தூம் பண்ணுகிறபடியினாலே அந்தக் காபுரு லாலாப்பேட்டை ஆற்காடு எல்லாம் காபுருவாய்ச் சிதறி அவரவர் கரை துறைகளை அடையவேணுமென்று யோசனைபண்ணி அங்கேயும் இங்கிலீஷ் பிராஞ்சுக்காரருக்கும் கலாபத்தைத் தொட்டுப் போகப்போகிறதென்று மயங்கிக்கொண்டிருக்கிறார்கள் என்றும் இந்தக் காபுருவைத்தொட்டு நபாபு அன்வர்திகான் இரண்டாயிரம் குதிரை வைக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்ததாகவும் அதற்கு இந்தமட்டுக்கும் நூறு குதிரை வந்ததாகவும்; லாலாபேட்டை மளிகை வர்த்தகர் சரக்குகளையெல்லாம் ஆற்காடு கோட்டை வந்து சேர்ந்ததென்றும் இப்படியாக எழுதிவந்த சேதி துரைக்குச் சொல்லிவிட்டு வீட்டிற்கு வந்தேன். மற்றப்படி எழுதப்பட்ட சமாசாரம் பகலைக்குமேலாக ஒன்றுமில்லை. அப்புமுதலி, சார்முஸ்திது பண்ணுவிக்கவேணுமென்றும் ஒருபொழுது நாளை வந்ததென்றும் சொல்லிப் போனான்.

1748 ஆ பிப்ரவரி மீ 20 உக்கு பிரபவ ஸு மாசி மீ 12௳ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் காலமே துரையவர்களண்டைக்கு வந்து நேற்றையதினம் ஐந்நூறு சில்வரைப்பொதி வந்ததென்று ஒபுறு சொல்லிவிட்டு, கனக்கு ரங்கப்பிள்ளை கிடங்கிலே

யிருந்து வீட்டிற்குப் போனோம். இற்றைநாள் எழுத..க்க சேதி சமாசாரமான விந்தைகள் ஒன்றுமில்லை.

1748 ஆ பிப்ரவரி மீ 21 உ க்கு பிரபவ ஞூ மாசி மீ 13 உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையண்டைக்கு வந்து எழுநூற்றிருபத்தைந்து பொதி நெல் பொதியும், ஐம்பத்தேழு அரிசி பொதியும் வந்தசேதி சொல்லிவிட்டு, கணக்கு ரங்கப்பிள்ளை கிடங்கிலிருந்து பனிரெண்டு மணிக்கு வீட்டிற்குப் போனேன். காகித அலுவல் இருந்தபடியினாலே இராத்திரி பனிரெண்டு மணிமட்டுக்கும் வீட்டிலேதானே கணக்கெழுதிக் கொண்டிருந்தேன்.

இற்றைநாள் சுட்டுப்போட்ட பாறு படகு சுலுப்புக்கு பிராது பண்ணச்சொல்லி, அன்வர்திகானண்டைக்கு வெங்கிடபதி நாயகன் என்கிற வடக்கத்தியானை ஆற்காட்டுக்குப் பயணம்பண்ணி, டோலியும் அமத்தி, சேவகனையும் கூடக் கூட்டி அனுப்புவித்தேன்.

1748 ஆ பிப்ரவரி மீ 22உக்கு பிரபவ ஞூ மாசி மூ 14உ வியாழக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே நான் துரையவர்களண்டையிலே போய் சாவடி கபுறு சொன்னபிற்பாடு, அப்பால் நவாபு அன்வர்திகான் அவர்களுக்கு கொய்யாப்பழம் அனுப்பினதற்குப் பதில் வந்த காகிதமும், முனவர்திகான், சயந்தல்லிகான், சம்பதிராயன் இவர்களுடைய காகிதங்களும் படித்துத் துரையவர்களுக்குச் சொல்லி அப்பால் றகுவோசி பூசலா அவர்கள் காகிதம் வந்ததற்குப் பதில் காகிதம் எழுதி றகுவோசி பூசலா அவர்களுக்குக் காகிதமனுப்புகிறேனென்று துரையுடனே சொல்லிக் காகிதம் அனுப்பிவிட்டேன். அப்பால் முசியே கோர்னே வந்து துரையுடனே கிராமத்து நெல் வரவில்லையென்று பிராது பண்ணினதின்பேரிலே, நானும் நித்தியம் நெல்லு வருகிறது. நீங்கள் விசாரியாமல் சொல்லுகிறீர்கள் என்று சொன்னேன். அதன்பேரிலே அவர் பரிச்சேதம் வரவில்லை என்று சொன்னார். அதற்குச் சிறிது திருஷ்டாந்திரம் சொன்னபிற்பாடு சும்மாவிருந்தார். அப்பால் சனவரிபண்டிகை

சம்மதி கும்பினீர் வர்த்தகர் கொண்டுவந்து கொடுக்கவில்லை என்று கேட்டு, சீக்கிரம் கொண்டுவந்து செலுத்திப்போடச் சொன்னார். இதிலே பனிரெண்டு மணி அடித்தபடியினாலே வீட்டிற்கு வந்தேன். இற்றைநாள் பகலைக்குமேல் சாயங்காலம் விசேஷமாய் எழுதத்தக்கன சமாசாரம், அதிசயங்களானது பின்னொன்றுமில்லை.

1748 ஆ பிப்பிரவரி மூ 23 உக்கு பிரபவ ஹூ மாசி மூ 15உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டிற்குப் போனவிடத்திலே, துரையவர்கள் நெல்லுப் பொதி எத்தனை வந்ததென்று கேட்டார். நானூற்றி ஐம்பத்து நாலு பொதி நெல்லும், அரிசிபொதி ஐம்பத்து மூன்றும், கம்புபொதி எழுபத்துமூன்றும் சோளம்கூட விஸ்தாரமாய் வந்ததென்று சொன்னதற்கு, இப்போது கடை சவுத்திருக்கிறதா என்று கேட்டார். கொள்ளுவாரில்லை என்று சொன்னேன். தமிழருடைய சுபாவம் ஒருநாளைக்கு வராதேபோனால் காபுருபண்ணுகிறதும் விசேஷித்து வந்தால் கொள்வாமல் சும்மா ஆலசியமாயிருக்கிறதுந்தானே என்று சொன்னார். அதற்கு இப்படியிருக்கிறதே! என்பேரிலே அபாண்டம் சொன்னார்களே பார்த்தீர்களா? இது என்னாலே எத்தனை அபாண்டத்துக்கு என்று தப்பித்துக்கொள்ளப் போகிறேன். பொழுது விடிந்தால் அந்திபட்டால் எனக்கு அபாண்டமாய் வந்து உங்களுடனே சொல்லுகிறதும், நீங்கள் என்னைக் கேட்கிறதும்; இதற்கு நான் உத்தாரம் சொல்லுகிறதுந்தானே வேலையாய் இருக்கிறதேயல்லாமல் எனக்குப் பின்னொரு காரியம் பார்க்க நேரமில்லை. இதல்லாமல் இரவு பகல் இதுவே விசாரமானால் காரியத்திலே புத்தி எப்படி சேரவைக்கும். இது காரியத்திலே மெய்பொய் என்று விளங்கி என்னையாகிலும் அவர்களையாகிலும் ஆக்கினை பண்ணுமற்போனால் விசாரத்தினாலே காரியம் தாக்ஷிவரும் என்று கெட்டியாய் மனதிலே எண்ணவும் என்று சொன்னதற்கு, இதெல்லாம் நான் அறியேனா? என் பேரிலே பொழுது விடிந்தால் அந்திபட்டால் பதினாயிரம் சொல்லுகிறபேர் உன்பேரிலே சொல்லுகிறதற்கு அட்டி என்னவிருக்கிறது? ஒருத்தன் ஒரு பெரிய உத்தியோகத்தின் பேரிலேயிருந்தால் அவனை ஆகுயினாலே இல்லாதபாண்டமா

கிலும் சொல்லுகிறது லோகத்துக்குள்ளே வாடிக்கை. அத்துலே உனக்கு இன்னும் மேல்மேல் உத்தியோகம் நடக்குமென்றும் எங்கள் சாஸ்திர சம்மதி என்றும், பின்னையும் அநேக விதமாய்ச் சொன்னார். அதெல்லாம் நான் எழுதினால் ஜனங்கள் மெய்யென்று நம்பார்கள். நம்முடைய அதிர்ஷ்டம் எப்படி பெலத்து யோகதிசையும் நடக்கவிருக்கிறதோ அதற்கு அடுத்த உத்தாரமாய்ச் சொல்லி, பின்னை ஒன்றும் சிந்தனை பண்ணவேண்டாம். கான்பாதூர் பேரிலே உனக்கு வரவேண்டிய பதினாயிரம் ரூபாயும் எனக்கு வரவேண்டிய சம்மதியும் வரப்படுத்த என்ன யோசனையுண்டோ அந்த யோசனையின் பேரிலே இருந்து வரப்படுத்தென்று சொன்னார். நல்லதென்று சொல்லி, அப்பால் சந்தாசாயபு மகன் வந்தவாசிக்குப் போன விடத்திலே தக்கா சாயபு. சபுதரல்லிகான் பெண்சாதி முதலானபேர்கள் ரொம்பவும் தெரியப்படச்சொல்லி, புதுச்சேரியிலே இராமறப்படிக்கு வந்தவாசிக்கு சந்தாசாயபு பெண்சாதி, தோஷத்திரல்லிகான் பெண்சாதி முதலானபேரை அழைப்பிக்கத்தக்கதாக தெரியச் சொல்லி அனுப்பினதாகவும், இவர்களும் உங்கள் கடன், என் கடனும் கொடுத்துவிட்டுப் போகவேணுமென்றிருக்கிறதாகச் சேதி கேட்டேன் என்று துரையுடனே கான்பாதூர் சொல்லியனுப்பின சாடையை எச்சரித்தேன். நல்லது இன்னும் நடக்கிறதை அறிவோமென்று சொன்னார். அதன்பிறபாடு வீட்டிற்கு வந்தேன்.

1748 ஆ பிப்ரவரி மீ 24 உ-க்கு பிரபவ ஞு மாசி மீ 16 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே கோட்டைக்கு முசியே லெதுவும் கோர்னேயும் அழைத்தனுப்பினபடியினாலே கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லெது இல்லாதிருந்தபடியினாலே, முசியே கோர்னேயண்டைக்குப் போனவிடத்திலே முசியே கோர்னே சொன்னது: நானும் முசியே லெதுவும் அழைத்தனுப்பினோம். முசியே லெது போய்விட்டார் இப்பவும் நீ அனுப்பின பத்து கோடி நெடுமுழமும், முசியே லெது நிமித்தியம் அனுப்பினதா? என் நிமித்தியம் அனுப்பினதா? என்று கேட்டார், நீ, கேட்டதும் கும்பினீர் காரியத்திற்குத்தான் யாரெடுத்துக் கொண்டாலும் சம்மதிதானென்று சொன்னேன் அதன்பேரிலே நானிருந்துகொண்டு முசியே லூக்கா இரண்டாயிரத்து எண்

ணூற்றைம்பத்தேழு ரூபாய்க்கு அனுப்பின ரசீதும் லூக்கா வுத முன்னூற்றிப்பநினெட்டு வராகனும், பத்தரைப் பண மும் வரவேண்டியதும், கோதும்பை சம்மதிக்கு நாலாயிரம் ரூபாய் வாங்கினதற்கு இரண்டாயிரத்துத் தொளாயிரத்துச் சில்லறை ரூபாய் கோதும்பையிலே சேலுந்திப்போட்டாயே இன்னும் ஆயிரம் ரூபாய் கொடுக்கவேண்டியதைப் பிடித்து இந்தக் கணக்கிலே பிடித்துக்கொண்டு மற்ற ரூபாய் கொடுக் கச் சொல்லியும், காரிக்கன் ஒலாந்தா புடவையும், ஒன்பது கால் புடவை, சொல்தாது கிண்டன் முதலாகக் கொடுத்து இரண்டாயிரத்தைந்நூறே சில்லரை வராகனுக்குக் கும்பினீர் வர்த்தகர் பேருக்கு ஒரு ரசீதாகிலும் கொடு. இல்லாவிட்டால் ரொக்கமாகிலும் கொடுமென்று கேட்டதற்கு அந்தப்படிக்கு வரவு செலவு போட்டுக்கணக்காம்படியே எழுதி ஒத்துத் திர்த் துக்கொண்டு பணம் கொடுக்கிறதற்குப் பணம் ரூக்கா பார்த்துக்கொண்டு, பின்னை கொடுத்தனுப்புகிறேன் என்று சொன்னுனிதிலே துரை மனுஷர் இரண்டு பேர் மூன்று பேர் வந்தபடியினுலே எனக்குத் துரையாய் துரை வீட்டிற்குப் போகவேண்டியிருந்தபடியினுலே அனுப்புவித்துக்கொண்டு துரை வீட்டிற்கு வந்தேன். அப்பால் துரை வீட்டிலே நடந்த சேதி துரையிருந்துகொண்டு நெல் கடைக்குத் தானியம் எவ்வ ளவு வந்ததென்று கேட்டார். அறுநூற்றுப்பத்துப்பொதி வந்த தென்று சொன்னேன். அப்பால் கூடலூரிலே தமுக்கும் போட் டார்களாம். இனிமேல் ராசாகப்பல்கள் வருகுது; அதிலே பதினுயிரம் சொல்தாது வருகிருர்கள். அவர்கள் கும்பினியார் ஆணையாக்கினையிலே நிற்கிறவர்களல்ல. ஆனபடியினுலே அவர வர்கள் குஞ்சு குழந்தைகளை வெளியே அனுப்பிவிட்டு ஆண் பிள்ளைகள் மாத்திரம் ... ... ... ... ... ...

1748 ஆ பிப்ரவரி மீ 26 வக்த பிரபவ ஸு மாசி மூ 18வ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே நேற்றையதினம் மூசியே கோர் னே, மூசியே லூக்கா அனுப்பின இரண்டாயிரத்து எண்ணூற்றி யைம்பத்தேழு ரூபா ரசீதை வீரராகு கையிலே கொடுத்து, மூசியே கோர்னேயும் நாமும் ஒத்துத் தீர்த்துக்கொண்டபடிக்கு வராகனைக் கேட்டு வாங்கிக்கொண்டு வரச்சொல்லிச் சொல்லி அனுப்பினதற்கு, அவன் ரசீது வரிசையாய் எழுதியிருக்க

வில்லே என்று தகராறு பண்ணி வேறே ரசீது வரவேணு லாவிட்டால் சின்ஞோர் குவர்னதோர் கொடுக்கச் சொல்லிச் சொன்னால் கொடுக்கிறேன். அதுவேயல்லாமல் மற்றப்படி நான் கொடுக்கத்தக்கதில்லே என்று சொல்லியனுப் பினுன். அது நிமித்தம் அவனேக்கண்டு பேசவேணுமென்று கோட்டைக்குப் போனேன். அங்கே முசியே கோர்னேத்து, முசியே லேநு, முசியே மெநகம்பூர்சு கோயில் பாதிரி பேர்வழிகளுங் கன்கூடவிருந்தார்கள். என்னேக் கண்டாப்போலே, முசியே கோர்னே, சின்னதுரையுடனே ரங்கப்பிள்ளே பணங் கேட்க வந்தான், அவன் கொண்டுவந்த முசியே லூக்கா ரசீது இரண் டாயிரத்து எண்ணூற்றியைம்பத்தேழு ரூபாய் இது என்று சொல்லுகிறுன். அதிலே இரண்டாயிரம் ரூபாய்க்காக எண் ணூற்றியைம்பத்தேழு ரூபாய் பற்றிக்கொண்டதாக எழுதி யிருக்குதென்று சொல்லி அந்த ரசீதை முசியே மேநா படிக்கச் சொன்ஞன். இவன் படித்து, அப்படிதான் இருக்குதென்று சொன்ஞன். அந்த ரசிதை நான் வாங்கிக்கொண்டு நானு படித்து விவரித்துச் சொன்னபிற்பாடு, முசியே மேநு மெய்தான் என்று ஒத்துக்கொண்டார். சின்னதுரையும் பாதிரியுங்கூட இரண்டாயிரத் தெண்ணூற்றைம்பத்தேழு ரூபாய் சரி என்று ஒத்துக்கொண்டு, சின்ன துரை முசியே கோர்னேத்தைப் பார்த்து சும்மா, நீ தகராறு பண்ணுகிறதேயல்லாமல் காரியமில்லே. கொடுத்துவிடென்று சுருக்காய்ச் சொன்ஞர். அதன்பேரிலே நாளே ஆகட்டுமென்று சொன்ஞன். அப்பால் கிராமத்து நெல்லு பேச்சு: எத்தனே கரிசை வந்ததென்று கேட்டான். முப்பத்தாறு கரிசை வந்ததென்று சொன்னேன். மற்றது எப் போ வருமென்று கேட்டான். நாள்தோறும் வந்துகொண்டே யிருக்குதென்று சொல்லி, அப்பால் முசியே துலோராம், முசியே திலார்ஷ் வந்தவர்களுக்கு ஸலாம் பண்ணி முசியே திலார்ஷைப் பார்த்து முசியே லூக்கா ரசீது உமக்குக் காண்பித்திருந்தேன். அதை முசியே கோர்னே தகராறு பண்ணினுன் அது நிமித்தியம் அவருக்குச் சம்மதி சொல்லி, சரிபண்ணுவித்தேன் என்று சொன்னேன். அதன்பேரிலே முத்துமல்லாரெட்டி இது இந்த ஊரிலே தட்டுமுட்டு இருக்கிறதாவென்று கேட்டார். முன்னே இருந்தது, இப்போது இருக்கிறதோ இல்லேயோ அறியாது போலே சொன்னேன். அவன் தனக்கு முத்துமல்லாரெட்டி

எழுதியனுப்பினன். தன் தட்டுமுட்டு இங்கே இருக்கிறதைத் ஒரு தடையில்லாமலும் எடுத்தனுப்பவேணுமென்று கேட்டதற்குச் சாபிதா வயணம் தினுசு எழுதியனுப்பினல் அந்தப் படிக்கு குவர்னதோர் உத்தாரம் வாங்கி யனுப்புவிக்கிறோம் என்றெழுதி அனுப்பினேமென்றும் மற்றப்படி பின்னையும் வோகாப்பிர்மமாய்ப் பேசிக்கொண்டிருக்கச்சே, முசியே துலோராம் வந்தார் முசியே கோர்னேயும் சாலையிலே வந்தார். அப்போது முசியே துலோராம் அறிசபாக்கத்திலே மூன்று கரிசை கொடுக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தாரா என்று கேட்டார். அதற்கு அப்போதானே எழுதிக்கொடுத்தேன் உங்கள் மனுஷரும் அறிசபாக்கத்துக்குப் போனர்களென்று சொல்லி தேவோ பேரிலே வரவேண்டிய என் சகலாத்து சம்மதி பணம் முன் முசியே நிக்கோலா அவரவர் பேரிலே வந்திருக்குதென்று சொன்னீர்களே, அது வெகுநாளாச்சுது இப்போது அந்தப் பணம் கொடுக்கவேணுமென்று சொன்னேன். அதற்கு இங்கேயா கேட்கிறது. வீட்டிற்கு வந்து கேட்கப்போகாதா என்று கோபமாய்ச் சொன்னர். ஐயா, ஒருத்தரிருகச்சே கேட்கவில்லையே, உம்மைத் தனித்துக் கேட்டதற்கு, நீர் முசியே கோர்னே முசியே திலார்ஷ் முன்பாக வந்து சொன்னீர்களென்று சொன்னதற்கு, அவர்கள் முன்பாக இவர் சொன்னது: அந்தப்பணம் அனுப்பச்சொல்லி நான் எழுதினதற்கு அவன் அனுப்பவில்லை. முன்னே நான் உன்னுடனே சொன்னது: அவன் சொந்தப் பணம் வந்திருந்ததைச் சொன்னியாங்காட்டுமென்று சொன்னர். அதற்கு முசியே திலார்ஷ், முசியே சூது சம்மதி இவருக்கு இன்னும் கொடுக்கவேணுமா என்று கேட்டார். நாலாயிரம், ஐயாயிரம் வராகன் மட்டுக்கும் கொடுக்கவேணுமென்று சொல்லி என்னைப் பார்த்து, இது லாபத்துக்குக் கொடுத்தால் 100-க்கு 5 கொம்மிசியோம் கொடுக்கிறோமென்று சொல்லவில்லையாவென்று கேட்டார். மெய்தானென்று அவர்கள் முன்பாகச் சொன்னதின்பேரிலே, முசியே துலோராம் சொன்னது: அவன் நனைந்ததென்றும், அதென்றும், இதென்றும் செலவெழுதுவேனென்றும் சொன்னர். அதற்கு நான் சும்மாசொன்னல் ஒத்துக்கொள்வார்களோ, சாதகத்துடனேயல்லவா சொல்லவேணுமென்று சொன்னேன். அது மெய்தானென்று சொன்னர். அப்பால் அவர் போய்விட்டார். முசியே கோர்னேயும் துரை வீட்டிற்குப் போய், நீ வீட்டிற்குப் போகச்சே என்

னன்டைக்கு வந்து கண்டு பேசிக்கொண்டு போ என்று சொன்னான். நல்லதென்று சொன்னேன்.

அவனும் போனபிற்பாடு முசியே தீலார்ஷ் சொன்னது: கோன்சேலுக்கு பெத்திஸியோம் எழுதிக்கொடு. முசியே தேவோ உம்மை எங்கேயிருந்தாலும் என் சம்மதி தீராமல் அவனுக்குப் பணம் காசு கொடுக்கத் தேவையில்லை என்றெழுதிப் போடென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப் பேசியிருந்தபிறகு முசியே தீலார்ஷ் இருந்துகொண்டு முருகப்பிள்ளை மெத்த கெட்டிக்காரன், மெத்த புத்தி உள்ளவன். நானொரு சமயம்பார்த்து லாசறை வாங்கிப் போடுவித்து இவனுக்கு அந்த உத்தியோகம் கொடுப்பேனென்றும், பின்னையும் சற்று தாரீபாய்ச் சொன்னான். அப்பால் அழகப்பமுதலியார், மெத்த கெட்டிக்காரன், நிஸ்த்தன். அகடவிகடத்துக்கு ஆளல்லவென்று சொல்லி, இப்படி பல பேச்சாகப் பேசியிருந்து அப்பால் அவரும் முசியே துருவாயந்து கோந்துவாரிலே பூந்து புறப்பட்டார். நானுமப்படிதான் செலவுக்குக் காகிதங்கள் கட்டுகூட வாங்கிக்கொண்டு துரை வீட்டிற்கு வந்தேன்.

துரை நேற்று ராத்திரி கூத்துப்பார்த்து ஆடினபடியினாலே இன்றையதினம் பதினொருமணி மட்டுக்கும் நித்திரை போகிறபடியினாலே, ப்ாக்குக் கிடங்கிலேவந்திருந்த பிற்பாடு துரை அழைத்தனுப்பி சதுரங்கப்பட்டணத்திலேயிருந்து ஒரு இங்கிலீஷ்காரன் ஆற்காட்டுக்குக் குதிரை கொள்ளப்போனானாம். அவன் குதிரை வாங்கிக்கொண்டு வருகிற சேதி முன்னதாக வர்த்தகர் ஆற்காட்டிலே இருக்கிற வக்கீலுக்கு எழுதச் சொன்னார். அதற்கு நான், நல்லது அப்படிதானே எழுதியனுப்புவிக்கிறேனென்று சொல்லி. இந்த யோசனை முன்னேதானே நீங்கள் சொல்லியிருந்ததுண்டேயானால் இங்கிலீஷ்காரருக்கு ஒரு சரக்காகிலும் போகவொட்டாமல் எழுதியனுப்பித் தடை பண்ணிப் போடுவோமேயானால் என்னமாச்சுது? அந்தப்படிக்கு எழுதியனுப்பி விசாரித்துச் சொல்லுகிறோமென்று சொன்னேன் அந்தமட்டிலே புறப்பட்டுச் சாப்பாட்டுக்கு வந்துவிட்டோம்.

இற்றைநாள் சாயங்காலம் துரையவர்கள் என்னை அழைத்து, காரைக்காலிலேயிருந்து கடுதாசி வந்ததென்ன

வென்றுர்? தஞ்சாவூரிலே பிறக்கிற சமாசாரம் காட்டிகை இவவிடத்திலே வந்திருக்கிற சேதி அவர்களறிந்தார்களென்றும், அவர்களுக்கு இவ்விடத்திலே நித்தியம் ஐந்து பொன் படிச்செலவுக்குக் கொடுக்கிறதுகூட வெளியாய்ப் போயிருக்குதென்றும், அவர்களை இப்போதுதானே வெளியே அனுப்பிவிடென்று சொன்னுர். அதற்கு நானிருந்துகொண்டு, மெய்தானையா, அவர்களும் சும்மா இருக்கிறதில்லை காரியமாகிறமட்டுக்கும் ஒருவிடத்திலே அடங்கியிருப்போமென்கிறதில்லை. நாயகத்தம்பிரானைப் பிடித்துக்கொண்டு இல்லாத லச்சையெல்லாம் பண்ணினுர்கள். அதிலே வெளிக்கு வந்ததென்று நம்முடைய பேரிலே மிகையில்லாமல் கழித்துக்கொண்டு சொல்லிப் போட்டேன். அதற்குத் துரையவர்களிருந்துகொண்டு அதிலே என்ன இப்போ இந்நேரத்துக்கு அப்புறத்திலே போயிருக்கச் சொல்லுகிறதாய் கெவுனி திறந்துவிடுகிறதற்குக் கடுதாசி சீட்டும் எழுதிக்கொடுத்து அனுப்பிவிடச் சொல்லச் சொல்லிவிட்டு. மறுபடியும் என்னை அழைத்து நீ ஒருவேளை அவர்களை இவ்விடத்திலேதானே ஒளித்துவைத்து அனுப்பிவிட்டோமென்று சொல்லப்போகிருய் என்றும் சொன்னுர். அதேதய்யா அப்படி ஒருக்காலும் சொல்லுகிறதில்லை, இருக்கிற காரியபாகம் எனக்கென்ன தெரியாதா? என்று சொன்னேன். அதுமெய்தான். ஏனென்றுல் அவர்களைப் பரவசம் சொல்லி அழைப்பித்தாமே, எப்படி மறுபடியும் சும்மா போகச் சொல்லுகிறதென்று சொல்லி யோசனைபண்ணப்போகிருயென்று சொல்லுகிறேனென்று சொன்னுர் அப்படி வருகிறதில்லையென்று சொல்ல, அந்நேரமே அவர்கள் மனுஷரை அழைப்புவித்துச் சொல்லியனுப்புவித்துப் பயணம் வெஸ்த்து பண்ணச் சொல்லி அவர்களுக்கு முன்னே நித்தியம் ஐந்து பொன் விழுக்காடு கொடுத்துக்கொண்டுவந்து, பிறகு நாலு பொன் விழுக்காடு கொடுத்துக்கொண்டு வந்தார்கள். அதன்பேரிலே பின்னையும் நாலைந்து நாள் படியும் வாங்கி அவர்களுக்குக் கொடுத்து, அந்நேரமே பயணம் பண்ணி ராத்திரி மூன்றரை மணிக்குக் கெவுனி திறந்துவிட்டு அப்புறம் அனுப்பிவிட்டோம்.

இன்றையதினம் செத்த பெருநாள் பண்டிகைக் கொண்டாடினுர்கள்.

இன்றையதினம் சிவராத்திரி பண்டிகை தினம். இன்றையதினம் சாயங்காலம் ஏழு மணிக்கு காளவாய் குமரப்பிள்ளை

வந்து அப்புமுதலியார் சொல்லச் சொன்னாரென்று வந்து சொன்னதென்னவென்றால்: இன்று சாயங்காலம் நாலு மணிக்கு அம்மாள் அப்புமுதலியாரையும், வர்லாமையும், முத்து சேருவைக்காரனையும், மூன்று பேரையும் கூடவைத்துக் கொண்டு, அப்புமுதலியைப் பார்த்து, நீ மெத்த திருடன் என்னுடைய அந்தரங்க விசேஷமெல்லாம் நீ போய் ரங்கப்பிள்ளைக்குச் சொல்லுகிறாய். வர்லாமுடைய வாய் விசேஷத்தைப் பிடுங்கி அந்நேரத்துக்கந்நேரம் போய்ச் சொல்லுகிறாய். இதல்லாமல் வர்லாமுக்கு விருந்து போடுகிறோமென்று சொல்லி, சாப்பாட்டிலே விஷத்தைக் கலந்து அவனைக் கொல்ல நினைத்தாய், அவனுக்கு லாகிரியைக் கொடுத்தும், தேவடியாளைக் கூட்டிக் கொடுத்தும் அவன் வாய் விசேஷத்தைப் பிடுங்கி அந்நேரத்துக்கந்நேரம் நீ போய்ச் சொல்லுகிறாயாம். நான் இந்தமட்டுக்கும், மூவாயிரம் ரூபாய் மட்டுக்கும் செலவுபண்ணி, பறங்கிப்பேட்டைக் கபுறும், தேவனாம்பட்டணத்துக் கபுறும் நிசக் கபுறாய் அந்நேரத்துக்கந்நேரம் நானெத்தனை பிரயாசைப்பட்டுக் கபுறு தெரிந்துகொண்டு, எத்தனை அருமையான கபுறாய் அழைத்து நான் துரையுடனே சொல்லியிருக்கிற கபுறுகளெல்லாம் வர்லாம் வாயில் விசேஷத்தைப் பிடுங்கி ரங்கப்பிள்ளையுடனே நீ போய்ச் சொல்லுகிறபடியினாலே அவன் அறிந்ததாக வந்து கபுறு சொல்லிப்போடுகிறான். அதனாலே என்னுடைய பிரயாசமெல்லாம் வீணாய்ப்போகுதென்றும். நீ ஒரு திருடன், அருணாசலசெட்டி ஒரு திருடன் இப்படி இந்தப் பட்டணத்திலே ஏழெட்டுப்பேர் திருடராய்க் கூடிக்கொண்டு சரிப்போனபடிக்கெல்லாம் கொள்ளையிடுகிறீர்கள். நல்லது, அதுகளையெல்லாம் விசாரிக்கிறேன். துரையுடனே சொல்லி அவரவருக்குத் தக்கன புத்தி பண்ணுவிக்கிறேனென்றும், உனக்கென்ன வேலை இவ்விடத்திலே. நீ உன் வீட்டே போகலாமென்றும் இப்படியாகச் சொன்னதாகவும், அதற்கு அப்புமுதலி இருந்து கொண்டு, நீ சொன்னாப்போலே நான் போவேனா! அந்தப்படிக்கு துரையவர்கள் சொன்னால் நான் போகிறேனென்று சொன்னதாகவும், நல்லது, ஆகட்டும் எல்லாம் பிறகு ஆகுது இந்தமட்டுக்கும் வேகுகாரரென்று அநேகம் பேரைப் பிடித்துக்கொண்டுவந்து அடைத்திருக்கிறான். இத்தனையும் ரங்கப்பிள்ளை புரூப் பண்ணுகிறானல்லவா? அதெல்லாம் எனக்குத் தெரியும். துரையும் அறிந்திருக்கிறார். எல்லாம் விசாரிப்பா

றென்று சொன்னுனென்று அப்புமுதலியார் என்னண்டைக்கு குமரப்பிள்ளையுடனே சொல்லியனுப்பினுர். இதல்லாமல் அம்மான் சொன்னதற்கு அப்புமுதலியிருந்துகொண்டு, வர்லாமென்ன சிறுபிள்ளையல்லவே! அவனை என் முகத்துக்குமுன்னே ருபுருபாய் விட்டு இன்னகாரியம் இப்படி சொன்னுனென்று சொல்லச் சொல்லும். அதற்குமேலே யார்பேரிலே ஞாயமிருக்கிறதோ அவனுக்குத் தக்கன புத்தி பண்ணுங்கோளென்றும் சொன்னுனும். இப்படியெல்லாம் சொல்லியனுப்புவித்தார். அதற்கு நான் சொல்லியனுப்பினது, மடியிலே கனமிருந்தாலல்லவோ வழியிலே பயமிருக்கும்! நல்லது துரையுடனே சொல்வித்தானே மெய் பொய் என்று விளங்கட்டும் என்று சொல்லியனுப்பினேன். இந்தப்படி நடந்தது இன்றையதினம்.

*1748* ஆ பிப்பிரவரி மூ 27உ சுக்ரு பிரபவ ஞு மாசி மீ 19உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே சிஞ்ஞோர் குவர்னதோரவர்கள் அழைத்தனுப்புவித்து, தஞ்சாவூர் ராசா பிறதாப சிங்குக்கும், மானுசி அப்பாவுக்கும் பழைய ராசா காட்டு ராசாவாகிய சர்போஜி மகாராஜா மகன் சகிசிராசா என்கிறவனை நாங்கள் புதுச்சேரி பட்டணத்திலே வைத்துக்கொண்டிருக்கிறோமென்று காரைக்காலுக்கு சமானுய் இருக்கிற முசியே பாதீ அவர்களுக்கு எழுதினீர்களாம். நாங்கள் வெகுநாளாய் சகிசி செத்துப்போனுனென்றிருக்கச்சே இப்போது நீங்கள் இருக்கிறதாக எழுதினதைக்கொண்டு மெத்தவும் ஆச்சரியமாச்சுது. ஆனுல், நீங்கள் எழுதினது செத்துப்போனவன் பிழைத்தாப்போலேயிருக்கப்பட்ட காரியந்தான்! எப்படி என்றுல்: அவனைத் தொட்டு எங்களுக்குக் காரியமென்ன? அப்படிப்பட்ட துர் அதிர்ஷ்டனேடே சேர்ந்தகாரியம் எங்களுக்கேன்? ஆனுலும், எங்கள் சொந்தக்காரியத்தோடே சேர்ந்ததற்கு மாத்திரம் நாங்கள் பேசுகிறதும் காரியங்கள் நடத்துகிறதுமே யல்லாமல் பிறருடைய காரியம் நாங்கள் விசாரிக்கவும் அந்தக் காரியத்திலே மேல்வாங்கவும் எங்களுக்குக் கவை என்ன? இதுவரையிலே எவர்கள் காரியத்திலே நாங்கள் மேல் வாங்கினேமென்றும், எந்தக் காரியம் எவர்களுக்குச் செய்துகொடுத்தோமென்றும் சந்தேகப்பட்டீர்கள். இப்படியெல்லாம் நாளதுவரைக்கும் எங்கள் நடத்தையும், மரியாதையும், காரியமும்

அறிந்திருந்தும் எழுதினது பின்னேயும் ஆச்சரியமாய் இருந்த தென்றும், நீங்கள் ராச்சியபாரம் பண்ணுகிறவர்கள், உங்கள் சிநேகமே பிரதானமேயன்றி உங்கள் ச்ரேயசே கோரிக்கொண் டிருக்கிற சங்கதிகளெல்லாம் அறிந்திருந்தும் எழுதினது பின்னே யும் ஆச்சரியமாய் இருந்ததென்றும், இப்படி உங்கள் சமுகத் திலே அபத்தம் சொல்லுகிறவர்கள் பேச்சை நம்பவேண்டா மென்றும், அல்லவென்றால் ராச்சியத்துக்கு விருதாவிலே தொந்தரைகள் நடக்குமென்றும், இது முதலாகிய வயணங்கள் விஸ்தரித்து எழுதி மேலே எழுதப்பட்ட மூன்று பேருக்கும் காகிதங்களெழுதி அதுகளுக்குச் சவாதும் எழுதி முசியே பாதி பார்த்துக்கொள்ளத்தக்கதாக அவன் காகிதத்திலே வைத்து சித்தோசி கொருப்படே தமையன் பரசோசி கொருப்படே குமாரன் ஆனந்தாசி கொருப்படே என்கிறவன் இருபத்தி ரெண்டு குதிரையுடனே இங்கே சேவகத்துக்கு நாலைந்து நாளாய் வந்திருக்கிறானே, அவனைக்கொண்டு பிறதாபசிங்கு பேருக்கு சகசிராஜா என்கிறவன் இவ்விடத்துக்கு வந்திருக் கிறாரென்று சந்தேகப்பட்டீர்களாம். அது சர்வாத்துமனா அபத் தம் நாங்கள் கொஞ்ச நாளாய் வந்திருக்கிறோம். இவ்விடத் துச் சேதி எங்களுக்குத் தெரியாததில்லை என்று பின்னேயும் பொங்கமாய் எழுதத் தக்க ஜாடையாய் எழுதிக்கொடுக்கச் சொல்லி வாங்கி, அதுகூட ஏகத்துக்கு பாதிக்கு எழுதின காகி தத்திலே வைத்து ஏகத்துக்கு வோருல் கோட்டாவாய்ப் பண்ணி காரைக்காலுக்குக் கொடுத்தனுப்பச் சொன்னார். அந் தப்படிக்கு அனுப்புவித்தேன்.

அப்போது வீட்டிற்கனுப்புவித்துக்கொண்டு வரச்சே, காரைக்காலுக்கு தறுவாடியைக் கண்டு பேசி, எட்டு மாற்றுப் பிறை வராகன் இரண்டாயிரம் வராகனுக்கு உண்டிகை வாங் கிக் கொடென்று சொன்னார். நல்லதென்று தறுவாடிக்கு குண்டூர் வாலிசெட்டியுடனே சொல்லியனுப்பி, இரண்டா யிரம் வராகனுக்கு காரைக்காலுக்கு உண்டிகை வாங்கிவரச் சொல்லியனுப்பிவிட்டு நான் வீட்டிற்குப் போய் சாப்பிட்டு ஐந்து மணிக்கு வந்து குண்டூர் வாலிசெட்டி காரைக்காலுக்கு அனுப்புகிறதற்குக் கொண்டுவந்த உண்டிகையை துரையவர் கள் கையிலே கொண்டுபோய்க் கொடுத்து, காரைக்காலுக்கு அனுப்புகிறதானால் முசியே பெடுதல்மியை அழைப்பித்து அவன் கையிலே கொடுத்து அதிலே சில் போட்டுக்கொடுத்தால்

அனுப்புவிக்கிறேனென்று சொன்னதற்கு, நல்லதென்று, உண்டிகையை வாங்கிக்கொண்டு முசியே பெடுநல்மீயை அழைப்பித்து உண்டாவணி பதினைந்தும் உண்டிகைச் சம்மதி இரண்டாயிரம் வராகனுக்கும் நாளைக்கு ஓர்தொனுன்ஸ் பண்ணிக் கொடுக்கிறோமென்று சொல்லிச்சொன்னார். ஐந்தாறு நாளாய் வந்து காத்துக்கொண்டிருக்கிற சித்தோசி கொருப்படே அண்ணன் பருடுசாசி கொருப்படே மகன் ஆனந்தாசி கொருப்படேயும் இருபத்திரண்டு குதிரைக்காரரும் வந்திருக்கிறார்களே அவர்கள் மனுஷர் விட்டிலே சண்டைக்கு நின்று வந்தானென்று கிட்டேயிருக்கிற பேர் சொல்லுகிறார்கள். ஆனபடியினாலே ஐம்பது குதிரைக்காரரை வைத்திருக்கிறதே அவர்களுக்கு அந்தச் சம்பளமென்று சொல்லி இருக்கச்சொன்னால் அதற்குச் சம்மதியென்றால் இருக்கிறார்களில்லாவிட்டால் அவர்களுக்குச் சம்மதியானபடிக்குப் பார்த்துக்கொள்ளுகிறது தானே என்று சொல்லலாமென்று சொன்னேன். அப்பால் அபுதுல்றயிமானும் கூடவிருக்கான். நல்லது அந்தப்படிக்கு அவர்களுக்குச் சொல்லு. நரவது மார்ச்சு மாதம் முதல் தேதி முதல் லாவணம் எழுதிக்கொள்ளுகிறோமென்று சொல்லச் சொன்னார். அந்தப்படிக்கு அபுதுல்றயிமானுடனே சொன்னேன். அப்பால் துரை நாலு பிரஞ்சுக்காரர் தேவனும்பட்டணத்திலே யிருந்து வந்தவர்களை வைத்துக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார். இங்கே காவலிலேயிருந்த இங்கிலீஷ்காரருக்குள்ளே நாலுபேரை பதிலுக்கு அனுப்பிவிட்டார்கள். நான் அனுப்புவித்துக்கொண்டு பாக்குக்கிடங்குக்குப் போய் இன்றைக்கும் கூத்தானபடியினாலேயும் நாளைமுதல் ஒரு சந்தி துவக்கமானபடியினாலே அவரவர் துலுக்கச்சி வேஷம் போடுகிறதற்கு மதாம் நோத்தேலுக்கும், ஷெ தமக்கை குமாரத்தி ஷோன்ஷேரமுக்கும் துலுக்கர் நகைகள் கல்லிழைத்தது முதலானதுகள் வாங்கிக்கொடுக்கச்சொல்லிச் சொல்லியனுப்பினார்கள்.

அந்தப்படிக்கு, சந்தாசாயபு முதலானவர்கள் வீட்டிலே வாங்கிக்கொடுத்து அதற்கு சாப்பிதாவும் எழுதிக்கொண்டு அப்பால் நான் வீட்டிற்கு ஒன்பது மணிக்குப் போனேன். போனபிற்பாடு மதனுந்தபண்டிதர் மாமியாருக்கு சர்வ மானியமாய்ச் சிறிது சிவாரெங்கன் கொடுத்து நடப்பித்த வெமுல வெங்கடபதி நாயகன் சிநேகம் கோரி அனுப்புவித்தான் என்று

தாடிபத்திரி துப்பட்டி அனுப்புவித்தானென்றும் காகிதம் எழுதுகிறதற்கு என்ன வக்கணை வைத்து எழுதவேணுமோ அந்தப்படிக்கு எழுதியனுப்புவித்தால் நாமவருக்குக் காகிதம் எழுதி ஸ்நேகாபிவிர்த்தியாய் நடப்பித்துக்கொள்ளுகிறோம் என்று தமக்கு எழுதியனுப்பினதாகச் சொன்னார். தாடிபத்திரி துப்பட்டாவை எடுத்துவந்த மனுஷனுக்கு பாக்கு வெற்றிலை கொடுத்து, நல்லது போகச்சே அதற்கேற்றபடி வெகுமானம் கொடுத்து சொல்லத்தக்க சேதியும் சொல்லி அனுப்புவோ மென்று சொல்லியனுப்புவித்தேன்.

1748 ஆ பிப்ரவரி மூ 28 உக்ர பிரபவ ஸு மாசி மீ 20 உ. புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்கு வந்த விடத்திலே துரையவர்கள் நேற்றைய்தினம் தருவாடி. அவர்கள் காரைக்காலுக்கு உண்டிகைக் கொடுத்து அம்மதி இரண்டாயிரம் வராகனும் அதற்கு உண்டாவணி 100க்கு ¾ ஆக பதினைந்து வராகனும் ஆக இரண்டாயிரத்திப் பதினைந்து வராகனுக்கும் ஓர்தொனைஸ் பண்ணி, கையெழுந்துப் போட்டு சின்னதுரை கையிலே வாங்கிக்கொள்ளச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்த ஓர்தொனன்ஸை குண்டூர் வாலிசெட்டி கையிலே கொடுத்து சின்னதுரை கையிலே வராகனை வாங்கிக் கொள்ளச் சொல்லி அனுப்பிவிட்டேன். அப்பால் காரைக் காலுக்கு அனுப்புகிற காகிதத்திலே உண்டிகைக் கூடவைத்து, காகித மல்கோட்டாபண்ணி நேற்று ராத்திரியே என்கையிலே கொடுத்த காகிதத்தை மலையப்பன் சேவகரிலே இரண்டு பேரைக் கையிலே கொடுத்து, பொழுது விடியாக்காலையிலே கதவு திறந்தாப்போலே சிதம்பரத்து டபாலிலே கொண்டு போய்க் கொடுக்கச் சொல்லியனுப்புவித்தேன்.

மற்றப்படி இற்றைநாள் ஒருசந்தி துவக்கமானபடியினாலே சாவடி கபுறு சொல்லிவிட்டு, பதினொன்றரை மணிக்கு வீட்டிற்கு வந்து அமாவாசையானபடியினாலே ஒருபொழுதாய்ச் சாப்பிட்டுப் படுத்துக்கொண்டிருந்து சாயங்காலம் வடக்கு வழியாய் மீனாக்ஷியம்மை சத்திரத்தண்டைக்கு சுவாரிபோய் அங்கே இருக்கச்சே அன்னபூர்ணய்யன் வீருநாயகன் இடத்

துக்கு வந்தார்கள். வந்தவிடத்திலே கூட பேசியிருக்கச்சே காவேட்டி ராஜாபாளையத்திலே யிருந்து வேதமூர்த்தி சிங்கா ராச்சாரியார் சேமராஜா வெகுமானமும் கொண்டுகொண்டு புத்திரோத்ஸவத்திற்கு முபார்க்கு பாதி சொல்லத்தக்கதாக வந்தவர், நம்மைக்கண்டு குதிரையைவிட்டிறங்கி அங்கே ராசா வுடைய வெகுமதியும் கொடுத்து, புத்திரோத்ஸவ சந்தோஷத் துக்கு முபார்க்குப் பாதியும் சொல்லச்சொல்லி என்னை அனுப்புவித்தார்களென்று சொன்னார். மெத்தவும் சந்தோஷ மாச்சுதென்று, நல்லது நீங்கள் முன்னே வளவுக்குப் போங்கள். பிறகே வருகிறோமென்று ஊருக்குள்ளே அனுப்பிவிட்டு, நானும் பிள்ளையும் அரை நாழிகை அங்கே இருந்து அப்பால் பாக்குக் கிடங்குக்கு வந்து அங்கேயிருந்து வீட்டிற்குப் போய் இராத்திரி எட்டரை மணி வேளைக்கு ராசாபாளையத்திலே யிருந்து கொண்டுவந்த வெகுமதியை எடுப்பித்துக்கொண்டு சிங்காராச்சாரியார் வந்து கண்டு வெகுமதி வஸ்திரங்களையும் கொடுத்து, ஓலையும் கொடுத்து, சேதிகளும் சொன்னார். அதை வாங்கிக்கொண்டு அவர்களுக்குப் பாக்கு வெற்றிலையும் கொடுத்து, அவ்விடத்திய யோகக்ஷேமத்தையும் பேசியிருந்து அவரை விடுதிக்கு அனுப்புவித்து அப்பால் காஞ்சீபுரம் பாலய்யர் குமாரன் வந்தவனுக்கு மத்தியானம் விருந்துபண்ணி இராத்திரிக்கு வரச்சொன்னபடிக்கு அவரவர் அவருக்கு இரண்டு கிசம் வெள்ளை சகலாத்து வெகுமானம்பண்ணி, பொம்மையர்பாளையத்து மடத்துக் காரியம் அவந்தரையாகி, சப்தியாகிப் போயிருக்கிற சுவாஸ்த்தியங்களை தர்பாரிலே பேசி திருப்பச்சொல்லி உபசாரமாய் நாலு வார்த்தைச் சொல்லி அனுப்புவித்தேன். மற்றப்படி பலகாரம்பண்ணி கும்பினீர் வர்த்தகருடனே பனிரெண்டு மணிமட்டுக்கும் பேசிக்கொண் டிருந்து, அவர்களை அனுப்பிவிட்டு அப்பால் படுத்துக்கொள்ளப் போனேன்.

இற்றைநாள் சாயங்காலம் நடந்தசேதி என்னவென்றால்: கோடாளு, முள்வாய், கடப்பை இந்தப் பிராந்தியங்களிலே யிருந்து சேவகத்துக்கு வந்த மருட்டியர்கள் கித்தோசி அண் ணன் பறசோசி கொருப்படே மகன் ஆனந்தராவு கொருப் படே என்கிறவனும் அவனோடு கூட இருபத்திரண்டு குதிரைக் காரர் வந்தவர்களையும் கூட அழைத்துவரவேணுமென்று அபுதுலாயிமான் சமேதாரன் அழைத்துவரவேணுமென்று

குண்டுசாலைக்கு அடுத்தாப்போலே யிருக்கிற எல்லப்பிள்ளை மடத்திலே இருக்கிற மேலெழுதியிருக்கிற மருட்டியரண்டைக்குப் போனான். போய் அவர்களை அழைத்துக்கொண்டு குண்டு சாலையிலே யிருக்கிற புதுப்பாளையத்து வழி தெத்திலே நுழையப்போகச்சே அபுதுலாயிமானையும் அவன் சுவார்களை மாத்திரம் உள்ளே விடமாட்டோமென்று சாலையிலே யிருக்கிற சிப்பாய்கள் சொன்னார்கள். அதன்பேரிலே அபுதுலாயிமானிருந்துகொண்டு துரை உத்தாரமாச்சுதென்று சொன்னான். துரை உத்தாரமானால் எங்களுக்கு விட்டுவிடச் சொல்லி உத்தாரமில்லையே என்று சொன்னார்கள். உங்களிடத்திலே இப்போது சொல்லுகிறேனே விட்டுவிடுங்கோள் என்று சொன்னான். துரை உத்தாரமென்று ஆயிரம் குதிரைக்காரர் வந்தாலும் விடுகிறதுதானே என்று எங்களுக்குப் பேச்சி வரும். ஆனபடியினாலே சீட்டு அழைப்பித்துக் கொடுத்தால் மருட்டியர்கள் குதிரைக்காரரை விடுவோம். இல்லாவிட்டால் விடத்தக்கதில்லை என்று அநேக விதமாய்ச் சொன்னாலும் அபுதுலாயிமான் கோபித்துக்கொண்டு குதிரையை விட்டிறங்கி அங்கே இருக்கிற சேவகரை தள்ளினதின்பேரிலே அவர்களும் இவனைத் தள்ளி சட்டையைக்கூடக் கிழித்து, தொந்தரவு பண்ணினதின்பேரிலே அபுதுலாயிமானும் தன் சிப்பாய்களை துபாக்கிகளைக் கெட்டிக்கச் சொல்லி, துரையுடனே சொல்லி அப்படி செய்கிறோமென்று மிரட்டினதின்பேரிலே சாடையாய் விட்டுவிட்டார்கள். அதன்பேரிலே மருட்டியர்கள் குதிரைக்காரர்களை அழைத்துக்கொண்டு தெத்துவாசற்படியண்டை வந்தான். இங்கே வெள்ளைக்காரர்கள் மறித்தார்கள். அவ்விடத்திலே நடப்பித்தாப்போலே நடத்தப்போகாதே அதனாலே துரைக்குச் சொல்லியனுப்புவித்த விடத்திலே துரை, குதிரை வெள்ளைக்காரனை அனுப்பி உள்ளே விடச்சொன்னார். அந்தப்படிக்குத் தொந்தரைப்பட்டு உள்ளே நுழைந்தார்கள். அந்தச்சேதி வந்து எனக்கு கபுறு சொன்னார்கள்.

1748 ஆ பிப்ரவரி மீ 29 உக்கு பிரபவ ஞு மாசி மூ 21உ வியாழக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே மதாம் துய்ப்ளேக்ஸ் வழியிலே துரைக்குச் சொன்னது: ரங்கப்பிள்ளைவழியிலே என்னை அவமரியாதைபண்ணி ஏன் சட்டையைக் கிழித்தேனென்றும்,

என்னை உள்ளே விடாமற்படிக்கு என் குதிரையை மல்லாக்கத் தள்ளினார்களென்றும், இவர்கள் பிதனார் மனுஷர்களிவர்கள் முன்பாக என்னை அவமரியாதை பண்ணினபடியினாலே நான் இனிமேல் சேவனை வைத்துக்கொண்டிருக்கிறதில்லையென்றும், அந்த ராச்சியத்திலே என்பேர் இருக்கிறதற்கு இனி நான் அந்த ராச்சியத்துக்குப் போகப் போகாது. போனால் மெத்த கொஞ்சமாய் எண்ணுவார்களென்றும் எனக்கு ஒரு பாக்கு வெற்றிலை கொடுத்தால் நான் போகிறேன். இல்லாவிட்டால் என்னை அடித்தவர்களை அழைப்பித்துக் காதறுத்து ஊர் கடக்கத் துரத்தவேணுமென்றும், இது முதலாகிய சேதியெல்லாம் சொன்னு லலிபுகட்டியிருந்தது. அதன் பேரிலே போனவுடனே அபுதுலாயிமானை ஏன் குண்டூர் சாலையிலே இருக்கிற சிப்பாய்கள் மறித்து அவன் சட்டையைக் கிழித்து இப்படியெல்லாம் அலங்கோலம் பண்ணினது என்னவென்று கேட்டார். மெய்யாக மனம் பொறுத்துக் கேட்கவேணுமென்று சொன்னேன். என்னவென்று கேட்டார். உங்களுத்தரவுக்கு வருகிற குதிரைக்காரர், பல்லக்குக்காரர் எத்தனை பேர் வந்தாலும் அங்கேயே மறித்துவைத்து, அவர்கள் இன்னாரென்றறிந்துகொண்டு சீட்டுப் போகிறது, உள்ளே வருகிறது அப்படி நடக்கிறது. ஆனபடியினாலே மருட்டியர்கள் வந்தவர்களை மறித்தார்கள். அதற்கு அபுதுலாயிமான் சமேதாரன் வழியிலே இருக்கிறவனைத் தள்ளி அடித்துச் சோருவாரியின்பேரிலே மருட்டியர்களை உள்ளே அழைத்துக்கொண்டு வந்தார்கள் என்று சொன்னேன். அதற்குத் துரையவர்கள் சொன்னது: அபுதுலாயிமானையும் அவனது சிப்பாய் நொண்டியையும் பார்த்து நீங்கள் வெகு தப்பிதம் பண்ணுகிறது. நான் மெத்த மனம் பொறுத்து வருகிறேனென்று சொல்லி நீங்கள் ஒடுதியைத் தள்ளி வரலாமாவென்று கேட்டார். நாங்கள் மருட்டியர்கள் குதிரையைக்கூட அழைக்கவில்லை. எங்கள் குதிரையை விடமாட்டோமென்றதின்பேரிலே நான் போவேனென்று சொன்னதற்கு என்னை அடித்துப் பிடித்து அலங்கோலம் பண்ணினார்களென்று சொல்னேனே, அது என்னவென்று கேட்டார். உங்களுக்கு ஒரு சாதகம் சொல்லுகிறேன். அந்த மருட்டியர் அங்கே இருக்கச்சே ஐந்தாறுதரம் போக வர இருந்தார்களே அப்போது இவர்களை மறித்தார்களா? இப்போது மருட்டியர் அண்டைக்குப் போகச்சே மறித்தார்களா? அதுவே சாதகமென்று சொன்னதற்கு

மெய்தானென்று ஒத்துக்கொண்டு அங்கே இருக்கிறவிவள் ளைக்கார கொறபுரும் அழைப்பித்துக் கேட்போமென்று கேட்ட விடத்திலே, அவன் நான் தூங்கினேன். ஒன்றும் அறியேன் என்று சொன்னான். அப்பால் அங்கே இருந்தவர்கள் சிப்பாய்கள், தமிழர்கள் அனைவரையும் அழைத்துக் கேட்டவிடத்திலே அபுதுலாயிமானுக்கு நாங்கள் வெகு மரியாதைபண்ணி அவர்கள் அண்டைக்குப்போய் நீங்கள் மருட்டியர் குதிரைக்காரரை உள்ளே அழைத்துவரப் போகிறீர்களே அவர்களை நாங்கள் உள்ளேவிட சீட்டில்லாமல் கூடாதே என்றதற்கு நாங்கள் வர மறந்து போனோமென்றும், உத்தாரம் பெற்று வந்தோமென்றும் சொல்லி, சோருவாரியாய்ப் போவதேயல்லாமல் எங்களைத் தொட்டு அட்டியானதில்லை. விசாரித்தால் தெரியுமென்று நடந்த பூர்வோத்ரமரம்படியே சொன்னதின்பேரிலே துரை அவர்கள், அபுதுலாயிமானைக் கூப்பிடாதவேளையானபடியினாலே உங்கள் பேரிலேயும் நேரமில்லை, என்பேரிலே நேரம். ஏனென்றால், உபயத்திர் வரும் ஒடுதியாம்படிக்குச் செய்தீர்கள் என்றும் சொல்லிப் போகச்சொன்னார். அதற்கு அபுதுலாயிமான் இனிமேல் ரங்கப்பன் சீட்டு வாங்குகிறதில்லை யென்று சொன்னதின்பேரிலே தம்முடைய பாரிசு முத்திரையும், வெள்ளைக்கார ஆறு முத்திரையும் காகிதத்திலே போட்டு இந்த முத்திரை கொண்டுவந்தால் அபுதுலாயிமான் மனுஷரை விட்டுவிடச் சொல்லி சேக்கு இபுருமுக்கு உத்தாரம் கொடுத்தார்.

---

*1748* ஆ மார்ச்சு மீ 1வக்கு பிரபவ ஞு மாசி மீ 22உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் சித்தோசி கொருப்படே அண்ணன் பருசோசி கொருப்படே மகன் ஆனந்தராவு கொருப்படேவுக்கு துரையவர்கள் வெகுமானம் கொடுக்கிறதற்கு முசியே கோர்னேயுக்கு எழுத வேண்டிய லிஸ்துருக்கு எழுதின சவாது:

| | | | |
|---|---|---|---|
| செகப்பு சகலாத்துச் சிப்பம் }-க்கு கெசம் | | | 8 |
| ஒரு மெல்லீஸ் துபாக்கி | ... | ... | 1 |
| ஆகுதுங்கிரி சீசா ... | ... | ... | 4 |
| ஆகுதெசம்பரெல் சீசா | ... | ... | 4 |

இற்றைநாள் நடந்ததென்னவென்றால்: அபுதுலாயிமான் துரையவர்களண்டைக்குப் போய் மருட்டியர் குதிரைக்காரர்கள் சேவகத்துக்கு வந்திருக்கிறார்களே அவர்கள் உங்கள் பேட்டிக்கு வருகிறாரென்று சொன்னார்களென்று சொன்னார். நான் ரங்கப்பிள்ளை பணம் வைக்கிற இடங்கிலே உட்கார்ந்து கொண்டு எழுதிக்கொண்டிருந்தேன். அப்போது துரையவர்கள் அழைக்கிறார்களென்று வந்து அழைத்தார்கள். போனவிடத்திலே மருட்டியர் குதிரைக்காரர்களுக்குச் சம்பளம் பேசித் தீர்த்துப்போட்டாயா என்று கேட்டார். பேசித் தீர்த்துப் போட்டேன். குதிரைக்குப் பதினைந்து ரூபாயும் சுவாருக்கு ஆறு ரூபாயும், அரிசியும், நெய்யும், இப்போது அபுதுலாயிமான் குதிரை சுவாரிகளுக்குக் கொடுக்கிறபடிக்கு என்று பேசித் தீர்த்திருக்கிறது. அந்தப்படிக்கு அவர்களும் சம்மதித்தார்கள் என்று சொன்னேன். ஆனால் அந்த எசமானுக்கு என்ன சம்பளமென்று கேட்டார். அதற்கு நான் தீர்க்கவில்லை. உங்கள் சித்தத்துக்குச் சம்மதியானப்போலே என்று சொன்னதற்கு சேகு அசேன் சின்ன சமேதாருக்கு என்ன சம்பளமோ அந்தச் சம்பளம் கொடுப்போமென்று சொல்லி, பிராஞ்சு வார்த்தையிலே இவனுக்குத் தாழ்ந்த சம்பளமாய்ச் சொல்லாவிட்டால் இவனுக்கு மனஸ்தாபமாயிருக்கும். ஆனபடியினாலே இந்த வேளைக்கு இவனைச் சந்தோஷம்பண்ணிக்கொண்டு நமக்கு நடத்தவேணுமென்று சொன்னார். அது மெய்தானென்று சொன்னேன். அதன் பிறகு அவர்கள் வந்தால் என்ன வெகுமானம் கொடுக்கவேணுமோ அதை ஒரு லீஸ்துரு எழுதி வா என்று சொன்னார். ஐயா, நல்லது, இத்தனை வராகனிலே வெகுமானம் கொடுக்கவேணுமென்று நீங்கள் சொன்னால் அந்தப்படிக்குத் தினுசு பிரித்து எழுதி வருகிறேனென்று சொன்னதற்கு, எனக்குத் தெரியாது. யாருக்கு எப்படி கொடுக்கவேணுமோ அது உனக்குத் தெரியாமல் எனக்குத் தெரியுமா? நீதானே எழுதி வா என்று சொன்னார். நல்லதென்று அந்தப் பக்கத்தில் எழுதியிருக்கிற லீஸ்துருபடிக்கு எழுதி முசியே கோர்னே பேருக்கு ஓர்தொனான்ஸ் பண்ணிக்கொண்டுபோய்க் கொடுத்து அதிலே கையெழுத்துப் போட்டார். அப்பால் சேகு அபுதுலாயிமான் நேற்று நடப்பித்த காரியத்துக்கு மனம் பொறுத்துக்கொள்ள வேணுமென்று பங்கப்பட்டு அவன் சொல்லிக்கொண்டதும் மதனந்தபண்டி

தரைக்கொண்டு சொல்லுவித்ததும், காலைப் பிடிக்க வந்ததும் நான் எழுதினல் லோகத்திலே இருக்கப்பட்ட பாமரன் நான் பிரதிஷ்டைக்கு எழுதினதாய்ச் சொல்லுவார்கள் என்று விஸ்தரித்து எழுதவில்லை. அப்பால் எப்போதையும்போலே எங்கள் மனுஷருக்குச் சீட்டு நீங்கள்தானே கொடுக்கவேணுமென்று ரொம்பவும் சொல்லிக்கொண்டான். அதன்பேரிலே நானும் ரொம்பவும் உபசாரமாய்ச் சொல்லி, துரையவர்கள் உத்தாரத்தை நான் தள்ளப்போமா. எனக்குப் பிராது வருமே, நீ துரையவர்கள் உத்தாரம் வாங்கிக்கொள்ள வேணுமென்று நான் சொன்னதற்கு, நான் உத்தாரம் காலத்தாலேதானே வாங்கிக்கொண்டேன். நீ கேட்டாலும் சொல்லுவார். அல்லவென்று அவராகிலும் சொல்லுவார் என்று சொன்னர். நான் உபசாரமாய்ச் சொன்னேன். அதன்பேரிலே மூசியே கோர்னே அண்டைக்கு அனுப்பின வீஸ்துரு பாக்கியில்லை என்று மற்றதை அனுப்பினன். அதை நம்முடைய கிடங்கிலே வைத்துவிட்டு நான் சாப்பாட்டுக்கு வீட்டிற்கு வந்தேன். அப்பால் மூன்றரை மணிக்கு ஆனந்தராவு கொருப்படேயும், இருபத்திரெண்டு குதிரைக்காரர்களும் வந்து சந்தித்து குதிரை நதிர் வைத்தார்கள். அதை துரை கவையில்லை என்றும் படி கொடுத்துவிட்டு அவர்களுக்கு எட்டு கெஜம் செகப்பு சகலாத்தும் பச்சை சகலாத்து எட்டு கெஜமும் நாலு ஆகுதுங்கிரி பியோலும் வெகுமானம் கொடுத்ததை வாங்கிக்கொண்டு, அனுப்புவித்துக்கொண்டு போனர்கள். இவர்களைப் பார்த்தால் சுருட்டுப் பொறுக்கிகளாய்க் கண்டதேயல்லாமல் பெரிய மனுஷர் ஜாடை சற்றுகிலும் காணவில்லை. இவன் சித்தோசி கொருப்படே அண்ணன் மகன் என்று சொல்லிக்கொண்டு திரிகிறது அபத்தம்போலே காண்கிறது. அது சந்தேகமில்லை. இவன் பெரிய மனுஷனுனல் இந்தச் சாடையாகக் காணுது.

இற்றைநாள் ராத்திரி எட்டு மணிக்கு துரை அழைக்கிருர் என்று சேவகன் வந்தழைத்தான். அப்போது துரையவர்கள் வீட்டிற்குப் போனமாத்திரத்திலே துரை, அம்மாள் காம்பிருவிலேயிருந்து அழைக்கிருரென்று சொன்னுப்போலே யாரோ வேகுகாரர் நம்முடைய தாலுக்கு மனுஷரைப் பிடித்து வந்தார்கள். அதுதான் துரை இங்கேயிருந்து அழைக்கிறதென்று தோற்றி ஒழுகரை கொண்டராசா ஐயனுகவேணுமென்று எண்ணிக்கொண்டு போனேன். அப்படியே கொண்டராசாவும்

அம்மாளும் ஐயனாகிய துரையும் நிற்கிறார்கள். நான் போய் சலாம் பண்ணினவுடனே கொண்டராசாவைப் பார்த்து, நீ மல்ராசா சம்பளம் வாங்கினது மெய்யா என்று கேளென்றார். அதிலே ஆயி இருந்துகொண்டு அவனைக் கேட்கிறதென்ன ரங்கப்பனைக் கண்டமாத்திரத்திலே முன் உண்டென்று சொன்ன பேச்செல்லாம் இப்போது இல்லையென்று சொல்லுவா னென்று சொன்னான். அதற்கு துரை சொன்னது: இப்போது அவன் சொல்லா வார்த்தையை நீ எனக்குச் சொல்லியிருக்க வேணும். ஆனபடியினாலே இந்தமட்டுக்கும் சொன்ன பேச் செல்லாம் பொய்யாகக் காணுதென்று கோபமாய் இப்படிப் பட்டவர்களைப் பிடிக்கிறதற்கு நீ மெத்தக் கெட்டிக்காரரை யெல்லாம் சேர்த்தாய். இதுகளெல்லாம் நானறிவேனென்று ரொம்பவும் கோபமாய்ச் சொன்னார். அதற்கு உதட்டைக் கடித்துக்கொண்டு சும்மாயிருந்தால் இப்படி நேரமுமில்லாமல் நம்முடைய காரியம் பார்க்கிறவர்களாய்ப் பிடித்துவரச் சொல் லென்று கோபமாய்ச் சொல்லிவிட்டுச் சாப்பாட்டுக்குப் போனார். தாட்டியும் கூட சாப்பிட்டுப் போனாள். அப்பால் நான் பாக்குக் கிடங்குக்கு வந்தேன்.

அப்பால் தாட்டி நல்லது இந்நேரத்துக்கு நயினார் வீட்டில் வைத்தால் அப்பாலே காலத்தாலே விட்டுவிடலாமென்று மார்க்கமாய் என்ன சொன்னாளோ, அந்த துரை என்ன சொன் னானோ அதன்பேரிலே கொண்டராசாவை என்று சொன்ன படிக்குக் கொண்டுபோய் வைத்தார்கள். நானும் அப்போது துரையுடனே அபாண்டம் போட்டு நடத்துகிறதை நன்றாய் விசாரித்து யார்பேரிலே நேரமிருந்தாலும் தண்டனைபண்ண வேணும். நானே தாகிலும் கும்பினீர் காரியத்துக்காக நீங்கள் விசாரிக்கச் சொன்னபடியினாலே விசாரித்தேன். இனிமேல் விசாரிக்கவேண்டாமென்றால் விட்டுவிடுகிறேன். இப்படி நடத்து கிறதைத்தொட்டு இனி ஒருக்காலும் எவக்குக்கபுறு கொண்டு வருபவர்களெல்லாம் பயப்படுவார்கள். சோகமாட்டார்களாம் என்று சொன்னேன். கேட்டுங்கேளாதுபோலே சாப்பிடப் போனான். பெண்டாட்டி பேச்சாகச்சே கேட்டமாத்திரத்திலே வெளுத்துப்போச்சென்று வெளியாக்கினால் தன் புத்திக்கும் விவேகத்துக்கும் தானே பைத்தியக்காரன் பெண்டாட்டி பேச்சைக் கேட்டு இப்படியெல்லாம் கெடுத்துக்கொள்ளுகிறான் என்று சொல்லப்போகிறார்களென்று வெட்கம் பாதி. மறு

பேச்சு பேசாமல் இவள் அபாண்டம் போடுகிருள் என்று அறிந்தும் மயக்கத்திஞலே கண்டியாமல் கண் கெட்டவனைப் போலே சாப்பிடப் போஞன். இது முன் எழுதவேண்டியதை மறந்துபோய் பின்னே எழுதினேன்.

1748 ஆ மார்ச்சு மீ 3உக்கு பிரபவ ஞ மாசி மீ 24உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை கோவிலுக்குப் போய் விட்டு வந்தபடியினலே சமஸ்தமான வெள்ளைக்காரர் அனை வரும் வந்தார்கள். ஓபிஸியேல்மார்கள் அனைவரும் முசியே மேன்வில் முதலானவர்களும் கும்பினீர் காரியத்து நிமித்தியம் போனவர்கள் அகப்பட்டுக்கொண்டால் கும்பினீர் விடுவிக்க வேண்டியதாச்சே. ஆனபடியினலே விடுவிக்கச் சொல்லி யும் அந்த மைசூரார் எந்தமட்டுக்குப் பணம் கேட்டால் அந்த மட்டுக்கும் கொடுத்து விடுவிக்கவேணுமென்று பெத்திஸியோம் எழுதிக் கொடுத்தார்கள். அப்படியே கொஞ்ச நாளையிலே விடுதலை பண்ணுகிறேனென்று அவர்களுக்கேற்ற நியாயமாய்ச் சொல்லிப் போகச்சொல்லி, என்னை அழைத்துச் சற்று கோப மாய் இந்தமட்டுக்கும் விடுதலை பண்ணுவிக்கமாட்டாமற் போனயே என்று கோபமாய்ச் சொன்னர். காகிதங்கள் போய்க் குவிந்திருக்கிறது. இனிமேல் விடுதலையாகும். பணம் கொஞ்சநஞ்சம் கேட்டார்கள். அதுவும் சாம்சாம்பண்ணி அனுப்பினேனென்று மார்க்கமாய்ப் பணம் அனுப்பின சேதி கூடச் சொல்லிப்போட்டேன். அப்பால் விசேஷித்த சமாசாரம் எழுதத்தக்க சமாசாரமாயில்லை.

1748 ஆ மார்ச்சு மீ 4உக்கு பிரபவ ஞ மாசி மீ 25உ திங்கட்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே முசியே கோர்னே அண்டைக்குப் போய்க் கணக்குத் தீர்த்துக்கொண்டு கும்பினீர் வர்த்தகர் பேருக்குச் சரக்கு வரவு வைப்பித்து அவர்கள் பேருக்கு ரசீதை வாங்கி அவர்களுக்குக் கொடுத்து, அந்தப் பணம் வாங்கிக் கொண்டேன். கோதும்பை சம்மதிக்கு ஐந்நூறு வராகன் திருவிதி பாலுசெட்டி, சலுது வெங்கடாசலசெட்டி கையில் வாங்கிக்கொள்ளச்சொல்லிச் சொல்ல நல்லதென்று ஒத்துக்

கொண்டு மற்ற நூற்றித்தொண்ணூற்றைந்து வராகனும், நாற்பத்தாறு காசும் இரண்டு மூன்று நாள்.........

1748 ஆ மார்ச்சு மூ 5வுக்கு பிரபவ ஸு மாசி மீ 26வ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்கு வந்த விடத்திலே துரையவர்கள் பெண்சாதி குமாரத்தி முசியே வேன்சான் மகள், முசியே போறனவால் கலியாணம்பண்ணியிருந்த பெண் சென்னப்பட்டணம் போன பிற்பாடு புருஷனும் பெண் சாதியும் புதுச்சேரிக்கு வந்தவிடத்திலே முசியே புஸி என்கிறவனை மைதுனம்பண்ணின சாவடை அறிந்து முசியே போர்னவாலுக்கும் அவனுக்கும் கத்தி சண்டையாகி காயம்பட்டதின் பேரிலே துரைபரியந்திரமாய் இங்கே இருந்தால் எத்தனை பேரை மைதுனம் பண்ணினாலும் கேட்கப்போகாதென்று அதைத்தொட்டு அந்தக் கோபத்தின்பேரிலே இவ்விடத்திலே இருந்தவன் புறப்பட்டுத் தரங்கம்பாடிக்குப்போய் அங்கே யிருந்த விடத்திலே போறனவால் பெண்சாதி மூந்தாம்நாள் செத்துப்போனாளென்கிற கபுறு வந்தது. துரையும், துரை பெண்சாதியும் விசாரப்பட்டுக்கொண் டிருக்கிறார்களென்று வந்து கபுறு சொன்னேன். அதன்பேரிலே துரை வீட்டுக்குப் போய் அவரை மெனவுவோமென்று போனவிடத்திலே முசியே போறனவாலும், முசியே கோறந்னேயும் கூட வந்தார்கள். அவர்களும் கூட இருக்கச்சே துரையவர்கள் என்னைப் பார்த்து மதாம் போறனவால் இரண்டு நாள் சரீரம் சொஸ்தமில்லாமலிருந்து மூந்தாம்நாள் காலம்பண்ணிப் போனாளென்று சொன்னார். அதன்பேரிலே, ஐயா, அம்மாளுக்கு எத்தனை மனோவிசாரம் வந்தது. இந்தத் துக்க கபுறு விட்டவர் வேணுமென்று மகா விசாரமாய்த் தாபந்தமாய்ச் சொன்னேன். அதற்குத் துரை யிருந்துகொண்டு வங்காளத்திலே யிருந்து நேற்றையதினம் காகிதம் வந்ததினாலே மதாம் தெப்ரேமெனியும் சரீரம் மெத்த லகுதப்பி இருக்கிறது. அவளும் செத்துப்போவாள், பிழைக்கமாட்டாள். இவள் பெற்ற பிள்ளைகள் ஆயுசு உண்டாயிருக்கிறதில்லை. எல்லாம் இப்படியே செத்துப்போகுதென்று வேசாராய்ச் சொன்னார்.

ஐயா, மூத்தப்பிள்ளை கப்பலின்பேரிலே போனவிடத்திலே வெட்டிப் போட்டார்களே, அந்தச்சேதி இந்தமட்டுக்கும்

சொல்லாமலிருந்தீர்களே, இந்தச் சமயத்திலே சொல்லிப் போடலாமென்று சொன்னேன். அப்படிதான் யோசனை பண்ணி அந்தச்சேதிகூட இப்போதானே சொல்லேனென்று சொல்லி முசியே கோர்னேயைப் பார்த்து கையிலே இருக்கிற காகிதமென்று சொல்லி கையிலே கொடுத்தான் அதை வாசித்துப்பார்த்து ரங்கப்பிள்ளையை என்ன வயணமென்று கேட்கவில்லையாவென்று கேட்டார். கேட்டேனதற்கு ரங்கப்பிள்ளை சொன்னது: அந்த இரண்டாயிரம் ரூபாய் உண்டிகை இவன் பேருக்கு எழுதிவையாமல் எங்கள் மனுஷன் சக்கரையப்பிள்ளை என்கிறவனைக்கூட அனுப்புவித்தோம். அவன் பேருக்கு உண்டிகையும் எழுதுவித்து இவன் சரக்குக் கொண்டால் அந்த ரூபாயை வாங்கிக் கொடுக்கச்சொல்லியும் இல்லாவிட்டால் கொடுக்கவேணுமென்று நான் எழுதியிருந்தேன். ஆனபடியினாலே இவன் சரக்குக் கொள்ளாமலிருந்து உண்டிகை ரூபாயை வாங்கிக் கொடு என்று கேட்டான். அப்படி கொடுக்கப்போகாது, நீ சரக்கு வாங்கினால் அந்த வர்த்தகருக்கு நான் சொல்லிக்கொள்ளுகிறேனென்று சொன்னால் கேட்கமாட்டோமென்று அந்த உண்டிகையை வாங்கிக்கொண்டு அந்த வர்த்தகனைப் போய் கேட்டவிடத்திலே வர்த்தகன் சொன்னது: உன் பேருக்கு உண்டிகை இல்லை சக்கரையப்பிள்ளை பேருக்கு இருக்குது. உன்கையிலே கொடுக்கப்போகாது என்று வர்த்தகன் சொன்னதின்பேரிலேதான் தன் மனதின்படியே நடக்கிறதற்கு இல்லையென்று கோபமாய் எழுதினானென்றும் ரங்கப்பன் சொன்னானென்றும் முசியே கோர்னேந்து துரை சொன்னதற்கு துரையிருந்துகொண்டு நீ சரக்கு வாங்கினால் அவன் பணம் கொடுப்பான், நீ வாங்கியிராதபடியினாலே அவன் கொடுக்கவில்லை நீ வாங்கியிருக்கிற பணத்துக்குச் சரக்கு வாங்கி சீக்கிரமத்துக்கு அனுப்பு என்று அதட்டுக்குத் தக்கதாய் சுருக்கா எழுதச்சொல்லி முசியே கோர்னேக்கு உத்தாரம் கொடுத்தார் அந்தப்படிக்கு முசியே கோர்னேயும் காகிதம் எழுதியனுப்புகிறேனென்று சொல்லி மதாம் பொற்னவால் செத்ததற்கு மௌனவிப்போட்டு, என்னை ஒருதரம் வீட்டுக்கு வரச்சொல்லிச் சொல்லிப்போட்டுப் போனான். அப்பால் நான் பாக்குக் கிடங்குக்கு வந்தேன்.

மறுபடி துரை அழைத்தனுப்பி, கடைக்கு நெல்லு எத்தனை பொதி வந்ததென்று கேட்டார். எழுநூற்றி எண்பத்தைந்து

பொதி வந்ததென்று சொன்னேன். அதிலே சாயங்காலம் நூறு இருநூறு பொதி என்ன நிற்குதோ அதைக் கும்பினீருக்கு அளந்துகொள்ளென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அரிசபாக்கத்து நெல்லு எவ்வளவு அகப்படுமென்று கேட்டார். அதுவும் இருபது முப்பது கரிசை மட்டுக்கும் அகப்படுமென்று சொன்னேன். ஆனால் இருநூறு கரிசை ஏகத்துக்குக் கையிருப்பு இருக்கப் பார்த்துக்கொண்டு அப்பால் நெல்லு சாடையிலே ஆசுதாவாக இரு என்று சொன்னார். நல்லதென்று சொல்லி கடைக்கு நெல்லுமாத்திரம் வந்ததா? அரிசிகூட வந்ததா? என்று கேட்டார். அப்பால் சாவடி டாப்புப் படித்துச் சொன்னேன். அதிலே சர்க்கரை பனிரெண்டு பொதியும், பனிரெண்டு மூட்டையும் எழுதியிருந்தது. அது கேட்டவுடனே என் கையிலே முன்னூறு பாரம் கற்கண்டு இருக்கிறது. கணக்கப் பிள்ளையை அழை என்று சொல்லிவிட்டு, ரங்கப்பூலே நாலு வருஷமாய் என் வசத்திலே இருக்குது. கும்பினீர் வர்த்தகர்களுக்குத் தெரியச் சொல்லிக் கரைத்துப்போடப்பண்ணி வை என்று சொன்னார். நல்லது கும்பினீர் வர்த்தகரைக் கண்டு பேசிச் சொல்லுகிறேனென்று சொன்னேன். இதிலே கணக்கு ரங்கப்பிள்ளை வந்தார். எத்தனை பாரம் கற்கண்டு இருக்குதென்று கேட்டதற்கு முன்னூறு பாரம் வந்ததே அதற்கு நூறு பாரம் மொக்காவுக்குச் செலவு போக இருநூறு பாரம் இருக்குதென்று சொன்னதற்குச் செலவு போக முன்னூறு பாரம்போலே எனக்கு ஞாபகமிருக்குது. கணக்குப் பார்த்து வந்து சொல்லென்று சொன்னார், நல்லதென்று போனான். நானும் வர்த்தகரைக் கண்டு பேசிச் சொல்லுகிறேனென்று சொல்லியனுப்புவித்துக்கொண்டு பாக்குக் கிடங்குக்கு வந்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஐந்தாறு மாதத்துக்கு முன் தேவனாம்பட்டணத்துக்கு ஓடிப்போன குதிரைச் சுவார் மியாசி என்றவன் அபுதுலாயிமாலுக்கும் அவனுக்கும் ஆகாமற்போனவன் மறுபடி கல்லின்பேரிலே இற்றைநாள் சாயங்காலம் அபுதுலாயிமான் மாரிபத்திலே தானே வந்தான். துரையண்டைக்குப் போனவிடத்திலே சமயம் இல்லாதபடியினாலே என்னண்டைக்கு வந்து அபுதுலாயிமானும் மியாசியும் தேவனாம்பட்டணத்துக் கபுறு சொல்லிவிட்டுப் போனார்கள்.

**1748 ஆ மார்ச்சு மீ** ஷெக்த பிரபவ ஞு மாசி மீ 27உ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்கு வந்த விடத்திலே அவர் மனிலா காகிதம் தேடிக்கொண்டிருந்த படியினாலே அவரைக் கண்டு பேசுகிறதற்குச் சமயமில்லாமல் ரங்கப்பிள்ளை இருக்கிற இடங்கிலே உட்கார்ந்துகொண்டு மதாம் பொற்லவாலானவள் மகள் காலம்பண்ணிப்போன துக்கம் விசாரிக்கத்தக்கதாக மதாம் துய்ப்ளேக்ஸ் அண்டைக்குப் போய் மறுபடியும் முன்னிருந்த இடத்திலே இருக்கச்சே குவர்னதோர் அழைக்கிறார் என்று சோபுதாரன் வந்தழைத் தான். அதன்பேரிலே துரையண்டைக்குப் போனவிடத்திலே துரைக்குச் சாவடி டாப்பு படித்துக் கபுறு சொன்ன பிற்பாடு மதாம் பெநஷே வந்து ஒரு பெத்திஸியோம் துரை கையிலே கொடுத்தான். அதைத் துரை படித்துப் பார்த்து வெங்கட ரெட்டி என்கிறவன் யார் என்று கேட்டார். அவன் சென்னப் பட்டணத்தான். இப்போது பத்து வருஷமாய் இந்த வூரிலே வந்து இருக்கிறான் என்று சொன்னேன். அவன் என்ன உத்தி யோகஸ்தன் என்று கேட்டார். அவன் முன் துபாசித்தனம் பண்ணிக்கொண்டிருந்தவன். இப்போது கொஞ்சம் வியாபாரம் பண்ணிக்கொண்டு திரிகிறான் என்று சொன்னேன். ஆனால் அவனுக்கும் முசியே பெநஷேக்கும் வியாச்சியம் உண்டானால் வியாச்சியமாடிய பின் பேசவேணுமேயல்லாமல் காகிதத்திலே திருடன் என்று எழுதப்போமாவென்று கேட்டார். அப்படி எழுதிக்கொடுக்கிறதற்குத் தலை இரும்புத் தலையினாலேபண்ணி யிருக்குதா என்று சொல்லி, ஆனால் இவன் பாஷை யல்லவே! மறு பாஷையிலே எழுதுகிறதாச்சே. எப்படி பிசகாய் எழுதி னார்களோ? இல்லை யில்லையென்று என்ன சாடையாய் வந்ததோ தெரியாது. இல்லாவிட்டால் இவன் திருடனென்று ஒரு சின் யோரை சொல்லுகிறதற்குதாரத்து இருக்குதா வாயினாலே... கசுவே போகாதே. அப்படியிருக்கச்சே கோன்சேலுக்கு எழு திக் கொடுப்பானா? நன்றாய் விசாரித்து அறியவேண்டியதென்று சொல்லி, அவன் மெத்த பயந்தவன். இந்த நியாயத்து நிமித் தியம் துரைக்குத் தெரியப்படச் சொல்லவேணும். நானும் சந்தித்துக் கண்டு பேசுகிறேன் என்று சொன்னான். இது வெள்ளைக்காரனுடனே சேர்ந்த வியாச்சியம். நாம் ஏந்திரா ரிடப் போகாதென்று சாடையாய்ப் போக்கிலே விட்டேன்

என்று சொன்னேன். அதற்குத் துரை சொன்னது: நல்ல காரியம் பண்ணினுய். வெள்ளைக்காரர் காரியத்திலே பரிச்சேதமாய் ஏந்திராரிட வேண்டாமென்று சொன்னுர். அதிலே தான் நானும் ஜாடையாய் விட்டுவிட்டேன் என்று சொல்லி, அப்பால் இந்த ரெட்டி பசுமை மனுஷன், முசியே பேர்ஷே வேலைக்காரன். முன் முசியே நூதண்டை யிருந்து மோசம் பண்ணினவன் என்றும் இப்போது பெருஷே அண்டையிருந்து மோசம்பண்ணினவன் என்றும் தங்களுக்குத் தெரிந்திருக்குதே இவனும் அவன் பண்ணின மோசத்துக்குள்ளே அகப்பட்டுக் கொண்டு மோசம் போனுனென்று சொன்னேன். அது மெய் தான் என்று ஒத்துக்கொண்டு அந்த ரெட்டிக்குப் பெத்திஸியோம் எழுதின வெள்ளைக்காரனுரோ, அவனைத்தொட்டுப் பிசகு வந்திருக்கவேணுமென்று சொன்னுப்போலே அந்த ரெட்டியை அழைத்துவரச் சொன்னுர். நல்லதென்று சேவகனை அனுப்பி அழைத்துவரச் சொன்னேன். அதன் பிறகேதான் பெருஷே வந்து ரங்கப்புலேக்கு நீ ஒரு வார்த்தைச் சொன்னதைத்தொட்டு எங்கள் காரியம் அனுகூலமாச்சுது. இன்னும் ஓர் வார்த்தைச் சொன்னீரானுல் உமக்கு வேசடை கொடாமல் நான் ரங்கப்புலேயுடனே சொல்லிக்கொண்டு, காரியம் அனுகூலம் பண்ணிக்கொள்ளுகிறேனென்று சொன்னுன். அதற்கு துரை இருந்துகொண்டு ரங்கப்புலே அவர்கள், காரியம் செய்து கொடுக்கவேணுமென்று சொன்னுர். அவர்களைக் கேளுங்கோள் நான் அவர்கள் காரிய நிமித்தியம்பிரயாசைப்பட்டு அனுகூலம் பண்ணிக்கொடுத்ததுமில்லை. இரண்டும் அப்படியே நடந்து கொள்ளுகிறேனென்று சொன்னேன். அவனும் அனுப்புவித்துக்கொண்டு போனுன். நானும் அனுப்புவித்துக்கொண்டு பனிரெண்டு மணி அடித்துப் போனதினுலே வீட்டிற்குப் போனேன்.

வெங்கடரெட்டி நான் வீட்டுக்குப் போகச்சே வந்தான். நீ முசியே பொருஷேயை திருடனென்று எப்படி எழுதிக்கொடுப்பாயென்று கேட்டதற்கு, நான் எழுதிக்கொடுத்தால் என்னை ஆக்கினைப்பண்ணிப் போடுகிறது. அந்த பெத்திஸியோம் எழுதினது முசியே தெம்ரே அவரைக் கேட்கவும் முசியே பொருஷே பெண்சாதி வேணுமானுல் என்னை சினெவ கமுட்டிக்கொண்டு, முசியே தெம்ரே முசியே லேபோ முன்பாக அடிக்கவந்தான் அதற்கு வேணுமானுல் சாக்ஷி இருக்கிறுர்களென்று சொன்

ளுன். நானும் அப்படியே பிரவுடனே அப்படி எழுதிக் கொடுத் திராதென்று சொல்லிப்போட்டேன். ஆனாலும் உன்னை அழைக்கச் சொன்னமட்டுக்கும் போய்க் கண்டுபேசு என்று சொன்னதற்கு, நீங்களில்லாத வேளையிலே நான் போனால் அவமானம் வந்தாலும் வருமென்று பயந்து ரொம்ப தாபந்த மாய்ச் சொல்லிக்கொண்டான். ஆனால் துரை சாப்பிட உட் கார்ந்தார். நாலு மணிக்கு நான் வருகிறேன். இதிலே ஒரு வேளையிலே பிரபு அழைத்தால் கண்டு பேசு என்று சொல்லிப் போட்டு நான் வீட்டிற்குப் போனேன்.

இதிலே நடந்த பேச்சைப் போய் முசியே நேம்ரேயுடனே சொன்னதின் பேரிலே பெத்திஸியோம் எழுதினவன் நானுச் சுதே. நான் போய்க் கண்டு பேசுகிறேமென்று சொன்னான் என்று நான் வீட்டிலேயிருக்கச்சே வெங்கடரெட்டி வந்து சொன்னான். சாயங்காலம் மூன்று மணி வேளைக்கு துரை அழைக்கிறாரென்று கும்பிலீர் சேவகன் வந்து அழைத்தான். நான் போகிற வேளைக்கு நாலு மணி வேளையுண்டு துரைவீட்டு வாசற்படியண்டையிலே முசியே நேம்ரே எதிராக வந்தான் என்னைக் கண்டவுடனே முசியே பொருஷேம்பேரிலே பெத்திஸி யோம் எழுதின வெங்கடரெட்டிக்கு எழுதிக்கொடுத்தவன் நான் அதிலே முசியே பொருஷே திருடனென்று எழுதிக்கொடுத் தாய். அவன் துரைக்கு பெத்திஸியோம் எழுதிக்கொடுத்தா னும். அவனுக்கு விவகார சங்கதியே தெரியாது. அதிலே பர மானந்தன் ஒரு திருடன் என்கிறது முசியே பொருஷே அறிவா னென்றெழுதினதை அவன் பதசந்து பாராமல் பரமானந்த னும் திருடன். அவன் துரை பொருஷேயும் திருடனென்று எழுதினதாய் எண்ணிக்கொண்டு குவர்னதோருக்கு பெத்திஸி யோம் எழுதிக் கொடுத்ததற்கு இப்போது நான் குவர்னதோர் அண்டைக்குப் போய் அதற்கு வயணம் சொல்லி, நான் எழு திக்கொடுத்த பெத்திஸியோமையும் காண்பித்தேன். அதற்குத் துரை நகைத்து பதசந்து பாராமற் போனானென்றும் சொன் னார் என்று சொல்லிப்போட்டு அவனையனுப்புவித்துக் கொண்டு அவன் வீட்டிற்குப்போனான். நான் துரையண்டைக் குப் போனேன். துரை என்னைப் பார்த்தமாத்திரத்திலே நாகப் பட்டணத்துக் குவர்னதோருக்கு எழுதின காகிதத்தை என் கையிலே கொடுத்துச் சீக்கிரமத்துக்கு இரண்டு சேவகர் கையிலே கொடுத்து நாகப்பட்டணத்துக் குவர்னதோர்

கையிலே கொடுத்துப் பதில் காகிதம் கொடுத்தால் வாங்கிவரச் சொல்லென்று சொல்லிப் போட்டுச் சுவாரிபோனார். நானும் மலையன் சேவகர் இரண்டுபேரை அழைத்துக் கொடுத்து நாகப் பட்டணத்துக்கு அந்த க்ஷணமே அனுப்புவித்துப்போட்டு நானும் சுவாரிபோய் சாயங்காலவேளை கிடங்கிலேவந்து உட் கார்ந்தவுடனே, துரை அழைக்கிறார் என்று அழைத்தார்கள். அப்போது துரையவர்கள் மேலே......யுடனே பேசிக்கொண்டி ருந்தார். அப்போது நானும் மெத்தையின்பேரிலே போன வுடனே என்னைக்கண்டு எழுந்துவந்து கும்பினிருக்கு இந்தமட் டுக்கும் கிராமத்து நெல்லு எத்தனை கரிசை வந்ததென்று கேட் டார். அதற்கு நான் சொன்னது: எழுபது கரிசை மட்டுக்கும் சேர்ந்ததென்று சொன்னேன். கடைக்கு வந்த நெல்லிலே நேற்றும் இன்றும் ஒன்றும் வாங்கவில்லையாவென்று கேட்டார். ஆறேழு கரிசை உண்டாயிருக்கும் என்று சொன்னேன். அதற்குத் துரை யிருந்துகொண்டு ஏகந்தரா முன்னூறு கரிசைமட்டுக்கும் சேர்ந்தால், அப்பால் நெல் சுரந்தையில்லாமல் இரு. அந்தமட்டுக்கும் மறந்துபோகா மல் எப்படி சேரப் பார்க்கவேணுமோ அப்படி சேரப் பார். அந்தமட்டுக்கும் சும்மா இருக்கத் தேவையில்லை என்று சொன் னார். அதற்கு நான் ஒரு கணக்கு சொன்னேன். குண்டுகிராமம், ஒழுகரை, முருங்கப்பாக்கம், அரியாங்குப்பம் உள்பட நூறு கரிசை, அழிசப்பாக்கம் இருபது இருபத்தைந்து, வடக்கத்து நெல் முப்பது முப்பத்துநாலு இந்தமட்டுக்கும் கட்டுடயிலே வாங்கின இருபத்தேழு முப்பது ஆக நூற்றித்தொண்ணூறு, இரு நூறு கரிசை ஆகுதே, இன்னும் நூறு கரிசையும் வரு கிறதுதாமென்று சொன்னேன். நல்லது அப்படியே செய் என்று சொல்லிவிட்டு அப்பால் காசிதாசுபுக்கன்சி இப் பரபத் திய நிமித்தியம் எழுதின காகிதத்துக்கு உத்தாரம் இரண்டும் வரவில்லையாவென்று கேட்டார். இரண்டும் வந்ததில்லை என்று சொன்னேன். எதனாலே அவர்கள் மனதிலே சற்றுத் தாங்கலு முண்டோ என்று கேட்டார். மெய்தான் தாங்கலுண்டு. சபித ரல்கான் இவர்கள் வசத்திலே வைத்த நினுசு மைலாப்பூர் கொள்ளையிலே போனது சென்னப்பட்டணத்துக் கோட்டை யிலே இருக்கிறதாய் அவர்கள் வந்து கேட்டதற்கு நீங்கள் தாமசம் பண்ணினீர்கள் என்கிறது சற்றுக் குறையுண்டு என்று சொன்னதற்கு, அது எவ்வளவு நினுசு, என்ன பெறுமென்று

கேட்டார். அது தொகைக் கட்டிருந்ததுண்டு. இப்போது ஞாபகமில்லையென்று சொன்னதற்கு, நல்லது அறிந்து சொல லென்று சொன்னார். நல்லதென்று சொல்லி இப்புறம் வரச்சே முத்தியாலுநாய்க்கன் இன்னும் கடப்பையை விட்டு வந்ததில் லையாவென்று கேட்டார். அதற்குக் காலத்தாலே திருப்பதி மார்க்கமாய் ஐம்பது குதிரையுடனே சோளங்கிபுரம் வந்து சேர்ந்தான் என்றும், நாளையதினம் ஆற்காடு வந்து சேருவா னென்றும் எழுதிவந்ததென்று சொன்னேன் என்றதற்கு வழி யிலே ஆளைப் பிடிக்கப் போகாதாவென்று கேட்டார். பிடிக்க லாம். அதற்கேத்த பலத்துடனே கூடப்போனால் என்று சொன்னதற்கு ஆற்காட்டிலே உத்தராதியார், படகு களை சுட்டுப் போட்டதற்கு நபா அன்வர்திகானுடனே பிராது பண்ணிக்கொண்டு அங்கே மனுஷரும் இருக்கிறார்களே. அன் வர்திகானுக்கும் சம்பதிராயனுக்கும் தெரியச் சொல்லச் சொல்லி நம்முடைய வக்கீலுக்கு எழுதி, அங்கே முத்தியாலு நாய்க்கனை மறித்தால் அந்தப் பணம் வருமென்று எழுதி அதற் கென்ன பிரயத்தனம் பண்ணவேணுமோ அந்தப் பிரயத்தனம் எல்லாம் பண்ணச்சொல்லிச் சொல்லியும் அதற்கு வரிசை படாதேபோனால் அவன் புறப்பட்டு வரச்சே பிடிக்கிற மார்க்கம் பண்ணச்சொல்லிச் சொல்லியும் எழுதியனுப்பச் சொன்னார். அந்தப்படிக்குப் பாக்குக் கிடங்குக்கு வந்து மதனாந்தபண்டிதனுக்கு முத்தியாலுநாய்க்கனைப் பிடிக்கிற தற்கும், அதற்கும் கூடாமற்போனால் வழியிலே ஐம்பது அறுபது குதிரைக்காரரையும் நூறு பேர் பொந்திலியர் அப் பட்டாலும் அல்லது பட்டாணியரானாலும் சேவகத்துக்குவைத் துப் பிடிக்கச் சொல்லியும், எந்த ரூபத்திலேயாகிலும், முத்தி யாலுநாய்க்கனை உத்தராதியார் பாறு படகு, சுலுப்பு கப்பல் சுட்டுப்போட்டதற்கு வெங்கடபதி நாய்க்கனையும் கொண்டு மறிக்கவும், அதன்பேரிலே ராஜஸ்ரீ அன்வர்திகானவர்களுக்கு அரசு கொடுத்திருக்கிறபடியினாலே அவர்களைக்கொண்டு முத்தி யாலுநாய்க்கனுக்கு தாக்கீதுபண்ணுவித்து உத்தராதியார் பணம் வாங்கிக்கொடுக்கச் சொல்லியும் அதற்குக் கூடாமற் போனால் இரண்டாம் பேர் அறியாமலே குதிரைச் சுவார்களை யும் நூறு பேர் மட்டுக்கும் சேவகரையும் வைத்து வழியிலே வரச்சே பிடித்து வரச் சொல்லியும் எழுதி இந்தப்படிக்கு முத் தியாலுநாய்க்கனை எந்த விதமாகிலும் பிடித்துவந்தால் உனக்

குப் பல்லக்கு சுவஸ்தியத்துக்கு சம்பளமும் கொடுத்து கும்பி னீர் உத்தியோகம் என்றென்றைக்கும் சாசுவதமாய் நடப்பிக் கிறோமென்றும், இந்த இரண்டு காரியத்திலே ஒரு காரியமாகி லும் செய்யமாட்டாமற்போனால் இந்தமட்டுக்கும் உத்தியோ கம் பறிகரிப்புதான் என்றும் அவர் சேவகருக்கும் ஐந்தாறு நாள் பிரயாசைப்படுகிறதற்கு ஒரு மாசம் சம்பளம் கொடுக்கி றோமென்று பேச்சு சொல்லியும் இல்லாவிட்டால் மூன்று நாலு மாசம் கொலுவிலே வைத்துக்கொள்ளுகிறோமென்று உடன் படிக்கைப் பண்ணச்சொல்லியும் இந்தப்படியாக மதனானந்தபண் டிதனைக்கொண்டு தானே வக்கில் சுப்பய்யனுக்குக் காகித மெழுதுவித்தும் மமுதாக்கல் பேருக்கு வடக்கத்தியார் கிவித்தியம் நபாபுக்கு முன்னாலே தேவனாம்பட்டணத்தாரன்டைக்கு மனு ஷரை அனுப்பவேணுமென்கிற காரியத்துக்கு மூத்தியாலு நாய்க்கன் தானே அவ்விடத்துக்கு வருகிறபடியினாலே ஆச்சுதே, அங்கே அவனை மறியல்பண்ணினால் உத்தாரத்தியார் பணம் வந்து சேர்ந்துப்போமென்றும் இதிலே ரொம்ப பிரயாசைப்பட்டால் அப்படிக்கு சுலபமாய் நீ நினைத்தபடிக்கு வந்துவாச்சுது. அது நீ மனதிலே வைத்து நடத்தினால் சுளுவாய்சமாய் காரியம் சாதக மாகுமென்று அதுஎப்படி உபசாரமாய்எழுதிவைக்கவேணுமோ அந்தப்படிக்கு என் காகிதமாய் எழுதுவித்து மானோஜி அப்பய் யன் கையிலே கொடுத்து ஆற்காட்டுக்குப் போய்ச் சுருக்காகச் சேர்ந்தால் பத்துபத்து ரூபாய் கொடுக்கச்சொல்லி வேறே ஒருத்தன் கையிலே எழுதிக்கொடுத்துப் பேருக்கு மூன்று ரூபாய் விழுக்காடு கொடுத்தனுப்புவித்தேன். அவர்களும் தொண்ணூறு நாழிகை போய்ச் சேருகிறோமென்று சொன் னார்கள்.

1748 ஆ மார்ச்சு மீ 7வுக்கு பிரபவ ஸு மாசி மூ 28உ வியாழக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே துரை வீட்டிற்கு வந்தவிடத் திலே துரையவர்கள் அலுவலாய் இருந்தபடியினாலே என்னைக் கண்டும் சும்மாவிருந்தார். நானும் ஒரு நாழிகை உட்கார்ந் திருந்து அப்பால் கணக்கு ரங்கப்பிள்ளை கிடங்கிலே போய் உட்கார்ந்தேன். இதற்கு முன் பாக்குக்கிடங்கிலே இருக்கச்சே

தானே துரை அழைக்கிருரென்று மதஞுந்தபண்டிதனை அழைத்துப் போஞர்கள். அங்கே போனவிடத்திலே மைலாப்பூரிலே காட்டுக்கோவிலிலே இருக்கிற ப்ரேர் அந்தோனி என்கிற பாதிரியார் பேருக்கு அந்த விடங்களிலே இருக்கிற பாளையக்காரன் லோகபந்தன் என்கிறவன் தெலுங்கு காகிதமொன்று எழுதியனுப்பினுப்போலேயும், அந்தக் காகிதத்தைப் பாதிரியார் மஹாம் துய்ப்ளேக்ஸ் அன்னடைக்கு அனுப்பினுப்போலேயும், அதைப் பிரித்துப் பார்த்துச் சொல்லச் சொல்லித் தம்முடைய கையிலே கொடுத்ததாகவும், அதைத் தாம் படித்து அப்புமுதலி துபாசித்தனத்திலே துரைக்குச் சொன்னதாகவும் அதைத் துரை எனக்கொன்றும் தெரியவில்லை மதாம் அண்டைக்குக் கொண்டுபோய்க் கொடுத்து திரான்ஸிலிட்டுப் பண்ணச்சொல்லிக் கொடுத்தனுப்பினதாகவும், அதைத் தாம் கொண்டுபோய் மஹாம் துய்ப்ளேக்குக்குக் கொடுத்துத் துரை சொன்னவயணத்தையும் சொன்ன மாத்திரத்திலே இப்போது சந்தடியாயிருக்கிறது. வைத்துப் போட்டுப்போ சந்தடி தீர்ந்த வேளையிலே அழைத்தனுப்புகிறேனென்று சொன்னதாகவும்; அந்தப்படிக்குத் தாம் வந்துவிட்டோமென்று மதஞுந்தபண்டிதர் என்னுடனே சொன்ஞர். அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்; ஆரோ ரெண்டு பேர், வெங்கடபதிநாய்க்கன் ஆக இந்த இரண்டுபேரும் முன் சென்னப்பட்டணத்திலே குத்தகை பண்ணிஞர்களென்றும், அவர்கள் சென்னப்பட்டணத்துக்கு அருகாமையிலே துலுக்கர்கள் கிராமமிருக்கிறதிலே பேர் விளங்கின கிராமங்களிலே சென்னப்பட்டணம் கலாபமாய் பிரான்சுக்காரர் வசமான நாள் முதற்கொண்டு அந்தக்கிராமங்களிலே இருக்கிஞர்கள் என்றும், அவர்கள் இரண்டுபேரும் இங்கிலீஷ் கும்பினியாருக்கு விஸ்தாரமாய்ப் பணமும் காசும் கொடுக்கவேண்டியிருக்குமென்றும், அவர்கள் சென்னப்பட்டணம் குண்டுகிராமங்களிலே இருக்கிற இரண்டு பேர் வைஷ்ணவபிராமணரைப் பிடித்துக்கொண்டு, காலிலே விலங்குப் போட்டு, காவலிலே வைத்துக்கொண்டிருக்கிஞர்களென்றும், அந்த பிராமணர்பேரிலே அவர்கள் சொல்லுகிற நேரம் என்னவென்ருல்: சென்னப்பட்டணம் முன் பிரான்சுக்காரர்கள் வாங்கிக்கொள்ளுகிறபோது இவர்கள் பிரான்சுக்காரருக்கு உளவாயிருந்து இங்கிலீஷ்காரருடைய பட்டணவேகுவெல்லாம் சொன்ஞர்களென்று நேரம் போட்டு விலங்குப்போட்டு அந்த

கிராமத்திலே வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்றும் உங்கள் நிமித்தியார்த்தமாய் அந்த ஏழை ஜனங்களாகிய இரண்டு பிராமணரும் கஸ்திப்படுவது நியாயமாவென்று அந்த இரண்டு பேரையும் பிடித்தால் அவர்கள் பேரிலே கும்பினீர் பணம் நிலுவை நிற்கிறதும், அவர்கள் வீடுகளெல்லாம் இரண்டு பேர் பிராமணரையும் விடுப்பித்துக்கொள்ளலாம். இதைத்தொட்டு உங்களுக்குக் கீர்த்தியும் பிரயோஜனமும் இரண்டுமிருக்கு தென்றும், இந்தப்படிக்கு நடப்பிக்கிறதினாலே காரியமில்லாமற் போகவில்லையென்றும், தன்னைத்தொட்டு ஆகவேண்டிய காரிய முண்டா? எழுதி அனுப்பினால் அந்தப்படிக்குச் செய்தனுப்பு விக்கிறோமென்று அந்தக் காகிதத்திலே எழுதியிருந்ததாய் மதனாந்தபண்டிதர் வந்து என்னுடனே சொன்னார்.

ஆனால் மதாம் துய்ப்ளேய்க்சு அண்டைக்கு வந்த காகிதம் அங்கே ஏன் போச்சுதென்றால், பேரன் செத்துப்போன சேதியும், இரண்டரை வருஷத்துக்கு முன்னே வெட்டிப்போட்ட மகன் சேதியும் இத்தனைநாளும் அறியாது போலேயும், இப்போதான் கேட்டாப்போலேயும், மகா துக்கத்தை அடைந் திருக்கிறாப்போலேயும் தனக்கு வந்த காகிதம்கூடப் பாராமல் துக்கத்தை அடைந்திருக்கிறாளென்று எல்லோருக்கும் தோற்ற வேணும் புருஷனுக்கும் தோற்றவேணுமென்று காரணம் பண்ணிக்கொண்டிருக்கிற சாடை எல்லோருக்கும் தெரிந்தி ருக்கிறதென்று அறிந்திருந்தாலும் புருஷன் அறியமாட்டான் என்கிற சாடை அறிந்து ஏக்கிறவளானபடியினாலே அவனுக்கு அதிலே ஒரு மலைப்புத்தோற்றவேணுமென்று தன் பெண்சாதி தன்பேரிலே பக்ஷமாயிருக்கிறாளென்று தோற்றத்தக்கதாக அனுப்புவித்தான் என்று கேட்பவர்களுக்கெல்லாம் தெரியும் ஆனால் துரைக்கு மாத்திரம் பரிச்சேதமாய்த் தெரியாது. ஆனபடியினாலே தனக்கு வந்த காகிதம் புருஷனண்டைக்கு அனுப்புவித்தாள்.

அப்பால் பனிரெண்டுமணி ஆனபடியினாலே வீட்டிற்குப் போனேன். பகலைக்குமேலாக ஒழுகரை வெளியிலே நிலங்களைப் பார்த்துச் சீக்கிரமத்துக்கு நெல் அறுவுபண்ணி கோட்டைக்கு அனுப்பச் சொல்லுவோமென்று போய் வெங்கடாசலநாய்க் கரையும் தாக்கீது பண்ணி, சாயங்காலம் ஆறு ஆறரை மணிக்

குப் பாக்குக்கிடங்குக்கு வந்தேன். இதிலே துரை மனுஷர் வந்தழைப்பித்தார்கள். துரையண்டைக்குப் போனவிடத்தி காலத்தாலே ஏன் வரவில்லை என்று கேட்டார். காலத்தாலே வந்தேன். நீங்கள் அலுவலாயிருந்தீர்கள். ஆனபடியினாலே கிடங்கிலேதானே இருந்தேன் என்று சொன்னேன். வெளி சீர்மை சேதி ஏதாகிலும் உண்டா என்று கேட்டார். பின் னொன்றும் விந்தையள் இல்லை என்று சொன்னேன். தறுவாடி ஏதாகிலும் சேதி சொன்னானென்று கேட்டார். இப்போது தான் தறுவாடி சொன்னான். இன்னும் இரண்டு மூன்று நாளைக்குள்ளாகச் சேதிவருமென்று சொல்லேன். அதன் பேரிலே பாக்குக் கிடங்குக்கு வந்தேன். மதனாந்தபண்டிதர் வந்து பகல் மூன்று மணி வேளையிலே துரையும், துரை பெண் சாதியும் தம்மை அழைப்பித்து நாம் வைத்துக்கொண்டிருந்த காகிதத்தை பிரான்ஸ்படுத்தச்சொல்லிச் சொன்னார். அப் படியேதானே பிரான்ஸ்படுத்திப்போட்டு வந்தேன் என்று மதனாந்தபண்டிதர் வந்து சொன்னார். பின்னொரு விசேஷங் களும் அதிசயங்களானதும் இல்லை.

1748 ஆ மார்ச்சு மீ 8 உ கீந்த பிரபவ வருஷ மாசி மீ ... சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையண்டைக்குப் போன விடத்திலே துரையவர்களுக்கு, சாவடி கபுறு சொன்னதின் பேரிலே, துரையவர்களிருந்துகொண்டு தானியம் எவ்வளவு கும்பினிக்கு வந்துசேர்ந்ததென்று கேட்டார். அதற்கு வடக் கத்துத் தானியம்கூட, கடையிலே வாங்கினதுங்கூட நூற்றி நாற்பத்தி ஐந்து கரிசை மட்டுக்கும் உண்டென்று சொன்னேன் அதன்பேரிலே அக்பர் சாயபும், தொஸத்தல்லிகான் பெண் சாதியும். திவான்சாயபும் வந்தவாசியிலேயிருந்து வந்ததாக கபுறுவந்து சொன்னப்போலே வாசற்படிக்குத் துரையவர்க ளுடனே எச்சரித்து, கடுதாசி வாங்கி கையெழுத்துப் போட்டு வைத்து சந்தாசாயபு மனுஷர் கையிலே கொடுத்தனுப்புவித்த பிற்பாடு துரையவர்களிருந்துகொண்டு இவர்கள் எந்நேரமும் போகிறதும் வருகிறதுமாக விருக்கிறதென்னவென்று கேட்டார் அதற்கு நான் தொஸத்தல்லிகான் பெண்சாதி இவ்விடத்திலே இருக்கிறபடியினாலேயும், அவர்களுக்கு ரொம்ப விருத்தாப்பி

யம் ஆனபடியினாலேயும், பதார்த்தம் விசேஷமாய் இருக்கிற படியினாலேயும் பெண்களும் மாப்பிள்ளைகளும் சுத்திக் கொண்டு திரிகிறார்களென்று சொன்னதற்கு, நகைத்தார். இதற்கெல்லாம் மதனாந்தபண்டிதர் இருந்துகொண்டு படே சாயபு பெண்சாதி ஆற்காட்டுக்குப் போய் வாராளென்று சொல்லுகிறாளே அந்தச்சேதி துரையுடனே சொல்லச் சொல்லத் துரைமுகமாகச் சொன்னார். அதிலே துரை, என்ன என்ன என்று கேட்டார் படேசாயபு பெண்சாதி தானும் தன் பிள்ளையும் ஒருவிசை ஆற்காட்டுக்குப்போய் தாயாரைப் பார்த்து ஒரு மாசம் நாற்பது நாளைக்குள்ளே மறுபடி வருகிறோமென்று முன்னே சொல்லிக்கொண்டதற்கு இப்போது போகக் கூடா தென்று சொன்னீர்களே, அந்தப் பேச்சுதான் சொல்ல வருகிறாள் என்று சொன்னேன். அதற்கு என்ன தாரோமென்று சொன்னார்களென்று கேட்டார். இரண்டாயிரம் ரூபாய் கொடுக்கிறோமென்றார்கள் என்று சொன்னேன், அதற்கு நீ என்ன கேட்டாய் என்று கேட்டார். நான் ஆயிரம் பொன் மோகரு கொடுக்கச் சொல்லிச் சொன்னேன் என்று சொன்னேன் அதெல்லாம் சம்மதியல்ல. இருபதினாயிரம் வராகன் கொடுத்தாலேயொழிய விடுகிறதில்லை. இப்படிப்பட்ட சொற்பமான பேச்சு வார்த்தைகளுக்கு நீ பேசவேண்டாமென்று சொன்னார். இது நிமித்தியம் அவர்கள் கையிலே மதனாந்தபண்டிதர் ஐம்பது வராகன் லஞ்சம் வாங்கிக்கொண்டபடியினாலே இந்த விசேஷங்கள் துரையவர்களுடனே எச்சரிக்கக்கூடா தென்று பாடம் ஒப்புவித்துப் போட்டோம். மறுபடி இதற்கு மேல் விசேஷங்களாய் எழுதத்தக்கன சமாசாரங்கள் ஒன்றுமில்லை.

இற்றைநாள் சாயங்காலம் துரையவர்கள் அழைத்தனுப்பினவிடத்திலே நான் போய்க் கண்டு பேசினபோது நடந்த சமாசாரம்: சந்தாசாயபு பெண்சாதிபேரிலே வரவேண்டியதும் கான்பாதூர் பேரிலே வரவேண்டியதும் அவர்கள் எப்போது கொடுப்பார்களென்று கேட்டார். அவர்களும் இனி ஒரு மாசம் இரண்டு மாசத்துக்குள்ளாக சம்மதி பண்ணிப்போடுகிறதாகச் சொல்லிக்கொண்டு வருகிறார்கள் என்று சொன்னேன். அதன்பேரிலே சந்தாசாயபு வருகிற சேதி என்ன? ஊர்ஜிதமாயிருக்குமாவென்று கேட்டார்.

முன்னாலே சொன்னது அங்கே வந்தார், இங்கே வந்தார் என்று பிறந்தது. அது அபத்தமாகி இவர்களாகத்தானே பிறப்பித்தார்கள். இப்போது ஊர்ஜிதமாகி வந்த சேதி என்னவென்றால்: சாகுவார் சாவுக்கு இரண்டு பேர் பெண்சாதிகள். அவர்கள் இரண்டு பேரும் அமுலே அல்லாமல் ராசாவினுடைய யோசனைபடிக்கு நடக்கிறதில்லையாம். ஆனபடியினாலே அந்தப்பெண்டுகள் வழியிலே கண்டுபேசி அவர்கள் அபிமானித்தார் சாவுக்குச்சொல்லி, அவர்கள் பரவசத்தின் பேரிலே திரிச்சிராப்பள்ளியும் ஆற்காடும் இவன் வசம் பண்ணிக்கொண்டு வருகிறானென்று சேதிகள் எழுதி வந்தது மெய்தானென்று சொன்னேன். அதேதது இவன் பெண்டுகள் வழியிலேயா பேசிக்கொண்டு வருகிறானென்று கேட்டார். அது நீங்கள் கேட்காமல் இல்லையா? ஐயா, சாவுராசாவுக்கு இருக்கிற ஆதிபத்தியமும் அவருடைய புத்திக்கும், குதிரை ராணுவத்துக்கும் அவருடைய சீர்மையிருக்கிற நலத்துக்கும் அவர் கணக்காய் பெண்டுகள் பேச்சைக் கேளாமல் அவருடைய சுதாபுத்தியினாலே காருபாருகள் விசாரித்து நடத்தினாரேயானால் இந்த ராச்சியமெல்லாம் அவருடைய கைவசமாகி ஒரு கொடையின் கீழே ஆளுவாரென்றும் அவர் பெண்டுகள் பேச்சைக் கேட்கிறபடியினாலே அந்தப்பெண்டுகள் அவர் புத்தியை மயக்கி, அவர் தலையை திருப்பிப் போடுகிறார்கள். அவ்விடத்துக் கவையெல்லாம் பெண்டுகள் ராசகாரியத்து மேலே நடப்பிக்கிறபடியினாலே அவனவன் சரிபோன வாக்கிலே நடப்பித்துக்கொள்ளுகிறதும் பெண்டுகளுக்கு நல்லபேச்சுசொல்லி வணங்கி நடந்துகொள்ளுகிறதும் அவர்களுக்கு ஒன்றும் தெரியாதபடியினாலே அவர்களுக்கு எப்படித்தோன்றுகிறதோ அந்தப்படிக்கு ராசாவுக்குச் சொல்லுகிறதும், ராசா அதுகளை ஒன்றையும் விசாரியாமல் பெண்டுகள் சொல்லுகிறபடிக்கு நடத்திப்போடுகிறபடியினாலே காரியங்கள் கவைகளெல்லாம் கெட்டுப்போனதாய் சரிப்போனபடிக்கே நடக்குது. ஒரு வழியாய், ஒரு அமுலாய், டிக்காய் நடவாமல் கெட்டுப்போய் அலங்கோலப்பட்டுப்போய்க் கிடக்குது என்று சொன்னேன். நான் இந்த வார்த்தை சொன்னதையெல்லாம் கேட்டு, என்னைப் பார்த்து நகைத்துச் சொன்னது: எனக்குத் தெரிந்தது என்று சொல்லிப் போட்டு அவர் பெண்சாதி இருக்கிற காம்பிறாவுக்குள்ளே

பேர்ஞர். அந்தமட்டுக்குள்ளே நான் அனுப்புவித்துக்கொண்டு பாக்குக்கிடங்குக்கு வந்தேன்.

துரை என்னைப்பார்த்து நகைத்து நீ சொன்னது எனக்குத் தெரிந்ததென்று சொல்லிப்போட்டு உள்ளே போனதும் எனக்கு என்னமாய்த் தோன்றித்தென்ருல் அவர் துரைத்தனத்துக்கு வந்து ஐந்தாறு வருஷமே பிடித்து, பெண்டுகள் பேச்சுக்கெல்லாம் தம்முடைய புத்திபடிக்கே நடத்திக்கொண்டு வந்தவர், இரண்டு மாசமாய் பெண்சாதிபேச்சைக்கேட்டு அவள் சொல்லுகிறபடிக்கு நடத்தினவிடத்திலே சென்னப்பட்டணத்துக் காரியங்களிலே அவரவர்பேரிலே அவள் சொன்னதும், அதெற்கெல்லாம் விசாரிக்கிறவிடத்திலே ஒன்றுமில்லாமற் போனதும், அதனுலே துவேஷங்கள் வந்ததும் இதல்லாமல் கண்டவனின்றவனையெல்லாம் பிடித்துக்கொண்டு வந்து வேகுகாரன், வேகுகாரனென்று பத்து பேர் இருபது பேரை அடைத்து வைக்கிறதும் அதுகளையெல்லாம் விசாரிக்கிற விடத்திலே ஒன்றுமில்லாமல் எல்லாம் அபத்தமாய்ப் போனதும் பெண்சாதி பேச்சு சொன்னபடிக்கு நடப்பித்ததற்குப் பங்கம் வருகிறதே என்கிற மானத்தினுலே விடாமல் மனம் பாதிக்கிறபடியினுலேயும், ஊரெல்லாம் துரையவர்கள், பெண்சாதி பேச்சைக்கேட்டுக்கொண்டு, அவர் புத்திமயங்கிப் போய் அநியாயமாய் வெகு ஜனங்களுக்கு உபத்திரவம் பண்ணுகிறதுமாகிற சொல் ஓங்கியிருக்கிறபடியினுலேயும் இதுகளெல்லாம் அவர்களுக்கு அனுபோகமாய். பிரத்தியக்ஷமாய்த் தலை வாங்கியிருக்கிறபடியினுலே நான் சொன்ன வார்த்தைக்கு இதை நினைத்துக்கொண்டு மனதிலே உறுதி. என்னைப்பார்த்து நகைத்து எனக்குத் தெரிந்ததென்று சொல்லிவிட்டுப் போனதைப் பார்த்தால் எனக்கு இப்படியென்று தோற்றப்பட்டது. இதல்லாமல் இவர் துரைத்தனத்துக்கு வந்த நாள் முதல் நேற்று கார்த்திகை மாசம் வரைக்கும் என்னுடனே சொல்லிக்கொண்டு வருகிறதென்னவென்ருல்: ஒவ்வொரு வேளையிலே பெண்டுகள் பிரஸ்தாபம் வருகிறதுமுண்டு. இவருடைய பெண்சாதி பிரஸ்தாபம் வருகிறது. என்னுடைய பெண்சாதி மெத்த க்ரூர புத்தியுள்ளவள். இல்லாத வார்த்தைகளைக் கட்டிச் சொல்லுகிறதும் ஒருத்தர் பேரிலே அபாண்டம் சொல்லுகிறதற்கும், ஒருத்தரை நிந்தனையாய்ச் சொல்லுகிறதற்கும்

பின்வாங்காதவள். அவள்புத்தியிலே துரைத்தனம்தான் பண்ண வேணுமென்றும், எல்லாம் தன்னுடைய வழியிலே நடக்க வேணுமென்கிற புத்தியுண்டானவளானபடியினாலே அவளை ஒரு பேச்சுக்கும் வரவொட்டாமல் அடக்கிப் போட்டுவைத்து நடத்திவருகிறேன் பார்த்தாயா? இப்படியாங்காட்டும் இருக்க வேணும் ஆண்பிள்ளையினுடைய சமத்து என்று அடிக்கடி பிரஸ்தாபம் வந்தபோதெல்லாம் சொல்லிக்கொண்டு வருகிறது மல்லாமல் அந்தப்படிக்கு நாலு ரெண்டு காரியம் அவள் விஷமப்பேச்சுச் சொன்னவிடத்திலே தட்டி நடத்தி இப்போ இரண்டு மாசமாய் அவள் புத்தியிலே அவள் பேச்சைக்கேட்டு நடத்திக்கொண்டு வருகிறபடியினாலே என்ன காலக்கேடோ, என்ன விபரீதமோ அறியேன்...... நக்கிப்பவள் பேச்சே பேச்சில்லாமல், மறுபேச்சில்லாமல் நடக்கிறபடியினாலே லோகத்திலே ஜனங்கள் சொல்லுகிற வழக்கமென்னவென்றால்: மனுஷருக்கு எப்போதும் சுபாவம் இருக்கிறது இப்படிக்கு நடவாமல் அந்தச் சுபாவம் மாறி பின்னொருவிதமாய் நடந்ததேயானால் ஒன்று மரணகாலமாகிலும் அல்லது துரைத்தனமாகிலும், யாதொரு நஷ்டமாகிலும், ஒரு மானபங்கமாகிலும், விஸ்தானப் பிரஷ்டத்துவமாகிலும் காணுமென்று சொல்லுகிறது. இவரிடத்திலே திருஷ்டாந்திரமாய்க் கண்டது. அது என்னவென்றால்: நேற்று தைமாசத்திலே தேவனாம்பட்டணத்துமேல் சண்டைக்குப் போகவேணுமென்று மூத்திரிசப்பிள்ளை சாவடியிலே போய் இறங்கின.........பதினாலு கப்பல்கள் வருகிறபோது சுலுப்பு ஒன்று சீர்மையிலேயிருந்து கபுறு கொண்டுவந்துதே அந்த சுலுப்பிலே இவ்விடத்துத் துரைத்தனத்துக்கு வேறே ஒருத்தரை நேமித்ததாகவும் 1748 ஆ-ல் இவ்விடத்துக்கு வந்து சேருகிற கப்பலிலே துரைத்தனம் வேறே வருகுதென்றும், பட்டணத்திலே யுண்டாகிய வெள்ளைக்காரர் சமஸ்தமானபேரும் சொன்னதற்கும், அவர் பதினாலுகப்பல்கள் வருகிறதென்கிற கபுறு கேட்டு வெகு உற்சாகத்துடனே வந்தவர் வந்து கடுதாசியைப் பார்த்துக்கொண்டு மறுபடிபோகச்சே அவர் மெத்த உற்சாகபங்கமாய்ப் போனதும் பார்த்தால் அதற்குச் சரியாய் இருக்கிறது. அதெப்படியென்றால்: பதினாலு கப்பல்கள் சீர்மையை விட்டுப் புறப்பட்டு மசுக்கரைக்கு வந்து சேர்ந்ததும், மசுக்கரையிலேயிருந்து இவ்

விடத்துக்கு வருகிறதென்கிற கடுதாசியைக் கண்டவுடனே இந்த வேலை இருக்கிறதற்கு அத்யந்தமான உற்சாகம் இருக்கவேணுமேயல்லாமல் அதைவிட்டுப்போட்டு, உற்சாக பங்கமாய் இருக்கக் காரியமென்னவென்றால் இத்தனையுமிருந்து உத்தியோகமாருட்டமானல் அதிலே உற்சாகபங்கமேயல்லாமல் வேறே அடமானமில்லை என்கிறதாய் எனக்குத் தோன்றிற்று அதற்கு சாக்ஷியாய் மூன்று மாசமாய் பெண்சாதி பேச்சைக் கேட்டு நடத்திக்கொண்டுவருகிறார். அதற்கு இதுவே சாதகம்.

*1748* ஆ மார்ச்சு மீ *9* உக்கு பிரபவ ஸு மாசி மீ 30 உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வளவுக்குப் போனவிடத்திலே சாவடி கபுறு சொல்லியாவறின்பேரிலே உன் மனுஷன் வேகு வந்து சொல்லிக்கொண்டுவந்த பிராமணனை மதாம் மனுஷர் பிடித்துக்கொண்டுவந்தவர்களிலே ஒருத்தனை கோட்டையிலே வைத்து, ஒருதத்னை நயினர் வீட்டிலே வைத்திருக்கிறதே அதில் கோட்டையில் வைத்திருக்கிறவன் பேர் சொன்னலவனையும் நயினர் வீட்டிலே காவலிலே இருக்கிறவனையும் விட்டுவிடச் சொல்லுகிறேனென்று சொன்னார். அந்தய்யன் பேர் எனக்குத் தெரியாது. அவசரம் கிருஷ்ணய்யர் முகாந்திரத்திலே நடப்பித்த காரியமாச்சே எனக்குப் பேர் கேட்கக் கவையில்லை. அல்லவென்று ஒருதரம் சொல்லியிருந்தாலும் விசேஷித்த வாடிக்கையில்லாததினலே ஞாபகமிராதென்று சொன்னேன். அது மெய்தான் என்று சொல்லி மதாம் பொறநஷே வந்து தங்கள் வேலைக்காரன் பரமானந்தனர் கண்டிபாளையத்திலிருக்கிறவன். ஆற்காட்டுக்கு அழைப்பித்து வியாச்சியம் தீர்த்துப்போடச்சொல்லி நபாபு அன்வர்திகான், சம்பதிராயன், மகமூதாக்கல் இவர்களுக்கும் காவெட்டி ராசா அவர்கள் ஸ்தானதிபதி சக்ரவர்த்தி சீனிவாசாச்சாரியார் அவர்களுக்கு ஒரு காகிதமும் சிபார்சாய் எழுதியனுப்பச் சொல்லிச் சொன்னர். நல்லதென்று சொன்னேன் அதற்கு முன்னேதானே மதாம் துப்ளேய்க்கு வழியிலே மதாம் பொறநஷே வந்து வெங்கடரெட்டி இங்கிலீஷ்காரருக்கு இங்கே இருந்து கபுறு காரியம் சொல்லிக்கொண்டிருக்கிறன் என்றும், பின்னையும் மாசு குருவப்பன் பணங்காசு இவன் வழியிலே

இருக்குதென்றும், பின்னையும் சிறு சம்மதிகள் சொல்லி முறுக்கியிருந்தார்கள். அதை மதாம் பொருஷே ஞாபகம் பண்ணினாள். அதன்பேரிலே முந்தாம்நாள் வெங்கடரெட்டியை அழைக்கச்சொன்னேனே ஏன் அழைக்கவில்லை என்று சொல்லி இப்போது அழைத்துவரச் சொல்லென்று சொன்னார்.

அந்நேரம் அவனும் என்னைக் கண்டுபேசவேணுமென்று வந்தானென்று எனக்குத் தோற்றினது காகிதத்திலே திருடன் என்றெழுதினது சல்லாதியின்பேரிலே விழுந்துபோச்சுதே! இப்போது அவன்வந்து ஞாபகம் பண்ணினமட்டுக்கும், அழைக்கச் சொன்னமட்டுக்கும் ஏழெட்டு நாளைக்கு முன்பாக மதாம் பொருஷே, மதாம் துய்ப்ளேய்க்குடனே வெங்கடரெட்டிப் பேரிலே சரக்குசம்மதி என்ன எடுபாடு எடுத்தாலும் சாதகமாய் வரவில்லை என்று இங்கிலீஷ்கார மனுஷர் கையிலே சரக்குவாங்கின சம்மதிக்கு சந்தேகமில்லையே. அதைச்சொல்லி இவனை மாட்டிவைக்கவேணுமென்று சொன்னசேதியும் மதாம் துய்ப்ளேய்க்கு, வெங்கடரெட்டி என்கிறவன் யாரவன் என்று விசாரித்த சம்மதியும் நான் கேள்விப்பட்டபடியினாலே இப்போது துரையண்டைக்கும் போகிற மட்டுக்கும் இவனைக் காவல் வைப்பாரென்று என்மனதுக்குத் தோற்றி, நீ பேசுகிறதைத் தைரியமாய்ப் பேசென்று சொல்லிவிட்டு அழைக்கப் போனேன். உனக்கும் முசியே பொருஷேக்கும் வந்த விவகாரமென்னவென்று கேட்டார். தனக்கும் பரமானந்தனுக்கும் நடந்த பூர்வோத்திரம் நாலுவார்த்தைச் சொல்லிக்கொண்டிருந்ததில் முசியே தெமெரோ வந்தான். வந்தவனைக் கண்டுபேசி போகச்சொல்லி, இங்கிலீஷ்காரனுக்கு இவ்விடத்திலே இருந்துகொண்டு கபுறு சொல்லிக்கொண்டு, அவர்கள் மனுஷராய் இருக்கிறதேதென்று கேட்டார். அதை நீங்கள் நன்றாய் விசாரியுங்கோள். அப்படி ஏதாகிலும் உண்டானால் என் தலையை வெட்டிப்போடென்று சொல்லச்சே, அந்தப்பேச்சு எடுத்தாப்போலே, இத்தனை உறுதியாய்ச் சொல்லவேண்டியதேது? உனக்கு அந்தக்களங்கம் இருக்கையிலே அல்லவோ சீக்கிரமத்துக்கு உனக்குத் தோன்றிற்றென்று கொண்டு போய்க் காவலிலே வைக்கச்சொன்னார். அந்தமட்டுக்கும் ஒரு சேவகனைக் கூட்டிச்சாவடியிலே கொண்டுபோய்க் காவல்வைக்கச்சொல்லிப் போட்டு நான் பாக்குக்கிடங்குக்கு வந்தேன்.

திரும்பியும் அழைத்தனுப்பி, பொன் வராகன் நானூற்றி நாற்பதுவராகனுக்கு காசிதாசு புக்கன்சி கையிலே ஒரு உண்டிகை வாங்கு, வராகனுக்கு ரூபாய் என்ன விலையாயிருக்குதோ அந்த விலைப்படிக்கு ரூபாய் கொடுத்துவிடுகிறேன் பாதிரி சேவகரெனக்குக் கொடுக்கச்சொல்லி எழுதிவாங்கிவா என்று சொன்னார். அதற்கு நான் கும்பினீர் வர்த்தகரைக் கொடுக்கச் சொன்னால் கொடுத்துவிடுகிறார்கள் என்று சொன்னதற்கு, மெய்தான், மறந்துபோனேன். அந்தப்படிக்குக் கும்பினீர் வர்த்தகர் கையிலே வாங்கிவா என்று சொன்னார், நல்லதென்று கும்பினீர் வர்த்தகருக்குச் சொல்லியனுப்பினவிடத்திலே அவர்களனைவரும் பாக்குக்கிடங்குக்குவந்தார்கள். அதன்பேரிலே அவர்களுடனே துரைக்கு உண்டிகைக் காகிதம் வேணுமென்று சொன்னதற்கு நல்லதென்று காகிதத்திலே எள்ச்சியப்பனைக் கொண்டெழுதி சங்கரய்யர், ஆதிவராகசெட்டி, அருணாசல செட்டி, ராமகிருஷ்ணசெட்டி, குழந்தைசெட்டி, ஐந்துபேரும் கையெழுத்துப்போட்டு, மேலோலை ஒன்றெழுதிக் கொடுக்க ஒரு மணியாச்சுது. அதைக் கொண்டுபோய்க் கொடுக்கவேணுமென்றுஎழுதி யிருக்கச்சே, வெங்கடேசய்யனை நாங்கள் வராகன் கேட்டால் சரசமாய்க் கொடுக்கிறதாய்க் காணவில்லை. இப்போது கேட்கிறதற்கும் இரண்டுமணி வேளையாச்சுது சமயமில்லையே! ஆகிலும் ஒரு பேச்சுக்கேட்டு நாளைக்காவது, ராத்திரிக்காவது வாருங்கோளென்று சொல்லியனுப்பிப் போகச் சொல்லிவிட்டால் நன்றாய்க்காணுமென்று சொல்லிக்கொண்டார்கள். அதன்பேரிலே வெங்கடேசய்யனை அழைத்துக்கேட்டால் நான் கொடுக்கவேண்டியதேது? வாங்கவேண்டியதேது? நான் மூன்று காரியம் சொல்லிக்கொண்டதற்கு ஒரு காரியம் விசாரித்தீர். இன்னும் இரண்டு காரியம் விசாரிக்கவில்லையென்று சண்டித்தனமாய்ப் பேசினான். நல்லது இவனைக் கொண்டுபோய் காவலில் வைக்கச்சொல்லுவோமென்று கொண்டுபோய் வைக்கச்சொன்னேன். திரும்பியும் இந்த வர்த்தகர்களுக்குச் சுத்தபத்தமில்லை. இந்தபளுவு விலையிலேதானே பிரபுவுக்கு முன் சொல்லியிருக்கிறதை வாங்கிப் போடவேணுமென்றுயோசனைபண்ணிக்கொண்டு, நாளைக்குத் துரையுடனே சொல்லுவோமென்று சொல்லிப் போகச்சொல்லி, அப்பால் நானூற்று நாற்பது வராகனுக்குப் பாதிரி சேவகரெனக்குக் கொடுக்கச்சொல்லி எழுதின உண்டிகைக் காகிதத்தையும் மேலோலையும் துரை கையிலே கொண்டுபோய்க் கொடுத்துத்

திரும்பச்சே முசியே பெடுதல்மியும் எழுதிவைத்திருந்த காகிதத்தை எனக்குக் காண்பித்து காசிதாசுபுக்கன்சி துஷ்தாவுத்தா உண்டிகை என்று கேட்டான். கும்பினீர் வர்த்தகருடையது என்று சொன்னேன். அந்தக் காகிதத்திலே காசிதாசுபுக்கன்சி துஷ்தா எழுதியிருந்ததைக் கிறுக்கி, இவ்விடத்திலே கும்பினீர் வர்த்தகர் வடக்கத்து தாண்டவராயசெட்டி அம்மையப்ப செட்டி என்று எழுதிவைத்துவிட்டு, நானும் சாப்பிட இரண்டு மணிவேளைக்கு வீட்டுக்குப் போனேன்.

*1743* ஆ மார்ச்சு மீ 10உ க்கு பிரபவ ஷு பங்குனி மீ 1உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை வீட்டுக்குப் போய் சாவடி கபுறு சொன்னேம். அதன்பேரிலே நித்தியம் கடைக்கு எழுநூறு எண்ணூறு பொதி, தொளாயிரம் பொதி, இந்த மட்டுக்கும் வருகிறபடியினாலே துரை நம்முடைய பேரிலே கோபம்பண்ணவில்லை. இல்லாவிட்டால் என்னாலே தடையானதாய்ச் சொல்லுவார். அதற்கு இடம்பாடு இல்லாமற் போச்சுது. இப்பால் ஆற்காட்டிலிருக்கிற வக்கீல் எழுதின காகிதத்திலே இங்கிலீஷ்காரர் வக்கீல் முத்தாலுநாய்க்கன், வரகப்பயன் குமாரன் பாரிசுமுல்லாதுலுக்கசுவார்கள் ஐம்பத்தைந்து, மருட்டி சுவார்கள் ஐம்பது, சேவகர் முன்னூறு ரூபாய் நாசர்சங்கு வெகுமானம் சிரொப்பா ஐந்துபேருக்கென்றும், அதிலே இரண்டுபேர் கப்பித்தான்மார்களுக்கு இரண்டு குதிரைகள் என்றும், நபாபு அன்வறுதிகான்பேருக்கு ஒரு தாக்கிதும் இவர்களுக்குச் சகாயமாயிருந்து சகல காரியங்களும் அனுகூலம் பண்ணிக்கொடுக்கச் சொல்லியும் அந்தந்த கடியார் அந்தந்தக் கோட்டைக்காரர் பாளையக்காரர்கூட தங்கள் தங்கள் சர அத்துத்தாண்ட குமுக்குக் கூட்டிக்கொண்டுபோய் விடச்சொல்லியும் இப்படியாக நாசற்சங்கு பரமானு எழுதியனுப்பினதாகவும், அந்தப்படிக்குக் கொண்டுவந்ததாகவும் அவரவர்கள் கிருஷ்ண முதற்கொண்டு ஆற்காடு பரியந்திரம் கந்தனூர் கடப்பையும் அப்புறம் மெட்டல்வார், காவேரிப்பாளையத்நார் முதலானபேர் பவுன்சு கூட்டித் தங்கள் எல்லை கடக்கக்கொண்டுவந்து விட்டுவிட அந்தப்படி ஆற்காடு வந்து சேர்ந்தார்கள். முன் மாசி மீ 27 உ புதவாரம் ஆற்காடு வந்து சேர்ந்தார்கள் என்று கபுறு எழுதிவந்தபடிக்குத் துரைக்குக்

கபுறு சொல்லிப்போட்டு நிற்கச்சே, முசியே தீலார்ஷ், துரை யண்டையிலே நின்றுன் நெல் சேதி சொன்னுன். அப்போது என்னையழைத்து தம்முடைய வீட்டுக்குச் சொன்ன ஆறு கிரிசை நெல் இன்னும் வரவில்லையென்று கோபமாய்ச் சொன்னுர். அதற்கு நான் இன்னும் விலை உசருமென்றும் பார்த்தேன். வேணுமானுல் இப்போது கிடங்கிலே பத்து காிசை நெல் நான் பணங்கொடுத்து அனுப்பினது இருக்கிறது. தாரோமென்று சொல்லிவிட்டு வந்து விட்டேன். மற்றப்படி இன்றையதினம் எழுதத்தக்க சேதி ஒன்றும் இல்லை.

. . . . . .

1748 ஆ மார்ச்சு மீ 11 உ க்கு பிரபவ ஸு பங்குனி மீ 2 உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் அழைப்பித்து, சேர்ந்தமங்கலம் கோட்டையிலே அடைத்திருக்கிற முசியே மேன்வில் முதலானபேர்களை விடவில்லையென்றும் ஆறேழுமாசமாச்சுதென்றும் கோபமாய்ச்சொன்னுர். அதற்கு நான் சொன்னது வெள்ளைக்காரர் தர்பார் நான் அப்போதைக்கப்போது பேச்சத்துபோம். கர்நாடகத்தாருடைய ராசரீகமாகையால் ஒரு உத்தாரஞ்சொல்லச் சொல்லுகிறதற்குப் பதினைந்து நாள் செல்லுகிறதுமல்லாமல் முதல்போன ஆளை உள்ளே விடுகிறதும் பிரயாசம் அவர்கள் ராச்சியத்துக் காருபாரே விசாரிக்கிறதே பிரயாசமாயிருக்கச்சே, மற்றப்பேர் காரியம் என்ன விசாரிக்கப்போகிருர்கள். அப்படிப்பட்ட இடத்திலே ரொம்ப பிரயாசைப்பட்டு ராசா அவர்களைக்கூட சந்தித்து அவர்தானே தளவாய்க்குச் சொல்லி, இந்த புதுச்சேரி பிராமணுள் வந்திருக்கிற காரியம் சீக்கிரமத்துக்குச் செய்து கொடுத்து அனுப்ப வேணுமென்று சொல்லி அந்தப்படிக்கே ஜனங்கள் துரைகள் எப்போதும் பல்லக்குக் குதிரையின்பேரிலே தடை யில்லாமல் பிரான்சுக்காரர் போகவர இருக்கத்தக்கதாக பர்வாணு கெடிக்காருக்கெல்லாம் தாக்கீதும் துரை காகிதத்துக்குப் பதில்காகிதமும் எழுதி மோகரும்பண்ணி, உக்கிராணம் வீரச்செட்டி கையிலே கொடுத்துக் கொடுக்கச்சொல்ல, அதை அவன் வைத்துக்கொண்டு, தர்மத்துக்கு எவ்வளவாகிலும் கொடுத்து வாங்கிப்போ என்று எங்கள் குமாஸ்தா குலசேகரன் வெங்கட்ட நாரணப்ஜயனுடனே சொன்னதற்கு அவன் எனக்கெழுதியனுப்பினுன். அதற்குப் பதில் உத்தாரம், அந்தப்படிக்குப்

பணம் அனுப்புவித்தேன். வெள்ளைக்காரரை விடுதலைபண்ணிக்கொண்டு வரச்சொல்லி காகிதம் எழுதியனுப்பி இருபது இருபத்தைந்து நாளாச்சுது. இன்னும்பத்துப்பதினைந்து நாளையிலே விடுதலையாகி வருவார்கள். ஒரு சேதி போய்வர ஒரு மாசம் செல்லுது. ஆனபடியினாலே அட்டிப்பட்டதென்று சொன்னேன்.

அதன்பேரிலே இப்படி தாமசமாகி வருமென்று முன்னே தானே சொன்னால் நானூறுபேர், ஐந்நூறுபேர் அனுப்பி அந்த ராச்சியத்தையும் கொள்ளையிட்டு அவர்களையும் அழைப்பித்துக்கொண்டு தீர்த்துப் போடுவேன். அப்படிச் செய்யவொட்டாமல் இவ்விடத்துக்கு இருபதின் காதவழியிலே இருக்கிறபடியினாலே சுற்றிலும் பதின்காதவழிக்கு அவர்கள் ஊர் என்றும் இப்படியெல்லாம் சொன்னதினாலே நானுமது இனி பெரிது குறைது அகப்பட்ட மனுஷரை சீக்கிரமத்துக்கு விடுதலைபண்ணுவாரென்று பார்த்துக்கொண்டிருந்தேன். இந்த மட்டுக்கும் காணோம். இனிமேல் நாம் சீக்கிரமத்துக்கு விடுதலைப்பண்ணிக்கொள்ளுகிறோமென்று அபுதுலாயிமான் பெரிய சமேதாரரை அழைக்கச் சொன்னார். அப்பால் முசியே கிலியாரை அழைப்பித்து முசியே மேன்வீலுக்கு நூறு வராகன் செலவுக்குச் சேர்ந்தமங்கலத்திற்குக் காகிதம் கொண்டுபோகிற பிராமணன் கையிலே கொடுக்கச்சொல்லிச் சொன்னார். நல்லது அனுப்புவிக்குறோமென்று சொல்லிப் போனார். முசியே மேன்வீலுக்கு தாமொரு காகிதம் எழுதிக் கொடுத்து, அந்த நூறு வராகனும் கொடுத்து அனுப்பச் சொன்னார். அந்தக் காகிதத்தை வாங்கிக்கொண்டு கிலியார் அனுப்பின நூறுவராகனும் முசியே கேர்வேனுக்குக் கொடுத்த மருந்தும் கொடுத்து, முன் போய்வந்த மாயேட பால் பிராமணனைத் தானே பயணம் பண்ணி அனுப்புவித்தேன்.

நானும் முசியே மேன்வீலுக்கு உபசாரக் காகிதமெழுதி அனுப்புவித்தேன் முசியே கோர்னேத்து பதினொரு மணிக்கு வந்து துரையுடனே, சயந்தல்லிகான்பேரிலே கோதும்பைக்கு அனுப்பின சம்மதி வரவில்லை என்று சொன்னான். அதன் பேரிலே துரை என்னையழைப்பித்து சயந்தல்லிகானுக்கு அனுப்பின ஆயிரத்திநூறு ரூபாய்க்கும் கோதும்பையாகிலும் அனுப்பச்சொல்லு: இல்லாவிடால் வாங்கின பணத்தையாகிலும்

அனுப்பச்சொல்லென்று எழுதியனுப்பச் சொன்னூர். அப்பால் ஏலத்திலே ஆற்காடு முத்தையமுதலி ஐயாயிரத்துச் சிலவாண ரூபாய்க்குச் சகலாத்து வாங்கினதற்கு நாலாயிரம் ரூபாய்க்கு அவாசாயபு சொல்லிக்கொண்ட சம்மதிக்கு அந்த ரூபாய் அவாசாயபுக்கு எழுதியனுப்பி அழைப்பித்துக்கொடென்று சொல்லி, நீ எந்தக் காரியமும் ஆலோசியத்திலே போட்டுவிடு கிறாய். முன்னேபோலே சுருசுருப்பாய்ச் சொல்லவில்லை என்று கோபமாய்ச் சொன்னூர், அதன்பேரிலே நான் புறப்பட்டுப் பாக்குக் கிடங்குக்கு வந்தேன். இதற்கு முன்பாக சாவடி நியா யத்துக்குச் சின்னதுரை வந்தாரென்றும்; அங்கே நடந்த வய ணம்: வீரு நாய்க்கன் வந்து கபுறு சொன்னது சின்ன துரை முசியே லேதுவும், முசியே தெம்ரேனும், முசியே தெலார்ஷும் வந்து உட்கார்ந்து கொம்மணமுதலியும் முசியே தொலோராமும் பிறகே போய்வர தலையைத் திருப்பி நடப்பித்தகாரியம் நாச்சோமன் தொளாயிரக்கோடி ஐந்துவராகனுக்கொண்டு ஏழு வராக னுக விற்றாய். கிராமங்கள், நாங்கள் குடிகளுக்குக் குத்தகைக் கொடுத்து அனுப்பினால் அவர்களுக்குத் தாக்கலாக்க வொட்டா மல் உன் மைத்துனனைவைத்து இங்கிலீஷ்காரர் கப்பல் வந்த தென்று ஒரு காபுறு உண்டாக்கி அந்தசந்துகட்டிலே அனுப்பி சரிபோனபடிக்கு விட்டுக் கொள்ளையிட்டுக் கொண்டுபோனாய். இதெல்லாம் ஊரிலே உண்டான சரக்குகளை வஞ்சம் வாங்கிக் கொண்டு அம்மையப்பிள்ளையைச் சீட்டுக் கொடுக்கச்சொல்லி விட்டதுகளிலே சாவடியார் எங்களுக்குச் சீட்டு வரவில்லை என்று கேட்டதற்கு அதற்கு முன் வந்த சீட்டுக்கூடக் கிழித்து வாங்கிப்போட்டுக்கொண்டேயார். இதல்லாமல், நெல்லு அவரவர்களை சரிபோனபடிக்கு விற்றுக்கொள்ளச் சொல்லி யும் உத்தாரம் கொடுத்து எட்டு மரக்கால் விற்ற நெல்லை ஐந்து மரக்கால் விற்கச்சொன்னயாம்.

பஞ்சு யாரையும் கொள்ள வாரோமென்று இருபத்தி ரெண்டு விழுக்காடு எழுதியனுப்பி எடுத்துக்கொள்ளச் சொல்லி, உங்கள் துரைக்குச் சொல்லி, தலையைத் திருப்பிப் போட்டு நடத்தினாய் என்றும் நூற்றுக்கு ஒன்று விற்ற சரக் குக்கெல்லாம் தரகு வாங்கிக்கொண்டயாமென்றும் இதற்கெல் லாம் கோபாலகிருஷ்ணய்யன்கூட உடந்தை என்றாப்போலே யும் படித்துக் காண்பித்து, பின்னையும் இந்தச் சாடை யிலேதான் அதுவும் கூடப் படித்துக் காண்பித்து, நீ

இந்தப்படியெல்லாம் கும்பினீர் துரோகம்பண்ணினதென்ன வென்று கேட்டார்களாம். அதற்கு கொம்மணமுதலி சொன்னது: இதெல்லாம் பொய். அங்கேயிருந்து சொன்னவர்கள் என் முகமுகமாய் அவர்களை அழைப்பித்துக் கேட்டு என் பேரிலே சுமத்தினுல் அப்போது மெய் என்று ஒத்துக் கொள்ளுவேன். மறுபடி முகமுகமாய் அழைப்பித்துக் கேட்டால் எல்லாம் பொய்யாயிருக்குமென்று சொன்னுனும். அவர்களங்கேயிருந்து வரதப்பசெட்டி கிராமத்தார் பங்காரு என்கிற தேவடியாள், யாகப்பன் என்கிறவன் நெல்லுக் கிடங்கிலே இருந்தவன் கூட எழுதி, அவரவர்கள் கையெழுத்துப் போட்டு அனுப்பினுர்களென்று சொல்லி, அப்பாலே அங்கே இருந்தவர்களை எல்லாம் அப்பாலே போகச் சொல்லி மூன்று பேர் வெள்ளைக்காரரும் கோன்சேல்பண்ணி, கொம்மணமுதலியை இரண்டாயிரம் வராகன் அபராதமும் கொடுக்கச்சொல்லி, தீர்த்தெழுதி, கையெழுத்துப்போட்டு, அப்பாலே கொம்மணமுதலி முதலானபேரனைவரும் அழைப்பித்து, அப்பால் கொம்மணமுதலியைப் பார்த்து, சின்னதுரை, நீ செய்த கேரத்துக்கு நியாயத்திலே மனம்பொறுத்து, உனக்கு இடப்பட்ட ஆக்கினையை மன்னிப்புப்பண்ணி அபராதம் இரண்டாயிரம் வராகன் கொடுக்கச் சொல்லித் தீர்த்தார்கள். அந்தப்படிக்குத் தீர்த்துப்போட்டு, நீ வீட்டுக்குப் போகலாம். அதற்கு முன்னே விட்டார்களென்று சொல்லிவிட்டு, சின்ன துரை எழுந்துபோனுர். பின்னையும் சாவடி பாபத்திலே இரண்டு மூன்று திருட்டுப்போட்டுக் கடன்காரர்கள் சம்மதியை அடிக்கிறவனை அடித்துக் காவல் வைக்கச்சொல்லுகிறவர்களை வைக்கச்சொல்லிவிட்டுப் போனுர்கள்.

இத்தனை நாள் கொம்மணமுதலி பேச்சுத்திராமல் கிடந்து இப்போது முசியே தெப்ரேன் சென்னப்பட்டணத்திலிருந்து முந்தாம்நாள் வந்ததும், இன்றைக்குத் தீர்ந்ததும் என்ன சானடயென்றுல்: முன்னே தான் முசியே துலோராம் பேரிலேயும் கொம்மணமுதலிபேரிலேயும் ரொம்ப சொன்னதற்கும் ஒன்றுமில்லாமற்போய் வெளுத்துப்போச்சுதே அதன்பேரிலே நாம் அறியாமல் பெண்சாதிப் பேச்சைக்கேட்டு கொம்மணமுதலியைக் காவல்வைத்தமட்டுக்கும் எதையாகிலும் உட்கார்ந்தானென்றும்

நின்றானென்றும் இப்படி அபாண்டமாய் எடுத்துச்சேர்த்து தெப்ரேனை சென்னப்பட்டணத்துக்கு அனுப்பி அவனங்கேயிருந்து இந்தக் காட்டையும் மேட்டையும் கட்டி அபாண்டமாய்ச் சேர்த்து எழுதியனுப்பி, அவன் கடைசியிலே வந்தபிற்பாடு அவனைக்கொண்டு சாவடியிலே போடச்சொல்லிக் கட்டு கட்டுவிட்டார்கள். சின்ன துரை மெய் கட்ட வொழி. ஆனபடியினாலே மூசியே தெப்ரேன், கூப்பிட்டபடிக்கும் அவன் என்னதைச் சொன்னால் அந்தப்படிக்கெல்லாம் ஒத்துக்கொண்டு, நமக்கேன் துரையினுடைய விருத்தம் பங்கமானால் ஆகட்டும் என்று யோசனை பண்ணிக்கொண்டு இரண்டாயிரம் வராகன் அபராதமாய்த் தீர்த்துப் போட்டதேயல்லாமல் சின்ன துரை நியாயமானபடிக்குக் கண்டித்தானேயானால் எவர்கள் அவனைக் காவல் வைத்தார்களோ அவர்கள்பேரிலே நேரம் சுமத்தினதெல்லாம் அதற்குப் பதினாயிரம் விதத்திலே நேரம் சுமத்தினதெல்லாம் நியாயமுண்டு. இவர்கள் நாளையிலே கும்பினீர் துரோகமான காரியம் ஒன்றுமில்லை. மூசியே தெப்ரேமேலி நாளையிலே பட்டணத்திலுண்டான சரக்கெல்லாம் நூற்றுக்கு முப்பது சிறிது, இருபத்தைந்து சிறிது, இருபது சிறிது, கடைசியிலே பதினேழரை மட்டுக்கும் வாங்கிக்கொண்டு இதற்குத் துபாசிக்கு நூற்றுக்கு இரண்டரைவிழுக்காடுவெள்ளைக்காரன் அறிந்து வாங்கினது, வெள்ளைக்காரன் அறியாமல் வாங்கினது அதுகள் வேறே. இப்படி இருபது லக்ஷம், முப்பது லக்ஷம், நாற்பது லக்ஷமட்டுக்கும் விட்டுவிட்டதற்கு ஒரு பிராதுமில்லாமல் ஏலத்திலே விட்ட சரக்கு வாங்கினதற்கும், விற்ற சரக்குகளுக்கும் நூற்றுக்கு ஒரு வராகன் தரகு வாங்கினதும், நேரம் எண்பித்து இரண்டாயிரம் வராகன் வாங்கினால் முன் அறியாதவர்களுக்கு நேரமுண்டாமோ தெரியாது. அப்படிப்பட்ட கும்பினீர் துரோகம் செய்ததற்கு ஒரு நேரமுமில்லாமல் ஏலத்தில் சரக்கு வாங்கி விற்றதற்கும் தரகு நூற்றுக்கு ஒன்று வாங்கினதற்கு நேரம்வந்து சாவடியிலே தீர்ந்ததென்றால் பார்க்கிற பேருக்கும் ஆச்சரியம், கேட்கிற பேருக்கும் ஆச்சரியமாய் இருக்குது. ஆனால் அவரவர் செய்த பாவத்துக்குத் தக்கதாய் சுவாமி ஆக்கினையிட்டாரென்று சொல்லவேணுமேயல்லாமல், செய்த குற்றத்தைத்தொட்டு வந்த அபராதம் என்றும் காவலென்றும் தோற்றவில்லை. என் புத்திக்கு அப்படி இருக்குது. அவரவருக்கு எப்படி தோற்றியிருக்குதோ நானறியேன்

கொம்பனைமுதலியோடு கூட கோபாலகிருஷ்ணய்யனும்கூட என்று படித்துச் சொன்னவர்கள், கோபாலகிருஷ்ணய்யன் எங்கே? அவனுமென்றுகூட கேட்டவர்களல்ல. இதிலேதெரிந்தது, சகல நியாயமும் இனிமேல் முசியே துலோராம் என்ன பேசுவாரோ, என்ன நடக்குமோ அறியவேண்டியது.

ராசாவானவர்க்ள் பாளையத்திலிருந்து வந்திருந்த சிங்கள ஜாதியார் முதலான பேர்களுக்கு வெகுமதிபண்ணி சேஷமராசாவுக்கு முன் கோட்டை சுப்பய்யன் அனுப்பியிருந்த தசாவதாரப்பெட்டி. தந்தபூகச்சிக் கடைவேலை செய்த பெட்டியைத் திறக்கச்சே பனிரெண்டு மணியடிக்கிறது. உள்ளேயெல்லாம் வேலைப்பாடாய்ச் செய்து அறையறையாய் வைத்திருக்கிற பெட்டி நூறு வராகனுகிலும் விலையல்ல, அப்படி மெத்த கோர்த்தியாகவும் பார்க்கிறவர்களுக்குச் சந்தோஷம் பிறக்கத்தக்கதாக இருக்கப்பட்ட பெட்டி. அந்தப் பெட்டியை மைசூர், சீரங்கப்பட்டணம் ராசாவுக்கு அனுப்புவிக்கவேணுமென்று வைத்திருந்தேன். எனக்கு ஆண்பிள்ளை பிறந்ததென்று சேதி கேட்டாப்போலே சேஷமராசா, பிராமணுளுக்கெல்லாம் பூதானம்பண்ணி, சர்க்காரைப்பங்கிட்டு, கோவில்களிலே யெல்லாம் விஸ்தாரமாய் விளக்குகள் வைப்பித்து வெகு சம்பிரமங்கள்பண்ணி, அன்றையதினம் இரண்டொரு பிராமணுளுக்குப் பூதானம்கூடப்பண்ணி இந்த சந்தோஷத்தைவிட வேறே சந்தோஷம் இல்லையென்று சொன்னவர்களுக்குக் கால் காணி நிலம் மானியம் கொடுத்து, பின்னையும் அநேகவிதமாய்ச் சந்தோஷத்துடனே பண்டிகை பட்டணமெல்லாம் கொண்டாடுவித்தபடியினாலே இவருக்குப் பதில் காகிதமெழுதி ஆயி கையெழுத்து வாங்கவேணுமென்று சிவ ராமசாஸ்திரி எழுந்திருக்கச்சே விளக்கிலே பத்து பூ விடாமல் விழுந்ததைக்கண்டு அங்கே இருந்தவர்களெல்லாரும் மெத்த ஆச்சரியப்பட்டு இந்த ஸ்நேகம் மகா அபிவிருத்தியாய் உத்தரோத்தரம் மேன்மேலாய் நடக்குமென்று பெரியவர்களெல்லாரும் சொன்னதிலேயும், என் மனதுக்கும் அப்படியே தோற்றிற்று. அப்பால் நான் கையெழுத்துப்போடச்சே கோட்டையிலே மணியடித்துப் பீரங்கிப் போட்டபடியினாலே மிகுதியும் சந்தோஷமாய் இந்தப் பெட்டியை இவருக்கு அனுப்பவேணுமென்று சேஷமராசாவுக்கு அந்தப் பெட்டியை அனுப்புவித்தேன்.

நேச்சனூர் என்கிற கிராமத்திலே இந்த வருஷம் எடுக்கிற பணத்திலே அங்கேதானே வைத்துக்கொண்டு வார்க்க சார்க்கம் கொடுத்து ஏரிகளைக் கட்டுவித்து ஆற்றுக்காலையும் பத்திரமாய்க் கட்டுவித்து, கிராமம் விஸ்தாரமாய்ச் சாகுபடி பண்ணுவித்து, குடிகளுக்குக் கரம்பு நிலத்துக்குள்ளே, கொஞ்சம் தீர்வையிலே ஒரு வருஷத்துக்குக் கொடுத்து நிலப்பாழில்லாமல் பயிரேற்றுவிக்கச் சொல்லியும், இப்படியாகக் கந்தப் பிள்ளைக்கு எழுதியனுப்புவித்தேன். ராசாவானவர்கள் மனுஷரும் அனுப்புவித்துக்கொண்டு, ராத்திரிக்கு நம்முடைய சாவடியிலே போகிறோமென்று பயணம் அனுப்புவித்துக்கொண்டு போனார்கள். வரதய்யன் கிராமத்திலே கார் பயிரிட்ட நிலப் பகுதி பத்துவராகன் தீர்வைக்கொடுக்கவேண்டியதற்கு அரைவாசி ஐந்துவராகன் வாங்கிக்கொள்ளச் சொல்லி, கந்தப்பிள்ளை பேருக்கு எழுதியனுப்புவித்தேன். அவரும் அனுப்புவித்துக் கொண்டு பயணம் சாகிப்போனார்கள். பெட்டி திறந்து காண்பிக்கிறதற்கு சிட்டிபட்டன்விட்டுப் பிள்ளையாண்டானையும் கூடக் கூட்டியனுப்புவித்தேன். இந்தப்படிக்கு அவர்கள் நாளைக்காலத்தாலே துவாதசிபாரணை நம்முடைய அக்கிரகாரத்திலே பண்ணி, அப்பால் போகிறோமென்று போனார்கள்.

*1748* ஆ மார்ச்சு மீ *12* உக்கு பிரபவ ஸ்ரீ பங்குனி மீ 3 உ அங்காரகவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரைவீட்டுக்குப்போனவிடத்திலே முசியே எலியாசு உடப்பிறந்தான் மகன் மனுவேல் சுவாக்கி என்கிறவன் வந்து துரையுடனே பேசிக்கொண்டிருக்கச்சே துரை அழைத்தனுப்புவித்துச் சொன்னது. சம்புதாசு கையிலே மூன்று வருஷம் கந்தோபுலு என்கிற பெரிய கிறேக்கு சாதியான பங்காளத்திலே கொண்டுபோய் விற்கிறோமென்று முன் திரிச்சிராபள்ளி, தஞ்சாவூரிலே கொள்ளையிட்டுவந்த ரத்தின நகைகளைத் துலுக்கர்கையிலேயிருந்து சம்புதாசு கைப்பற்றிருந்த நகைகளுக்குள்ளே இரண்டு லக்ஷம் ரூபா பிது. ரத்தின நகைகளைக்கொண்டுபோன பங்களாபோகிற இங்கிலீஷ் கப்பலை பிரான்சுக்காரர் பிடித்து அந்த உடைமையைத் தங்கள் கப்பலிலே ஏற்றிக்கொண்டதாகவும், அந்தக் கப்பல் முழுகிப் போனதினாலே அந்த உடைமை சேதப்பட்டுப் போச்சுதென்று

சொல்லிக்கொண்டிருந்த சம்மதி அந்த இங்கிலீஷ் கப்பலிலே அவரவர் உடைமை பெட்டிகளுடனே தானே இருந்தாப் போலேயும் பங்காளத்து நபாபு ஒரு தாக்கீது பண்ணியிருக் கிறதென்னவென்றால்: பிராஞ்சுக்காரருக்கும் இங்கிலீஷ்கார ருக்கும் சீர்மையிலே சண்டையானால் அவ்விடத்துக்கே யெல் லாம் இவ்விடத்துக்குக் கவை இல்லையென்றும் முன்னே கட்டாவி இங்கிலீஷ்காரர், பிரான்சுக்காரருடைய பங்களா, அரம்ஸாம் கப்பலை இரண்டு மூன்று பிடித்ததை மறுபடி வாங்கிக் கொடுத்தபடியினாலே இந்த உடைமையும் மறுபடி அவரவரு டைய தினுசுப்படிக்கு ஒப்புவித்துப்போட்டதாகவும், கந்தோ புலு என்கிற கிறேக்கு சம்புதாசு ரத்தினநகை அமானித மாய்க் கொண்டுபோய் விற்று அனுப்புகிறோமென்று போன வன் தன்னுடைமை வந்தாலும் போச்சுதென்று எண்பித்து சம்புதாசுக்கு பிரான்சுக்காரர் கப்பல் அக்ஷய வருஷம் ஆடி மாசத்திலே லபூர்தோனே இஸ்காதருலே வந்த கப்பல் ஒரு கப்பல் போய்ப்பிடித்த இங்கிலீஷ்கப்பலைப் பிடித்து அந்தக் கப்பல் கெங்கையிலே மூழ்கிப்போச்சு அதிலே பாகநாகவாக சம்புதாசுக்கு மூழ்கிபோச்சுதென்று எழுதிப்போட்டு அந்த உடைமையிலே ஒரு கமலம்பட்டை ரத்தினமிழைத்ததை கொசாம்பேருடைய அரண்மனைக்காரனுக்கு முப்பத்தையாயிரம் ரூபாய்க்கு விற்றதாகவும், அந்த அரண்மனைக்காரன் நமக்கு சுதாபாதுனபாவுக்கு லக்ஷம் ரூபாய்க்கு விற்றதாகவும் தானும் மூவாயிரத்தைந்நூறு ரூபாயிலே ஒரு வைர மோதிரமும், பிள்ளையொன்று அதற்கு உசந்த விலையிலே ஒன்றும் இப்படி யாகத்தான் வாங்கினேனென்றும், பின்னையும் சிறிது நகை களைக் குதுவைவைத்துப் பட்டு நூல் மூதலான சரக்குகள் வாங்கி இங்கிலீஷ் கப்பல்களிலே ஏற்றியனுப்பினேனென்றும் இது முதலாகிய வயணங்கள் எல்லாம் . துரைக்கு முசியே எலி யாசு மருமகன் மனுவேல் சுவாக்கி என்கிறவன் சொன்ன பேச் சாம்படியே துரை எனக்குச் சொல்லி சம்புதாசுக்கு எழுதி யனுப்பென்று சொன்னார். அதற்கு நான் அப்படி செய்யப் போகாது. கந்தோபுலு என்கிறவன் சரக்கு, பேர்விளங்கன் அரண்மனைக்காரன் கப்பலிலே வந்து பழவேர்க்காட்டிலே இறங்கியிருக்கிறதைக் விடவேண்டாமென்று அந்த அரண் மனைக்காரனுக்கு ஒரு காகிதமும் எழுதியனுப்பினால் கந்தோ புலு என்கிறவனும் பழவேர்க்காட்டிலேயல்லவா இறங்கி

யிருக்கிறான். அவனையும் மெள்ள பிடித்து இவ்விடத்துக்குக் கொண்டுவந்து அப்பால் சம்புகாசுக்கு எழுதியனுப்பினால் அவனும் இவ்விடத்துக்கு வருவான். அப்பால் எப்படியுண்டோ அப்படி நடப்பித்துக்கொள்ளலாமென்று சொன்னேன். மெய் தானென்று மனுவேல் சுவாக்கியுடனேயும் ஒருத்தருடனேயும் சொல்லவேண்டாம் என்று சொல்லி கோசாலுதானையும் அழைப்பித்து அவனைக்கொண்டு பழவேர்க்காட்டிலே யிருக்கிற அரண்மனைக்காரனுக்குச் சரக்கு விடவேண்டாமென்று எழுதுவித்து அனுப்பிவிட்டு, தாமும் சென்னபட்டணத்துக்கு அவனைப்பிடிக்கத்தக்கதாக எழுதியனுப்பினார். முசியே துலோராம் வந்து கொம்மண முதலிபேருக்கு எழுதின அபராதத்தை மாப்புப்பண்ணச் சொல்லிச் சொன்னவிதமாய்ச் சொன்னதற்குத் துரை சம்மதிக்காதபடியினாலே வீட்டுக்கு அனுப்புவித்துக்கொண்டு போனார்.

1748 ஆ மார்ச்சு மீ 13வுக்கு பிரபவ ளு பங்குனி மீ 4வ புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே முசியே துய்ப்ளேக்ஸ் பெண்சாதி மகன் முசியே வேன்சான் என்கிறவன் செங்குசெலாம் அந்த வட்டங்களிலேபோய் மூன்றும் வருஷம் வெட்டுப்பட்டு போனவனுக்கும் மகளாகிய முசியே போர்னேவால் பெண்சாதிக்கும் ஒப்பீஸ் கப்பூய்ஸ் கோவிலிலே படித்தபடியினாலே துரையும் அவர் பெண்சாதி முதலானபேர் போனார்கள். அங்கே ஒப்பீஸ் தீர்ந்துவர பத்து மணி அடித்தபடியினாலே நானும் துரையண்டைக்குப் போகாமல் பாக்குக் கிடங்கிலேதானே யிருந்து, மைசூர் ராசதானிப் பட்டணமாகிய சீரங்கப்பட்டணத்திலே யிருந்து வந்த கொண்டராசா சேதிகேட்டதற்கு அங்கே சிறிது பணம் ஒப்புக்கொண்டு சாவுகாரர்கள் முன்பாகத் தீர்த்துக்கொண்டு புறப்படுகிறோமென்ற சேதிக்கு முன்னதாக என்னை அழைப்புவித்தார்கள். நான் புறப்பட்டுப் பதினெட்டு பத்தொன்பது நாளாச்சுது என்று சொல்லி, நீங்கள் உண்டிகைபண்ணி அனுப்பின மனுஷர், நான் சீரங்கப்பட்டணம் விட்டு இரண்டு நாள் பயணம் வந்தவுடனே கண்டேன். ஆனபடியினாலே அந்தப் பணம் கொண்டுபோய் முதலிடுவார்கள். மற்றப் பணம் தான் ஏறக்குறைய வரும் என்று அவர்களும்

அந்தமட்டுக்கும் சேர்ந்தமங்கலம் வந்து சேர்ந்திருப்பார்கள் அந்தக் கபுறும் நாளை, நாளையன்றையிலே வருமென்று சொன்னார். ஆனபடியினாலே இப்பவும் இரண்டு சக்ஷுத்திரம் வெள்ளைக்கு உண்டிகைபண்ணி வெங்கடகிருஷ்ணய்யங்காரையும், சிந்தாமணி அய்யனையும் இரண்டு பேரையும் பயணம்பண்ணி அவர்களுக்கு முப்பது ரூபாய்க் கொடுத்து, எட்டாம் நாள் சேர்ந்தால் வெகுமானம் பண்ணுகிறோமென்று சொல்லி அனுப்புவித்தேன். அவர்களும் நாளை அருணோதயமாக இரண்டு நாழிகை என்றச்சே புறப்பட்டுப் போகிறோமென்று அனுப்புவித்துக்கொண்டு போனார்கள்.

ஆற்காட்டு வக்கீல் சுப்பய்யன் காகிதம் வந்தது. அதிலே முத்தியாலுநாய்க்கன் சேதி எழுதிவந்த வயணம். அசரத்து அன்வற்திகானுக்கு பதினொரு அசரபியும், சம்பதிராயனுக்கு ஐந்து மோகருவும், உசேன் சாயபுக்கு ஐந்து மோகருவும், சயந்தல்லிகானுக்கு இருபத்தொரு ரூபாயும் இந்தப்படியாக நதிர் வைத்துக் கண்டானென்றும், அவர்களுடனே ஆயிரம் குதிரை சிப்பந்தி வைத்துக்கொள்ளுகிறோமென்றும், உங்களுக்கு நசர்கூட கொடுக்கிறோமென்றும் பேசினதாகவும், அதற்கெல்லாம் நாளையதினம் சொல்லுகிறோமென்று சொன்னதாகவும், அப்பால் ஒரு மணக்கு ஈயம் அழைப்பித்துக்கொண்டு வாரப் பிச்சு முஸ்தீது பண்ணுகிறதாகவும், செஞ்சி மார்க்கமாய்ப் போகிறதாகவும் இருக்கிறது. வந்தவாசி மார்க்கமாய்ப் போகிறதாயிருக்கவில்லை என்றும், அப்பால் உத்தராதியார் சம்மதியாக, பாறு படகு கட்டுப்போட்ட சம்மதி முத்தியாலு நாய்க்கனை மறிக்கவேணுமென்று யோசனைபண்ணுகிறதற்கு நாசற்சங்கு காகிதம் கொண்டுவந்திருக்கிறபடியினாலே நபாபு மறியல் தளையல் சம்மதியானென்றும், பிடிக்கிற பேச்சுக்கு இரண்டொரு சமேதாரர்களைக் கண்டுபேசினதற்கு அவரவர்கள் பிறகே வந்திருக்கிற சமேதாரர்களைக்கொண்டு தானே பிடித்து ஒப்புவிக்கத்தக்கதாகப் பண்ணுகிறோமென்று சொன்னதாகவும், அதுகளுக்கு டீக்காய் யோசனைபண்ணி நாளையதினம் எழுதியனுப்புகிறோமென்றும், முத்தியாலு நாய்க்கன் இன்னநாள் புறப்படுகிறோமென்று சேதி டீக்காய் அறிந்து நாளை நன்றையிலே எழுதியனுப்புகிறோமென்று அன்வர்த்திகான் வேலூருக்குப் போயிருக்கிறான், அவன் வந்

தால் முத்தியாலுநாய்க்கனை மறியல் தளையல் பேச்சுக்கு இணம்பண்ணிப் பார்க்கலாமென்றும், உசேன்சாயபு அந்தப் பக்ஷமாய் இருக்கிருனென்றும், பேசுகிருனென்றும் மழுதாக்கல் உத்தராதியார் சம்மதிக்கு மறியல் தளையல் என்று நடத்துகிற தற்கு உசேன்சாயபு அவர்கள் பாரிசமாயிருக்கிறபடியினலே தன்னைத்தொட்டு ஆகவேண்டியதில்லையென்று கை கழுவிவிட்டதாகவும், திருவதி சேஷாசலசெட்டி முத்தியாலு நாய்க்கனுக்கு ரொம்ப அனுகூலமாய் இருக்கிருனென்றும், இதுமுதலான சேதிகள் எழுதி வந்தது ராத்திரி ஒன்பது மணியானபடியினலே நாளைக்காலமே பிரபுவினுடனே சொல்லத்தக்கதாகத் தீர்ந்தது. மற்றபடி வேறே அதிசயமில்லை.

*1748* ஆ மார்ச்சு மூ 14உக்கு பிரபவ ஞு பங்குனி மீ 5 உ குருவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டுக்கு வந்து குவர்னதோருடனே நேற்றைறயதினம் ஆற்காட்டிலிருந்து வக்கீல் சுப்பய்யன் எழுதின காகிதசேதி எழுதினேனே, அந்தச் சேதியாம்படியே துரையுடனே சொன்னதற்கு முத்தியாலு நாய்க்கனைப்பிடிப்பதற்கு இத்தனை ஸாதகம்பண்ணுகிறதற்கு அவனைத்தொட்டு ஆகிற காரியமென்ன? ஆனபடியினலே அதற்கு இத்தனை செலவுபண்ணத் தேவையில்லை. இரண்டு நாள் முந்திவர அவன் புறப்படுகிற சேதிமாத்திரம் எழுதியனுப்பச்சொல்லி வக்கீலுக்கு எழுது என்று சொன்னர். அந்தப்படிக்கு அப்போதானே எழுதியனுப்புவிட்டேன். காமதகனம்வோலிபண்டிகை மருட்டியார்கள் எந்தூறுது பண்டிகைக் கொண்டாடுவார்கள் என்று சொன்னதற்கு அபுதுலாயிமானும், சிறிது சிப்பாய்களும் உத்தாரம் கேட்கிருர்கள் என்று சொன்னதற்கு மகராசராய் விளையாடச்சொல்லென்று உத்தாரம் கொடுத்தார். மறுபடி பனிரெண்டுமணி மட்டுக்கும் துரை வீட்டிலிருந்து வீட்டுக்குப்போனேன். மற்றப்படி எழுதத்தக்கதில்லை.

எப்போதும் நடக்கிற ஓர் திஞேன்சுபடிக்குத்தான்! விந்தையள் ஒன்றுமில்லை.

இற்றைநாள் சாயங்காலம் மாயே சொடா பிராமணர் காகிதம் கொண்டுவந்தார்கள். அவர்கள் சொன்ன சேதி: மாயேயிக்கு மகுக்கரையிலே யிருந்து ஒரு கப்பல் வந்தது. அது வந்த மறுநாள் பின்னெரு கப்பல் கண்டது. கண்டவுடனே சீர்மைக் காகிதங்கள்கூட, தங்கள் காகிதங்கள்கூடக் கொடுத்து எங்களைப் பயணம் சுருக்கிலே பதினொரு நாளைக்கெல்லாம் போனால் பின்னை சற்று விசேஷித்து உங்களுக்கு வெகுமானம் பண்ணுகிறோமென்று போகச் சொன்னார்கள். புறப்பட்டு இப்புறம் வந்தவுடனே கப்பல் கொண்டுவந்து வைத்துப் பிடித்துத் திரளாய்ப் பீரங்கிப் போட்டார்கள். முன் கப்பல்காரன் வந்தவன் சொன்னானென்று அவ்விடத்தியார் பேசியிருந்தது. இந்தக் கப்பலுடனே பதினைந்து கப்பல்கூடப் புறப்பட்டதாகவும், அதுவும் இன்று நாளையிலே முன்னும் பின்னுமாய் வந்து சேருமென்று வெள்ளைக்காரர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள் என்று சொல்லி, துரை அவ்விடத்துச் சேதி என்னவென்று கேட்டார். மேலே எழுதியபடிக்குச் சொன்னோம். இதைப் பட்டணத்திலுண்டான ஜனங்களுடனே யெல்லாம் சொல்லச் சொன்னாரென்று பிராமணர்கள் சொன்னார்கள்.

1748 ஆ மார்ச்சு மீ 15 உக்த பிரபவ ஞு பங்குனி மீ 6வ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் நேற்றுராத்திரி வந்த சீர்மைக் காகிதம் பார்த்துக்கொண்டிருந்து மாயே காகிதத்துக்குப் பதில் உத்தாரம் எழுதிக்கொண்டிருந்தபடியினாலே விசேஷித்த சமாசாரங்கள் ஒன்றும் நடக்கவில்லை.

இற்றைநாள் சாயங்காலம் மாயே காகிதம் கொடுத்துப் பத்து பேர் சேவகரையும் கூட்டி அனுப்பச்சொல்லி அனுப்புவித்தார். அந்தப்படிக்கு பத்து பேர் சேவகரையும் கூட்டி, கடுதாசியும் கொடுத்து மாயேக்கு அனுப்புவித்தேன். அதன் பேரிலே காரைக்காலுக்கு ஒரு காகிதம் அனுப்பச்சொல்லிச் சொல்லிக்கொடுத்தனுப்புவித்தார். அதையும் கொடுத்தனுப்புவித்தேன். அந்தக் காகிதத்தைச் சிதம்பரத்து டபாலிலே கொடுத்தனுப்பச்சொல்லி இரண்டுபேர் சேவகர்

கையிலே கொடுத்தனுப்புவித்தேன். அதற்குப் பிற்பாடு என்னையழைத்தனுப்புவித்தார். நான் போய் சலாம்பண்ணி நின்றேன். கடைக்கு எத்தனைபொதி வந்ததென்று கேட்டார் நானும் டாப்பு எடுத்துப் படித்துக்காண்பித்தேன். நீ என்ன சற்றே பின்வாங்கியிருக்கிறாப்போலேயிருக்கிறது. உன்னைக் காணுகிறதே ப்ரயாசமாயிருக்குதென்று கேட்டார். காலத் தாலே உங்களண்டைக்கு வந்தேன். நீங்கள் அலுவலாயிருந்தீர் கள் என்று நான் கிடங்கிலேபோய்க் காரியம்பார்த்துக்கொண் டிருந்தேன் என்று சொன்னேன். அதன்பேரிலே துரையிருந்து கொண்டு, நீ மனதிலே சற்றுக் குறையாய்த் திரியுறாப்போலே காணுதென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது. நீங்கள் என்பேரிலே வெகுசாய்ப் பக்ஷம் வைத்து நடப்பித்துக்கொண்டு வந்தீர்கள். அதனால் மனம் பொறுமல் எந்நேரமும் அவரவர் கள் உங்கள் காதிலே தப்புந்தாரும் சொல்லிக்கொண்டிருக்கி றதே வேலையாயிருக்கிறது. அதற்கு நீங்கள் என்னைக்கேட் கிறதே வேலையாயிருக்கிறது; நானும் உங்களுடனே உத்தாரத் துக்குப் பதில் உத்தாரம்சொல்லுகிறதே வேலையாயிருக்கிறதே தவிர வேறே பின்னொரு காரியங்கள் காணேன். இதனாலே வந்து சொல்லுகிறதற்கு நீங்கள் உத்தரம் சொல்லுகிறதே துஷ்த்தரமாயிருக்கிறது. என்னத்துக்கு வருத்தம் தோண வேணுமென்று வந்து உங்களுடனே சொல்லுகிறவான் மனதுக் குள்ளே தோற்றப்பட்டிருக்கிறது. இந்த விடத்துக்கு கிருஸ்து வருக்குள்ளே ஒருவர் இருக்கவேணுமென்று வந்து உங்களு டனே சொல்லுகிறவனாகிலும் சந்தோஷமாயிருக்கவேணுமே என்றுதான் நானும் சற்றே பின்வாங்கியிருந்தால் நீங்களும் இந்த விடத்துக்கு வேறே ஒருவரை வைத்துக் காரியம் பார்ப் பீர்கள் என்றுதான் என் மனதிலே தோன்றிச் சாடையாய் இருக்கிறேனென்று சொன்னேன். அதற்கு அவர் சொன்னது என்னை ஒரு மடையனாய்ப் பார்த்து உத்தாரம் சொன்னாயே யல் லாமல் பின்னொருவிதமாய்ச் சொன்னவனல்லவென்று சொன் னார்.

1748 ஆ மார்ச்சு மீ 16 உக்கு பிரபவ ஸு பங்குனி மீ 7 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவர்னதோர் வீட்டிற்குப் போய் துரையவர்களைக்கண்டு சலாம் பண்ணினவிடத்திலே என்னை

யழைத்து மாயேக்கு கப்பல் வந்த சேதியும் அறிவாயாயென்று கேட்டார். மெய்தான் அறிவேன். கப்பல் வந்ததென்கிறதும். சீர்மைக்காகிதம் வந்ததென்று மறிவேன். அல்லாமல் அதிலே வந்த சமாசாரம் இன்னதென்று அறியேன், நானும் இரண்டு வெள்ளைக்காரர் வீட்டிற்குப் போகவர இருந்தால் சமாசாரம் தெரியும் வீட்டிலேயிருந்து புறப்படுகிறதும், உம்முடைய வீட்டிற்கு வருகிறதும், அப்பால் பாக்குக்கிடங்குக்கும் போகவிருக்கிறதுமாகச்சே நீ சொன்னால் தெரியும், இல்லாவிட்டால் சேதியறியத்தக்கதில்லை என்று சொன்னேன். கொர்மாந்தி என்கிற ராச்சியம் பிடிக்கவேணுமென்று இங்கிலீஷ்காரர் ஐம்பது சண்டைக்கப்பல்களுடனே போனார்கள். தேகவசதி அவர்களுக்குத் தப்பியிருக்கிறபடியினாலே காற்று ஒன்று வந்தடித்ததினாலே நாற்பத்தாறு கப்பல்கள் முழுகிப்போச்சுது. நான்கு கப்பல்கள் தப்பித்தது. பதினையாயிரம் பேர்கள் செத்துப்போனார்கள். மற்றப்பேர்கள் தப்பிப்பிழைத்தார்களென்று சொல்லி, இதல்லாமல் இங்கிலீஷ்காரருக்கு நஷ்டகாலம். அல்லாவிட்டால் இப்படியெல்லாம் நடக்கத்தக்கதில்லை. இதல்லாமல் ஒலாந்தாக்காரரும் எங்கள் பாரிசமாய் இங்கிலீஷ்காரருடனே சண்டைக்கு தெக்ளாரிட்டார்கள். ஆனபடியினாலே இந்தியாவிலே சென்னப்பட்டணம் போனதுடனே அவர்களைக் கரைதீர்ந்துபோய்விட்டது. எரோப்பாவிலே ஒலாந்தாக்காரர் சண்டை தெக்ளாரிட்டபடியினாலே அவ்விடத்திலேயும் அப்படித்தானென்று சொன்னார். அதற்கென்ன சந்தேகமா? இருபது கப்பலை வைத்துக்கொண்டு உங்கள் பட்டணத்து வழி வரப்பயந்திருக்கிற சாடையிலே தெரியாதா? உங்கள் யோசனை எப்படியோ! எங்கள் யோசனைப்படிக்கு இங்கிலீஷ்காரருக்கு உச்சிராய காலம்போய்க் கஷ்டகாலம் வந்தது. இனிமேல் இந்தியாவிலே சிறிது நாளைக்கு இங்கிலீஷ்காரர் கோந்து வாருண்டாவதென்று தீர்த்துக் கொண்டிருக்கிறோம். அதற்குத் திருஷ்டாந்திரம், நீங்கள்தானே போகிறீர்கள் சென்னப்பட்டணத்துப்போலே பட்டணம் சண்டையில்லாமல், பூசலில்லாமல் கஞ்சாதின்றவன், லாகிரிவஸ்துவைச் சாப்பிட்டவன் குடித்துவிட்டாப்போலே கொடுத்துவிட்டான். பங்காளம் கோந்துவார் நூறு லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் அவரவருக்குக் கடன் கொடுக்கவேணும். அதனாலே அது எடுத்துப்போமென்று சொன்னீர்களா? இப்போது தேவனாம்பட்டணம்

தான் வைகாசி மாதத்திலேயிருக்கிறபடியினாலே நிர்வாகத்துக்குள்ளே இல்லையென்றாப்போலே தோற்றுது. நல்ல காலமானால் இப்படிப்பட்ட காரியம் நடக்கமாட்டாதென்று சொன்னதற்கு மெய்தானென்று ஒத்துக்கொண்டார்.

பிறகு முசியே துய்க்கேன் தண்டியிலேயிருந்து வந்தான் அவனுடனே பேசியிருக்கச்சே சுப்பை அழைத்துச் சென்னப்பட்டணத்துக்குக் குண்டுகிராமம் குடிகள் பணம் கொடுத்த சடையப்பமுதலி எடுத்துக்கொண்டு கும்பினீருக்குச் செலுத்தாமலும், திரும்பியும் குடிகளையும் காவல் வைத்தானும் என்று கேட்டார். கொடுத்தாலும் கொடாவிட்டாலும் சடையப்ப முதலி பிணையிருக்கிறபடியினாலே கும்பினீருக்குக் கொடுக்க வேண்டியதாகச்சே. அப்படியிருக்கச்சே கொடுத்த பணத்தைக் கொடாமலிருப்பானா? அந்தக் குடிகள் சொல்லுகிறதெல்லாம் பொய். பணத்தை எடுத்துக்கொண்டு இப்படிப்பட்ட ஆவட்டத்தைப் பண்ணுகிறானென்று சொன்னான். அதன் பேரிலே குடிகளைக் கண்டிக்கச்சொல்லி, முசியே பெடுதல்மிக்கு காகிதம் எழுதியனுப்புகிறேனென்று சொன்னார் அப்போது என்னைப் பார்த்து; ரங்கப்பா, நான் பெத்தாலிக்குப் போகிறேன்; நீயும் வரவேணுமே என்று கேட்டு ஆசிராயிருக்கிறேனென்று சொன்னார். அதற்கு நகைத்து உத்தாரம் சொல்லுகிறதற்குள்ளே ஐந்து பேர் இங்கிலீஷ்காரர் தேவனாம்பட்டணத்திலிருந்து ஓடிவந்தார்கள். அவர்களை முசியே லத்தூர் இவ்விடத்துக்குக் கூட்டியனுப்பினாரென்று கபுறு வந்து சொன்னார்கள். அதன்பேரிலே இங்கினி மேலழைத்து துபாசித்தனம் பண்ணச் சொல்லி, அவர்களை ஏன் வந்தீர்களென்று கேட்டதற்கு அவ்விடத்திலே உபத்திரவம் ரொம்ப அதைத்தொட்டு ஓடிவந்தோமென்று சொன்னாப்போலே, ரங்கப்புள்ளே என்று என்னையழைத்து, இங்கிலீஷ்காரர்கள் ஓடிவந்த ஜாடையைப் பார்த்தாயாவென்று கேட்டார். இவர்கள் எட்டு பேர் ஓடிவந்தவர்கள். ஐந்துபேர் இவ்விடத்துக்கு வந்தார்கள். மற்ற மூன்று பேர் புறப்பட்டவர்கள் எங்கே போனார்களோ! இவர்களைக் கேட்டு அறியவேணுமென்று சொன்னேன். அதன் பேரிலே இங்கினிமேலுடனே எத்தனைபேர் புறப்பட்டார்களென்று கேளென்றார். அவன் கேட்டமாத்திரத்திலே நான் சொன்னபடிக்கே, எட்டுபேர் புறப்பட்டோம். ஐந்துபேர்

இங்கே வந்தோம். மூன்றுபேர் துலுக்கன் சீர்மையிலே போனார்களென்று சொன்னார்கள். அதன்பேரிலே துரை நகைத்து, உனக்கு எப்படி சேதி வந்ததென்றுகேட்டார். உங்கள் தயவிருக்கச்சே சேதி வருகுதென்றேன். அதிசயமாவென்று அதற்குச் சொல்லத்தக்க சாடையாய்ச் சொல்லி இவர்களை ஒஸ்பித்தாலுக்கு அனுப்புவித்து, சாயங்காலம் அழைப்பித்து அவ்விடத்துப் பூர்வோத்திரம் கேட்டால் விசிதமாய்ச்சொல்லுவார்களென்று சொன்னதற்கு மெய்தானென்று இசுக்கூன்மேலுடனே சொல்லி அவர்களை ஒஸ்பித்தாலுக்குக் கூட்டி அனுப்பச்சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கு அவர்களை ஒஸ்பித்தாலுக்கு அனுப்பினார்கள்.

அப்பால், சாவடிகபுறு நெல்லுபொதி தொளாயிரத்தைம்பது பொதி வந்ததென்று சொல்லிப்போட்டு அதன்பேரிலே மூசியே கோர்னேத்து வந்தார். அவர் துரையுடனே சொன்னதென்னவென்றால்: மூசியே லூக்காவுக்குக்கொடுத்த வராகனுக்கு இந்தமட்டுக்கும் சரக்கு வந்து சேராமற்போச்சுது. ரங்கப்பிள்ளையுடனே சொல்லி அவனுக்குக் காகிதம் எழுதியனுப்புவித்து, அவன் சரக்குக்கொண்டிருக்கிறானா? அதுவந்து சேருமா? அல்லவென்று அவன் அதை எடுத்துக்கொண்டு எங்கேயாகிலும் ஓடிப்போகிறதா இருக்கிறதா அந்தவயணம் எழுதியனுப்பித் தெரிந்துகொள்ள வேணுமென்று நபாபு சயந்தல்லிகானுக்குக் கொடுத்த சம்மதிக்கு இன்னும் கோதம்பை வரவில்லையென்று இப்படியாகச் சொன்னான். அதற்குத் துரையிருந்துகொண்டு என்னைப் பார்த்து, சயந்தல்லிகானுக்கு எழுதியனுப்புவித்து ஆயிரத்திநூறு ரூபாய்க்கும் கோதம்பை சீக்கிரமத்துக்கு அழைப்பிக்கச் சொல்லிச் சொன்னார். அதற்கு நான் சொன்னது: மூந்தாம்நாள் தான் காகிதம் எழுதியனுப்புவித்திருக்கிறோமே, அது உத்தரவு வருகிறதறிந்துகொண்டு பிற்பாடு அதற்கேத்தபடி எழுதியனுப்புகிறேனென்று சொன்னேன். அதற்குப் பிற்பாடு மூசியே கோர்னேத்துடனே லூக்கா சம்மதிக்கு நான் உங்கள் வீட்டுக்கு வந்து கண்டுபேசுகிறேன் என்று சொல்லி வீட்டுக்கு வந்தேன்.

இற்றைநாள் மத்தியானம், முன் அக்ஷய ௵ மார்கழி ௴ 25௳, 26௳ இவ்விடத்திலிருந்து சிதம்பரத்துக்குப் போய்வரு

கிறேமென்றுபோன கோபாலசுவாமி நமக்கு, சுக்கிர திசையில், சனி புத்தியிலே சரீரத்துக்கு யாதொருலம்படைகாணுமென் கிறபடியினாலேயும்' பட்டணத்துக்கும் யாதொரு பொல்லாப்பு கள் காணுமென்றும் இதை மனதிலே வைத்துக்கொண்டு அங்கேயிருந்தபடியே, அப்புறம் ராமேசுரம், திருநெல்வேலி அந்த வட்டாரங்களிலே போய் அலைந்து திரிந்து திருநெல் வேலியிலே அவர் அண்ணன், கும்பினிருசிகிராமம் விற்றுப் போட்டதை மீருகுலாம் உசேனண்டையிருக்கிற கிருஷ்ணப் பின்ளையண்டையிலே அனுசரித்து அவ்விடத்துக்காரியங்க ளெல்லாம் அவரைத் தொட்டு அனுகூலம் பண்ணிக்கொண்டு சீவனத்துக்கு இடமில்லாமல் அலைச்சல்பட்டுக்கொண்டு இருக் கச்சே இவ்விடத்திலே நடக்கிற கபுறு அப்போதைக்கப் போது விசாரித்துக்கொண்டிருந்து சுவாமியினுடைய கிருபா கடாக்ஷத்தினாலே இவ்விடத்துக்காரியங்களெல்லாம் அனுகூல மாயிருக்கிறபடியினாலே மறுபடி அங்கேயிருந்து புறப்பட்டு இற்றைநாள் மத்தியானம் நாம் அப்பியங்கஸ்நானம் பண் ணிக்கொள்ளப்போகச்சே வந்து கண்டார். அவர் சொன்ன உத்தரவு என்னவென்றால்: என்னுடைய அக்கியானத்தினாலே யும், அதிபிரஷ்டத்தனத்தினாலேயும், எனக்குக் கஷ்டகால மானபடியினாலேயும் அங்கங்கே அலைந்து திரிந்து மெத்தவும் கஷ்டப்பட்டு மறுபடி உங்கள் தரிசனம் பிராப்தியிருந்தபடியி னாலே வந்து சேர்ந்தேன். நான் செய்த குற்றமெல்லாம் மனம் பொறுத்துக்கொண்டு காப்பாற்றவேணுமென்று ரொம் பவும் உபசாரமாய்ச் சொன்னார். நாம் சொன்னது. உம் முடையபேரிலே நமக்கென்ன கோபமிருக்கிறது. நீர் நமக் கென்ன குற்றஞ்செய்தீர். நீர் வந்ததினாலே நஷ்டமு மில்லை. போனதினாலே ஆதாயமும் இல்லை என்று உம் முடைய கவைக்குப் போனீர், வந்தீர் என்று சொல்லத்தக் கன விசேஷமாய்ச் சொன்னோம். அந்தமட்டிலே அனுப்புவித் துக்கொண்டு வீட்டுக்குப்போனார்.

1748 ஆ. மார்ச்சு மீ 17 உ க்கு பிரபவ ஸ்ரீ பங்குனி மீ 8 உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையண்டைக்குப் போன விடத்திலே இன்றைக்கு ஆதிவாரமானபடியினாலே பின்னேன்

றும் விசேஷமான சங்கதிகள் ஒன்றுமில்லை. பத்துமணிக்கு சர போம்வந்து துரையுடனே சொன்னதென்னவென்றால்: மாடா ருல் பரிச்சேதம் அகப்படவில்லை. வேலைக்குக் கல்லுவந்து சேருகிறது மெத்த பிரயாசமாயிருக்கிறது. சாவடியாருக்குச் சொல்லியனுப்பி, தாக்கீதுபண்ணி, மாடு விஸ்தாரமாய்வந்து கல்லு எடுக்கத்தக்கதாகப் பண்ணிவைக்கவேணுமென்று சொல்லிக்கொண்டான். அதன்பேரிலே துரை என்னையழைத்து ரங்கப்பா இன்றுமுதற்கொண்டு இந்தக்காரியமெல்லாம் நீ விசாரித்து வேலைக்குத் தாக்ஷியில்லாமல் கல்லு வந்து சேரத் தக்கதாக மாட்டுக்காரருக்குத் தாக்கீதுபண்ணி அந்த வேலையை விசாரித்துக்கோ என்று சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தமட்டிலே அனுப்புவித்துக்கொண்டு பாக்குக் கிடங்குக்கு வந்தோம். அதன்பேரிலே சரபோம் என்னண்டைக்கு வந்து ஊரெல்லாம் என்மேல் பகையாயிருக்கிறார்கள். என்பேரிலே அவர்கள் துரையுடனே தப்புந்தாருமாய் விகாந்தம் பண்ண வேணுமென்று என்னென்ன சொல்லிக்கொண்டார்களோ தெரியாது. என்னைத்தொட்டு ஒரு குற்றமும் இல்லையென்று சொன்னான். அதற்கு நான் சொன்னது: உம்முடைய பேரிலே விகாதமாய் ஒருத்தர் சொல்லவேண்டியதென்னவிருக்கிறது? அதனாலே உமக்கேன் தாக்ஷியென்றும் பின்னையும் உபசாரமாய்ச் சொல்லிப் போகச்சொன்னோம்.

இற்றைநாள் சாயங்காலம் சீரங்கப்பட்டணத்துக்குப் போன வெங்கட்டநாரயர் காகிதம் வந்த வயணம் என்னவென்றால்: அவ்விடத்துக் காரியங்களெல்லாம் அனுகூலம் பண்ணிக்கொண்டு சேர்ந்தமங்கலத்திலிருக்கிற வெள்ளைக் காரரை விடுதலைபண்ணத்தக்கதாக பர்வாணாவும் வாங்கிக் கொண்டு அவ்விடத்து கெங்காதரேசுவரன் கோயில் தர்மச் செலவுடனே சேர்ந்ததற்கும் எம்மாத்திரமோ ஒப்புக்கொண்டு அதற்கு முன் சீரங்கப்பட்டணத்திலிருந்து சம்புதாசு பிறகாலே ராமேஸ்வரத்துக்குப் போய் மறுபடி இவ்விடத்துக்கு வந் திருந்து போன கோபால்தாசு காலம்பண்ணிப்போய் அவன் தம்பி இப்போதிருக்கிற பவானிதாசு என்கிற குசராத்திகாரனுக்குச் சொல்லிவைத்து, அவன் மனுஷனைக் கூட அழைத்துக் கொண்டு தாம் வந்து சேலத்துக்கு வந்ததாகவும் அங்கேயிருந்து சேர்ந்தமங்கலத்துக்குப் போய் வெள்ளைக்காரரை விடு

வித்துக்கொண்டு வருகிறேமென்கிற சமாசாரம் எழுதியனுப்பு வித்தான். இந்தச் சேதியை துரையுடனே சொல்லுவோமென்று யோசனைபண்ணினேன். இப்போது சொல்லுகிறது என் புத்திக்கு யுக்தமாய்க் காணவில்லை. அது எதனாலே என்றால் ஒரு வேளை சேலத்தில் வந்திருக்கிற வெங்கடநாரணய்யன் சேர்ந்தமங்கலத்துக்குப் போய் பர்வானா கொடுத்து வெள்ளைக்காரரை விடுப்பித்துக்கொள்ளுகிறபோது என்ன தகராறு நடக்குமோ, அவர்கள் என்ன புரண்டு பேசுகிறார்களோ, எப்படி நடக்குமோ தெரியாதே. இவர் போய் முற்றிலும் அறிந்து அவர்களையும் விடுதலைபண்ணிக்கொண்டு இப்பேர்ப்பட்டசேதிக்குச் சமாசாரம் வந்ததுண்டானால், அந்த க்ஷணமே துரையுடனே சொல்லுவோமென்கிறதாய் யோசனைபண்ணி, துரையுடனே சொல்லவில்லை.

இற்றைநாள் சாயங்காலம் எட்டு மணிக்கு ஆற்காட்டிலிருந்து வக்கீல் சுப்பையன் காகிதம் வந்ததிலே என்னவென்றால்: முத்தியாலுநாய்க்கன் நபாபு அவர்களுடனேயும் சொல்லத்தக்கன பேருடனே சொல்லிக்கொண்டு ஆதிவாரம் நான் பயணம் புறப்படுகிறவனாக இருக்கிறேனென்கிறதாய் எழுதிவந்தது. இதிலே ராத்திரி ஒன்பதுமணி ஆனபடியினாலே இந்தக் கபுறு நாளைக்காலமே துரையுடனே சொல்லுவோமென்று வீட்டுக்கு வந்தேன் பின்னொன்றும் விநோதைகளானதில்லை. இற்றைநாள் நம்முடைய சத்திரமாகிய திருவேங்கடபுரத்திலே தர்மராசா கோவிலிலே நெருப்பு மிதிக்கிற திருநாள் நடந்தது.

1748 ஆ மார்ச்சு மூ 18உ க்கு பிரபவ ஷூ பங்குனி மீ 9உ திங்கட்கிழமை

இற்றைநாள் காலத்தாலே துரையண்டைக்குப்போய் முத்தியாலு நாய்க்கன் ஆற்காட்டிலே நபாபு கையிலே அனுப்பு வித்துக்கொண்டு சனியன்று சாயங்காலம் பயணம் புறப்படுகிறதாய் இருக்கிறது. செஞ்சிமார்க்கமாய் வருகிறானென்கிற சேதி சுக்கிரவாரநாள் ஆற்காட்டிலிருந்து எழுதின கடுதாசி நேற்று ராத்திரி வந்து சேர்ந்ததென்று சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு அவ்விடத்திலே வந்திருந்த

அபுதுலாயிமாலை அழைத்து நூறு குதிரைக்காரரைப்பயணம் பண்ணி, குண்டுமருந்து இதுகளெல்லாம் கொண்டு முஸ்தீது பண்ணி இன்றையராத்திரி புறப்படத்தக்கதாக முஸ்தீதுபண்ணுவிக்கச்சொல்லி என்னையழைத்து உம்முடைய மனுஷரையும் வெளியிலே எந்தப்பட்டுக்கும் வைக்கவேணுமோ அந்தமட்டுக்கும் அஞ்சல்வைத்து அடிக்கடி சமாசாரம் அழைப்பிக்கச் சொல்லிச்சொன்னர். அந்தக்ஷணமே மலையப்பனை அழைப்பித்து, முப்பது சேவகரை அழைப்பித்துப் பயணம்சொல்லி, முப்பது பேருக்கு முப்பது பொன்கொடுத்து சேத்துப்பட்டுமட்டுக்கும் அஞ்சல்வைத்து அடிக்கடி சமாசாரம் கொண்டுவரச் சொல்லிப் பயணம்பண்ணி அனுப்பிவிட்டோம்.

இதன்பிறகு முசியே கோர்னேத்து வந்து துரையுடனே சொன்னதென்னவென்றல்: ஆற்காட்டு முத்தையன் சகலாத்து ஏலத்திலே கொண்டது நாலாயிரம் ரூபாய். அவாய்சாயபை சேர்ந்து பொன் சம்மதி ரங்கப்பனுக்கு ரசீது எழுதிக் கொடுத்து இப்போ கும்பினிருக்கு கடையிலே கொள்ளுகிற நெல்லு சம்மதியிலே கணக்கு ஒத்துக்கொள்ளுகிறேனென்று சொன்னன். அதற்குத் துரையிருந்துகொண்டு முத்தையன் பேரிலே வரவேண்டியதெல்லாம் என்னைச்சேர்த்துக்கொள்ளச் சொல்லியும், அந்தப் பணத்துக்குக் கடையிலே அளக்கிற நெல்லு விலையிலே கணக்குச் சேர்த்துக்கொள்ளச்சொல்லி ஏகத்துக்கு ரசீது எழுதிக்கொடுக்கச்சொன்னர். அதற்கு நானிருந்துகொண்டு அந்த நாலாயிரம் ரூபாய் மாத்திரமே நாம் ஒத்துக்கொள்ளுகிறது. மற்றப்பணம் எனக்குக் கவையில்லை என்று சொன்னேன். அந்தப்பணம் என்ன வரமாட்டாதா என்று கேட்டார். அது நாலுநாள் ஏறத்தாழ வரும். அதற்குக் கடையிலே ரொக்கம் கொடுத்து நெல்லு கொள்ளுகிற சம்மதிக்கும் சரிப்படாதென்று சொன்னேன். ஆனல் இவர்களைக் கண்டித்துக் குறைப் பணத்தையும் வாங்கிச் செலுத்துவித்துப் போடென்று சொன்னர். அதன் பேரிலே முத்தையமுதலிக்கும் அவன் கூட்டாளி வந்தவாசி அய்யன் பெருமாள், குப்புசெட்டி இவர்களுக்குக் கண்டிப்பாய்ச் சொல்லி, பணத்தை சீக்கிரமத்துக்குக் கொண்டுவந்து சம்மதி பண்ணச்சொல்லி, சேவகனைக்கொண்டு சொல்லியனுப்பிவிபுத்

தோம். அப்பால் பாக்குக்கிடங்குக்கு வந்து சனவரி பண்டிகை சம்மதி கும்பினீர் வர்த்தகர் கொடுக்கவேண்டிய ரூபாய்க்கு ஆயிரம் வராகன் நக்ஷத்திர வராகன் கொண்டுபோய் முசியே கோர்னேந்து கையிலே வைத்து மூவாயிரத்திநானூறு ரூபாய் கேட்டவிடத்திலே அம்மாத்திரம் அகப்படாதென்று அவன் மூவாயிரத்தி இருநூறு ரூபாய்க் கொடுத்தான். அத்துடனே குறை ரூபாயும் சேகரித்து நாலாயிரம் ரூபாயும் சாயங்காலம் செலுத்திப்போடுவோமென்று வைத்துவைத்தோம். பிறகு பணிரெண்டு மணி அடித்தபடியினாலே கும்பினீர் கிடங் குக்குப் போய் அவ்விடத்திலே வர்த்தகர் கொண்டிருந்த இங்கிலீஷ் சட்டம் மெல்லீசு சகலாத்திலே சிறிதுகளெல் லாம் பூச்சி அடித்துப் போட்டதையெல்லாம் ஏலம் போட் டார்கள். அவ்விடத்திலே நானுங்கூடவிருந்து அந்தச் சக்லாத்திலே நானும் கொஞ்சங்கொஞ்சம் வாங்கினேன். இதெல்லாம் நான் போகிறதற்கு முன்னாலேதானே அகலம் படச் சாரிசெல்லாம் நாலு மாசத்துத் தவணைக்கு ஏலம்போட் டுத் தீர்த்தார்கள். மெல்லீசு சகலாத்தும் நாலு மாசத்துத் தவ ணைக்குத்தான் ஏலம் போட்டுத் தீர்த்தார்கள். ஆனால், மெல் லீசு சகலாத்துக்கு கிசத்துக்கு ஆதாயம் வீசம் வராகன் வந்த தும், சாரிசிக்கி சிப்பம் ஒன்றுக்கு அரை வராகன் வந்ததும், அரையே அரிக்கால் வராகன் வந்ததும் இப்படியாக இந்தமட் டுக்கும் ஆதாயத்துடனே விற்றுத் தீர்ந்துபோச்சுது. இதை இன்னும் வைத்திருந்து விற்றால் விசேஷித்துக் கூடிவரும். பொதுஉடைமையானபடியினாலே பார்க்கிறதற்குத் திக்கெல் லாம் பூச்சிப்பிடித்துக் கெட்டுப்போச்சுது.

இற்றைநாள் பகலைக்குமேல் நாலுமணிக்குப் புறப்பட்டு சார்வொதுக்கிறவிடத்துக்குப்போய் இவ்விடத்திலே சார் சிக்கிரமத்துக்கு முஸ்தீது பண்ணச்சொல்லித் திட்டம் பண் ணிப்போட்டு ஆறுமணிக்கு பாக்குக்கிடங்குக்கு வந்தேன். அப்போது ஆற்காட்டிலேயிருந்து வக்கீல் சுப்பய்யன் எழுதி யனுப்பின காகிதம் வந்தது. அந்தக் காகிதத்திலே எழுதிவந்த வயணம் என்னவென்றால்; முத்தாலுநாய்க்கன் ஆற்காட் டிலே நபாபுஙகையிலே அனுப்புவித்துக்கொண்டு அவனுக்கு மற்றது நபாபு இருபத்தைந்து குதிரையும், ஐம்பதுபேர் சேவகரையும் கூட்டினார். அத்துடனே அவன் பிறகாலே கூட

வந்திருந்த குதிரைகளும் மனுவும் ஏகத்துக்கு நூற்றி என்பது குதிரையும், நாநூறு பேர் சேவகரும் கூடப் புறப்பட்டு. திருவழி சேஷாசல செட்டியார் தம்முடைய சத்திரத்திலே விருந்துபண்ணுவித்து, அவ்விடத்திலே விருந்து சாப்பிட்டு சனியன்று சாயங்காலம் பயணம் புறப்பட்டு முன்னே வருகிறோமென்கிற செஞ்சி வழியை விட்டுப்போட்டு, பின்னையும் தெற்கோத்தி திருவண்ணாமலை மார்க்கமாய்ப் புறப்பட்டு தேவனாம்பட்டணத்துக்கு நேர் மேற்கே வந்து, அந்த மார்க்கமாய்ப் புறப்பட்டுப் பயணம் சாகிப்போனார்களென்கிற சேதி எழுதிவந்தது. இந்தச் சேதியைப் போய் துரையவர்களுடனே சொன்னேன், அதற்கவர் சொன்னது: போனால்போகட்டும்; அவனைத் தொட்டு நமக்கு ஆகவேண்டியதென்னவென்று சொன்னார். அந்தமட்டிலே மலையப்பனை அழைத்தனுப்புவித்து காலமே அனுப்பின முப்பது பேர் சேவகரையும் அழைப்பித்துக்கொள்ளச் சொல்லச்சொல்லி அனுப்பிவிட்டோம்.

இற்றைநாள் சாயங்காலம் ஏழு மணிக்கு வர்த்தகர் சம்மதி, சனவரி பண்டிகை சம்மந்தம் நாலாயிரம் ரூபாயுங் கொண்டுபோய் துரை கணக்கு ரங்கப்பிள்ளை கையிலே முடவிட்டுப் போட்டோம்.

இற்றைநாள் துரையவர்கள் பேர் பண்டிகையானபடியினாலே காலத்தாலே துரையவர்கள் கோவிலுக்குப் போய் பூசை கேட்கச்சே, வாடிக்கைப்படிக்கு மூன்று தரம் பீரங்கிப் போட்டான். அப்புறம் துரை வீட்டுக்கு வந்தபிற்பாடு நானும் தருவாடி முதலானபேரனைவரும் போய் எலுமிச்சம்பழம் கொடுத்துச் சந்தித்தோம். அவரும் இன்றையதினம் கேவலம் உற்சாகமாயிருக்கையில் அதெப்படியென்றால் முகத்திலே சந்தோஷம் காண்பிக்கவில்லை. அப்பால் அவர்கள் சாப்பாட்டின் போரிலே இறங்கினார்கள். பாக்குக் கிடங்குக்கு வந்து பனிரெண்டு மணி மட்டுக்கும் இருந்து அப்பால் வீட்டுக்குப் போனேன். மற்றப்படி வேறே அதிசயமான சேதி இல்லை. பகலைக்கு மேலாக நாலரை மணிக்குச் சேர்ந்தமங்கலத்திலிருந்து வெங்கடநாரணய்யன் ஓலை வந்தது, அதிலே எழுதியிருந்த சேதி என்னவென்றால்: சேர்ந்தமங்கலம் வந்து சேர்ந்தேன்.

அந்த இரண்டாயிரம் ரூபாயும் சீக்கிரமத்துக்கு வந்தால் விடுதலையாம். வெள்ளைக்காரருக்கு இன்னமொரு ஊழியக்காரன், பிறகே வருகிறான். இரண்டு மூன்று நாளையிலே வந்து சேருவான் சேர்ந்தவுடனே உங்களை விடுதலை பண்ணிக்கொண்டு போகிறேனென்று சொன்னேன். அவர்கள் வெகு துயரப்படுகிறார்கள் என்றும் எழுதியனுப்பி ஓலை வந்து சேர்ந்தது. மற்றப்படி துரை பண்டிகையானபடியினாலே காரியம் ஒன்றும் கேள்விப்படவில்லை. மற்றப்படி விந்தை சேதிகள் ஒன்றுமில்லை

1748 ஆ மார்ச்சு மீ 20உ க்கு பிரபவ ஹு பங்குனி மூ 11உ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே பிரபு அழைத்தனுப்புவித்து இது விசாரம் காகிதம் வந்தது. இதைப் பார்சு படிக்கிற அய்யனுக்குக் காண்பிக்கவேண்டாம். தெலுங்கானபடியினாலே நீதானே படிக்கலாமென்று கேட்டார். நான் பார்த்துக்கொண்டு அதிலே இருக்கிறதை உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொன்னேன். நல்லது கும்பினீர் வர்த்தகர் சந்திப்புக்கு வரவில்லையாவென்று கேட்டார். எல்லாம் முஸ்தீதாயிருக்கிறார்கள் இப்போ வருவார்கள் என்று கும்பினீர் வர்த்தகருக்கு ஒரு வச்சிர மோதிரம் கொடுங்கோள் இதற்கு இவ்வளவு என்றும், பிறகாலே தீர்த்துக்கொண்டு உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொன்னேன். நல்லது உன் மனதுக்கு எப்படி தோற்றுதோ அப்படிச் செய்யென்று சொன்னார். அதன்பேரிலே கும்பினீர் வர்த்தகர் கையிலே அந்த வச்சிர மோதிரம் கொடுத்து இவர்களைச் சந்திப்புப்பண்ணுவித்து அவரவர் எலுமிச்சம்பழமும் கொடுத்துப் பண்டிகை மோபார்க்குப் பாதியும் கொடுத்து உபசாரம் சொன்னவிடத்திலே துரை சொன்னது: நான் ஆளோட்டியாங்காட்டும் என்று சொன்னார். அதற்கு ஆண்டவனே, மெய்தான். முதலாவது சுவாமியும் இரண்டாவது நீரும் அல்லாமல் வேறே யாரிருக்கிறார்களென்று மெத்த உபசாரமாய்ச் சொன்னவிடத்திலே மெய்தான் அப்படியென்கிறது. ஆனால் இரண்டொருத்தருக்கு மாத்திரம் இதிலே சற்று அவநம்பிக்கையுண்டு. பட்டணம் எப்படியோ, என்னமோ என்று சொன்னதற்கு அப்படி யொருக்காலும் எண்ணத் தேவையில்லை. மனம் பொறாமல் ஒருத்தருக்கொருத்தர்

சொல்லுவார்கள். அது திருஷ்டாந்திரத்துக்குக் கொ டு விடச் சொன்னால் மெய்யாயிராது. இந்தப் பட்டணத்தைப் பார்க்க பிலப்பு எந்த ராச்சியத்திலே எங்கேயுமில்லை என்றும், உம்மைப்போலே கீர்த்திபெற்றவர்கள் ஒருத்தருமில்லை என்றும் இப்படியாக அநேகவிதமாய் எப்படி ஸத்துவத்தியபரமாய்ச் சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொன்னதின்பேரிலே அவரும் மிகுந்த உபசாரமாய் உங்கள் சாஸ்திரத்திலே என்னசொல்லுதென்று கேட்டார். அதற்கு வர்த்தகர்கள் சொல்லுகிறதாய் அவ்ரீல் மாசத்தில் கப்பல் வரும். மே மாசத்திலே தேவனும்பட்டணம் கோட்டையிலே வெள்ளைக்கொடி பறக்குமென்று பார்த்துத் தீர்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று அதற்குச் சொலத்தக்கவிதமாய் எப்படிச் சொல்ல வேணுமோ அந்தடுக்கிலே சொன்னதின்பேரிலே அவரும் மிகுந்த உபசாரத்துடனே பன்னீர், பாக்கு, வெற்றிலை கொடுத்து நன்றியறிந்த உபசாரம் சொல்லிப் போகச்சொன்னார். அப்பால் டங்கசாலையார் ஒரு சுருட்டியும் இருபது வராகனெடை கொலுசும் கொண்டுவந்து கொடுத்துச் சந்தித்து உபசாரமாய்ச் சொல்லப்போனார். அதற்கு துரை, நீ உபசாரமாய்ச் சொன்னது போதும் என்று பாக்கு வெற்றிலை பன்னீர் கொடுத்து, கொலுசை மறுபடி என் கையிலே கொடுத்துவிட்டு, அவர்கள் மெத்த பெரிய மனுஷரென்று சொன்னார். அந்தப்படிக்கே அப்போதானே பாப்பு ராயர் கையிலே கொடுத்துவிட்டு துரையவர்கள் மனதிலே ருபாயில்லாமல், இதை வாங்குகிறதில்லையென்று கோபமாய்ச் சொன்னாரென்று சொல்லிப் போகச் சொன்னேன். அதற்கு அவர் எல்லாம் பிறகாலே வந்து கண்டு பேசிக்கொள்ளுகிறேன் என்று சொன்னார். நல்லது போவென்று சொல்லிக் கிடங்குக்குப் போகச்சே, திரும்பியும் துரை அழைக்கிறார் என்று வந்து சொன்னார். மறுபடி துரையண்டைக்குப் போன விடத்திலே சந்திப்பு ஆராகிலும் வருகிறவர்கள் உண்டா என்று கேட்டார். நாளையதினம் வருவார்கள் என்று சொன்னேன். கண்டால் குருவப்பசெட்டி, குண்டு கிராமத்து சம்மதி இதுகளும், தாண்டவராயப்பிள்ளை செத்துப்போனவனுக்குப் பதில் வைக்கிறதற்கு ஒரு மார்க்கம் பண்ணியிருக்கிற சம்மதியும் வராமல் போச்சுதென்று சொல்லவந்தார். அதற்கு நான் முன்னேயேபோலே எனக்கு யாரும் உபதேசரிடுகிற

தில்லே. எவர்களை நான் எந்த சாடைக்கு அடியெடுத்து நடத்திலும் அவர்கள் பேர் உன் பூச்சியென்மைத்தொரு வழியில்லையா வெகு அழைத்தனுப்புகிறதற்கு வருகிறதுகூட பிரயாசமாயிருக்குது. நான் கண்டித்து நடத்துகிறதற்கும் உங்களுக்குப் பின்னேயும் சிறிது வழியிலே பேச்சுகள் நடத்துகிறுப்போலே இருக்கிறபடியினாலே நான் அவர்களைக் கண்டித்தால் என்னமாய் நடக்குமோ என்றுபோலே நான் சாடையாய் இருக்கவேண்டியிருக்குதென்று சொன்னதற்கு, அப்படி சற்றே ஆகாசத்தைப் பார்த்து, நல்லது இனிமேலப்படியெல்லாம் நடக்கறியாது, நீ பார்க்கிற காரியமும் முன் பார்க்கிற படிக்குத் திட்டமாய்ப் பாரென்று சொன்னார். அப்படி நடத்தினால் அப்பால் நானதுவரைக்கும் நடந்த காரியமென்ன? நீங்களறிவீர்களா? அப்படி நடக்கும் என்று சொல்லிப்போட்டு சலாம் பண்ணிக்கொண்டு பாக்குக் கிடங்குக்குவந்து, அங்கேயிருந்த கும்பினீர் வர்த்தகரை துரையவர்கள் சந்தோஷமும், உங்கள்பேரிலே இருக்கிற பக்ஷமும் பார்த்தீர்களா என்று லோகாபிரமமாய்ப் பேசியிருந்து அவரவர்களை அனுப்புவித்துப்போட்டு நானும் வீட்டுக்குப் போனேன்.

நல்லதம்பிசெட்டி, அருணாசல செட்டிமாத்திரம் என்பிறகே வீட்டிற்கு வந்து சொன்னசேதி என்னவென்றால்; நேற்று உடையார் பாளையத்திலிருந்து எனக்குச் சரக்கு விற்ற சம்மதி சிறிது வராகனும், நான் இங்கேயிருந்து அனுப்பியிருந்த தட்டுமுட்டும் வந்தது அதோடேகூட வந்த ஓலையை தெத்துவாசலிலே வாடிக்கைப் படிக்குத் துரை வீட்டிற்கழைத்து வந்தார்கள், வந்தவிடத்திலே அந்த ஓலையை வாங்கி வைத்துக்கொண்டு அம்மாள் பார்த்துக்கொண்டு துரைக்குக் காண்பித்துக் கொடுக்கிறோமென்று சொன்னார்களென்று முத்து சேருவைக்காரன் வந்து சொன்னானென்றும், அதிலே இந்தத் தட்டுமுட்டு அனுப்பினதும், பதில் அனுப்பினதும் எழுதியிருக்கும். பின்னையொன்றும் எழுதியிராது. தட்டுமுட்டு வெளியே போச்சுது வந்தது என்று சாதகம் காண்பிக்கும் பொருட்டாய் எடுபாடு எடுத்து நடத்தினானென்று சொன்னதற்கு, நான், நீர் சொன்னது மாத்திரம் எழுதியிருந்தால் அதைத் தொட்டுப் பயமில்லை. பின்னை ஏதாகிலும் தேவனாம்பட்டணத்துச் சேதி, புதுச்சேரி ராச்சிய

காரியங்கள் எழுதியிராவிட்டால் அதைத்தொட்டுப் பய மென்ன? ஆனால், துரையே யறிந்தால் ஒருத்தருக்கு வருகிற ஓலையை இப்படிச் செய்கிறது நல்லதல்லவென்று அம்மாளைத் தானே கோபம்பண்ணுவாரென்று சொல்லி, இன்று மத்தியா னம் உங்களை சந்திப்புப்பண்ணிவைத்து வரச்சே, துரை அழைக்கிறாரென்று அழைத்து நான் போனேன். அப்போது துரை சொன்ன சேதியும், நான் சொன்ன சேதியாம்படியே சொன்னார். அதற்கு அருணாசல செட்டி எப்போது துரை வாக்கிலே எப்போதேயும்போலே காறுபாறு பாரென்று சொன்னமட்டுக்கும் இன்று முதற்கொண்டு நல்லகாலம் வந்த தென்று எண்ணிக்கொள்ளுங்கோளென்று நம்முடைய வீட் டிலே, இரண்டாங்கட்டு நடையிலேயிருந்து சொல்லச்சே விருப்பிள்ளை குமாரன் முத்து என்கிறவன், பிறந்திருக்கிற குழந்தைக்கு தந்தத் தொட்டிலும், பாக்கு வெற்றிலை, வாழைப் பழம், சந்தனம் புஷ்பம் மங்கிலியப்பெண்கள் கையிலே கொடுப்பித்துக்கொண்டு உள்ளே நுழைந்து எனக்குக் காண் பித்து, உள்ளே கொண்டுபோனார்கள். அவர்களடியின் பிறகே காமன் பண்டிகைக்காரர், மேளதாளம், தேவடியாக்கள், புஷ் பம் கெந்தவடி சம்பிரமத்துடனே உள்ளே நுழைந்தார்கள். அதைப்பார்த்து அருணாசலசெட்டி திவ்விய சகுனம், ராஜலக்ஷ்மி உங்கள் வளவிலே பிரசவித்தாள் இன்றுமுதற் கொண்டு அத்யந்த சந்தோஷமாய் சகல அதிகாரமும் உம்முட னுக்கு அசவிலே நடக்கப்போகிறது. இப்படி திருஷ்டாந்திர மாய் லக்ஷ்மி பிரவேசித்தது நான் எங்கும் கண்டதில்லை என்று வெகு ஆனந்தத்துடனே சாப்பிட்டு வருகிறேனென்று அனுப்பு வித்துக்கொண்டுபோனான். என் மனதுக்கும் இரண்டு மூன்று மாசமாய் தாட்டி நடத்துகிற காரியத்துக்கு மனதிலேயிருக்கிற கிலேசத்துக்கு, பிரபுவினிடத்திலே நடந்த சமாசாரத்தைப் பேசியிருக்கச்சே வீட்டுக்குள்ளே நடந்த சகுனமும் பார்த்து மிகுந்த ஆனந்தமாய் இன்றுமுதல் உச்சிதகாலமென்றெண் ணிக்கொண்டு தொட்டில் கொண்டுவந்த உறவின்முறையார், சினேகிதர்களுடனே கூடச் சாப்பிட்டு ஆனந்தத்தை அடைந் திருந்தேன்.

*1748* ஆ மார்ச்சு மாதம் 21-ம் உ கித்த பிரபவ ளு பங்குனி மீ *12* உ குருவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவேர்ன்மாவுக்கு வந்தவிடத்திலே ஸ்ரீ துரையவர்கள் தேவனாம்பட்டணம் சேதியாக எப்போதும் பேசிக்கொண்டிருக்கிற சாடையாய். அவர்கள் சின்ன மனுஷர் என்கிறதற்கு என்ன அடைமான வார்த்தைகள் சொல்லவேணுமோ அதுவும் அவர்கள் நடமாடுகிறதும் முத்தாலு நாய்க்கன் போனவன் இவன் பெடாயிபண்ணிக் கொண்டு பிரயோசனமில்லாமல் விருதாவாய் திரள பணம் செலவிட்டு வந்தானே, இதற்கு இங்கிலீஷ்காரர் சகிப்பார்களா வென்றும் இப்படியாக லோகாபிரமமாய், பொழுது போக்காய் பேசியிருந்தார். அகதிகளுக்கு இங்கிலீஷ்காரருக்குத் தாங்கள் அடைந்தவர்கள் என்றால், அவர்கள் பேரிலே இருக்கிற மானத்தினாலே அவனென்ன செலவழித்தாலும் சம்மதியாயிருக்கிறது. தான் என்ன சம்பாதித்துக்கொடுத்தாலும் சம்மதியாயிருக்கிறபடியினாலே சென்னப்பட்டணத்திலேதேவனாம்பட்டணம் எல்லாம் தமிழர் மயமாயிருக்கிறதென்று உறுத்தத்தக்கதாய்ச் சொன்னேன். அது கேட்டும் கேளாதது போலே அப்பால் நடந்தார். நானும் சாவடி கபுறு சொல்லிப் போட்டு, பாக்குக்கிடங்குக்கு வந்து தினசரி எழுதிக்கொண்டிருக்கச்சே மறுபடி வந்து துரை அழைக்கிறாரென்று அழைத்தார். போனவிடத்திலே நேற்று விசயராம்ராசா அனுப்பின காகிதத்தை பிரான்சிலே எழுதிவைத்துக்கொண்டுவரச்சொன்னார். அந்தப்படிக்கு பிரான்செழுத்திலே எழுதிவைத்துக் கொண்டுபோய்க் கொடுத்தேன். அப்பால் மச்சிலிபந்தரிலேயிருக்கிற மீரமுதல்லி என்கிறவன் குமஸ்தா சித்திபிவால் என்கிறவன், அரிசியும் கோதும்பையும் பங்காள மணங்கு எழுநூறு கொண்டு பழவேர்க்காட்டுக்கு நேராய் வரச்சே இங்கிலீஷ் கப்பல்காரர் துரத்தினதினாலே அவ்விடம் தப்பித்துக்கொண்டு மச்சிலிபந்தர் வந்து அங்கே இறக்கி அவ்விடத்திலே பிரான்சு பெத்ரி எசமானாக இருக்கிறவனுக்கு ஒப்புவித்துப்போட்டேன். இதிலே பின்னையும் ஒரு உருவிலே பங்காள மணங்கு ஐந்நூறு ஏற்றிவந்து அதை ஒப்பித்துக் கொள்ளச் சொல்லச்சொன்னால் பிரான்சு பெத்ரி எசமானனுக்கு உத்திரவில்லையென்று சொல்லுகிறான். ஆனபடியினாலே

இப்போது வந்திருக்கிற ஐந்நூறு மணங்கும் இனிமேல் வரப் போகிற ஐந்நூறு மணங்கும் ஒப்புவித்துக்கொள்ளச் சொல்லி ஓடிதி அனுப்புவிக்கச்சொல்லியும், அப்பால் தான் நடந்து கொள்ளவேண்டியதற்குப் பதிலுத்தரம் எழுதியனுப்பச் சொல்லியும் பாரீஸிலே எழுதிவந்த காகித சேதி சொன்ன தற்கு இங்கேயாகிலும் சென்னப்பட்டணமாகிலும் வரக் கூடாமற்போனாலும் பழவேர்க்காடுவந்து சேரலாமே. இங்கிலீஷ்காரர் கண்டார்களே என்கிற பேச்சுப்போய் அத னாலேதான் பந்தரிலிருக்கிற முசியே லெனுவார் ஒப்புவித்துக் கொள்ளமாட்டோமென்று சொன்னானென்று சொல்லி, நல் லது எழுதியனுப்புவோமென்று சொன்னார். அப்பால் மணி ரெண்டு மணி சமீபமானபடியினாலே நான் வீட்டுக்குப் போனேன்.

அப்போது வீராநாய்க்கன் வந்து நயினார் வளவிலே கொண்டராசாவண்டையிலே வைத்திருந்த இரண்டு சேவக ரையும் ஞானப்பிரகாச முதலி வீட்டிலே களவு போனதற்கு எங்களண்டையிலேயிருந்த சேவகன் பேரிலே சந்தேகமா யிருக்கிறதென்று பற்லாம் கொண்டுபோய் காவல் வைத்து, அவனை நேற்று பற்லாம் வீட்டிலே கொண்டுபோய் கட்டி வைத்து, தடியாலே அடித்து மலையன் என்கிற சேவகனைக் கொண்டு செருப்பாலே அடிப்பித்தும், அப்பால் முத்து சேருவைக்காரன் வந்து அடித்தும், நயினார் எடுத்துவரச் சொன்னாரென்று சொல்லென்று சொல்லி அநேகவிதமாய்க் கேட்டதாகவும், அவன் அவர்கள் வளவிலே களவு போகாத தற்கு முன்னே ஐந்தாறு நாளாய் என்னைக் காவல்வைத்துக் கொண்டிருக்கிறார்களே அப்படியிருக்க, இப்படி அபாண்ட மாய் கட்டி அடித்தும், செருப்பாலே அடித்தும் கொல்ல வேணுமா என்று சொன்னானும். அதன்பேரிலே ராணுவக் கணக்கு கந்தப்பன் என்கிறவன் வந்து, அவன் சேதியெல் லாம் நயினார் பேரிலே சொல்லிப்போடென்று சொன்னதின் பேரிலே சருவாத்துமனாக அறிந்தால்லவோ சொல்லவேணு மென்று சொன்னானாம். அதன்பேரிலே நயினார் வீட்டிலே திரும்பியும் கொண்டுபோய் காவல் வீட்டிலே போட்டு அடைத்து அந்தச்சாவியை அங்கேயிருக்கிற இரண்டு பேர்

கும்பினீர் சேவகர் கையிலே கொடுத்து, பின்னொரு சேவகனை அவர்களுக்கு மேல் விசாரிப்பாக வைத்து இப்படியெல்லாம் நேற்று ராத்திரி வரைக்கும் நடத்தினார்களே!......

இற்றைநாள் காலத்தாலே அம்மாளங்கே இருக்கிற கொண்டராசாவென்கிற பிராமணன் முதலான பேரண்டை யிலேயிருக்கிற கும்பினீர் சேவகரை வாங்கிவரச்சொன்னு ளென்று கும்பினீர் சேவகர் நயினார் வீட்டிலே வந்து காவல் இருந்தார்களென்று சொல்லவேண்டாமென்றும், அந்தச் சேவகனை அடித்தார்களென்றும் சொல்லவேண்டாமென்றும் பற்லாம் சொல்லியிருந்த சேவகரும் வாங்கிப்போனார்களென் றும் வீருநாய்க்கன் வந்து கபுறு சொன்னான். இப்படி எச்சி பீங்கான் எடுக்கிற காசுபெறாத பையனும் சேவகனும் இப்படி பட்டணத்திலே அதிகாரம் செலுத்தினால் முசியே துய்ப்ளேய்க்சு பண்ணுகிற துரைத்தனமும், முன் வெள்ளரிக்காய் விற்ற பட்டணத்திலே நடந்த சமாசாரம் போலே இருக்கிறதென்று பட்டணத்துக்குள்ளே சொல்லிக்கொள்ளுகிறது மல்லாமல், என்ன அபாண்டம், எந்நேரம் வந்து விழுகிறதோ என்று பொல்லாத மூக்குற காற்றடிக்கிறது; எப்போது தீர்ந்து நல்ல காற்று வந்தடித்துச் சுகப்படுவோமோ என்று சனங்கள் தத்தளிக்கிறது சுவாமிக்குத் தெரியும். ஆனால், இந்த சனங் களை சுவாமி எப்போது ரக்ஷிக்க நினைக்கிறாரோ, அப்போது பொல்லாத பேய்க் காற்றடிக்கிறது. நின்றுபோமென்று சொல்லி இது முதலாக நின்றுபோமென்று வீரா நாய்க்க னுடனே சொல்லி அந்தச் சேறியெல்லாம் முசியே டேலார் ஷூக்கு அறிக்கைப்பண்ணச் சொன்னேன். நல்லது, நீங்களும். முருகப்பிள்ளைக்குச் சொல்லுங்கோளென்று சொன்னான். நல்லதென்று சொல்லி வீட்டுக்குப் போகச் சொன்னேன். சாயங்காலம் துரை அழைத்தனுப்பி முசியே பாதி தோட்டத் திலே சந்தாசாயபு மகன் போய் வெகு துடுக்குப்பண்ணி திராக்ஷைப்பழக்கொலை எல்லாம் அறுத்துப்போட்டுத் தோட் டக்காரரையும் அடித்துப்போட்டுவந்தான் என்று முசியே தெப்ரேன் வந்து பிராது பண்ணினானென்று சொன்னார். நல்லது அவர்கள் நாளதுவரைக்கும் செய்யாதவர்களிப்போ செய்யப் போகிறதில்லை. ஆகிலும் சொல்லியனுப்புவிக்கிறேனென்று சொல்லிப்போட்டுப் பாக்குக்கிடங்குக்கு வந்து மதனாந்தபண்

டிதனுடனே சந்தாசாயபு மகனுக்குச் சொல்லி யனுப்பினதற்குத் தாங்கள் ஒன்றும் செய்ததில்லை என்று பதில் உத்தரம் சொல்லியனுப்பினார்கள்.

1748 ஆ மார்ச்சு மீ 22 உக்த பிரமாதி ஞு பங்குனி மீ 13௨ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே குவெர்ன்மெண்டுக்குப்போன விடத்திலே நேற்று வேட்டவலம் தாண்டவராயப் பண்டாரம் நேற்றுராத்திரி துரைக்கு எழுதின காகிதச் சேதி துரைக்குச் சொன்ன வயணம்: முத்தாலுநாய்க்கன் மகன் வேட்டவலம் பண்டாரத்தார் பேருக்கு எழுதின பிசினிசு காகிதமும் அனுப்பி துரைபேருக்கு எழுதின காகிதத்திலேயும் என் பேருக்கு எருதின காகிதத்திலேயும் எழுதின வயணம்; இங்கிலீஷ்காரர் மனுஷன் முத்தியாலு நாய்க்கன் என்கிறவன் என் பேருக்கு எழுதின பிசினிசு காகிதமும் அனுப்புவித்தேனென்றும் அவனைப் பிடித்து அதற்கேத்தபடி தண்டிக்கச் சொன்னால் தண்டிக்கிறேனென்றும் இதற்கு உம்முடைய உத்தாரத்துக்குக் காத்துக்கொண்டிருக்கிறேனென்றும் எழுதின சேதியும், அப்பால் பண்டாரத்தார் பேருக்கு முத்தாலுநாய்க்கன் எழுதின காகிதத்திலே முன்னம் நிசாமவர்கள், நிசாமுத்தவுலா அவர்கள் சமுகத்திற்குப் போகச்சே இமாம்சாயபுடனே சிறிது விசேஷம் கண்டு பேசச்சொல்லி எழுதியனுப்புவித்தபடிக்கு நாங்கள் நிசாமவர்கள் தண்டுக்குப் போகாததபடியினாலேயும், நிசாம் உத்தரவுவாங்கிய நாசறசங்கு தண்டிலே இமாம்சாயபு இல்லாதபடியினாலேயும் நான் கண்டுபேசவில்லை. இப்பவும் புதுச்சேரிக்கு ரஸ்து மற்றதும் போகாமலும், இங்கிலீஷ் சமஸ்தானமாகிய சென்னப்பட்டணம், தேவனும்பட்டணம் உப சமஸ்தானத்துக்கு மற்றது பண்ணச்சொல்லியும் அசரத் நாசறசங்கு முத்தவுலாபரமான உம்மண்ணைக்கு அனுப்புவித்தோமென்றும், அதைமெத்த மரியாதையுடனே அங்கிகரிக்கச் சொல்லியும் தமக்கு ஆகவேண்டிய காரியங்கள் உண்டாயிருந்து எழுதியனுப்புவித்தால் நிசாமுத்தவுலா அவர்கள் சர்க்காரிலேயாவது அல்லது நபாபு ஆசபுசா அவர்கள் சர்க்காரிலேயாவது ஆகவேண்டிய காரியங்கள் என்னவிருந்தாலும் ஆகப் பண்ணிக்கொடுக்கிறோமென்றும், சிநேகம் உத்திரோத்திரம் நடப்பிக்கச் சொல்லியும் தக சமாசாரத்துக்கெல்லாம்

தேவனும்பட்டணம் சேர்ந்தவுடனே எழுதியனுப்புவிக்கிறே மென்று போனகாரியத்திலே கிருபையில்லாவிட்டாலும் இப் படி வாய்க்கூந்தல் மாத்திரம் விஸ்தாரமாயெழுதியனுப்பினு னென்று காகிதவயணமும் துரைக்கு எச்சரித்ததற்கு அவர் நகைத்து, முத்தியாலுநாய்க்கன் விருதா கூந்தல் நன்ருபடித் திருக்கிருனென்றும் சொன்னுர். அவன் சாடை அப்படித்தா னென்றும், மகா பெருமையுள்ளவன் என்றும், அவன்சாடை எல்லாம்சொல்லி அவனுக்கு இங்கிலீஷ்காரரிடத்திலே ஆகச் சே நடக்கிறது. பிரான்சுக்காரரிடத்திலே நடக்கிறது அரி தென்றும், பண்டாரத்தாருக்கு உத்தரம் எழுதவேணுமே என்ன எழுதுகிறதென்று கேட்டதற்கு நாம் இந்தப் பிரயத் தனம் யோசனைபண்ணுதேபோனேமென்று சொன்னுர். மெய் தான், நீங்கள் முன் அதன்பேரிலே கவிஞ்சாப்போலே உத் தாரம் சொன்னீர்கள் அப்பால் அசார்வியமாய்ச் சொன்ன படியினலே நானும் உங்கள்மனசு அப்படியிருக்கச்சே, நாமேன் சொல்லவேணுமென்று சும்மா இருந்தேன் என்று சொன்னேன் இப்பவும் காகிதம் வருகிறதற்குள்ளேயிருந்தால் அவனைப் பிடித்து, அவன் பிறகே வந்த சாமான்களையெல்லாம் கொள்ளை யிட்டுப் போடச்சொல்லியும், அவன் மிஞ்சிப்போயிருந்தால் செய்யவேண்டியதென்னவென்று அதற்குத் தக்க உபசாரமாய் எழுதிவந்தவர்களுக்கும் பத்து வராகன் வெகுமானம் கொடுத்து அனுப்பச்சொல்லிச் சொன்னுர். அந்தப்படிக்கு உபசாரமாய் துரையவர்கள் சொன்ன மத்தலபு இருக்கக் காகிதமெழுதி, என் காகிதமும் அதற்கனுசரணையாயெழுதி அவர்பேருக்கு முத்தியாலுநாய்க்கன் அனுப்பியிருந்த காகிதத்துக்கு நக்கலும் எழுதி நாம் வைத்துக்கொண்டு அசல் காகிதமும் கொடுத்துவந்த சேவகருக்கு முப் பது ரூபாய் இனும் கொடுத்தனுப்புவித்தோம். மற்றப் படி ஆற்காடு முத்தையமுதலி சம்மதி நாம் நெல்லு கொள்ளுகிறதற்குச் சேர்த்துக்கொண்டு முசியே கோர்னே பேருக்கு நெல் விலையிலே ஒத்துக்கொள்ளுகிறோமென்று ஒரு ரசீது எழுதி முசியே போலே கையிலே கொடுத்துப்போட்டு அங்கேயிருந்து துரை வீட்டுக்கு வந்து, அப்பால் முசியே கோர்னே வந்து துரையுடனே கிராமத்து நெல் வரவில்லை யென்று சொன்னதற்கு நூறு கரிசை சரியாய் வந்து சேர்ந்த தென்று சொல்ல, அவன் இல்லையென்று தகராறுபண்ண, உன்

ரசிது இருக்குது, நாளைக்குக் கொண்டுவந்து காண்பிக்கிறேமென்று சொல்லி, அப்பால் துரை ஐந்நூறு, அறுநூறு கரிசை மாத்திரம் வாங்கென்று சொன்னார். உத்தரமல்லூர் சாலம் பாக்கத்து நெல் விஸ்தாரமாய் வரவேணுமென்றது வாங்கலாமென்று சொன்னேன். அதன்பேரிலே வினைப்பாயிரு என்று சொன்னார். நல்லதையாவென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்தேன்.

முத்தையமுதலிக்கு ஆற்காட்டிலிருந்து வெங்கடாம்பேட்டை பிராமணன் ஒருத்தன், இமாம்சாயபைக் கொல்ல சேவகன் ஒருத்தன், சகலாத்து வராகன் சம்மதி ரூபாய் அறுநூற்றி எழுபதும்; பூவராகன் எட்டும் கொண்டுவரச்சே வந்தவாசி வெளிமேட்டண்டையிலே வெட்டிப்போட்டுப் பணத்தை எடுத்துக்கொண்டு போய் அவர்களையும் பறணிபோட்டிருக்கிற சேதி கேள்விப்பட்டதையும் துரைக்குச் சொன்னேன்.

இற்றைநாள் நாலரை மணி வேளைக்கு வடக்கு வாசற்படி முன் கொத்தளங்கள் கட்டுகிறவிடத்திலே வந்திருந்து என்னை அழைத்தனுப்பினார். நானும் போனேன். ஆலங்குப்பத்துக்குள்ளே யிருக்கிற சுண்ணாம்புக் காளவாய்ப் போடுகிறவர்கள் ஓடிப்போனார்களாம். முன் காளவாய்ப் போட்டுக்கொண்டிருந்த மலையப்பனென்கிறவன் தனக்குப் பழைய நிலுவை தனக்கு வரவேணுமென்று கண்டிப்புப் பண்ணுகிறதினாலே, அவர்களுக்குக் காலமானதினாலே நிலுவைகூட கொடுக்கிறதற்கு இனயில்லாமல் ஓடிப்போனார்கள். ஆகச்சே, அவனை வரச்சொல்லு. நான் கண்டு பேசவேணுமென்று சொன்னார். நல்லதென்று மலையப்பனுக்குச் சொல்லியனுப்பிவிட்டு, அவருக்கு நான் சொன்னது: அங்கே நடக்கிற சமாசாரம் அடிக்கடி வந்து சொல்லாததினாலே எனக்கு எப்படித் தெரியும் என்று சொன்னேன். அவ்விடத்து வெள்ளைக்காரன் என்க்கு வந்து கபுறு சொன்னவனை உன்னண்டைக்கு அனுப்பிவைத்தேனே, வரவில்லையா என்று கேட்டார். வரவில்லையென்று சொன்னேன். நல்லது, இன்றுமுதல் ஆலங்குப்பம் சுண்ணாம்புக் காளவாயுடனே சேர்ந்ததையெல்லாம் விசாரித்துக்கொண்டு வா. மற்ற பேருக்குக் கவையில்லையென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் வண்டியேறிக்கொண்டு

கூடலூர் வாசலுக்குப் போனார். நான் பாக்குக் கிடங்குப் போனேன்.

எட்டு மணிக்கு அபுதுலாயிமான் என்கிற சமேதாரன் துரையண்டைக்குப் போய்ச் சொன்ன கபுறு என்னவென்றால்: அவ்விடத்துக்கு ஒரு பெண்சாதி மார்பத்தில் தேவனாம்பட்டணத்துக் கோட்டையிலே இருக்கிற மாயே சிப்பாய்களிலே அவ்விடத்திலே காவல் வைத்திருக்கிற பிக்கன்கான் சமேத்த முன்னூறு சிப்பாய்களும் இவ்விடத்துக்கு உளவாய் வருகிறதாகவும், அப்போது தேவனாம்பட்டணம் குவர்னதோர் மெதா பிளாயா சாயங்காலம் குண்டுசாலைமட்டுக்கும் வண்டியின் பேரிலே சுவாரி வந்து மரிகிருஷ்ணபுரம் தெத்து குண்டுசாலை மட்டுக்கும் இரண்டிலே மூன்றிலே சுவாரி வருகிறபடியினாலே அவரை வண்டியோடே கூடப் பிடித்து வரத்தக்கதாக எத்தனம் பண்ணினேன். அவர்களுக்கு கவுல் கொடுக்கவேணுமென்று கேட்க, அவர்களை இவ்விடத்திலே சம்பளத்துக்கு வைத்துக்கொண்டு விசேஷ சம்பளம் கொடுக்கிறதுமில்லாமல் பதினாயிரம் ரூபாய் இனாம் கொடுக்கிறோமென்று துரையவர்கள் சொல்லி, வந்துசொன்ன ஷை பெண்சாதிக்கு முப்பது ரூபாய் வெகுமதி கொடுத்து அங்கே இருக்கிறவர்களுக்கு நூற்றியைம்பது ரூபாயும் கொடுத்தனுப்பச் சொல்லி, கவுலும் கொடுத்து மேஸ்தர் கோபேன் கமாண்டோராயிருக்கிறவனைப் பிடித்துவர எத்தனம்பண்ணச் சொல்லச்சொல்லி அனுப்பினார். அந்தப்படிக்கு அபுதுலாயிமானும், நல்லது அப்படியும் பார்க்கிறேனென்று சொல்லிபோட்டு, அங்கேயிருந்து வேகு வந்த ஷை பெண்சாதிக்கு மறுபடி முன் எழுதப்பட்ட ரூபாய்கள் கொடுத்து ராத்திரியே வெளியே அனுப்பிவிட்டான். இங்கிலீஷ்காரருக்குப் பொல்லாத காலமானபடியினாலே இப்படி சித்தித்தாலும் சித்திக்கும். நம்முடைய பிரபுவுக்கு மகத்தாகிய யோகமும் கீர்த்தியும் வருகிற நாளானபடியினாலேயும் மேஸ்தர் ப்ளேயராவது, மேஸ்தர் கோபேனாவது அகப்பட்டு அவர்கள் சின்னப்பட்டுப் போவார்களென்கிறதற்குச் சந்தேகமில்லை என்று தோற்றுது. தெய்வஸ்துதியை அறியவேணும்.

*1748* ஆ மார்ச்சு மீ 23உ க்கு பிரபவ ஸு பங்குனி மீ 14உ சனிவாரம்.

இற்றைநாள் துரை அவர்களிடத்துக்குப் போன விடத்திலே சாவடி கபுறு ஆயிரத்திருநூற்றி யைம்பத் தேழு பொதிநெல் வந்ததென்று கபுறு சொல்லி, அப்பால் முத்தாலு நாய்க்கன் மணலூர்பேட்டை வந்து சேர்ந்தா னென்றும், நாளையதினம் திருவெண்ணெய்நல்லூருக்கு வந்து சேர்ந்து பண்ணி உருப்படியின்பேரிலே தேவனும்பட்டணம் போய்ச் சேருவானென்று கபுறு சொன்னேன். அப்பால் தறுவாடி மாரியத்திலே பரபத்தியம் பேசினதெப்படி இருக்குதென்று கேட்டார். அது சுவாரஸ்யமாய்க் காண வில்லை. வந்தவாசி தக்கா சாயபு அடுக்கி மீர்த்தியானதுமல்லா மல் அவர்மாரிபத்திலே பேசியிருக்கிற பரபத்யம் ஊர்ஜிதமாய் வருமென்று சொன்னேன். ஆனால் தறுவாடி எசமான் அபிப் பிராயமென்னவென்று கேட்டதற்கு முன் தினுசுகள் போயிருக்கிறதே அந்தச் சாடைதான் என்று சொன்னதற்கு அவனை அழைத்துவர மார்க்கம் பார்ப்போமென்று சொன் னார். இதிலே சவுரி மேஸ்திரி மலையப்பன் வந்தான். வந்த வனைப் பார்த்து நீ நம்முடைய ஆலங்குப்பத்துக் குடியானவர் களை பிழைக்கவொட்டுகிறதில்லை. முன் நிலுவையை இப்போ கேட்டால் அவர்களுக்கு கொடுக்கிறதற்கு அவகாசமில்லாத தினாலே ஓடிப்போய்விட்டார்கள் என்று சொன்னார். நான் சீட்டெழுதிக்கேட்டது மாத்திரமே அல்லாமல் நான் கேட்ட தில்லை என்று சொன்னேன். கேளாவிட்டால் நீ அந்தக் கிராமத்துக்கு ஏன் போகிறாய் என்று கேட்டார். பையின் டென்று சொன்னான். பயிரைப் பிள்ளையார் வசத்திலே யாகிலும் ஒப்பித்துப்போடென்று சொன்னார். நல்லதையா, அந்தப்படிக்கே ஒப்புவித்துப்போட்டு, அந்தக் கிராமத்து வழி போகவில்லை என்று சொன்னான். நல்லது கிராமத்து வழி போனால் ஆக்கினை பண்ணுவேனென்று சொன்னார். நல்ல தையா, அந்தவழி பரிச்சேதம் போகிறதில்லை என்று பத் துக்கு சிவமா என்று ஒரேவோட்டமாய் நடந்தான். என்னை இன்றுமுதற்கொண்டு சுண்ணாம்புக்காளவாய் எங்கேயிருக் கிறதோ அதெல்லாம் கும்பினீர் தாலுக்கு எல்லாம் நீ விசாரி

என்று உத்தாரம் கொடுத்தார். நல்லதென்று சொன்னேன், மற்றப்படி பகலைக்கு மட்டும் வேறே சேதி இல்லை.

இற்றைநாள் சாயங்காலம் ஸ்ரீ குவர்னதோரவர்கள் அழைக்கிறார்களென்று வந்து அழைத்தார்கள். நான் போக வேணுமென்று பாக்குக்கிடங்கை விட்டு அப்பால் துரை வீட்டுக்குப் போகச்சே சம்பாகோவில் சுப்பெரியேராகிய பாதிரி கடுதாசி யொன்றை அனுப்புவித்தாரென்று அருளாந்தா உபதேசி வந்து சொன்னதென்னவென்றால்: மருட்டியர்கள் காமன் பண்டிகை கொண்டாடுகிறார்களே அவர்களுக்கு நீராகவே உத்தரவு கொடுத்தீரா, அல்லது துரையுடனே சொல்லி உத்தரவு வாங்கிக் கொடுத்தீர்களா என்று கேட்டுவரச்சொன்னாரென்று சொன்னார். அப்படியானால் சொல்லுகிறேன் கேளும். இப்படிப்பட்ட சங்கதியெல்லாம் துரைகளுத்தரவு இல்லாமல் என்னாலே உத்தரவு கொடுக்கப்போமா? அவர்களின் எசமானாகிய சமேதாரன் சேக்கு அபுதுலாயிமான் அவர்களைக் கேட்டார். அவரும் உத்தாரம் கொடுத்தார். நானும் இந்தப் பண்டிகைக் கொண்டாடுகிறார்களென்று கபுறு சொன்னேன் என்று சொன்னேன். அதற்கு உபதேசி சொன்னது. சுவாமியார் சொல்லிவரச் சொன்னது இந்தப் பண்டிகைக்கு முன் மருட்டியர் கலாபத்தின் போது நடந்தது. மறு வருஷம் நடக்கிறபோது கனகராய முதலியார் நிறுத்திப் போட்டார். அப்படிப்பட்டது இப்போது நடக்கிறபடியினாலே உம்மைக் கேட்டுவரச் சொன்னது என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: எப்போதும் வருஷா வருஷம் நடக்கிறதுதான். இதற்கு நாலாம் வருஷம் மேலுகிரி பண்டிதர் வீட்டுப் பிள்ளைகள், சீனுவாசப்பிள்ளை வீட்டுப் பிள்ளைகள் கனகராயமுதலியார் வீட்டுக்குப் போனவிடத்திலே பெண்டுகள் முன்னே வண்டப்பேச்சாய் ஸ்திரிகள் அவயவத்தைக் குறித்துச் சொன்னதாகவும், அதன்பேரிலே கனகராயமுதலியார் துரையுடனே தெருக்களிலே ஸ்திரிகளைக் கண்டால் சொல்லத்தகாத பேச்சுகள் சொல்லுகிறார்கள். ஆனபடியினாலே அவரவர்கள் செய்தால், அவரவர்கள் வீட்டிலே வைத்துக்கொள்ளுகிறதேயல்லாமல், அப்பால் தெருவுகளிலேயும், ஒருத்தர் வீட்டுக்குப் போயும் இப்படி அலங்கோலம்பண்ணத்தேவையில்லை என்று தாக்கீது பண்ணு

வித்ததேயல்லாமல் மற்றப்படி பண்டிகை நடவாத வருஷமில்லை நானும் இருபத்தைந்து வருஷமாய்ப் பார்த்து வருகிறேன். அதிலேயும் இந்தத் துரை வந்தபிற்பாடும் மாயே சிப்பாய்கள் வந்தபிற்பாடும் பின்னையும் விஸ்தரித்து நடக்கிறது. மற்ற இந்த ஊரிலே இருக்கிறவர்கள் அப்படி விசேஷித்துக்கொண் டாடத் தக்கனவர்களுமில்லை. அப்படி ஒருத்தர் வீட்டுக்குப் போய் வண்டைப்பேச்சுகள் பேசி கலாபம் பண்ணினதுமில்லை, தெருக்களிலே அப்படி நிண்டாரிக்கமாய் நடப்பித்ததையும் காணோம். தூரப்போவானேன். போனவருஷம் உத்தாரம் கொடுத்தவர் துரை இருக்கிறார். ஆடினவர்கள் மாயே சிப் பாய்களிருக்கிறார்கள் விசாரித்துக்கொள்ளுகிறதுதானே என்று சொல்லி, துரையவர்கள் வந்து ஆறு வருஷமாச்சுதே! ஆறுவரு ஷமாயுத்தாரம் கொடுக்கிறது அவருக்குத்தெரியுமே அவரைக் கேட்டுக்கொள்ளுகிறதுதானே என்று சொன்னதற்கு நல்லது சிரேஷ்டருடனே சொல்லுகிறேனென்று சொல்லிப்போட்டு அனுப்புவித்துக்கொண்டுபோனார்.

அப்பால் துரை வீட்டுக்குப் போனேன். அவர் என்னைக் கண்ட மாத்திரத்திலே எதிரே வந்து சந்தாசாயபு மகன் முசியே பிரித்தோட்டத்திலே போய் அலங்கோலம் பண்ணின தென்னவென்று கேட்டார். நாங்கள் எட்டு ஒன்பது வருஷ மாய் இந்த ஊரிலே இருக்கிறோம். நாங்கள் போகாத தோட்டமில்லை. ஆகிலும் பிராது சொன்னதுண்டா? இவர் கள் சும்மா சொல்லுகிற சாடைக்கடுத்த நியாயங்களாகச் சொல்லுகிறார்களென்று வயணம் சொன்னதற்குக் கேட்டும் கேளாமலும் மெழுகுதிரி எடுத்துவரச்சொல்லி எழுதுகிற கபி னேத்துக்குப் போனார். அதற்கு நான் போகச்சே பெண்சாதி யுடனே நடுசாலையிலே நீண்ட வாக்கிலே தனித்துப் பேசிக் கொண்டிருந்தபடியே என்னைக்கண்டு வந்தபடியினாலே துரை கபினேத்தைப் போன மாத்திரத்திலே அவர் பெண்சாதியும் கூடப் போனாள். நான் பாக்குக் கிடங்குக்கு வந்துவிட்டேன்.

1748 ஆ மார்ச்சு மீ 24 உ பிரபவ ஹு பங்குனி மீ 15 உ ஆதிவாரம்

இற்றை நான் அபரங்காபாத்திலிருந்து இமாம்சாயபு அனுப்பின காசிதம்காலிபுகான் மகனுக்கு விடுகட்டுகிறதற்

கும் தோட்டம் போடுகிறதற்கும் ஐந்து காணி நிலம் விடச் சொல்லி எழுதினதற்கும், தாமசம் பண்ணினீர். இனி அப்படிச் செய்யாமற்போனாலும் இரண்டரை காணியா கிலும் என் நிமித்தியம் விடவேணுமென்றும், ரொம்ப சிப்பந்திகள் ஏன் வைக்கிறீர்களென்றும், சென்னப்பட்டணம் நினுசுகள் விட்டுவிடச்சொல்லியும், நூறு பாரம் ஈயம் அனுப்பச் சொல்லியும் எழுதின காகிதமும் முன்வர்த்திகான் அனுப்பின மோபார்க்குக் காகிதமும் படித்துச்சொன்னதற்கு ஈயம் நிறுத்துவிடவில்லையாவென்று கேட்டார். இன்னம் இல்லை என்று சொன்னதற்கு நிறுத்துவிடச் சொல்லென்று சொல்லி, சென்னப்பட்டணத்துத் நினுசு அவருடையது அல்லாத படியினாலே சின்னகாகிதத்திலே அவருடையதாக எழுதிப் போட்டானென்று சொன்னார். அதற்கு உத்தாரம் சொல்லாமல், சாவடி கபுறு செல்பொறி வந்ததைச் சொல்லிப்போட்டுப் பாக்குக் கிடங்குக்கு வந்தேன். மற்றப்படி பகலைக்கு மேலாய் சார் ஒதுக்கிற இடம்போய்ப் பார்த்துப்போட்டு, சாயங்காலம் பாக்குக்கிடங்குக்கு வந்தபிற்பாடு எழுதத்தக்க அதிசயமான சேதி ஒன்றும் கேள்விப்படவில்லை.

1748 ஆ மார்ச்சு மீ 25௨ ஸ்ரீ பிரபவ ௵ பங்குனி ௴ 16௨ திங்கட்கிழமை

நேற்றையதினம் சேர்ந்தமங்கலத்திலேயிருந்து முசியே மேன்வில் காகிதம் துரையவர்களுக்கு ஒன்றும், எனக்கு ஒன்றும், மதாம் மேன்விலுக்கு ஒன்றும், முசியே வரிவியேருக்கு ஒன்றும், முசியே சேன்பூராக்கு காகிதமொன்றும் வெங்கடகிருஷ்ணய்யங்கார் கொண்டுவந்து கொடுத்து வெள்ளைக்காரருக்கு விடுதலையாச்சுது. அவர்களும் கோட்டையை விட்டு இப்புறத்திலே ஒரு சாவடியிலே வந்திறங்கி, டோலி மற்றது முஸ்தீதுபண்ணுவித்துக்கொண்டுபோனார்கள். அந்தச் சந்தோஷக்கபுறு கொண்டுவந்தேனென்றும், வெங்கட்ட நாராணப்பய்யன் வெள்ளைக்காரரை அப்புறத்திலே அனுப்பிவிட்டு அவர்களுக்கும் உங்களுக்கும் வெகுகாலம் பண்ணிக் கொண்டு, கொண்டுவருவாரென்று சொன்னார். வெங்கட்ட நாரணப்பய்யன் எழுதின ஓலையிலேயும் முன் இரண்டாயிரம் ரூபாய் உண்டிகையும் இப்போது அனுப்பின காசீதுபுக்கான்சி கடையின்பேரிலே தறுவாடியிது இரண்டாயிரம் ரூபாய்

உண்டிகை அனுப்பினதும் வந்து சேர்ந்தது. ஆக நாலாயிரம் ரூபாயும் வந்து சேர்ந்ததென்றும், இந்த ரூபாய் முன்னதாகத் தானே அனுப்புவிக்கிறோமென்று நீங்கள் எழுதியனுப்பினால் விசேஷமாக வெகுமானமும் வாங்கிக்கொண்டு அநேக மேள வரிசையுடனே புறப்பட்டு வருவோமே! இந்த நாலாயிரம் ரூபாய் உண்டிகை நாங்கள் வழியிலே வரச்சே வந்ததென்றும், இப்பவும் வெள்ளைக்காரரை டோலி மற்றது அனுப்பி அப்புறத்திலே அனுப்புவித்துப்போட்டு இந்தச்சேதிக்கும் இசுருக்குபவான்தாசுக்குக் காகிதமெழுதியனுப்பி அவருத்தாரம் தெரிந்துகொண்டு நான் வருகிறேனென்றும், தங்கள் வீட்டுக்கு கால் கரிசை நெல் கொடுக்கச்சொல்லியும், தாம் பிரயாசைப்பட்டது மெத்தவுண்டு. இப்படியாக எழுதி ஏலத்துக்குத் தாம் வந்து விஸ்தாரமாய் சொல்லிக்கொள்ளத் தெரியவருமென்றும் எழுதியிருந்தது. இதல்லாமல் அந்தச் சேர்ந்தமங்கலம் கோட்டையிலே இருக்கிற எசமானனுக்கும் அந்தச் சீர்மை ரெட்டிக்கும் ஒரு கண்ணாடி, இரண்டு சூர்கத்தி, இரண்டு கத்திரி, இரண்டு சீறு விசிறி விழுக்காடு அனுப்பச்சொல்லியும் எழுதினார்.

அப்பால் முசியே மேன்வில் எனக்கெழுதின காகிதத்திலே மிகுந்த உபசாரமாய் எழுதி; ராசாவினுடைய காகிதம் பிராமணன் வாங்கிவந்தான். நாங்களும், விடுதலையாகி, கோட்டையை விட்டு அப்புறத்திலேயிருக்கிற சாவடியிலே வந்திறங்கினோமென்றும், எங்களுக்கு வந்த கஷ்டகாலத்துக்கு நீர் பிரயாசைப்பட்டதற்கு சுவாமி கடாக்ஷம் பண்ணி விடுதலை பண்ணுரென்றும், இந்த உபகாரத்துக்கு நாங்கள் மிகுந்த பாத்தியமாயிருக்கிறோம். நீர் செய்த உபகாரத்துக்கு சுவாமி உமக்கு வெகு சிரேய்சு கொடுப்பாரென்றும் உம்முடைய கடுதாசி உத்தரவுக்குக் காத்துக்கொண்டிருக்கிறோமென்றும், உம்முடைய பிராமணன் வெகுவாய் எங்கள் காரியங்களிலே பிரயாசைப்பட்டானென்றும் இப்பவும் டோலிக்கு பொய்ண்டா அகப்படுகிறது ரொம்ப பிரயாசமாயிருக்கிறது. அதுவும் அமத்திக்கொடுத்து அனுப்புகிறோமென்றும், உம்முடைய பிராமணன் பிரயாசைப்படுகிறான். அந்தப்படிக்கு மார்க்கம் பண்ணிக்கொண்டு நாங்களும் அப்புறம் சாகிப்போகிறோமென்றும், நீரும் துரையும் செய்த உபகாரத்திற்கு நாங்கள் ரொம்பவும் பாத்தியப்பட்டிருக்கிறோமென்றும், பின்னையும்

ரொம்ப உபசாரமாய் எழுதினன். இப்படி எழுதிவந்த காகிதத்தையும் கொண்டு இற்றைநாள் காலத்தாலே பண்டிகை யானபடியினலே துரை கோவிலுக்குப்போய் வந்தவுடனே முசியே மேன்வீல் அனுப்பின காகிதங்களும் கொடுத்துச் சேதியும் சொன்னேன். விடுதலையான சேதியைத் துரை கேட்ட மாத்திரத்திலேயும் தம்முடைய காகிதம் பார்த்துக்கொண்ட மாத்திரத்திலேயும்......எழுதிமுடியாது

அப்பால் அந்தக் காகிதத்தைத் துரை கையிலே பிடித்துக் கொண்டு, வெள்ளைக்காரர், செக்ரெத்தேர் ஏறக்குறைய முப்பதுபேர் மட்டுக்கும் இருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் இந்தக் காகிதத்தைக் காண்பித்து முசியே மேன்வீல் சேன்மூாக் முதலானபேர் விடுதலையாய் மாயேக்குப் போனர்கள். ஆனல். ஏன் பண்டிகை 19 உ செவ்வாய்க்கிழமையான படியினலே அன்றையதினந்தானே விடுதலையானர்களென்று வெகு உபசாரமாய் அவர்களுடனே சொல்லிக்கொண்டு வந்த பிராமணனுக்கு இருபது ரூபாய் கொடென்று சொன்னர். அதன்பேரிலே மதாம் மேன்வில் காகிதத்தையும், முசியே லிவியோர் காகிதத்தையும்; முசியே துக்கன் கையிலே கொடுத்தார். முசியே பெடுந்தல்மியை அழைப்பித்து, முசியே மேன்விலுக்கு பதில் காகிதமும் சீக்கிரமத்துக்கு அப்பால் மாயேக்குப்போய்ச் சேரச்சொல்லியும் விடுதலையான சமாசாரத்துக்கு முபார்க்கு பாதியும் எழுதிக்கொடுக்கச்சொன்னர். அந்தப்படிக்கு முசியே பெடுத்தல்மி எழுதி, துரை கையெழுத்து வாங்கி, முத்திரைப் போட்டு, காகிதமும் கொடுத்தான். நானும் முசியே மேன்வீலுக்கும் வெங்கட்டநாரணய்யனுக்கும் காகிதம் எழுதி, அவரெழுதினபடிக்கு அவ்விடத்துக்கொடி எசமான் தேவராசாவுக்கும், அவ்விடத்து நாட்டான் தேவராசாரெட்டிக்கும் இரண்டு. பேருக்கும் காகிதம் எழுதி: ஒரு கண்ணடி, இரண்டு கத்திரி இரண்டு சூர்கத்தி, ஒரு சீன விசிறி விடுக்காடு, இரண்டு பேருக்கும் கொடுத்து, வெங்கடகிருஷ்ணய்யங்கார் வசம் கொடுத்து, மறுபடி சேர்ந்தமங்கலத்துக்குப் பயணம் பண்ணி யனுப்புவித்தேன். ஆனல் இந்தக் காரியத்தினலே நாற்பதினயிரம், ஐம்பதினயிரம் வராகன் அல்லது ரூபாயாகிலும் செலவாகிறதை நான் ரொம்ப பிரயாசைப்பட்டு விடுதலைபண்ணினது சுவாமிக்குத்தான் தெரியும். இதற்கு இந்தமட்டுக்கும் என் கைப்பணம் ஆயிரம் ரூபாய் செலவழித்து விடுதலை பண்ணி

னேன். கும்பினியாருக்கு இந்தமட்டுக்கும் ஒரு காசும் செலவில்லை. இனிமேல் துரை என்ன நடப்பிக்கிருரோ அறிய வேண்டியது.

*1748* ஆ மார்ச்சு மாதம் 26-ம் உக்த பிரபவ ஞு பங்குனி மீ *17* உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களே கோன்சேல் பண்ணினுர்கள். அந்த கோன்சேலிலே முசியே பொறுஷேக்தும் வெங்கட்டரெட்டிக்கும் இருந்த வியாச்சியம் தீர்ந்தது முசியே பொறுஷேக்து கவையில்லை. வெங்கட்டரெட்டி உடைமையை அவனுக்குச் சேர்த்துவிட்டார்கள் என்று சொன்னுர். பின்னையும் அநேகம் கோன்சேலிலே தீர்ந்தது என்று சொன்னுர்கள். மற்றப்படி பத்துமணிக்கு கோன்சேல் கலைந்தபிற்பாடு துரை என்னை யழைத்தனுப்புவித்துச் சொன்னதென்னவென்ருல்: தறுவாடி கடையைக் கேட்ட பரபத்தியம் என்னமாயாச்சுதென்று கேட்டார். நான் சொன்னுல் உமக்குச் சரிப்படவில்லை. சாயங்காலம் தறுவாடியை அழைத்துவாரேனவன் சொலவத் தெரியவருமென்று புரியாமல் சொல்லி, சாவடி கபுறு சொல்லியானபிற்பாடு முத்தாலுநாய்க்கன் வழுதாவூரின் பேரிலே போனுனும். மெய்தானு முசியே போலேசான்சு எழுதியனுப்பினுனென்று சொன்னுர். அதற்கு நான் சொன்னது: முத்தாலுநாய்க்கன் எத்தனை விசாரத்துடனே அகப்படப் போருமென்று மணலூர்பேட்டை, திருவண்ணுமலை, திருவெண்ணெய் நல்லூரிலே புறப்பட்டு, திருவதி மார்க்கமாய் வாய்க்காடி வார்த்துக்கொண்டு பிறதுக்கு சீவமா என்று புறப்பட்டு முந்தாம்நாள் *15* உ ஆதிவாரம் பதினைந்து நாழிகைக்குத் தேவனும்பட்டணம் போய்ச் சேர்ந்ததென்ன. வழுதாவூர் வழிவந்து வில்லியநல்லூரின் பேரிலே போனுனென்று சொன்னேன். அவன் கேட்ட சேதி எழுதினுனென்று சொன்னுர். இல்லை ஐயா, என் மனதிலே, தமிழர் விவேகமில்லாத மடையர் சொன்னதை மெய்யாக வெண்ணுகிறவர்கள் எரோப்பியர்கள் அப்படியல்ல. எதுவும் பகுத்தறிவு உண்டு என்று நான் சிறிது நாள் எண்ணியிருந்தேன். இப்போ பார்க்கப்போனுல் வெள்ளைக்காரரிலே முசியே பேலுசான்சைக் கொத்த பேர் அநேகம் பேர் தமிழரைப்பார்க்கிலும் மடையராகவும், கழுதையாகவும் இருக்கிருர்கள் என்று

சொன்னேன். அதற்குத் துரை என்னைப்பார்த்து நகைத்து, வெள்ளைக்காரருக்கு இந்த ராச்சியத்து வழக்கம் தெரியாது. அவர்களப்படியென்று பொய் என்று சொன்னார். அதற்கு நான் இந்த ராச்சியத்திலே பதினைந்து வருஷமாய், இருபது வருஷமாய், முப்பது வருஷமாய் இப்படியிருந்தவர்களுடைய புத்தியைப் பார்த்தால் மெத்த மடையத்தனமாய்க் காணு தென்று சொன்னேன். இதிலே முசியே எலியாசு உடப்பிறந்த வள் மகன் வந்தான். அவனுடனே பேசினார். நான் செவ்வை யாய் பாக்குக்கிடங்குக்கு வந்து வீட்டுக்கு வந்தேன்.

பகலுக்குமேலாய் தறுவாடிக்கு வக்ரயேறி காணப்பித் ததினாலே பின்னொன்று விசேஷங்களும் நடக்கவில்லை. இன்றைய தினம் எழுதத்தக்கன சேதி இல்லை.

1748 ஆ மார்ச்சு மீ 27 உக்கு பிரபவ ஸு பங்குனி மீ 18உ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே தறுவாடியை அழைத்துக் கொண்டுபோய் துரைமுன்பாக விட்டு பணத்துச்சேதிக்குக் கேட்டவிடத்திலே துரைக்குத் தறுவாடி சொன்னதை அவருடனே சொன்னேன். அந்தத் தறுவாடி எப்படியாகி லும் உங்கள் எசமானுக்குச் சொல்லி அழைப்பிக்கவேணு மென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப்போட்டுப் போனான். அப்பால் நான் சாவடி கபுறு சொல்லிப்போட்டு நானும் பாக்குக்கிடங்குக்கு வந்தேன். இதிலே துரையவர்கள் அழைப்பித்து, பண்டில் முத்தியாலுநாய்க்கன் வந்தானே அவன் சேதி என்னவென்று கேட்டார். முத்தியாலுநாய்க்கன் நாசறுசங்கு மசுக்கரை புறப்பட்டு ஆற்காடுவிட்டு திருவந்தி புரம் வந்துசேர்ந்து உள்ளேபோய் மேஷத்திறபிளேயிரைக் கண்டு பேசினவிடத்திலே, அவர் நீர் போய் லக்ஷம் வராகன் செலவு பண்ணினதற்கு சென்னப்பட்டணம் நமக்கு வந் ததா? அல்லது பதினாயிரம் குதிரை அழைத்துக்கொண்டு வந்தாயா? புதுச்சேரியின்பேரிலே மோகியல் ஊவித்தாயா? ஒன்றுமில்லாத காரியத்துக்கு விருதாவாய் நீ செலவுபண்ணக் காரியமென்ன? என்று ரொம்பவும் கோபித்துக்கொண்டு, செலவு பண்ணினதைக் கொடுக்கச்சொல்லிக் கேட்கிறார்க ளாம். அதன்பேரிலே வெளியிலே பாதிரிகுப்பத்துச்சாவடி

என்று குண்டுவேரறத்திலே இருக்குது. அதிலே மகா விசார ரத்துடனே இருக்கிறான். அவனுக்குச் சங்கடம் வருகிறாப் போலேயிருக்குது. இனிமேல் என்ன நடக்குமோ தெரியா தென்று சொல்லிப்போட்டு, ஆனால் இங்கிலிஷ்காரருக்கு எங்கள் சித்திரை மீ 1 உ முதல் கஷ்டகாலம் என்று எனக்கு நன்றாய்த் தெரியும். இதற்கு திருஷ்டாந்திரம் அனுபவம் உங்களுக்குத் தெரியப்போகுது என்று சொன்னேன். அதுவும் மெய்தானென்று ஒத்துக்கொண்டு லோகாபிரமமாய்ப் பேசிக்கொண்டிருக்கச்சே முசியே தெப்ரேன் வந்தான். அவனுடனே பேசிக்கொண்டிருந்தார்கள். நான் பாக்குக்கிடங்குக்கு வந்துவிட்டேன்.

பிறகு பாக்குக் கிடங்கிலிருந்து முசியே கோர்னே வீட்டுக்குப் போய் அவனுடனே கொம்பாக்கு பாவும் செட்டிக்கு பாதிரி காண்பிக்கச் சொல்லி, பின்னையும் லோகாபிரமமாய், கும்பினீர் காரியம் சிறிதும், வீண்பேச்சு சிறிதும் பேசியிருந்துவிட்டு, அப்பால் வெகுநேரம் வீட்டுக்கு வந்து சாப்பிட்டுப் படுத்துக்கொண்டிருந்து. அப்பால் நாலுமணிக்கு சார் இருக்கிற ரேவுக்குப்போய், துரை நாளன்டைக்கு வெள்ளிக்கிழமைநாள் காலத்தாலே வருவார். அதற்கு இருக்கவேண்டிய சாக்கிரதையுடனே இருக்கச்சொல்லித் திட்டம்பண்ணிப் போட்டு, ஏழுமணிக்குப் பாக்குக்கிடங்குக்கு வந்து, அங்கே எட்டரைமணி மட்டுக்குமிருந்து, அவ்விடத்திலிருந்து பெருமாள்நாய்க்கன் குமாரன் வீருநாய்க்கன் தம்பி திருவேங்கடநாய்க்கனுக்கு, காரைக்காலுக்கு மகன் சோபனத்திற்குப் போகவேணுமென்று பயணமிருந்தவனுக்கு நேற்றையதினம் பத்துமணி முதற்கொண்டு அஜீர்ணத்தின்பேரிலே வாந்திபிராந்தியாகி அதன்பேரிலே இசுவுகண்டு, சலவைகண்டு மரண சமீபமாயிருக்குதென்று வந்து கபுறு சொன்னபடியினாலே அவர்கள் வீட்டுக்குப்போய் விசாரித்து குணங்குறிகளைப் பார்த்தால் பொழுதுவிடிய காலத்திலே ஆகிப்போமென்றாப்போலே கண்டது. அதற்குத்தக்க உபசாரமாய் வீருநாய்க்கனுக்குச் சொல்லிப்போட்டு வீட்டுக்குப்போனேன். திருவேங்கடநாய்க்கன் மூன்றுமணிநேரத்திற்குச்சேர்ந்துபோனானென்று மலையப்பன் சேவகர் வந்து மூன்றரைமணிக்கு கபுறு

சொன்னார்கள். ஆனால் திருவேங்கடநாய்க்கன் பாளையக்கார உத்தியோகத்துக்கு லாய்க்கையானவன். திருடரைப் பிடிக்கிற தற்குக் கெட்டிக்காரன். எத்தனை கெட்டிக்காரனானாலும் நாள் வந்தால் சாகாத இருந்தபேரை ஒருத்தரையுங் காணேன்.

1748 ஆ மார்ச்சு மூ 28 உக்கு பிரபவ ஹ பங்குனி மீ 19௳ குருவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே, அப்புமுதலியே துரை வந்து சளுக்குப் போற பேச்சு நீண்டாப்போலே உத்தரம் சொன்னார். இங்கே தானே இத்தனை வெய்யிலும் இறுக்கமாயிருக்குதே அங்கே வெய்யில் காங்கே மிகுதியாய்க் காணுமென்று சொன்னார். அதனாலே பிறப்பேச்சு நின்றதென்று சொல்லுவன். அது கேட்டவுடனே எதனாலே நின்றதென்று யோசனைபண்ணிப் பார்த்தால் புரியவில்லை, அப்பால் துரை சாலையிலேதானே உலாத்தினார். அவரண்டைக்குப்போய் சாவடி டாப்பு கபுறு சொல்லி, அப்பால் மீறுகுசேன்லாமு எழுதின காகித சாராம் சம் சொன்னவயணம்: சென்னப்பட்டணம் தோட்டத்திலே கொஞ்சம் நெல் பயிராச்சுது. அதைச் சென்னப்பட்டணம் தோட்டக்காரர் அடக்காயித்தார்கள். அதை விட்டுவிடச் சொல்லி, தாக்கீது ஒன்று அனுப்பவேணுமென்று மதாம் எப்போதையும்போலே வழுதாவூர், இலே தார்த்தனம் தமக்கு கொடுத்தபடியினாலே தாம் வழுதாவூருக்குள்ளே வந்து சேர்ந்து பத்துநாளாச்சுதென்றும், இனிமேல் ஏது காரியத்துக்கும் சிநேகம் உத்திரோண்டப்பித்துக் கொண்டு வரவேணுமென்றும் வழுதாவூர் சீர்மை நாட்டு சறுவாரெட்டி தம்பியை இங்கிலீஷ்க்குள் வரவிருந்து கபுறுகள் சொல்லி அனுப்பினானென்று பிடித்துவந்து காவல் வைத்திருக் கிறார்களே யாரோ அபாண்டமாய்ச் சொன்னார்கள். அப்படி ஒருக்காலும் நடக்கத்தக்கதில்லை. ஆனாலும் தயவுபண்ணி விட்டுவிடவேணுமென்று எழுதினது முதலான சம்மதிக ளெல்லாம் சொன்னதற்கு, இவர்கள் தோட்டமானால் அவர் கள் தீர்வை கேட்கத்தக்கதில்லை. தமிழருடைய தோட்டம், இவர்கள் மேல் வாங்கியிருக்கவேணுமென்று சொன்னார். இவர்களுக்கதிகம் தோட்டமென்று சொன்னேன். அப்பால் இங்கிலீஷ்காரருக்கு வேகுகாரனாயிருந்த ரெட்டியை விடப்

போகாதென்று' சொன்னார். அதற்கு நான் சும்மாவி ரு இப்பாலே வந்தேன். என்னை அழைத்து அதற்குத்தாரம் சொல்லாதேபோனதென்னவென்று கேட்டார். எழுதிவந்த சேதியை உங்களுடனே சொல்லேனேன். நீங்கள் கொடுக்கிற உத்தாரப்படிக்கு மறு காகிதம் எழுதியனுப்பிவிடுகிறேன், இதல்லாமல் இந்தக் காகிதம் கொண்டுவந்த சொபுதார் அபுதுலாயிமானுக்கு ஒரு காகிதம் கொண்டுவந்து கொடுத்து அவர் முகாந்திரமாய் காலத்தாலே தானே உங்களை வந்து கண்டு பேசினான். ஆனபடியினாலே காகிதத்துக்கு உத்தாரம் சொன்னீர்களென்று எழுதியனுப்பிவிடுவோமென்று சும்மா வந்துவிட்டேன் என்று சொன்னான். அப்பால் சரக்குப் போகவேணுமே என்று கேட்டான். இந்த அலம்பல் வேலை யில் எங்கே போகிறதென்று லகுவாய்ச் சொன்னார். அதன் பேரிலே நான் யோசனைபண்ணி பிரித்ததென்னவென்றால்: தேவனாம்பட்டணத்துத் துறையையாகிலும், அல்லது கமன் டோர் மேஸ்தர் பெரெப்பேனையாகிலும் பிடிக்கவேணு மென்று யோசனைபண்ணி அவ்விடத்திலிருக்கிற பிக்கன்கான் சிப்பாய்கள் முகாந்திரமாக இவ்விடத்துக்குப் பிடித்து வருகிற தாக அபுதுல் றயிமான் வழியிலே பேசியிருக்கிறதே அதுவும் தட்டி வழியிலே அபுதுல்லாயிமான் நடத்திக்கொண்டு வருகிற படியினாலே அந்த அடியைத் தட்டி, இப்போது துரைக்குச் சொன்னதென்னவென்றால்: நீர் இப்போது சாரிக்குப் போனால் இந்த அதிர் தேவனாம்பட்டணமெல்லாம் பிறக்கும். அவன் குண்டுசாலைக்கு அசதியாய் வருகிறவன் சேர்த்து எச்சரிக்கையாய் வருவான். அதனாலே காரியம் கெட்டுப்போ மென்று சொன்னபடியினாலே, கண்கெட்ட குருட்டுமகனை படினாயிலே அவர் சொன்னாப்போலே மெய்யென்று ஒத்துக் கொண்டு அதைச் சொல்லாமல் துரை, வெய்யில் காங்கை யிருக்குது மெத்தமாயிருக்குதென்று போகச்சொல்லி, 'அப் பால் மீனைப்பிடித்துச் செலவழித்துப்போட்டு நீ போட்ட பணம் வரப்பற்றிக்கொள்ளென்று சொன்னார். நல்லதையா என்று சொன்னேன்.

அப்பால், பனிரெண்டுமணிக்கு வீட்டுக்குப் போகவேணு மென்று புறப்பட்டுச் சாராயக்கிடங்கு தாண்டிப்போகச்சே

சேர்ந்தமங்கலத்திலேயிருந்து வெங்கட்டநாரணய்யன் காகிதமும் முசியே மேன்வீல், மூன்மூக் முதலானவர்களுடைய காகிதமும், துரைக்கும், எனக்கும், பின்னேயும் ஒப்பிசியேல்மார்களுக்கும், மதாம் மேன்வீலுக்கும்கூட வந்தது. அதைக்கொண்டு போய் துரைக்குக் கொடுத்தேன். அந்தக் காகிதத்திலே துரைக்கு முசியே மேன்வீல் எழுதிய காகிதத்திலே தாங்கள் சனிவாரம் நாள் பயனப்படுத்தி, பிராமணர் அனுப்பின படியினலே அப்பால் மாயேக்கு சாகிப்போருமென்றும் முக்காதவழிக்கப்பால் போனபிற்பாடு நாங்கள் இந்தக் காகிதம் எழுதியனுப்புவித்தோமென்றும், இந்தமட்டுக்கும் பிருமணிகூட வந்து வழிவிட்டாரென்றும் எங்களை விடுதலை பண்ணுகிறதற்கு ராசாவினிடத்திலே மெத்த பிரயாசைப் பட்டானென்றும், இந்த இரண்டு மூன்று நாலு நாளும் எங்களுக்கு டோலி மற்றது அமர்த்தி, எங்களைப் பயணம்பண்ணி அனுப்பினது பின்னேயும் ரொம்பவும் பிரயாசமென்றும், ஆகையினலே இந்தப் பிராமணனை நன்ருய் விசாரித்துக்கொள்ளச் சொல்லியும் துரை எழுதினதாய் வெங்கட்டநாரணப்பையன் பேரிலே வெகு பிரீதியாய் எழுதிஞர்களென்று துரை சொன்ஞர். அப்பால் என் காகிதத்திலே முசியே மேன்வீல் எழுதினது அப்படிதான். சேன்மூக் எழுதினது பின்னேயும் சற்று ஐயா சிபாரிசு எழுதினன். அப்பால் வெங்கடநாராயணப்பய்யன் எனக்கு அனுப்பின என் காகிதமும் நான் பார்த்துக்கொண்டேன். இதிலே துரையவர்கள் சந்தோஷம் சொல்லிமுடியாத சந்தோஷம். என்னைப்பார்த்து, சனியன்று பயணப்பட்டுப் போனல் இன்றைக்கு ஆறு நாளாச்சுதே. மாயேக்கு சமீபமாய்ப் போயிருப்பார்களோ என்று கேட்டார். இன்னும் இரண்டு, மூன்று நாலு நாளைக்குள்ளே சேருவார்களென்று சொல்லிப்போட்டு, வீட்டுக்குச் சாப்பாட்டுக்கு வந்து, அப்பால் பகலுக்கு மேலாக மீர்குலாமுசேன் தகப்பன் சாபிறசாயபு அண்டைக்குப்போய், கும்பினீர் வர்த்தகருக்காகப் போய் கணக்குப் பேசினவிடத்திலே அவனும் சம்மதித்ததாய் உத்தரவு சொல்லி நாளைக்கு வரச்சொன்னுள். நல்லதென்று அனுப்புவித்துக்கொண்டு பாக்குக்கிடங்குக்குப் போய் ஒன்பது மணி மட்டுக்குமிருந்து, அப்பால் வீட்டுக்குப் போனேன். சின்ன பரசுராமப்பிள்ளைக்கு நீர்க்கண்டு ஒரு மாசமாய் உபத்திரவமாயிருந்து இப்போது சௌக்கியமாயிருக்குதென்று முத்தையப்பிள்ளை சொன்னுன்.

1748 ஆ மார்ச்சு மீ 29 உ க்கு பிரபவ ஸு பங்குனி மீ 20 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய்ச்சாவடி கபுறு சொன்னவிடத்திலே வழுதாவூர்கில்லைக்கு எசமானாக வந்த மீருஉசேன்கான் அனுப்பின காகிதத்துக்கு மறு உத்தரம் எழுதச்சொல்லி, துரையவர்கள் சொன்ன வயணம்: ரெட்டியைக் காவல்வைத்தது ஏனென்றால், கூடலூருக்கு இவ்விடத்திலேயிருந்துகொண்டு, இவ்விடத்திலே நடக்கிற சேதிகளுக்கு அடிக்கடி கபுறு எழுதியனுப்புவித்துக் கொண்டிருந்த சேதியை நாம் கேட்டபடியினாலே காவலிலே வைத்திருக்கிறோம். நீங்கள் அவன் நிமித்தியம் எழுதியனுப்புவித்தீர்களல்லவா? இப்பவும் எங்களுக்கும் அவர்களுக்கும் விருத்தமாயிருக்கிறபடியினாலே இவன் இப்படிப்பட்ட காரியம் செய்ததற்கு இன்னும் பத்துநாள் வைத்து வைத்துவிட்டு விடுகிறோம். சென்னப்பட்டணத்துத் தோட்டங்களிலே தங்களுக்குச் சிறிது தானியம் விளைச்சதுண்டு. அதை நம்மிடவாள் அடகாயித்திருக்கிறார்கள் என்கிறதாக எழுதியனுப்புவித்தீரே நாம் அவர்களுக்கு உத்தாரம் கொடுத்திருக்கிறதென்னவென்றால்: துலுக்கருடனே சேர்ந்த தோட்டங்களிலே என்னவாகிலும் வருகிறதோ, அந்த ஆகேல் தடையில்லாமல் விட்டுவிடச் சொல்லி உத்தாரம் கொடுத்திருக்கிறோம். அப்படியிருக்க, அவர்கள் தங்களுடனே சேர்ந்தது அடகாயிக்கத்தக்கதில்லை. தமிழருடனே சேர்ந்த தோட்டங்களாயிருந்ததுண்டானால் தாங்கள், அதைத் தாங்கள்மேல் போட்டுக்கொள்ளத் தேவையில்லை. மற்றப்படி தங்கள் தோட்டமேயானால் நம்முடையவர்கள் அடுக்காயிக்கத்தக்கதில்லை. ஆகையினாலே, நாமும் எழுதியனுப்புவிக்கிறோம், தாங்களும் எழுதியனுப்புவித்து, தங்கள் தோட்டமேயானால் தங்கள் மனுஷர் போய் கேட்டால் விட்டு விடுவார்கள். தாங்கள் வழுதாவூர் கில்லைக்கு வந்தது எனக்கு மெத்த சந்தோஷமாச்சுது. தங்கள் முபாருக்கு இருக்கிறது. எப்போதும் சிநேகம் நடக்கும்படி நடப்பித்துக்கொள்ளவும் என்றெழுதியனுப்பச்சொல்லிச் சொன்னார். அதன்பேரிலே துரையவர்கள் சொன்னசேதி நாம் சார் துரைக்குப் போகிறதற்கில்லாமற் போச்சுதே! நீ போய் செலவழிந்தபணத்துக்கும் அவ்விடத்திலே, மீன்வேட்டையிலே தஸ்து ஆகிற பணத்துக்கும் பார்த்துக்கொண்டு, யாராருக்கு எந்தப்படிக்கு நடப்பிக்க

வேணுமோ அந்தப்படிக்கு நடப்பிக்கச்சொல்லி, ஆறு பேர் காடுது வெள்ளைக்காரரையும் கூட்டிப்போகச்சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கு நானும் புறப்பட்டு சார் துரைக் குப்போய் சாயங்காலமட்டுக்கு மிருந்து, யாருக்கு எப்படி நடத்தவேணுமோ அந்த விதமாய் நடத்திவைத்து வேடிக்கை யாய்த்தானே ராத்திரி எட்டு மணிக்கு விட்டுக்குவந்து, அதன் பேரிலே வீருநாய்க்கன் வீட்டுக்கும் போய் விசாரித்து, தலைக் கட்டுகிற நிமித்தியம் பாகை ஒன்று கொடுத்துப்போட்டு மறு படி வீட்டுக்கு வந்தேன்.

1748 ஆ மார்ச்சு மீ 30உக்கு பிரபவ ஸு பங்குனி மீ 21உ சனிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே தறுவாடிசேதி என்னவாச்சுதென்றும் மீர்தயானத்துல்லா சேதி என்னவாச்சுதென்றும் கேட்டார். காகிதத்தின்பேரிலே காகிதம் போயிருக்குதென்றும் வர வேணுமே எப்படியும் கேட்ட பரபத்தியம் விருதாவாய்ப் போகாது. எவ்வளவாகிலும் வருமே யல்லாமல் வராமற் போத தக்கதில்லை என்று சொன்னேன். அப்பால் சந்தாசாயபு வருகிறசேதி என்னவென்று கேட்டார், ஆற்காட்டு வக்கீல் எழுதின சேதி சொன்னேன். ஆனால், மறுபடி யார் வருகிறார் கள் என்று கபுறு சுருக்காயிருக்குது. இதை ஊர்ஜிதமாய் வராதென்றும் சொல்லப்போகாதென்றும் சொல்லி, சாவடி கபுறு சொல்லிப்போட்டு அப்பால் பாக்குக் கிடங்குக்கு வந் தேன்.

பிறகு சங்கரய்யர் வந்து தொப்பை முதலியுடப்பிறந் தாள் மகனைக் கல்லியாணம்பண்ணின நாராயணப்பிள்ளைக் கும் தமக்கும் நிலப் பேய்ச்சாய், இட்டோட்டாய் என்னை ஏறக்குறைய விசேஷம் பேசினானென்று வந்து சொல்லிக் கொண்டார். நல்லது உம்முடனே நிலத்திலே வரப்புப் போடு கிறதை வேண்டாமென்று ஆணையிடக்காரியமென்ன? அவனை அழைத்துத் தாக்கீதுபண்ணுவோம் என்று சொல்லிக்கொண் டிருக்கச்சே, துரை அழைக்கிறார்களென்று அழைக்க இரண்டு சேவகர்கள் வந்தார்கள். போனவிடத்திலே பங்காரை மீரும முதல்வி மனுஷன் பார்சு காகிதம் அனுப்புவித்தானே அந்தக்

கிதச்சேதி சொன்னது ஞாபகமில்லை, சொல்லென்று சொன்ஞர். அதற்கு நான் சொன்னது: அந்த மீர்மமூதல்வி குமஸ்தா சித்திப்பில்லால் எழுதின காகிதத்தில் எழுநூறு மணங்கு கோதும்பையும், அரிசியும் ஏற்றிவந்து பழவேர்க்காடு சமீபத்திலேவரச்சேஇங்கிலிஷ் கப்பல்காரன் தெருத்திஞன். ஆனபடியிஞலே பழவேர்க்காடு பிடிக்கக் கூடாமல் மச்சிலிபந்தர் பிடித்து அங்கே இறக்கி, பந்தர்பிரான்சு கொட்டடியிலே எசமான் வசத்தில் ஒப்புவித்தேன். பின்னையும் ஒரு ஆயிரம் மணங்கு சம்மதியில் ஐந்நூறு மணங்கு ஏற்றிக்கொண்டுவந்தேன். அதை பிரான்சு கொட்டடி எசமான் முசியே நுவாரை ஒப்புக்கொள்ளுமென்றதற்கு இவ்விடத்திலிருந்து துரையவர்கள் உத்தாரம் அன்னிலே ஒப்புக்கொள்ளப் போகாதென்று சொன்ஞன். ஆகையிஞலே முசியே நுவாருக்கு ஒப்புக்கொள்ளச் சொல்லித் தாக்கீது கடுதாசி அனுப்பவேணுமென்று எழுதியிருந்தேனென்று. சொன்னேன். அதற்கு துரையவர்கள், சொல்ன உத்தாரம் நல்லது. அப்படியேதானே, முசியே நுவாருக்கு இந்த ஐந்நூறு மணங்கு கோதுமையையும் ஒப்புக்கொள்ளச்சொல்லியும் இன்னும் வருகிற ஐந்நூறு மணங்கையும் ஒப்புக்கொள்ளச் சொல்லியும் எழுதியனுப்புவிக்கிரேம். இதல்லாமல் தங்களை பழவேர்க்காடு துரை பிடிக்கச்சொல்லி உத்தாரமும் கொடுத்திருக்க அந்தப்பேர் இவ்விடம் வருகிறதற்கு ஆலசியம் பண்ணி வெறுமனே இங்கிலீஷ்காரர் கப்பல் தெருத்திவந்ததாகவும், தாம்போய் அது நிமித்தியம் மச்சிலிபந்தர் ரேவு பிடித்ததாகவும் எழுதினீரே, இங்கிலீஷ்காரன் கப்பல் புதுச்சேரி ரேவுலேயும் தேவனும்பட்டணம் ரேவுலேயும் சுற்றிக்கொண்டு திரிகிறதேயல்லாமல் பழவேர்க்காடு ரேவுலே எங்கே அவர்கள் கப்பல் இருக்கிறது? ஆனபடியிஞலே உமக்கு எசமான் பங்காளத்திலே இருக்கிற மீருமமுதல்விக்கு எழுதியனுப்புவிக்கிரேம். ஆகையிஞலே இருக்கிற தட்டுமுட்டுகள் ஒப்புவிக்கிறது முசியே நுவார் வசத்திலே ஒப்புவித்துப்போட்டுச் சீக்கிரமாய் பங்காளத்துக்குப் போகச்சொல்லி எழுதியனுப்பச் சொன்ஞர். அந்தப்படிக்கு பார்சிலே எழுதிவித்து முசியே பெதுதல்மி கையிலே கொண்டுபோய்க் கொடுத்தோம். அவர் இந்தக் காகிதத்தை துரையவர்கள் முசியே நுவாருக்கு அனுப்புகிற காகிதத்துடனேகூடவைத்து, முத்திரைப்போட்டு, விலாசம் போட்டு, அங்கேயிருந்துவந்த மனுஷர் கையிலே

கொடாமல் டபாயிலே போட்டு அனுப்புவித்தோம் அத பேரிலே நான் பாக்குக்கிடங்குக்கு வந்திருக்கையிலே பதினொரு மணிக்கு எனம் கொட்டடிகணக்கு; காமராசா நேட்ட முறுத் தினஞ்சயன் எழுதின காகிதம் துரையவர்கள் பேருக்கு வந்தது. அந்த காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: முசியே சோசே அவர்கள் தங்கள் தகப்பனார் கையிலே ரூபாய் 4600 கடனாகவாங்கிக்கொண்டு பத்திரம் எழுதிக்கொடுத்திருந்தார். தங்கள் தகப்பனார் விழுந்துபோனபோது முசியே சோசே எங்களை அழைத்து அந்தப் பத்திரம் கொண்டுவாருமென்றும், அதைப் பார்த்துக்கொண்டு உங்கள் ரூபாயைக் கொடுத்து விடுகிறோமென்றும் சொன்னார் அப்போது நாங்கள் சொன்னசேதி, நாங்கள் கும்பினீருக்கு வேற்றுமனுஷரல்ல; கும்பினீருக்கு சாகிரிகளாய் இருக்கிறபேர் நீங்கள் பத்திரத்தைப் பார்த்துக் கொள்ளுங்கோளென்று பத்திரத்தைக் கொடுத்தோம். அந்தப் பத்திரத்தை வாங்கி கையிலே வைத்துக்கொண்டு ரூபாய்த் தருகிறோம், தருகிறோம் என்று நான் தாமசத்திலே விட்டு, பந்தருக்குப் பயணமாகிப்போனார். அப்போது எங்கள் நாயனார் கும்பினீருக்கு சாகரியாயிருக்கிற வல்லூறு அனந்தனென் கிறவருடனே இந்த வர்த்தமானம் சொல்லி, முசியே சோசே அவர்களுக்கு எங்கள் ரூபாய்க்கு என்ன சொல்லப்போகிறீர் என்று கேட்கச்சொன்னான். அந்தப்படிக்கு அவர் போய்க் கேட்டவிடத்திலே முசியே சோசே அவர்கள் சொன்னசேதி; நாமானால் பந்தருக்குப்போகிறோம். போனவுடனே ஜரூரிலே ரூபாய் அனுப்புவிக்கிறோம் என்று சொல்லிப்போட்டுப் போனார். போனவிடத்திலே அவரும் விழுந்துபோனார். இப்பால் முசியே நுவார் அவர்கள் முன் இவ்விடத்திலே சின்ன துரை இருக்கிறபோது எங்கள் தகப்பனார் நான் முதற் கொண்டு எங்களை நன்றாயறிந்தபேர் ஆனபடியினாலே அவருக்குக் காகிதமெழுதி அந்தக் காகிதத்திலே நாங்கள் சாவுகார் வசத்திலே கடன் வாங்கிக் கொடுத்தோம். அவர்கள் எங்களை உபாதைப் படுத்துகிறார்கள்: தங்கள் தர்மம், கும்பினீர் தர்மம் ஸ்வரூபமாயிருக்கிறபேர்கள் ஆனபடியினாலே இந்த ரூபாய் தா...பண்ணினால் வர்த்தகர கண்டை தீர்த்துக்கொண்டு நாங்களும் சுகப்படுவோமென்றும், இதல்லாமல் முசியே நலிபோ தங்களுக்கு ரூபாய் 1500 தரவேணும் இதற்கு அறுநூறு ரூபாய்க்கொடுத்தார், இன்னம் தொளாயிரம் ரூபாய்

தரவேணும்; அதுவும் தங்களுக்கு வந்து சேரத்தக்கதாய் தயவு பண்ணவேணுமென்றும் தாம் தம்முடைய தகப்பனர் உத்தியோகத்திலே இருக்கிறோமென்றும் சம்பளச்சாரிக்கை தங்களைச் சேராமல் முசியே தலிபேர் தாம் வாங்கிக்கொள்ளுகிறுரென்றும், இது நிமித்தியம் தங்கள் வீரண்ணனை அனுப்பினோம். அவன் சொல்லச்சே தெரியவருமென்று உபசாரமாய் எழுதியிருந்தது. அந்தக்காகிதம் உடனே, துரையவர்களுடனே சேதி சொல்லுகிறதற்கு பனிரெண்டுமணியானபடியினாலே நாளை ஆகட்டுமென்று கொடாமல் வீட்டுக்கு வந்தோம்.

சாயங்காலம் ஐந்து மணிக்கு கூடலூரிலேயும் தேவனும் பட்டணத்திலேயும் அவர்கள் கப்பல் மேலேயும் பீரங்கிச் சுட்ட சத்தம் கேட்கப்பட்டது. அதேதென்று விசாரிக்குமிடத்திலே முத்தியாலுநாய்க்கன், நபாபு நாசர்சங்கு வெகுமானம் கொண்டுவந்ததாகவும், அந்த வெகுமானம் உடனே அழைப்பித்துக் கொடுக்கிறதற்கு முத்தியாலுநாய்க்கன் வடக்கே போனவிடத்திலே வெகு பணம் கருசுபண்ணி, அதற்கேற்ற பெலன் அன்னியிலே வந்தபடியினாலே அது நிமித்தியம் வெகுமானம் வந்து ஆறேழு நாளாய் சமாதானம் அன்னியிலேயிருந்து அதனை இற்றைநாள் சமாதானம் பண்ணிக்கொண்டு வெகுமானம் அழைப்பித்துக்கொண்டார்கள். அது நிமித்தியம் பீரங்கிப்போட்டார்களென்று கேட்கப்பட்டது.

*1748 ஆ மார்ச்சு மீ 31உக்கு விபவ ௵ பங்குனி மீ 22உ ஆதிவாரம்.*

இற்றைநாள் காலத்தாலே சிரஞ்சீவி பாப்பம்மாள் புருஷன் லக்ஷுமணு முன் தை மீ 16 உ காலம் பண்ணிப்போனபடியினாலே நேற்றையவரைக்கும் முத்தியப்பிள்ளை கருமாந்திரம் பண்ணிவிப்பாரங்காட்டுமென்று பார்த்தவிடத்திலே, அவர் கருமாந்திரம் பண்ணுதபடியினாலே அவள் தமையனைக் கொண்டு இன்றையதினம் செய்வித்துப் போடுவோமென்று யோசனைபண்ணி, அவள் தமையன் அக்கப்பிள்ளையைக் கொண்டு கருமாந்திரம் செய்விக்கத்தக்கதாக, சுங்குவார் தோட்டத்துக்கு பந்துக்கள், பிராமணரைக் கூட்டிப்போய் அவ்விடத்திலே நாராயணபலி செய்யச்சொல்லித் திட்டம் பண்ணினேன்.

அப்பால், நான் துரை வீட்டுக்குவந்து சாவடி கபுறு சொல்லிவிட்டு நின்றவிடத்திலே, நேற்று சாயங்காலம் தேவனும்பட்டணத்திலே பீரங்கி மிகுதியாகப்போட்டார்களென்று கேட்டார்கள் மெய்தான் என்று சொன்னேன். முத்தியாலு நாய்க்கன் கொண்டுவந்த நாசற்சங்கு வெகுமானம் சும்மா கிடந்ததே ரெசேவேரிட்டார்களாங் காட்டுமென்று அசுவாரசியமாய்ச் சொன்னேன். அவரும் அதை அசார்ஸியமாய்க் கேட்டாப்போலேயும், கேளாதுபோலேயும், மருட்டியார் குதிரைகள் வருகிறதாகச் சேதிவந்ததென்று சொன்னீயே அந்தச்சேதி ஒன்றுங் காணோமென்று கேட்டார். மருட்டியார் வருகிறார்கள் என்கிற அவாசா ரொம்ப லாலாபேட்டையிலிருந்த சரக்குகளெல்லாம் ஆற்காடு கோட்டை வந்தவாசி கோட்டை, மகிமண்டல துர்க்கம், காவேரிப்பாக்கத்துக் கோட்டை இந்த வட்டாரங்களிலே சரக்குகளெல்லாம் போய்ச்சேர்ந்து ஆற்காடுகூட அதவகுதலமாய் இருக்குதென்று சொன்னதற்கு அறியவேணுமென்று சொன்னேன். அந்த அபிப்பிராயம் பார்த்தால் மருட்டியார் வந்தால் ஆற்காட்டார் அந்த மோகத்துமேலே இருந்தால் தேவனும்பட்டணம் காரியம் சொப்பனிடலாம். இல்லாவிட்டால் நாசற்சங்கு நிசாம் பரமானுலந்தப்படியினாலே ஆற்காட்டார் மற்றது பண்ணுவார்கள் என்கிற சாடையைக் குறித்துக்கேட்டார். அதற்கு நான் இங்கிலீஷ்காரருக்கும் பொல்லாத காலம் வந்திருக்கிறபடியினாலே ஆற்காட்டாரைத் தொட்டு ஒரு சகாயமும் நடக்கப்போகிறதில்லை பாருங்கோள். முன் நான் சொன்ன பேச்சு எது தப்பிப்போச்சுது இது தப்பிப்போகிறதற்கு. உங்களுக்குத்தானே தெரியவருதென்று லோகாபிரமமாய்ப் பேசியிருந்து அப்பால் பாக்குக்கிடங்குக்கு வந்து கும்பினீர் வர்த்தகரை குருசந்திருயர் முன்னிலையாய் பரபத்தியம் வாங்கிவரச் சொல்லி ராமச்சந்திரய்யனை அழைப்பித்து, வாங்கிக்கொடுக்கச்சொல்லி அருணாசலசெட்டியை வீருசெட்டியைக் கூட்டி அனுப்பிப்போட்டு, நான் வீட்டுக்குப்போய் ஸ்நானம்பண்ணிச் சாப்பிட்டு, அப்பால் ஐந்துமணிக்கு கருமாந்திரம் பண்ணுகிற சுங்குவார் தோட்டத்துக்குப்போய் அக்கப்பிள்ளைக்குத் தலைக்கட்டுவித்து அவ்விடத்திலிருந்து ஆறரைமணி வேளைக்கு மேளதாளத்துடனே வெள்ளாழத்தெரு பக்கமாய் புதுசாய் வாங்கின வீட்டிலே கொண்டுவந்து அவ்விடத்திலே கும்பினீர்

வர்த்தகர் முதலானபேர்கள் வந்தவர்களுக்குப் பாக்கு வெற்றி லைக் கொடுப்பித்து அனுப்புவித்துப்போட்டு, நானும் பாக்குக் கிடங்குக்கு வந்து அயிதர் சாயிபுக்கு முன் பஞ்சமாதேவிக்கு ராம்பிள்ளையிருந்தபோது துந்துபி ௵ மார்கழி மீ 16 உ லாலாப்பேட்டை ருயலய்யர் பேருக்கு ஐந்நூறு பொன் பரங் கியானாலும், ஆயிரம் ரூபாயானாலும் கொடுத்து உண்டிகை யிலே செல்லெழுதிக்கொண்டு ரசீதும் வாங்கிக்கொள்ளச் சொல்லி எழுதியிருந்தபடிக்கு ருயலய்யன் அந்த மாசம் இருப தாந்தேதி உண்டிகையிலே சயின்பண்ணி, அப்பால் பணம் செலுத்தி, உண்டிகையிலேயும் செல்லெழுதுவித்துக்கொண்டு அலாயிதா பார்சிலே ரசீது எழுதிவைத்துக்கொண்டு எசமான் மோகரும் தர்க்கத்துப்பட வாங்கிக்கொண்டிருந்த சம்மதி நம் முடைய கணக்கும் அயிதர்சாயபு கணக்கும், பஞ்சமாதேவி சம்மதி ஒத்துத்தீர்த்துக்கொண்டு, நிலுவையிட்டு, சாடாவாகப் பணம் நம்முடைய கையிலே வாங்கிக்கொள்ளச்சே நமக்கு இந்த ஐந்நூறு பொன்னும் கணக்கிலே எழுதியிராதபடி யினாலே நாம் பற்று சொல்லாமற்போனதே அவர்கள் புத்தி கள் அதை மறைத்து மற்றது மாத்திரம் செல்லு பாக்கிபார்த் துத் தீர்த்துக்கொண்டுபோன சம்மதி இப்போது கணக்குகள் சீட்டுகளெல்லாம் பரிசோதித்துப் பார்க்கச்சே இந்தச் சம்மதி அகப்பட்டதை நன்றாய் அவருக்கும் நமக்கும் நடந்திருக்கிற பற்று வரவு உள்பட வயணம் பார்க்கச்சே அதிலே சேராத படியினாலே இது அலாதாய் இனிமேல் லாலாபேட்டைத் துகையை வரவுவைத்துபஞ்சமாதேவி கிராமத்துக்கு நாம் பிணை யிருந்த சம்மதிக்கு பற்றெழுதிப்பார்க்க இந்த ஐந்நூறு பறங்கிப் பொன்னும் நமக்கு பிரத்தி பிறந்தது. அவர்கள் இப்படி தகராறுபண்ணின சம்மதியெல்லாம் அயிதர் சாயபு அண்ணன் மியாசாயபு கணக்கு பெரியப்பிள்ளையை அழைப்பித்து நடந்த பூருவோத்திரமும் சொல்லி இந்த உண் டிகை ரசீதும் காண்பித்தயிடத்திலே இதுகளெல்லாம் பார்த்து, பெரியபிள்ளை சொன்ன உத்தரம் என்னவென்றால்: உலகத்திலே கொடுக்கல் வாங்கல் லக்ஷாந்திரங்கள் நடக்குது. ஒருவேளை ஞாபக தப்பிதமாய் நாலு ரெண்டு பத்துகள் பிச கிப்போகிறதுண்டு. அப்படி பிசகினால் எதிரிகளாய் இருக்கிற வர்கள் கணக்கேனடா பாரென்று சொல்லிக் கணக்கை எழுதி வைத்துப்போடுகிறதேயல்லாமல் பெயடி எடுத்துக்கொண்ட

பேர் ஒருத்தரும் இல்லை. ஆனால் இப்போது அயிதர்சாயபுயிடத்திலே கண்டோம். அயிதர்சாயபுவினுடைய குணம் யாருடனே பேசினாலும் இப்படி மோசம் பண்ணுகிற புத்தியே யல்லாமல் ஒருத்தருடைய நன்மார்க்கமாய் நடக்கிறபுத்தி இல்லை. அதனாலேதான் இப்போது அவருக்கு எந்தக்காரியங்களும் தாகறியாய் வருகிறது. ஆகிலும் நீங்கள் ஏது காரியங்களும்மனம் பொறுக்கிறபேர் உங்களுக்கும் அவர்களுக்கும் இருக்கிற சிநேகத்துக்கு இந்தச்சொல் வெளியிலே சொல்லுகிறதல்ல. இப்போது நானும் ஒரு ஓலையெழுதி அனுப்புவிக்கிறேன். நீங்களும் ஒரு காகிதம் எழுதியனுப்புவித்தால் அதைப் பார்த்துக் கொண்டு அவர் பணம் கொடுத்து அனுப்பிவிடுவார். அந்தப்படி செய்யுங்களென்று சொன்னான். அவர் ஏன்பாகத்தானே சிவராம்சாஸ்திரியாரை அழைப்பித்து அந்த உண்டிகை ரசீதுக்கும் சவாது எழுதுவித்து அவருக்கும் பார்சிலே மதனுந்த பண்டிதரைக்கொண்டு எழுதிவைத்த வயனம் என்னவென்றால்: வரவு செலவு, பற்று ஒத்துக்கொள்ளச்சே கொடுத்த பற்று ஞாபகமில்லாமல் எழுத மறந்துபோனால் மோசம் பண்ணி எடுத்துக்கொள்ளலாமா என்று இதற்குமேலே எழுதியிருக்கிறபடிக்கு அந்தந்த சம்மதிகள் கண்டெழுதி காகிதமும் உண்டிகை ரசீதுக்கு சவாதும் எழுதி ஏகத்துக்கு லக்கோடா பண்ணி, காவிபுகான்மகன் அசரத்து மகம்மது காளண்டையிலே இருந்து வந்தபேர்விளங்க துலுக்கச்சேவகன் கையிலே கொடுத்து இந்த வயணங்களெல்லாம் அவனுக்குச் சொல்லி கும்பினீர் சேவகன் செல்லப்பிள்ளையையுங் கூடக்கூட்டி நாளைக்காலத்தாலே பஞ்சமாதேவிக்குப்போய் இந்தக் காகிதத்தை அயிதர்சாயபு கையிலேகொடுத்து மோசம்பண்ணி எடுத்துக்கொண்ட பறங்கிப்பொன் ஐந்நூறுக்கும் இன்றைய வரைக்கும் வட்டியும் முதலும் கொடுக்கச்சொல்லி வாங்கிக் கொண்டுவரச்சொல்லி நாளை காலத்தாலே பயணம்பண்ணி படிக்குக் கொடுத்து பெரியப்பிள்ளை வேலையையும் வேறண்டை வாங்கிக்கொடுத்து அனுப்புவித்துப்போட்டு, அப்பால் பத்து மணிக்கு வீட்டுக்கு வந்தோம். மற்றப்படி இற்றைநாளில் விசேஷித்த சமாசாரங்கள் ஒன்றும் காணோம்.



சுந்தானம் பிரிண்டிங் ஒர்க்ஸ், புதுவை.

